20



ஸ்ரீமத்

# பகவத் கீதை

## ஸ்ரீ சங்காசார்ய பாஷ்யத்தோடு

த. சுந்தரராஜ சர்மா

பரிசோதித்து மொழிபெயர்த்தது.

---

19-4

சென்னை

வேதாந்தபோதினி ஆபீஸ்

1907




Acc. No 2372

(காபி ரைட் ரிஸெர்வ்ட்)

19-4



# முகவுரை.

"ஓம் நமோ பகவதே வாஸுதேவாய." ஸ்ரீமத் பகவத்கீதா சாஸ்திரமானது ஸகலவேதார்த்தஸார மென்றும், பொருளுணர்தற்குஅரிய தென்றும், வேதரஹஸ்ய மென்றும் ஆன்றோ ரனைவராலும் எத்திப் போற்றப்படுகின்ற தென்பது உலகெலாம் அறிந்த உண்மை. ஆகவே, ருக்வேதம் ஸாமவேதம் என்றாற் போல கீதாவேத மெனக் கூறலாகும். அப்படியே, ஒவ்வொரு அத்தியாயத்தின் இறுதியிலும் "பீஷ்மபர்வத்திலே, ஸ்ரீமத் பகவத்கீதைகளாக,[1] உபநிஷத்துக்களாக,[1] ப்ரஹ்மவித்யையாக, யோகசாஸ்திரமாக விருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதத்திலே" என இந்நூலினுட் கூறப்பட்டிருக்கின்றது. அன்றியும், இதற்கு இயைய, இந்நூல் தனக்குள் அமையப்பெற்ற மஹாபாரதத்தை ஐந்தாம்வேத மென்றலும், "ஸகலவேதார்த்தமும் பாரதத்தி லிருக்கின்றது; பாரதார்த்தமுழுவதும் கீதையிலிருக்கின்றது; ஆதலின், இது ஸகல சாஸ்திரமும் நிறைந்ததாக உயர்த்தி மதிக்கப்படுகின்றது"[2] என்று மஹாபாரதஉரையாசிரியர் நீலகண்டர் பகவத்கீதை உரையின் தொடக்கத்தில் கூறியிருத்தலும், கீதாபாராயண ஆரம்பத்தில் "எல்லா உபநிஷத்துக்களும் பசுக்களாக, கோபாலனென்னும் குழந்தை பால் கறப்பவனாக, அர்ஜுனன் பாலூட்டும் கன்றாக, நல்லறிவுடையோர் பால் குடிப்பவராக, கீதை—(சாகாமையைத் தருகின்ற) சிறந்த அமிருதமான பாலாகிநின்றது"[3] எனத் தியானித்தலும் காண்க.

மேலும், கீதாசாஸ்திரமானது வ்யாஸமகர்ஷிகளால் செய்யப்பட்டது எனக் கூறாது, "மகாபாரதத்தில் வெளியிடப்பட்டது"[4] என்று கூடார்த்ததீபிகையின் இறுதியிலும், "புருஷோத்தமனுடைய திருவாக்காய், கீதை என்னும் பெயருடைத்தாய், வேதவாக்கியங்களின் ரஹஸ்யமாய் எது உள்ளதோ ......"[5] என்று கஅ - ஆம் அத்தியாயத்து சுசு - ஆம் சுலோகத்தின் உரையிலும் மதுஸூதந ஸரஸ்வதியாரும், "கிருஷ்ணத்வைபாயனர், பகவான்உபதேசித்த அதே பொருளை எழுநூறு சுலோகங்களால் சேர்த்தமைத்தனர். அவற்றுள், பெரும்பான்மையாக ஸ்ரீகிருஷ்ண(பகவான்) முகத்தினின்று வெளிவந்த சுலோகங்களையே எழுதலாயினர். அவற்றின் (முன் பின் உள்ள கதாஸந்தர்ப்பத்)தொடர்ச்சிக்காக, தாம் சில சுலோகங்களைச் செய்து

---

[1] இந்நூல் யாவரும் மேலாகக்கொண்டு பூஜிக்கத்தக்க மேம்பாட்டை யுடையதாயிருத்தல் பற்றி, இவ்வுயர்வுப்பன்மை இரண்டும் இங்கு வழங்கலாயின.

[2] "भारते सर्ववेदार्थो भारतार्थश्च कृत्स्नशः। गीतायामस्ति तेनेयं सर्वशास्त्रमयी मता॥"

[3] "सर्वोपनिषदो गावो दोग्धा गोपालनन्दनः। पार्थो वत्सः सुधीर्भोक्ता दुग्धं गीतामृतं महत्॥"

[4] "...महाभारते...विवृताविदम्।"

[5] "वचो यद्गीताख्यं परमपुरुषस्याऽऽम्नायशिरसां रहस्यं........।"

சேர்த்தனர். (இதனை,) 'பத்பநாபனுடைய முகாரவிந்தத்தினின்றும் ஸ்வயமாகவே வெளிவந்த கீதைகளையே நன்றாகப் படிக்கவேண்டும். மற்றைய சாஸ்திரவிஸ்தாரங்களால் என்ன ?' எனக் கீதாமாஹாத்மியத்தில் கூறப்பட்டிருக்குமாறு (காண்க)"[1] என்று கீதையின் உரைப்பாயிரத்தில் ஸ்ரீதரஸ்வாமிகளும், "என்னுடைய உயர்ந்த வித்யையானது ப்ரஹ்மஸ்வரூபமாகிய கீதைதான் ; ஸம்சயமில்லை..... (அது,) அறிவும் ஆநந்தமுமான கிருஷ்ணன் அர்ஜுனனுக்குத் தன் வாயினால் அருளிச்செய்தது : (ருக், யஜுஸ், ஸாமமென்னும்) மூன்றுவேதமாய்ப் பரமாநந்தமாகி நிற்பது......"[2] என்று வராஹபுராணமும் கூறுகிறபடி, பரம்பொருளின் உண்மையை உணர்த்தும் பகவானுடைய திருவாக்குக்குக் கீதை என்று பெயர்.

இது, "முற்றுமுணர்ந்தவரான வேதவ்யாஸபகவான் கீதை என்னும் பெயருடைய எழுநூறு சுலோகங்களால் அந்த தருமத்தை பகவான் உபதேசித்தவண்ணம் திரட்டி அமைத்தார்"[3] என்று பாஷ்யகாரர் அருளிச்செய்த திருவாக்கினுடைய ஒவ்வொரு பதத்தின் நோக்கத்தையும் சேர்த்துப்பார்த்து ஊகித்தறிவார்க்கு இனிது புலப்படும். ஆகவே, ப்ரஹ்மாவினிடமிருந்து வெளிப்பட்ட ருக் யஜுஸ் ஸாமாதிவேதங்களைப் பாதராயணபகவான் [வ்யாஸர்] ஒழுங்காகத் திரட்டி அமைத்ததுபோல, பகவானிடமிருந்து வெளிப்பட்ட கீதாவேதத்தையும் அப்படியே அமைத்தா ரென்க.

ஆகவே, இப்படிப்பட்ட இவ்வேதத்தின் மெய்ப்பொருளைக் கண்டு, உணர்ந்து, உலகத்திற்கு உரைக்கத்தக்க உரிமையுடையார் பகவதவதாரமான மகான்களேயாவர். அத்தகையார் அருளிச்செய்த உரையானது, இந்நூற்பொருளை ஸம்சயவிபரீதமறஉணர்தற்கு எவ்வாற்றானும் இன்றியமையாதது. ஏனெனில், அவ்வாறான உரையின்றிப் படித்தால், பொருளை அறியவே முடியாது. ஒருகால் முடியுமாயினும், அது புருஷார்த்தம் கைகூடாவண்ணம் கெடுத்து அநர்த்தமும் விளைவிக்கும். எங்ஙனமெனில், "கடலின் ஜலத்தைத் தனது உள்ளங்கையால் விலக்கி, அதனுள் புதைந்து கிடக்கும் ரத்நங்களை ஒரு நல்ல தெப்பத்தின் உதவியின்றி எடுக்க முயல்பவன், சுழல்களில் அகப்பட்டு மூழ்கிவிடுவானன்றே."

இது இங்ஙனம் நிற்க. பிறநாடுகளிற்போல நம் தமிழ்நாட்டிலும் பகவத்கீதாசாஸ்திரமானது ஸர்வஜனஸாதாரணமாய்ப் பெரிதும் வழங்குகின்றது. இவ்வாறு வழங்குகின்ற அரிதுணர்பொருளதான இவ்வேதஸாரத்திற்குக் கீழ்க்கூறியவாறு உரிய ஆசார்யர் எவராயினு மாகுக ; அவர் அருளிச்செய்த உரையின் ஒரு

[1] “𑌤𑌮𑍇𑌵 𑌭𑌗𑌵𑌦𑍁𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑌮𑌰𑍍𑌥𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣𑌦𑍍𑌵𑍈𑌪𑌾𑌯𑌨𑌃 𑌸𑌪𑍍𑌤𑌭𑌿𑌃 𑌶𑍍𑌲𑍋𑌕𑌶𑌤𑍈𑌃 𑌉𑌪𑌨𑌿𑌬𑌬𑌨𑍍𑌧 । 𑌤𑌤𑍍𑌰 𑌚 𑌪𑍍𑌰𑌾𑌯𑌶𑌃 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌮𑍁𑌖𑌵𑌿𑌨𑌿𑌃𑌸𑍃𑌤𑌾𑌨𑍇𑌵 𑌶𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑌲𑌿𑌖𑌤𑍍 । 𑌕𑌾𑌂𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 𑌤𑌤𑍍𑌸𑌙𑍍𑌗𑌤𑌯𑍇 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌵𑍍𑌯𑌾𑌸𑌶𑍍𑌚𑌕𑌾𑌰 । 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌂 𑌗𑍀𑌤𑌾𑌮𑌾𑌹𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑍇—‘𑌗𑍀𑌤𑌾𑌃 𑌸𑍁𑌗𑍀𑌤𑌾𑌃 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌾𑌃 𑌕𑌿𑌮𑌨𑍍𑌯𑍈𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑍈𑌃 । 𑌯𑌾𑌃 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌪𑌦𑍍𑌮𑌨𑌾𑌭𑌸𑍍𑌯 𑌮𑍁𑌖𑌪𑌦𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌿𑌨𑌿𑌃𑌸𑍃𑌤𑌾𑌃 ॥’ 𑌇𑌤𑌿”

[2] “𑌗𑍀𑌤𑌾 𑌮𑍇 𑌪𑌰𑌮𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌰𑍂𑌪𑌾 𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃॥........𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑌨𑍍𑌦𑍇𑌨 𑌕𑍃𑌷𑍍𑌣𑍇𑌨 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌸𑍍𑌵𑌮𑍁𑌖𑌤𑍋𑌽𑌰𑍍𑌜𑍁𑌨𑌮𑍍। 𑌵𑍇𑌦𑌤𑍍𑌰𑌯𑍀 𑌪𑌰𑌾𑌨𑌨𑍍𑌦𑌾........॥”

[3] 6-ஆம் பக்கத்தில்22,23-ஆம்வரிகளைப்பார்க்க.

## முகவுரை.

மொழிபெயர்ப்பாயினும் நம் தமிழ்ப்பாஷையில் கறந்தபால் கறந்தவண்ணம் அவர் சொன்னவாறே அமைந்து வெளிவந்ததாகத் தெரியவில்லை.

ஆதலால், இச்சாஸ்திரத்திற்கு பகவத்பாதர் அருளிச்செய்த பாஷ்யத்தையும் கீதாமூலத்தையும், கூட்டாமலும் குறைக்காமலும் உள்ளது உள்ளபடி என் சிற்றறிவிற்கு எட்டியஅளவு மொழிபெயர்த்திருக்கின்றேன். இந்நூற்பொருளின் ஸ்வபாவரீதியானது எவ்வளவு இடங்கொடுத்ததோ, அவ்வளவு தெளிவான எளிய தமிழ்நடையில் இம்மொழிபெயர்ப்பை எழுதியிருக்கின்றேன். மற்றும், முதனூலிற் கூறும் விஷயங்களுக்குத் தலைக்குறிப்புக்களும், எளிதில் பொருள் விளங்காத இடங்களில் குறிப்புக்களும் தந்திருக்கின்றேன். [முதனூல் - கீதையும், பாஷ்யமும்.]

“ஒருபாஷையினின்று மற்றொருபாஷைக்கு ஒன்றை மொழிபெயர்த்துக் கொண்டுபோகும்போது, முதனூலிலுள்ள செறிவும் பொலிவும் அழகும் நயமும் மொழிபெயர்ப்பாகிய வழிநூலிற் குறைவுபடுதல், உலகத்திற் பெரும்பான்மை.” மேலும், ஸ்ரீமத்பகவத்கீதையை அர்த்தஞானமின்றிப் பாடமாத்திரமாகப் பாராயணஞ் செய்தலும் புண்ணியமாகும்;(கஅ - எ0). அவ்வாறே, புண்ணியமாகும் பாஷ்ய பாராயணமும். ஆகவே, முதனூலையே நேரே படித்துணர்தலும் அர்த்தஞானத்தோடு பாராயணஞ்செய்தலும் மிகவிசேஷமாதலால், கீதையும் பாஷ்யமும் இம்மொழிபெயர்ப்போடு ஒருங்கே பதிப்பிக்கலாயின.

ப்ரஹ்மஸ்ரீ ஏ. மகாதேவசாஸ்திரியார், பி. ஏ., அவர்கள் ஆங்கிலபாஷையில் மொழிபெயர்த்துள்ள கீதையை உபயோகித்தற்கு அன்புடன் அநுமதித்த பெருந்தகைமைக்கு மனமுவந்து வந்தனஞ் செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

இனி, என்போன்றவர் செய்யும் இத்தகைய மொழிபெயர்ப்பிலும் முதனூற் பதிப்பிலும் குற்றங்குறைகள் வந்திருத்தல் கூடும். ஆதலின்,எவராயினும் அவற்றை எடுத்து எனக்குத் தெரிவிப்பராயின், அப்பேருதவி செய்த அவரிடம் மகிழ்வொடு நன்றிபாராட்டச் சித்தனாயிருக்கின்றேன்.

“ஸ்ரீ கிருஷ்ணார்ப்பண மஸ்து.” “ஓம் தத் ஸத்.”

சென்னை:
டிசம்பர்மீ, 1905.

த. சுந்தரராஜசர்மா.

## 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾

𑌶𑍍𑌰𑍀𑌮𑌚𑍍𑌛𑌙𑍍𑌕𑌰𑌭𑌗𑌵𑌤𑍍𑌪𑌾𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌿𑌰𑌚𑌿𑌤𑍇𑌨 𑌭𑌾𑌷𑍍𑌯𑍇𑌣 𑌸𑌹𑌿𑌤𑌾 ॥

---

𑍐 "𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 𑌪𑌰𑍋𑌽𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌦𑌣𑍍𑌡𑌮𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌸𑌂𑌭𑌵𑌮𑍍 ।
𑌅𑌣𑍍𑌡𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌿𑌮𑍇 𑌲𑍋𑌕𑌾𑌃 𑌸𑌪𑍍𑌤𑌦𑍍𑌵𑍀𑌪𑌾 𑌚 𑌮𑍇𑌦𑌿𑌨𑍀 ॥"

𑌸 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑍇𑌦𑌂 𑌜𑌗𑌤𑍍 𑌤𑌸𑍍𑌯 𑌚 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌂 𑌚𑌿𑌕𑍀𑌰𑍍𑌷𑍁𑌃 𑌮𑌰𑍀𑌚𑍍𑌯𑌾𑌦𑍀𑌨𑌗𑍍𑌰𑍇 𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑍀𑌨𑍍 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌧𑌰𑍍𑌮𑌂 𑌗𑍍𑌰𑌾𑌹𑌯𑌾𑌮𑌾𑌸 𑌵𑍇𑌦𑍋𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌤𑌤𑌃 𑌅𑌨𑍍𑌯𑌾𑌂𑌶𑍍𑌚 𑌸𑌨𑌕𑌸𑌨𑌨𑍍𑌦𑌨𑌾𑌦𑍀𑌨𑍍 𑌉𑌤𑍍𑌪𑌾𑌦𑍍𑌯 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌧𑌰𑍍𑌮𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌗𑍍𑌰𑌾𑌹𑌯𑌾𑌮𑌾𑌸 । 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑍋 𑌹𑌿 𑌵𑍇𑌦𑍋𑌕𑍍𑌤𑍋 𑌧𑌰𑍍𑌮𑌃 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑍋 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌶𑍍𑌚 𑌜𑌗𑌤𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 । 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌦𑌭𑍍𑌯𑍁𑌦𑌯𑌨𑌿𑌃𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌹𑍇𑌤𑍁𑌃 𑌯𑌃 𑌸 𑌧𑌰𑍍𑌮𑍋 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌦𑍍𑌯𑍈𑌃 𑌵𑌰𑍍𑌣𑌿𑌭𑌿𑌃 𑌆𑌶𑍍𑌰𑌮𑌿𑌭𑌿𑌶𑍍𑌚 𑌶𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌰𑍍𑌥𑌿𑌭𑌿𑌃 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍀𑌯𑌮𑌾𑌨𑍋 𑌦𑍀𑌰𑍍𑌘𑍇𑌣 𑌕𑌾𑌲𑍇𑌨 ॥

---

# ஸ்ரீமத் பகவத் கீதையும்,

## ஸ்ரீசங்கர பகவத்பாத ஆசார்யர் அருளிச்செய்த பாஷ்யமும்.

### உரைப்பாயிரம்.

#### கடவுள் வாழ்த்து.

ஓம் "நாராயணன் (என்னும் பரம்பொருளானது) அவ்யக்தத்திற்கு அப்பால் உள்ளது: அண்டம் அவ்யக்தத்தினின்று உண்டாவது: அண்டத்துளன்றோ இந்த உலகங்களும் ஏழு தீவுள்ள பூமியும் உள்ளன." [1] [அவ்யக்தம் - மாயை.]

#### வேதத்திற் கூறிய இருவகைத்தான தருமம்.

அந்த பகவான் இந்த உலகத்தைப் படைத்து, அதனை நிலைபெறச் செய்ய விரும்பியவராய், முதலில் மரீசி முதலிய பிரஜாபதிகளைச் சிருஷ்டித்து, வேதத்திற் கூறிய பிரவிருத்தி என்னும் தருமத்தைக் கைக்கொள்ளச் செய்தனர்; பின்பு ஸநகர் ஸநந்தநர் [2] முதலிய மற்றையோரையும் படைத்து, ஞான வைராக்கியங்களைக் குறிப்பாகப் பெற்ற நிவிருத்தி என்னும் தருமத்தைக் கைக்கொள்ளப்பண்ணினர். வேதத்திற் கூறிய பிரவிருத்தி நிவிருத்தி என்னும் இருவகைத்தான தருமமே உலகத்தை(ஒழுங்குபட)நிலைபெறச்செய்வது; பிராணிகளுக்குச் செல்வத்தையும் உறுதியான

---

[1] இந்த சுலோகம் ப்ரஹ்மாண்ட புராணத்திலிருப்பதாக ராகவாநந்தர் மநுஸ்மிருதியின் க-ஆம் அத்தியாயத்து, கo-ஆம் சுலோகத்தினுரையிற் கூறியுள்ளார். இன்னும் இது, மநுஸ்மிருதியின் சில பிரதிகளில், க-ஆம் அத்தியாயத்து, கக-ஆம் சுலோகமாகவும் காணப்படுகின்றது.

[2] "அவர்கள் வைராக்யத்தை அடைந்து மோக்ஷமார்க்க நிரதர்களாய் ப்ராஜாசிருஷ்டியில் பிரவிருத்தியாமல் ஸர்வ ஸங்க பரித்யாகிகளாய் யோகநிஷ்டை பெற்று, காமக் குரோத மத மாச்சரியங்க ளில்லாதவர்களாய், கிருதார்த்தராயிருந்தார்கள்" (வி-க-எ). இதற்கு இணங்க 'ஸநத்குமாரர் [எப்பொழுதுஞ் சிறுவர்]' என்ற பெயரினையுங் காண்க.

ஸ்ரீ.ல.ஸ்ரீ.கா.செ.மடாலய

## உரைப்பாயிரம்.

𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌤𑍄𑌣𑌾𑌂 𑌕𑌾𑌮𑍋𑌦𑍍𑌭𑌵𑌾𑌤𑍍 𑌹𑍀𑌯𑌮𑌾𑌨𑌵𑌿𑌵𑍇𑌕𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌹𑍇𑌤𑍁𑌕𑍇𑌨 𑌅𑌧𑌰𑍍𑌮𑍇𑌣 𑌅𑌭𑌿𑌭𑍂𑌯𑌮𑌾𑌨𑍇 𑌧𑌰𑍍𑌮𑍇, 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌧𑌮𑌾𑌨𑍇 𑌚 𑌅𑌧𑌰𑍍𑌮𑍇, 𑌜𑌗𑌤𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌂 𑌪𑌰𑌿𑌪𑌿𑌪𑌾𑌲𑌯𑌿𑌷𑍁𑌃 𑌸𑌃 𑌆𑌦𑌿𑌕𑌰𑍍𑌤𑌾 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌖𑍍𑌯𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃 𑌭𑍌𑌮𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌤𑍍𑌵𑌸𑍍𑌯 𑌰𑌕𑍍𑌷𑌣𑌾𑌰𑍍𑌥𑌂 𑌦𑍇𑌵𑌕𑍍𑌯𑌾𑌂 𑌵𑌸𑍁𑌦𑍇𑌵𑌾𑌦𑍍 𑌅𑌂𑌶𑍇𑌨 𑌕𑍃𑌷𑍍𑌣𑌃 𑌕𑌿𑌲 𑌸𑌂𑌬𑌭𑍂𑌵 । 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌤𑍍𑌵𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌰𑌕𑍍𑌷𑌣𑍇 𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌃 𑌸𑍍𑌯𑌾𑌦𑍍 𑌵𑍈𑌦𑌿𑌕𑍋 𑌧𑌰𑍍𑌮𑌃, 𑌤𑌦𑌧𑍀𑌨𑌤𑍍𑌵𑌾𑌦𑍍 𑌵𑌰𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌮𑌭𑍇𑌦𑌾𑌨𑌾𑌮𑍍 ॥

𑌸 𑌚 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌶𑌕𑍍𑌤𑌿𑌬𑌲𑌵𑍀𑌰𑍍𑌯𑌤𑍇𑌜𑍋𑌭𑌿𑌃 𑌸𑌦𑌾 𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑌃

---

நன்மையையும் நேரே தருவதான அத்தருமமே (தம்தமக்கு) நன்மையைத் தேடிக் கொள்ளும் பிராமணர் முதலிய வர்ணத்தாராலும் ஆச்ரமத்தாராலும் நெடுங்காலமாக [1] அநுஷ்டிக்கப்பட்டு வருகின்றது. [உறுதியான நன்மை - முக்தி.]

### பகவதவதாரத்தின் பிரயோஜனம்.

(அங்ஙனம்) அநுஷ்டிப்பவருடைய காமக்கிளர்ச்சியால் (நிலையின்றி) விவேகபுத்தி தேய, அதனால் அதர்மம் விளைய, அவ்வதர்மத்தால் தருமம் கீழே யமர்த்தப்பட்டும், அதர்மம் மேலிட்டும் வருமளவில், (வரைமுறையில்லாமல் வரம்பழிந்து போகாவண்ணம்) ஜகத்தின் நிலையைப் பாதுகாக்கக் கருதிய அவ்வாதிகர்த்தாவான நாராயணனென்னும் திருநாமமுடைய விஷ்ணுவானவர், "பூலோகத்திற்குரிய ப்ரஹ்ம"[2] மாகிய பிராமண்யத்தைக் காத்தற்பொருட்டு வஸுதேவருக்குத் தேவகியாரிடத்து (ஸ்ரீமத்)கிருஷ்ண (பகவா)னாக அம்சத்தால்[3] அவதரித்தனரென்ப. ஏனெனில், பிராமண்யம் பாதுகாக்கப்படுமாயின், வைதிகதருமமானது பாதுகாக்கப்பட்டதாகும்; வர்ணாச்ரமபேதங்கள் அதனைச் சார்ந்துநிற்றலின்.[4] [வைதிகம் - வேதத்தில் விதித்தது.]

ஞானம், ஐச்வர்யம், சக்தி, பலம், வீர்யம், தேஜஸ் என்பவற்றை எப்பொழுதுமுடைய அந்த பகவானானவர், முக்குண வடிவமும் விஷ்ணுவிற்கு உரியதுமான

---

1 "𑌦𑍀𑌰𑍍𑌘𑍇𑌣 𑌕𑌾𑌲𑍇𑌨" என்பதை "𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌤𑍄𑌣𑌾𑌮𑍍" என்பதோடுங்கூட்டி, அவற்றுள் முந்தினதற்கு "வெகுகாலமானபின், அதாவது - கிருதயுகமும் திரேதாயுகமும் முடிந்து, துவாபரயுகமும் முடிவுபெறுமளவிலே" என உரைப்பர் (ஆ).

2 "𑌯𑌦𑍍𑌦𑍇𑌵𑌂 𑌦𑍇𑌵𑌕𑍀 𑌦𑍇𑌵𑍀 𑌵𑌸𑍁𑌦𑍇𑌵𑌾𑌦𑌜𑍀𑌜𑌨𑌤𑍍 । 𑌭𑍌𑌮𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌗𑍁𑌪𑍍𑌤𑍍𑌯𑍈..........॥"

"தேவகிப்பிராட்டியாரானவர் பூலோகத்திற்குரிய ப்ரஹ்மத்தைக் காத்தற்காக வஸுதேவர்க்கு எந்தக் கடவுளைப் பெற்றாரோ.........." (ம - சா - சஎ). "பூலோகத்திற்குரிய ப்ரஹ்மமாவது - வேதங்களும், பிராமணர்களும், யாகங்களுமாம்" என உரையாசிரியர் நீலகண்டர் இச்சுலோகத்தினுரையிற் கூறியிருத்தலை இங்கு அறிக.

3 "அம்சத்தால்" என்பதற்கு "𑌸𑍍𑌵𑍇𑌚𑍍𑌛𑌾𑌨𑌿𑌰𑍍𑌮𑌿𑌤𑍇𑌨 𑌮𑌾𑌯𑌾𑌮𑌯𑍇𑌨 𑌦𑌿𑌵𑍍𑌯𑍇𑌨 𑌰𑍂𑌪𑍇𑌣" "தமதிச்சைப்படி எடுக்கப்பட்ட மாயாமயத் திருமேனியால்" என உரைப்பர் (ஆ). பகவானுடைய திருமேனி மாயையினாலாகியதாம். அது மனிதர்சரீரம்போலப் பஞ்சபூதங்களாலாகியதுமன்று; உண்மையுமன்று; அதாவது - அங்கேதான் உள்ளது இங்கேதான் உள்ளது என வரையறுக்கப்படாது எங்கும் பரிபூரணமாகி நிற்கும் பரமானந்தப் பரம்பொருளே லோகாநுக்கிரகஞ் செய்தற்பொருட்டுப் பிறப்பதுபோலவும், உடம்பொடுநிற்பதுபோலவும் காணப்படுகின்றதென உணர்க. கீதையின் (ச - சு)ஐப் பார்க்க.

4 க்ஷத்திரியர் முதலாயினோர் யாகஞ்செய்தலிலும், வேதமோதுதலிலும் பிராமணர்களுடைய உதவியை வேண்டிநிற்கிறார்கள்.—(ஆ.)

𑌤𑍍𑌰𑌿𑌗𑍁𑌣𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾𑌂 𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑍀𑌂 𑌸𑍍𑌵𑌾𑌂 𑌮𑌾𑌯𑌾𑌂 𑌮𑍂𑌲𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌵𑌶𑍀𑌕𑍃𑌤𑍍𑌯-𑌅𑌜𑌃 𑌅𑌵𑍍𑌯𑌯𑍋 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑍍 𑌈𑌶𑍍𑌵𑌰𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑍁𑌦𑍍𑌧𑌬𑍁𑌦𑍍𑌧𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑍋𑌽𑌪𑌿𑌸𑌨𑍍- 𑌸𑍍𑌵𑌮𑌾𑌯𑌯𑌾 𑌦𑍇𑌹𑌵𑌾𑌨𑌿𑌵 𑌜𑌾𑌤 𑌇𑌵 𑌚 𑌲𑍋𑌕𑌾𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍇 ॥

𑌸𑍍𑌵𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌾𑌭𑌾𑌵𑍇𑌽𑌪𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑍁𑌜𑌿𑌘𑍃𑌕𑍍𑌷𑌯𑌾 𑌵𑍈𑌦𑌿𑌕𑌂 𑌧𑌰𑍍𑌮𑌦𑍍𑌵𑌯𑌮𑌰𑍍𑌜𑍁𑌨𑌾𑌯 𑌶𑍋𑌕𑌮𑍋𑌹𑌮𑌹𑍋𑌦𑌧𑍌 𑌨𑌿𑌮𑌗𑍍𑌨𑌾𑌯 𑌉𑌪𑌦𑌿𑌦𑍇𑌶, 𑌗𑍁𑌣𑌾𑌧𑌿𑌕𑍈𑌰𑍍𑌹𑌿 𑌗𑍃𑌹𑍀𑌤𑌃 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍀𑌯𑌮𑌾𑌨𑌶𑍍𑌚 𑌧𑌰𑍍𑌮𑌃 𑌪𑍍𑌰𑌚𑌯𑌂 𑌗𑌮𑌿𑌷𑍍𑌯𑌤𑍀𑌤𑌿 ॥

𑌤𑌂 𑌧𑌰𑍍𑌮𑌂 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌯𑌥𑍋𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑌂 𑌵𑍇𑌦𑌵𑍍𑌯𑌾𑌸𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑍋 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌗𑍀𑌤𑌾𑌖𑍍𑌯𑍈𑌃 𑌸𑌪𑍍𑌤𑌭𑌿𑌃 𑌶𑍍𑌲𑍋𑌕𑌶𑌤𑍈𑌃 𑌉𑌪𑌨𑌿𑌬𑌬𑌨𑍍𑌧 ॥

𑌤𑌦𑌿𑌦𑌂 𑌗𑍀𑌤𑌾𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌸𑌮𑌸𑍍𑌤𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌸𑌾𑌰𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑌭𑍂𑌤𑌂 𑌦𑍁𑌰𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌾𑌰𑍍𑌥𑌮𑍍 । 𑌤𑌦𑌰𑍍𑌥𑌾𑌵𑌿𑌷𑍍𑌕𑌰𑌣𑌾𑌯 𑌅𑌨𑍇𑌕𑍈𑌃 𑌵𑌿𑌵𑍃𑌤𑌪𑌦𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌨𑍍𑌯𑌾𑌯𑌮𑌪𑌿

---

[1] தம் மாயையாகிய மூலப்பிரகிருதியை வசப்படுத்திக்கொண்டு[1]— (உண்மையில்)பிறவாதவராய், அழிவற்றவராய், பிராணிகளுக்கு ஈச்வரராய், இயல்பாகவே நித்யராய் சுத்தராய் புத்தராய் முக்தராயிருப்பினும்—தம் மாயையினலே [illegible] நிற்பவர்போலவும் பிறந்தவர்போலவும், லோகாநுக்கிரகஞ்செய்பவர[illegible] காணப்படுகிறார். [புத்தர் - ஜடத்தன்மையற்றவர், ஞானவடிவா[illegible]]

தமக்கு ஒருபயனும் இல்லையாயினும், பிராணிகளை [illegible] டற்ற[illegible]னும் எண்ணத்தால் வேதத்தில் விதித்துள்ள தருமமிரண்[illegible]யும் சோக[illegible] பெருங்கடலில் மூழ்கிக்கிடக்கின்ற அர்ஜுனனுக்கு—நற்குணம் மிகுந்தவரா[illegible]றுக்கொள்ளப்பட்டும், அநுஷ்டிக்கப்பட்டும் வருவதான தருமம் பரவுதலை ய[illegible]யுமென்று (கருதி) உபதேசித்தருளினர்.

### கீதையும், பாஷ்யமும்.

முற்றுமுணர்ந்தவரான வேதவ்யாஸபகவான், கீதை என்னும் பெயருடைய எழுநூறுசுலோகங்களால் அந்தத் தருமத்தைப் பகவான் உபதேசித்தவண்ணம் திரட்டி அமைத்தருளினர். [வேத வ்யாஸர் - வேதங்களை வகுத்து ஒழுங்குபடுத்தியவர்.]

பிரசித்தமான இந்த கீதாசாஸ்திரமானது ஸகல வேதார்த்தஸாரத் திரட்டு; பொருளுணர்தற்கு அரியது. அதன் பொருளை வெளியிடுதற்காக (முன் உரை யெழுதினோர்) அநேகரால் பதம், பதப்பொருள், வாக்கியப்பொருள், நியாயமென்பன விவரிக்கப்பெற்றிருந்தும், (அது, முன்பின்)முற்றும் மாறுபட்ட பலபல பொருளுள்ளதாக ஸாமாந்ய ஜனங்களால் கிரகிக்கப்பட்டுவரக்கண்டு, அத

---

[1] "தம்," "மாயை," என்ற இவ்விரண்டனுள் முந்தியது 'பிரகிருதி பகவானுக்கு உட்பட்டது' என்றும், பிந்தியது 'பிரகிருதியின் வடிவம் தோற்றமாத்திரமேயன்றி மெய்ப்பொருளன்று' என்றும், "வசப்படுத்திக்கொண்டு" என்பது '(ஜீவன் பிரகிருதிக்கு உட்படுவதுபோல,) பகவான் அதற்கு உட்படாதவர்' என்றும் தெரிவிக்குமாறு காண்க.—(ஆ.) "பகவானை அடைக்கலமாகப் [illegible]ந்தவர் மாயையைக்கடந்து நிற்பர்"(எ-கச)என[illegible] இதனையும் இங்கு நோக்கிக்கொள்க. [மா[illegible] மாயா; வடசொல். மா-இல்லை, யா-எது. மா-எது இல்லையோ அது: அதாவது போலிய தோற்றம், பொய்ம்மை.]

19-4

KOVILOOR ANDAVAR LIBRARY KOVILOOR
A. No. 23720

## உரைப்பாயிரம்.

𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌾𑌨𑍇𑌕𑌾𑌰𑍍𑌥𑌤𑍍𑌵𑍇𑌨 𑌲𑍌𑌕𑌿𑌕𑍈𑌃 𑌗𑍃𑌹𑍍𑌯𑌮𑌾𑌣𑌮𑍁𑌪𑌲𑌭𑍍𑌯𑌾𑌹𑌂 𑌵𑌿𑌵𑍇𑌕𑌤𑌃 𑌅𑌰𑍍𑌥𑌨𑌿𑌰𑍍𑌧𑌾𑌰𑌣𑌾𑌰𑍍𑌥𑌂 𑌸𑌂𑌕𑍍𑌷𑍇𑌪𑌤𑍋 𑌵𑌿𑌵𑌰𑌣𑌂 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 ॥

𑌤𑌸𑍍𑌯 𑌅𑌸𑍍𑌯 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌸𑌂𑌕𑍍𑌷𑍇𑌪𑌤𑌃 𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌂 𑌪𑌰𑌂 𑌨𑌿𑌃𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌂 𑌸𑌹𑍇𑌤𑍁𑌕𑌸𑍍𑌯 𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑍍𑌯 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑍋𑌪𑌰𑌮𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑍍। 𑌤𑌚𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌾𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌰𑍂𑌪𑌾𑌤𑍍 𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌇𑌮𑌮𑍇𑌵 𑌗𑍀𑌤𑌾𑌰𑍍𑌥𑌂 𑌧𑌰𑍍𑌮𑌮𑍁𑌦𑍍𑌦𑌿𑌶𑍍𑌯 𑌭𑌗𑌵𑌤𑍈𑌵 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍—"𑌸 𑌹𑌿 𑌧𑌰𑍍𑌮𑌃 𑌸𑍁𑌪𑌰𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 𑌪𑌦𑌵𑍇𑌦𑌨𑍇" 𑌇𑌤𑌿 𑌅𑌨𑍁𑌗𑍀𑌤𑌾𑌸𑍁 । 𑌤𑌤𑍍𑌰𑍈𑌵 𑌚 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍—

"𑌨𑍈𑌵 𑌧𑌰𑍍𑌮𑍀 𑌨 𑌚𑌾𑌧𑌰𑍍𑌮𑍀 𑌨 𑌚𑍈𑌵 𑌹𑌿 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑍀 ।
𑌯𑌃 𑌸𑍍𑌯𑌾𑌦𑍇𑌕𑌾𑌸𑌨𑍇 𑌲𑍀𑌨𑌃 𑌤𑍂𑌷𑍍𑌣𑍀𑌂 𑌕𑌿𑌂𑌚𑌿𑌦𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌨𑍍 ॥"

"𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑍍" 𑌇𑌤𑌿 𑌚 । 𑌇𑌹𑌾𑌪𑌿 𑌚 𑌅𑌨𑍍𑌤𑍇 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌾𑌯— "𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌮𑌾𑌮𑍇𑌕𑌂 𑌶𑌰𑌣𑌂 𑌵𑍍𑌰𑌜" 𑌇𑌤𑌿 ॥

𑌅𑌭𑍍𑌯𑍁𑌦𑌯𑌾𑌰𑍍𑌥𑍋𑌽𑌪𑌿 𑌯𑌃 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑍋 𑌧𑌰𑍍𑌮𑍋 𑌵𑌰𑍍𑌣𑌾𑌨𑍍 𑌆𑌶𑍍𑌰𑌮𑌾𑌂𑌶𑍍𑌚 𑌉𑌦𑍍𑌦𑌿𑌶𑍍𑌯 𑌵𑌿𑌹𑌿𑌤𑌃 । 𑌸 𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌸𑍍𑌥𑌾𑌨𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌹𑍇𑌤𑍁𑌰𑌪𑌿 𑌸𑌨𑍍, 𑌈𑌶𑍍𑌵𑌰𑌾𑌰𑍍𑌪𑌣𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾

---

பொருளைத் தெளிவாய் நிர்ணயித்தற்பொருட்டு யான் சுருக்கமாய் உரைசெய்கிறேன். [நியாயம்- ஆக்ஷேப ஸமாதாநம்.]

### ஞானயோகமே முக்திக்கு நேரான ஸாதநம்.

பிரசித்தமான இந்த கீதாசாஸ்திரத்தின் பயனாவது - சுருக்கமாக(ச் சொல்லில்), ஸம்ஸாரமானது (தனது) காரண(மாகிய மூல அஜ்ஞாந)த்தோடு முற்றும் ஒழிந்திடுதலாகிய (யாவற்றினும்)மேம்பட்ட உறுதியானநன்மையேயாம். அது, ஸகலகர்மங்களையும் துறத்தலை முன்னிட்டதான ஆத்மஞான நிஷ்டை என்னும் தருமத்தினின்று உண்டாகின்றது. அவ்வண்ணமே, கீதையின் பொருளான இதே தருமத்தைக் குறிப்பிட்டு "ப்ரஹ்மத்தின் நிலையைப் பெறுதற்கு அந்தத் தருமமே நன்றாகப் போதும்"(ம-அச்வ-கசு-கஉ) என அநுகீதைகளில் பகவானே கூறினர். இன்னும், அங்கு "எவன் ஒன்றில் நிற்றலிலே ஊன்றி அமர்ந்தவனாய், ஒன்றும் நினையாதவனாய்ச் சும்மாவிருக்கின்றானோ அவனுக்குப் புண்ணியமுமில்லை, பாபமுமில்லை : வாழ்வுமில்லை, தாழ்வு மில்லை," "ஞானத்திற்குத் துறவே அடையாளம்" (ம-அச்வ-சங-உசு) என்றும் கூறியுள்ளார். இங்கேயும் இறுதியில் "ஸகல தரும (அதரும)ங்களையும் விட்டொழிந்து என்னையே தஞ்சமாகக்கொள்" (கஅ-சுசு) என்று அர்ஜுனனுக்கு அருளிச்செய்தனர். [ஒன்றில் நிற்றலிலே ஊன்றி அமர்ந்தவன்-ப்ரஹ்மத்திலே லயித்தவர்.]

### கர்மயோகமானது முக்திக்கு ஸாதநமாயிருக்கும் விதம்.

பிரவிருத்தி என்னும் தருமமானது, செல்வத்திற்குப் பயன்படுவதாயினும், வர்ணங்களையும் ஆச்ரமங்களையும் உத்தேசித்து விதிக்கப்பட்டதாம். அது, (பயனை மனம் நோக்கிச் செய்யப்பட்டபொழுது) தேவர் முதலாயினோர்களின் நிலையைப் பெறுதற்கு ஏதுவாயிருப்பினும், பயனை எதிர்நோக்காது ஈச்வரார்ப்பணபுத்தியோடு

𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍀𑌯𑌮𑌾𑌨𑌃 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌶𑍁𑌦𑍍𑌧𑌯𑍇 𑌭𑌵𑌤𑌿 𑌫𑌲𑌾𑌭𑌿𑌸𑌂𑌧𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃। 𑌶𑍁𑌦𑍍𑌧𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌯 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑌾𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑍇𑌨 𑌚 𑌨𑌿𑌃𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌮𑌪𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇। 𑌤𑌥𑌾 𑌚 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿—“𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌾𑌧𑌾𑌯 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿,” “𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌸𑌙𑍍𑌗𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾𑌽𑌽𑌤𑍍𑌮𑌶𑍁𑌦𑍍𑌧𑌯𑍇” 𑌇𑌤𑌿॥

𑌇𑌮𑌂 𑌦𑍍𑌵𑌿𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌂 𑌧𑌰𑍍𑌮𑌂 𑌨𑌿𑌃𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌂 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌾𑌖𑍍𑌯𑌂 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌭𑌿𑌧𑍇𑌯𑌭𑍂𑌤𑌂 𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑌃 𑌅𑌭𑌿𑌵𑍍𑌯𑌞𑍍𑌜𑌯𑌤𑍍 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌾𑌭𑌿𑌧𑍇𑌯𑌵𑌤𑍍 𑌗𑍀𑌤𑌾𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑍍। 𑌯𑌤𑌃 𑌤𑌦𑌰𑍍𑌥𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌸𑌮𑌸𑍍𑌤𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑍍𑌥𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃, 𑌅𑌤𑌃 𑌤𑌦𑍍𑌵𑌿𑌵𑌰𑌣𑍇 𑌯𑌤𑍍𑌨𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌮𑌯𑌾॥

---

செய்யப்பட, சித்தசுத்தி வரப்பண்ணுவதாம். இனிப் பரிசுத்தமான மனம் ஞான நிஷ்டைக்கு ஏற்ற தகுதிபெற, அவ்வழியாக(ப் பிரவிருத்தி தருமமானது) ஞான முண்டாகச் செய்தலால், (இவ்வாறு)முக்திக்கு(ப் பரம்பரையான) காரணமாதலேயும் பெறுகின்றது. அவ்வண்ணமே (இதே கருத்தை உட்கொண்டு) "ப்ரஹ்மத்தினிடத்துக் கர்மங்களை அர்ப்பித்து" "........யோகிகள் பற்றைவிட்டுக் கர்மத்தைச் செய்கிறார்கள், சித்தசுத்திக்காக" (ரு - க0, கக) என (ஸ்ரீ பகவான்) கூறுவார்.

### கீதாசாஸ்திரத்தின் சிறப்புப்பொருளும், சிறப்புப்பயனும்.

கீதாசாஸ்திரமானது, முக்திக்குப் பயன்படுவதான இவ்விருவகைத்தருமத்தையும் (பொதுவாய்) வெளிப்படுத்தி, (தான்) சொல்ல எடுத்துக்கொண்ட (விஷயமான) ப்ரஹ்மமாகிய வாஸுதேவ னென்ற பரமார்த்த தத்துவத்தைச் சிறப்பாய் வெளிப்படுத்துகின்றது; (எனவே,) சிறப்புப்பயனும், சிறப்புச்சம்பந்தமும், சிறப்புப் பொருளும்[1] உடையது (என்பதாயிற்று). அதன்பொருளைக் கண்டு தேறியவளவிலே ஸகலபுருஷார்த்தங்களும் கைகூடுமாதலால், யான் அதற்கு உரை யெழுத முயற்சி செய்கின்றேன்.

---

[1] ஒருநூல் கேட்கப்புகுந்தவர்க்கு அந்நூலாற் கூறப்படும்பொருளும், நூல்கேட்டலாற் பெறப்படும் பயனும், கேட்டற்கு உரிய அதிகாரிகளாவார் இவரென்பதும், நூற்கும் நூல்கூறியபொருளுக்குமே யன்றி நூல்கூறியபொருளுக்கும் பயனுக்கும் ஸம்பந்தமும் உணர்தலன்றி நூல் கேட்பதில் மனவூக்கம் செல்லாமையின், இந்நான்கையும் முதலில் உணர்த்தவேண்டும்; ஆகவே, அவை இங்கு வருமாறு:—நூலாற் கூறப்படும் பொருள்-பரப்ரஹ்மம் : நூல்கேட்டலாற் பெறப்படும் பயன்-முக்தி : கேட்டற்கு உரிய அதிகாரிகளாவார்-அர்ஜுனன் போன்றவர் : நூற்கும் நூல்கூறிய பொருளுக்கும், உணர்த்துவதும் உணர்த்தப்படுவதுமாகிய ஸம்பந்தம் : நூல்கூறிய பொருளுக்கும் பயனுக்கும், ஸாதநமும் ஸாத்தியமுமாகிய ஸம்பந்தம். இவற்றை முறையே விஷயம், பிரயோஜனம், அதிகாரி, ஸம்பந்தம் என்னும் அநுபந்தசதுஷ்டயம் என்பர் வடநூலார். [ஸாதநம் - கருவி. ஸாத்தியம் - கருவியால் ஸாதிக்கப்படுவது.]

𑌅𑌥

## 𑌪𑍍𑌰𑌥𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌵𑌿𑌷𑌾𑌦𑌯𑍋𑌗𑌃 ॥

𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰 𑌉𑌵𑌾𑌚 ॥

௧. 𑌧𑌰𑍍𑌮𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇 𑌕𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇 𑌸𑌮𑌵𑍇𑌤𑌾 𑌯𑍁𑌯𑍁𑌤𑍍𑌸𑌵𑌃 ।
𑌮𑌾𑌮𑌕𑌾𑌃 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌶𑍍𑌚𑍈𑌵 𑌕𑌿𑌮𑌕𑍁𑌰𑍍𑌵𑌤 𑌸𑌞𑍍𑌜𑌯 ॥

𑌸𑌞𑍍𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚 ॥

௨. 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌤𑍁 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌨𑍀𑌕𑌂 𑌵𑍍𑌯𑍂𑌢𑌂 𑌦𑍁𑌰𑍍𑌯𑍋𑌧𑌨𑌸𑍍𑌤𑌦𑌾 ।
𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌮𑍁𑌪𑌸𑌙𑍍𑌗𑌮𑍍𑌯 𑌰𑌾𑌜𑌾 𑌵𑌚𑌨𑌮𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 ॥

௩. 𑌪𑌶𑍍𑌯𑍈𑌤𑌾𑌂 𑌪𑌾𑌣𑍍𑌡𑍁𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌮𑌾𑌚𑌾𑌰𑍍𑌯 𑌮𑌹𑌤𑍀𑌂 𑌚𑌮𑍂𑌮𑍍 ।
𑌵𑍍𑌯𑍂𑌢𑌾𑌂 𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑌪𑍁𑌤𑍍𑌰𑍇𑌣 𑌤𑌵 𑌶𑌿𑌷𑍍𑌯𑍇𑌣 𑌧𑍀𑌮𑌤𑌾 ॥

௪. 𑌅𑌤𑍍𑌰 𑌶𑍂𑌰𑌾 𑌮𑌹𑍇𑌷𑍍𑌵𑌾𑌸𑌾 𑌭𑍀𑌮𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌮𑌾 𑌯𑍁𑌧𑌿 ।
𑌯𑍁𑌯𑍁𑌧𑌾𑌨𑍋 𑌵𑌿𑌰𑌾𑌟𑌶𑍍𑌚 𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑌶𑍍𑌚 𑌮𑌹𑌾𑌰𑌥𑌃 ॥

௫. 𑌧𑍃𑌷𑍍𑌟𑌕𑍇𑌤𑍁𑌶𑍍𑌚𑍇𑌕𑌿𑌤𑌾𑌨𑌃 𑌕𑌾𑌶𑌿𑌰𑌾𑌜𑌶𑍍𑌚 𑌵𑍀𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍 ।
𑌪𑍁𑌰𑍁𑌜𑌿𑌤𑍍𑌕𑍁𑌨𑍍𑌤𑌿𑌭𑍋𑌜𑌶𑍍𑌚 𑌶𑍈𑌬𑍍𑌯𑌶𑍍𑌚 𑌨𑌰𑌪𑍁𑌙𑍍𑌗𑌵𑌃 ॥

௬. 𑌯𑍁𑌧𑌾𑌮𑌨𑍍𑌯𑍁𑌶𑍍𑌚 𑌵𑌿𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤 𑌉𑌤𑍍𑌤𑌮𑍌𑌜𑌾𑌶𑍍𑌚 𑌵𑍀𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍 ।
𑌸𑍌𑌭𑌦𑍍𑌰𑍋 𑌦𑍍𑌰𑍌𑌪𑌦𑍇𑌯𑌾𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵 𑌮𑌹𑌾𑌰𑌥𑌾𑌃 ॥

---

## முதல் அத்தியாயம்: அர்ஜுனவிஷாதயோகம்.

போரின் ரீதியை ஸஞ்ஜயன் விவரமாய்ச் சொல்லுதல்.

திருதராஷ்டிரன் சொல்லலுற்ருன்:

௧. ஸஞ்ஜய! போர்செய்ய ஸன்னத்தராய் குருக்ஷேத்திரமென்னும் தரும பூமியிலே ஒருங்குகூடிய நம்மவரும் பாண்டவரும் என் செய்தார்கள்?

ஸஞ்ஜயன் சொல்லலுற்ருன்:

௨. துர்யோதனராஜன், பாண்டவர்களின்படை அணிவகுக்கப்பட்டிருப்பதைக் கண்டு, அப்பொழுது ஆசார்யரருகிற்சென்று (இவ்) வார்த்தையைப் பேசலாயினன்:

துர்யோதனன் துரோணரோடு பேசுதல்.

௩. ஆசார்யரே! பாண்டவருடைய இப்பெரியசேனையானது தங்களுடைய சிஷ்யனுன புத்திசாலியாயுள்ள துருபதபுத்திரனல் அணிவகுக்கப்பட்டிருப்பதைப் பார்ப்பீர்களாக.

௪. இங்கே மகாவில்லாளரான சூரரும், போரில் வீமனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸமானருமான யுயுதானன், விராடன், மகாரதனுன துருபதன்,

௫. த்ருஷ்டகேது, சேகிதானன், வீர்யசாலியான காசிராஜன், புருஜித், குந்திபோஜன், மனிதரிற் சிறந்தவனுன சைப்யன்,

௬. பராக்கிரமசாலியான யுதாமந்யு, வீர்யசாலியான உத்தமௌஜஸ், ஸுபத்ரா குமாரன், திரௌபதி குமாரர் (ஆகிய இவர்கள்) எல்லோருமே மகாரதர்கள்.

௭. 𑌅𑌸𑍍𑌮𑌾𑌕𑌂 𑌤𑍁 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌾 𑌯𑍇 𑌤𑌾𑌨𑍍𑌨𑌿𑌬𑍋𑌧 𑌦𑍍𑌵𑌿𑌜𑍋𑌤𑍍𑌤𑌮 ।
𑌨𑌾𑌯𑌕𑌾 𑌮𑌮 𑌸𑍈𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌰𑍍𑌥𑌂 𑌤𑌾𑌨𑍍𑌬𑍍𑌰𑌵𑍀𑌮𑌿 𑌤𑍇 ॥
௮. 𑌭𑌵𑌾𑌨𑍍𑌭𑍀𑌷𑍍𑌮𑌶𑍍𑌚 𑌕𑌰𑍍𑌣𑌶𑍍𑌚 𑌕𑍃𑌪𑌶𑍍𑌚 𑌸𑌮𑌿𑌤𑌿𑌂𑌜𑌯𑌃 ।
𑌅𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌾𑌮𑌾 𑌵𑌿𑌕𑌰𑍍𑌣𑌶𑍍𑌚 𑌸𑍌𑌮𑌦𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌜𑌯𑌦𑍍𑌰𑌥𑌃 ॥
௯. 𑌅𑌨𑍍𑌯𑍇 𑌚 𑌬𑌹𑌵𑌶𑍍𑌶𑍂𑌰𑌾 𑌮𑌦𑌰𑍍𑌥𑍇 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌜𑍀𑌵𑌿𑌤𑌾𑌃 ।
𑌨𑌾𑌨𑌾𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌹𑌰𑌣𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌯𑍁𑌦𑍍𑌧𑌵𑌿𑌶𑌾𑌰𑌦𑌾𑌃 ॥
௧௦. 𑌅𑌪𑌰𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌂 𑌤𑌦𑌸𑍍𑌮𑌾𑌕𑌂 𑌬𑌲𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌾𑌭𑌿𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌮𑍍 ।
𑌪𑌰𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌂 𑌤𑍍𑌵𑌿𑌦𑌮𑍇𑌤𑍇𑌷𑌾𑌂 𑌬𑌲𑌂 𑌭𑍀𑌮𑌾𑌭𑌿𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌮𑍍 ॥
௧௧. 𑌅𑌯𑌨𑍇𑌷𑍁 𑌚 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌯𑌥𑌾𑌭𑌾𑌗𑌮𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 ।
𑌭𑍀𑌷𑍍𑌮𑌮𑍇𑌵𑌾𑌭𑌿𑌰𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑍁 𑌭𑌵𑌨𑍍𑌤𑌸𑍍𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵 𑌹𑌿 ॥
௧௨. 𑌤𑌸𑍍𑌯 𑌸𑌂𑌜𑌨𑌯𑌨𑍍𑌹𑌰𑍍𑌷𑌂 𑌕𑍁𑌰𑍁𑌵𑍃𑌦𑍍𑌧𑌃 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌃 ।
𑌸𑌿𑌂𑌹𑌨𑌾𑌦𑌂 𑌵𑌿𑌨𑌦𑍍𑌯𑍋𑌚𑍍𑌚𑍈𑌃 𑌶𑌂𑌖𑌂 𑌦𑌧𑍍𑌮𑍌 𑌪𑍍𑌰𑌤𑌾𑌪𑌵𑌾𑌨𑍍 ॥
௧௩. 𑌤𑌤𑌃 𑌶𑌂𑌖𑌾𑌶𑍍𑌚 𑌭𑍇𑌰𑍍𑌯𑌶𑍍𑌚 𑌪𑌣𑌵𑌾𑌨𑌕𑌗𑍋𑌮𑍁𑌖𑌾𑌃 ।
𑌸𑌹𑌸𑍈𑌵𑌾𑌭𑍍𑌯𑌹𑌨𑍍𑌯𑌨𑍍𑌤 𑌸 𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑍁𑌮𑍁𑌲𑍋𑌽𑌭𑌵𑌤𑍍 ॥
௧௪. 𑌤𑌤𑌃 𑌶𑍍𑌵𑍇𑌤𑍈𑌰𑍍𑌹𑌯𑍈𑌰𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍇 𑌮𑌹𑌤𑌿 𑌸𑍍𑌯𑌨𑍍𑌦𑌨𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑍌 ।
𑌮𑌾𑌧𑌵𑌃 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌶𑍍𑌚𑍈𑌵 𑌦𑌿𑌵𑍍𑌯𑍌 𑌶𑌂𑌖𑍌 𑌪𑍍𑌰𑌦𑌧𑍍𑌮𑌤𑍁𑌃 ॥

---

௭. ஆனால், பிராமணோத்தமரே! நம்மில் சிறந்தவரான என்சேனைத்தலைவர்கள் எவரோ, அவர்களைத் தெரிந்துகொள்க. (தாங்களே தெரிந்துகொள்ளக்கூடு மென்றாலும், இந்த யுத்தக்குழப்பத்தில்) தங்களுக்கு ஒருகுறிப்புக்காக அவர்களைக் கூறுகின்றேன் :

௮. தாங்களும், பீஷ்மரும், கர்ணனும், போரில் வெற்றிபெறும் கிருபரும், அச்வத்தாமனும், விகர்ணனும், ஸோமதத்தன் குமாரனும், ஜயத்ரதனும்,

௯. மற்றும் அனேகசூரரும் எனக்காக உயிரைவிடத் துணிந்தவர் : போர்செய்யக் கருவியான பல பல ஆயுதங்களுடையவர் : போர்புரிதலில் ஸகலரும் தேர்ந்தவர்.

௧௦. பீஷ்மரால் பாதுகாக்கப்பட்டதான நம்முடைய இச்சேனை அபரிமிதமாயிருக்கின்றது. வீமனாற் காக்கப்பட்டதான இவர்களுடைய இச்சேனையோ மிதமாயிருக்கின்றது.

௧௧. ஆகவே, நீங்களெல்லாருமே எல்லாப்படைவகுப்புக்களிலும் தம்தம் நிலைகளினின்று பீஷ்மரையே எல்லாப்புறங்களிலும் காத்தல்வேண்டும்.

இருதிறத்துச்சேனைகளும் போருக்குச் சன்னத்தமாயிருத்தல்.

௧௨. கௌரவர்களில் பெரியவரும் பிரதாபசாலியுமான பாட்டனர் [பீஷ்மர்], அவனுக்கு [துர்யோதனனுக்கு] உத்ஸாஹ முண்டாக்குபவராய், உரக்க ஸிம்ஹநாதஞ்செய்து சங்கையூதினர்.

௧௩. பின்பு உடனே சங்குகளும், பேரிகளும், தம்பட்டங்களும், பறைகளும், ஊதுகொம்புகளும் முழக்கப்பட்டன; அவ்வொலி நிரம்பி நின்றது.

௧௪. அப்பால், மாதவனும் பாண்டவனும் வெண்குதிரைகள் பூட்டியதோர் பெரிய தேரினுள் இருந்தே (தம்முடைய) திவ்வியமான சங்குகளை ஊதினர்கள்.

கரு. பாஞ்சஜந்யம் ஹ்ருஷீகேஶோ தேவதத்தம் தநஞ்ஜய꞉ ।
பௌண்ட்ரம் தத்மௌ மஹாஶங்கம் பீமகர்மா வ்ருகோதர꞉ ॥
கசு. அநந்தவிஜயம் ராஜா குந்தீபுத்ரோ யுதிஷ்டிர꞉ ।
நகுல꞉ ஸஹதேவஶ்ச ஸுகோஷமணிபுஷ்பகௌ ॥
கஎ. காஶ்யஶ்ச பரமேஷ்வாஸ꞉ ஶிகண்டீ ச மஹாரத꞉ ।
த்ருஷ்டத்யும்நோ விராடஶ்ச ஸாத்யகிஶ்சாபராஜித꞉ ॥
கஅ. த்ருபதோ த்ரௌபதேயாஶ்ச ஸர்வஶ꞉ ப்ருதிவீபதே ।
ஸௌபத்ரஶ்ச மஹாபாஹு꞉ ஶங்காந்தத்மு꞉ ப்ருதக் ப்ருதக் ॥
ககூ. ஸ கோஷோ தார்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத் ।
நபஶ்ச ப்ருதிவீம் சைவ துமுலோ வ்யநுநாதயந் ॥
உ௦. அத வ்யவஸ்திதாந் த்ருஷ்ட்வா தார்தராஷ்ட்ராந் கபித்வஜ꞉ ।
ப்ரவ்ருத்தே ஶஸ்த்ரஸம்பாதே தநுருத்யம்ய பாண்டவ꞉ ॥
உக. ஹ்ருஷீகேஶம் ததா வாக்யமிதமாஹ மஹீபதே ।
அர்ஜுந உவாச ॥
ஸேநயோருபயோர்மத்யே ரதம் ஸ்தாபய மேऽச்யுத ॥
உஉ. யாவதேதாந்நிரீக்ஷேऽஹம் யோத்துகாமாநவஸ்திதாந் ।
கைர்மயா ஸஹ யோத்தவ்யமஸ்மிந் ரணஸமுத்யமே ॥

---

கரு. ஹ்ருஷீகேசன் பாஞ்சஜந்யத்தையும், அர்ஜுனன் தேவதத்தத்தையும், பயங்கரத்தொழிலனான வீமன் பௌண்ட்ரமென்னும் பெரியசங்கையும் முழக்கினார்கள்.

கசு. குந்திகுமாரனான யுதிஷ்டிரராஜன் அநந்தவிஜயத்தையும், நகுலன் ஸுகோஷத்தையும், ஸஹதேவன் மணிபுஷ்பகத்தையும் (ஊதினார்கள்.)

கஎ. சிறந்தவில்லாளனான காசிராஜனும், மகாரதனான சிகண்டியும், த்ருஷ்டத்யும்நனும், விராடனும், (பகைவரால்)ஜயிக்கப்படாத ஸாத்யகியும்,

கஅ. துருபதனும், திரௌபதிகுமாரர்களும், உயர்தோளனான ஸுபத்ராகுமாரனும் ஆகிய ஸகலரும், பூபதியே! தனித்தனியாய்(தம்தம்)சங்குகளை முழக்கினார்கள்.

ககூ. ஆரவாரித்த அவ்வொலியானது, பூமியையும் ஆகாசத்தையும் எதிரொலிக்கும்படிசெய்வதாய்த் திருதராஷ்டிரனைச் சேர்ந்தவர்களின் நெஞ்சுகளைப் பிளந்தது.

அர்ஜுநன் தனது எதிரிகளை நோக்குதல்.

உ௦, உக, உஉ. வேந்தே! பின்பு (போர்வீரர்) ஆயுதங்களை வழங்கத் தலைப்பட்டவுடன், குரங்குக் கொடியையுடைய பாண்டவன், ஒழுங்காக அணிவகுக்கப்பட்டு நிற்கும் திருதராஷ்டிரஜனத்தாரைப் பார்த்து, (கையில்) வில் ஏந்தி, அப்பொழுது ஹ்ருஷீகேசனிடத்து இவ்வார்த்தையைக் கூறினான் :

அர்ஜுனன் சொல்லலுற்றான் :

"போர்செய்யக் கருதி (இங்கு)நிற்கின்ற இவர்களை யான் பார்க்கக்கூடிய இடத்திலே, இருசேனைக்கும் நடுவிலே, அச்யுத! எனது தேரை நிறுத்துக. இப்போர்க்குழப்பத்திலே யான் எவருடன் போர்செய்ய வேண்டுமோ, (அவரைத் தெரிந்து வைத்துக்கொள்கிறேன். ஏனெனில்,)

௨௩. 𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌨𑌵𑍇𑌕𑍍𑌷𑍇𑌽𑌹𑌂 𑌯 𑌏𑌤𑍇𑌽𑌤𑍍𑌰 𑌸𑌮𑌾𑌗𑌤𑌾𑌃 ।
𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌸𑍍𑌯 𑌦𑍁𑌰𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌰𑍍𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌚𑌿𑌕𑍀𑌰𑍍𑌷𑌵𑌃 ॥

𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚 ॥

௨௪. 𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑍋 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶𑍇𑌨 𑌭𑌾𑌰𑌤 ।
𑌸𑍇𑌨𑌯𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌸𑍍𑌥𑌾𑌪𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌰𑌥𑍋𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥
௨௫. 𑌭𑍀𑌷𑍍𑌮𑌦𑍍𑌰𑍋𑌣𑌪𑍍𑌰𑌮𑍁𑌖𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌚 𑌮𑌹𑍀𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌮𑍍 ।
𑌉𑌵𑌾𑌚 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌪𑌶𑍍𑌯𑍈𑌤𑌾𑌨𑍍𑌸𑌮𑌵𑍇𑌤𑌾𑌨𑍍𑌕𑍁𑌰𑍂𑌨𑌿𑌤𑌿 ॥
௨௬. 𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍𑌪𑌾𑌰𑍍𑌥𑌃 𑌪𑌿𑌤𑍄𑌨𑌥 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌾𑌨𑍍 ।
𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌨𑍍𑌮𑌾𑌤𑍁𑌲𑌾𑌨𑍍𑌭𑍍𑌰𑌾𑌤𑍄𑌨𑍍𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌨𑍍𑌪𑍌𑌤𑍍𑌰𑌾𑌨𑍍𑌸𑌖𑍀𑌂𑌸𑍍𑌤𑌥𑌾 ॥
௨௭. 𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌾𑌨𑍍𑌸𑍁𑌹𑍃𑌦𑌶𑍍𑌚𑍈𑌵 𑌸𑍇𑌨𑌯𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑌪𑌿 ।
𑌤𑌾𑌨𑍍𑌸𑌮𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌸 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍𑌬𑌂𑌧𑍂𑌨𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍 ॥
௨௮. 𑌕𑍃𑌪𑌯𑌾 𑌪𑌰𑌯𑌾𑌽𑌽𑌵𑌿𑌷𑍍𑌟𑍋 𑌵𑌿𑌷𑍀𑌦𑌨𑍍𑌨𑌿𑌦𑌮𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 ।

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 ॥

𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑍇𑌮𑌂 𑌸𑍍𑌵𑌜𑌨𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌯𑍁𑌯𑍁𑌤𑍍𑌸𑍁𑌂 𑌸𑌮𑍁𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 ॥
௨௯. 𑌸𑍀𑌦𑌨𑍍𑌤𑌿 𑌮𑌮 𑌗𑌾𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌮𑍁𑌖𑌂 𑌚 𑌪𑌰𑌿𑌶𑍁𑌷𑍍𑌯𑌤𑌿 ।
𑌵𑍇𑌪𑌥𑍁𑌶𑍍𑌚 𑌶𑌰𑍀𑌰𑍇 𑌮𑍇 𑌰𑍋𑌮𑌹𑌰𑍍𑌷𑌶𑍍𑌚 𑌜𑌾𑌯𑌤𑍇 ॥

---

௨௩. திருதராஷ்டிரபுத்திரனை கெடுபுத்தியானுக்கு [துர்யோதனனுக்கு]ப் போரிலே உதவிபுரியக்கருதி(ப் பற்பலதேசங்களிலிருந்து) இங்கு வந்துள்ள இவர்களை, போர்செய்ய வந்தவராகக் காண்கின்றேன்."

ஸஞ்ஜயன் சொல்லலுற்றான் :

௨௪, ௨௫. பாரத! இவ்வாறு குடாகேசனாற்கூறப்பெற்ற ஹ்ருஷீகேசன், இரு சேனைக்கும் நடுவிலே, பீஷ்மருக்கும் துரோணருக்கும் (மற்றுமுள்ள) சகல அரசருக்கும் எதிரிலே சிறந்த தேரை நிறுத்தி, "பார்த்த! (இங்குக்) கூடிய இக்கௌரவர்களைப் பார்" என மொழிந்தனர்.

௨௬, ௨௭. பார்த்தன்,—தந்தையரும், பாட்டனாரும், ஆசார்யரும், அம்மான்களும், பிராதாக்களும், புத்திரரும், பேரன்மார்களும், தோழர்களும், மாமனாரும், மித்திரரும் அங்கு இருசேனையிலும் நிற்கக் கண்டான்.

௨௭, ௨௮. அவ்வுறவினரனைவரும் (அங்கு)நிற்கக் கண்டு, மிக்க இரக்கம் மேலிடப்பெற்று, மனத்திடனழிந்து கலங்கி அக்குந்தியின்குமாரன் இதனைச் சொல்லலாயினான்.

அர்ஜுனன் மனங்கலங்கிக்கூறும் சோகவார்த்தைகள்.

அர்ஜுனன் சொல்லலுற்றான் :

௨௮, ௨௯. போர்புரிய எண்ணங்கொண்டு (போர்க்களத்திற்)போந்துள்ள இத்தஸ்வஜனத்தைப் பார்த்ததும், கிருஷ்ண! என் அவயவங்கள் சோர்கின்றன: வாயும் உலர்கின்றது : என் உடம்பில் நடுக்கமும் மயிர்க்கூச்சும் உண்டாகின்றன :

௩௰. 𑌗𑌾𑌣𑍍𑌡𑍀𑌵𑌂 𑌸𑍍𑌰𑌂𑌸𑌤𑍇 𑌹𑌸𑍍𑌤𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌕𑍍 𑌚𑍈𑌵 𑌪𑌰𑌿𑌦𑌹𑍍𑌯𑌤𑍇 ।
𑌨 𑌚 𑌶𑌕𑍍𑌨𑍋𑌮𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾𑌤𑍁𑌂 𑌭𑍍𑌰𑌮𑌤𑍀𑌵 𑌚 𑌮𑍇 𑌮𑌨𑌃 ॥
௩௧. 𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌾𑌨𑌿 𑌚 𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌾𑌨𑌿 𑌕𑍇𑌶𑌵 ।
𑌨 𑌚 𑌶𑍍𑌰𑍇𑌯𑍋 𑌽𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌹𑌤𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌜𑌨𑌮𑌾𑌹𑌵𑍇 ॥
௩௨. 𑌨 𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑍇 𑌵𑌿𑌜𑌯𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌨 𑌚 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌸𑍁𑌖𑌾𑌨𑌿 𑌚 ।
𑌕𑌿𑌂 𑌨𑍋 𑌰𑌾𑌜𑍍𑌯𑍇𑌨 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦 𑌕𑌿𑌂 𑌭𑍋𑌗𑍈𑌰𑍍𑌜𑍀𑌵𑌿𑌤𑍇𑌨 𑌵𑌾 ॥
௩௩. 𑌯𑍇𑌷𑌾𑌮𑌰𑍍𑌥𑍇 𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌿𑌤𑌂 𑌨𑍋 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌭𑍋𑌗𑌾𑌃 𑌸𑍁𑌖𑌾𑌨𑌿 𑌚 ।
𑌤 𑌇𑌮𑍇𑌽𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾 𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌧𑌨𑌾𑌨𑌿 𑌚 ॥
௩௪. 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌃 𑌪𑌿𑌤𑌰𑌃 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌃 𑌤𑌥𑍈𑌵 𑌚 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌾𑌃 ।
𑌮𑌾𑌤𑍁𑌲𑌾𑌃 𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌾𑌃 𑌪𑍌𑌤𑍍𑌰𑌾𑌃 𑌶𑍍𑌯𑌾𑌲𑌾𑌃 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑌸𑍍𑌤𑌥𑌾 ॥
௩௫. 𑌏𑌤𑌾𑌨𑍍𑌨 𑌹𑌨𑍍𑌤𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌘𑍍𑌨𑌤𑍋𑌽𑌪𑌿 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨 ।
𑌅𑌪𑌿 𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌰𑌾𑌜𑍍𑌯𑌸𑍍𑌯 𑌹𑍇𑌤𑍋𑌃 𑌕𑌿𑌂 𑌨𑍁 𑌮𑌹𑍀𑌕𑍃𑌤𑍇 ॥
௩௬. 𑌨𑌿𑌹𑌤𑍍𑌯 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌨𑍍𑌨𑌃 𑌕𑌾 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌃 𑌸𑍍𑌯𑌾𑌜𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 ।
𑌪𑌾𑌪𑌮𑍇𑌵𑌾𑌶𑍍𑌰𑌯𑍇𑌦𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌹𑌤𑍍𑌵𑍈𑌤𑌾𑌨𑌾𑌤𑌤𑌾𑌯𑌿𑌨𑌃 ॥
௩௭. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑌾𑌰𑍍𑌹𑌾 𑌵𑌯𑌂 𑌹𑌨𑍍𑌤𑍁𑌂 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌨𑍍 𑌸𑍍𑌵𑌬𑌾𑌂𑌧𑌵𑌾𑌨𑍍 ।
𑌸𑍍𑌵𑌜𑌨𑌂 𑌹𑌿 𑌕𑌥𑌂 𑌹𑌤𑍍𑌵𑌾 𑌸𑍁𑌖𑌿𑌨𑌃 𑌸𑍍𑌯𑌾𑌮 𑌮𑌾𑌧𑌵 ॥

---

௩௰. காண்டீவமும் கையினின்று நழுவுகின்றது : உடம்பு முழுதும் எரிச்சலும் காண்கின்றது : என்னால் நிற்கவும் முடியவில்லை : என் மனமும் (மயங்கிச்)சுழல்கின்றது போலும்.

௩௧. கேசவ ! கெட்ட சகுனங்களும் காண்கிறேன். அன்றியும், போரில் ஸ்வஜனங்களைக் கொன்று, பின்பு (அதனாலாகும்) நன்மையுங் காணேன்.

௩௨. கிருஷ்ணா ! எனக்கு வெற்றியும் வேண்டாம் : ராஜ்யமும் வேண்டாம் : ஸுகங்களும் வேண்டாம். கோவிந்த ! நமக்கு ராஜ்யத்தால்தான் என்ன ? போகங்களால்தான் என்ன ? உயிர்வாழ்க்கையினால்தான் என்ன ?

௩௩, ௩௪. எவர்பொருட்டு நமக்கு ராஜ்யமும், போகங்களும், ஸுகங்களும் வேண்டுமோ, அந்த ஆசார்யரும், தந்தையரும், புத்திரரும், பாட்டனாரும், அம்மான்களும், மாமனார்களும், பேரன்மார்களும், மைத்துனர்களும், ஸம்பந்திகளுமாகிய இவர்களே உயிரையும் பொருளையும் விடத்துணிந்து போருக்கு(வந்து) நின்றுகொண்டிருக்கிறார்கள்.

௩௫. மதுஸூதந ! (இந்தத்துர்யோதனாதியர் என்னைக்)கொல்பவராயினும், (நான்) இவர்களைக் கொல்ல விரும்ப(வும்)மாட்டேன், மூவுலகராஜ்யமும் (எனக்குக்) கிடைப்பதென்றிருந்தாலும்; (ஆதலின், இம்)மண்ணுக்காக என்ன ?

௩௬. ஜநார்த்தந ! திருதராஷ்டிரபுத்திரரைக் கொன்றபின், நமக்கு உண்டாகும் ஸந்தோஷமென்ன ? இக்கொடும்பாவிகளைக் கொன்றால் நமக்குப் பாபமே வந்து சேரும்.

௩௭. ஆதலின், நாம் நமது பந்துக்களாகிய திருதராஷ்டிரகுமாரர்களைக் கொல்லத்தகாது. ஏனெனில், மாதவ ! ஸ்வஜனங்களைக் கொன்றுவிட்டு நாம் எப்படி ஸுகிகளாக இருப்போம் ?

௩௮. 𑌯𑌦𑍍𑌯𑌪𑍍𑌯𑍇𑌤𑍇 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌲𑍋𑌭𑍋𑌪𑌹𑌤𑌚𑍇𑌤𑌸𑌃 ।
𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑌕𑍃𑌤𑌂 𑌦𑍋𑌷𑌂 𑌮𑌿𑌤𑍍𑌰𑌦𑍍𑌰𑍋𑌹𑍇 𑌚 𑌪𑌾𑌤𑌕𑌮𑍍 ॥

௩௯. 𑌕𑌥𑌂 𑌨 𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑌸𑍍𑌮𑌾𑌭𑌿𑌃 𑌪𑌾𑌪𑌾𑌦𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑍁𑌮𑍍 ।
𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑌕𑍃𑌤𑌂 𑌦𑍋𑌷𑌂 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌦𑍍𑌭𑌿𑌰𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 ॥

௪௦. 𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑍇 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌾𑌃 ।
𑌧𑌰𑍍𑌮𑍇 𑌨𑌷𑍍𑌟𑍇 𑌕𑍁𑌲𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌮𑌧𑌰𑍍𑌮𑍋𑌭𑌿𑌭𑌵𑌤𑍍𑌯𑍁𑌤 ॥

௪௧. 𑌅𑌧𑌰𑍍𑌮𑌾𑌭𑌿𑌭𑌵𑌾𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌣 𑌪𑍍𑌰𑌦𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌲𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌷𑍁 𑌦𑍁𑌷𑍍𑌟𑌾𑌸𑍁 𑌵𑌾𑌰𑍍𑌷𑍍𑌣𑍇𑌯 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌵𑌰𑍍𑌣𑌸𑌂𑌕𑌰𑌃 ॥

௪௨. 𑌸𑌂𑌕𑌰𑍋 𑌨𑌰𑌕𑌾𑌯𑍈𑌵 𑌕𑍁𑌲𑌘𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌕𑍁𑌲𑌸𑍍𑌯 𑌚 ।
𑌪𑌤𑌨𑍍𑌤𑌿 𑌪𑌿𑌤𑌰𑍋 𑌹𑍍𑌯𑍇𑌷𑌾𑌂 𑌲𑍁𑌪𑍍𑌤𑌪𑌿𑌣𑍍𑌡𑍋𑌦𑌕𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 ॥

௪௩. 𑌦𑍋𑌷𑍈𑌰𑍇𑌤𑍈𑌃 𑌕𑍁𑌲𑌘𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌵𑌰𑍍𑌣𑌸𑌂𑌕𑌰𑌕𑌾𑌰𑌕𑍈𑌃 ।
𑌉𑌤𑍍𑌸𑌾𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌜𑌾𑌤𑌿𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌶𑍍𑌚 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌾𑌃 ॥

௪௪. 𑌉𑌤𑍍𑌸𑌨𑍍𑌨𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌣𑌾𑌂 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 ।
𑌨𑌰𑌕𑍇 𑌨𑌿𑌯𑌤𑌂 𑌵𑌾𑌸𑍋 𑌭𑌵𑌤𑍀𑌤𑍍𑌯𑌨𑍁𑌶𑍁𑌶𑍍𑌰𑍁𑌮 ॥

௪௫. 𑌅𑌹𑍋 𑌬𑌤 𑌮𑌹𑌤𑍍𑌪𑌾𑌪𑌂 𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 𑌵𑍍𑌯𑌵𑌸𑌿𑌤𑌾 𑌵𑌯𑌮𑍍 ।
𑌯𑌦𑍍𑌰𑌾𑌜𑍍𑌯𑌸𑍁𑌖𑌲𑍋𑌭𑍇𑌨 𑌹𑌨𑍍𑌤𑍁𑌂 𑌸𑍍𑌵𑌜𑌨𑌮𑍁𑌦𑍍𑌯𑌤𑌾𑌃 ॥

---

### போரின் தீங்குகளைப்பற்றி அர்ஜுநன் வருந்துதல்.

௩௮, ௩௯. லோபத்தால் கெட்ட மனத்தினரான இவர்கள், குலநாசத்தாலான தீங்கையும் மித்திரத்துரோகத்தில் (விளையும்) பாதகத்தையும் அறியாவிட்டாலும், குலநாசத்தாலான தீங்கை (நாம்) நன்றாய்ப் பார்க்கும்பொழுது, நமக்கு இப்பாபத்தைத் தவிர்க்க எப்படித் தெரியாமற் போகும்?

௪௦. குலம் கெட்டுப்போகும்பொழுது ஸநாதநமான குலதருமங்கள் (அநுஷ்டானத்தில்) இல்லாமற்போகின்றன. தருமங்கள் இல்லாமற்போக, குலம் முழுவதையும் அதர்மம் வியாபிக்கின்றது.

௪௧. அதர்மம் வியாபித்தலால், கிருஷ்ண! குலஸ்திரீகள் கற்பழிந்துவிடுகிறார்கள். ஸ்திரீகள் கற்பழிய, வார்ஷ்ணேய! ஜாதிக்கலப்பு உண்டாகின்றது.

௪௨. ஜாதிக்கலப்பானது குலத்தைக் கெடுத்தவரது குலத்திற்கும் நரகத்திற்கு ஏதுவாகின்றது; ஏனெனில், இவர்களுடைய பிதிருக்கள் பிண்டக்கிரியையும் உதகக்கிரியையும் இழந்திட்டவராய் (நரகத்தில்)வீழ்கிறார்கள்.

௪௩. ஜாதிக்கலப்பை விளைவிப்பனவாகிய குடிகேடர்களுடைய இத்தீத்தொழில்களால், சாச்வதமான ஜாதிதருமங்களும் குலதருமங்களும் கெட்டழிந்து போம்படி செய்யப்படுகின்றன.

௪௪. ஜநார்த்தந! குலதருமங்கெட்ட மனிதர்களுக்கு நரகத்திலே வாஸம் அவச்யம் உண்டெனக் கேட்டுள்ளோம்.

௪௫. ஆ! என்னே! மஹத்தான பாபஞ்செய்ய (அஞ்சாது) துணிந்திட்டோமே! ராஜ்யஸுகவிஷயமான கடும்பற்றினாலே ஸ்வஜனத்தைக் கொல்ல(வும்) முயன்றுளோமாதலின்.

௪௬. 𑌯𑌦𑌿 𑌮𑌾𑌮𑌪𑍍𑌰𑌤𑍀𑌕𑌾𑌰𑌮𑍍 𑌅𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑌾𑌣𑌯𑌃।
𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾 𑌰𑌣𑍇 𑌹𑌨𑍍𑌯𑍁𑌃 𑌤𑌨𑍍𑌮𑍇 𑌕𑍍𑌷𑍇𑌮𑌤𑌰𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍॥

𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚॥

௪௭. 𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾𑌽𑌰𑍍𑌜𑍁𑌨𑌃 𑌸𑌂𑌖𑍍𑌯𑍇 𑌰𑌥𑍋𑌪𑌸𑍍𑌥 𑌉𑌪𑌾𑌵𑌿𑌶𑌤𑍍।
𑌵𑌿𑌸𑍃𑌜𑍍𑌯 𑌸𑌶𑌰𑌂 𑌚𑌾𑌪𑌂 𑌶𑍋𑌕𑌸𑌂𑌵𑌿𑌗𑍍𑌨𑌮𑌾𑌨𑌸𑌃॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑍇 𑌶𑌤𑌸𑌾𑌹𑌸𑍍𑌰𑍍𑌯𑌾𑌂 𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌯𑌾𑌂 𑌵𑍈𑌯𑌾𑌸𑌿𑌕𑍍𑌯𑌾𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌪𑌰𑍍𑌵𑌣𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍂𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌵𑌿𑌷𑌾𑌦𑌯𑍋𑌗𑍋𑌨𑌾𑌮

𑌪𑍍𑌰𑌥𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃॥

---

௪௬. கையில் ஆயுதத்தையுடைய திருதராஷ்டிர புத்திரர், போரில் (அவர்களை) எதிர்க்காமலும் (கையில்)ஆயுதமில்லாமலும் இருக்கின்ற என்னைக் கொல்வார்களானால், அது எனக்கு அதிக நன்மை யாகும்.

ஸஞ்ஜயன் சொல்லலுற்றான் :

௪௭. அர்ஜுனன், இவ்வாறு சொல்லி, அம்போடு வில்லையும் போர்க்களத்திற் (கீழே) எறிந்து, சோகத்தாற் பதைத்த மனத்தினனாய்த் தேர்த்தட்டில் உட்கார்ந்துவிட்டான்.

நூறாயிரக்கிரந்தஸம்ஹிதையாய் வியாஸர் அருளிச்செய்த ஸ்ரீ மஹாபாரதத்திலே பீஷ்மபர்வத்திலே ஸ்ரீமத்பகவத்கீதைகளாக, உபநிஷத்துக்களாக, ப்ரஹ்மவித்யையாக, யோகசாஸ்திரமாக இருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணார்ஜுனஸம்வாதத்திலே அர்ஜுனவிஷாதயோகமென்னும் முதல்அத்தியாயம் முற்றும்.

𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌯𑍋𑌗𑌃 ॥

𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚 ॥

௧. 𑌤𑌂 𑌤𑌥𑌾 𑌕𑍃𑌪𑌯𑌾𑌽𑌽𑌵𑌿𑌷𑍍𑌟𑌮𑍍 𑌅𑌶𑍍𑌰𑍁𑌪𑍂𑌰𑍍𑌣𑌾𑌕𑍁𑌲𑍇𑌕𑍍𑌷𑌣𑌮𑍍 ।
𑌵𑌿𑌷𑍀𑌦𑌨𑍍𑌤𑌮𑌿𑌦𑌂 𑌵𑌾𑌕𑍍𑌯𑌮𑍍 𑌉𑌵𑌾𑌚 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨𑌃 ॥

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁 𑌉𑌵𑌾𑌚 ॥

௨. 𑌕𑍁𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌾 𑌕𑌶𑍍𑌮𑌲𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌷𑌮𑍇 𑌸𑌮𑍁𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 ।
𑌅𑌨𑌾𑌰𑍍𑌯𑌜𑍁𑌷𑍍𑌟𑌮𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍍𑌯𑌮𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌕𑌰𑌮𑌰𑍍𑌜𑍁𑌨 ॥

௩. 𑌕𑍍𑌲𑍈𑌬𑍍𑌯𑌂 𑌮𑌾 𑌸𑍍𑌮 𑌗𑌮𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌨𑍈𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌯𑍍𑌯𑍁𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 ।
𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑌂 𑌹𑍃𑌦𑌯𑌦𑍌𑌰𑍍𑌬𑌲𑍍𑌯𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑍋𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 ॥

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 ॥

௪. 𑌕𑌥𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌮𑌹𑌂 𑌸𑌂𑌖𑍍𑌯𑍇 𑌦𑍍𑌰𑍋𑌣𑌂 𑌚 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨 ।
𑌇𑌷𑍁𑌭𑌿𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌮𑌿 𑌪𑍂𑌜𑌾𑌰𑍍𑌹𑌾𑌵𑌰𑌿𑌸𑍂𑌦𑌨 ॥

௫. 𑌗𑍁𑌰𑍂𑌨𑌹𑌤𑍍𑌵𑌾 𑌹𑌿 𑌮𑌹𑌾𑌨𑍁𑌭𑌾𑌵𑌾𑌨𑍍
𑌶𑍍𑌰𑍇𑌯𑍋 𑌭𑍋𑌕𑍍𑌤𑍁𑌂 𑌭𑍈𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑌪𑍀𑌹 𑌲𑍋𑌕𑍇 ।
𑌹𑌤𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌕𑌾𑌮𑌾𑌂𑌸𑍍𑌤𑍁 𑌗𑍁𑌰𑍂𑌨𑌿𑌹𑍈𑌵

---

## இரண்டாம் அத்தியாயம் : ஸாங்க்யயோகம்.

பகவான், அர்ஜுனன் மனநோய்ம்மையைக் கண்டித்தல்.

ஸஞ்ஜயன் சொல்லலுற்றான் :

௧. அவ்வாறு இரக்கம் மேலிட்டு, கண்களில் நீர் நிரம்பித் ததும்பப்பெற்று மனமேங்கிநிற்கின்ற அவனுக்கு மதுஸூதனன் இவ்வார்த்தையைக் கூறலானார் :

ஸ்ரீபகவான் சொல்லலுற்றார் :

௨. அஸத்துக்கள் கைக்கொண்டதும், ஸ்வர்க்கத்தை அடையவொட்டாமல் தடுப்பதும், பழியைமிகுவிப்பதுமான இம்மனநோய்ம்மையானது, (இந்த யுத்த) ஸங்கடத்திலே உனக்கு எங்கிருந்து வந்ததோ? அர்ஜுன!

௩. பார்த்த! ஆண்மையற்றதன்மைக்கு உட்படாதே; இது உனக்குத் தகாது. பரந்தப! இந்த இழிவான மனநோய்ம்மையைத் தூரத்தள்ளிவிட்டு எழுந்திரு.

அர்ஜுனன், பகவான் உபதேசத்தை நாடுதல்.

அர்ஜுனன் சொல்லலுற்றான் :

௪. மதுஸூதன! (புஷ்பாதிகளால்) பூஜிக்கத்தக்கவர்களான பீஷ்மரையும் துரோணரையும் யான் எப்படிப் போரில் அம்புகளால் எதிர்த்துச் சண்டைசெய்வேன்? அரிஸூதன!

௫. மாட்சிமைதங்கிய மகான்களைக் கொல்லாமல் இவ்வுலகிலே பிச்சையெடுத்துப் புசித்தலும் நல்லதாம் [அதாவது, மகான்களைக் கொன்று அரசாள்வதை விட, க்ஷத்திரியனுக்கு நிஷித்தமாயுள்ள பிச்சையெடுத்துப்பிழைத்தலே மேலானதாம்]. யான் பெரியோர்களைக் கொன்றுவிட்டாலோ, இரத்தந்தோயப் பெற்றவை

𑌭𑍁𑌞𑍍𑌜𑍀𑌯 𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 𑌰𑍁𑌧𑌿𑌰𑌪𑍍𑌰𑌦𑌿𑌗𑍍𑌧𑌾𑌨𑍍 ॥

௬. 𑌨 𑌚𑍈𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌮𑌃 𑌕𑌤𑌰𑌨𑍍𑌨𑍋 𑌗𑌰𑍀𑌯𑌃
𑌯𑌦𑍍𑌵𑌾 𑌜𑌯𑍇𑌮 𑌯𑌦𑌿 𑌵𑌾 𑌨𑍋 𑌜𑌯𑍇𑌯𑍁𑌃 ।
𑌯𑌾𑌨𑍇𑌵 𑌹𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌜𑌿𑌜𑍀𑌵𑌿𑌷𑌾𑌮𑌃
𑌤𑍇𑌽𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌮𑍁𑌖𑍇 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌃 ॥

௭. 𑌕𑌾𑌰𑍍𑌪𑌣𑍍𑌯𑌦𑍋𑌷𑍋𑌪𑌹𑌤𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌃
𑌪𑍃𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌧𑌰𑍍𑌮𑌸𑌂𑌮𑍂𑌢𑌚𑍇𑌤𑌾𑌃 ।
𑌯𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯𑌃 𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌂 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 𑌤𑌨𑍍𑌮𑍇
𑌶𑌿𑌷𑍍𑌯𑌸𑍍𑌤𑍇𑌽𑌹𑌂 𑌶𑌾𑌧𑌿 𑌮𑌾𑌂 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌮𑍍 ॥

௮. 𑌨 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌮𑌮𑌾𑌪𑌨𑍁𑌦𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌚𑍍𑌛𑍋𑌕𑌮𑍁𑌚𑍍𑌛𑍋𑌷𑌣𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌮𑍍 ।
𑌅𑌵𑌾𑌪𑍍𑌯 𑌭𑍂𑌮𑌾𑌵𑌸𑌪𑌤𑍍𑌨𑌮𑍃𑌦𑍍𑌧𑌂 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌸𑍁𑌰𑌾𑌣𑌾𑌮𑌪𑌿 𑌚𑌾𑌧𑌿𑌪𑌤𑍍𑌯𑌮𑍍 ॥

𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚 ॥

௯. 𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑌂 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶𑌃 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪𑌃 ।
𑌨 𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌤𑍂𑌷𑍍𑌣𑍀𑌂 𑌬𑌭𑍂𑌵 𑌹 ॥

---

யான [1] ஸம்பத்து காமம் போகம் இவைகளை இவ்வுலகிலேயே அனுபவிக்கவேண்டும்.

௬. மேலும், (பிச்சையெடுத்துப்பிழைத்தல் ஸ்வஜாதிதருமமென்று போர் புரிதல் என்ற இவ்விரண்டனுள்) எது நமக்கு மேலானதோ? (நாமே அவர்களை) வெல்வோமோ?—அல்லது (அவர்களே) நம்மை வெல்வாரோ? (என்ற) இதுவும் நமக்குத் தெரியாது. (நாம்)எவர்களைக் கொன்றபின்னர் உயிர்வாழவிரும்பமாட்டோமோ, அந்தத் திருதராஷ்டிர புத்திரர்களே (இப்போர்க்களத்தில் நமக்கு) எதிரே வந்து நிற்கிறார்கள்.

௭. லோபம் என்ற குற்றத்தினால் கெட்டழிந்த மனத்தினனாய், தருமவிஷயத்திலே மனம்திகைத்த அடியேன் (யாது நன்மை ? எனத்) தங்களை வினவுகின்றேன் ; எது உறுதியான நன்மையோ, அதனை எனக்கு உரைப்பீர்களாக; (ஏனெனின்,) நான் தங்களுடைய சிஷ்யனாகின்றேன்: தங்களை வந்தடைந்த எனக்கு, (நல்வழிப்படுமாறு) அறிவுறுத்தியருளுக. [லோபம்-இங்கு, ராஜ்யத்தைப் பெறவேணுமென்ற ஆசை.]

௮. உலகிலே பகைவரற்றதாய்ச் செழித்திருக்கும் ராஜ்யமும், தேவர்கட்குத் தலைவனாயிருத்தலும் கிடைக்கப்பெற்றாலும், புலன்களை(த் தீப்போல) அழற்றுகின்றதான என்துயரத்தைப் போக்குவது இன்னதென்று எனக்குத் தெரியவே இல்லை [இந்திரபதவியைப் பெற்றாலும், என் துயரம் தீருமாறு இல்லை].

ஸஞ்ஜயன் சொல்லலுற்றான் :

௯. பகைவரை எரிக்கும் குடாகேசன், இவ்வாறு ஹ்ருஷீகேசனிடம் சொன்னபின்பு, ''போர் புரியமாட்டேன்'' என்று(ம்) கோவிந்தனிடஞ் சொல்லிவிட்டு (மேலொன்றும்) பேசாமலே இருந்திட்டான்.

---

''தான் ராஜபோகம் அநுபவித்தற்காக அர்ஜுனன் மகான்களைக் கொன்றுவிட்டான்'' என்னும் அபகீர்த்தி வியாபிக்குமாதலின், ஸம்பத்தின் அநுபவமும், காமநுகர்ச்சியும் இரத்தந் தோய்ந்தவைபோல மிக்க அருவருப்பானவை.

௧௦. 𑌤𑌮𑍁𑌵𑌾𑌚 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑌃 𑌪𑍍𑌰𑌹𑌸𑌨𑍍𑌨𑌿𑌵 𑌭𑌾𑌰𑌤 ।
𑌸𑍇𑌨𑌯𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌵𑌿𑌷𑍀𑌦𑌨𑍍𑌤𑌮𑌿𑌦𑌂 𑌵𑌚𑌃 ॥

𑌅𑌤𑍍𑌰 𑌚 '𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌤𑍁 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌨𑍀𑌕𑌮𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌰𑌭𑍍𑌯 '𑌨 𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌤𑍂𑌷𑍍𑌣𑍀𑌂 𑌬𑌭𑍂𑌵 𑌹 ॥' 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌦𑌨𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌶𑍋𑌕𑌮𑍋𑌹𑌾𑌦𑌿𑌸𑌂𑌸𑌾𑌰𑌬𑍀𑌜𑌭𑍂𑌤𑌦𑍋𑌷𑍋𑌦𑍍𑌭𑌵𑌕𑌾𑌰𑌣𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌰𑍍𑌥𑌤𑍍𑌵𑍇𑌨 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑍇𑌯𑍋 𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌃 । 𑌤𑌥𑌾𑌹𑌿 — 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑍇𑌨 𑌰𑌾𑌜𑍍𑌯𑌗𑍁𑌰𑍁𑌪𑍁𑌤𑍍𑌰𑌮𑌿𑌤𑍍𑌰𑌸𑍁𑌹𑍃𑌤𑍍𑌸𑍍𑌵𑌜𑌨𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌿𑌬𑌾𑌨𑍍𑌧𑌵𑍇𑌷𑍁 '𑌅𑌹𑌮𑍇𑌤𑍇𑌷𑌾𑌮𑍍', '𑌮𑌮𑍈𑌤𑍇' 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌨𑍇𑌹𑌵𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑌾𑌦𑌿𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑍌 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌶𑍋𑌕𑌮𑍋𑌹𑍌 𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑍌 '𑌕𑌥𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌮𑌹𑌂 𑌸𑌙𑍍𑌖𑍍𑌯𑍇' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 । 𑌶𑍋𑌕𑌮𑍋𑌹𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌹𑌿 𑌅𑌭𑌿𑌭𑍂𑌤𑌵𑌿𑌵𑍇𑌕𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌃 𑌸𑍍𑌵𑌤 𑌏𑌵 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌧𑌰𑍍𑌮𑍇 𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍋𑌽𑌪𑌿 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌦𑍁𑌪𑌰𑌰𑌾𑌮; 𑌪𑌰𑌧𑌰𑍍𑌮𑌂 𑌚 𑌭𑌿𑌕𑍍𑌷𑌾𑌜𑍀𑌵𑌨𑌾𑌦𑌿 𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 𑌪𑍍𑌰𑌵𑌵𑍃𑌤𑍇 । 𑌤𑌥𑌾 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌶𑍋𑌕𑌮𑍋𑌹𑌾𑌦𑌿𑌦𑍋𑌷𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑌚𑍇𑌤𑌸𑌾𑌂 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤 𑌏𑌵 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌸𑍇𑌵𑌾 𑌚 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑍇 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌨𑌾𑌮𑌪𑌿 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌵𑌾𑌙𑍍𑌮𑌨𑌃𑌕𑌾𑌯𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 𑌫𑌲𑌾𑌭𑌿𑌸𑌨𑍍𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌿𑌕𑍈𑌵 𑌸𑌾𑌹-

---

௧௦. பாரத! இருசேனைக்கும் இடையே (இவ்வாறு)மனங்கலங்கிநிற்கும்அவனுக்கு, ஹ்ருஷீகேசன், புன்னகைசெய்கிறவர்போன்று இவ்வார்த்தையைக் கூறலாயினர் : [புன்னகை செய்கிறவர் போன்று=(தேறுதல் சொல்லுதற்காகப்) பிரஸன்னமுகராகி.]

ஆத்மஞானமே துன்பத்தை அறத் துடைக்கும்.

இங்கு "துர்யோதனராஜன்" (௧-௨) என்பது முதல் "போர்புரியமாட்டேனென்று(ம்) கோவிந்தனிடஞ்சொல்லிவிட்டு (மேலொன்றும்) பேசாமலே இருந்திட்டான்" (௨-௯) என்பது ஈறாகவுள்ள நூல், ஸம்ஸாரத்திற்கு வித்துக்களான சோகமோகாதித்தீங்குகள்(எல்லாம்)பிராணிகளுக்குஉண்டாவதன்காரணத்தை நன்குவிளக்குவதாக உரைக்கவேண்டும். எங்ஙனமெனில்—ராஜ்யமும், பெரியோரும், புத்திரரும், மித்திரரும், ஸுஹ்ருத்துக்களும், தன்ஜனங்களும், ஸம்பந்திகளும், பந்துக்களுமாகிய இவர்களின்மீது "நான் இவர்களைச் சேர்ந்தவன், இவர்கள் என்னைச் சேர்ந்தவர்" என்ற இத்தகைய எண்ணத்தால் உண்டாகும் பற்றினாலும், (அப்படித், தான் பற்றுவைத்த அவர்களை) இழந்துவிடுதலாலும், இன்னும் (இவைபோன்ற)பிறவற்றாலும் விளைவனவாகிய தனது சோகமோகங்கள், "மதுஸூதந! (புஷ்பாதிகளால்) பூஜிக்கத்தக்கவர்களான" (௨-௪) என்பது முதலாக (ஐந்து சுலோகங்களால்) அர்ஜுனனால் நன்கு காட்டப்பட்டன. க்ஷத்திரியதருமமாகிய யுத்தத்தைத் தானேமேற்கொண்டு (போர்க்களத்திற்கு வந்து) இருந்தும், (தன்)விவேகபுத்தி (நிலைகுலைந்து கலங்கும்படி) சோகமோகங்களாலே தாக்கப்பட்டவனும் அந்தயுத்தத்தைத் தவிர்ந்தான். பிற[ஸங்பாவி] தருமமாகிய பிச்சையெடுத்துஜீவித்தல் முதலியனவும் செய்யத்தலைப்பட்டான். அவ்விதமாகவே, சோகமோகாதியானதீங்குகள்நிறைந்துகிடக்கும் மனத்தினையுடைய ஸகலபிராணிகளும் இயல்பாகவே தமதுதருமத்தைக் கைவிடவும், விலக்கியதைக் கைக்கொள்ளும் கூடும். தமதுதருமத்தை மேற்கொண்டு ஒழுகுபவராயினும், அவர்களுடைய மனம் மொழி மெய் முதலியவைகளின் போக்கு, பயனை எதிர்பார்த்தலை முன்னிட்டு நின்றே(நான் என்னும்)அகங்காரத்தோடு அமைந்துள்ளது. அவர்கள் இப்படி

𑌙𑍍𑌕𑌾𑌰𑌾 𑌭𑌵𑌤𑌿। 𑌤𑌤𑍍𑌰𑍈𑌵𑌂 𑌸𑌤𑌿 𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑍋𑌪𑌚𑌯𑌾𑌦𑌿𑌷𑍍𑌟𑌾𑌨𑌿𑌷𑍍𑌟𑌜𑌨𑍍𑌮𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑍋𑌽𑌨𑍁𑌪𑌰𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿। 𑌇𑌤𑍍𑌯𑌤𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌬𑍀𑌜𑌭𑍂𑌤𑍌 𑌶𑍋𑌕𑌮𑍋𑌹𑍌। 𑌤𑌯𑍋𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑍍𑌨𑌾𑌨𑍍𑌯𑌤𑍋 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑌿𑌤𑌿 𑌤𑌦𑍁𑌪𑌦𑌿𑌦𑌿𑌕𑍍𑌷𑍁𑌃 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌾𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌾𑌰𑍍𑌥𑌮𑌰𑍍𑌜𑍁𑌨𑌂 𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 𑌆𑌹 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌃 ‘𑌅𑌶𑍋𑌚𑍍𑌯𑌾𑌨𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 —

𑌅𑌤𑍍𑌰 𑌕𑍇𑌚𑌿𑌦𑌾𑌹𑍁𑌃—𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌦𑍇𑌵 𑌕𑍇𑌵𑌲𑌾𑌤𑍍 𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑌂 𑌨 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤 𑌏𑌵। 𑌕𑌿𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿? 𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌶𑍍𑌰𑍌𑌤𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑌸𑌹𑌿𑌤𑌾𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌰𑌿𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌸𑍁 𑌗𑍀𑌤𑌾𑌸𑍁 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑍋𑌽𑌰𑍍𑌥 𑌇𑌤𑌿। 𑌜𑍍𑌞𑌾𑌪𑌕𑌂 𑌚𑌾𑌹𑍁𑌰𑌸𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯—‘𑌅𑌥 𑌚𑍇𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌮𑌂 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌸𑌂𑌗𑍍𑌰𑌾𑌮𑌂 𑌨 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌸𑌿’, ‘𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑍇𑌵𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑍇,’ ‘𑌕𑍁𑌰𑍁 𑌕𑌰𑍍𑌮𑍈𑌵 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿। 𑌹𑌿𑌂𑌸𑌾𑌦𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌵𑍈𑌦𑌿𑌕𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌅𑌧𑌰𑍍𑌮𑌾𑌯 𑌇𑌤𑌿 𑌇𑌯𑌮𑌪𑌿 𑌆𑌶𑌙𑍍𑌕𑌾 𑌨 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾। 𑌕𑌥𑌮𑍍? 𑌕𑍍𑌷𑌾𑌤𑍍𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌯𑍁𑌦𑍍𑌧𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌗𑍁𑌰𑍁𑌭𑍍𑌰𑌾𑌤𑍃𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌹𑌿𑌂𑌸𑌾𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑍍 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌕𑍍𑌰𑍂𑌰𑌮𑌪𑌿 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮 𑌇𑌤𑌿 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌅𑌧𑌰𑍍𑌮𑌾𑌯; 𑌤𑌦𑌕𑌰𑌣𑍇 𑌚—‘𑌤𑌤𑌃

---

யிருத்தலால், தருமஅதருமங்களின்பெருக்கத்தால் நல்லனதீயனவான பிறவிகளையும் இன்பதுன்பங்களையும்அடைதலாகிய ஸம்ஸாரமானது ஒழிவின்றிநிற்கின்றது. ஆகவே, சோகமோகங்கள் ஸம்ஸாரத்திற்கு வித்துக்களாம். அவைகளோ, ஸகலகர்மங்களையும்துறத்தலை முன்னிட்டதான ஆத்மஞானத்தினா லன்றி நீங்கா என்று அதனை [ஆத்மஞானத்தை] ஸகலலோகாநுக்கிரகத்தின்பொருட்டு உபதேசிக்க விரும்பியவராய், அர்ஜுனனைக் காரண [வியாஜ] மாகக்கொண்டு பகவான் வாஸுதேவன் "நீ (யாவராலும்) துக்கிக்கவேண்டாதவரைக் குறித்து" (உ-கக) என்பதாதியாக அருளிச்செய்யலானார் :

ஞானம் கர்மம் இரண்டுங்கூடியே முக்திக்கு ஸாதநமாம் என்னும் கோள்கை.

இவ்விஷயத்திலே, "ஸகலகர்மங்களையும் துறத்தலை முன்னிட்டதான ஆத்மஞானநிஷ்டையாலேமாத்திரம் முக்தி கிடைக்கவேகிடைக்காது. மற்று என்னையோவெனின், அக்நிஹோத்ராதி ச்ரௌதகர்மங்களையும், (ஔபாஸநாதி)ஸ்மார்த்தகர்மங்களையும்துணையாகப்பெற்ற ஞானத்தினால்(தான்)முக்தி கிடைக்குமென்பது, கீதைமுழுவதிலும் நிர்ணயிக்கப்பட்ட பொருள்" என்று சிலர் கூறுகிறார். இதுதான் கீதையின் பொருள் என்பதற்கு அறிகுறியாகவும், " இனி நீ இந்த நியாயமான யுத்தத்தைச் செய்யாவிடில்"(உ-நந),"கர்மத்திலேதான் உனக்கு அதிகாரம்" (உ-சஎ),"ஆதலால், நீ கர்மத்தையே செய்யக்கடவாய்" (ச-கரு)என்பன முதலியவற்றை(மேற்கோளாக எடுத்துக்) கூறுகின்றனர். 'வேதத்தில் விதித்த கர்மமானது, ஹிம்ஸை [கொலை] முதலியன கூடியுள்ளமையால் அதருமத்தின்பொருட்டாகின்றது' என்ற இச்சங்கையும் படவேண்டாம். எப்படியெனில்—க்ஷத்திரியனுக்குரிய யுத்தமென்னும்கர்மமானது, மூத்தோர் ஸஹோதரர் புத்திரர் முதலாயினோரை ஹிம்ஸிப்பதாய்(இருத்தலால்) மிகக்கொடியதாயினும், தனது[க்ஷத்திரியனது] தொழில் என்ற காரணத்தால் அதருமமாகாது. அதனைச் செய்யாவிடிலோ "நீ ஸ்வ [உன்]தருமத்தையும் விட்டு, புகழையும் இழந்து,

𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌂 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌹𑌿𑌤𑍍𑌵𑌾 𑌪𑌾𑌪𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 । ' 𑌇𑌤𑌿 𑌬𑍍𑌰𑍁𑌵𑌤𑌾 𑌯𑌾𑌵𑌜𑍍𑌜𑍀𑌵𑌾𑌦𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌚𑍋𑌦𑌿𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑌶𑍍𑌵𑌾𑌦𑌿𑌹𑌿𑌂𑌸𑌾𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌨𑌾𑌂 𑌚 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌗𑌮𑍇𑌵 𑌨 𑌅𑌧𑌰𑍍𑌮𑌤𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌸𑍁𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌤𑍍𑌵𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌭𑌵𑌤𑍀𑌤𑌿 ॥

𑌤𑌦𑌸𑌤𑍍 ; 𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠𑌯𑍋𑌃 𑌵𑌿𑌭𑌾𑌗𑌵𑌚𑌨𑌾𑌤𑍍 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌦𑍍𑌵𑌯𑌾𑌶𑍍𑌰𑌯𑌯𑍋𑌃 । '𑌅𑌶𑍋𑌚𑍍𑌯𑌾𑌨𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌯𑌾𑌵𑌤𑍍 '𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌮𑌪𑌿 𑌚𑌾𑌵𑍇𑌕𑍍𑌷𑍍𑌯' 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌦𑌨𑍍𑌤𑍇𑌨 𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑍇𑌨 𑌯𑌤𑍍 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑌂 𑌕𑍃𑌤𑌂 𑌤𑌤𑍍 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌮𑍍 । 𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃, 𑌆𑌤𑍍𑌮𑌨𑍋 𑌜𑌨𑍍𑌮𑌾𑌦𑌿𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌽𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 𑌅𑌕𑌰𑍍𑌤𑌾 𑌆𑌤𑍍𑌮𑍇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑌾𑌰𑍍𑌥𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑌾𑌤𑍍 𑌯𑌾 𑌜𑌾𑌯𑌤𑍇, 𑌸𑌾 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 । 𑌸𑌾 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌾𑌮𑍁𑌚𑌿𑌤𑌾 𑌭𑌵𑌤𑌿, 𑌤𑍇 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌾𑌃 । 𑌏𑌤𑌸𑍍𑌯𑌾𑌃 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌜𑌨𑍍𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑍋 𑌦𑍇𑌹𑌾𑌦𑌿𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌤𑍍𑌵𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌯𑌪𑍇𑌕𑍍𑌷𑍋 𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑌵𑌿𑌵𑍇𑌕𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑍋 𑌮𑍋𑌕𑍍𑌷𑌸𑌾𑌧𑌨𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑍋 𑌯𑍋𑌗𑌃 । 𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌯𑍋𑌗𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 । 𑌸𑌾 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌿𑌣𑌾𑌮𑍁𑌚𑌿𑌤𑌾 𑌭𑌵𑌤𑌿, 𑌤𑍇 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 ।

---

பாபத்தை அடைவாய்" (உ-௩௩) என (ஸ்ரீ பகவான்) அருளிச்செய்கிறார்; செய்யவே, "உயிர்வாழ்க்கைமுழுதும்"[1] என்றுதொடங்கும் சுருதியினுலும், மற்றும்இதுபோன்ற சுருதிகளாலும் விதிக்கப்பட்டவையாய்ப் பசுமுதலானவற்றை ஹிம்ஸித்தலாகிய கர்மங்கள் ஏற்கெனவே [2] அதருமமாகா எனத் திர்ந்த முடிவாகக் கூறப்பட்டதாகின்றது.

**ஸாங்க்யத்தையும், யோகத்தையும் பதத்தல்.**

அது சரியன்று; இருவகைத்தான புத்தியை (முறையே) சார்ந்துநிற்கும் ஞான கர்மநிஷ்டைகளை (ஸ்ரீ பகவான்) வேறாகப் பிரித்துரைக்கின்ற திருவாக்கினுலென்க. "நீ (யாவராலும்) துக்கிக்கவேண்டாதவரை" (உ-௧௧) என்பது முதல் "ஸ்வதருமத்தை நோக்கும்பொழுதும்" (உ-௩௧) என்பதுவரையிலுமுள்ள நூலினல், பரம்பொருளான எந்த ஆத்மதத்துவமானது, பகவானல் உணர்த்தப்பட்டதோ, அது ஸாங்க்யமாம். ஆத்மாவுக்குப் பிறப்புமுதலியவிகாரங்கள் இல்லாமையினல் ' ஆத்மா அகர்த்தா ' (உ-௧௯, ௨0) என்னும் ப்ரகரணத்தின்பொருளை உய்த்துணர்தலால் அவ்[ஆத்மதத்துவ]விஷயமாக யாதொரு (நிச்சய)புத்தி பிறக்கின்றதோ, அது ஸாங்க்ய புத்தியாம். அது எந்த ஞானிகளுக்கு உரித்தாயுள்ளதோ, அவர் ஸாங்க்யர்களாவர். இந்த(ஸாங்க்ய)புத்தி உண்டாவதற்குமுன்னர், ஆத்மாவை, உடம்புமுதலியவற்றினின்றும் வேறாகவும் கர்த்தாவாகவும் போக்தாவாகவும் மற்றும்இத்தன்மையதாகவும் பாவித்துக்கொண்டு (அதற்குஏற்பத்)தருமஅதருமங்களின் பகுத்தறிவுகூடி,[3] முக்திக்கு ஸாதந(மான கர்ம)த்தை அநுஷ்டித்தல் யோகமாம். அது விஷயமான (நிச்சய) புத்தி யோகபுத்தியாம். அது (ஸ்வ)கர்மத்தைச்செய்யும் எவர்க்கு உரித்தாயுளதோ,

---

"𑌯𑌾𑌵𑌜𑍍𑌜𑍀𑌵𑌮𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌂 𑌜𑍁𑌹𑍋𑌤𑌿 [உயிர்வாழ்க்கைமுழுதும் அக்நிஹோத்ரஞ்செய்ய வேண்டும்]" என்பது 𑌬𑌹𑍍𑌵𑍃𑌚𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌮𑍍.

[2] ஆசார்யர்முதலானோரை ஹிம்ஸித்தலாகிய யுத்தம்முதலியனவான ஸ்மார்த்தகர்மங்களே அதர்மமாகா என்றால்,ஸ்மிருதியிலும்மேலான சுருதியில் விதித்த பசுஹிம்ஸாதி கர்மங்கள் அதர்மமாகா என்பது, தானே அமையு மென்றவாறு.

[3] அஜ்ஞானியின் கருத்துக்கு, ஆத்மா உடல் முதலியவற்றிற்கு வேறாகவும், கர்த்தாவாகவும், போக்தாவாகவும் காணப்படுகின்றதாதலின், அவன் இது தருமம், இது அதர்மம் எனக் கல்வி கேள்விகளால் பகுத்தறிந்து, அதருமத்தை விலக்கி, தருமத்தைக் கைக்கொண்டு, அதனை ஈச்வரார்ப்பணமாக அநுஷ்டிக்கவேண்டும் என்பது, கர்மயோகத்தின் லக்ஷணத்தால் அமையுமாறு கண்டுகொள்க.

𑌤𑌥𑌾 𑌚 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑍇 𑌚 𑌬𑍁𑌦𑍍𑌧𑍀 𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑍇 ‘𑌏𑌷𑌾 𑌤𑍇𑌽𑌭𑌿𑌹𑌿𑌤𑌾
𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑍇 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌯𑍋𑌗𑍇 𑌤𑍍𑌵𑌿𑌮𑌾𑌂 𑌶𑍃𑌣𑍁 ।’ 𑌇𑌤𑌿 । 𑌤𑌯𑍋𑌶𑍍𑌚 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌬𑍁-
𑌦𑍍𑌧𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌂 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌾𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿 — ‘𑌪𑍁𑌰𑌾
𑌵𑍇𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌮𑌯𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾’ 𑌇𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌚 𑌯𑍋𑌗𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨
𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌂 𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌾𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿 — ‘𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍍’ 𑌇𑌤𑌿 । 𑌏𑌵𑌂 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯-
𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌯𑍋𑌗𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌚 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌦𑍍𑌵𑍇 𑌨𑌿𑌷𑍍𑌠𑍇 𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑍇 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌏𑌵 𑌉𑌕𑍍𑌤𑍇,
𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌃 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍈𑌕𑌤𑍍𑌵𑌾𑌨𑍇𑌕𑌤𑍍𑌵𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌯𑌯𑍋𑌃 𑌯𑍁𑌗𑌪-
𑌦𑍇𑌕𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌶𑍍𑌰𑌯𑌤𑍍𑌵𑌾𑌸𑌂𑌭𑌵𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌾 । 𑌯𑌥𑌾 𑌏𑌤𑌦𑍍𑌵𑌿𑌭𑌾𑌗𑌵𑌚𑌨𑌂
𑌤𑌥𑍈𑌵 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌂 𑌶𑌾𑌤𑌪𑌥𑍀𑌯𑍇 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇 — ‘𑌏𑌤𑌮𑍇𑌵 𑌪𑍍𑌰𑌵𑍍𑌰𑌾𑌜𑌿𑌨𑍋
𑌲𑍋𑌕𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑍋 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌃 𑌪𑍍𑌰𑌵𑍍𑌰𑌜𑌨𑍍𑌤𑌿 ।’ 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌵𑌿𑌧𑌾𑌯
𑌤𑌚𑍍𑌛𑍇𑌷𑍇𑌣 ‘𑌕𑌿𑌂 𑌪𑍍𑌰𑌜𑌯𑌾 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑍋 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌨𑍋𑌽𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌽𑌯𑌂 𑌲𑍋𑌕𑌃’
𑌇𑌤𑌿 । 𑌤𑌤𑍍𑌰 𑌚 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍 𑌦𑌾𑌰𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑌾𑌤𑍍 ‘𑌪𑍁𑌰𑍁𑌷𑌃’ ‘𑌆𑌤𑍍𑌮𑌾’ 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑍋

---

அவர் யோகியர். அப்படியே, தனித்தனியான இரண்டுபுத்திகள் "ஸாங்க்யவிஷயத்திலே உனக்கு இந்தப் புத்தியானது சொல்லப்பட்டது; இனி நீ யோகவிஷயத்திலே இந்தப்புத்தியைக் கேள்" (உ-௩௯) எனப் பகவானுலே குறிப்பிட்டுக்காட்டி உணர்த்தப் பட்டிருக்கின்றன. அவற்றுள், ஸாங்க்யபுத்தியைச் சார்ந்து நிற்கும் ஞானயோகநிஷ்டையை "வேதமாகிய என்னுல் முன் கூறப்பட்டது" (௩-௩) என ஸாங்க்யர்களுக்குத் தனியாய்க் கூறுவர். அவ்வாறே, யோகபுத்தியைச் சார்ந்து நிற்கும் கர்மயோகநிஷ்டையை "கர்மயோகத்தால் யோகிகளுக்கு" (௩-௩) என (யோகிகளுக்குத்) தனியாய்க் கூறுவர். கர்த்தாவென்னும் உணர்வையும் அநேகமென்னும்உணர்வையும் சார்ந்து நிற்பதான கர்மமும், அகர்த்தாவென்னும் உணர்வையும் ஏகமென்னும் உணர்வையும் சார்ந்து நிற்பதான ஞானமும் ஒருத்தனையே ஒருங்கு சார்ந்துநிற்கக்கூடாமையைக் கண்டு, பகவானேஇவ்வாறு ஸாங்க்யபுத்தியையும்யோகபுத்தியையும்குறித்து இரண்டு நிஷ்டைகளைத் தனித்தனியாக (ப் பிரித்து)க்கூறலானுர். (ஸ்ரீபகவான்) பிரித்துரைக்கின்ற இத்திருவாக்கு எப்படியோ, அப்படியே சதபதப்பிராமணத்திலும் "பற்றற்றவராய் இதேலோகத்தை [அதாவது-ஆத்மாவை](ப் பெற) விரும்பும் பிராமணர்கள் உலகவியாபாரங்களை ஒழித்திடவேண்டும்" என்று ஸகலகர்மத்தினது துறவு விதித்து, "இந்த ஆத்மாவாகிய இவ்வுலகிஹுள்ள எங்களுக்கு மக்களா லாவதென்ன ?" (பி-௪ - ௪ - உஉ) என்ற அதன் [1]சேஷத்திஞல்,(ஞானமானது,கர்மத்தினின்றும் வேருகக்) காட்டப்பட்டுள்ளது. பின்னும் அதனுள், சுருதிமுதலியவற்றில் விதித்த ஸகலகர்மங்களும், "அஜ்ஞானியானஒருவன் (தான்) மணஞ்செய்துகொள்வதற்குமுன் (வேதத்திற்

---

[1] "எது மற்றென்றிற்குப் பயன்படுகின்றதோ [அதாவது-எது வேறென்றை வற்புறுத்துகின்றதோ]அது அதன் சேஷமாம்" (ஜைமிநிஸூத்ரம் ௩-௧-௨: சபரபாஷ்யம்). "அஜ்ஞானியாவான் இவ்வுலகத்திலே இம்மைப்பயனையும், பிதிருலோகத்திலே மறுமைப்பயனையும் நன்மக்களைப் பெறுதலால் ஸாதித்துக்கொள்கிறுன். ஞானியோ, எங்கும் ப்ரஹ்மமாகவே இருக்கிறுன். அந்த ப்ரஹ்மமோ நன்மக்கள் முதலிய எவற்ருலும் ஸாத்யமன்று. ஆகவே, அந்த ப்ரஹ்மத்தை அடையவிரும்புபவர்கள் உலகவியாபாரங்களை ஒழித்திடவேண்டும்" என "பற்றற்றவராய்" என்னும் முந்தின வாக்கியத்தை "இந்த ஆத்மாவாகிய" என்னும் பிந்தின வாக்கியம் வற்புறுத்துமாறு கண்டுகொள்க.

𑌰𑍍𑌮𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑍋𑌤𑍍𑌤𑌰𑌕𑌾𑌲𑌂 𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑌸𑌾𑌧𑌨𑌂— '𑌪𑍁𑌤𑍍𑌰𑌂' 𑌦𑍍𑌵𑌿𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌞𑍍𑌚 '𑌵𑌿𑌤𑍍𑌤𑌂' '𑌮𑌾𑌨𑍁𑌷𑌂' '𑌦𑍈𑌵𑌂' 𑌚; 𑌤𑌤𑍍𑌰 𑌮𑌾𑌨𑍁𑌷𑌂 𑌕𑌰𑍍𑌮𑌰𑍂𑌪𑌂 𑌪𑌿𑌤𑍃𑌲𑍋𑌕𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌸𑌾𑌧𑌨𑌂, 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌂 𑌚 𑌦𑍈𑌵𑌂 𑌵𑌿𑌤𑍍𑌤𑌂 𑌦𑍇𑌵𑌲𑍋𑌕𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌸𑌾𑌧𑌨𑌂 — '𑌸𑍋𑌽𑌕𑌾𑌮𑌯𑌤' 𑌇𑌤𑌿 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌕𑌾𑌮𑌵𑌤 𑌏𑌵 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌶𑍍𑌰𑍌𑌤𑌾𑌦𑍀𑌨𑌿 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌾𑌨𑌿 𑌤𑍇𑌭𑍍𑌯𑍋 𑌵𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌨𑌂 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍇𑌵 𑌲𑍋𑌕𑌮𑌿𑌚𑍍𑌛𑌤𑌃 𑌅𑌕𑌾𑌮𑌸𑍍𑌯 𑌵𑌿𑌹𑌿𑌤𑌮𑍍। 𑌤𑌦𑍇𑌤𑌤𑍍 𑌵𑌿𑌭𑌾𑌗𑌵𑌚𑌨𑌮𑌨𑍁𑌪𑌪𑌨𑍍𑌨𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌯𑌦𑌿 𑌶𑍍𑌰𑍌𑌤𑌕𑌰𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌃 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑌃 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌭𑌗𑌵𑌤𑌃 ॥

𑌨 𑌚 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃 𑌉𑌪𑌪𑌨𑍍𑌨𑍋 𑌭𑌵𑌤𑌿 '𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌚𑍇𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌣𑌸𑍍𑌤𑍇' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌃 । 𑌏𑌕𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌤𑍍𑌵𑌾𑌸𑌂𑌭𑌵𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌃 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑌂 𑌕𑌥𑌮𑌰𑍍𑌜𑍁𑌨𑌃 𑌅𑌶𑍍𑌰𑍁𑌤𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌶𑍍𑌚 𑌕𑌰𑍍𑌮𑌣𑍋 𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌭𑌗𑌵𑌤𑌿 𑌅𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑌯𑍇𑌤𑍍 𑌮𑍃𑌷𑍈𑌵 '𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌚𑍇𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌣𑌸𑍍𑌤𑍇 𑌮𑌤𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃' 𑌇𑌤𑌿 ॥

𑌕𑌿𑌞𑍍𑌚 — 𑌯𑌦𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑌃 𑌉𑌕𑍍𑌤𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌸 𑌉𑌕𑍍𑌤 𑌏𑌵𑍇𑌤𑌿 '𑌯𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯 𑌏𑌤𑌯𑍋𑌰𑍇𑌕𑌂 𑌤𑌨𑍍𑌮𑍇 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 𑌸𑍁𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌮𑍍' 𑌇𑌤𑌿 𑌕𑌥𑌮𑌨𑍍𑌯𑌤𑌰𑌾𑌵𑌿𑌷𑌯 𑌏𑌵 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍? 𑌨 𑌹𑌿 𑌪𑌿𑌤𑍍𑌤-

---

கூறிய) தருமங்களை ஆராய்ந்தபின்பு, (மாநுஷலோகம், பிதிருலோகம், தேவலோகமென்ற) மூவுலகங்களையும் அடைதற்கு ஸாதனமான புத்திரனையும், மாநுஷம் தெய்வமென்றஇருவகைச்செல்வத்தினையும்—அவற்றுள் மாநுஷச்செல்வமென்பது பித்ருலோகமடைதற்கு ஸாதநமாய்க் கர்மஸ்வரூப(மு)மா யிருப்பது; தெய்வச்செல்வமென்பது தேவலோகமடைதற்கு ஸாதநமான வித்யை[அதாவது, உபாஸநை]—அவன் விரும்பினான்'' (பி-௧-௪-௧௭) என, அஜ்ஞானமும் காமமும் உடையவனுக்கே எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. அவற்றை முற்றத்துறத்தல், ஆத்மாவாகிய லோகத்தையே நாடுபவனுக் காமமற்றிருப்பவனுக்கு விதிக்கப்பட்டுள்ளது. ஆகவே, சுருதியில் விதித்த கர்மமும், ஞானமுமாகிய இரண்டுங் கூடுதலே பகவான் கருத்தெனில், அப்பொழுது (அ-ா) பிரித்துரைக்கின்ற இத்திருவாக்கானது பொருத்தமில்லாததாகும்.

**ஞானம் கர்மம் என்ற இரண்டுங்கூடுதலென்பது பகவான் மேலேசொல்வதோடு இயையாமை.**

மேலும், "ஞானமானது" (௩-௧) என்பது முதலாகவுள்ள அர்ஜுனன் வினா ஏற்காது. ஒருவனே ஞானகர்மங்களை (ஒருங்கே) அநுஷ்டிக்கமுடியாதென்பதும், ஞானமானது கர்மத்திலும் மேலானதென்பதுமாகிய இவை—பகவான் முன் சொல்லாதனவும், (தனது செவிகளால்) கேளாதனவுமாக இருக்க, அவற்றை, "ஞானமானது கர்மத்திலும் மேலானதென்பது தங்களுடைய கருத்தானால்" (௩-௧) எனப் பகவானிடத்து அர்ஜுனன் பொய்யாக எப்படி ஏற்றக்கூடும்?

அன்றியும், ஞானம் கர்மம் என்ற இரண்டுங்கூடுதல் யாவர்க்குமே உரைக்கப்பட்டதென்றால், அது அர்ஜுனனுக்கும் உரைக்கப்பட்டதுதான்; எனவே, "(கர்மஞ் செய்தலும் தவிர்தலுமாகிய) இவ்விரண்டனுள் மிக்க நலமுள்ளஒன்றை எனக்குத் தேர்ந்தமுடிவாக உரைத்தருளுவீராக" (௫-௧) என இரண்டில் ஏதாவதொன்றைப் பற்றியதாகவே எப்படி (அவன்) வினவலாகும்? (உதாரணமாக,) தனது பித்தந்

𑌪𑍍𑌰𑌶𑌮𑌨𑌾𑌰𑍍𑌥𑌿𑌨𑍋 𑌵𑍈𑌦𑍍𑌯𑍇𑌨 𑌮𑌧𑍁𑌰𑌂 𑌶𑍀𑌤𑌲𑌂 𑌚 𑌭𑍋𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌉𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑍇 '𑌤𑌯𑍋𑌃 𑌅𑌨𑍍𑌯𑌤𑌰𑌤𑍍 𑌪𑌿𑌤𑍍𑌤𑌪𑍍𑌰𑌶𑌮𑌨𑌕𑌾𑌰𑌣𑌂 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿' 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿 ॥

𑌅𑌥 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑍍𑌯 𑌭𑌗𑌵𑌦𑍁𑌕𑍍𑌤𑌾𑌰𑍍𑌥𑌵𑌿𑌵𑍇𑌕𑌾𑌨𑌵𑌧𑌾𑌰𑌣𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃 𑌕𑌲𑍍𑌪𑍍𑌯𑍇𑌤; 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌚𑌨𑌂 𑌦𑍇𑌯𑌂 '𑌮𑌯𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌃 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑌃 𑌉𑌕𑍍𑌤𑌃, 𑌕𑌿𑌮𑌰𑍍𑌥𑌮𑍍 𑌇𑌤𑍍𑌥𑌂 𑌤𑍍𑌵𑌂 𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑍋𑌽𑌸𑌿?' 𑌇𑌤𑌿। 𑌨 𑌤𑍁 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌚𑌨𑌮𑍍 𑌅𑌨𑌨𑍁𑌰𑍂𑌪𑌂 𑌪𑍃𑌷𑍍𑌟𑌾𑌦𑍍 𑌅𑌨𑍍𑌯𑌦𑍇𑌵 '𑌦𑍍𑌵𑍇 𑌨𑌿𑌷𑍍𑌠𑍇 𑌮𑌯𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑍇' 𑌇𑌤𑌿 𑌵𑌕𑍍𑌤𑍁𑌂 𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 ॥

𑌨𑌾𑌪𑌿 𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤𑍇𑌨𑍈𑌵 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑍇 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑍇 𑌵𑌿𑌭𑌾𑌗𑌵𑌚𑌨𑌾𑌦𑌿 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍 𑌉𑌪𑌪𑌨𑍍𑌨𑌮𑍍 । 𑌕𑌿𑌂𑌚—𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌯𑍁𑌦𑍍𑌧𑌂 𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮 𑌇𑌤𑌿 𑌜𑌾𑌨𑌤𑌃 '𑌤𑌤𑍍𑌕𑌿𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌘𑍋𑌰𑍇 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌯𑍋𑌜𑌯𑌸𑌿' 𑌇𑌤𑌿 𑌉𑌪𑌾𑌲𑌮𑍍𑌭𑌃 𑌅𑌨𑍁𑌪𑌪𑌨𑍍𑌨𑌃 ॥

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌗𑍀𑌤𑌾𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍌𑌤𑍇𑌨 𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤𑍇𑌨 𑌵𑌾 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑍋 𑌨 𑌕𑍇𑌨𑌾𑌪𑌿 𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌤𑍁𑌂 𑌶𑌕𑍍𑌯𑌃 ॥

𑌯𑌸𑍍𑌯 𑌤𑍁 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 𑌰𑌾𑌗𑌾𑌦𑌿𑌦𑍋𑌷𑌤𑍋 𑌵𑌾 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 𑌦𑌾𑌨𑍇𑌨 𑌤𑌪𑌸𑌾 𑌵𑌾 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 𑌉𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌂 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌷𑌯𑌮𑍍 '𑌏𑌕-

---

தணித்துக்கொள்ளவேண்டிய (ஒரு)வனுக்கு 'இனிமையும், குளிர்ச்சியுமான பதார்த்தங்களைப் புஜிக்கவேண்டும்' என்று வைத்தியன் உரைத்தால் "அவ்விரண்டனுள், பித்தந் தணிதற்குக் காரணமான ஏதாவதொன்றைச் சொல்" என வினவுதல் நிகழாதன்றே !

இனி, அர்ஜுனனுடைய வினவானது, பகவான் அருளிச்செய்த திருவாக்கின் பொருளை(த் தன்) விவேகத்தினல் சரியாகத்தெரிந்துகொள்ளாமையினல் வந்ததாகக் கொள்ளலாமென்றல், அப்பொழுது, பகவான் "யான் ஞானம் கர்மம்இரண்டுங்கூடுதலைக் கூறினேன் ; நீ ஏன் இவ்வாறு மயங்குகின்றய் ? " என வினவுக்கு ஏற்றதாக மறுமொழி கொடுக்கவேண்டுமேயன்றி, "யான் இரண்டு நிஷ்டைகளைக்கூறினேன் " (௩-௩) என ( வினவுக்கு ) ஏற்றதல்லாததாய்க் கேட்டதற்குமாறகவே மறுமொழி கூறப்படாது.

மற்றும், ஸ்மார்த்தகர்மத்தோடுமாத்திரமே ஞானமும் கூடுதலென்பது (பகவான்) கருத்தெனில், (அப்பொழுதும் ஞானகர்மமிரண்டையும்) பிரித்துரைத்தல் முதலிய ஸகலமும் பொருத்தமுறுதனவாம். அன்றியும், யுத்தமாகிய ஸ்மார்த்தகருமமானது க்ஷத்திரியனுக்கு ஸ்வதரும மெனத் தெரிந்துகொண்டிருக்கும்அர்ஜுனன், "அப்பொழுது கர்மத்தில் என்னை ஏன் ஏவுகிறீர் ? (௩ - க) எனப் (பகவானைப்பற்றிப்) பழித்தல் அடாது.

ஆதலின், கீதாசாஸ்திரத்தில் ச்ரௌதகர்மத்தோடாயினும் ஸ்மார்த்தகர்மத்தோடாயினும் ஆத்மஞானங்கூடுதலென்பதைச் சிறிதும் எடுத்துக்காட்ட ஒருவராலும் இயலா தென்க.

சிலஇடங்களிலே போலியாகக் கூடிக்காணப்படும் ஞானகர்மங்களின் விவரம்.

(இனி, அஜ்ஞானத்தாலும் ஆசைமுதலியகுற்றங்களாலும் கர்மத்தை மேற்கொண்டு(அநுஷ்டித்து)வருபவனாய், யாகத்தாலும் தானத்தாலும் தவத்தாலும் மனம்

𑌕𑌮𑍇𑌵 𑌇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌅𑌕𑌰𑍍𑌤𑍃 𑌚’ 𑌇𑌤𑌿, 𑌤𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑍇 𑌚 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌽𑌪𑌿 𑌲𑍋𑌕𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑌾𑌰𑍍𑌥𑌂 𑌯𑌤𑍍𑌨𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌯𑌥𑌾 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 𑌤𑌥𑍈𑌵 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌯𑌤𑍍 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍂𑌪𑌂 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌨 𑌤𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮 𑌯𑍇𑌨 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍; 𑌯𑌥𑌾 𑌭𑌗𑌵𑌤𑍋 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌧𑌰𑍍𑌮𑌚𑍇𑌷𑍍𑌟𑌿𑌤𑌂 𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑍀𑌯𑌤𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑍍𑌥𑌸𑌿𑌦𑍍𑌧𑌯𑍇; 𑌤𑌦𑍍𑌵𑌤𑍍 𑌫𑌲𑌾𑌭𑌿𑌸𑌂𑌧𑍍𑌯𑌹𑌂𑌕𑌾𑌰𑌾𑌭𑌾𑌵𑌸𑍍𑌯 𑌤𑍁𑌲𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌦𑍍 𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 । 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌨𑍍 𑌨 ‘𑌅𑌹𑌂 𑌕𑌰𑍋𑌮𑌿’ 𑌇𑌤𑌿 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇, 𑌨 𑌚 𑌤𑌤𑍍𑌫𑌲𑌮𑍍 𑌅𑌭𑌿𑌸𑌂𑌧𑌤𑍍𑌤𑍇 ॥

𑌯𑌥𑌾 𑌚 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌾𑌦𑌿𑌕𑌾𑌮𑌸𑍍𑌯𑌾𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌕𑌰𑍍𑌮𑌲𑌕𑍍𑌷𑌣𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌯 𑌆𑌹𑌿𑌤𑌾𑌗𑍍𑌨𑍇𑌃 𑌕𑌾𑌮𑍍𑌯 𑌏𑌵 𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑍌 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌸𑌾𑌮𑌿 𑌕𑍃𑌤𑍇 𑌵𑌿𑌨𑌷𑍍𑌟𑍇𑌽𑌪𑌿 𑌕𑌾𑌮𑍇, 𑌤𑌦𑍇𑌵 𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑍍𑌯𑌨𑍁𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍋𑌽𑌪𑌿 𑌨 𑌤𑌤𑍍 𑌕𑌾𑌮𑍍𑌯𑌮𑍍 𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑌿 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌚 𑌦𑌰𑍍𑌶𑌯𑌤𑌿 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍—‘𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨𑌪𑌿 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇’, ‘𑌨 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇’ 𑌇𑌤𑌿 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌰 ॥

---

பரிசுத்தமாகப் பெற்ற எவனுக்கு, பரம்பொருளுண்மையைப் பற்றி "இதெல்லாம் ஒன்றுதான், ப்ரஹ்மம் அகர்த்தாவே" என்னும் ஞானம் உண்டாகுமோ, அவனுக்குக் கர்மமும் கர்மத்தின்பயனும் ஒழிந்திட்டதாயினும், (அவன் முன்)எப்படி ஊக்கத்தோடு கர்மத்தை மேற்கொண்டிருந்தானோ அப்படியே (ஞானோதயமான பின்பும்)உலகத்தைநல்வழிநடக்கச்செய்தற்பொருட்டுக்கர்மத்தை(மேற்கொள்ளக்கூடும்; அப்படி) மேற்கொண்டு ஒழுகுபவனுடைய ப்ரவ்ருத்திருபமாய் [கர்மப்போலியாய்] எது காணப்படுகின்றதோ, அது (மோக்ஷமடைதற்கு ஸாதநமாய்) ஞானத்தோடு ஒருங்குசேர்க்கவேண்டிய கருமமன்று. உதாரணமாக, பகவான் வாஸுதேவன் க்ஷத்திரியதருமத்தை அநுஷ்டித்தல் (அவர்க்குப்) புருஷார்த்தம்கைகூடுதற்காக ஞானத்தோடு ஒருங்கு சேர்க்கப்படுகிறதில்லை; அதுபோல, பயனை எதிர்நோக்காமையும், அகங்காரமின்மையும் ஞானிக்கும் ஸமமாயிருத்தலின் என்க[1]. மெய்யுணர்ந்தவன் 'யான் செய்கிறேன்' என மனத்திற் கொள்வதுமில்லை, அதன்பயனை எதிர்நோக்குவதுமில்லை.

பின்னும் உதாரணமாக, ஸ்வர்க்கம்முதலிய காமங்களை நாடுபவன், அக்நிஹோத்ரம்முதலிய காமஸாதனங்களைச் செய்யும்பொருட்டு, அக்நியை (முன்னே)வைத்துக்கொண்டு காம்யமேயான அக்நிஹோத்ராதியைச் செய்யத் தலைப்பட, பாதி செய்தவுடன் (தான் முன் மனத்திற்கொண்டு அக்நிஹோத்ராதியைத் தொடங்கின) ஆசையானது நீங்கிவிடினும்,(விட்டிடாது)அதே அக்நிஹோத்ராதியைச் செய்துமுடிக்கின்றான்; அப்படிச் செய்துமுடிக்கின்ற (அ)வனுக்கும் அது, காம்யஅக்நிஹோத்ராதியாக ஆகிறதில்லை. அவ்வாறே பகவான் "(கர்மங்களைச்)செய்கிறவனாயினும்(அவற்றால்) பற்றப்படுகிறானில்லை" (௫ - ௭), "(கர்மங்களைச்) செய்கிறானில்லை, (அவற்றால்) பற்றப்படுகிறானில்லை" (௧௩ - ௩௧) என ஆங்காங்கு எடுத்துக்காட்டுகிறார்.

---

[1] பகவான் மேற்கொண்டுள்ள க்ஷத்திரிய தருமம் புருஷார்த்தத்துக்குக் காரணமாகாமல் உலகத்தை நல்வழிப்படுத்தக்காரணமாவதுபோல, ஞானியின் கருமமும் பயனையெதிர்நோக்காமல் அகங்காரமின்றிச் செய்யப்பட்டு உலகத்தை நல்வழிப்படுத்தவே காரணமாகின்றது என்றபடி.

यत्तु—'पूर्वैः पूर्वतरं कृतम्,' 'कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः' इति, तत्तत् प्रविभज्य विज्ञेयम्। तत् कथम्?—

यदि तावत् पूर्वे जनकादयः तत्त्वविदोऽपि प्रवृत्तकर्माणः स्युः, ते लोकसंग्रहार्थं 'गुणा गुणेषु वर्तन्ते' इति ज्ञानेनैव संसिद्धिमास्थिताः, कर्मसंन्यासे प्राप्तेऽपि कर्मणा सहैव संसिद्धिमास्थिताः, न कर्मसंन्यासं कृतवन्त इत्यर्थः॥

अथ न ते तत्त्वविदः, ईश्वरसमर्पितेन कर्मणा साधनभूतेन संसिद्धिं सत्त्वशुद्धिं, ज्ञानोत्पत्तिलक्षणां वा संसिद्धिं, आस्थिता जनकादय इति व्याख्येयम्। एतमेवार्थं वक्ष्यति भगवान् 'सत्त्वशुद्धये कर्म कुर्वन्ति' इति। 'स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः' इत्युक्त्वा सिद्धिं प्राप्तस्य पुनः ज्ञाननिष्ठां वक्ष्यति—'सिद्धिं प्राप्तो यथा ब्रह्म' इत्यादिना॥

---

மற்றும், "(கர்மமானது) முன்னோர்களாலே முந்தினபண்டைக்காலத்திலே செய்யப்பட்டது" (ச-கரு), "கர்மத்தினாலேயே ஜனகர்முதலானோர்கள் ஸித்தி பெற்றார்கள்" (ங-உ௦) என வருவனவற்றை (இருவகையாக)ப் பகுத்துணர்க. அஃது எப்படியெனில்,—

(முதல்வகை):— முன்னோர்களான ஜநகாதியர் மெய்யுணர்ந்தவராயினும், கர்மத்தை மேற்கொண்டாராயின்—அவர்கள் ஜனங்களை நல்வழியில் நடக்கச் செய்தற்பொருட்டு "இந்திரியங்கள் விஷயங்களிற் செல்லுகின்றன(வே யன்றி ஆத்மா செல்வதில்லை)" (ங-உஅ) என்னும் ஞானத்தினாலேயே ஸித்தியை [மோக்ஷத்தை] அடைந்தார்கள். கர்மத்தைத் துறத்தற்குஉரிய நிலை(மை யானது அவர்கட்கு) வந்திருந்தும் கர்மத்தை (விடாது) உடன்கொண்டே ஸித்திபெற்றார்கள்; கர்மத்தைத் துறக்கவில்லை யென்றபடி.

(இரண்டாம் வகை):— அல்லது, அவர்கள் மெய்யுணர்ந்தவரல்லராயின்—ஈச்வரனுக்கு அர்ப்பிக்கப்பட்ட கர்மமாகிய (ஞான)ஸாதனத்தால் ஸித்தியை (அதாவது-) சித்தசுத்தியை அல்லது ஞானோதயமாகிய ஸித்தியைப் பெற்றார்கள் ஜநகாதியர் என உரைக்க. இதேவிஷயத்தை "(யோகிகள்) சித்தசுத்திக்காகக் கர்மத்தைச் செய்கிறார்கள்" (ரு-கக) எனப் பகவான் கூறுவர். "மனிதன் தன்கர்மத்தினால் அவனை[ஈச்வரனை]ப்பூஜித்து ஸித்திபெறுகிறான்"(கஅ-சகூ)எனக் கூறிப் பின்பு, ஸித்திபெற்ற(அ)வனுக்கு "ஸித்திபெற்றவன் எப்படி ப்ரஹ்மத்தை (அடைகிறான் என்பதை என்னிடமிருந்து தெரிந்துகொள்)" (கஅ-ரு௦) என்பது முதலாக மீண்டும் ஞானநிஷ்டையைக் கூறுவர்.

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌗𑍀𑌤𑌾𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌕𑍇𑌵𑌲𑌾𑌦𑍇𑌵 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 𑌮𑍋𑌕𑍍𑌷𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌃, 𑌨 𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌿𑌤𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌃 𑌅𑌰𑍍𑌥𑌃। 𑌯𑌥𑌾 𑌚 𑌅𑌯𑌮𑍍 𑌅𑌰𑍍𑌥𑌃 𑌤𑌥𑌾 𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑌶𑍋 𑌵𑌿𑌭𑌜𑍍𑌯 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌰 𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌃 ॥

𑌤𑌤𑍍𑌰 𑌏𑌵𑌂 𑌧𑌰𑍍𑌮𑌸𑌂𑌮𑍂𑌢𑌚𑍇𑌤𑌸𑌃 𑌮𑌹𑌤𑌿 𑌶𑍋𑌕𑌸𑌾𑌗𑌰𑍇 𑌨𑌿𑌮𑌗𑍍𑌨𑌸𑍍𑌯 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑍍𑌯 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 𑌉𑌦𑍍𑌧𑌰𑌣𑌮𑍍 𑌅𑌪𑌶𑍍𑌯𑌨𑍍 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌃 𑌤𑌤𑌃 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌮𑍍 𑌉𑌦𑍍𑌧𑌾𑌰𑌯𑌿𑌷𑍍𑌯𑌨𑍍 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌅𑌵𑌤𑌾𑌰𑌯𑌨𑍍 𑌆𑌹 '𑌅𑌶𑍋𑌚𑍍𑌯𑌾𑌨𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿—

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 ॥

௧௧. 𑌅𑌶𑍋𑌚𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌵𑌶𑍋𑌚𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌵𑌾𑌦𑌾𑌂𑌶𑍍𑌚 𑌭𑌾𑌷𑌸𑍇 ।
𑌗𑌤𑌾𑌸𑍂𑌨𑌗𑌤𑌾𑌸𑍂𑌂𑌶𑍍𑌚 𑌨𑌾𑌨𑍁𑌶𑍋𑌚𑌨𑍍𑌤𑌿 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃 ॥

𑌨 𑌶𑍋𑌚𑍍𑌯𑌾 𑌅𑌶𑍋𑌚𑍍𑌯𑌾 𑌭𑍀𑌷𑍍𑌮𑌦𑍍𑌰𑍋𑌣𑌾𑌦𑌯𑌃; 𑌸𑌦𑍍𑌵𑍃𑌤𑍍𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇𑌣 𑌚 𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌤𑌾𑌨𑍍 𑌅𑌶𑍋𑌚𑍍𑌯𑌾𑌨𑍍 𑌅𑌨𑍍𑌵𑌶𑍋𑌚𑌃 𑌅𑌨𑍁𑌶𑍋𑌚𑌿𑌤𑌵𑌾𑌨𑍍 𑌅𑌸𑌿 '𑌤𑍇 𑌮𑍍𑌰𑌿𑌯𑌨𑍍𑌤𑍇 𑌮𑌨𑍍𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌮𑍍, 𑌅𑌹𑌂 𑌤𑍈𑌃 𑌵𑌿𑌨𑌾𑌭𑍂𑌤𑌃 𑌕𑌿𑌂 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌰𑌾𑌜𑍍𑌯-

---

ஆகவே, முக்திகைகூடுதலானது மெய்ஞ்ஞானமொன்றினால்மாத்திரமேயன்றி, கர்மத்தோடு ஒருங்கு கூடிய ஞானத்தினால் அன்று என்பது கீதாசாஸ்திரத்திலே நிர்ணயிக்கப்பட்ட பொருளாம். இதுவே (கீதையின்) பொருளாய்க்கிடக்கும் விதத்தை (அந்தந்தப்)பிரகரணத்திற்குஏற்ப ஆங்காங்குஎடுத்துக்காட்டுவோம்.

### ஆத்மா இறவாதது.

இனி, இவ்வாறு (தான் செய்யவேண்டிய)தருமத்திலே மயங்கிய மனத்தினனாய், சோகப்பெருங்கடலில் மூழ்கிக்கிடக்கின்ற அர்ஜுநனை ஆத்மஞானத்தாலன்றி (வேறுவகையால்) கரையேற்றுதலைக் காணாத பகவான் வாஸுதேவன், அதனினின்றும் அர்ஜுனனைக் கரையேற்ற விரும்பி, அவனுக்கு ஆத்மஞானத்தைப் புகட்டுபவராய் "நீ (யாவராலும்) துக்கிக்கவேண்டாதவரை" (௨ - ௧௧) என்பதாதியாக அருளிச்செய்கின்றார்:

ஸ்ரீபகவான் சொல்லலுற்றார்:

௧௧. நீ (யாவராலும்)துக்கிக்கவேண்டாதவரைப்பற்றித் துக்கப்படுகிறாய்; ஞானவார்த்தைகளையும் பேசுகிறாய். உயிர்போனவரையும், உயிர்வாழ்பவரையும் பற்றி ஞானிகள் துக்கியார்.

பீஷ்மத்ரோணாதியர் (யாவராலும்) துக்கப்படத்தகாதவர்; ஏனெனில், (வ்யாவஹாரிகமாக) நல்லொழுக்கமுடையவர், பாரமார்த்திகமாகவும் நித்யரானவர். (நீ) துக்கிக்கத்தகாதஅவர்களைக் குறித்து "அவர்கள் சாகப்போகிறார்களே, (அதற்கு)நானன்றோ காரணம். நான், அவர்களில்லாமல் ராஜ்யஸுகம் முதலானவற்றால் என்ன செய்யப்போகிறேன்? [அதனால் எனக்கு ஒருப்ரயோஜனமும் இல்லையே!]" என ஏங்கி

ஸுகாதிநா' இதி | த்வம் ப்ரஜ்ஞாவாதாந் ப்ரஜ்ஞாவதாம் புத்திமதாம் வாதாந் வ-
வசநாநி ச பாஷஸே | ததேதத் மௌட்யம் பாண்டித்யம் ச விருத்தம் ஆத்மநி தர்ஶய-
ஸி உந்மத்த இவ இதி அபிப்ராய: | யஸ்மாத் கதாஸூந் கதப்ராணாந் ம்ருதாந்
அகதாஸூந் அகதப்ராணாந் ஜீவதஶ் ச ந அநுஶோசந்தி பண்டிதா: ஆத்ம-
ஜ்ஞா: | பண்டா ஆத்மவிஷயா புத்தி: யேஷாம் தே ஹி பண்டிதா:, 'பாண்டித்யம் நி-
ர்வித்ய' இதி ஶ்ருதே: | பரமார்த்ததஸ்து தாந் நித்யாந் அஶோச்யாந் அநுஶோ-
சஸி, அதோ மூடோऽஸி இதி அபிப்ராய: || ௧௧ ||

குத: தே அஶோச்யா:? யதோ நித்யா: | கதம்?—

௧௨. ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா: |
ந சைவ ந பவிஷ்யாம: ஸர்வே வயமத: பரம் ||

ந து ஏவ ஜாது கதாசித் அஹம் நாஸம், கிம் து ஆஸம் ஏவ | அதீ-
தேஷு தேஹோத்பத்திவிநாஶேஷு நித்ய ஏவ அஹம் ஆஸம் இதி அபிப்ராய: |
ததா—ந த்வம் ந ஆஸீ:, கிம் து ஆஸீர் ஏவ | ததா—ந இமே ஜநாதிபா: ந ஆ-
ஸந், கிம் து ஆஸந்ந் ஏவ | ததா—ந ச ஏவ ந பவிஷ்யாம:, கிம் து பவிஷ்யாம

---

வருந்துகிறாய். (மேலும்,) நீ ஞானிகளுடைய வார்த்தைகளையும் பேசுகிறாய்: பித்தன் போல, அந்தமௌட்டியமும் [1]இந்தஞானமுமாகிய மாறுபாட்டை உன்னிடத்திற் காட்டுகின்றாய் என்பது கருத்து. ஏனெனில், இறந்தவரையும் உயிர்வாழ்பவரையும் குறித்துப் பண்டிதரான ஆத்மஞானிகள் துக்கிக்கமாட்டார். எவர்க்கு ஆத்மவிஷயமான ஞானம் உள்ளதோ, அவரே பண்டிதராவர்: (இதனை,) "பாண்டித்யத்தை [ஆத்மஞானத்தை] உறுதியாகப் பெற்று......" (பி - ரு - டு - க) என்னும் சுருதியினால் (அறிக). உண்மையாகப்பார்க்குமிடத்தோ, நித்யராயிருப்பதால், துக்கப்படத்தகாதவர்களான அவர்களைக்குறித்து (நீ) துக்கிக்கிறாய்; ஆதலின், (நீ) மூடனாகிறாய் என்றபடி. (கக)

ஏன் அவர்கள் (யாவராலும்) துக்கிக்கவேண்டாதவர்?— நித்தியராதலின். எப்படி? —

கஉ. நானும், நீயும், இந்த அரசர்களும் ஒருபொழுதும் இல்லாதிருந்ததில்லை. இனிமேலும் நாமெல்லோரும் இல்லாமற்போவது மில்லை.

நான் ஒருபோதும் இல்லாதிருந்ததில்லை; மற்று, இருக்கவே இருந்தேன்: உடலுக்குநேர்ந்த சென்றபிறப்பிறப்புக்களில் நான் நித்யனாகவே இருந்தேன் என்று கருத்து. அப்படியே, நீ இல்லாதிருந்ததில்லை; மற்று, இருக்கவேஇருந்தாய். அவ்வண்ணமே, இந்த அரசர்களும் இல்லாதிருந்ததில்லை; மற்று, இருக்கவே இருந்தார்கள். அவ்வாறே, நாம் இல்லாமற்போவது மில்லை; மற்று, நாமெல்லோரும் இவ்வுடல் இறந்தபின்பும் இருக்கவே இருப்போம். (இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும்) முக்

---

[1] அந்தமௌட்டியமாவது - வருத்தப்பட வேண்டாத விஷயத்தில் வருந்தப்படுதல்; இந்த ஞானமாவது - க- சஎ முதலான சுலோகங்களில் புத்திசாலித்தனமாகப் பேசுதல்.

ஸர்வ, ஸர்வே வயமத: அஸ்மாத் தேஹவிநாசாத் பரம் உத்தரகாலேऽபி |
த்ரிஷ்வபி காலேஷு நித்யா ஆத்மஸ்வரூபேண இத்யர்த: ||

தேஹபேதாநுவ்ருத்த்யா பஹுவசநம், ந ஆத்மபேதாபிப்ராயேண || ௧௨ ||

தத்ர கதமிவ நித்ய ஆத்மா இதி? த்ருஷ்டாந்தமாஹ—

௧௩. தேஹிநோऽஸ்மிந் யதா தேஹே கௌமாரம் யௌவநம் ஜரா |
ததா தேஹாந்தரப்ராப்திர்தீரஸ்தத்ர ந முஹ்யதி ||

தேஹ: அஸ்ய அஸ்தி இதி தேஹீ தஸ்ய தேஹிநோ தேஹவத: ஆத்மந: அஸ்மிந் வர்தமாநே தேஹே யதா யேந ப்ரகாரேண கௌமாரம் குமாரபாவோ பால்யாவஸ்தா, யௌவநம் யூநோ பாவோ மத்யமாவஸ்தா, ஜரா வயோஹாநி: ஜீர்ணாவஸ்தா, இத்யேதா: திஸ்ர: அவஸ்தா: அந்யோந்யவிலக்ஷணா: | தாஸாம் ப்ரதமாவஸ்தாநாஶே ந நாஶ:, த்விதீயாவஸ்தோபஜநே ந உபஜந ஆத்மந: | கிம் தர்ஹி? அவிக்ரியஸ்யைவ த்விதீயத்ருதீயாவஸ்தாப்ராப்தி: ஆத்மநோ த்ருஷ்டா | ததா தத்வதேவ தேஹாத் அந்யோ தேஹோ தேஹாந்தரம் தஸ்ய ப்ராப்தி: தேஹாந்தரப்ராப்தி: அவிக்ரியஸ்யைவ ஆத்மந: இத்யர்த: | தீரோ தீமாந் தத்ர ஏவம் ஸதி ந முஹ்யதி ந மோஹமாபத்யதே || ௧௩ ||

யத்யபி ஆத்மவிநாஶநிமித்தோ மோஹோ ந ஸம்பவதி நித்ய: ஆத்மா இதி விஜாநத:, ததாபி ஶீதோஷ்ணஸுகது:கப்ராப்திநிமித்தோ மோஹோ லௌகிகோ

---

காலங்களிலும் (நாம்) ஆத்மஸ்வரூபத்தால் நித்யர்கள் என்பது (தேர்ந்த)பொருள்.

(ஆத்மா ஒன்றேயாயினும்,) உடல்கள் வேறுவேறாயிருப்பதுபற்றி (''நாமெல்லோரும்'' என்னும்) பன்மை (வழங்கலாயிற்று); ஆத்மா வேறுவேறாயிருப்பதென்னும் கருத்தால் அன்று. (௧௨)

இனி, ஆத்மா நித்தியமென்பது எப்படி? — திருஷ்டாந்தம் கூறுகிறார்:

௧௩. தேகிக்கு, இந்தத்தேகத்திலே பால்யமும், யௌவனமும், கிழத்தனமும் எப்படியோ, அப்படித்தான் வேறுதேகத்தை அடைவது(ம்); அவ்விஷயத்தில் ஞானி மயக்கமாட்டான். [தேகி - தேகமுடையது : ஆத்மா].

உடம்பொடுநிற்கும் ஆத்மாவுக்கு இப்பொழுதுள்ள தேகத்திலே பாலப்பருவமும், யௌவநமாகிய நடுப்பருவமும், வயசின்முதிர்ச்சியான கிழப்பருவமும் ஆகிய இம்மூன்றுபருவங்களும் ஒன்றற்கொன்று வேறுபட்டவையாம். அவற்றுள்,முதற்பருவம்போனவுடன் (ஆத்மா) அழிவது [இறப்பது] இல்லை. இரண்டாம்பருவம் வந்தவுடன், (ஆத்மா) உண்டாவது [பிறப்பது] இல்லை. அப்பொழுது என்னவெனில்,— (பாலப்பருவம் மாறினாலும்,) ஆத்மா மாறுபடாமலே, இரண்டாவதும் மூன்றுவதுமான பருவங்களை அடையக்காண்கிறோம்; அவைபோலவே, ஆத்மா விகாரப்படாமலே வேறுதேகத்தை அடைகின்றதென்க. அது இப்படியிருப்பதனால்(தான்) ஞானவான் (மதி)மயக்க மடைவதில்லை. (௧௩)

போறுமையென்பது ஞானத்திற்கு ஒருஸாதனம்.

"ஆத்மா நித்யம் என்று அறிகின்றவனுக்கு, 'ஆத்மா இறந்துவிடும்' என்ற (அஞ்ஞானத்)தால்உண்டாகும் மயக்கம் நிகழாதாயினும், குளிர்வெப்பங்களையும் இன்பதுன்பங்களையும் அடைதலாலாகும் மயக்கமும், ஸுகம் நீங்கிப்போதலாலும்

த்ருஶ்யதே, ஸுகவியோகநிமித்தோ து:கஸம்யோகநிமித்தஶ்ச ஶோக:। இத்யேதஸ்ய அர்ஜுநஸ்ய வசநஸ்ய ஆஶங்க்ய ஆஹ பகவாந் ஆஹ—

கச. மாத்ராஸ்பர்ஶாஸ்து கௌந்தேய ஶீதோஷ்ணஸுகது:கதா:।
ஆகமாபாயிநோऽநித்யாஸ்தாம்ஸ்திதிக்ஷஸ்வ பாரத ॥

மாத்ரா: ஶப்தாதய: மீயந்தே ஏபிரிதி மாத்ரா: ஶ்ரோத்ராதீநி இந்த்ரியாணி। மாத்ராணாம் ஸ்பர்ஶா: ஶப்தாதிபி: ஸம்யோகா:। தே ஶீதோஷ்ணஸுகது:கதா:। ஶீதஞ்ச உஷ்ணம் ஸுகம் து:கம் ச ப்ரயச்சந்தீதி। அதவா—ஸ்ப்ருஶ்யந்தே இதி ஸ்பர்ஶா: விஷயா: ஶப்தாதய:। மாத்ராஶ்ச ஸ்பர்ஶாஶ்ச ஶீதோஷ்ணஸுகது:கதா:। ஶீதம் கதாசித் ஸுகம், கதாசித் து:கம்। ததா உஷ்ணமபி அநியதஸ்வரூபம்। ஸுகது:கே புந: நியதரூபே யதோ ந வ்யபிசரத:। அத: தாப்யாம் ப்ருதக் ஶீதோஷ்ணயோர் க்ரஹணம்। யஸ்மாத் தே மாத்ராஸ்பர்ஶாதய: ஆகமாபாயிந: ஆகமாபாயஶீலா: தஸ்மாத் அநித்யா:। அத: தாந் ஶீதோஷ்ணாதீந் திதிக்ஷஸ்வ ப்ரஸஹஸ்வ, தேஷு ஹர்ஷம் விஷாதம் வா மா கார்ஷீ: இத்யர்த:॥ கச ॥

ஶீதோஷ்ணாதீந் ஸஹத: கிம் ஸ்யாத் இதி? ஶ்ருணு—

---

துக்கம்வந்துசேர்தலாலும் உண்டாகின்ற சோகமும் உலகத்தில் ஸாதாரணமாகக் காணப்படுகின்றனவே" என்ற இதனை அர்ஜுனன் வார்த்தையாகச் சங்கித்து, பகவான் கூறுகிறார் :

கச. கௌந்தேய! இந்திரிய ஸ்பர்சங்களே குளிர்வெப்பத்தையும், இன்பதுன்பங்களையும் கொடுத்துத் தோன்றிமறையுந்தன்மையனவாய் அநித்தியமா யிருக்கின்றன; பாரத ! அவற்றை (நீ) பொறுக்கக்கடவாய்.

ஓசை முதலியவற்றை அறிபவை, செவி முதலிய இந்திரியங்கள். (அந்த) இந்திரியங்களின் ஸ்பர்சங்கள்என்பவை - (அவற்றிற்கு) ஓசை முதலியவற்றோடுள்ள ஸம்பந்தங்களாம். அவைகளே [அந்த ஸம்பந்தங்களே] குளிரையும்வெப்பத்தையும் ஸுகத்தையும் துக்கத்தையும் தருகின்றன என்பது. அல்லது, ஸ்பர்சங்கள்(என்றால் இந்திரியங்களால்) ஸ்பர்சிக்கப்படுவன ஓசைமுதலிய விஷயங்கள்(எனக்கொண்டு),இந்திரியங்களும்விஷயங்களும்,குளிர்வெப்பம் ஸுகம்துக்கம் என்பவற்றைத் தருகின்றன (என்றும் உரைக்கலாம்). குளிர் ஒருகாலத்தில் ஸுகமாயும், மற்றொருகாலத்தில் துக்கமாயும் இருக்கின்றது ; அப்படியே, வெப்பமும் ஒருதன்மையதன்று. ஸுகதுக்கங்களோ ஒருநிலைப்பட்டிருத்தலைப் பிறழ்கின்றனவில்லை [அதாவது - எப்பொழுதும் ஸுகம் ஸுகமாகவும், துக்கம் துக்கமாகவுமே இருக்கின்றன.] ஆதலின், குளிர்வெப்பங்கள் அவற்றினின்றும் வேறாக எடுத்துக்கூறப்பட்டன. இந்திரியஸ்பர்சங்கள் தோன்றிமறையுந் தன்மையனவாதலின், அநித்தியங்கள் ; ஆகவே, (நீ) அந்தக்குளிர்வெப்பம்முதலியவற்றைப் பொறுத்துக்கொள்ளவேண்டும் : அவற்றின் விஷயமாக நீ ஸந்தோஷத்தையாவது துயரத்தையாவது கொள்ளவேண்டாம் என்றபடி. [அநித்யம் - நிலையில்லாதது.] (கச)

குளிர்வெப்பமுதலியவற்றை ஸஹிப்பவனுக்கு வரு(ம் நன்மையா)வது என்னவெனின்?— (அதைக்) கேள் :

௧௫. 𑌯𑌂 𑌹𑌿 𑌨 𑌵𑍍𑌯𑌥𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑍇𑌤𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌰𑍍𑌷𑌭 ।
𑌸𑌮𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑌂 𑌧𑍀𑌰𑌂 𑌸𑍋𑌽𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌾𑌯 𑌕𑌲𑍍𑌪𑌤𑍇 ॥

𑌯𑌂 𑌹𑌿 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌸𑌮𑍇 𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑍇 𑌯𑌸𑍍𑌯 𑌤𑌂 𑌸𑌮𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑌂 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍌 𑌹𑌰𑍍𑌷𑌵𑌿𑌷𑌾𑌦𑌰𑌹𑌿𑌤𑌂 𑌧𑍀𑌰𑌂 𑌧𑍀𑌮𑌨𑍍𑌤𑌂 𑌨 𑌵𑍍𑌯𑌥𑌯𑌨𑍍𑌤𑌿 𑌨 𑌚𑌾𑌲𑌯𑌨𑍍𑌤𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 𑌏𑌤𑍇 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌾𑌃 𑌶𑍀𑌤𑍋𑌷𑍍𑌣𑌾𑌦𑌯𑌃, 𑌸𑌃 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌦𑌰𑍍𑌶𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑍋 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌸𑌹𑌿𑌷𑍍𑌣𑍁𑌃 𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌾𑌯 𑌅𑌮𑍃𑌤𑌭𑌾𑌵𑌾𑌯 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯, 𑌕𑌲𑍍𑌪𑌤𑍇 𑌸𑌮𑌰𑍍𑌥𑍋 𑌭𑌵𑌤𑌿 ॥ ௧௫ ॥

𑌇𑌤𑌶𑍍𑌚 𑌶𑍋𑌕𑌮𑍋𑌹𑍌 𑌅𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌶𑍀𑌤𑍋𑌷𑍍𑌣𑌾𑌦𑌿𑌸𑌹𑌨𑌂 𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍, 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍—

௧௬. 𑌨𑌾𑌸𑌤𑍋 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌭𑌾𑌵𑍋 𑌨𑌾𑌭𑌾𑌵𑍋 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌸𑌤𑌃 ।
𑌉𑌭𑌯𑍋𑌰𑌪𑌿 𑌦𑍃𑌷𑍍𑌟𑍋𑌽𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑌯𑍋𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌭𑌿𑌃 ॥

𑌨 𑌅𑌸𑌤𑌃 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌸𑍍𑌯 𑌶𑍀𑌤𑍋𑌷𑍍𑌣𑌾𑌦𑍇𑌃 𑌸𑌕𑌾𑌰𑌣𑌸𑍍𑌯 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌭𑌾𑌵𑍋 𑌭𑌵𑌨𑌮𑍍 𑌅𑌸𑍍𑌤𑌿𑌤𑌾 । 𑌨 𑌹𑌿 𑌶𑍀𑌤𑍋𑌷𑍍𑌣𑌾𑌦𑌿 𑌸𑌕𑌾𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑍈𑌃 𑌨𑌿𑌰𑍂𑌪𑍍𑌯𑌮𑌾𑌣𑌂 𑌵𑌸𑍍𑌤𑍁 𑌸𑌮𑍍𑌭𑌵𑌤𑌿 । 𑌵𑌿𑌕𑌾𑌰𑍋 𑌹𑌿 𑌸𑌃, 𑌵𑌿𑌕𑌾𑌰𑌶𑍍𑌚 𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌰𑌤𑌿 । 𑌯𑌥𑌾 𑌘𑌟𑌾𑌦𑌿𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 𑌨𑌿𑌰𑍂𑌪𑍍𑌯𑌮𑌾𑌣𑌂 𑌮𑍃𑌦𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑍇𑌣 𑌅𑌨𑍁𑌪-

---

௧௫. மனிதரிற் சிறந்தவனே! ஸுகதுக்கங்களை ஸமமாகக்கொண்ட எந்தத் தீரபுருஷனை, இவை உண்மையாகவே துன்பப்படுத்துகின்றன வில்லேயோ, அவன் சாகாநிலைக்கு உரியவனாகிறான்.

ஸுகதுக்கங்களை ஸமமாகக்கொண்ட (அதாவது—) ஸுகம்வந்தபோது ஸந்தோஷங் கொள்ளாமலும் துக்கம்வந்தபோது துயரமடையாமலும் இருக்கின்ற ஞானியை, மேற்கூறிய குளிர் வெப்பமுதலியன தாக்கி அசைக்கின்றனவில்லை; (அவன்) நித்யமான ஆத்மாவைக் காண்கிறபடியால். அவன் நித்யமான ஆத்மாவின் ஸ்வரூபத்தைக் கண்டறிதலிலே உறுதியாகநிற்பவன் : த்வந்தங்களை ஸஹிக்கக்கூடியவன் : சாகாத்தன்மையான மோக்ஷமென்பதனை அடையவல்லவன். [த்வந்தங்கள் - குளிர் வெப்பம் முதலியன.] (௧௫)

**பொய்ம்மையும், மெய்ம்மையும்.**

இக்காரணத்தாலும், துயரமும் மயக்கமும் கொள்ளாது, குளிர்வெப்பம் முதலியவற்றைப் பொறுத்தல் (முக்திபெற விரும்புவோனுக்கு) உரியதாகும். எதனாலெனில்,—

௧௬. ‘பொய்ப்பொருளுக்கு உண்மை இல்லை, மெய்ப்பொருளுக்கு இன்மை இல்லை’ (என) இவ்விரண்டற்கும் முடிவு கண்டுவைக்கப்பட்டுள்ளது மெய்ம்மையைக் காணும் இயல்பினராலே.

பொய்ம்மையான குளிர்வெப்பம் முதலியவற்றிற்கும்,(அவற்றின்)காரணமான(நீர், நெருப்பு முதலிய)வற்றிற்கும் உண்மையென்பது இல்லை. பிரமாணங்களால் ஆராயுங்கால்,குளிர்வெப்ப முதலாயினவும்(அவற்றின்)காரணங்களும் உண்மைப்பொருளாய் இருக்கின்றனவில்லை. ஏனெனில்,அவை விகாரமாம். விகாரமோ பிறழ்ந்திடுகின்றது[தன் நிலைதிரிகின்றது].உதாரணமாக,குடம் முதலானவற்றின் உருவங்கள்(கண்ணினால் உள்

A. No. 23720
LIBRARY. KOVILOOR



𑌲𑌬𑍍𑌧𑍇𑌃 𑌅𑌨𑍃𑌤𑌮𑍍, 𑌤𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑍋 𑌵𑌿𑌕𑌾𑌰𑌃 𑌕𑌾𑌰𑌣𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑍇𑌣𑌾𑌨𑍁𑌪𑌲𑌬𑍍𑌧𑍇𑌃 𑌅𑌨𑍃𑌤𑌃 । 𑌜𑌨𑍍𑌮𑌪𑍍𑌰𑌧𑍍𑌵𑌂𑌸𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌚𑌾𑌨𑍁𑌪𑌲𑌬𑍍𑌧𑍇𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌘𑌟𑌾𑌦𑍇𑌃, 𑌮𑍃𑌦𑌾𑌦𑌿𑌕𑌾𑌰𑌣𑌸𑍍𑌯 𑌚 𑌤𑌤𑍍𑌕𑌾𑌰𑌣𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑍇𑌣 𑌅𑌨𑍁𑌪𑌲𑌬𑍍𑌧𑍇𑌃 𑌅𑌨𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑍍 ॥

𑌤𑌦𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍇 𑌸𑌰𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍— 𑌨; 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌦𑍍𑌵𑌯𑍋𑌪𑌲𑌬𑍍𑌧𑍇𑌃, 𑌸𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌅𑌸𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌿𑌤𑌿 । 𑌯𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌨 𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌰𑌤𑌿 𑌤𑌤𑍍 𑌸𑌤𑍍, 𑌯𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑌾 𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌰𑌤𑌿 𑌤𑌦𑌸𑌦𑌿𑌤𑌿 𑌸𑌦𑌸𑌦𑍍𑌵𑌿𑌭𑌾𑌗𑍇 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑍇, 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌦𑍍𑌵𑍇 𑌬𑍁𑌦𑍍𑌧𑍀 𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑍁𑌪𑌲𑌭𑍍𑌯𑍇𑌤𑍇 𑌸𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍇 𑌨 𑌨𑍀𑌲𑍋𑌤𑍍𑌪𑌲𑌵𑌤𑍍, '𑌸𑌨𑍍 𑌘𑌟𑌃,' '𑌸𑌨𑍍 𑌪𑌟𑌃,' '𑌸𑌨𑍍 𑌹𑌸𑍍𑌤𑍀' 𑌇𑌤𑌿 । 𑌏𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 । 𑌤𑌯𑍋𑌃 𑌬𑍁𑌦𑍍-

---

ளும்புறமும்)உற்றுப்பார்த்து ஆராயப்படும்பொழுது மண்ணைத்தவிர வேறாகப் புலப்படாமையால்[அதாவது-மண்ணாகவே புலப்படுகின்றமையால்]பொய்ம்மையாம்.அப்படியே ஸகலவிகாரங்களும் காரணத்தைத்தவிர வேறாகப் புலப்படாமையால் பொய்யே. அன்றியும், (மண்ணின்) கார்யமான குடம் முதலானவை தோன்றுதற்குமுன்னும் அழிதற்குப்பின்னும்[1] புலப்படாமையாலும் (பொய்ம்மையாம்). பின்னும் மண்முதலியகாரணங்களும் தம் காரணமா(ன நிலம் முதலானவா)கவன்றி வேறாகப் புலப்படாமையின் பொய்ம்மையேயா மென்க.[2]

(ஆக்ஷேபம்):—அது(வும் அவ்வாறு)பொய்யாகுமளவிலே ஸகலமும் இல்லையாகும் எனில்,[3]—

(ஸமாதாநம்):— அப்படியன்று ; எங்கும்(வ்யவஹாரநிலையிலே) மெய்யுணர்வும் பொய்யுணர்வுமென இருவகை உணர்வு புலப்படுதலால். எதனைக் குறித்து நிற்கும் உணர்வு பிறழ்ந்திடுகின்றதில்லையோ, அது மெய்ப்பொருள்; எதனைக் குறித்துநிற்கும் உணர்வு பிறழ்ந்திடுகின்றதோ, அது பொய்ப்பொருள் என மெய்ம்மை பொய்ம்மைகளின்வேறுபாடு, புத்தியைப் பொறுத்துநிற்கின்றது ; நிற்கவே, எங்கும் [வ்யவஹாரநிலையிலே] (இந்த) இருவகை உணர்வுகள், 'கரியது நெய்தல்' என்பது போலவல்லாமல்[4], 'உள்ளது குடம்', 'உள்ளது ஆடை', 'உள்ளது யானை' என யாவராலும் ஒரேஇடத்து[5]உணரப்படுகின்றன.இவ்வாறே எங்கும்(காணப்படுகின்றன).அவ்விருவகை உணர்ச்சியுள் குடமென்னும் உணர்வும், இன்னும் இதுபோன்ற உணர்வுகளும்

---

1 "எது முந்தியும் பிந்தியும் இல்லையோ, அது நிகழ்காலத்திலும் [நடுவிலும்] இல்லை" என்பது மாண்டூக்ய உபநிஷத்தின் கௌடபாதகாரிகை - ௪ - ௩௧.—(ஆ.)

2 இதனால், "கேவலமெய்ப்பொருளானது, காரணகார்ய வரம்பிற்கு அப்பால் உள்ளது" என்று தோன்றுமாறு காண்க.—(ஆ.)

3 ஒருபொருள் காரணமாகவாவது, கார்யமாகவாவது அல்லாமல் இருக்கமுடியாது என்பது ஆக்ஷேபஞ்செய்கிறவனுடைய கருத்து.—(ஆ.)

4 ஒரே இடத்தில் [ஸாமாநாதிகரண்யமாக] பொய்ம்மையும் மெய்ம்மையும் ஆகிய இரண்டுபுத்திகள் உண்டாகின்றன என்றால், 'கரியது நெய்தல்' என்னுமிடத்தில் தோன்றுகிற 'கருமை,' 'நெய்தல்' என்ற இரண்டு பொருள்களைப்பற்றிய உணர்வுகளும் பொய்ம்மையேயன்றோ என்று வரக்கூடிய ஆக்ஷேபத்தை நீக்க, 'கரியது நெய்தல் என்பதுபோலவல்லாமல்' என்றார்.

5 "இது, புஸ்தகம்" என்றவிடத்து 'இது' என்பதும், 'புஸ்தகம்' என்பதும் ஒரே பொருளைக் குறிப்பதுபோல, "உள்ளது குடம்" என்னுமிடத்தில் 'உள்ளது' என்பதும், 'குடம்' என்பதும் ஒரேபொருளைக் குறிக்கின்றன. இவ்வாறு கொள்வதை வடநூலார் 'ஸாமாநாதிகரண்யம்' என்பர்.

வெ்ஹாஃ வடாசிவ-ஜிஃ வ்யஹிவாகி। கயா வ ஜஸிுதழ । ந த- ஸஜூ-ஜிஃ। தஸாஜ வடாசிவ-ஜிவிஷயஃ ஈஸது, வ்யஹிவாராஜ। ந த- ஸஜூ-ஜிவிஷயஃ, ஈவ்யஹிவாராஜ॥

வடெ விநஷெ வடவ-ஜிஊ வ்யஹிவாஜ்யாம் ஸஜூ-ஜிரவி வ்யஹிவாதீதி வெஜ— ந ; வடாதாவவி ஸஜூ-ஜிஜஸூநாஜ । விஶெஷணவிஷயெவ ஸா ஸஜூ-ஜிஃ ॥

ஸஜூ-ஜிவஜ வடவ-ஜிரவி வடாஜரெ ஜுஸுதெ ஊதி வெஜ— ந ; வடாஜள ஈஜஸூநாஜ ॥

ஸஜூ-ஜிரவி நஷெ வடெ ந ஜுஸுதெ ஊதி வெஜ—ந ; விஶெஷ்யா-ஸாவாஜ । ஸஜூ-ஜிஃ விஶெஷணவிஷயா ஸதீ விஶெஷ்யாஸாவெ விஶெஷணா-நு-வவதெள கிம்விஷயா ஸ்யாஜ ? ந த- வ-நஃ ஸஜூ-ஜெஃ விஷயாஸாவாஜ ॥

---

பிறழ்கின்றன. அவ்வண்ணமே(கீழ்)எடுத்துக்காட்டப்பட்டது. ஆனால்,உள்ளதென்னும் உணர்வு (அப்படிப் பிறழ்ந்திடுவது) இல்லை. ஆகவே, குடம் முதலிய உணர்வினாற் குறிக்கப்படும்பொருள்[குடம்முதலானவை] பிறழ்ந்திடுதலால் பொய்ப்பொருளாம். ஆனால், உள்ளதென்னும் உணர்வினாற் குறிக்கப்படும் பொருள் பிறழாமையால் (அப்படி) இல்லை [மெய்ப்பொருளாம் என்றபடி].

(ஆக்ஷேபம்):—குடம் அழிவுற்றவளவில், குடமென்னும் உணர்வு பிறழ[இல்லாமற்போக], உள்ள தென்னும் உணர்வும் (அங்ஙனம்) பிறழ்கின்ற தெனில்—

(ஸமாதாநம்):—அப்படியன்று ; ஆடைமுதலியவற்றிலும் உள்ளதென்னும் உணர்வினைக் காண்கிறபடியால். அந்த உள்ளதென்னும் உணர்வு விசேஷணத்தைக் குறித்தேநிற்பதாம்.

(ஆக்ஷேபம்):—உள்ளதென்னும் உணர்வுபோலக் குடமென்னும் உணர்வும் மற்றொருகுடத்திற் காணப்படுகின்ற தெனில்,—

(ஸமாதாநம்):—அப்படியன்று ; (குடமென்னும் உணர்வினை) ஆடைமுதலானவற்றிற் காணாமையின்.

(ஆக்ஷேபம்):—உள்ளதென்னும் உணர்வும், அழிவுபட்டகுடத்தில் காணப்படுகின்றதில்லை யெனில்,—

(ஸமாதாநம்):—அப்படியன்று ; விசேஷ்யமில்லாமையின்.[1] உள்ளதென்னும் உணர்வு விசேஷணத்தைக் குறித்துநிற்பதாய், விசேஷ்யமில்லாதஇடத்து விசேஷணம் பொருந்தாமையால், எதைக் குறித்துநிற்கும்? ஆனால், உள்ளதென்னும் உணர்வினால் குறிக்கப்படும்பொருள் இல்லாமையாலன்று.[2]

---

[1] உலகத்திலுள்ள எல்லாப்பொருள்கட்கும் இருத்தல் என்பது உண்மைப்பொருளினாலேயே அமைதலால், 'உள்ளது' என்பது அந்த உண்மைப்பொருளைக் காட்டுவதாம் என்று அறிக. ஆகவே, குடம் முதலியன அழிவுற்றாலும், மற்றைப் பொருள்களைக்குறித்து 'உள்ளது, உள்ளது' என வழங்கும்படி அந்த உண்மைப்பொருள் இருக்கின்றதென்க.

[2] குடம் அழிவுற்றவிடத்து, 'உள்ளது' என்பதை எடுத்துக்காட்ட அறிகுறி இல்லை. ஆகவே, 'உள்ளது' என்பது அங்கு விளங்கவில்லையேயன்றி, அந்த 'உள்ளது' என்பதனால் குறிக்கப்படும் உண்மைப்பொருள் இல்லையென்பதில்லை, இருக்கவேஇருக்கின்றது என்றபடி.—(ஆ.)

𑌏𑌕𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑌤𑍍𑌵𑌂 𑌘𑌟𑌾𑌦𑌿𑌵𑌿𑌶𑍇𑌷𑍍𑌯𑌾𑌭𑌾𑌵𑍇 𑌨 𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑌿𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍?—𑌨; '𑌇𑌦𑌮𑍁𑌦𑌕𑌮𑍍' 𑌇𑌤𑌿 𑌮𑌰𑍀𑌚𑍍𑌯𑌾𑌦𑍌 𑌅𑌨𑍍𑌯𑌤𑌰𑌾𑌭𑌾𑌵𑍇𑌽𑌪𑌿 𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍। 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌦𑍇𑌹𑌾𑌦𑍇𑌃 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌸𑍍𑌯 𑌚 𑌸𑌕𑌾𑌰𑌣𑌸𑍍𑌯 𑌅𑌸𑌤𑍋 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌭𑌾𑌵 𑌇𑌤𑌿। 𑌤𑌥𑌾 𑌸𑌤𑌃 𑌚 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌭𑌾𑌵𑌃 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌤𑌾 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇, 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌅𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿 𑌅𑌵𑍋𑌚𑌾𑌮॥

𑌏𑌵𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑍋𑌃 𑌸𑌦𑌸𑌤𑍋𑌃 𑌉𑌭𑌯𑍋𑌰𑌪𑌿 𑌦𑍃𑌷𑍍𑌟𑌃 𑌉𑌪𑌲𑌬𑍍𑌧𑌃 𑌅𑌨𑍍𑌤𑍋 𑌨𑌿𑌰𑍍𑌣𑌯𑌃, 𑌸𑌤𑍍 𑌸𑌦𑍇𑌵 𑌅𑌸𑌤𑍍 𑌅𑌸𑌦𑍇𑌵𑍇𑌤𑌿, 𑌤𑍁 𑌅𑌨𑌯𑍋𑌃 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌯𑍋𑌃 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌭𑌿𑌃। 𑌤𑌦𑌿𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌨𑌾𑌮; 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌚 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮; 𑌤𑌸𑍍𑌯 𑌨𑌾𑌮 𑌤𑌦𑌿𑌤𑌿। 𑌤𑌦𑍍𑌭𑌾𑌵𑌃 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌮𑍍। 𑌤𑌤𑍍 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂 𑌶𑍀𑌲𑌂 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃, 𑌤𑍈𑌃 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌭𑌿𑌃। 𑌤𑍍𑌵𑌮𑌪𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌾𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌶𑍋𑌕𑌂 𑌮𑍋𑌹𑌂 𑌚 𑌹𑌿𑌤𑍍𑌵𑌾 𑌶𑍀𑌤𑍋𑌷𑍍𑌣𑌾𑌦𑍀𑌨𑌿 𑌨𑌿𑌯𑌤𑌾𑌨𑌿𑌯𑌤𑌰𑍂𑌪𑌾𑌣𑌿 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌾𑌨𑌿

---

(ஆக்ஷேபம்):—(இனி,) குடம்முதலிய விசேஷ்யம் பொய்ம்மையானவளவிலே, (விசேஷணம்விசேஷ்யம் இரண்டும்) ஒரேஇடத்துநிற்ற லென்பது கூடாதெனின்[1]—

(ஸமாதாநம்):—அப்படியன்று; (விசேஷணம்விசேஷ்யம்என்ற) இரண்டனுள் ஒன்று பொய்ம்மையானவளவினும், கானல்முதலானவற்றிலே 'இது ஜலம்'[2] என, (இவை இரண்டும்) ஒரேஇடத்துநிற்றலைக் காண்கிறபடியா லென்க. ஆகவே, தேகம் முதலியனவும், (குளிர்வெப்பம்முதலான)த்வந்தமும், (அவற்றின்)காரணமுமாகிய பொய்ப்பொருளுக்கு இருப்பில்லை யென்பதாம். அவ்வாறே ஆத்மாவாகிய மெய்ப் பொருளுக்கு இருப்பின்மை இல்லை; எவ்விடத்தும் பிறழாமையால் எனக் (காரணம் கீழே) கூறியுள்ளோம்.

இவ்வாறு, மெய்ப்பொருள்பொய்ப்பொருள்களாகிய கீழ்க்கூறிய இந்தஆத்மா அநாத்மாக்கள்இரண்டின்விஷயமாகவும், "மெய்ப்பொருள்(எப்பொழுதும்) உள்ளது தான், பொய்ப்பொருள் (எப்பொழுதும்) இல்லாததுதான்" என்னும் முடிவான நிர்ணயத்தைத் தத்துவதர்சிகள் கண்டறிந்தேயுள்ளார். தத்என்பது, ஸகலத்திற்கும் பெயர். ஸகலமும் ப்ரஹ்மம்; (எனவே,)அதன்பெயர்'தத்'என்பதாம்.அதனதுதன்மை தத்துவம்; (அதாவது-) ப்ரஹ்மம் உள்ளபடியிருக்குந் தன்மை. அதனைக்காணும் இயல்பினரே தத்துவதர்சிகள். நீயும் தத்துவதர்சிகளின் நோக்கை[கொள்கையை]ப் பின்பற்றி,சோகத்தையும் மோகத்தையும் விட்டு,ஒரேதன்மையுள்ளனவும் [ஸுகம்துக்கம் முதலியவும்] ஒரே தன்மையில்லாத குளிர்வெப்பமும் முதலிய த்வந்தங்களை, "விகார

---

[1]"எங்கும், விசேஷணவிசேஷ்யங்க ளிரண்டும் மெய்ப்பொருளாகவே இருக்கக்காண்கிறோம். ஆகவே, 'உள்ளது' என்பதுபோல, குடமும் மெய்ப்பொருளாகவே இருக்கவேண்டும் என்பது ஆக்ஷேபஞ்செய்கிறவனுடைய கருத்து.—(ஆ.)

[2]கானலைப் பார்த்து 'இது ஜலம்' என்றவிடத்து ஜலம் பொய்ம்மையாயினும், இது என்று சுட்டுதற்குக் காரணமாய் ஒன்று இருப்பதை உணர்க; அவ்வாறே, 'உள்ளது குடம்' என்னுமிடத்தில் குடம் என்பது பொய்ப்பொருளாயினும், உள்ளது என்று வழங்குமாறு அங்கு ஒருபொருள் [ப்ரஹ்மம்] இருக்கின்றதென்க.

'विकारोऽयं असन्नेव मरीचिजलवत् मिथ्यावभासते' इति मनसि निश्चित्य तितिक्षस्व इति अभिप्रायः॥ ௧௬॥

किं पुनः तत् यत् सदेव सर्वदा इति? उच्यते—

௧௭. अविनाशि तु तद्विद्धि येन सर्वमिदं ततम्।
विनाशमव्ययस्यास्य न कश्चित्कर्तुमर्हति॥

अविनाशि न विनष्टुं शीलं यस्येति। तुशब्दोऽसतो विशेषणार्थः। तत् विद्धि विजानीहि। किम्? येन सर्वमिदं जगत् ततं व्याप्तं सदाख्येन ब्रह्मणा साकाशम्, आकाशेनेव घटादयः। विनाशम् अदर्शनम् अभावम्। अव्ययस्य न व्येति उपचयापचयौ न याति इति अव्ययं तस्य अव्ययस्य। न एतत् सदाख्यं ब्रह्म स्वेन रूपेण व्येति व्यभिचरति, निरवयवत्वात्, देहादिवत्। नापि आत्मीयेन, आत्मीयाभावात्। यथा देवदत्तो धनहान्या व्येति, न तु एवं ब्रह्म व्येति। अतः अव्ययस्य अस्य ब्रह्मणः विनाशं न कश्चित् कर्तुमर्हति, न कश्चित् आत्मानं विनाशयितुं शक्नोति ईश्वरोऽपि। आत्मा हि ब्रह्म; स्वात्मनि च क्रियाविरोधात्॥ ௧௭॥

---

மாயுள்ள இது, பொய்ப்பொருளாகவேயிருந்து, கானல்ஜலம்போலப் பொய்யாகத் தோற்றுகின்றது" என உள்ளத்தில் நிச்சயித்து, (தீரத்தன்மையோடு சாந்தனாய்ப்) பொறுத்துக்கொள்ளவேண்டும் என்பது கருத்து. (௧௬)

ஆனால், எப்பொழுதும் மெய்ப்பொருளாகவேஇருப்பதென்பது யாது?—கூறுவோம்:

௧௭. இதெல்லாம் எதனால் வியாபிக்கப்பட்டுள்ளதோ, அதையே அழிவில்லாததாகத்தெரிந்துகொள். (தன்) நிலைதிரியாதஇதற்கு ஒருவராலும்அழிவுசெய்யஇயலாது.

அதை(யே) அழிவுபடுந்தன்மையில்லாததாகத் தெரிந்துகொள். (இங்கு 'அதையே' என்பதிலுள்ள) ஏகாரம் (பொய்ம்மையினின்றும் மெய்ம்மையைப் பிரித்து வேறுபடுத்திநிற்றலால்) பிரிநிலைப்பொருளுடையது.—எதனை?—குடம் முதலியன ஆகாசத்தினால் (வியாபிக்கப்பெறுமாறு) போல,ஆகாசமுள்பட இந்தஜகத்துமுழுவதும் எந்த 'ஸத்' என்னும்பெயருடைய ப்ரஹ்மத்தினாலே வியாபிக்கப்பட்டுள்ளதோ, (அதனை). அழிவெனினும்,மறைதலெனினும்,இன்மையெனினும் ஒக்கும். (ப்ரஹ்மம்)வளர்தலும் தேய்தலும் அடைகிறதில்லை; (ஆதலின் தன்)நிலை திரியாததாம். ஸத் என்னும் பெயருடைய இந்தப்ரஹ்மம் தன்நிலை மாறுகிறதில்லை; சரீராதிகள்போல அவயவங்களைப் பெற்றிராமையால். (மேலும்,) தன்னுடைய(து எதுவாயினுமாகுக; அதனாலான நஷ்டத்)தாலும், (ப்ரஹ்மம் நிலைமாறுவது)இல்லை; (அதற்குத்) தன்னுடையதென்பதேஇல்லையாதலின். உதாரணமாக,தேவதத்தன் (தன்னுடைய) பணநஷ்டத்தால் கெட்டுப்போகிறான்; ப்ரஹ்மமோ இவ்வாறு கெட்டுப்போவதில்லை. ஆகவே, (தன்) நிலைமாறாத இந்தப்ரஹ்மத்திற்கு ஒருவராலும் அழிவுசெய்ய முடியாது. ஆத்மாவை அழிக்க ஒருவராலும்—ஈச்வரனாலுங்கூட—முடியாது; ஏனெனில், ஆத்மா ப்ரஹ்மம்: தன்ஆத்மாவினிடத்தே தொழில் கூடாமையாலென்க. (௧௭)

𑌕𑌿𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌤𑌤𑍍 𑌅𑌸𑌤𑍍 𑌯𑌤𑍍 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌸𑌤𑍍𑌤𑌾𑌂 𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌰𑌤𑌿 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௧௮. 𑌅𑌨𑍍𑌤𑌵𑌨𑍍𑌤 𑌇𑌮𑍇 𑌦𑍇𑌹𑌾 𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑍍𑌯𑍋𑌕𑍍𑌤𑌾𑌃 𑌶𑌰𑍀𑌰𑌿𑌣𑌃 ।
𑌅𑌨𑌾𑌶𑌿𑌨𑍋𑌽𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌸𑍍𑌯 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵 𑌭𑌾𑌰𑌤 ॥

𑌅𑌨𑍍𑌤𑌃 𑌵𑌿𑌨𑌾𑌶𑌃 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌅𑌨𑍍𑌤𑌵𑌨𑍍𑌤𑌃 । 𑌯𑌥𑌾 𑌮𑍃𑌗𑌤𑍃𑌷𑍍𑌣𑌿𑌕𑌾𑌦𑍌 𑌸𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌅𑌨𑍁𑌵𑍃𑌤𑍍𑌤𑌾 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑌾𑌨𑍍𑌤𑍇 𑌵𑌿𑌚𑍍𑌛𑌿𑌦𑍍𑌯𑌤𑍇, 𑌸 𑌤𑌸𑍍𑌯 𑌅𑌨𑍍𑌤𑌃 ; 𑌤𑌥𑌾 𑌇𑌮𑍇 𑌦𑍇𑌹𑌾𑌃 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌮𑌾𑌯𑌾𑌦𑍇𑌹𑌾𑌦𑌿𑌵𑌚𑍍𑌚 𑌅𑌨𑍍𑌤𑌵𑌨𑍍𑌤𑌃 𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑍍𑌯 𑌶𑌰𑍀𑌰𑌿𑌣𑌃 𑌶𑌰𑍀𑌰𑌵𑌤𑌃 𑌅𑌨𑌾𑌶𑌿𑌨𑌃 𑌅𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌸𑍍𑌯 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌨𑍍𑌤𑌵𑌨𑍍𑌤 𑌇𑌤𑌿 𑌉𑌕𑍍𑌤𑌾𑌃 𑌵𑌿𑌵𑍇𑌕𑌿𑌭𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥

'𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑍍𑌯' '𑌅𑌨𑌾𑌶𑌿𑌨𑌃' 𑌇𑌤𑌿 𑌨 𑌪𑍁𑌨𑌰𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 ; 𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌸𑍍𑌯 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌲𑍋𑌕𑍇, 𑌨𑌾𑌶𑌸𑍍𑌯 𑌚 । 𑌯𑌥𑌾 𑌦𑍇𑌹𑍋 𑌭𑌸𑍍𑌮𑍀𑌭𑍂𑌤𑌃 𑌅𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌗𑌤𑍋 𑌨𑌷𑍍𑌟 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ; 𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑍋𑌽𑌪𑌿 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 𑌪𑌰𑌿𑌣𑌤𑍋 𑌵𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌾𑌦𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌜𑌾𑌤𑍋 𑌨𑌷𑍍𑌟 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌤𑌤𑍍𑌰 '𑌅𑌨𑌾𑌶𑌿𑌨𑌃' '𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑍍𑌯' 𑌇𑌤𑌿 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑍇𑌨𑌾𑌪𑌿 𑌨𑌾𑌶𑍇𑌨 𑌅𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌃 𑌅𑌸𑍍𑌯𑍇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌦𑌿𑌵𑌦𑌪𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 ; 𑌤𑌤𑍍 𑌮𑌾 𑌭𑍂𑌦𑌿𑌤𑌿 '𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑍍𑌯' '𑌅𑌨𑌾𑌶𑌿𑌨𑌃' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌹 ॥

---

ஆனல், தானிருக்கும் நிலையைப் பிறழுந்தன்மையுள்ள பொய்ப்பொருள் என்பது யாது?—கூறுவோம்:

*௧௮. நித்யமாய், கேடில்லதாய், அறிதற்குஅரியதான தேகியின் இச்சரீரங்கள், முடிவுள்ளவையாகக் கூறப்பட்டிருக்கின்றன; ஆதலின், போர்செய்யக்கடவாய், பாரத!*

எவைகட்கு அழிவு உண்டோ, அவை முடிவுள்ளவை; கானல் முதலானவைகளில் (ஜலம் முதலியன) இருக்கின்றன என்னும் புத்தியானது, (இடையறுது) தொடர்ச்சியாக வியாபித்திருந்து(ம்), பிரமாணஆராய்ச்சியின் முடிவிலே விட்டுப்போகின்றது: அது அதற்கு [அதாவது-அந்தப் புத்தி விட்டுப்போதல் கானல்ஜலம்முதலியவற்றிற்கு] முடிவு; அப்படியே, நித்யமாய் சரீரியாய் கேடில்லதாய் அறிதற்குஅரியதான ஆத்மாவின் இச்சரீரங்கள், ஸ்வப்நத்திலும் இந்திரஜாலத்திலும் (காணப்பட்ட) சரீராதிகள்போல முடிவுள்ளவை என்று விவேகிகளாற் கூறப்பட்டிருக்கின்றன. [கானலில் ஜலமிருக்கிற தென்னும் புத்தியானது, ஆராய்ச்சியினல் விட்டுப்போகும்போது, கானல்ஜலமும் பொய்ப்பொருளாவதுபோல, சரீரமிருக்கின்றது என்னும் புத்தி ஆராய்ச்சியினல் விட்டுப்போக, சரீரமும் பொய்ப்பொருளா மென ஆராய்ந்தறிக.]

'நித்யமாய்', 'கேடில்லதாய்' என்றது, கூறியதுகூற லன்று; நித்யமாயிருத்தலும் கேடும் உலகத்தில் இருவகையாயிருத்தலின். உதாரணமாக, சாம்பலாய்ப் போய் மறைதலை அடைந்த சரீர(மு)ம், கேடுற்றதாகச் சொல்லப்படுகின்றது; பிணி முதலானவற்ருேடுகூடி வேறுவகையாக மாறிப்போய் (உயிரோடு)உள்ளதான சரீரமும் கேடுற்றதாகச் சொல்லப்படுகின்றது. ஆகவே 'கேடில்லதாய்', 'நித்யமாய்' என, இருவகைத்தான கேட்டிலும் இதற்கு ஸம்பந்தமில்லை யென்க. இப்படி ('நித்யமாய்' 'கேடில்லதாய்' என்று) கூருவிட்டால், பூமி முதலானவைபோல ஆத்மா நித்யமென்றும் தோன்றும்; அது [அவ்வாறு தோன்றுதல்] கூடாதென்று 'நித்யமாய்', 'கேடில்லதாய்' எனக் கூறலாயினர்.

𑌅𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌸𑍍𑌯 𑌨 𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾𑌦𑌿𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑍈𑌃 𑌅𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥

𑌨𑌨𑍁 𑌆𑌗𑌮𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑌿𑌦𑍍𑌯𑌤𑍇, 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾𑌦𑌿𑌨𑌾 𑌚 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍍 । 𑌨; 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌸𑍍𑌵𑌤𑌃𑌸𑌿𑌦𑍍𑌧𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌸𑌿𑌦𑍍𑌧𑍇 𑌹𑌿 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌪𑍍𑌰𑌮𑌾𑌤𑌰𑌿 𑌪𑍍𑌰𑌮𑌿𑌤𑍍𑌸𑍋𑌃 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌾𑌨𑍍𑌵𑍇𑌷𑌣𑌾 𑌭𑌵𑌤𑌿 । 𑌨 𑌹𑌿 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍍 '𑌇𑌤𑍍𑌥𑌮𑌹𑌮𑍍' 𑌇𑌤𑌿 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌪𑍍𑌰𑌮𑌾𑌯 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑌾𑌯 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 । 𑌨 𑌹𑌿 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌨𑌾𑌮 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 𑌅𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌤𑍁 𑌅𑌨𑍍𑌤𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌮𑍍 𑌅𑌤𑌦𑍍𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑌣𑌮𑌾𑌤𑍍𑌰𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌕𑌤𑍍𑌵𑍇𑌨 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌤𑍍𑌵𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇, 𑌨 𑌤𑍁 𑌅𑌜𑍍𑌞𑌾𑌤𑌾𑌰𑍍𑌥𑌜𑍍𑌞𑌾𑌪𑌕𑌤𑍍𑌵𑍇𑌨 । 𑌤𑌥𑌾 𑌚 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌃—"𑌯𑌤𑍍 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌦𑌪𑌰𑍋𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌯 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌰𑌃" 𑌇𑌤𑌿 ॥

𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌏𑌵𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌶𑍍𑌚 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵, 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍 𑌉𑌪𑌰𑌮𑌂 𑌮𑌾 𑌕𑌾𑌰𑍍𑌷𑍀𑌃 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥

𑌨 𑌹𑌿 𑌅𑌤𑍍𑌰 𑌯𑍁𑌦𑍍𑌧𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑌾 𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇, 𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤 𑌏𑌵 𑌹𑌿 𑌅𑌸𑍌 𑌶𑍋𑌕𑌮𑍋𑌹𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌦𑍍𑌧𑌃 𑌤𑍂𑌷𑍍𑌣𑍀𑌮𑍍 𑌆𑌸𑍍𑌤𑍇 । 𑌅𑌤𑌃 𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌨𑍍𑌧𑌾𑌪-

---

அறிதற்கு அரியதான = பிரத்தியக்ஷம் முதலியபிரமாணங்களால் நிச்சயிக்க முடியாததான.

(ஆக்ஷேபம்) :—ஏன்! ஆத்மா சாஸ்திரத்தினாலும்,(அந்தசாஸ்திரத்திற்கு)முந்தி ப்ரத்தியக்ஷம்முதலான பிரமாணங்களினாலும் நிச்சயிக்கப்படுகின்றதன்றோ(எனில்)—

(ஸமாதாநம்) :—அப்படியன்று ; ஆத்மா ஸ்வதஸ்ஸித்தமாயிருத்தலின். அறிபவனான ஆத்மா நிச்சயமானவிடத்தன்றோ, (பொருள்களை)அறியப்புகுந்தவன் (அறிதற்குக் கருவியான)பிரமாணங்களைத் தேடுதல் கூடும். (ஒருவன்)முதலில் ஆத்மாவை 'நான் இன்னான்' என்று நிச்சயிக்காமல், பின்பு ப்ரமேயங்களை [அறியப்படும்பொருள்களை] நிச்சயித்தற்பொருட்டுத் தலைப்படுவதில்லை யன்றோ. ஆத்மாவென்பதோ ஒருவர்க்கும் தெரியாததன்று. ஆனால், முடிவானபிரமாணமாகிய சுருதியானது அதன்தன்மையல்லாததை, [அதாவது - ஆத்மா கர்த்தா என்பது முதலானவற்றை] (அதனிடத்து) ஏற்றுதலைமாத்திரம் நீக்குவதாயிருப்பதனாலே,ஆத்மாவுக்குப் பிரமாணமாகின்றதே யன்றி, (முற்றிலும்)தெரியாதபொருளை(ப் புதிதாக)த் தெரிவிப்பதனாலன்று. அவ்வண்ணமே, "எது தெரிந்ததும் தெரியாததுமான ப்ரஹ்மமோ,எது ஆத்மாவோ,எங்குமுளதோ" (பி-உ-ச-க) என்று சுருதி(கூறுகின்றது).

ஆத்மா இவ்வாறு நித்யமாய், நிர்விகாரியுமாயிருத்தலால், நீ போர்செய்யக் கடவாய் : போரினின்றும் ஒழிதலைச் செய்யாதே [போர்செய்யாது நிற்கவேண்டாம்] என்று பொருள்.

இங்கு, யுத்தஞ்செய்யவேண்டுமென்று விதிக்கப்படவில்லை. இவன் [அர்ஜுனன்] (முந்தியே தானாகப்) போர்புரியப் புகுந்தவனே, (பின்பு) சோகமோஹங்களால் தடுக்கப்பட்டுப் பேசாமல் உட்கார்ந்திருக்கின்றான். ஆதலால்,அவனுடைய (யுத்தத்தி

𑌨𑌯𑌨𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇। 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 '𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵' 𑌇𑌤𑌿 𑌅𑌨𑍁𑌵𑌾𑌦𑌮𑌾𑌤𑍍𑌰𑌂, 𑌨 𑌵𑌿𑌧𑌿𑌃 ॥ ௧௮ ॥

𑌶𑍋𑌕𑌮𑍋𑌹𑌾𑌦𑌿𑌸𑌂𑌸𑌾𑌰𑌕𑌾𑌰𑌣𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌗𑍀𑌤𑌾𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂, 𑌨 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌕𑌮𑍍, 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌸𑍍𑌯 𑌅𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌭𑍂𑌤𑍇 𑌋𑌚𑍌 𑌆𑌨𑌿𑌨𑌾𑌯 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 ॥

𑌯𑌤𑍍𑌤𑍁 𑌮𑌨𑍍𑌯𑌸𑍇 '𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌭𑍀𑌷𑍍𑌮𑌾𑌦𑌯𑍋 𑌮𑌯𑌾 𑌹𑌨𑍍𑌯𑌨𑍍𑌤𑍇, 𑌅𑌹𑌮𑍇𑌵 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌹𑌨𑍍𑌤𑌾' 𑌇𑌤𑌿, 𑌏𑌷𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌮𑍃𑌷𑍈𑌵 𑌤𑍇। 𑌕𑌥𑌮𑍍?—

௧௯. 𑌯 𑌏𑌨𑌂 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌹𑌨𑍍𑌤𑌾𑌰𑌂 𑌯𑌶𑍍𑌚𑍈𑌨𑌂 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 𑌹𑌤𑌮𑍍।
𑌉𑌭𑍌 𑌤𑍌 𑌨 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌤𑍋 𑌨𑌾𑌯𑌂 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌨 𑌹𑌨𑍍𑌯𑌤𑍇 ॥

𑌯 𑌏𑌨𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌂 𑌦𑍇𑌹𑌿𑌨𑌂 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌵𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌹𑌨𑍍𑌤𑌾𑌰𑌂 𑌹𑌨𑌨𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌯𑌾𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌂, 𑌯𑌶𑍍𑌚 𑌏𑌨𑌂 𑌅𑌨𑍍𑌯𑍋 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 𑌹𑌤𑌂 𑌦𑍇𑌹𑌹𑌨𑌨𑍇𑌨 '𑌹𑌤𑌃 𑌅𑌹𑌮𑍍' 𑌇𑌤𑌿 𑌹𑌨𑌨𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌯𑌾𑌃 𑌕𑌰𑍍𑌮𑌭𑍂𑌤𑌂, 𑌤𑍌 𑌉𑌭𑍌 𑌨 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌤𑌃 𑌨 𑌜𑍍𑌞𑌾𑌤𑌵𑌨𑍍𑌤𑍌 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍍। '𑌹𑌨𑍍𑌤𑌾 𑌅𑌹𑌮𑍍' '𑌹𑌤𑌃 𑌅𑌸𑍍𑌮𑌿 𑌅𑌹𑌮𑍍' 𑌇𑌤𑌿 𑌦𑍇𑌹𑌹𑌨𑌨𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍍 𑌅𑌹𑌂𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌵𑌿𑌷𑌯𑌂 𑌯𑍌 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌤𑌃 𑌤𑍌 𑌆𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌨𑌭𑌿𑌜𑍍𑌞𑍌 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃। 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌨 𑌅𑌯𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌨 𑌹𑌨𑌨𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌯𑌾𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌭𑌵𑌤𑌿, 𑌨 𑌚 𑌹𑌨𑍍𑌯𑌤𑍇 𑌨 𑌚 𑌕𑌰𑍍𑌮 𑌭𑌵𑌤𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃, 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 ॥ ௧௯ ॥

---

ற்குத்) தடை (செய்துநிற்கின்ற சோகமோஹங்)களை நீக்குதல்மாத்திரம் பகவானால் செய்யப்படுகின்றது. ஆகவே, "போர்செய்யக்கடவாய்" என்பது அநுவாதமாத்திரமேயன்றி, விதி(த்தற்பொருளுடையது) ஆகாது. [அநுவாதம் - முன்னமே அமைந்துள்ள ஒன்றை யாதாயினும் ஓர்நிமித்தத்தால் பின்னும் கூறுதல்.] (௧௮)

ஆத்மா அகர்த்தா.

"கீதாசாஸ்திரமானது சோகமோகம் முதலான ஸம்ஸாரகாரணங்களைப் போக்குதற்குப் பயன்படுவதல்லது, (அவற்றுள்) புகும்படி செய்வதன்று" என்ற இவ்விஷயத்திற்கு ஸாக்ஷிகளாயுள்ள இரண்டு ருக்குக்களைப் பகவான் (கடோபநிஷத்தினின்றும்) எடுத்தாளலானார்.

"யுத்தத்திலே பீஷ்மாதியர்கள் என்னால் கொல்லப்படுகிறார்கள்; நானே அவர்களைக் கொல்பவன்" என்று நீ நினைக்கிற இந்தப் புத்தி தவறே.—எப்படி?—

௧௯. எவன் இதனைக் கொல்வதாக அறிகிறானோ, எவன் இதனைக் கொல்லப்படுவதாக அறிகிறானோ; அவ்விருவரும் சரியாக அறிபவராகார். (ஏனெனில்,) இது கொல்வது(ம்) இல்லை, கொல்லப்படுவது(ம்) இல்லை.

எவன் இப்பொழுதுபேசிவருகின்ற இத்தேகியை, கொலைத்தொழிலைச் செய்வதாக அறிகின்றானோ; வேறுஎவன் இதனை, சரீரம் கொல்லப்படுதலால் 'நான் கொல்லப்பட்டவன்' எனக் கொலைத்தொழிலுக்குச் செயப்படுபொருளாகக் கருதுகின்றானோ,— அவ்விருவரும், அவிவேகத்தால் ஆத்மாவை உணராதவர். உடலைக் கொல்லுதலால் 'நான் கொல்பவன், நான் கொல்லப்படுகிறவன் என்று (நினைத்து), ஆத்மாவை 'நான்' என்னும் எண்ணத்திற்கு எட்டுவதாக அறிகிற அவர்கள், ஆத்மா இன்னதென்பதை ஆராய்ந்தறியாதவர்களென்க. ஏனெனில், இந்த ஆத்மா அவிகாரியாதலின் கொலைத்தொழிலுக்குக் கர்த்தாவுமாகாது, செயப்படுபொருளுமாகாது என்றபடி. (௧௯)

கத²ம் அவிக்ரிய: இதி? த்³விதீயோ மந்த்ர:—

உ௦. ந ஜாயதே ம்ரியதே வா கதா³சிந்
நாயம் பூ⁴த்வாऽப⁴விதா வா ந பூ⁴ய: ।
அஜோ நித்ய: ஶாஶ்வதோऽயம் புராணோ
ந ஹந்யதே ஹந்யமாநே ஶரீரே ॥

ந ஜாயதே ந உத்பத்³யதே, ஜநிலக்ஷணா வஸ்துவிக்ரியா ந ஆத்மநோ வித்³யதே இத்யர்த²: । ததா² ந ம்ரியதே வா । வாஶப்³த³: சார்தே² । ந ம்ரியதே இதி அந்த்யா விநாஶலக்ஷணா விக்ரியா ப்ரதிஷித்⁴யதே । கதா³சிச்ச²ப்³த³: ஸர்வவிக்ரியாப்ரதிஷேதை⁴: ஸம்ப³த்⁴யதே— ந கதா³சிஜ் ஜாயதே, ந கதா³சிந் ம்ரியதே இத்யேவம் । யஸ்மாத் அயம் ஆத்மா பூ⁴த்வா ப⁴வநக்ரியாம் அநுபூ⁴ய பஶ்சாத் அப⁴விதா அபா⁴வம் க³ந்தா ந பூ⁴ய: புந:, தஸ்மாத் ந ம்ரியதே । யோ ஹி பூ⁴த்வா ந ப⁴விதா ஸ ம்ரியதே இதி உச்யதே லோகே । வாஶப்³தா³த் நஶப்³தா³ச்ச அயம் ஆத்மா அபூ⁴த்வா வா ப⁴விதா தே³ஹவத் ந பூ⁴ய: । தஸ்மாத் ந ஜாயதே । யோ ஹி அபூ⁴த்வா ப⁴விதா ஸ ஜாயதே இதி உச்யதே । நைவம் ஆத்மா । அதோ ந ஜாயதே । யஸ்மாத் ஏவம், தஸ்மாத் அஜ: । யஸ்மாத் ந ம்ரியதே

---

**ஆத்மா நிர்விகாரி.**

ஆத்மா நிர்விகாரியென்பது எப்படி?—இரண்டாம் மந்திரம் (விடை கூறுகின்றது):

உ௦. இது பிறப்பதில்லை: ஒருகாலத்து இறப்பதும் இல்லை: (ஒருகாலத்து) இருந்து மறுபடி இல்லாமற்போவதும் இல்லை: (ஒருகாலத்து இல்லாதிருந்து) மறுபடி இருப்பதும் இல்லை. பிறவாததாய், நித்யமாய், சாச்வதமாய் புராணமாயுள்ள இது, சரீரம் கொல்லுண்ணும்பொழுது (தான்) கொல்லப்படுவதில்லை.

இது உண்டாகிறதில்லை: பொருள்களுக்கு உள்ள உற்பத்தியென்னும் விகாரம் ஆத்மாவுக்கு இல்லையென்க. அவ்வண்ணமே, இது இறப்பதுமில்லை. 'இறப்பதும் இல்லை' எனக் கடைசியாயுள்ள அழிவென்னும் விகாரம், மறுக்கப்படுகின்றது. 'ஒருகாலத்து' என்றசொல்லை, ஒருகாலத்துப் பிறப்பது(ம்) இல்லை, ஒருகாலத்து இறப்பது(ம்) இல்லை என இவ்வாறு (ஆத்மாவுக்கு) ஸகலவிகாரங்களையும் மறுத்த ('இல்லை' என்னும் ஒரேசொல்)லோடு சேர்த்துக்கொள்க. இந்தஆத்மா(முதலில்)இருத்தலென்னும் வினையைப் பெற்று, பின்பு மீண்டும் இல்லாமற்போதலை அடைவதில்லை யாதலின், இறப்பதில்லை; எது(ஒருகாலத்தில்) இருந்து, பின்பு இல்லாமற் போகின்றதோ, அது இறக்கின்றது என்று உலகத்திற் சொல்லப்படுகின்றது. ('இறப்பதும் இல்லை' என்பதிலுள்ள) 'உம்' என்ற சொல்லினலும் 'இல்லை' என்ற சொல்லினலும், இந்தஆத்மா சரீரம்போல (முதலில்)இல்லாதிருந்து, பின்பு இருத்தலைப் பெறுவதும்[பிறப்பதும்] இல்லை(எனவும் கொள்க). ஆதலின், (ஆத்மா) பிறப்பதில்லை. எது (முதலில்) இல்லாதிருந்து, பின்பு உண்டாகின்றதோ, அது பிறக்கின்றது என்று சொல்லப்படுகின்றது. ஆத்மா இவ்வாறன்று; ஆதலின், பிறப்பதில்லை. (அது) இவ்வாறிருத்தலின், பிறவாததாம்;

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 𑌚 । 𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌆𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌯𑍋𑌃 𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌯𑍋𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑍇 𑌸𑌰𑍍𑌵𑌾 𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌾𑌃 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿, 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌮𑌧𑍍𑌯𑌭𑌾𑌵𑌿𑌨𑍀𑌨𑌾𑌂 𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌸𑍍𑌵𑌶𑌬𑍍𑌦𑍇𑌨𑍈𑌵 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑌃 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 𑌇𑌤𑌿 𑌅𑌨𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌮𑍍 𑌅𑌪𑌿 𑌗𑌮𑌨𑌾𑌦𑌿𑌸𑌕𑌲𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑍋 𑌯𑌥𑌾 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌇𑌤𑍍𑌯𑌾𑌹—𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌃 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 । 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤 𑌇𑌤𑌿 𑌅𑌪𑌕𑍍𑌷𑌯𑌲𑌕𑍍𑌷𑌣𑌾 𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌧𑍍𑌯𑌤𑍇 । 𑌶𑌶𑍍𑌵𑌦𑍍𑌭𑌵𑌃 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌃 । 𑌨 𑌅𑌪𑌕𑍍𑌷𑍀𑌯𑌤𑍇 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇𑌣, 𑌨𑌿𑌰𑌵𑌯𑌵𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌨𑌾𑌪𑌿 𑌗𑍁𑌣𑌕𑍍𑌷𑌯𑍇𑌣 𑌅𑌪𑌕𑍍𑌷𑌯𑌃 । 𑌅𑌪𑌕𑍍𑌷𑌯𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌾𑌽𑌪𑌿 𑌵𑍃𑌦𑍍𑌧𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌾 𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌧𑍍𑌯𑌤𑍇—𑌪𑍁𑌰𑌾𑌣𑌃 𑌇𑌤𑌿 । 𑌯𑍋 𑌹𑌿 𑌅𑌵𑌯𑌵𑌾𑌗𑌮𑍇𑌨 𑌉𑌪𑌚𑍀𑌯𑌤𑍇 𑌸 𑌵𑌰𑍍𑌧𑌤𑍇, 𑌅𑌭𑌿𑌨𑌵 𑌇𑌤𑌿 𑌚 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌯𑌂 𑌤𑍁 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌨𑌿𑌰𑌵𑌯𑌵𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌪𑍁𑌰𑌾𑌽𑌪𑌿 𑌨𑌵 𑌏𑌵𑍇𑌤𑌿 𑌪𑍁𑌰𑌾𑌣𑌃; 𑌨 𑌵𑌰𑍍𑌧𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌤𑌥𑌾—𑌨 𑌹𑌨𑍍𑌯𑌤𑍇 𑌨 𑌵𑌿𑌪𑌰𑌿𑌣𑌮𑍍𑌯𑌤𑍇 𑌹𑌨𑍍𑌯𑌮𑌾𑌨𑍇 𑌵𑌿𑌪𑌰𑌿𑌣𑌮𑍍𑌯𑌮𑌾𑌨𑍇𑌽𑌪𑌿 𑌶𑌰𑍀𑌰𑍇 । 𑌹𑌨𑍍𑌤𑌿𑌃 𑌅𑌤𑍍𑌰 𑌵𑌿𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌃 𑌅𑌪𑍁𑌨𑌰𑍁𑌕𑍍𑌤𑌤𑌾𑌯𑍈 । 𑌨 𑌵𑌿𑌪𑌰𑌿𑌣𑌮𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥

𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍇 𑌷𑌡𑍍 𑌭𑌾𑌵𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌃 𑌲𑍌𑌕𑌿𑌕𑌵𑌸𑍍𑌤𑍁𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌧𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌵𑌿𑌕𑌾𑌰𑌰𑌹𑌿𑌤𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌇𑌤𑌿 𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌃 । 𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑍇𑌵𑌂

---

இறப்பதில்லை யாதலின், நித்யமாயு மிருப்பதாம். முதலிலும் முடிவிலுமுள்ள விகாரங்களை மறுத்திடவே, ஸகலவிகாரங்களும் மறுக்கப்பட்டவையாகின்றன; என்றாலும், இடைநின்ற விகாரங்களை, அந்தந்தச்சொற்கள்கொண்டே [வெளிப்படையாக] மறுத்தல்வேண்டுமென (இங்குக்) கூறுதொழிந்த அசைதல்முதலிய ஸகலவிகாரங்களின் மறுத்தலும் (கூறப்பட்டதாகவே) ஆம்படி, "சாச்வதமாய்" என்பது முதலாகக் கூறுகிறார்: சாச்வதமாய் எனத் தேய்தலாகிய விகாரம் மறுக்கப்படுகின்றது. சாச்வதமாய் = எப்பொழுதும் உள்ளதாய்; (ஆத்மா) அவயவங்களைப் பெற்றிராமையால் தன்வடிவத்தில் தேய்வதில்லை; அன்றியும், குணக்குறைவால் குறைந்துபோவதும் இல்லை; நிர்க்குணமாதலால். புராணமாய் எனத் தேய்தலுக்கு மறுதலையாகிய வளர்தல்என்னும் விகாரம் மறுக்கப்படுகின்றது: அவயவங்கள் அதிகரித்தலால் எது மிகுகின்றதோ, அது வளர்கின்றது எனவும், புதியது எனவும் சொல்லப்படுகின்றது. இவ்வாத்மாவுக்கோ அவயவங்கள் இல்லையாதலின், (அது இப்பொழுதும். இனிமேலும் புதிதாக இருப்பதுபோல) முந்தியும் புதிதாகவே இருப்பதென்று புராணம் (எனப்படுகின்றது). (எப்பொழுதும் ஒரேநிலையையுடையதாதலின், அது) வளர்கின்றதில்லை யென்க. அவ்வாறே, சரீரம் கொலையுண்ணும்பொழுதும், (அதாவது - சரீரம் தன்) நிலைமாறும்பொழுதும் (ஆத்மா)கொல்லப்படுவதில்லை, (அதாவது - தன்) நிலைமாறுவதில்லை. கூறியதுகூறல்(என்னும் குற்றம்) வாராமைக்காக, கொல்லுதல் என்பதை - இங்கு நிலைமாறுதல் என்றபொருளில் நிற்பதாகக் கொள்க. (ஆத்மா) நிலைமாறுகின்றதில்லை என்றபடி.

இந்தமந்திரத்திலே, உலகத்துப்பொருள்களின் நிலைவேறுபாடாகிய(பிறத்தல், இருத்தல், வளர்தல், மாறுதல், தேய்தல், அழிதல் என்னும்) ஆறு பாவவிகாரங்களும். ஆத்மாவினிடத்து மறுக்கப்படுகின்றன. எவ்விதமான விகாரமும் ஆத்மாவுக்கு

𑌤𑌯𑍋𑌃 ‘𑌉𑌭𑍌 𑌤𑍌 𑌨 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌤𑌃’ 𑌇𑌤𑌿 𑌪𑍂𑌰𑍍𑌵𑍇𑌣 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌅𑌸𑍍𑌯 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌃 ॥ ௨௦ ॥

‘𑌯 𑌏𑌨𑌂 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌹𑌨𑍍𑌤𑌾𑌰𑌮𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌨𑍇𑌨 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌹𑌨𑌨𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌯𑌾𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌕𑌰𑍍𑌮 𑌚 𑌨 𑌭𑌵𑌤𑌿 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌯 ‘𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇’ 𑌇𑌤𑍍𑌯𑌨𑍇𑌨 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑌂 𑌹𑍇𑌤𑍁𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌾𑌰𑍍𑌥𑌮𑍁𑌪𑌸𑌂𑌹𑌰𑌤𑌿—

௨௧. 𑌵𑍇𑌦𑌾𑌵𑌿𑌨𑌾𑌶𑌿𑌨𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌯 𑌏𑌨𑌮𑌜𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ।
𑌕𑌥𑌂 𑌸 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌕𑌂 𑌘𑌾𑌤𑌯𑌤𑌿 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌕𑌮𑍍 ॥

𑌵𑍇𑌦 𑌵𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌅𑌵𑌿𑌨𑌾𑌶𑌿𑌨𑌮𑍍 𑌅𑌨𑍍𑌤𑍍𑌯𑌭𑌾𑌵𑌵𑌿𑌕𑌾𑌰𑌰𑌹𑌿𑌤𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑌿𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌰𑌹𑌿𑌤𑌂 𑌯𑍋 𑌵𑍇𑌦 𑌇𑌤𑌿 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌃 । 𑌏𑌨𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑍇𑌣 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌉𑌕𑍍𑌤𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑍍 𑌅𑌜𑌮𑍍 𑌅𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 𑌅𑌪𑌕𑍍𑌷𑌯𑌰𑌹𑌿𑌤𑌂 𑌕𑌥𑌂 𑌕𑍇𑌨 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍇𑌣 𑌸𑌃 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌅𑌧𑌿𑌕𑍃𑌤𑌃 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌹𑌨𑌨𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌂 𑌕𑌰𑍋𑌤𑌿? । 𑌕𑌥𑌂 𑌵𑌾 𑌘𑌾𑌤𑌯𑌤𑌿 𑌹𑌨𑍍𑌤𑌾𑌰𑌂 𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌯𑌤𑌿? । 𑌨 𑌕𑌥𑌂𑌚𑌿𑌤𑍍 𑌕𑌂𑌚𑌿𑌤𑍍 𑌹𑌨𑍍𑌤𑌿, 𑌨 𑌕𑌥𑌂𑌚𑌿𑌤𑍍 𑌕𑌂𑌚𑌿𑌤𑍍 𑌘𑌾𑌤𑌯𑌤𑌿 𑌇𑌤𑌿 𑌉𑌭𑌯𑌤𑍍𑌰 𑌆𑌕𑍍𑌷𑍇𑌪 𑌏𑌵 𑌅𑌰𑍍𑌥𑌃, 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌾𑌰𑍍𑌥𑌾𑌸𑌂𑌭𑌵𑌾𑌤𑍍 । 𑌹𑍇𑌤𑍍𑌵𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌚 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑌸𑍍𑌯 𑌤𑍁𑌲𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧 𑌏𑌵 𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑌾𑌰𑍍𑌥𑌃 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑍋 𑌭𑌗𑌵𑌤𑌾 । 𑌹𑌨𑍍𑌤𑍇𑌸𑍍𑌤𑍁 𑌆𑌕𑍍𑌷𑍇𑌪𑌃 𑌉𑌦𑌾𑌹𑌰𑌣𑌾𑌰𑍍𑌥𑌤𑍍𑌵𑍇𑌨 𑌕𑌥𑌿𑌤𑌃 ॥

---

இல்லையென்பது வாக்கியத்தின் பொருள். இப்படியிருப்பதனால், “அவ்விருவரும் சரியாக அறிபவராகார்” (௨-௧௯)என முந்தின மந்திரத்தோடு இதனைச் சேர்த்துக் கொள்க. (௨௦)

ஞானி, கர்மங்களைத் துறக்கவேண்டியதாயிருத்தல்.

“எவன் இதனைக் கொல்வதாக அறிகிறானோ” (௨-௧௯)என்ற இம்மந்திரத்தால் (ஆத்மா) கொலைத்தொழிலுக்குக் கர்த்தாவும் செயப்படுபொருளும் ஆவதில்லை எனப் பிரதிஜ்ஞைசெய்து, “இது பிறப்பதில்லை” (௨-௨௦) என்ற இதனால் அவிகாரியாயிருத்தலை ஏதுவாகக் கூறி, பிரதிஜ்ஞைசெய்த விஷயத்தை முடிக்கிறார்:

**௨௧. எவன் இதனை அழிவற்றதாய், நித்யமானதாய், பிறவாததாய், குறைபாடில்லாததாக அறிகிறானோ, அப்புருஷன், பார்த்த! எப்படி யாரைக் கொல்லும்படி செய்கிறான்? யாரைக் கொல்கிறான்?**

முந்தின மந்திரத்தால் லக்ஷணம்கூறப்பெற்ற இதனை [ஆத்மாவை], அழிவற்றதாய்=கடைசியாயுள்ள (அழிவென்னும்)பாவவிகாரமற்றதாய், நித்யமானதாய்=(தன்) நிலைதிரிதல் இல்லாததாய், பிறவாததாய் குறைபாடில்லாததாக = பிறத்தலும் தேய்தலும் இல்லாததாக எவன் அறிகிறானோ, அந்த அதிகாரிபுருஷனான ஞானி, எவ்விதத்தால் கொலைத்தொழிலைச் செய்கிறான்? எப்படித்தான் கொல்பவனை ஏவுகிறான்? ஒருவிதத்தாலும் ஒருவனையும் கொல்வதில்லை, ஒருவிதத்தாலும் ஒருவனையும் கொல்லும்படி செய்வதுமில்லை என இரண்டிடத்திலும் எதிர்மறையே பொருள்; வினைப்பொருள் பொருந்தா(து, மேலே விடையில்லா)மையால். (கொலைத்தொழிலை மறுத்தற்குக் கூறிய) காரணமானது[ஆத்மா நிர்விகாரியென்பது], (மற்றைய தொழில்களை மறுத்தற்கும்) ஒப்பாகிற்றலின், ஞானிக்கு ஸகலகர்மங்களையும் மறுத்தலே (இப்) பிரகரணத்தின் பொருளாகப் பகவானால் கருதப்பட்டுள்ளது; கொல்லுதலின் மறுப்போ, உதாரணத்திற்காகக் கூறப்பட்டதாம்.

𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌕𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌸𑌂𑌭𑌵𑌹𑍇𑌤𑍁𑌵𑌿𑌶𑍇𑌷𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑍍𑌯𑌾𑌕𑍍𑌷𑌿𑌪𑌤𑌿 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 '𑌕𑌥𑌂 𑌸 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃' 𑌇𑌤𑌿। 𑌨𑌨𑍁 𑌉𑌕𑍍𑌤𑌃 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌸𑌂𑌭𑌵𑌕𑌾𑌰𑌣𑌵𑌿𑌶𑍇𑌷𑌃 ॥

𑌸𑌤𑍍𑌯𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 । 𑌨 𑌤𑍁 𑌸𑌃 𑌕𑌾𑌰𑌣𑌵𑌿𑌶𑍇𑌷𑌃, 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌇𑌤𑌿 । 𑌨 𑌹𑌿 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌂 𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑌵𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌨 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍— 𑌨; 𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌆𑌤𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌨 𑌦𑍇𑌹𑌾𑌦𑌿𑌸𑌂𑌘𑌾𑌤𑌸𑍍𑌯 𑌵𑌿𑌦𑍍𑌵𑌤𑍍𑌤𑌾 । 𑌅𑌤𑌃 𑌪𑌾𑌰𑌿𑌶𑍇𑌷𑍍𑌯𑌾𑌤𑍍 𑌅𑌸𑌂𑌹𑌤𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 𑌇𑌤𑌿 𑌤𑌸𑍍𑌯 𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌸𑌂𑌭𑌵𑌾𑌤𑍍 𑌆𑌕𑍍𑌷𑍇𑌪𑍋 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 '𑌕𑌥𑌂 𑌸 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃' 𑌇𑌤𑌿 । 𑌯𑌥𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌹𑍃𑌤𑌸𑍍𑌯 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑍍𑌯𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯 𑌏𑌵 𑌸𑌨𑍍 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌵𑌿𑌵𑍇𑌕𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 𑌉𑌪𑌲𑌬𑍍𑌧𑌾 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌕𑌲𑍍𑌪𑍍𑌯𑌤𑍇, 𑌏𑌵𑌮𑍇𑌵 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌵𑍇𑌕𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌾 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 𑌅𑌸𑌤𑍍𑌯𑌰𑍂𑌪𑌯𑍈𑌵 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌃 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯 𑌏𑌵 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌸𑌂𑌭𑌵𑌵𑌚𑌨𑌾𑌤𑍍 𑌯𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌵𑌿𑌧𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑌾𑌨𑌿 𑌅𑌵𑌿𑌦𑍁𑌷𑍋 𑌵𑌿𑌹𑌿𑌤𑌾𑌨𑌿 𑌇𑌤𑌿 𑌭𑌗𑌵𑌤𑍋 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑍋𝌽𑌵𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 ॥

---

(ஆக்ஷேபம்) :—ஞானிக்குச் செய்தொழில்இல்லாமற்போவதற்கு, பகவான், எத்தகைய சிறப்புக்காரணத்தைக் கண்டு "அவன் எப்படிக் கொல்கிறான்?" எனச் செய்தொழில்களை மறுக்கிறார்?

(ஸமாதாநம்) :—ஏன் ! ஆத்மா அவிகாரியாயிருத்தல், செய்தொழில்களெல்லாம் இல்லாமற்போவதற்குச் சிறப்புக்காரணமாக (முன்னமே) கூறப்பட்டுள்ளதே.

(ஆக்ஷேபம்) :—கூறப்பட்டுள்ளது உண்மைதான். ஆனால், அது சிறப்புக் காரணமாகாது; அவிகாரியான ஆத்மாவைக்காட்டிலும் ஞானி வேறானவனாகலின் என்பது. ஒருதூணை, அசைதல்முதலிய விகாரமற்றதாக அறிந்தவனுக்குத் தொழில் உண்டாவதில்லையென்பது இல்லையே யெனின்,—

(ஸமாதாநம்) :—அப்படியன்று; ஞானியே ஆத்மாவாக இருத்தலின். ஞானியாயிருத்தலென்பது உடல்முதலியவற்றின் சேர்க்கைக்கு அன்று. ஆதலின், பரிசேஷாநுமாநத்தால்,[1] ஞானியானவன் (உடல்முதலியவற்றின்) சேர்க்கையல்லாத அவிகாரியான ஆத்மா என(அமையும்; அமைய)வே, அந்தஞானிக்குச் செய்தொழில்கள் நிகழ்வதில்லையாதலின் "அவன் எப்படிக் கொல்கிறான்?" என்னும் மறுப்பு ஏற்குமென்க. உதாரணமாக, (ஆத்மாவினின்றும்) புத்திவ்ருத்தியை வேறாகப் பகுத்தறியமாட்டாத அஜ்ஞானத்தால்—அவிகாரியாயேயிருக்கும் ஆத்மா, புத்திமுதலியவற்றாற் கவரப்பட்ட ஓசைமுதலிய பொருள்களை உணர்வதாகக் கற்பனைசெய்யப்படுகின்றது. இவ்வண்ணமே, ஆத்மாஅநாத்மாக்களைப் பகுத்தறிகிற புத்திவ்ருத்தியாகிய பொய்ம்மையேயான அஜ்ஞானத்தால்— உண்மையில் நிர்விகாரியேயான ஆத்மா, ஞானியாகக் கூறப்படுகின்றது. ஞானிக்குத் தொழில் ஏற்காதென்று உரைத்தலின், சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட கர்மங்களெல்லாம் அஜ்ஞானிக்கு விதிக்கப்பட்டவை [ஏற்பட்டவை] எனப் பகவானுடைய நிர்ணயமென்று தெரிகின்றது.

---

[1] ராமன் கிருஷ்ணன்என்றஇருவருள்'இவன் ராமனல்லன்'என்றால், 'இவன் கிருஷ்ணன்' என்பது பரிசேஷாநுமாநம். [பரிசேஷம் - ஒழிபு.]

𑌨𑌨𑍁 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌪𑌿 𑌅𑌵𑌿𑌦𑍁𑌷 𑌏𑌵 𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇, 𑌵𑌿𑌦𑌿𑌤𑌵𑌿𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑌿𑌷𑍍𑌟𑌪𑍇𑌷𑌣𑌵𑌤𑍍 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌧𑌾𑌨𑌾𑌨𑌰𑍍𑌥𑌕𑍍𑌯𑌾𑌤𑍍। 𑌤𑌤𑍍𑌰 𑌅𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌵𑌿𑌧𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 𑌨 𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑍋 𑌨𑍋𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍— 𑌨। 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌸𑍍𑌯 𑌭𑌾𑌵𑌾𑌭𑌾𑌵𑌵𑌿𑌶𑍇𑌷𑍋𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃। 𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌵𑌿𑌧𑍍𑌯𑌰𑍍𑌥𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌤𑌰𑌕𑌾𑌲𑌂 𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌕𑌰𑍍𑌮 𑌅𑌨𑍇𑌕𑌸𑌾𑌧𑌨𑍋𑌪𑌸𑌂𑌹𑌾𑌰𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌂 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌂 "𑌕𑌰𑍍𑌤𑌾 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾, 𑌮𑌮 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂" 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌤𑌃 𑌅𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌯𑌥𑌾 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌂 𑌭𑌵𑌤𑌿 𑌨 𑌤𑍁 𑌤𑌥𑌾 '𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌵𑌿𑌧𑍍𑌯𑌰𑍍𑌥𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌤𑌰𑌕𑌾𑌲𑌭𑌾𑌵𑌿 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌂 𑌭𑌵𑌤𑌿; 𑌕𑌿𑌂𑌤𑍁 "𑌨𑌾𑌹𑌂 𑌕𑌰𑍍𑌤𑌾, 𑌨𑌾𑌹𑌂 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑍈𑌕𑌤𑍍𑌵𑌾𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌵𑌿𑌷𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 𑌨 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 𑌉𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌏𑌷 𑌵𑌿𑌶𑍇𑌷 𑌉𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

𑌯𑌃 𑌪𑍁𑌨𑌃 "𑌕𑌰𑍍𑌤𑌾 𑌅𑌹𑌂" 𑌇𑌤𑌿 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂, 𑌤𑌸𑍍𑌯 "𑌮𑌮 𑌇𑌦𑌂 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂" 𑌇𑌤𑌿 𑌅𑌵𑌶𑍍𑌯𑌂𑌭𑌾𑌵𑌿𑌨𑍀 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍; 𑌤𑌦𑌪𑍇𑌕𑍍𑌷𑌯𑌾 𑌸𑌃 𑌅𑌧𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌤𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿। 𑌸 𑌚 𑌅𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍, '𑌉𑌭𑍌 𑌤𑍌 𑌨 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌤𑌃' 𑌇𑌤𑌿 𑌵𑌚-

---

### அஜ்ஞானிக்கே கர்மங்கள்.

(ஆக்ஷேபம்):—அப்படியானல், ஞானமும் அஜ்ஞானிக்கே விதிக்கப்படுகின்றது; முன்னமே ஞானம் கைகூடப்பெற்றவனுக்கு (மீண்டும்) ஞானத்தை விதித்தலென்பது அரைத்ததை அரைப்பதுபோலப் பயனில்லையாதலின். அப்படியிருக்க, "அஜ்ஞானிக்குக் கர்மங்கள் விதிக்கப்படுகின்றனவேயன்றி, ஞானிக்கு அல்ல" என்னும் வேறுபாடு கூடாதெனில்,—

(ஸமாதானம்):—அப்படியன்று; "(அக்நிஹோத்ராதிகர்மங்களை அஜ்ஞானி) செய்யவேண்டியது உண்டு, (ஞானி செய்யவேண்டியது)இல்லை" என்னும் வேறுபாடு கூடுமாதலின். அக்நிஹோத்ரம்முதலிய விதிகளின் அர்த்தத்தைத் தெரிந்துகொண்டபின், அனேகஸாதனங்களைச்சேர்த்துக்கொண்டு அநுஷ்டிக்கவேண்டியவையான அக்நிஹோத்ரம்முதலிய கர்மங்கள், "நானே கர்த்தா, (இது) எனது கடமை" என்னும் இத்தகைய அறிவுடைய அஜ்ஞானிக்கு எப்படிச் செய்யவேண்டியன ஆகின்றனவோ, அப்படி, "இது பிறப்பதில்லை" (உ-உ0) என்பதுமுதலாக ஆத்மா இன்னதென்று (உணர்த்துகின்ற)விதிகளின் பொருளைக் கண்டறிந்தபின், (ஞானிக்கு) ஒன்றும் செய்யவேண்டியதாவதில்லை: ஆனல், "நான் கர்த்தா அன்று, நான் போக்தா அன்று" என்பதுமுதலாக ஆத்மா ஏகமெனவும் அகர்த்தாவெனவும் ஆகிய இவைபோன்ற விஷயங்களின் நிச்சயஅறிவைக்காட்டிலும் வேறு(அறிவு) உண்டாவதில்லை என, இவ்வேறுபாடு கூடுமென்க.

மற்று, எவன் ஆத்மாவை "நான் கர்த்தா" என்று அறிகிறானே, அவனுக்கு "நான் இது செய்யவேண்டும்" என்னும் எண்ணம் அவசியம் உண்டாகும். அதற்கு ஏற்ப, அவன் (கர்மத்திற்கு)அதிகாரியாகிறான் என அவனைப்பற்றிக் கர்மங்கள் (விதிக்கப்படுகின்றனவாம்). அ(ப்படிப்பட்ட)வன் அஜ்ஞானியே; "அவ்விருவரும் சரியாக அறிபவராகார்" (உ-கக) என்னும் திருவாக்கினாலும், சிறப்பித்துக் கூறியுள்ள

𑌨𑌾𑌤𑍍, 𑌵𑌿𑌶𑍇𑌷𑌿𑌤𑌸𑍍𑌯 𑌚 𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌕𑍍𑌷𑍇𑌪𑌵𑌚𑌨𑌾𑌚𑍍𑌚 '𑌕𑌥𑌂 𑌸 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃' 𑌇𑌤𑌿। 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 𑌵𑌿𑌦𑍁𑌷𑍋 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍋𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸 𑌏𑌵 𑌅𑌧𑌿𑌕𑌾𑌰𑌃 । 𑌅𑌤 𑌏𑌵 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌾𑌨𑍍 𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌅𑌵𑌿𑌦𑍁𑌷𑌶𑍍𑌚 𑌕𑌰𑍍𑌮𑌿𑌣𑌃 𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌜𑍍𑌯 𑌦𑍍𑌵𑍇 𑌨𑌿𑌷𑍍𑌠𑍇 𑌗𑍍𑌰𑌾𑌹𑌯𑌤𑌿—'𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍍' 𑌇𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌚 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌯 𑌆𑌹 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌵𑍍𑌯𑌾𑌸𑌃— "𑌦𑍍𑌵𑌾𑌵𑌿𑌮𑌾𑌵𑌥 𑌪𑌨𑍍𑌥𑌾𑌨𑍌" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 । 𑌤𑌥𑌾𑌚 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌪𑌥𑌶𑍍𑌚𑍈𑌵 𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌶𑍍𑌚𑍇𑌤𑌿 । 𑌏𑌤𑌦𑍇𑌵 𑌵𑌿𑌭𑌾𑌗𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍁𑌨𑌃 𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 '𑌅𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌤𑍍 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌤𑍍𑌮𑌾 𑌕𑌰𑍍𑌤𑌾𑌹𑌮𑌿𑌤𑌿 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇', '𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌤𑍍 𑌤𑍁 𑌨 𑌅𑌹𑌂 𑌕𑌰𑍋𑌮𑌿' 𑌇𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌚 '𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍇' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 ॥

𑌤𑌤𑍍𑌰 𑌕𑍇𑌚𑌿𑌤𑍍 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌂𑌮𑌨𑍍𑌯𑌾 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿—"𑌜𑌨𑍍𑌮𑌾𑌦𑌿𑌷𑌡𑍍𑌭𑌾𑌵𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑌹𑌿𑌤𑌃 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 𑌅𑌕𑌰𑍍𑌤𑌾 𑌏𑌕𑍋𑌽𑌹𑌮𑌾𑌤𑍍𑌮𑌾" 𑌇𑌤𑌿 𑌨 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 𑌉𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇, 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌸𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌉𑌪𑌦𑌿𑌶𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 । 𑌤𑌨𑍍𑌨; '𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍋𑌪𑌦𑍇𑌶𑌾𑌨𑌰𑍍𑌥𑌕𑍍𑌯𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌾𑌤𑍍 । 𑌯𑌥𑌾 𑌚 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍋𑌪𑌦𑍇𑌶𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌾𑌤𑍍 𑌧𑌰𑍍𑌮𑌾-

---

ஞானிக்கு "அவன் எப்படிக் கொல்கிறான் ?" என்று கர்மத்தை மறுக்குந் திருவாக்கினாலுமென்க. ஆகவே, அவிகாரியான ஆத்மாவைக் காண்கின்ற ஞானிக்கும், முக்தி (பெற) விரும்புவோனுக்கும் ஸகலகர்மங்களையும் துறத்தலிலேதான் அதிகாரம். ஆதலால்தான், பகவான்நாராயணன் ஸாங்க்யர்களான ஞானிகளையும், கர்மிகளான அஜ்ஞானிகளையும் (தனித்தனியே) பிரித்து "ஞானயோகத்தால் ஸாங்க்யர்களுக்கும், கர்மயோகத்தால் யோகிகளுக்கும்" (௩-௩) என (முறையே) இரண்டுநிஷ்டைகளை உணர்த்துகிறார். அவ்வண்ணமே வ்யாஸபகவான் "இனி, இவ்வழிகள் இரண்டாயுள்ளன" (மோ - ௨௪ - ௬) என்பது முதலாக(த் தமது) புத்திரனுக்குக் கூறுகிறார். அப்படியே, "கர்மமார்க்கமே முந்தியது, துறவே பிந்தியது" என(வும் அதேஸந்தர்ப்பத்திற் கூறுவர்). பகவான், "அகங்காரத்தால் மனம்மயங்கி உண்மையுணராதிருப்பவன் 'நான் கர்த்தா' எனக் கொள்கிறான்," "உண்மையுணர்ந்தவனோ 'நான்(ஒன்றும்)செய்கிறேனில்லை'(எனக் கொள்கிறான்)" (௩-௨௭, ௨௮)என இதேவேறுபாட்டை அடிக்கடி எடுத்துக்காட்டுவர். அவ்வாறே, "ஸகலகர்மங்களையும் மனத்தால் துறந்து (ஸுகமாகத்) தங்கியிருக்கிறான்" (௫ - ௧௩) என்பதுமுதலியவற்றை (எடுத்துக்காட்டுவர்).

### நிர்விகாரியான ஆத்மாவின் ஞானம், உண்டாகக் கூடியது தான்.

(ஆக்ஷேபம்) :—இனி, தங்களைப் பண்டிதர்களாக எண்ணியுள்ள சிலர், "எத்தகைய ஞானமுண்டானால், ஸகலகர்மங்களையும் துறத்தலென்பது விதிக்கப்படுகின்றதோ, (அத்தகைய ஞானம், அதாவது-)"நான் - (உலகினுள்ள) பொருள்களுக்கு உரிய பிறப்பு முதலிய (ஆறு) விகாரங்களும் இல்லாமல் நிர்விகாரியாய், அகர்த்தாவாய், ஏகமாயிருக்கும் ஆத்மா" என்னும் ஞானம் ஒருவனுக்கும் உண்டாகாது" என்று கூறுகிறார்கள்.

(ஸமாதானம்) :—அது சரியன்று; "இது பிறப்பதில்லை" (௨ - ௨௦)என்பது முதலான சாஸ்திரத்தின் உபதேசம் வீணாய்விடுமாதலின். சாஸ்திர உபதேசத்தின்

𑌯𑌦𑍍𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌕𑌰𑍍𑌤𑍁𑌶𑍍𑌚 𑌦𑍇𑌹𑌾𑌨𑍍𑌤𑌰𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌿𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 𑌉𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇, 𑌤𑌥𑌾 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌤𑍍 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑌾𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍈𑌕𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌨 𑌉𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌾𑌃 𑌤𑍇 ॥

𑌕𑌰𑌣𑌾𑌗𑍋𑌚𑌰𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍—𑌨; ‘𑌮𑌨𑌸𑍈𑌵𑌾𑌨𑍁𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌮𑍍’ 𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌃 । 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑍋𑌪𑌦𑍇𑌶𑌶𑌮𑌦𑌮𑌾𑌦𑌿𑌸𑌂𑌸𑍍𑌕𑍃𑌤𑌂 𑌮𑌨𑌃 𑌆𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑍇 𑌕𑌰𑌣𑌮𑍍। 𑌤𑌥𑌾 𑌚 𑌤𑌦𑌧𑌿𑌗𑌮𑌾𑌯 𑌅𑌨𑍁𑌮𑌾𑌨𑍇 𑌆𑌗𑌮𑍇 𑌚 𑌸𑌤𑌿, 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌨 𑌉𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌸𑌾𑌹𑌸𑌮𑍍 𑌏𑌤𑌤𑍍 ॥

𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌚 𑌉𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌂 𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌮𑍍 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 𑌅𑌵𑌶𑍍𑌯𑌂 𑌬𑌾𑌧𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌅𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍। 𑌤𑌚𑍍𑌚 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌮𑍍 “𑌹𑌨𑍍𑌤𑌾 𑌅𑌹𑌂, 𑌹𑌤𑌃 𑌅𑌸𑍍𑌮𑌿” 𑌇𑌤𑌿 ‘𑌉𑌭𑍌 𑌤𑍌 𑌨 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌤𑌃’ 𑌇𑌤𑌿। 𑌅𑌤𑍍𑌰 𑌚 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌹𑌨𑌨𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌯𑌾𑌃 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮𑌤𑍍𑌵𑌂 𑌹𑍇𑌤𑍁𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑍃𑌤𑌂 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌮𑍍। 𑌤𑌚𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌸𑍁 𑌅𑌪𑌿

---

வல்லமையினால்— ‘தருமமென்பதும், அதர்மமென்பதும் உண்டு’ என்ற ஞானமும், (ஜ்யோதிஷ்டோமாதிகர்மங்களைச்) செய்கிறவனுக்கு (ஸ்வர்க்கலோகத்திலே ஸுகம் அநுபவிக்கத் தக்கவாறு உண்டாகும்) வேறொரு உடலைப்பற்றிய ஞானமும் எப்படி உண்டாகின்றனவோ, அப்படியே சாஸ்திரத்தால்— ‘அந்த ஆத்மாவே நிர்விகாரியாக, அகர்த்தாவாக, ஏகமாக, மற்றும் இவை போன்றதாக உள்ளது’ என்ற ஞான(மு)ம் ஏன் உண்டாகாதென்று அவர்களையே கேட்கவேண்டும்.

(பிரதிவாதியின் மறுமொழி) :— (ஆத்மா) புலன்களுக்கு எட்டாததாதலின் என்றால்,—

(ஸமாதாநம்) :— அப்படியன்று ; “(ஆத்மா) மனத்தினாலேயே காணத்தக்கது” (பி - ச - ச - கக) என்னும் சுருதியினா லென்க. சாஸ்திரஉபதேசத்தாலும், ஆசார்யஉபதேசத்தாலும், மனமும் இந்திரியங்களுமாகிய இவற்றின் அடக்கத்தாலும் மற்றும் இவைபோன்றவற்றாலும் பரிசுத்தமாய்த் தெளிந்த மனம், ஆத்மாவைக் காண்பதற்குக் கருவியானது. அவ்வாறாக, அதனை [ஆத்மாவை]த் தெரிந்துகொள்ளுதற்கு அநுமானமும்[1] சாஸ்திரமும் இருத்தலால், ஞானம் உண்டாகாதென்றல் ஆராய்ச்சியில்லாமையா மென்க.

ஞானியானவன் ஞானயோகத்தை நாடவேண்டும்.

ஞானம் - உண்டாகுமளவிலே, அதற்கு எதிராகிய அஞ்ஞானத்தைத் தவறாமல் போக்குமென்பதை (யாவரும்) ஒப்புக்கொள்ளவேண்டும். அந்த அஞ்ஞானமும், “நான்கொல்பவன், (நான்)கொல்லப்படுபவன்” என்(று நினைக்)கின்ற “அவ்விருவரும் சரியாக அறிபவராகார்” (உ - கக) என்று காட்டப்பட்டுள்ளது. இவ்விடத்திலோ, ஆத்மாவைக் கொலைத்தொழிலுக்கு (இயற்றுதற்)கர்த்தா வென்றலும், செயப்படு பொருளென்றலும், ஏவுதற்கர்த்தாவென்றலும் அஞ்ஞானத்தாலானவையாக உணர்த்தப்பட்டன. அது—(அப்படி. ஆத்மாவைக்) கர்த்தாவென்றலும், இன்னும் இத்

---

[1] இந்த அநுமானம் வருமாறு :— பிறப்பு, இறப்பு, கர்த்தாவாயிருத்தல் முதலியது ஆத்மாவைச்சேர்ந்தது அன்று ; விகார மாதலால். மற்றைய விகாரங்கள் போல.— (ஆ.)

𑌸𑌾𑌧𑌨𑌂 𑌕𑌰𑍍𑌤𑍍𑌰𑌾𑌦𑍇𑌃 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌕𑍃𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 । 𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌵𑌾𑌨𑍍 𑌹𑌿 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌕𑌰𑍍𑌮𑌭𑍂𑌤𑌸𑍍𑌯 𑌅𑌨𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌯𑌤𑌿 ‘𑌕𑍁𑌰𑍁’ 𑌇𑌤𑌿 । 𑌤𑌦𑍇𑌤𑌤𑍍 𑌅𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌣 𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌸𑌰𑍍𑌵𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌸𑍁 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌹𑍇𑌤𑍁𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑌤𑌿 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌃 𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌾𑌭𑌾𑌵𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌰𑍍𑌥𑌮𑍍 ‘𑌵𑍇𑌦𑌾𑌵𑌿𑌨𑌾𑌶𑌿𑌨𑌂··· 𑌕𑌥𑌂 𑌸 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 ॥

𑌕𑍍𑌵 𑌪𑍁𑌨𑌃 𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌅𑌧𑌿𑌕𑌾𑌰 𑌇𑌤𑌿 ? । 𑌏𑌤𑌤𑍍 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍇𑌵 ‘𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑍍’ 𑌇𑌤𑌿। 𑌤𑌥𑌾 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿 ‘𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌨𑌸𑌾’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 ॥

𑌨𑌨𑍁 ‘𑌮𑌨𑌸𑌾’ 𑌇𑌤𑌿 𑌵𑌚𑌨𑌾𑌤𑍍 𑌨 𑌵𑌾𑌚𑌿𑌕𑌾𑌨𑌾𑌂 𑌕𑌾𑌯𑌿𑌕𑌾𑌨𑌾𑌂 𑌚 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍— 𑌨; ‘𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿’ 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑌿𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 ॥

𑌮𑌾𑌨𑌸𑌾𑌨𑌾𑌮𑍇𑌵 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍— 𑌨; 𑌮𑌨𑍋𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌵𑌾𑌕𑍍𑌕𑌾𑌯𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑌾𑌣𑌾𑌂 𑌮𑌨𑍋𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑌾𑌭𑌾𑌵𑍇 𑌭𑌾𑌵𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 ॥

𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌯𑌾𑌣𑌾𑌂 𑌵𑌾𑌕𑍍𑌕𑌾𑌯𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌕𑌾𑌰𑌣𑌾𑌨𑌿 𑌮𑌾𑌨𑌸𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌵𑌰𑍍𑌜-

---

தன்மையது என்றதும் அஜ்ஞானத்தாலானவை யென்பது, எல்லாத்தொழில்கட்கும் ஸமானமாம்; ஆத்மா நிர்விகாரியாதலால். விகாரியான கர்த்தாவன்றோ தனக்குச் செயப்படுபொருளான வேறொன்றை ‘செய்’ என்று ஏவுவது. ஆதலால்(தான்), பகவான் வாஸுதேவன் ஞானிக்குக் கர்மங்களிலே அதிகாரமின்மையை உணர்த்தும் பொருட்டு, ஞானி எல்லாத்தொழில்களினும் வேறுபாடின்றி (இயற்றுதற்)கர்த்தாவாகவும் ஏவுதற்கர்த்தாவாகவும் ஆதலாகியஇதனை, “எவன்......அப்புருஷன் எப்படி” (உ - உக) என்பது முதலாக மறுக்கிறார்.

(வினா) :—ஆனால், ஞானிக்கு எதிலேதான் அதிகாரம் என்பது? [அவன் செய்யவேண்டியதுதான் என்ன?]—

(விடை) :— “ஞானயோகத்தால் ஸாங்க்யர்களுக்கு” (௩ - ௩) என்ற இது முன்னமே கூறப்பட்டுள்ளது. அவ்வாறே (பகவான்), “(அடக்கமுள்ள தேகியானவன்) மனத்தால் ஸகல கர்மங்களையும் (துறந்து ஒன்றுஞ் செய்யாதவனும், செய்விக்காதவனுமாய், ஒன்பது வாசல் பட்டணமான சரீரத்திலே ஸுகமாகத் தங்கியிருக்கிறான்)” (ரு - ௧௩) என்பதுமுதலாக ஸகலகர்மங்களையுந்துறத்தலைக் கூறுவர்.

(ஆக்ஷேபம்) :—அப்படியானால், ‘மனத்தால்’ என்னும் சொல்லினால், வாக்கினாலும் சரீரத்தாலுஞ் செய்யப்படுந் தொழில்களைத் துறத்தலென்பது இல்லை எனின்,—

(ஸமாதானம்) :—அப்படியன்று; ‘ஸகலகர்மங்களையும்’ என விசேஷித்திருப்பதனால்.

(ஆக்ஷேபம்) :—மனத்திற்குஉரிய ஸகலகர்மங்களைமாத்திரம் துறத்தல் (என்பது, அதற்குப் பொருள்) எனில்,—

(ஸமாதானம்) :—அப்படியன்று; வாக்கின்தொழில்களும், சரீரத்தின் தொழில்களும் மனத்தின்தொழிலை முன்னிட்டுநிற்றலால், மனத்தின்தொழில் நிகழாதவிடத்து (அந்த வாக் சரீரங்களின்) தொழில்களும் நிகழாமையின்.

(ஆக்ஷேபம்) :—சாஸ்திரத்திற் கூறிய வாக்சரீர கர்மங்களுக்குக் காரணமா

𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌅𑌨𑍍𑌯𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑍇𑌤𑍍 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍—𑌨; '𑌨𑍈𑌵𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨 𑌕𑌾𑌰𑌯𑌨𑍍' 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌾𑌤𑍍 ॥

𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌅𑌯𑌂 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌉𑌕𑍍𑌤𑌃 𑌮𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑌃 𑌨 𑌜𑍀𑌵𑌤𑌃 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍—𑌨; '𑌨𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇 𑌪𑍁𑌰𑍇 𑌦𑍇𑌹𑍀 𑌆𑌸𑍍𑌤𑍇' 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃। 𑌨 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 𑌮𑍃𑌤𑌸𑍍𑌯 𑌤𑌦𑍍𑌦𑍇𑌹𑍇 𑌆𑌸𑌨𑌂 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿 ॥

𑌅𑌕𑍁𑌰𑍍𑌵𑌤𑌃 𑌅𑌕𑌾𑌰𑌯𑌤𑌶𑍍𑌚 𑌦𑍇𑌹𑍇 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌃 𑌨 𑌦𑍇𑌹𑍇 𑌆𑌸𑍍𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍—𑌨; 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑌾𑌵𑌧𑌾𑌰𑌣𑌾𑌤𑍍, 𑌆𑌸𑌨𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌯𑌾𑌃 𑌚 𑌅𑌧𑌿𑌕𑌰𑌣𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌤𑌦𑌨𑌪𑍇𑌕𑍍𑌷𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌚 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌯। 𑌸𑌂𑌪𑍂𑌰𑍍𑌵𑌸𑍍𑌤𑍁 𑌨𑍍𑌯𑌾𑌸𑌶𑌬𑍍𑌦𑌃 𑌤𑍍𑌯𑌾𑌗𑌾𑌰𑍍𑌥𑌃, 𑌨 𑌨𑌿𑌕𑍍𑌷𑍇𑌪𑌾𑌰𑍍𑌥𑌃 ॥

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌗𑍀𑌤𑌾𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌤𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌏𑌵 𑌅𑌧𑌿𑌕𑌾𑌰𑌃, 𑌨 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌇𑌤𑌿 𑌤𑌤𑍍𑌰𑌤𑌤𑍍𑌰 𑌉𑌪𑌰𑌿𑌷𑍍𑌟𑌾𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑍇 𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌃 ॥ ௨௧ ॥

---

யுள்ள மானஸகர்மங்களைத் தவிர, மற்றைய ஸகலகர்மங்களையும் மனத்தால் துறந்திட வேண்டும் (என்பது, 'ஸகலகர்மங்களையும் துறந்து' என்பதற்குப் பொருள்) எனில்,—

(ஸமாதானம்) :— அப்படியன்று ; "ஒன்றும் செய்யாதவனும் செய்விக்காதவனுமாய்" (ரு - ௧௩) என்னும் விசேஷணத்தினால்.

(ஆக்ஷேபம்) :— ஸகலகர்மங்களையும் துறந்திடுதலைப் பகவான் கூறியதான இ(ந்தவிஷயமான)து, சாகும்நிலையிலிருப்பவனுக்குத்தான் ; உயிரோடிருப்பவனுக்கு அன்று எனில்,—

(ஸமாதானம்) :—அப்படியன்று ; "ஒன்பது வாயில் பட்டணமான சரீரத்திலே தங்கியிருக்கிறான்" (ரு - ௧௩) என்னும் விசேஷணம் பொருந்தாமையின். இறந்தவன் ஸகலகர்மங்களையுந்துறந்து அந்தச்சரிரத்திலே தங்கியிருத்தலென்பது கூடாதன்றோ.

(ஆக்ஷேபம்) :—(ஸகலகர்மங்களையும்) தேகத்திலே ஸந்யஸித்து,[1] (ஒன்றும்) செய்யாதவனும் செய்விக்காதவனுமாய் (ஸுகமாகத்தங்கியிருக்கிறான்) எனச்சேர்க்க வேண்டுமேயன்றி 'தேகத்திலே தங்கியிருக்கிறான்' எனச்சேர்க்கப்படாதுஎனில்,—

(ஸமாதானம்) :—அப்படியன்று ; 'ஆத்மா நிர்விகாரி' என்று எங்கும்[சுருதி ஸ்மிருதிகளில்] தேற்றமாகக் கூறியிருத்தலாலும், தங்கியிருத்தல்என்னும்தொழில் ஒரு இடத்தை வேண்டிநிற்றலாலும், துறத்தல்என்னும்தொழில் அதனை வேண்டாமையாலு(ம் என்பதா)ம்; 'ஸம்' (என்னும் உபஸர்க்கத்தை) முன்நிற்கப் பெற்றுள்ள 'ந்யாஸம்' என்னும் சொல்லோ, துறத்தல் என்னும் பொருளையுடையதேயன்றி வைத்தல்என்னும்பொருளை யுடைய தன்று (என்பதையும் காண்க).

ஆதலால், கீதாசாஸ்திரத்திலே, 'ஆத்மஞான முடையவனுக்குத் துறவிலேதான் அதிகாரம், கர்மத்திலே அன்று' என்று (பகவான் கூறுவதை) ஆங்காங்கு மேலே ஆத்ம ஞான(த்தை உணர்த்தும்)பிரகரணத்திலே எடுத்துக்காட்டுவோம்.(௨௧)

---

[1] பிரதிவாதிபக்ஷத்திலே 'ஸந்யஸித்து' என்பதற்கு - 'வைத்து' என்று பொருள். ஸகலகர்மங்களையும் தேகத்திலே வைத்து - ஸகலகர்மமும் உடலைச் சேர்ந்தவையேயன்றி ஆத்மாவைச் சேர்ந்தனவல்ல என உணர்ந்து. வாதிபக்ஷத்திலோ, 'ஸந்யஸித்து' என்பதற்கு - 'துறந்து' என்று பொருள்.

𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌂 𑌤𑍁 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌃 । 𑌤𑌤𑍍𑌰 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌵𑌿𑌨𑌾𑌶𑌿𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌮𑍍। 𑌤𑌤𑍍 𑌕𑌿𑌮𑌿𑌵 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௨௨. 𑌵𑌾𑌸𑌾𑌂𑌸𑌿 𑌜𑍀𑌰𑍍𑌣𑌾𑌨𑌿 𑌯𑌥𑌾 𑌵𑌿𑌹𑌾𑌯
𑌨𑌵𑌾𑌨𑌿 𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿 𑌨𑌰𑍋𑌽𑌪𑌰𑌾𑌣𑌿 ।
𑌤𑌥𑌾 𑌶𑌰𑍀𑌰𑌾𑌣𑌿 𑌵𑌿𑌹𑌾𑌯 𑌜𑍀𑌰𑍍𑌣𑌾𑌨𑌿
𑌅𑌨𑍍𑌯𑌾𑌨𑌿 𑌸𑌂𑌯𑌾𑌤𑌿 𑌨𑌵𑌾𑌨𑌿 𑌦𑍇𑌹𑍀 ॥

𑌵𑌾𑌸𑌾𑌂𑌸𑌿 𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌜𑍀𑌰𑍍𑌣𑌾𑌨𑌿 𑌦𑍁𑌰𑍍𑌬𑌲𑌤𑌾𑌂 𑌗𑌤𑌾𑌨𑌿 𑌯𑌥𑌾 𑌲𑍋𑌕𑍇 𑌵𑌿𑌹𑌾𑌯 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌨𑌵𑌾𑌨𑌿 𑌅𑌭𑌿𑌨𑌵𑌾𑌨𑌿 𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿 𑌉𑌪𑌾𑌦𑌤𑍍𑌤𑍇 𑌨𑌰𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌅𑌪𑌰𑌾𑌣𑌿 𑌅𑌨𑍍𑌯𑌾𑌨𑌿, 𑌤𑌥𑌾 𑌤𑌦𑍍𑌵𑌦𑍇𑌵 𑌶𑌰𑍀𑌰𑌾𑌣𑌿 𑌵𑌿𑌹𑌾𑌯 𑌜𑍀𑌰𑍍𑌣𑌾𑌨𑌿 𑌅𑌨𑍍𑌯𑌾𑌨𑌿 𑌸𑌂𑌯𑌾𑌤𑌿 𑌸𑌂𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌨𑌵𑌾𑌨𑌿 𑌦𑍇𑌹𑍀 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌤𑍍 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯 𑌏𑌵𑍇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௨௨ ॥

𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯 𑌏𑌵𑍇𑌤𑌿? 𑌆𑌹—

௨௩. 𑌨𑍈𑌨𑌂 𑌛𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌨𑍈𑌨𑌂 𑌦𑌹𑌤𑌿 𑌪𑌾𑌵𑌕𑌃 ।
𑌨 𑌚𑍈𑌨𑌂 𑌕𑍍𑌲𑍇𑌦𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌪𑍋 𑌨 𑌶𑍋𑌷𑌯𑌤𑌿 𑌮𑌾𑌰𑍁𑌤𑌃 ॥

𑌏𑌨𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌂 𑌦𑍇𑌹𑌿𑌨𑌂 𑌨 𑌛𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿, 𑌨𑌿𑌰𑌵𑌯𑌵𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌨 𑌅𑌵𑌯𑌵𑌵𑌿𑌭𑌾𑌗𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿। 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌅𑌸𑍍𑌯𑌾𑌦𑍀𑌨𑌿। 𑌤𑌥𑌾 𑌨 𑌏𑌨𑌂 𑌦𑌹𑌤𑌿 𑌪𑌾𑌵𑌕𑌃,

---

### ஆத்மா நிர்விகாரியாயிருக்கும் விதம்.

இனி, எடுத்துக்கொண்ட விஷயத்தைப் பேசுவோம். ஆத்மாவுக்கு அழிவு இல்லை என்று அங்கே[கீழ்] பிரதிஜ்ஞை செய்யப்பட்டது. அது எதுபோலவென்பது? —(விடை) கூறப்படுகின்றது :

௨௨. எப்படி ஒரு மனிதன் பழையஆடைகளைக் கழித்து வேறு புதியஆடைகளை எடுத்துக்கொள்கின்றானோ, அப்படியே, தேகியானது பழையஉடல்களைக் கழித்து வேறு புதியஉடல்களை அடைகின்றது.

உலகத்திலே எப்படி மனிதன் இற்றுப்போன வஸ்திரங்களைக் கழித்து, வேறு புதியவஸ்திரங்களைக் கைக்கொள்ளுகிறானோ, அதுபோலவே, தேகியான ஆத்மா (மூப்பு முதலியவற்றால்)நொய்ந்துபோன உடல்களைக் கழித்துவிட்டு, (அந்த) மனிதன்போல விகாரமேயில்லாமல்[மாறுபாடில்லாமலே] புதிய சரீரங்களைப் பெறுகின்றது என்பது பொருள். (௨௨)

ஏன் (ஆத்மாவுக்கு) விகாரமே இல்லை யென்பது ?—(பகவான்) கூறுகிறார் :

௨௩. இதனை ஆயுதங்கள் வெட்டா : இதனை நெருப்பு எரிக்கா : இதனை நீரும் நனைக்கா : இதனைக் காற்று(ம்) உலர்த்தா.

பிரகிருதத்தில் பேசிவரும் இந்தத் தேகியை ஆயுதங்கள் வெட்டா : (ஆத்மாவுக்கு) அவயவங்கள் இல்லையாதலின், வாள்முதலிய ஆயுதங்கள் உறுப்புஉறுப்பாகப் பிரித்திடுதலைச் செய்யமாட்டா. அவ்வாறே இதனை நெருப்பும் எரிக்கா : சாம்ப

𑌅𑌗𑍍𑌨𑌿𑌰𑌪𑌿 𑌨 𑌭𑌸𑍍𑌮𑍀𑌕𑌰𑍋𑌤𑌿 । 𑌤𑌥𑌾—𑌨 𑌚 𑌏𑌨𑌂 𑌕𑍍𑌲𑍇𑌦𑌯𑌨𑍍𑌤𑌿 𑌆𑌪𑌃 । 𑌆𑌪𑍋 𑌹𑌿 𑌸𑌾𑌵𑌯𑌵𑌸𑍍𑌯 𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌃 𑌆𑌰𑍍𑌦𑍍𑌰𑍀𑌭𑌾𑌵𑌕𑌰𑌣𑍇𑌨 𑌅𑌵𑌯𑌵𑌵𑌿𑌶𑍍𑌲𑍇𑌷𑌾𑌪𑌾𑌦𑌨𑍇 𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌮𑍍 ; 𑌤𑌤𑍍 𑌨 𑌨𑌿𑌰𑌵𑌯𑌵𑍇 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌸𑍍𑌨𑍇𑌹𑌵𑌤𑍍 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌂 𑌸𑍍𑌨𑍇𑌹𑌶𑍋𑌷𑌣𑍇𑌨 𑌨𑌾𑌶𑌯𑌤𑌿 𑌵𑌾𑌯𑍁𑌃 । 𑌏𑌨𑌂 𑌤𑍁 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌨 𑌶𑍋𑌷𑌯𑌤𑌿 𑌮𑌾𑌰𑍁𑌤𑍋𑌽𑌪𑌿 ॥

𑌯𑌤𑌃 𑌏𑌵𑌂 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍—

௨௪. 𑌅𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌦𑌾𑌹𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌕𑍍𑌲𑍇𑌦𑍍𑌯𑍋𑌽𑌶𑍋𑌷𑍍𑌯 𑌏𑌵 𑌚 ।
𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌃 𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌰𑌚𑌲𑍋𑌽𑌯𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ॥

𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌅𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌨𑌾𑌶𑌹𑍇𑌤𑍁𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌏𑌨𑌂 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌨𑌾𑌶𑌯𑌿𑌤𑍁𑌂 𑌨 𑌉𑌤𑍍𑌸𑌹𑌨𑍍𑌤𑍇 𑌅𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 । 𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌃 । 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌃 𑌇𑌵 𑌸𑍍𑌥𑌿𑌰 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 । 𑌸𑍍𑌥𑌿𑌰𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌚𑌲𑌃 𑌅𑌯𑌂 𑌆𑌤𑍍𑌮𑌾 । 𑌅𑌤𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 𑌚𑌿𑌰𑌨𑍍𑌤𑌨𑌃, 𑌨 𑌕𑌾𑌰𑌣𑌾𑌤𑍍 𑌕𑍁𑌤𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 𑌨𑌿𑌷𑍍𑌪𑌨𑍍𑌨𑌃, 𑌅𑌭𑌿𑌨𑌵𑌃 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥

𑌨 𑌏𑌤𑍇𑌷𑌾𑌂 𑌶𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌂 𑌪𑍌𑌨𑌰𑍁𑌕𑍍𑌤𑍍𑌯𑌂 𑌚𑍋𑌦𑌨𑍀𑌯𑌂, 𑌯𑌤𑌃 𑌏𑌕𑍇𑌨𑍈𑌵 𑌶𑍍𑌲𑍋𑌕𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑌂 𑌚𑍋𑌕𑍍𑌤𑌂 '𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌮𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌵𑌾' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 ; 𑌤𑌤𑍍𑌰 𑌯𑌦𑍇𑌵 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌷𑌯𑌂 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌤𑌤𑍍 𑌏𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌶𑍍𑌲𑍋𑌕𑌾𑌦𑍍 𑌨 𑌅𑌤𑌿𑌰𑌿𑌚𑍍𑌯𑌤𑍇, 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌶𑌬𑍍𑌦𑌤𑌃 𑌪𑍁𑌨𑌰𑍁𑌕𑍍𑌤𑌂 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌅𑌰𑍍𑌥𑌤𑌃 𑌇𑌤𑌿 । 𑌦𑍁𑌰𑍍-

---

லாகச் செய்யமாட்டா. அப்படியே இதனை நீரும் நனைக்கா; நீருக்கோ, அவயவங்களாலாகிய பொருளை நனையும்படி செய்து அ(வ்வ)வயவங்களைப் பிரித்திடச்சக்தியுண்டு. அது, அவயவங்களாலாகிய தல்லாத ஆத்மாவினிடத்து நிகழாது. அவ்வண்ணமே, காற்றானது ஈரமுள்ள பொருளை ஈரத்தையுலர்த்தி அழிக்கின்றது. இந்த ஆத்மாவையோ (அக்)காற்றும் உலர்த்தாது. (௨௩)

இவ்வாறிருத்தலின்,

**௨௪. இதனை வெட்டமுடியாது : இதனை எரிக்கமுடியாது : நனைக்கமுடியாது : உலர்த்தவும்முடியாது. இது நித்தியமானது : எங்கும் உள்ளது : நிலையானது : அசைவற்றது : எப்பொழுதும் உள்ளது.**

ஒன்றை ஒன்று அழிக்கக் காரணமான வாள்முதலியபொருள்கள் இந்த ஆத்மாவை அழித்தற்கு வல்லன அல்ல; ஆதலால், இவ்வாத்மா நித்யமானது. நித்யமாதலால் எங்கும் உள்ளது. எங்கும் உள்ளதாதலால், தூண்போல நிலையானதென்பதாம். நிலையானதாதலால், அசைவற்றது : ஆகவே, எப்பொழுதும் உள்ளது : பழமையானது. ஒருகாரணத்தால் உண்டான புதிய தன்று என்றபடி.

“இது பிறப்பதில்லை: இறப்பதும் இல்லை” (௨ - ௨0) என்று தொடங்குகின்ற ஒருசுலோகத்தினாலேயே ஆத்மா நித்யமென்றும், நிர்விகாரியென்றும் கூறப்பட்டிருக்க, “அங்கு[௨ - ௨௧, ௨௨, ௨௩, ௨௪]ஆத்மாவைப்பற்றி யாதொன்றே சொல்லப்படுகின்றதோ, அது இந்தச்சுலோகஅர்த்தத்தினும் விசேஷமாகஇல்லை.சிறிது சொல்லினாலும், சிறிது பொருளினாலும் மீண்டும் கூறப்பட்டிருக்கின்றது” என்று இந்த [௨ - ௨௧, ௨௨, ௨௩, ௨௪] சுலோகங்களுக்குக் கூறியதுகூறலைக் குற்றமாகக் கொண்டு

𑌦𑍁𑌰𑍍𑌬𑍋𑌧𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌃 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌮𑌾𑌪𑌾𑌦𑍍𑌯 𑌶𑌬𑍍𑌦𑌾𑌨𑍍𑌤𑌰𑍇𑌣 𑌤𑌦𑍇𑌵 𑌵𑌸𑍍𑌤𑍁 𑌨𑌿𑌰𑍂𑌪𑌯𑌤𑌿 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌃 𑌕𑌥𑌂 𑌨𑍁 𑌨𑌾𑌮 𑌸𑌂𑌸𑌾𑌰𑌿𑌣𑌾𑌮𑍍 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌗𑍋𑌚𑌰𑌤𑌾𑌮𑌾𑌪𑌨𑍍𑌨𑌂 𑌸𑌤𑍍 𑌸𑌂𑌸𑌾𑌰𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌯𑍇 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿 ॥

𑌕𑌿𑌂 𑌚—

௨௫. 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋𑌽𑌯𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌵𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍇𑌵𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑍈𑌨𑌂 𑌨𑌾𑌨𑍁𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑌣𑌾𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌨 𑌵𑍍𑌯𑌜𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌃 𑌅𑌯𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾 । 𑌅𑌤 𑌏𑌵 𑌅𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌃 𑌅𑌯𑌮𑍍 । 𑌯𑌤𑍍 𑌹𑌿 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍋𑌚𑌰𑌂 𑌤𑌤𑍍 𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌮𑌾𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌯𑌂 𑌤𑍁 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌅𑌨𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍋𑌚𑌰𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌃 । 𑌅𑌵𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑌃, 𑌯𑌥𑌾 𑌕𑍍𑌷𑍀𑌰𑌂 𑌦𑌧𑍍𑌯𑌾𑌤𑌞𑍍𑌚𑌨𑌾𑌦𑌿𑌨𑌾 𑌵𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌭𑌵𑌤𑌿 𑌨 𑌤𑌥𑌾 𑌅𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 । 𑌨𑌿𑌰𑌵𑌯𑌵𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 । 𑌨 𑌹𑌿 𑌨𑌿𑌰𑌵𑌯𑌵𑌂 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍 𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌮𑍍 । 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌵𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑌃 𑌅𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌏𑌵𑌂 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍇𑌣 𑌏𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾 𑌤𑍍𑌵𑌂 𑌨 𑌅𑌨𑍁𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 "𑌹𑌨𑍍𑌤𑌾 𑌅𑌹𑌮𑍇𑌷𑌾𑌂, 𑌮𑌯𑌾 𑌏𑌤𑍇 𑌹𑌨𑍍𑌯𑌨𑍍𑌤𑍇" 𑌇𑌤𑌿 ॥ ௨௫ ॥

𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌮𑍍𑌯 𑌇𑌦𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇—

---

வரப்படாது. (ஏனெனில்,) ஆத்மாஎன்னும் பொருளை அறிதல் அரிதாதலின், 'ஒரு சிறிதுந் தெளிவாய்ப் புலப்படாத உண்மையானது ஸம்ஸாரிகளுடைய புத்திக்கு எப்படியாவது எட்டி, ஸம்ஸாரத்தைப் போக்கவேண்டும்' என்று பகவான் வாஸுதேவன் மீண்டும்மீண்டும் (விஷயத்தை) வருவித்துக்கொண்டு, அதேபொருளை வேறு சொற்களால் உணர்த்துகின்றார் : (௨௪)

துக்கித்தற்கு இடமே இல்லை.

அன்றியும்,

௨௫. இது புலப்படாதது : இது நினைக்கமுடியாதது : இது விகாரப்படாதது (என்று வேதங்களால்) கூறப்படுகின்றது. ஆதலால், நீ இதனை இவ்வாறு தெரிந்துகொண்டு, வருந்தவேண்டாம்.

இந்தஆத்மா ஸகலஇந்திரியங்கட்கும் எட்டாதிருத்தலின் புலப்படாதது. ஆதலால்தான் இது நினைக்கமுடியாதது ; எது இந்திரியங்கட்கு எட்டுகின்றதோ, அதுவன்றோ நினைப்பிற்கு எட்டுவதாகும் : இந்தஆத்மாவோ இந்திரியங்கட்கு எட்டாமையால் நினைக்கமுடியாததாம். விகாரப்படாதது=எப்படிப் பாலானது மோர்ப்பிரையிடுதல் முதலியவற்றால் வேறுபடுகின்றதோ, அப்படி இவ்வாத்மா (விகாரப்படுவது) அன்று.(ஆத்மாவுக்கு) அவயவங்கள் இல்லையாதலாலும், அவிகாரியாம் : அவயவமில்லாததொன்றும் விகாரப்படுந்தன்மையதாய்க் காணப்படவில்லையன்றோ. இவ்வாத்மா அவிகாரியாதலின் விகாரப்படாததாம் (என்று) சொல்லப்படுகின்றது. ஆகவே, மேற்கூறியபடி இந்த ஆத்மாவைஅறிந்துகொண்டு, "நான் இவர்களைக் கொல்பவன், இவர்கள் என்னால் கொல்லப்படப்போகிறார்கள்" என்று நீ வருத்தப்படத்தகாது.(௨௫)

(பகவான் அர்ஜுனனுடைய சோகத்தைப் போக்குதற்காக) ஆத்மா அநித்யமென்று ஒப்புக்கொண்டு, இதனைக் கூறுகிறார் :

௨௬. 𑌅𑌥 𑌚𑍈𑌨𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌜𑌾𑌤𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑌾 𑌮𑌨𑍍𑌯𑌸𑍇 𑌮𑍃𑌤𑌮𑍍 ।
𑌤𑌥𑌾𑌪𑌿 𑌤𑍍𑌵𑌂 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌨𑍈𑌵𑌂 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

𑌅𑌥 𑌚 𑌇𑌤𑌿 𑌅𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌮𑌾𑌰𑍍𑌥𑌃 । 𑌏𑌨𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌂 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌜𑌾𑌤𑌂 𑌲𑍋𑌕𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌅𑌨𑍇𑌕𑌶𑌰𑍀𑌰𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌂 𑌜𑌾𑌤𑍋 𑌜𑌾𑌤𑌃 𑌇𑌤𑌿 𑌵𑌾 𑌮𑌨𑍍𑌯𑌸𑍇 𑌤𑌥𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌿𑌨𑌾𑌶𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑌾 𑌮𑌨𑍍𑌯𑌸𑍇 𑌮𑍃𑌤𑌂 𑌮𑍃𑌤𑍋 𑌮𑍃𑌤𑌃 𑌇𑌤𑌿; 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌤𑌥𑌾𑌭𑌾𑌵𑍇𑌽𑌪𑌿 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌤𑍍𑌵𑌂 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌨 𑌏𑌵𑌂 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑍍 𑌅𑌰𑍍𑌹𑌸𑌿, 𑌜𑌨𑍍𑌮𑌵𑌤𑍋 𑌨𑌾𑌶𑌃 𑌨𑌾𑌶𑌵𑌤𑍋 𑌜𑌨𑍍𑌮 𑌚𑍇𑌤𑌿 𑌏𑌤𑍌 𑌅𑌵𑌶𑍍𑌯𑌂𑌭𑌾𑌵𑌿𑌨𑍌 𑌇𑌤𑌿 ॥

𑌤𑌥𑌾 𑌚 𑌸𑌤𑌿—

௨௭. 𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌧𑍍𑌰𑍁𑌵𑍋 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌧𑍍𑌰𑍁𑌵𑌂 𑌜𑌨𑍍𑌮 𑌮𑍃𑌤𑌸𑍍𑌯 𑌚 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑍍𑌯𑍇𑌽𑌰𑍍𑌥𑍇 𑌨 𑌤𑍍𑌵𑌂 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌲𑌬𑍍𑌧𑌜𑌨𑍍𑌮𑌨𑌃 𑌧𑍍𑌰𑍁𑌵𑌃 𑌅𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑍀 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 𑌮𑌰𑌣𑌂 𑌧𑍍𑌰𑍁𑌵𑌂 𑌜𑌨𑍍𑌮 𑌮𑍃𑌤𑌸𑍍𑌯 𑌚 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌅𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑍍𑌯𑍋𑌽𑌯𑌂 𑌜𑌨𑍍𑌮𑌮𑌰𑌣𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 𑌅𑌰𑍍𑌥𑌃 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌅𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑍍𑌯𑍇 𑌅𑌰𑍍𑌥𑍇 𑌨 𑌤𑍍𑌵𑌂 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑍍 𑌅𑌰𑍍𑌹𑌸𑌿 । 𑌜𑌨𑍍𑌮𑌵𑌤𑍋 𑌨𑌾𑌶𑌃 𑌨𑌾𑌶𑌵𑌤𑍋 𑌜𑌨𑍍𑌮 𑌇𑌤𑌿 𑌚 𑌸𑌤𑍍𑌯𑌾𑌸𑌤𑍍𑌯𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑍇𑌷𑍁, 𑌅𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑍍𑌯𑌃 𑌸𑌃 𑌅𑌰𑍍𑌥𑌃 । 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌅𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑍍𑌯𑍇 𑌅𑌰𑍍𑌥𑍇 𑌨 𑌤𑍍𑌵𑌂 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑍍 𑌅𑌰𑍍𑌹𑌸𑌿 ॥ ௨௭ ॥

𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌸𑌙𑍍𑌘𑌾𑌤𑌾𑌤𑍍𑌮𑌕𑌾𑌨𑍍𑌯𑌪𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌉𑌦𑍍𑌦𑌿𑌶𑍍𑌯 𑌶𑍋𑌕𑌃 𑌨 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑍍, 𑌯𑌤𑌃—

---

௨௬. ஒருகால் நீ இதனை என்றும் பிறப்பதும், என்றும் இறப்பதுமாக எண்ணினுலும், உயர்தோள ! நீ இவ்வாறு துக்கிக்கவேண்டாம்.

'ஒருகால்' என்றது - (பிறர்மதத்தை) அங்கீகரித்தற்பொருளது ; இப்பொழுது பேசிவரும் ஆத்மாவானது, பற்பல உடல்கள் உண்டாகுந்தோறும் பிறந்துபிறந்து வருகிறதென்றும், அவ்வாறே அந்தந்த (உடல்கள்) அழியுந்தோறும் இறந்துஇறந்து போகிறதென்றும் ஸாமாந்யஜனங்கள் எண்ணுகிறபடி நீ நினைத்தாலும், உயர்தோள ! அவ்விதமாக ஆத்மா இருந்தாலும், நீ இவ்வாறு துக்கித்தல் தகாது ; ஏனெனின், பிறப்புற்றதற்கு இறப்பும், இறப்புற்றதற்குப் பிறப்பும் என்ற இவை இன்றியமையாதனவன்றோ. (௨௬)

அப்படி (ஆத்மா அநித்யமென்று) இருந்தாலும்,

௨௭. பிறந்ததற்கோ இறப்பு நிச்சயம் ; இறந்ததற்குப் பிறப்பும் நிச்சயம். ஆதலின், தவிர்க்கமுடியாதவிஷயத்திலே நீ துயரப்படுதல் தக்கதன்று.

பிறப்பெடுத்ததற்கு இறப்புத் தவறாமல் வரும் : இறந்ததற்கும் பிறப்புத் தவறாமல் வரும் : பிறப்பு இறப்பு என்னும் விஷயங்கள் தவிர்க்கமுடியாதன ; ஆதலால், தவிர்க்கமுடியாதவிஷயத்திலே நீ சோகப்படுதல் தகாது. பிறப்புடையதற்கு இறப்பும், இறப்புடையதற்குப் பிறப்பும் இயல்பாயின என்றால், அது (ஒருவராலும்) தவிர்க்கமுடியாத விஷயம். அந்தத் தவிர்க்கமுடியாதவிஷயத்திலே நீ சோகித்தல் தகாது. (௨௭)

கார்யகாரணங்களின் [நீர், நிலம் முதலியவற்றின்] சேர்க்கையாலாகிய பூதங்களைப்பற்றியும் நீ துயரப்படுவது சரியன்று ; ஏனெனில்—

௨௮. 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌦𑍀𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑌿 𑌭𑌾𑌰𑌤 ।
𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌨𑌿𑌧𑌨𑌾𑌨𑍍𑌯𑍇𑌵 𑌤𑌤𑍍𑌰 𑌕𑌾 𑌪𑌰𑌿𑌦𑍇𑌵𑌨𑌾 ॥

𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌦𑍀𑌨𑌿 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍍 𑌅𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 𑌅𑌨𑍁𑌪𑌲𑌬𑍍𑌧𑌿𑌃 𑌆𑌦𑌿𑌃 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑍁𑌤𑍍𑌰𑌮𑌿𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌸𑌂𑌘𑌾𑌤𑌾𑌤𑍍𑌮𑌕𑌾𑌨𑌾𑌂 𑌤𑌾𑌨𑌿 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌦𑍀𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌪𑍍𑌰𑌾𑌗𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍇𑌃। 𑌉𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌾𑌨𑌿 𑌚 𑌪𑍍𑌰𑌾𑌙𑍍𑌮𑌰𑌣𑌾𑌤𑍍 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑌿। 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌨𑌿𑌧𑌨𑌾𑌨𑍍𑌯𑍇𑌵 𑌪𑍁𑌨𑌃 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍍 𑌅𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌨𑌿𑌧𑌨𑌂 𑌮𑌰𑌣𑌂 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑌾𑌨𑌿 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌨𑌿𑌧𑌨𑌾𑌨𑌿। 𑌮𑌰𑌣𑌾𑌦𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍍 𑌅𑌪𑌿 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌤𑌾𑌮𑍇𑌵 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃। 𑌤𑌥𑌾 𑌚𑍋𑌕𑍍𑌤𑌮𑍍—

“𑌅𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌦𑌾𑌪𑌤𑌿𑌤𑌃 𑌪𑍁𑌨𑌶𑍍𑌚𑌾𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌗𑌤𑌃 ।
𑌨𑌾𑌸𑍌 𑌤𑌵 𑌨 𑌤𑌸𑍍𑌯 𑌤𑍍𑌵𑌂 𑌵𑍃𑌥𑌾 𑌕𑌾 𑌪𑌰𑌿𑌦𑍇𑌵𑌨𑌾 ॥” 𑌇𑌤𑌿 ।

𑌤𑌤𑍍𑌰 𑌕𑌾 𑌪𑌰𑌿𑌦𑍇𑌵𑌨𑌾 𑌕𑍋 𑌵𑌾 𑌪𑍍𑌰𑌲𑌾𑌪𑌃 𑌅𑌦𑍃𑌷𑍍𑌟𑌦𑍃𑌷𑍍𑌟𑌪𑍍𑌰𑌨𑌷𑍍𑌟𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌿𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௨௮ ॥

𑌦𑍁𑌰𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌃 𑌅𑌯𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾 ; 𑌕𑌿𑌂 𑌤𑍍𑌵𑌾𑌮𑍇𑌵 𑌏𑌕𑌮𑍍 𑌉𑌪𑌾𑌲𑌭𑍇 𑌸𑌾𑌧𑌾𑌰𑌣𑍇 𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌿𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑍇। 𑌕𑌥𑌂 𑌦𑍁𑌰𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌃 𑌅𑌯𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌇𑌤𑌿? 𑌆𑌹—

௨௯. 𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌤𑍍𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑍇𑌨𑌮𑍍
𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌦𑍍𑌵𑌦𑌤𑌿 𑌤𑌥𑍈𑌵 𑌚𑌾𑌨𑍍𑌯𑌃 ।

---

௨௮. பூதங்கள் அவ்யக்தத்தை [காணப்படாமையை] ஆதியாகவும், காணப்படுதலை நடுவாகவும், காணப்படாமையை முடிவாகவுமே உடையன. பாரத! அவ்விஷயத்திலே புலம்புகை என்ன?

அவ்யக்த மெனினும், காணுமையெனினும், புலப்படாமை யெனினும் ஒக்கும். கார்யகாரணங்களின் சேர்க்கையாலாகிய புத்திரமித்திராதியரான பூதங்களுடைய ஆதியானது, (அவர்களுடைய) உற்பத்திக்குமுன்பு காணுமையையுடையதாம். உற்பத்தியாயினவை, மரணத்திற்கு முன்னர் நடுவிலே [சிறிதுகாலம்] காணப்படுகின்றன. மீண்டும் அவைகள் காணுமையையே மரணமாகப்பெற்றுள்ளன; மரணத்திற்குப்பின்பும் (அவை) காணுமையையே அடைகின்றன [காணுமற்போகின்றன] என்று பொருள். அவ்வண்ணமே “காணுமையினின்றுவந்தவன் மீண்டும் காணுமைக்கே சென்றனன் : அவன் உன்னைச் சேர்ந்தவ னல்லன் : நீ அவனைச் சேர்ந்தவ னல்லன்: வீணுய் என்ன புலம்புதல்?” (ம - ஸ்திரீ - ௨ - ௧௩) என்று கூறப்பட்டுள்ளது. (முதலில்) காணப்படாமல், (பின்பு) காணப்பட்டு, (மறுபடியும்) மறைந்துபோகின்ற பிராந்தியான அந்தப் பூதங்களைப் பற்றி என்ன புலம்புகை? என்பது (தேர்ந்த) பொருள். (௨௮)

பிரகிருதத்தில் பேசிவருகின்ற இந்த ஆத்மாவை அறிதல் மிக்க அருமையானது. (அப்படி அதனை அறியமுடியாததற்குக்) காரணமாயுள்ள மயக்கமானது (ஸகல ஜனங்களுக்கும்) ஸமானமாயிருக்க, நான் உன்னை ஒருத்தனையே ஏன் பழிக்க வேண்டும்? இந்தஆத்மாவை அறிதல் கஷ்டமான தென்பது எப்படி? —(விடை) கூறுகிறுர் :

௨௯. ஒருவன் இதனை ஆச்சரியமானதுபோலப் பார்க்கிறுன்: அப்படியே வேருெருவன் (இதனை) ஆச்சரியமானதுபோலப் பேசுகிறுன் : பின்னும் மற்ருெருவன் இதனை

𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌚𑍍𑌚𑍈𑌨𑌮𑌨𑍍𑌯𑌃 𑌶𑍃𑌣𑍋𑌤𑌿
𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾𑌪𑍍𑌯𑍇𑌨𑌂 𑌵𑍇𑌦 𑌨 𑌚𑍈𑌵 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 ॥

𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌤𑍍 𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌮𑍍 𑌅𑌦𑍃𑌷𑍍𑌟𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍍 𑌅𑌦𑍍𑌭𑍁𑌤𑌮𑍍 𑌅𑌕𑌸𑍍𑌮𑌾𑌦𑍍 𑌦𑍃𑌶𑍍𑌯𑌮𑌾𑌨𑌂 𑌤𑍇𑌨 𑌤𑍁𑌲𑍍𑌯𑌮𑍍 𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌦𑍍 𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌮𑌿𑌵 𑌏𑌨𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 । 𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌤𑍍 𑌏𑌨𑌂 𑌵𑌦𑌤𑌿 𑌤𑌥𑍈𑌵 𑌚 𑌅𑌨𑍍𑌯𑌃 । 𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌤𑍍 𑌚 𑌏𑌨𑌮𑍍 𑌅𑌨𑍍𑌯𑌃 𑌶𑍃𑌣𑍋𑌤𑌿 । 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌉𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌅𑌪𑌿 𑌏𑌨𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌵𑍇𑌦 𑌨 𑌚𑍈𑌵 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 ॥

𑌅𑌥𑌵𑌾 𑌯𑌃 𑌅𑌯𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸 𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌤𑍁𑌲𑍍𑌯𑌃 । 𑌯𑍋 𑌵𑌦𑌤𑌿 𑌯𑌶𑍍𑌚 𑌶𑍃𑌣𑍋𑌤𑌿, 𑌸𑌃 𑌅𑌨𑍇𑌕𑌸𑌹𑌸𑍍𑌰𑍇𑌷𑍁 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑍇𑌵 𑌭𑌵𑌤𑌿 । 𑌅𑌤𑌃 𑌦𑍁𑌰𑍍𑌬𑍋𑌧 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌇𑌤𑍍𑌯𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑌃 ॥ ௨௯ ॥

𑌅𑌥 𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑌾𑌰𑍍𑌥𑌮𑍍 𑌉𑌪𑌸𑌂𑌹𑌰𑌨𑍍𑌨𑌾𑌹—

௩௰. 𑌦𑍇𑌹𑍀 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌵𑌧𑍍𑌯𑍋𑌽𑌯𑌂 𑌦𑍇𑌹𑍇 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌭𑌾𑌰𑌤 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌨 𑌤𑍍𑌵𑌂 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌦𑍇𑌹𑍇 𑌵𑌧𑍍𑌯𑌮𑌾𑌨𑍇𑌽𑌪𑌿 𑌅𑌯𑌂 𑌦𑍇𑌹𑍀 𑌨 𑌵𑌧𑍍𑌯𑌃 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌭𑍀𑌷𑍍𑌮𑌾𑌦𑍀𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌉𑌦𑍍𑌦𑌿𑌶𑍍𑌯 𑌨 𑌤𑍍𑌵𑌂 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥ ௩௰ ॥

𑌇𑌹 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌾𑌯𑌾𑌂 𑌶𑍋𑌕𑍋 𑌵𑌾 𑌮𑍋𑌹𑍋 𑌵𑌾 𑌨 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌨 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌾𑌯𑌾𑌮𑍇𑌵—

---

*ஆச்சரியமானதுபோலக் கேட்கிறான் : கேட்டும், ஒருத்தனும் இதனை அறிவதேஇல்லை.*

(ஒருவராலும் முன்) பார்க்கப்படாத ஒருஅத்புதமானது தற்செயலாய்ப் பார்க்கப்படுவதுபோல, ஒருவன் ஆத்மாவைப் பார்க்கிறான். அப்படியே வேறொருவன் இதனை ஆச்சரியம்போல் பேசுகிறான். மற்றொருவன் இதனை ஆச்சரியம்போலவே கேட்கிறான். கேட்டும், பார்த்தும், பேசியும் ஒருவனும் ஆத்மாவை உணர்வதேயில்லை.

அன்றி, (வேறு ஒருரை வருமாறு) :—ஆத்மாவைப் பார்ப்பவனும், சொல்பவனும், கேட்பவனும் (உலகத்தில்) ஆச்சரியம்போலாகிறார் [பிறரால் ஆச்சரியப்படத் தக்கவராகிறார்]. அப்படிப்பட்டவன் பலஆயிரத்தில் ஒருவனே யாவன். ஆதலால், ஆத்மாவை அறிதல் மிக்கஅருமையானது என்று கருத்து. (௨௯)

இனி, (இந்த) ப்ரகரணத்தின் விஷயத்தை முடிக்கிறார் :

*௩௰. எல்லாருடைய சரீரத்திலுமுள்ள இந்தத்தேகியானது, ஒருபொழுதும் கொல்லமுடியாதது ; ஆதலால், பாரத ! நீ எந்தப்பூதங்களைப்பற்றியும் வருந்தத் தகாது.*

பிராணிவர்க்கங்கள் எல்லாவற்றினுடைய சரீரங்கள் கொல்லப்பட்டாலும் இந்தச் சரீரத்தையுடையஆத்மாவானது கொல்லமுடியாதது. ஆதலால், நீ பீஷ்மர் முதலான எந்தப்பிராணிகளைப்பற்றியும் வருந்துதல் தகாது. (௩௰)

**க்ஷத்திரியன் போர்புரிய வேண்டும்.**

'உண்மைப்பொருளை உற்றுநோக்குமிடத்துச் சோகமாயினும் மோகமாயினும் உண்டாகாது' என்று இங்குக் (உ - ௩௰) கூறப்பட்டது. உண்மைப்பொருளை உற்றுநோக்குமிடத்துமாத்திரமேயல்லாமல்,

௩௧. 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌮𑌪𑌿 𑌚𑌾𑌵𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌨 𑌵𑌿𑌕𑌮𑍍𑌪𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ।
𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌾𑌦𑍍𑌧𑌿 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑍍𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌮𑌪𑌿 𑌸𑍍𑌵𑍋 𑌧𑌰𑍍𑌮𑌃 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌧𑌰𑍍𑌮𑌃 𑌯𑍁𑌦𑍍𑌧𑌂 𑌤𑌦𑌪𑌿 𑌅𑌵𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌤𑍍𑌵𑌂 𑌨 𑌵𑌿𑌕𑌮𑍍𑌪𑌿𑌤𑍁𑌂 𑌪𑍍𑌰𑌚𑌲𑌿𑌤𑍁𑌂 𑌨 𑌅𑌰𑍍𑌹𑌸𑌿 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌿𑌕𑌾𑌤𑍍 𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑍍𑌯𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑌃 । 𑌤𑌚𑍍𑌚 𑌯𑍁𑌦𑍍𑌧𑌂 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌜𑌯𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 𑌧𑌰𑍍𑌮𑌾𑌰𑍍𑌥𑌂 𑌪𑍍𑌰𑌜𑌾𑌰𑌕𑍍𑌷𑌣𑌾𑌰𑍍𑌥𑌂 𑌚𑍇𑌤𑌿 𑌧𑌰𑍍𑌮𑌾𑌦𑌨𑌪𑍇𑌤𑌂 𑌪𑌰𑌂 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌮𑍍 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌾𑌤𑍍 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌹𑌿 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 ॥ ௩௧ ॥

𑌕𑍁𑌤𑌶𑍍𑌚 𑌤𑌤𑍍 𑌯𑍁𑌦𑍍𑌧𑌂 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௩௨. 𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌯𑌾 𑌚𑍋𑌪𑌪𑌨𑍍𑌨𑌂 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌦𑍍𑌵𑌾𑌰𑌮𑌪𑌾𑌵𑍃𑌤𑌮𑍍 ।
𑌸𑍁𑌖𑌿𑌨𑌃 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 𑌯𑍁𑌦𑍍𑌧𑌮𑍀𑌦𑍃𑌶𑌮𑍍 ॥

𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌯𑌾 𑌚 𑌅𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌿𑌤𑌤𑌯𑌾 𑌉𑌪𑌪𑌨𑍍𑌨𑌂 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌦𑍍𑌵𑌾𑌰𑌮𑌪𑌾𑌵𑍃𑌤𑌮𑍍 𑌉𑌦𑍍𑌘𑌾𑌟𑌿𑌤𑌂 𑌯𑍇 𑌏𑌤𑌤𑍍 𑌈𑌦𑍃𑌶𑌂 𑌯𑍁𑌦𑍍𑌧𑌂 𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌹𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌕𑌿𑌂 𑌨 𑌸𑍁𑌖𑌿𑌨𑌃 𑌤𑍇? ॥ ௩௨ ॥

𑌏𑌵𑌂 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑌾𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌮𑌪𑌿—

௩௩. 𑌅𑌥 𑌚𑍇𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌮𑌂 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌸𑌙𑍍𑌗𑍍𑌰𑌾𑌮𑌂 𑌨 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌸𑌿 ।
𑌤𑌤𑌃 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌂 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌹𑌿𑌤𑍍𑌵𑌾 𑌪𑌾𑌪𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 ॥

---

௩௧. ஸ்வ [உன்] தருமத்தை நோக்கும்பொழுதும், நீ பின்னிடவேண்டாம்; ஏனெனில், நியாயமான யுத்தத்தினும் நன்மையானது க்ஷத்திரியனுக்கு வேறுஇல்லையன்றோ.

நீ 'யுத்தம் க்ஷத்திரிய தருமம்' என்பதையும் ஆலோசித்துப்பார்த்து, க்ஷத்திரியனுக்கு இயல்பா யமைந்த, அதாவது - உனக்கு இயற்கையாகவே அமைந்துள்ள (யுத்தமாகிய இந்தத்) தருமத்தினின்றும் பின்னிடுதல் தகாது. அந்த யுத்தமோ, பூமியை ஜயிப்பதன்மூலமாகத் தருமத்திற்கும் குடிகளைக்காத்தற்கும் பயன்படுவதால், நியாயத்தைவிட்டு நீங்காத சிறந்த தருமமாம். அந்த நியாயமான யுத்தத்தைக்காட்டிலும் க்ஷத்திரியனுக்கு நன்மையானது வேறு இல்லை; ஆதலால், (யுத்தத்தைவிட்டுப் பின்வாங்குதல் சரியன்று). (௩௧)

ஏன் அந்த யுத்தத்தைச்செய்யவேண்டும்என்பது?—(விடை)கூறப்படுகின்றது:

௩௨. தற்செயலாய் நேர்ந்திருக்கின்றதும், திறந்துள்ள ஸ்வர்க்கவாசலுமான இத்தகைய யுத்தத்தைப் பாக்கியவான்களான க்ஷத்திரியர்கள் பெறுகிறார்கள்.

விரும்பித்தேடாமலே தற்செயலாய் வந்திருப்பதும், திறந்துள்ள ஸ்வர்க்கவாசலுமான[1] இப்படிப்பட்ட இந்தயுத்தத்தை எந்தக்ஷத்திரியர்கள் அடைகிறார்களோ, அவர்கள் பாக்கியவான்கள் அல்லரா? (௩௨)

இவ்வாறு, (யுத்தமானது உன்னுடைய) கடமையா யிருந்தும்,

௩௩. இனி, இந்த நியாயமானயுத்தத்தை நீ செய்யாவிடில், அதனால் ஸ்வதருமத்தையும் புகழையும் இழந்து, பாவத்தை யடைவாய்.

---

[1] யுத்தத்தில் இறக்கும் வீரர்களுக்கு ஸ்வர்க்கம் கதவு எப்பொழுதும் திறந்திருக்கின்றதென்ன உடனே கிடைக்குமாதலின், அவர்கட்கு அதன் லாம்.

𑌅𑌥 𑌚𑍇𑌤𑍍 𑌤𑍍𑌵𑌮𑍍 𑌇𑌮𑌂 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌧𑌰𑍍𑌮𑌾𑌦𑌨𑌪𑍇𑌤𑌂 𑌵𑌿𑌹𑌿𑌤𑌂 𑌸𑌙𑍍𑌗𑍍𑌰𑌾𑌮𑌂 𑌯𑍁𑌦𑍍𑌧𑌂 𑌨 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌸𑌿 𑌚𑍇𑌤𑍍 𑌤𑌤𑌃 𑌤𑌦𑌕𑌰𑌣𑌾𑌤𑍍 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌂 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌸𑌮𑌾𑌗𑌮𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌾𑌂 𑌹𑌿𑌤𑍍𑌵𑌾 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌪𑌾𑌪𑌮𑍍 𑌅𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 ॥ ௩௩ ॥

𑌨 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑌃—

௩௪. 𑌅𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌂 𑌚𑌾𑌪𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌕𑌥𑌯𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇𑌽𑌵𑍍𑌯𑌯𑌾𑌮𑍍 ।
𑌸𑌂𑌭𑌾𑌵𑌿𑌤𑌸𑍍𑌯 𑌚𑌾𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌰𑍍𑌮𑌰𑌣𑌾𑌦𑌤𑌿𑌰𑌿𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

𑌅𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌂 𑌚𑌾𑌪𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌕𑌥𑌯𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 𑌤𑌵 𑌅𑌵𑍍𑌯𑌯𑌾𑌂 𑌦𑍀𑌰𑍍𑌘𑌕𑌾𑌲𑌾𑌮𑍍 । 𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌶𑍂𑌰 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌗𑍁𑌣𑍈𑌃 𑌸𑌂𑌭𑌾𑌵𑌿𑌤𑌸𑍍𑌯 𑌚 𑌅𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌃 𑌮𑌰𑌣𑌾𑌦𑌤𑌿𑌰𑌿𑌚𑍍𑌯𑌤𑍇, 𑌸𑌂𑌭𑌾𑌵𑌿𑌤𑌸𑍍𑌯 𑌚 𑌅𑌕𑍀𑌰𑍍𑌤𑍇𑌃 𑌵𑌰𑌂 𑌮𑌰𑌣𑌮𑍍 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௩௪ ॥

𑌕𑌿𑌂 𑌚—

௩௫. 𑌭𑌯𑌾𑌦𑍍𑌰𑌣𑌾𑌦𑍁𑌪𑌰𑌤𑌂 𑌮𑌂𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌮𑌹𑌾𑌰𑌥𑌾𑌃 ।
𑌯𑍇𑌷𑌾𑌂 𑌚 𑌤𑍍𑌵𑌂 𑌬𑌹𑍁𑌮𑌤𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌯𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 𑌲𑌾𑌘𑌵𑌮𑍍 ॥

𑌭𑌯𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌣𑌾𑌦𑌿𑌭𑍍𑌯𑍋 𑌰𑌣𑌾𑌤𑍍 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍 𑌉𑌪𑌰𑌤𑌂 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 𑌮𑌂𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌨 𑌕𑍃𑌪𑌯𑌾 𑌇𑌤𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌮𑌹𑌾𑌰𑌥𑌾𑌃 𑌦𑍁𑌰𑍍𑌯𑍋𑌧𑌨𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌯𑌃 । 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌚 𑌤𑍍𑌵𑌂 𑌦𑍁𑌰𑍍𑌯𑍋𑌧𑌨𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌬𑌹𑍁𑌮𑌤𑍋 𑌬𑌹𑍁𑌭𑌿𑌃 𑌗𑍁𑌣𑍈𑌃 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌬𑌹𑍁𑌮𑌤𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌪𑍁𑌨𑌃 𑌤𑍍𑌵𑌂 𑌯𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 𑌲𑌾𑌘𑌵𑌂 𑌲𑌘𑍁𑌭𑌾𑌵𑌮𑍍 ॥

---

இனி, தருமத்தை விட்டுநீங்காததும், (உனக்கு) விதிக்கப்பட்டதுமாகிய இந்த யுத்தத்தை நீ செய்யாமற்போனால், அதனால் (அதாவது -) அதனைச் செய்யாமையினால், நீ ஸ்வதருமத்தையும் விட்டு, சிவபிரான்முதலானோரை எதிர்த்ததனாலாகிய புகழையும் இழந்து பாபமொன்றையே அடைவாய். (௩௩)

ஸ்வதருமத்தையும் புகழையும் கைவிடுதல்மாத்திரம் அன்று,

௩௪. ஜனங்கள் உன்னுடையஅபகீர்த்தியையும் என்றைக்கும் சொல்லுவார்கள் : மதிப்பைப் பெற்றவனுக்கு அபகீர்த்தியானது மரணத்திலும் அதிகமாகும்.

ஜனங்கள் உன்னுடைய பழியையும் நெடுங்காலம் கூறுவார்கள். 'தருமஸ்வபாவமுள்ளவன்,' 'சூரன்' என இவ்வாறாக இத்தகைய குணங்களால் மதிக்கப்பெற்றவனுக்கு அபகீர்த்தி மரணத்திலும் அதிகமாகும்; மரணமானது அபகீர்த்தியினும் நல்லதாம் என்பது பொருள். (௩௪)

மேலும்,

௩௫. மகாரதர்கள், உன்னை, பயத்தால் யுத்தத்தினின்று பின்வாங்கினவனாக நினைப்பார்கள். நீ எவர்களிடத்தில் பெருமை பெற்று (இருக்கிறாயோ, அவர்களிடத்தில் இப்பொழுது) சிறுமையைப் பெறுவாய்.

துர்யோதனன் முதலிய மகாரதர்கள், "(பிராணிகளிடத்துள்ள) இரக்கத்தாலல்லாமல் கர்ணன் முதலானோர்களிடத்தில் அச்சத்தினால் நீ யுத்தத்தினின்றும் பின்வாங்குகிறாய்" என்று எண்ணுவார்கள். நீ எந்தத் துர்யோதனாதியர்களால் பலநற்குணங்களுடையவன் என்று இவ்வாறு நன்குமதிப்பைப் பெற்று (இருக்கின்றாயோ, அவர்களிடத்தில்) மறுபடியும் சிறுமையைப் பெறுவாய். (௩௫)

𑌕𑌿𑌂 𑌚—

௩௬. 𑌅𑌵𑌾𑌚𑍍𑌯𑌵𑌾𑌦𑌾𑌂𑌶𑍍𑌚 𑌬𑌹𑍂𑌨𑍍 𑌵𑌦𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑌵𑌾𑌹𑌿𑌤𑌾𑌃 ।
𑌨𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑌵 𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌂 𑌤𑌤𑍋 𑌦𑍁𑌃𑌖𑌤𑌰𑌂 𑌨𑍁 𑌕𑌿𑌮𑍍 ॥

𑌅𑌵𑌾𑌚𑍍𑌯𑌵𑌾𑌦𑌾𑌨𑍍 𑌅𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌵𑌾𑌦𑌾𑌨𑍍 𑌚 𑌬𑌹𑍂𑌨𑍍 𑌅𑌨𑍇𑌕𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌾𑌨𑍍 𑌵𑌦𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑌵 𑌅𑌹𑌿𑌤𑌾𑌃 𑌶𑌤𑍍𑌰𑌵𑌃 𑌨𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌃 𑌕𑍁𑌤𑍍𑌸𑌯𑌨𑍍𑌤𑌃 𑌤𑌵 𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌮𑍍 । 𑌤𑌤𑌃 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌨𑌿𑌨𑍍𑌦𑌾𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇𑌃 𑌦𑍁𑌃𑌖𑌾𑌤𑍍 𑌦𑍁𑌃𑌖𑌤𑌰𑌂 𑌨𑍁 𑌕𑌿𑌮𑍍? 𑌤𑌤𑌃 𑌕𑌷𑍍𑌟𑌤𑌰𑌂 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௩௬ ॥

𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌪𑍁𑌨𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑍇 𑌕𑌰𑍍𑌣𑌾𑌦𑌿𑌭𑌿𑌃—

௩௭. 𑌹𑌤𑍋 𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌂 𑌜𑌿𑌤𑍍𑌵𑌾 𑌵𑌾 𑌭𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 𑌮𑌹𑍀𑌮𑍍 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌯 𑌕𑍃𑌤𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃 ॥

𑌹𑌤𑍋 𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌮𑍍, 𑌹𑌤𑌃 𑌸𑌨𑍍 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 𑌜𑌿𑌤𑍍𑌵𑌾 𑌵𑌾 𑌕𑌰𑍍𑌣𑌾𑌦𑍀𑌨𑍍 𑌶𑍂𑌰𑌾𑌨𑍍 𑌭𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 𑌮𑌹𑍀𑌮𑍍 । 𑌉𑌭𑌯𑌥𑌾𑌪𑌿 𑌤𑌵 𑌲𑌾𑌭 𑌏𑌵 𑌇𑌤𑍍𑌯𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑌃 । 𑌯𑌤 𑌏𑌵𑌂 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌯 𑌕𑍃𑌤𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃 '𑌜𑍇𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌶𑌤𑍍𑌰𑍂𑌨𑍍, 𑌮𑌰𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌵𑌾' 𑌇𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௩௭ ॥

𑌤𑌤𑍍𑌰 𑌯𑍁𑌦𑍍𑌧𑌂 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌃 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌯𑍁𑌧𑍍𑌯𑌮𑌾𑌨𑌸𑍍𑌯 𑌉𑌪𑌦𑍇𑌶𑌮𑌿𑌮𑌂 𑌶𑍃𑌣𑍁—

௩௮. 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑍇 𑌸𑌮𑍇 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌲𑌾𑌭𑌾𑌲𑌾𑌭𑍌 𑌜𑌯𑌾𑌜𑌯𑍌 ।
𑌤𑌤𑍋 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌯 𑌯𑍁𑌜𑍍𑌯𑌸𑍍𑌵 𑌨𑍈𑌵𑌂 𑌪𑌾𑌪𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 ॥

---

௩௬. உன் பகைவர்கள் உனதுவல்லமையை இகழ்பவராய், சொல்லத்தகாத பலசொற்களையும் சொல்லுவார்கள். அதனினும் அதிக துக்கமானது ஏதாவது உண்டோ?

உனது வல்லமையைப் பழித்து, சொல்லத்தகாத பழிச்சொற்களையும் பலபல வகையாக உனது பகைவர்கள் சொல்வார்கள். அப்படிப் பழியைப் பெறுவதாகிய துக்கத்தைக்காட்டிலும் அதிக கஷ்டமான துன்பம் வேறு இல்லை என்பது பொருள்.

இனி, கர்ணன் முதலானோரோடு போர்புரிந்தால்,

௩௭. நீ கொல்லயுண்டாலோ, ஸ்வர்க்கத்தை அடைவாய்; ஜயித்தாலோ, பூமியை அநுபவிப்பாய். ஆதலால், கௌந்தேய! போர்புரிய உறுதிகொண்டு எழுந்திரு.

கொல்லப்பட்டால், ஸ்வர்க்கத்தைப் பெறுவாய்: (அன்றி,) கர்ணன் முதலான சூரரை ஜயித்தால், பூமியை அநுபவிப்பாய். இருவிதத்தாலும் [வெற்றியாலும், தோல்வியாலும்] உனக்கு லாபந்தான் என்பது கருத்து. இப்படியிருத்தலின், போர்புரிய உறுதிகொண்டு "ஒன்று சத்துருக்களை வெல்லுவேன், அல்லது இறப்பேன்" என்னும் உறுதிகொண்டு போர்க்கு எழுந்திரு என்பது பொருள். (௩௭)

இனி யுத்தம் ஸ்வதருமம் என்று இவ்வாறுபோர்புரிகின்ற உனக்கு (நான் கூறுகின்ற) இந்த உபதேசத்தைக் கேட்டுக்கொள்;

௩௮. இன்பதுன்பங்களையும் லாபநஷ்டங்களையும் வெற்றிதோல்விகளையும் ஸமமாகப் பாவித்து, பின்பு போரைக் கூடுவாயாக. (நீ) இவ்வாறு செய்தால் பாவத்தை அடையமாட்டாய்.

𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑍇 𑌸𑌮𑍇 𑌤𑍁𑌲𑍍𑌯𑍇 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑍌 𑌅𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 । 𑌤𑌥𑌾 𑌲𑌾𑌭𑌾𑌲𑌾𑌭𑍌 𑌜𑌯𑌾𑌜𑌯𑍌 𑌚 𑌸𑌮𑍇 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌤𑌤𑍋 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌯 𑌯𑍁𑌜𑍍𑌯𑌸𑍍𑌵 । 𑌨 𑌏𑌵𑌂 𑌯𑍁𑌦𑍍𑌧𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌪𑌾𑌪𑌮𑍍 𑌅𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 । 𑌏𑌷 𑌉𑌪𑌦𑍇𑌶𑌃 𑌪𑍍𑌰𑌾𑌸𑌙𑍍𑌗𑌿𑌕𑌃 ॥ ௩௮ ॥

𑌶𑍋𑌕𑌮𑍋𑌹𑌾𑌪𑌨𑌯𑌨𑌾𑌯 𑌲𑍌𑌕𑌿𑌕𑍋 𑌨𑍍𑌯𑌾𑌯𑌃 '𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌮𑌪𑌿 𑌚𑌾𑌵𑍇𑌕𑍍𑌷𑍍𑌯' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑍈𑌃 𑌶𑍍𑌲𑍋𑌕𑍈𑌃 𑌉𑌕𑍍𑌤𑌃, 𑌨 𑌤𑍁 𑌤𑌾𑌤𑍍𑌪𑌰𑍍𑌯𑍇𑌣 । 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 𑌇𑌹 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌮𑍍 । 𑌤𑌚𑍍𑌚 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍 𑌉𑌪𑌸𑌂𑌹𑍍𑌰𑌿𑌯𑌤𑍇—'𑌏𑌷𑌾 𑌤𑍇𑌽𑌭𑌿𑌹𑌿𑌤𑌾' 𑌇𑌤𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌷𑌯𑌵𑌿𑌭𑌾𑌗𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌯 । 𑌇𑌹 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑍇 𑌪𑍁𑌨𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌷𑌯𑌵𑌿𑌭𑌾𑌗𑍇 𑌉𑌪𑌰𑌿𑌷𑍍𑌟𑌾𑌤𑍍 '𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍍' 𑌇𑌤𑌿 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌦𑍍𑌵𑌯𑌵𑌿𑌷𑌯𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌿𑌷𑍍𑌯𑌤𑍇, 𑌶𑍍𑌰𑍋𑌤𑌾𑌰𑌶𑍍𑌚 𑌵𑌿𑌷𑌯𑌵𑌿𑌭𑌾𑌗𑍇𑌨 𑌸𑍁𑌖𑌂 𑌗𑍍𑌰𑌹𑍀𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌇𑌤𑌿 ; 𑌅𑌤𑌃 𑌆𑌹—

௩௯. 𑌏𑌷𑌾 𑌤𑍇𑌽𑌭𑌿𑌹𑌿𑌤𑌾 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍇 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌯𑍋𑌗𑍇 𑌤𑍍𑌵𑌿𑌮𑌾𑌂 𑌶𑍃𑌣𑍁 ।
𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌯𑌯𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌕𑌰𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌂 𑌪𑍍𑌰𑌹𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 ॥

𑌏𑌷𑌾 𑌤𑍇 𑌤𑍁𑌭𑍍𑌯𑌮𑍍 𑌅𑌭𑌿𑌹𑌿𑌤𑌾 𑌉𑌕𑍍𑌤𑌾 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍇 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌵𑌸𑍍𑌤𑍁𑌵𑌿𑌵𑍇𑌕𑌵𑌿𑌷𑌯𑍇 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 𑌶𑍋𑌕𑌮𑍋𑌹𑌾𑌦𑌿𑌸𑌂𑌸𑌾𑌰𑌹𑍇𑌤𑍁𑌦𑍋𑌷𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 । 𑌯𑍋𑌗𑍇 𑌤𑍁 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑍇 𑌨𑌿𑌃𑌸𑌙𑍍𑌗𑌤𑌯𑌾 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵-

---

ஸமமாகப் பாவித்து - விருப்பு வெறுப்புக்களைக் கொள்ளாமல் என்பதாம். அவ்வாறே லாபநஷ்டங்களையும் வெற்றிதோல்விகளையும் ஸமமாக எண்ணிப் போரைக் கூடுவாயாக. (நீ) இவ்வாறு யுத்தம்செய்பவனாய் பாவத்தை யடையமாட்டாய். இந்த உபதேசம் இடையேவந்த ப்ரஸ்தாபத்தால் நேர்ந்தது (என்று அறிக). (௩௮)

### யோகம்.

உலகநடையான உபாயமானது (அர்ஜுனனுடைய)சோகமோகங்களைப் போக்குதற்காக "நீ ஸ்வ[உன்]தருமத்தை" (௨ - ௩௧)என்பதுமுதலான சுலோகங்களால் கூறப்பட்டது ; ஆனால் (அது)முக்கியம் அன்று. பரம்பொருளைக் காட்டுதலே இங்கு எடுத்துக்கொண்ட விஷயம். (மேல் ௨-௨௦ ல்)கூறப்பட்ட அதுவும் நூலின் விஷயத்தைப் பகுத்துக்காட்டும்பொருட்டு "இந்தப் புத்தி உனக்குச் சொல்லப்பட்டது" (௨ - ௩௯) எனமுடிக்கப்படுகின்றது. இங்கு நூலின்விஷயத்தைப்பகுத்துக்காட்டினால் தான் "ஞானயோகத்தால் ஸாங்க்யர்களுக்கும் கர்மயோகத்தால் யோகிகளுக்கும்" (௩ - ௩)என மேலே(கூறுகின்ற) இருவகை நிஷ்டைகளைப்பற்றிய நூலானது(இனிதாகச்) செல்லும். விஷயத்தைப் பகுத்தலினால் கேட்பவரும் (நூற்பொருளை) எளிதாகத் தெரிந்துகொள்வார்கள் என்பதாம். ஆதலால், (பகவான்) அருளிச்செய்கிறார் :

**௩௯. இந்தப் புத்தியானது ஸாங்க்யவிஷயத்திலே உனக்குச் சொல்லப்பட்டது. ஆனால், பார்த்த! நீ எந்தப் புத்தியைக்கூடி, கர்மமாகிய கட்டை அவிழ்த்துக்கொள்வாயோ,(அந்த) இதனை [யோகபுத்தியை] யோகவிஷயத்திலே கேள் :**

துன்பம் மயக்கம் முதலிய ஸம்ஸாரத்திற்குக் காரணமான தீங்கை[அஜ்ஞானத்தை] நேரே போக்குவதான இந்த ஞானமானது பரம்பொருளை உள்ளபடி ஆராயுமாறு உனக்கு(க் மேலே)சொல்லப்பட்டது.அ(ந்தஞானத்)தைப் பெறுதற்கு வழியாய்,

ப்ரஹாணபூர்வகம் ஈஶ்வராராதநரூபே கர்மயோகே கர்மாநுஷ்டாநே ஸமாதியோகே ச இமாம் அநந்தரமேவ வக்ஷ்யமாணாம் புத்திம் ஶ்ருணு ||

தாம் புத்திம் ஸ்தௌதி ப்ரரோசநாய — புத்த்யா யயா யோகவிஷயயா யுக்தோ ஹே பார்த கர்மபந்தம் கர்ம ஹேது தர்மாதர்மாக்யஃ பந்தஃ கர்மபந்தஃ தம் ப்ரஹாஸ்யஸி ஈஶ்வரப்ரஸாதநிமித்தஜ்ஞாநப்ராப்த்யைவேத்யபிப்ராயஃ ||௩௯||

கிஞ்ச அந்யத்—

௪௦. நேஹாபிக்ரமநாஶோঽஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே ।
ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் ॥

ந இஹ கர்மயோகே அபிக்ரமநாஶஃ அபிக்ரமணம் அபிக்ரமஃ ப்ராரம்பஃ தஸ்ய நாஶோ நாஸ்தி யதா க்ருஷ்யாதேஃ । யோகவிஷயே ப்ராரம்பஸ்ய ந அநைகாந்திகபலத்வம் இத்யர்த்தஃ । கிஞ்ச — ந சாபி சிகித்ஸாவத் ப்ரத்யவாயஃ வித்யதே । கிந்து ஸ்வல்பமபி அஸ்ய தர்மஸ்ய யோகஸ்ய அநுஷ்டிதம் த்ராயதே ரக்ஷதி மஹதஃ பயாத் ஸம்ஸாரபயாத் ஜந்மமரணாதிலக்ஷணாத் ॥ ௪௦ ॥

யா இயம் ஸாங்க்யே புத்திருக்தா யோகே ச, வக்ஷ்யமாணலக்ஷணா ஸா—

---

த்வந்தங்களை(ப் பாராட்டாது)தள்ளிவிட்டுப் பற்றில்லாமல் ஈச்வரனைத் தொழுதற் பொருட்டுச்செய்யும் கர்மாநுஷ்டானமான கர்மயோகமும் ஸமாதியோகமுமாகிய யோகத்தைப்பற்றிப் பின்வரும் இப்புத்தியைக் கேள் :

அந்தப் புத்தியை விரும்பிநாடுதற்காக(ப் பகவான்) கொண்டாடுகிறார் : பார்த்த ! நீ யோகத்தைப்பற்றிய புத்தியையுடையவனாய், கர்மமேயாகிய தருமஅதருமங்கள்என்றபெயரையுடைய அக்கட்டை நீக்கிக்கொள்வாய்: ஈச்வராநுக்கிரகத்தால் வரும் ஞானத்தைப் பெறுவதனாலேயே (அந்தக் கட்டை விலக்கிக்கொள்வாய்) என்பது கருத்து. (௩௯)

**யோகமே அபாயமில்லா வழி.**

(கர்மத்தை அநுஷ்டித்தல் அவச்யம் என்பதற்குக் காரணம்)இன்னும் ஒன்று (உண்டு) :

**௪௦. இதில் முயற்சி பாழாகாது : குற்றம் வராது. இந்தத் தருமத்தின் சொற்பமும்கூட (ஒருவனைப்) பெரிய பயத்தினின்றும் காக்கின்றது.**

முக்திக்கு வழியாயுள்ள இந்தக் கர்மயோகத்தில், வேளாண்மை முதலியவற்றிற்போல முயற்சி பழுதுபடுகின்றதில்லை. யோகவிஷயத்தில் செய்யும் பிரயத்தினம் பயன்தவறுவதில்லை[நிச்சயமாய்க் கிடைக்கும்]என்பது பொருள். அன்றியும்,வைத்தியஞ் செய்வதிற்போல அனர்த்தமும் (நேரிடுதல்) இல்லை. மற்று, இந்த யோகத்தைச் சிறிது அநுஷ்டித்தலும் (ஒருவனைப்)பிறப்பு இறப்பு முதலாகிய ஸம்ஸாரபயமான பெரிய பயத்தினின்றும் காப்பாற்றுகின்றது. (௪௦)

**நிச்சயபுத்தி ஒன்றுதான், அநேக மன்று.**

ஸாங்க்யத்தைப்பற்றியும் யோகத்தைப்பற்றியும் கீழே கூறியுள்ள புத்தியின் லக்ஷணம் வருமாறு :

௪௧. வ்யவஸாயாத்மிகா புத்திரேகேஹ குருநந்தந ।
பஹுஶாகா ஹ்யநந்தாஶ்ச புத்தயோऽவ்யவஸாயிநாம் ॥

வ்யவஸாயாத்மிகா நிஶ்சயஸ்வபாவா ஏகா இதரவிபரீதபுத்தீநாம் ஶாகாபேதஸ்ய பாதிகா, ஸம்யக்ப்ரமாணஜநிதத்வாத், இஹ ஶ்ரேயோமார்கே ஹே குருநந்தந । யா: புந: இதரா விபரீதபுத்தய:, யாஸாம் ஶாகாபேதப்ரசாரவஶாத் அநந்த: அபார: அநுபரத: ஸம்ஸாரோ நித்யப்ரதத: பவதி, ப்ரமாணஜநிதவிவேகபுத்திநிமித்தவஶாச்ச உபரதாஸு அநந்தபேதபுத்திஷு ஸம்ஸாரோऽபி உபரமதே தா புத்தய: பஹுஶாகா:, பஹ்வ்ய: ஶாகா: யாஸாம் தா: பஹுஶாகா:, பஹுபேதா இத்யேதத் । ப்ரதிஶாகாபேதேந ஹி அநந்தாஶ்ச புத்தய: । கேஷாம்? அவ்யவஸாயிநாம், ப்ரமாணஜநிதவிவேகபுத்திரஹிதாநாம் இத்யர்த: ॥ ௪௧ ॥

யேஷாம் வ்யவஸாயாத்மிகா புத்தி: நாஸ்தி தே—

௪௨. யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்யவிபஶ்சித: ।
வேதவாதரதா: பார்த நாந்யதஸ்தீதி வாதிந: ॥

௪௩. காமாத்மாந: ஸ்வர்கபரா ஜந்மகர்மபலப்ரதாம் ।
க்ரியாவிஶேஷபஹுலாம் போகைஶ்வர்யகதிம் ப்ரதி ॥

௪௪. போகைஶ்வர்யப்ரஸக்தாநாம் தயாऽபஹ்ருதசேதஸாம் ।
வ்யவஸாயாத்மிகா புத்தி: ஸமாதௌ ந விதீயதே ॥

---

௪௧. குருநந்தந ! இங்கு நிச்சயத்தன்மையையுடைய புத்தி ஒன்றுதான். உறுதியற்றவர்களுக்கு, புத்திகளோ அளவில்லாதனவாய்ப் பல கிளைகளை உடையன.

ஏ ! குருநந்தந ! இந்த நல்வழியிலே உறுதித்தன்மையையுடைய புத்தி ஒன்றுதான்.(அது)சரியான ப்ரமாணத்தினின்றும் உண்டானமையால், பல கிளைகளையுடைய மற்றைய விபரீதபுத்திகளை வரவொட்டாமல் தடுப்பது. ஆனால், எவைகள் பலகிளைகளாகப் பிரிந்து செல்வதனால் ஸம்ஸாரம் முடிவில்லாமல் இடைவிடாது எப்பொழுதும் பரவி நிலைபெறுகின்றதோ; (சரியான) ப்ரமாணத்தால் உண்டாகும் விவேகபுத்தியினால் (எந்த) அளவிறந்த பேதபுத்திகள் ஒழிந்திட, ஸம்ஸாரமும் ஒழிந்திடுகின்றதோ; அந்த வேறான விபரீதபுத்திகள் பலகிளைகளை உடையன: அதாவது - பலபேதங்களையுடையன. பலபிரிவுகளையுடைமையால், புத்திகளும் அளவிறந்தனவே.—எவர்கட்கு (இவை உள்ளன? எனில்)—உறுதியற்றவர்களுக்கு : (சரியான)ப்ரமாணத்தால் உண்டான விவேகஞானம் இல்லாதவர்களுக்கு என்றபடி. (௪௧)

உலகவாழ்க்கையில் அழுந்தியவர்க்கு நிச்சயபுத்தி வராது.

எவர்கட்கு நிச்சயத்தன்மையுடைய புத்தி இல்லையோ, அந்த

௪௨, ௪௩, ௪௪. அறிவினர்கள், பார்த்த! வேதவார்த்தைகளில் பிரியமுடையவராய் வேறு(ஒன்றும்)இல்லையென்று கூறுபவராய், காமத்தன்மையராய், ஸ்வர்க்கத்தையே மேலாகக் கொண்டு, ஜன்மத்தையே கர்மத்தின்பயனாகக் கொடுப்பதும், போகத்தையும்செல்வத்தையும்அடையும்விஷயத்தில் சிறப்புக்கர்மங்கள்மிகுந்துள்ளதுமான யாதொரு இந்தப் புஷ்பித்த வார்த்தையைக் கூறுகிறார்களோ; அ(ந்)த(வார்த்தையி)னால் கவரப்பட்ட மனத்தினராய்ப் போகத்திலும் செல்வத்திலும் அழுந்தினவர்களுடைய மனத்தில் நிச்சயத்தன்மையதான புத்தி உண்டாவதில்லை.

யாம் இமாம் வக்ஷ்யமாணாம் புஷ்பிதாம் புஷ்பித இவ வ்ருக்ஷ: ஶோபமா-நாம் ஶ்ரூயமாணமாத்ரரமணீயாம் வாசம் வாக்யலக்ஷணாம் ப்ரவதந்தி । கே? அவிபஶ்சித: அல்பமதய:, அவிவேகின: இத்யர்த: । வேதவாதரதா: பஹ்வர்தவாதபலஸாதன-ப்ரகாஶகேஷு வேதவாக்யேஷு ரதா: ஹே பார்த ந அன்யதஸ்தி ஸ்வர்கா-திபலஸாதனேப்ய: கர்மப்ய: அன்யத் இதி வாதின: வதனஶீலா: ॥ ௪௨ ॥

தே ச—காமாத்மான: காமப்ரவணா:, காமபரா இத்யர்த: । ஸ்வர்கபரா:, ஸ்வர்க: பர: ப்ரதானபுருஷார்தோ யேஷாம் தே ஸ்வர்கபரா: ஸ்வர்கப்ரதானா: । ஜன்ம-கர்மபலப்ரதாம், கர்மண: பலம் கர்மபலம், ஜன்மைவ கர்மண: பலம் ஜன்மகர்மபலம், தத்ப்ரததாதீதி ஜன்மகர்மபலப்ரதா, தாம் வாசம் । ப்ரவதந்தி இதி ஸம்பந்த்யதே । க்ரியாவிஶேஷபஹுலாம், க்ரியாணாம் விஶேஷா: க்ரியாவிஶேஷா: தே பஹவோ யஸ்யாம் வாசி தாம், ஸ்வர்கபஶுபுத்ராத்யர்தா: யயா வாசா பாஹுல்யேன ப்ரகாஶ்யந்தே । போகைஶ்வர்யகதிம் ப்ரதி, போகஶ்ச ஐஶ்வர்யம் ச போகைஶ்வர்யே, தயோ: கதி: ப்ராப்தி: போகைஶ்வர்யகதி:, தாம் ப்ரதி ஸாதன-பூதா: தே க்ரியாவிஶேஷா:, தத்பஹுலாம் தாம் வாசம் ப்ரவதந்த: மூடா: ஸம்ஸாரே பரிவர்தந்தே இத்யபிப்ராய: ॥ ௪௩ ॥

தேஷாம் ச—போகைஶ்வர்யப்ரஸக்தானாம், போக: கர்தவ்ய: ஐஶ்வர்யம் ச இதி போகைஶ்வர்யயோரேவ ப்ரணயவதாம் தயாபஹ்ருதசேதஸாம்। தயா க்ரியா-

---

பூத்துள்ள மரம்போல நேர்த்தியானதாய்க் கேட்கும்பொழுதுரம்மியமானதாய் வாக்கியம்போல்தோற்றுவதான[1] வார்த்தையை[கர்மகாண்டவேதத்தை]ச் சொல்லுகிறார்கள்.—எவர்கள்?—புத்தியில்லாதவர்கள், அவிவேகிகள் என்றபடி. (அவர்கள்) அநேகஅர்த்தவாதங்களையும்[இதனை விரும்பியவன் இதனைச் செய்யவேண்டும் என்பதுபோன்ற விதிகளின்புகழ்ச்சியையும்], பயன்களையும்,(அவற்றைப் பெறும்)ஸாதனங்களையும் எடுத்துக்காட்டுகின்ற வேதவாக்கியங்களில் பற்றுடையவர்: ஏ பார்த்த! ஸ்வர்க்கம் பசு முதலியபயன்களைப் பெறுதற்கு ஸாதநமான கர்மங்களைக்காட்டிலும் வேறு இல்லையென்று இவ்வாறு சொல்லும் இயல்பினர். (௪௨)

அவர்கள் பின்னும் காமஸ்வபாவர்கள்=காமத்தையே (யாவற்றினும்)மேலாகக் கொண்டவர்கள் என்றபடி; (அவர்கள்) ஸ்வர்க்கத்தையே மேலான புருஷார்த்தமாகப் பிரதானமாகக்கொண்டு, கர்மவிசேஷங்கள் மிகுந்ததும், ஸ்வர்க்கம்பசு மக்கள் முதலிய பயன்களை மிகுதியாக எடுத்துக்காட்டுவதும்,போகத்தையும் செல்வத்தையும் பெறும்விஷயத்தில் ஸாதனமுமான கர்மவிசேஷங்கள் நிரம்பியதாய், பிறப்பையே கர்மத்தின் பயனாகக் கொடுக்கின்ற அந்தவார்த்தையைக்"கூறுகிறார்கள்" எனக் கூட்டுக. அவ்வார்த்தையைச் சொல்லும் மூடர்கள் ஸம்ஸாரத்தில் சுழலுகிறார்கள் என்பது கருத்து. (௪௩)

போகமும் ஸம்பத்தும் அவச்யமெனஅவற்றின்மேலேயே பிரியங்கொண்டு தந்மயமாய், கர்மவிசேஷங்கள் நிறைந்த அவ்வார்த்தையினால் மூடுண்டவிவேகபுத்தியை

---

[1] அழியாப் பயனை உணர்த்தும்வார்த்தையே வாக்கியமாவது; அழியும் பயனை உணர்த்துவது வாக்கியப்போலியாம் என்பது, இங்கே சொல்லுவான் குறிப்பு.—(ஆ.)

விசேஷபஹுலயா வாசா அபஹ்ருதசேதஸாம் ஆச்சாதிதவிவேகப்ரஜ்ஞாநாம் வ்யவஸாயாத்மிகா ஸாங்க்யே யோகே வா புத்தி: ஸமாதௌ, ஸமாதீயதே அஸ்மிந் புருஷோபபோகாய ஸர்வமிதி ஸமாதி: அந்த:கரணம் புத்தி: தஸ்மிந் ஸமாதௌ, ந விதீயதே ந பவதி இத்யர்த்த: ॥ ௪௪ ॥

யே ஏவம் விவேகபுத்திரஹிதா: தேஷாம் காமாத்மநாம் யத்பலம் தத் ஆஹ—

௪௫. த்ரைகுண்யவிஷயா வேதா: நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந ।
நிர்த்வந்த்வோ நித்யஸத்த்வஸ்தோ நிர்யோகக்ஷேம ஆத்மவாந் ॥

த்ரைகுண்யவிஷயா:, த்ரைகுண்யம் ஸம்ஸார: விஷய: ப்ரகாசயிதவ்ய: யேஷாம் தே வேதா: த்ரைகுண்யவிஷயா: । த்வம் து நிஸ்த்ரைகுண்யோ பவ அர்ஜுந, நிஷ்காமோ பவ இத்யர்த்த: । நிர்த்வந்த்வ:, ஸுகது:கஹேதூ ஸப்ரதிபக்ஷௌ பதார்த்தௌ த்வந்த்வசப்தவாச்யௌ, தத: நிர்கத: நிர்த்வந்த்வ: பவ । நித்யஸத்த்வஸ்த: ஸதா ஸத்த்வகுணாச்ரித: பவ । ததா நிர்யோகக்ஷேம:, அநுபாத்தஸ்ய உபாதாநம் யோக:, உபாத்தஸ்ய ரக்ஷணம் க்ஷேம: । யோகக்ஷேமப்ரதாநஸ்ய ச்ரேயஸி ப்ரவ்ருத்தி: துஷ்கரா இதி அத: நிர்யோகக்ஷேம: பவ । ஆத்மவாந் அப்ரமத்தச்ச பவ । ஏஷ தவ உபதேச: ஸ்வதர்மம் அநுதிஷ்டத: ॥௪௫॥

---

யுடைய அவர்களுடைய அந்தக்கரணத்திலே, (அதாவது - ) ஜீவனுடைய போகத்தின் பொருட்டு ஸகல (போகவிஷய)மும் செறிந்துகிடக்கின்ற மனத்திலே, ஸாங்க்யத்திலாயினும் யோகத்திலாயினும் நிச்சயத்தன்மையுள்ள புத்தி, உண்டாகமாட்டாது. (௪௪)

**யோகிக்குரிய உபதேசம்.**

எவர்கள் இவ்வாறு விவேகபுத்தியில்லாதவரோ, அந்தக் காமஸ்வபாவமுடையவர்க்கு (வரும்) பயன் இன்னதென்று கூறுகிறார்:

**௪௫. வேதங்கள் முக்குணங்களையும் (தாம் கூறும்) விஷயங்களாக உடையன. அர்ஜுந! நீ முக்குணங்களற்றவனாகவும், த்வந்தங்களற்றவனாகவும், எப்பொழுதும் ஸத்துவத்திலேயே நிற்பவனாகவும், யோகக்ஷேமமில்லாதவனாகவும், ஜாக்கிரதையுடையவனாகவும் இருக்கவேண்டும்.**

வேதங்களால் உணர்த்தப்படும் விஷயம் முக்குணங்களாலாகிய ஸம்ஸாரமாம். ஆனால் அர்ஜுந! நீ முக்குணங்களும் அற்றவனாய் இரு: ஆசைநீங்கியவனாய் இரு என்பது பொருள். இன்பதுன்பங்களுக்குக் காரணமும் ஒன்றற்கொன்று எதிரியுமான இரண்டுபொருள்கள் த்வந்த மென்னுஞ் சொல்லால் கூறப்படுவன; (நீ) அவற்றினின் றும் நீங்கியவனாய் இரு. எப்பொழுதும் ஸத்துவகுணத்தைச் சார்ந்தவனாய் இரு. யோகம் - ஸம்பாதியாததை ஸம்பாதித்தல்; க்ஷேமம் - தேடினதைக் காப்பாற்றுதல்; யோகக்ஷேமங்களை முக்கியமாகக்கொண்டவன் நன்மையை[முக்தியை]நாடுதல் அருமையாதலின், அவ்வண்ணமே, யோகக்ஷேமத்தை(நாடுதல்) இல்லாதவனாய் இரு. ஜாக்கிரதையுடையவனாக இரு. (நீ)ஸ்வதர்மத்தை அநுஷ்டிக்கும்பொழுது(கைக்கொள்ளவேண்டிய) உபதேசம் இது வாகும். (௪௫)

𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌵𑍇𑌦𑍋𑌕𑍍𑌤𑍇𑌷𑍁 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 𑌯𑌾𑌨𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑍍𑌯𑌨𑌨𑍍𑌤𑌾𑌨𑌿 𑌫𑌲𑌾𑌨𑌿 𑌤𑌾𑌨𑌿 𑌨𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌚𑍇𑌤𑍍, 𑌕𑌿𑌮𑌰𑍍𑌥𑌂 𑌤𑌾𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌯 𑌇𑌤𑌿 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ; 𑌶𑍃𑌣𑍁—

௪௬. 𑌯𑌾𑌵𑌾𑌨𑌰𑍍𑌥 𑌉𑌦𑌪𑌾𑌨𑍇 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃 𑌸𑌂𑌪𑍍𑌲𑍁𑌤𑍋𑌦𑌕𑍇 ।
𑌤𑌾𑌵𑌾𑌨𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 𑌵𑌿𑌜𑌾𑌨𑌤𑌃 ॥

𑌯𑌥𑌾 𑌲𑍋𑌕𑍇 𑌕𑍂𑌪𑌤𑌡𑌾𑌗𑌾𑌦𑍍𑌯𑌨𑍇𑌕𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌉𑌦𑌪𑌾𑌨𑍇 𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑌿𑌨𑍍𑌨𑍋𑌦𑌕𑍇 𑌯𑌾𑌵𑌾𑌨𑍍 𑌯𑌾𑌵𑌤𑍍𑌪𑌰𑌿𑌮𑌾𑌣𑌃 𑌸𑍍𑌨𑌾𑌨𑌪𑌾𑌨𑌾𑌦𑌿𑌃 𑌅𑌰𑍍𑌥𑌃 𑌫𑌲𑌂 𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌂 𑌸 𑌸𑌰𑍍𑌵𑌃 𑌅𑌰𑍍𑌥𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃 𑌸𑌂𑌪𑍍𑌲𑍁𑌤𑍋𑌦𑌕𑍇 𑌯𑍋𑌽𑌰𑍍𑌥𑌃 𑌤𑌾𑌵𑌾𑌨𑍇𑌵 𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑌤𑍇, 𑌤𑌤𑍍𑌰 𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌭𑌵𑌤𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌏𑌵𑌂 𑌤𑌾𑌵𑌾𑌨𑍍 𑌤𑌾𑌵𑌤𑍍𑌪𑌰𑌿𑌮𑌾𑌣 𑌏𑌵 𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌵𑍇𑌦𑍋𑌕𑍍𑌤𑍇𑌷𑍁 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 𑌯𑍋𑌽𑌰𑍍𑌥𑌃 𑌯𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 𑌸𑌃 𑌅𑌰𑍍𑌥𑌃 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌃 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌵𑌿𑌜𑌾𑌨𑌤𑌃 𑌯𑍋𑌽𑌰𑍍𑌥𑌃 𑌯𑌤𑍍 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌫𑌲𑌂 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃𑌸𑌂𑌪𑍍𑌲𑍁𑌤𑍋𑌦𑌕𑌸𑍍𑌥𑌾𑌨𑍀𑌯𑌂 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌤𑌾𑌵𑌾𑌨𑍇𑌵 𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 । '𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑌦𑌭𑌿𑌸𑌮𑍇𑌤𑌿 𑌯𑌤𑍍𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 𑌸𑌾𑌧𑍁 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌯𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑍇𑌦 𑌯𑌤𑍍𑌸 𑌵𑍇𑌦' 𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌃 । '𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌖𑌿𑌲𑌂' 𑌇𑌤𑌿 𑌚 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌧𑌿𑌕𑍃𑌤𑍇𑌨 𑌕𑍂𑌪𑌤𑌡𑌾𑌗𑌾𑌦𑍍𑌯𑌰𑍍𑌥𑌸𑍍𑌥𑌾𑌨𑍀𑌯𑌮𑌪𑌿 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 ॥ ௪௬ ॥

---

### கர்மயோகம்.

வேதங்களிற் கூறிய ஸகலகர்மங்களினுடைய அளவற்றபயன்கள்எல்லாம் விரும்பப்படாதனவானல், அவை[அந்தக் கர்மங்கள்] எதற்காக ஈச்வரனுக்கென்று [நிஷ்காமமாக] அநுஷ்டிக்கப்படுகின்றன என்பது ?—(விடை) கூறுவோம், கேள் :

௪௬. (கிணறு முதலிய)நீர்நிலையில் எவ்வளவு உபயோகம் உள்ளதோ, அவ்வளவு (உபயோகமும்) எங்கும்பெருகிய நீர்ப்பெருக்கில் உள்ளது. (அதுபோல,)ஸகலவேதங்களிலும் (எவ்வளவு ப்ரயோஜனம் உள்ளதோ, அவ்வளவு ப்ரயோஜனமும்) ஞானியான ப்ராஹ்மணனுக்கு (ப்ரஹ்மாநந்தத்தில் உள்ளது.)

உலகத்திலே கிணறு குளம் முதலாகப் பலவாயுள்ள சொற்பஜலமுடைய நீர்நிலைகளில் ஸ்நாநபாநம்முதலிய எவ்வளவு ப்ரயோஜனங்கள் உள்ளனவோ, அவ்வெல்லாப்ரயோஜனங்களும் எங்கும்பெருகிய (பெரிய) நீர்ப்பெருக்கிலும் உண்டாகின்றன : அங்கு(ப்ரயோஜனங்கள்) உள்ளடங்கிநிற்கின்றன என்பதுபொருள். இவ்வாறே, வேதங்கள்முழுவதிலும் கூறப்பட்ட கர்மங்களில் யாதொரு ப்ரயோஜநம் (அதாவது - ) கர்மத்தின்பயன் உள்ளதோ,அந்த ப்ரயோஜநம்முழுவதும் பரம்பொருளின் உண்மையைக் கண்டறிந்த துறவியான ப்ராஹ்மணனுக்கு உண்டாவதாய் எங்கும் பெருகிய (பெரிய) நீர்ப்பெருக்கை ஒத்ததான ஞானப்பயனிலே [ப்ரஹ்மாநந்தத்திலே] ஆகின்றது [அந்த ஆநந்தத்தினுள் அடங்குகின்றது]. (இதனை,) "ஜனங்கள் செய்யும் ஒவ்வொருநன்மையும் அவன் [ரைக்வன்] அறிந்ததை அறிபவனுக்குப் போய்ச்சேரும்" (சா - ச - க - ச)என்னும் சுருதியினல் (அறிக)."பார்த்த! ஸகலகர்மங்களும்" (ச - ௩௩) என (இதேவிஷயத்தைப்பற்றிப் பகவான்) கூறுவர். (ப்ரஹ்மாநந்தத்தை அடைதற்கு நிஷ்காமகர்மம் பரம்பரையான காரணம்; )ஆதலால்,(கர்மமானது)கிணறு குளம் முதலியவற்றை நிகர்த்ததா யிருந்தாலும், ஞானநிஷ்டைக்குத்தக்க உரிமையைப் பெறுதற்குமுன்,கர்மத்திலே அதிகாரம்பெற்றுள்ளவன் கர்மத்தைச் செய்யவேண்டும்.(௪௬)

तव च —

௪௭. कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ।
मा कर्मफलहेतुर्भूर्मा ते सङ्गोऽस्त्वकर्मणि ॥

कर्मण्येव अधिकारः न ज्ञाननिष्ठायां ते तव । तत्र च कर्म कुर्वतः मा फलेषु अधिकारः अस्तु, कर्मफलतृष्णा मा भूत् कदाचन कस्यांचिदवस्थायामपि इत्यर्थः । यदा कर्मफले तृष्णा ते स्यात् तदा कर्मफलप्राप्तेः हेतुः स्याः, एवं मा कर्मफलहेतुः भूः । यदा हि कर्मफलतृष्णाप्रयुक्तः कर्मणि प्रवर्तते तदा कर्मफलस्यैव जन्महेतुः भवेत् । यदि कर्मफलं न इष्यते, किं कर्मणा दुःखरूपेण इति मा ते तव सङ्गः अस्तु अकर्मणि अकरणे प्रीतिः मा भूत् ॥ ௪௭ ॥

यदि कर्मफलप्रयुक्तेन न कर्तव्यं कर्म, कथं तर्हि कर्तव्यमिति? उच्यते —

௪௮. योगस्थः कुरु कर्माणि सङ्गं त्यक्त्वा धनंजय ।
सिद्ध्यसिद्ध्योः समो भूत्वा समत्वं योग उच्यते ॥

योगस्थः सन् कुरु कर्माणि केवलम् ईश्वरार्थम्, तत्रापि

---

இனி உனக்கு (அதிகாரம் எதிலே என்றால்),

௪௭. கர்மத்திலேதான் உனக்கு அதிகாரம். ஒருகாலும் பயன்களிலே அதிகாரம் வேண்டாம். (நீ) கர்மத்தின் பயனை வருவித்துக்கொள்பவனாக ஆகாதே. கர்மத்தைச் செய்யாமையிலே உனக்குப் பிரியம் இல்லாதிருக்கட்டும்.

கர்மத்திலேயே உனக்கு அதிகாரம்; ஞானநிஷ்டையில் அன்று. அங்ஙனம் கர்மஞ் செய்கின்ற உனக்குப் பயன்களில் அதிகாரம், அதாவது – கர்மத்தின் பயன்களிலே ஆசையானது எந்தநிலையிலும் வேண்டாம். உனக்குக் கர்மத்தின்பயனிலே எப்பொழுது ஆசை உண்டாகுமோ, அப்பொழுது நீ கர்மத்தின் பயனைப் பெறுதற்குக் காரணமாவாய். நீ இவ்வாறு கர்மத்தின்பயனை வருவித்துக்கொள்பவனாக ஆகாதே. கர்மத்தின்பயனிலேயுள்ள ஆசையினால் தூண்டப்பட்டவனாய்(எவன்)எப்பொழுது கர்மத்தைச் செய்யச் செல்லுகின்றானோ, அப்பொழுது (அவன்) கர்மத்தின்பயனேயாகிய பிறப்புக்குக் காரணமாவன்: "கர்மத்தின்பயனை விரும்பாவிடில், துன்பவடிவமாகிய கர்மத்தால் என்ன?" என்று (நினைத்துக்) கர்மத்தைச் செய்யாமையிலே நீ விருப்பங் கொள்ளக்கூடாது. (௪௭)

கர்மத்தின்பய(னிலேயுள்ள ஆசையி)னால் ஏவப்பட்டுக் கர்மத்தைச் செய்யவேண்டாமென்றால், அப்பொழுது எப்படி [எதை உத்தேசித்து]க் கர்மம் செய்யவேண்டும் என்பது ?—(அதற்கு விடை) கூறப்படுகின்றது :

௪௮. தனஞ்ஜய ! யோகத்திலேநிலைத்துப் பற்றைவிட்டுப் (பயன்)கைகூடினும் கைகூடாவிடினும் ஸமமாகஇருந்து கர்மங்களைச் செய்; ஸமமாயிருத்தலே யோகம் எனப்படுகின்றது.

நீ யோகத்திலே நிலைத்துநின்று கேவலம் ஈச்வரன்பொருட்டே கர்மங்களைச் செய்யவேண்டும்; அதிலுங்கூட "ஈச்வரன் எனக்கு ப்ரஸன்னராகவேணும்" என்ற

'ईश्वरो मे तुष्यतु' इति सङ्गं त्यक्त्वा धनञ्जय। फलतृष्णाशून्येन क्रियमाणे कर्मणि सत्त्वशुद्धिजा ज्ञानप्राप्तिलक्षणा सिद्धिः, तद्विपर्ययजा असिद्धिः, तयोः सिद्ध्यसिद्ध्योः अपि समः तुल्यः भूत्वा कुरु कर्माणि॥

कोऽसौ योगः यत्रस्थः कुरु इति उक्तम्? इदमेव तत् सिद्ध्यसिद्ध्योः समत्वं योगः उच्यते॥ ४८॥

यत्पुनः समत्वबुद्धियुक्तम् ईश्वराराधनार्थं कर्म उक्तम् एतस्मात् कर्मणः—

४९. दूरेण ह्यवरं कर्म बुद्धियोगाद्धनञ्जय।
बुद्धौ शरणमन्विच्छ कृपणाः फलहेतवः॥

दूरेण अतिविप्रकर्षेण हि अवरम् अधमं निकृष्टं कर्म फलार्थिना क्रियमाणं बुद्धियोगात् समत्वबुद्धियुक्तात् कर्मणः, जन्ममरणादिहेतुत्वात्। हे धनञ्जय। यतः एवं ततः योगविषयायां बुद्धौ तत्परिपाकजायां वा साङ्ख्यबुद्धौ शरणम् आश्रयम् अभयप्राप्तिकारणम् अन्विच्छ प्रार्थयस्व, परमार्थज्ञानशरणो भव इत्यर्थः। यतः अवरं कर्म कुर्वाणाः कृपणाः दीनाः फलहेतवः फलतृष्णाप्रयुक्ताः स-

---

பற்றை(யும்) விட்டு(விடு) தநஞ்ஜய ! பயனிலே ஆசையில்லாதவன் கர்மத்தைச் செய்து கொண்டிருக்கும்பொழுது,(அவனுக்குஉண்டாகின்ற) சித்தசுத்தியினுல் (அவன்)ஞான த்தைப் பெறுதலானது ஸித்தியாம்; அதற்கு மறுதலையா(ன மனஅழுக்கின)ல் உண் டாவது அஸித்தியாம். அந்த ஸித்திஅஸித்திகளிலும் ஸமமாகஇருந்து (நீ) கர்மங்க ளைச் செய்பக்கடவாய்.

எதிலே நிலைத்துநின்று (கர்மங்களைச்)'செய்' என்றுசொல்லப்பட்டதோ,அந்த யோகமென்பது யாது?—இதுதான் அது,—ஸித்திஅஸித்தி இரண்டிலும் ஸமமாயி ருத்தல் யோகம் எனப்படுகின்றது.

(கைகூடுவதிலும் கைகூடாமையிலும்) ஸமத்துவபுத்தியோடுகூடி ஈச்வரனை ஆராதித்தற்பொருட்டுச்செய்யும் இந்த(நிஷ்காம) கர்மமாகிய

**சகூ. புத்தியோகத்தைக்காட்டிலும் (காம்ய)கர்மமானது, தநஞ்ஜய ! மிகத் தாழ்ந்ததன்றே. (அந்தப்)புத்தியிலே (உனக்கு) அடைக்கலத்தைத் தேடிக்கொள். பயனைக் கருதுபவர் கீழோராவர்.**

பயனை நாடுபவனுற் செய்யப்படும் கர்மமானது, ஸமத்துவபுத்தியோடுகூடிய புத்தியோகமாகிய கர்மத்தினும் மிகத்தாழ்ந்தது ; பிறப்புஇறப்புமுதலியவற்றிற்குக் காரணமாதலால். ஏ தநஞ்ஜய ! இவ்வாறிருத்தலின், யோகத்தைப்பற்றிய புத்தியிலா யினும், அதன்பக்குவத்தால் உண்டாகும் ஸாங்க்யபுத்தியிலாயினும் பயமில்லா மைக்குக் காரணமான அடைக்கலத்தைத் தேடிக்கொள் ; பரம்பொருளின் ஞானத் தையே (உனக்குத்)தஞ்சமாகக்கொண்டிரு என்பதுபொருள். ஏனெனில்,பயன்களின் மீதுள்ள ஆசையினுல் தூண்டப்பட்டவர்களாய்க்கொண்டு தாழ்ந்தகர்மத்தைச் செய்

णाः ; 'यो वा एतदक्षरं गार्ग्यविदित्वाऽस्माल्लोकात्प्रैति स कृपणः' इति श्रुतेः ॥ ௪௯ ॥

समत्वबुद्धियुक्तः सन् स्वधर्ममनुतिष्ठन् यत्फलं प्राप्नोति तच्छृणु—

௫௦. बुद्धियुक्तो जहातीह उभे सुकृतदुष्कृते ।
तस्माद्योगाय युज्यस्व योगः कर्मसु कौशलम् ॥

बुद्धियुक्तः कर्मसमत्वविषयया बुद्ध्या युक्तः बुद्धियुक्तः स जहाति परित्यजति इह अस्मिँल्लोके उभे सुकृतदुष्कृते पुण्यपापे सत्त्वशुद्धिज्ञानप्राप्तिद्वारेण यतः तस्मात् समत्वबुद्धियोगाय युज्यस्व घटस्व । योगो हि कर्मसु कौशलम् स्वधर्माख्येषु कर्मसु वर्तमानस्य या सिद्ध्यसिद्ध्योः समत्वबुद्धिः ईश्वरार्पितचेतस्तया तत् कौशलं कुशलभावः। तद्धि कौशलं यद्बन्धनस्वभावान्यपि कर्माणि समत्वबुद्ध्या स्वभावान्निवर्तन्ते । तस्मात् समत्वबुद्धियुक्तो भव त्वम् ॥ ௫௦ ॥

यस्मात्—

௫௧. कर्मजं बुद्धियुक्ता हि फलं त्यक्त्वा मनीषिणः ।
जन्मबन्धविनिर्मुक्ताः पदं गच्छन्त्यनामयम् ॥

---

பவர்கள் கீழ்மக்களாவர். (இதனை,) "கார்க்கி! எவன் இந்த அழிவில்லாப்பொருளை அறியாமலே இவ்வுலகத்தினின்று செல்லுகிறானோ, அவன் கீழோனவன்" (பி-ரு-அ-௩௩) என்னுஞ் சுருதியினால் (அறிக). (௪௯)

ஸமத்துவபுத்தியின் சிறப்பு.

ஸமத்துவபுத்தியோடு கூடியவனாய் ஸ்வதருமத்தை அநுஷ்டிப்பவன் எந்தப் பயனை அடைகிறானோ, அதைக் கேள்:

**௫௦. (ஸமத்துவ)புத்தியைக் கூடினவன் இங்கே நல்வினைதீவினைகளை நீக்கிக் கொள்கிறான்; ஆதலால் (நீ) யோகத்தைக் கூடுவாயாக; யோகமானது கர்மங்களில் ஸாமர்த்திய மாம்.**

இவ்வுலகத்திலே கர்மங்களில் ஸமத்துவவிஷயமான புத்தியோடுகூடிய அவன் சித்தசுத்தியையும் ஞானத்தையும் பெற்று, அதன்மூலமாகப் புண்யபாபங்கள் இரண்டையும் (தன்னைச் சாராதபடி) நீக்கிக்கொள்கிறான்; ஆகவே, நீ ஸமத்துவபுத்தி யோகத்தைக் கூடுவாயாக. யோகம் கர்மங்களில்ஸாமர்த்தியமன்றோ. அந்தஸாமர்த்தியமாவது - ஈச்வரனிடத்து மனதை அர்ப்பித்திருப்பதால் ஸ்வதருமமெனப்படுகின்ற கர்மங்களில் இருப்பவனுக்கு(ப் பயன்) கைகூடுவதிலும் கைகூடாமையிலும் உள்ள ஸமத்துவபுத்தியாம். "கர்மங்கள் (பிராணிகளை ஸம்ஸாரத்தில்) கட்டுப்படுத்துகின்ற ஸ்வபாவமுடையனவாயினும், ஸமத்துவபுத்தியோடு (செய்யப்படும்பொழுது) அப்படிக் கட்டுப்படுத்துகின்ற (தம்)ஸ்வபாவத்தினின்றும் நீங்கிவிடுகின்றன" என்ற அதுவன்றோ ஸாமர்த்தியம். ஆகவே, நீ ஸமத்துவபுத்தியை யுடையவனாக இரு. (௫௦)

ஏனெனில்,

**௫௧. (ஸமத்துவ)புத்தியுடையவர்கள், கர்மத்தினாலுண்டாகும் பயனை விட்டிட்டு, ஞானிகளாய்ப் பிறப்பென்னும் கட்டினின்று முற்றும்விடுபட்டுத் தொந்தரவு அற்ற இடத்திற்குச் செல்லுகிறார்கள்.**

'𑌕𑌰𑍍𑌮𑌜𑌂 𑌫𑌲𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾' 𑌇𑌤𑌿 𑌵𑍍𑌯𑌵𑌹𑌿𑌤𑍇𑌨 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌃। 𑌇𑌷𑍍𑌟𑌾𑌨𑌿𑌷𑍍𑌟𑌦𑍇𑌹𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌃 𑌕𑌰𑍍𑌮𑌜𑌂 𑌫𑌲𑌂 𑌕𑌰𑍍𑌮𑌭𑍍𑌯𑍋 𑌜𑌾𑌤𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌸𑌮𑌤𑍍𑌵𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌸𑌨𑍍𑌤𑌃 𑌹𑌿 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌫𑌲𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌃 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌜𑌨𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃, 𑌜𑌨𑍍𑌮 𑌏𑌵 𑌬𑌨𑍍𑌧𑌃 𑌜𑌨𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌃, 𑌤𑍇𑌨 𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌜𑍀𑌵𑌨𑍍𑌤 𑌏𑌵 𑌜𑌨𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌾𑌤𑍍 𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌸𑌨𑍍𑌤𑌃 𑌪𑌦𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌖𑍍𑌯𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌅𑌨𑌾𑌮𑌯𑌂, 𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌦𑍍𑌰𑌵𑌰𑌹𑌿𑌤𑌮𑍍 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥

𑌅𑌥𑌵𑌾—'𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌾𑌦𑍍𑌧𑌨𑌂𑌜𑌯' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌰𑌭𑍍𑌯 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌦𑌰𑍍𑌶𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑍈𑌵 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃𑌸𑌂𑌪𑍍𑌲𑍁𑌤𑍋𑌦𑌕𑌸𑍍𑌥𑌾𑌨𑍀𑌯𑌾 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌜𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌜𑌨𑌿𑌤𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌾, 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍𑌸𑍁𑌕𑍃𑌤𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌪𑍍𑌰𑌹𑌾𑌣𑌾𑌦𑌿𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌶𑍍𑌰𑌵𑌣𑌾𑌤𑍍 ॥ ௫௧ ॥

𑌯𑍋𑌗𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌜𑌨𑌿𑌤𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌜𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌕𑌦𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௫௨. 𑌯𑌦𑌾 𑌤𑍇 𑌮𑍋𑌹𑌕𑌲𑌿𑌲𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌤𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑌿।
𑌤𑌦𑌾 𑌗𑌨𑍍𑌤𑌾𑌸𑌿 𑌨𑌿𑌰𑍍𑌵𑍇𑌦𑌂 𑌶𑍍𑌰𑍋𑌤𑌵𑍍𑌯𑌸𑍍𑌯 𑌶𑍍𑌰𑍁𑌤𑌸𑍍𑌯 𑌚 ॥

𑌯𑌦𑌾 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌕𑌾𑌲𑍇 𑌤𑍇 𑌤𑌵 𑌮𑍋𑌹𑌕𑌲𑌿𑌲𑌂 𑌮𑍋𑌹𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑍍 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌰𑍂𑌪𑌂 𑌕𑌾𑌲𑍁𑌷𑍍𑌯𑌂, 𑌯𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌵𑍇𑌕𑌬𑍋𑌧𑌂 𑌕𑌲𑍁𑌷𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 𑌵𑌿𑌷𑌯𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇, 𑌤𑌤𑍍 𑌤𑌵 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌵𑍍𑌯𑌤𑌿𑌤𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 𑌵𑍍𑌯𑌤𑌿𑌕𑍍𑌰𑌮𑌿𑌷𑍍𑌯𑌤𑌿, 𑌶𑍁𑌦𑍍𑌧𑌭𑌾𑌵𑌮𑍍 𑌆𑌪𑌤𑍍𑌸𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃। 𑌤𑌦𑌾 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌕𑌾𑌲𑍇 𑌗𑌨𑍍𑌤𑌾𑌸𑌿 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌸𑍍𑌯-

---

கர்மத்தினாலுண்டாகும் பயன் - கர்மத்தினின்று வரும் நல்லன தீயனவான சரீரங்களை எடுத்தல். ஸமத்துவபுத்தியுள்ள (ஸாதுக்கள் அப்பயனைவிரும்பாது) விட்டிட்டு, ஞானிகளாய்ப் பிறப்பாகிய கட்டினின்றும் உயிரோடிருக்கும்பொழுதே முற்றும் விடுபட்டவராய் ஸகலஸங்கடமும் அற்றதான மோக்ஷ மெனப்படுகின்ற விஷ்ணுவின் பரமபதத்தைச் சேர்கிறார்கள். ஆதலால் (நீ ஸமத்துவபுத்தியைக் கூடுவாயாக).

அல்லது, எங்கும் பெருகிய (பெரிய) நீர்ப்பெருக்கை ஒத்ததாய்க் கர்மயோகத்தால்வரும் சித்தசுத்தியினால் உண்டாவதாய்ப் பரம்பொருளைக் கண்டுணர்தலேயான புத்தியானது, " புத்தியோகத்தைக்காட்டிலும் " (௨ - ௪௯)என்பதுமுதல் இதுவரையிலும் எடுத்துக்காட்டப்பட்டது ; (அது) புண்யபாபங்களை நீக்கிக்கொள்ளுதல் முதலியவற்றிற்கு நேரேகாரணமானதென்று சுருதி கூறுதலால் (என்றும் உரைக்கலாம்).()

கர்மயோகத்தை அநுஷ்டிப்பதனாலே உண்டாவதான சித்தசுத்தியால் வரும் புத்தியை [ஞானத்தை]ப் பெறுவது எப்பொழுது என்பது ?—(விடை)கூறுவோம் :

**௫௨. எப்பொழுது உன் மனமானது மோஹ ஸ்வரூபமான கலக்கத்தைக் கடந்திடுமோ, அப்பொழுது (நீ) கேட்கவேண்டியதிலும் கேட்டதிலும் வெறுப்பை அடைவாய்.**

ஆத்மாஅநாத்மாக்களைப் பகுத்தறியும் அறிவைக்கலக்கி மனத்தை விஷயங்களிற்செலுத்துகின்ற மோஹஸ்வரூபமாகிய அவிவேகமென்னும் கலக்கத்தை, எப்பொழுது உன் புத்தியானது கடந்துவிடுமோ, அதாவது - பரிசுத்தமான தன்மையை அடையுமோ; அப்பொழுது நீகேட்கவேண்டியதிலும் கேட்டதிலும் ஆசையின்மையை

अपि निर्वेदं वैराग्यं श्रोतव्यस्य श्रुतस्य च, तदा श्रोतव्यं श्रुतं च ते निष्फलं प्रतिभाति इत्यभिप्रायः ॥ ५२ ॥

मोहकलिलात्ययद्वारेण लब्धात्मविवेकप्रज्ञः कदा कर्मयोगजं फलं परमार्थयोगमवाप्स्यसि इति चेत्, तच्छृणु—

५३. श्रुतिविप्रतिपन्ना ते यदा स्थास्यति निश्चला ।
समाधावचला बुद्धिस्तदा योगमवाप्स्यसि ॥

श्रुतिविप्रतिपन्ना अनेकसाध्यसाधनसम्बन्धप्रकाशनश्रुतिभिः श्रवणैः प्रवृत्तिनिवृत्तिलक्षणैः विप्रतिपन्ना नानाप्रतिपन्ना श्रुति-विप्रतिपन्ना विक्षिप्ता सती ते तव बुद्धिः यदा यस्मिन् काले स्थास्यति स्थि-रीभूता भविष्यति निश्चला विक्षेपचलनवर्जिता सती समाधौ, समाधी-यते चित्तमस्मिन्निति समाधिरात्मा, तस्मिन्नात्मनीत्येतत् । अचला, तत्रापि विकल्पवर्जितेत्येतत् । बुद्धिः अन्तःकरणम् । तदा त-स्मिन् काले योगमवाप्स्यसि विवेकप्रज्ञां समाधिं प्राप्स्यसि ॥ ५३ ॥

प्रश्नबीजं प्रतिलभ्य अर्जुन उवाच लब्धसमाधिप्रज्ञस्य लक्षण-बुभुत्सया—

अर्जुन उवाच ॥

५४. स्थितप्रज्ञस्य का भाषा समाधिस्थस्य केशव ।
स्थितधीः किं प्रभाषेत किमासीत व्रजेत किम् ॥

---

அடைவாய்: அப்பொழுது உனக்கு (வேதாந்தநூலைத்தவிர மற்றைய நூலை)க்கேட்க வேண்டியதும் கேட்டதும் நிஷ்ப்ரயோஜனமெனத்தோன்றும் என்பது கருத்து.(௫௨)

மோஹஸ்வரூபமாகிய கலக்கம் நீங்குவதனால் ஆத்மவிவேகபுத்தியைப்பெற்ற வனுக் கர்மயோகத்தின் பயனாக உண்டாகும் பரமார்த்தயோகத்தை [ஞானயோகத்தை] நீ எப்பொழுது பெறுவாய் என்றால், அதனைக் கேள் :

௫௩. (பல) கேள்விகளால் பலவாறாய்க் கலங்கியுள்ள உன் மனமானது எப்பொழுது ஆத்மாவிடத்து நிச்சலமாய் அசைவற்றதாய் நிற்குமோ, அப்பொழுது (நீ)யோகத்தைப் பெறுவாய்.

பல பயன்களையும், (அவற்றைப்பெறுதற்கான பல)கருவிகளையும், (அப்பயன்கட்கும் கருவிகட்கும் உள்ள)ஸம்பந்தங்களையும் விளக்கி,ப்ரவிருத்தி நிவிருத்திகளை உணர்த்தும்(நூல்களின்) கேள்விகளால் பலவிதமாய் மயங்கிக்கலங்கிய உன்மனமானது, சித்தத்தைத் தன்னிடத்தில் வைக்கப்பெறுவதாகிய ஆத்மாவினிடத்து ஸம்சய விபரீதமற்றதாய் எப்பொழுது ஸ்திரமாய் நிற்குமோ, அப்பொழுது நீ யோகத்தை=விவேகபுத்தியாகிய ஸமாதியைப் பெறுவாய். (௫௩)

ஜீவன்முக்தனுடைய லக்ஷணம்.

வினாவுக்கு ஸமயம் வாய்த்தது கண்டு, ஆத்மஞானத்தை அடைந்தவனுடைய லக்ஷணத்தைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்ற விருப்பத்தால் அர்ஜுனன் சொல்ல லுற்றான் :

அர்ஜுனன் சொல்லலுற்றான் :

௫௪. கேசவ! ஞானம்நிலைத்து ஸமாதியில் நிற்பவனை எவ்வாறு சொல்வது ? ஞானம் நிலைத்தவன் எவ்வாறு பேசுவான்? எவ்வாறு இருப்பான்? எவ்வாறு நடப்பான்?

𑌸𑍍𑌥𑌿𑌤𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾 “𑌅𑌹𑌮𑌸𑍍𑌮𑌿 𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮” 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌃, 𑌤𑌸𑍍𑌯 𑌕𑌾 𑌭𑌾𑌷𑌾 𑌭𑌾𑌷𑌣𑌂 𑌵𑌚𑌨𑌂, 𑌕𑌥𑌂 𑌅𑌸𑍌 𑌪𑌰𑍈𑌃 𑌭𑌾𑌷𑍍𑌯𑌤𑍇 𑌸𑌮𑌾𑌧𑌿𑌸𑍍𑌥𑌸𑍍𑌯 𑌸𑌮𑌾𑌧𑍌 𑌸𑍍𑌥𑌿𑌤𑌸𑍍𑌯 𑌹𑍇 𑌕𑍇𑌶𑌵 । 𑌸𑍍𑌥𑌿𑌤𑌧𑍀𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌃 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌵𑌾 𑌕𑌿𑌂 𑌪𑍍𑌰𑌭𑌾𑌷𑍇𑌤 𑌕𑌿𑌂 𑌆𑌸𑍀𑌤 𑌵𑍍𑌰𑌜𑍇𑌤 𑌕𑌿𑌂 𑌆𑌸𑌨𑌂 𑌵𑍍𑌰𑌜𑌨𑌂 𑌵𑌾 𑌤𑌸𑍍𑌯 𑌕𑌥𑌂 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌸𑍍𑌥𑌿𑌤𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌅𑌨𑍇𑌨 𑌶𑍍𑌲𑍋𑌕𑍇𑌨 𑌪𑍃𑌚𑍍𑌛𑍍𑌯𑌤𑍇 ॥ ௫௪ ॥

𑌯𑍋 𑌹𑌿 𑌆𑌦𑌿𑌤𑌃 𑌏𑌵 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌃, 𑌯𑌶𑍍𑌚 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨, 𑌤𑌯𑍋𑌃 ‘𑌪𑍍𑌰𑌜𑌹𑌾𑌤𑌿’ 𑌇𑌤𑌿 𑌆𑌰𑌭𑍍𑌯 𑌆 𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑌪𑌰𑌿𑌸𑌮𑌾𑌪𑍍𑌤𑍇𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌸𑌾𑌧𑌨𑌂 𑌚 𑌉𑌪𑌦𑌿𑌶𑍍𑌯𑌤𑍇 । 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑍈𑌵 𑌹𑌿 𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌕𑍃𑌤𑌾𑌰𑍍𑌥𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌨𑌿 𑌯𑌾𑌨𑌿 𑌤𑌾𑌨𑍍𑌯𑍇𑌵 𑌸𑌾𑌧𑌨𑌾𑌨𑌿 𑌉𑌪𑌦𑌿𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍇, 𑌯𑌤𑍍𑌨𑌸𑌾𑌧𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌯𑌾𑌨𑌿 𑌯𑌤𑍍𑌨𑌸𑌾𑌧𑍍𑌯𑌾𑌨𑌿 𑌸𑌾𑌧𑌨𑌾𑌨𑌿 𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌨𑌿 𑌚 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌤𑌾𑌨𑌿 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌉𑌵𑌾𑌚—

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 ॥

௫௫. 𑌪𑍍𑌰𑌜𑌹𑌾𑌤𑌿 𑌯𑌦𑌾 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍𑌪𑌾𑌰𑍍𑌥 𑌮𑌨𑍋𑌗𑌤𑌾𑌨𑍍 ।
𑌆𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌤𑍁𑌷𑍍𑌟𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑌦𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

𑌪𑍍𑌰𑌜𑌹𑌾𑌤𑌿 𑌪𑍍𑌰𑌕𑌰𑍍𑌷𑍇𑌣 𑌜𑌹𑌾𑌤𑌿 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑌤𑌿 𑌯𑌦𑌾 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌕𑌾𑌲𑍇 𑌕𑌾-

---

"நான் பரப்ரஹ்மமாய் இருக்கிறேன்" என்னும் ஞானம் நிலைத்து ஸமாதியில் நிற்பவனைச்சொல்லுதல் எவ்வாறு? கேசவ! பிறரால் எவ்வாறு இவன் பேசப்படுகிறான்? [இவனுடைய லக்ஷணம் என்ன?] நிலைத்த ஞானமுள்ளவன், தான் எப்படிப் பேசுவான்? எவ்வாறு இருப்பான்? எவ்வாறு நடப்பான்? அவனுக்கு இருத்தலாவது, நடத்தலாவது எப்படி? என்பது பொருள். இந்த சுலோகத்தால் ஞானம்நிலைத்தவனுடைய லக்ஷணம் கேட்கப்படுகின்றது. (௫௪)

எவன் முதலிலிருந்தே [ப்ரஹ்மசர்யநிலையிலிருந்தே] கர்மங்களைத் துறந்து ஞானயோகநிஷ்டையில் சென்றிருக்கின்றானோ, (வேறு) எவன் (துறவாது) கர்மயோகத்தால் செல்லுகின்றானோ [கர்மயோகநிஷ்டையிலேயே சென்றிடுகின்றானோ), அந்த இருவர்க்கும் "பார்த்த!" (உ - ௫௫) என்பதுமுதல் அத்தியாயம் முற்றும்வரையிலும் ஞானம் நிலைத்தவனுடைய லக்ஷணமும், (அவனுடைய நிலையைப்பெறுதற்கான) ஸாதநமும் உபதேசிக்கப்படுகின்றன. ஏனெனில், முக்தி கைகூடப்பெற்றவனுடைய லக்ஷணங்கள் எவைகளோ, அவைகளே வேதாந்தநூல்களில் எங்கும்ஸாதனங்களாக உபதேசிக்கப்படுகின்றன; முயற்சியினால் ஸாதிக்கக்கூடியவையாதலின். முயற்சியால் ஸாதிக்கக்கூடிய ஸாதநங்களும், (ஞானத்தின் வல்லமையினால் வரக்கூடிய) லக்ஷணங்களும் எவைகளோ, அவற்றை ஸ்ரீபகவான் கூறலானார்:

(க) தன்னிடத்தே தனக்கு ஸந்தோஷம்.

ஸ்ரீபகவான் சொல்லலுற்றார்:

௫௫. *பார்த்த! தானாக ஆத்மாவினிடத்தே ஸந்தோஷித்திருப்பவனாய், மனத்திலுள்ள ஸகல ஆசைகளையும் எவன் எப்பொழுது தள்ளிவிடுகின்றானோ, அப்பொழுது (அவன்) ஞானம்நிலைத்தவன் எனப்படுகிறான்.*

எப்பொழுது (ஒருவன் தன்) நெஞ்சினுள் புகுந்துகிடக்கின்ற பலபடியான

सर्वान् समस्तान् हे पार्थ मनोगतान् मनसि प्रविष्टान् हृदि प्रविष्टान्। सर्वकामपरित्यागे तुष्टिकारणाभावात् शरीरधारणनिमित्तशेषे च सति उन्मत्तप्रमत्तस्येव प्रवृत्तिः प्राप्ता, इत्यत उच्यते—आत्मन्येव प्रत्यगात्मस्वरूपे एव आत्मना स्वेनैव बाह्यलाभनिरपेक्षः तुष्टः परमार्थदर्शनामृतरसलाभेन अन्यस्मात् अलंप्रत्ययवान् स्थितप्रज्ञः स्थिता प्रतिष्ठिता आत्मानात्मविवेकजा प्रज्ञा यस्य सः स्थितप्रज्ञः विद्वान् तदा उच्यते। त्यक्तपुत्रवित्तलोकैषणः संन्यासी आत्मारामः आत्मक्रीडः स्थितप्रज्ञ इत्यर्थः॥ ௫௫ ॥

किं च—

௫௬. दुःखेष्वनुद्विग्नमनाः सुखेषु विगतस्पृहः।
वीतरागभयक्रोधः स्थितधीर्मुनिरुच्यते॥

दुःखेषु आध्यात्मिकादिषु अनुद्विग्नं न प्रक्षुभितं दुःखप्राप्तौ मनो यस्य सोऽयम् अनुद्विग्नमनाः। तथा सुखेषु प्राप्तेषु

---

ஆசைகளை முற்றிலும் விட்டொழிக்கின்றானோ, உள்ளேயுள்ள ஆத்மஸ்வரூபத்திலேயே தானாகவே திருப்தனாய், வெளிலாபங்களை வேண்டாதவனாய், பரம்பொருளைக் கண்டுணர்தலாகிய அமிருதரஸம் கிடைக்கப்பெற்றமையால் 'மற்றைய பொருள்கள் வேண்டாம்' என்ற எண்ணம்வந்தவனாய் இருக்கின்றானோ, அப்பொழுது (அவன்) ஆத்மாஅநாத்மாக்களின் ஆராய்ச்சியாலான ஞானம் நிலைத்திருக்கப்பெற்றவன் வித்வான்[ஞானி] எனப்படுகிறான். ஸகலஆசைகளையும் ஒழித்திட்டவளவிலே, ஸந்தோஷத்தை உண்டாக்க ஒன்றும் இல்லாமையாலும், உடம்பொடுநிற்றற்குக் காரணமான (கர்மத்தின்) மிச்சம் பின்னும் இருப்பதனாலும் (ஞானம்நிலைத்தவனுடைய) நடக்கையானது பித்தன் வெறியன் இவர்களுடைய(நடக்கை)போல ஆகும்என்றதனால் (தான்) "தானாக ஆத்மாவினிடத்தே ஸந்தோஷித்திருப்பவனாய்" என அருளிச்செய்கிறார். மக்கள், பொருள், உலகம் என்றவற்றினிடத்துப் பற்றைவிட்டு முற்றத்துறந்தவனாய், ஆத்மாவினிடத்தே மகிழ்பவனாய், ஆத்மாவோடு விளையாடுபவன், ஞானம் நிலைத்தவன் என்பது (தேர்ந்த)பொருள். (௫௫)

(உ) இன்ப துன்பங்களில் ஒப்பநிற்றல்.

மேலும்,

௫௬. துக்கங்களில் கொந்திடாத மனத்தினனாய், ஸுகங்களில் ஆசையற்றவனாய், (பொருள்களின்மேல்) பற்றும் பயமும் கோபமும் நீங்கப்பெற்றவனாய் இருப்பவன், நிலைத்தஞானமுடையவன் முனிவன் எனப்படுகிறான்.

ஆத்யாத்மிகம்முதலிய[1] துன்பங்கள் வந்தபொழுது மனமானது நிலைகுலைந்து நோவப்பெறுமதனும், அப்படியே, விறகுமுதலியவற்றை இடும்பொழுது தீயானது

---

[1] முதலிய என்றதனால், ஆதிபௌதிகமும் ஆதிதைவிகமும் கொள்க. தலைவலி, ஜ்வரம் முதலியவற்றால்வருவது ஆத்யாத்மிகம். தேள், பாம்பு முதலியவற்றால் வருவது ஆதிபௌதிகம். இடி, மழையின்மை முதலியவற்றால் வருவது ஆதிதைவிகம். ஆத்யாத்மிகம் - தன்னைப்பற்றி வருவது. ஆதிபௌதிகம் - பிற உயிர்களைப்பற்றி வருவது. ஆதிதைவிகம் - தெய்வத்தைப்பற்றி வருவது. துன்பங்கள் இவ்வாறாக மூன்றுவகை.

விகதா ஸ்ப்ருஹா த்ருஷ்ணா யஸ்ய, ந அக்நிரிவ இந்தநாத்யாதாநே ஸுகாநி அநு-வர்ததே ஸ விகதஸ்ப்ருஹ: । வீதராகபயக்ரோத: ராகஶ்ச பயம் ச க்ரோதஶ்ச வீதா: விகதா: யஸ்மாத் ஸ: வீதராகபயக்ரோத: । ஸ்திததீ: ஸ்திதப்ரஜ்ஞ: முநி: ஸந்ந்யாஸீ ததா உச்யதே ॥ ருசு ॥

கிஂ ச—

ருஎ. ய: ஸர்வத்ராநபிஸ்நேஹஸ் தத்தத் ப்ராப்ய ஶுபாஶுபம் ।
நாபிநந்ததி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥

ய: முநி: ஸர்வத்ர தேஹஜீவிதாதிஷ்வபி அநபிஸ்நேஹ: அபிஸ்நேஹவர்ஜித: தத்தத் ப்ராப்ய ஶுபாஶுபம் தத்தத் ஶுபம் அஶுபம் வா லப்த்வா ந அபிநந்ததி ந த்வேஷ்டி ஶுபம் ப்ராப்ய ந துஷ்யதி ந ஹ்ருஷ்யதி, அஶுபம் ப்ராப்ய ந த்வேஷ்டி இத்யர்த: । தஸ்ய ஏவம் ஹர்ஷவிஷாதவர்ஜிதஸ்ய விவேகஜா ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ ருஎ ॥

கிஂ ச—

ருஅ. யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோ(அ)ங்காநீவ ஸர்வஶ: ।
இந்த்ரியாணீந்த்ரியார்தேப்யஸ் தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥

யதா ஸம்ஹரதே ஸம்யக் உபஸம்ஹரதே ச அயம் ஜ்ஞாநநிஷ்டாயாம் ப்ரவ்ருத்தோ யதி: கூர்ம: அங்காநி இவ யதா கூர்மோ பயாத் ஸ்வாநி அங்காநி உப-

(மேன்மேலும் வளர்வது)போல, ஸுகங்கள் வந்தபொழுது ஆசையானது ஸுகங்களைஒட்டி மேன்மேலும் மிகப்பெருமலும், பயகோபங்கள் நீங்கவும் பெற்றவன் எவனே, அவன் அப்பொழுது ஸ்திதப்ரஜ்ஞன், முநி, ஸந்யாஸி எனப்படுகிருன்.(ருசு)

(ரு) வெறுப்பும், களிப்பும், பற்றும் இல்லாமை.

அன்றியும்,

ருஎ. எவன் எங்கும் பற்றில்லாதவனய், நல்லதும் தீயதுமான அததைப் பெற்று ஸந்தோஷமும் வெறுப்பும் கொள்வதில்லையோ, அவனுடைய ஞானம் நிலை பெற்றது.

முநியென்பவன் சரீரஜீவநம் முதலியவற்றிலுங்கூடப் பற்றில்லாதவனய், நல்லதையும் தீயதையும் பெற்று ஸந்தோஷிப்பதில்லை, வெறுப்புறுவது(ம்)இல்லை : நல்லவற்றை அடைந்து மகிழ்வது(ம்) இல்லை, தீயவற்றைப் பெற்றுப் பகைப்பதும் இல்லை என்பது பொருள். இவ்வாறு ஸந்தோஷமும் வ்யஸநமும் இல்லாதவனுக்கு விவேகத்தாற் பிறந்த ஞானமானது நிலைபெற்று நிற்கின்றது. (ருஎ)

(ச) இந்திரியங்கள் தம்தம் விஷயங்களினின்றும் முற்றிலும் அடங்கி உள்நோக்கிச் செல்லுதல்.

மற்றும்,

ருஅ. ஆமை (தன்) அவயவங்களை எல்லாப்பக்கங்களினின்றும் (உள்ளே)அடக்குமாறுபோல, இவன் எப்பொழுது விஷயங்களினின்றும் இந்திரியங்களை அடக்குகிருனே, (அப்பொழுது) அவனுடைய ஞானம் நிலைத்தது.

எப்படி ஆமையானது அச்சத்தினுல் தன் அங்கங்களை எல்லாப்புறங்களினின்றும் முற்றிலும் ஒடுக்கிவைத்துக்கொள்கின்றதோ அப்படி, ஞானநிஷ்டயை மேற்

संहरति सर्वशः सर्वतः, एवं ज्ञाननिष्ठः इन्द्रियाणि इन्द्रियार्थे-भ्यः सर्वविषयेभ्यः उपसंहरते । तस्य प्रज्ञा प्रतिष्ठिता इति उक्तार्थं वाक्यम् ॥ ௫௮ ॥

तत्र विषयाननाहरतः आतुरस्यापि इन्द्रियाणि संह्रियन्ते, न तु तद्विषयो रागः । स कथं संह्रियते इति ? उच्यते—

௫௯. विषया विनिवर्तन्ते निराहारस्य देहिनः ।
रसवर्जं रसोऽप्यस्य परं दृष्ट्वा निवर्तते ॥

यद्यपि विषयाः विषयोपलक्षितानि विषयशब्दवाच्यानि इन्द्रियाणि निराहारस्य अनाह्रियमाणविषयस्य कष्टे तपसि स्थितस्य मूर्खस्यापि विनिवर्तन्ते देहिनः देहवतः रसवर्जं रसो रागः विषयेषु यः तं वर्जयित्वा । रसशब्दो रागे प्रसिद्धः "स्वरसेन प्रवृत्तः, रसिकः, रसज्ञः" इत्यादिदर्शनात् । सोऽपि रसः रञ्जनारूपः सूक्ष्मः अस्य यतेः परं परमार्थतत्त्वं ब्रह्म दृष्ट्वा उपलभ्य 'अहमेव तत्' इति वर्तमानस्य निवर्तते निर्बीजं विषयविज्ञानं संपद्यते इत्यर्थः । न असति सम्यग्दर्शने रसस्य उच्छेदः । तस्मात् सम्यग्दर्शनात्मिकायाः प्रज्ञायाः स्थैर्यं कर्तव्यमित्यभिप्रायः ॥ ௫௯ ॥

---

கொண்ட இந்த யதியானவன் ஸகலவிஷயங்களினின்றும் இந்திரியங்களை எப்பொழுதடக்கிக்கொள்கின்றானோ, (அப்பொழுது) "அவனுடைஞானம் நிலைத்தது" என்னும் வாக்கியத்திற்குப் பொருள் (௫எ - ஆம் சுலோகத்தின் உரையில்) கூறப்பட்டது. (௫அ)

இனி, விஷயங்களைக் கவராத [அவற்றை நுகர்தற்கு மனம்நோக்காத] நோயாளிக்கும் இந்திரியங்கள் ஒடுங்குகின்றன ; அவற்றின்மீதுள்ள ஆசையோ ஒடுங்குவதில்லை. அஃது ஒடுங்கும்வகை எப்படி என்பது?—(விடை) கூறுவோம் :

௫௯. உணவில்லாத மனிதனுக்கு ரஸத்தைத் தவிர விஷயங்கள் ஒழிகின்றன. பரம்பொருளைக் கண்டபின்பு, இவனுடைய ஆசையும் [ரஸமும்] ஒழிகின்றது.

(இங்கே) "விஷயங்கள்" என்னும்சொல்லால் கூறற்குரியன - (அந்த) விஷயங்களால் உணர்த்தப்பட்ட இந்திரியங்கள். விஷயங்களை ஒழித்துக் கடுந்தவம்புரிகின்ற மூடமனிதனுக்கும் இந்திரியங்கள் (தம்தம் விஷயங்களினின்றும்) ஒழிகின்றன. என்றாலும், விஷயங்களிலுள்ள ரஸத்தைத்தவிர (மற்றது ஒழிகின்றது). [அதாவது - ஆசைமாத்திரம் நீங்குவதில்லை]. ரஸம் என்ற சொல்லானது 'ஆசை' என்னும் பொருளில் பயின்றுவழங்குவது. 'ஸ்வரஸமாகப் புகுந்தவன்,' 'ரஸிகன்,' 'ரஸஜ்ஞன்' என்பன முதலியவாகக் காண்கிறபடியால். பரமார்த்தஉண்மையாகிய ப்ரஹ்மத்தைக் கண்டுணர்ந்து, "நானே அது" என்றிருக்கின்ற இந்தயதிக்கு இன்பத்திலே ருசியாகிய நுண்மையான அந்த ஆசையும் நீங்குகின்றது : விஷயங்களின்உணர்வு வேரொடு அற்றுப்போகின்றது என்பது பொருள். நல்லறிவு இல்லாவிடத்து ஆசை அறுவதில்லை. ஆகவே, நல்லறிவு என்னும் ஞானத்தை நிலைத்திருக்கச் செய்துகொள்ள வேண்டும் என்பது கருத்து. (௫௯)

ஸம்யக்தர்ஶநலக்ஷணப்ரஜ்ஞாஸ்தைர்யம் சிகீர்ஷதா ஆதௌ இந்த்ரியாணி ஸ்வவஶே ஸ்தாபயிதவ்யாநி । யஸ்மாத் தத³நவஸ்தாபநே தோஷமாஹ—

௬௰. யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஶ்சித: ।
இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந: ॥

யதத: ப்ரயத்நம் குர்வத: ஹி யஸ்மாத் அபி கௌந்தேய புருஷஸ்ய விபஶ்சித: மேதாவிந: 'அபி' இதி வ்யவஹிதேந ஸம்பந்த:। இந்த்ரியாணி ப்ரமாதீநி ப்ரமதநஶீலாநி விஷயாபிமுகம் ஹி புருஷம் விக்ஷோபயந்தி ஆகுலீகுர்வந்தி, ஆகுலீக்ருத்ய ச ஹரந்தி ப்ரஸபம் ப்ரஸஹ்ய ப்ரகாஶமேவ பஶ்யதோ விவேகவிஜ்ஞாநயுக்தம் மந: ॥ ௬௰ ॥

யத: தஸ்மாத்—

௬௧. தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர: ।
வஶே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥

தாநி ஸர்வாணி ஸம்யம்ய ஸம்யமநம் வஶீகரணம் க்ருத்வா யுக்த: ஸமாஹித: ஸந் ஆஸீத மத்பர: அஹம் வாஸுதேவ: ஸர்வப்ரத்யகாத்மா பரோ யஸ்ய ஸ மத்பர:, 'ந அந்யோऽஹம் தஸ்மாத்' இதி ஆஸீத இத்யர்த:। ஏவமாஸீநஸ்ய யதே: வஶே ஹி யஸ்ய இந்த்ரியாணி வர்தந்தே அப்யாஸபலாத் தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ ௬௧ ॥

---

இந்திரியங்களை அடக்காவிடின் அவை தீங்கு செய்யும்.

நல்லறிவு என்னும் புத்தியை நிலைப்படுத்தக் கருதியவன் முதலில் இந்திரியங்களைத் தன்வசத்தில் நிற்கும்படி செய்யவேண்டும். ஏனெனில், அவற்றை அடக்காதவழி (வரும்) தீங்கைக் கூறுகிறார்:

௬௰. ஏனெனில், புத்திசாலியான புருஷன் (தன் இந்திரியங்களை அடக்க) முயல்கின்றனனாயினும், கௌந்தேய! கொந்தளிக்கும் இயல்பையுடைய இந்திரியங்கள் மனத்தை வலியக்கவர்ந்துகொண்டு போகின்றன.

(எதையும்) கலங்கச்செய்யும் தன்மையையுடைய இந்திரியங்கள், விஷயங்களிலேநோக்கமுள்ள புருஷனைக்கலக்கிக் குழம்பச்செய்கின்றன; அவை அப்படிக்கலக்கிய பின்னும், (விஷயங்களின் கெடுதிகளை அவன் ) பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே விவேகபுத்தியுள்ளதாய்த் தெளிந்தே நிற்பதான (அந்த புத்திசாலியினுடைய) மனத்தை வலியக் கவர்ந்திடுகின்றன. (௬௰)

(ரு) பகவானை இடைவிடாது தியானித்தல்.

எதனால் (இவ்வாறு), அதனால்

௬௧. (அவன்) அவற்றையெல்லாம் அடக்கி , என்னிடத்தே ஈடுபட்டவனாய் அமைந்து இருக்கவேண்டும். இந்திரியங்கள் எவனுக்கு (த் தன்)வசத்தில் இருக்கின்றனவோ, அவனுக்கு ஞானம் நிலைத்தது.

அந்த (இந்திரியங்கள்)எல்லாவற்றையும் வசப்படுத்திக்கொண்டு, அடக்கமுடையவனாய், ஸகலத்திற்கும் உள்ளேயுள்ள ஆத்மாவாகிய வாஸுதேவனான என்னிடத்து ஈடுபட்டு (நிற்கவேண்டும்) : "நான் அவனினும் வேறு அல்லேன்" எனக்கொண்டு இருக்கவேண்டும் என்பது பொருள். இவ்வாறு இருக்கின்ற எந்த யதிக்கு(த் தன்) இந்திரியங்கள் பயிற்சியினால் (தன்)வசத்தில் இருக்கின்றனவோ, அவனுடைய ஞானம் நிலைத்தது. (௬௧)

𑌅𑌥𑍇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌪𑌰𑌾𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑌰𑍍𑌥𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌮𑍂𑌲𑌮𑌿𑌦𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇—

௬௨. 𑌧𑍍𑌯𑌾𑌯𑌤𑍋 𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍𑌪𑍁𑌂𑌸𑌃 𑌸𑌙𑍍𑌗𑌸𑍍𑌤𑍇𑌷𑍂𑌪𑌜𑌾𑌯𑌤𑍇 ।
𑌸𑌙𑍍𑌗𑌾𑌤𑍍𑌸𑌞𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 𑌕𑌾𑌮𑌃 𑌕𑌾𑌮𑌾𑌤𑍍𑌕𑍍𑌰𑍋𑌧𑍋𑌽𑌭𑌿𑌜𑌾𑌯𑌤𑍇 ॥

𑌧𑍍𑌯𑌾𑌯𑌤𑌃 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌤𑌃 𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑍀𑌨𑍍 𑌵𑌿𑌷𑌯𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌨𑍍 𑌆𑌲𑍋𑌚𑌯𑌤𑌃 𑌪𑍁𑌂𑌸𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌸𑌙𑍍𑌗𑌃 𑌆𑌸𑌕𑍍𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌃 𑌤𑍇𑌷𑍁 𑌵𑌿𑌷𑌯𑍇𑌷𑍁 𑌉𑌪𑌜𑌾𑌯𑌤𑍇 𑌉𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌸𑌙𑍍𑌗𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑍀𑌤𑍇𑌃 𑌸𑌞𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 𑌸𑌮𑍁𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌕𑌾𑌮𑌃 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌕𑌾𑌮𑌾𑌤𑍍 𑌕𑍁𑌤𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿𑌹𑌤𑌾𑌤𑍍 𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 𑌅𑌭𑌿𑌜𑌾𑌯𑌤𑍇 ॥ ௬௨ ॥

௬௩. 𑌕𑍍𑌰𑍋𑌧𑌾𑌦𑍍𑌭𑌵𑌤𑌿 𑌸𑌂𑌮𑍋𑌹𑌃 𑌸𑌂𑌮𑍋𑌹𑌾𑌤𑍍𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌵𑌿𑌭𑍍𑌰𑌮𑌃 ।
𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌭𑍍𑌰𑌂𑌶𑌾𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌨𑌾𑌶𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌨𑌾𑌶𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌤𑌿 ॥

𑌕𑍍𑌰𑍋𑌧𑌾𑌤𑍍 𑌭𑌵𑌤𑌿 𑌸𑌂𑌮𑍋𑌹𑌃 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑌵𑌿𑌷𑌯𑌃 । 𑌕𑍍𑌰𑍁𑌦𑍍𑌧𑍋 𑌹𑌿 𑌸𑌂𑌮𑍋𑌹𑌿𑌤𑌃 𑌸𑌨𑍍 𑌗𑍁𑌰𑍁𑌮𑌪𑍍𑌯𑌾𑌕𑍍𑌰𑍋𑌶𑌤𑌿 । 𑌸𑌂𑌮𑍋𑌹𑌾𑌤𑍍 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌵𑌿𑌭𑍍𑌰𑌮𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑍋𑌪𑌦𑍇𑌶𑌾𑌹𑌿𑌤𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌜𑌨𑌿𑌤𑌾𑌯𑌾𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑍇𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌵𑌿𑌭𑍍𑌰𑌮𑍋 𑌭𑍍𑌰𑌂𑌶𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍌 𑌅𑌨𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 । 𑌤𑌤𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌭𑍍𑌰𑌂𑌶𑌾𑌤𑍍 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌨𑌾𑌶𑌃 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌰𑍍𑌨𑌾𑌶𑌃 । 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑌵𑌿𑌷𑌯𑌵𑌿𑌵𑍇𑌕𑌾𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑌾 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌸𑍍𑌯

---

**விஷயங்களின் நினைப்பே கேடுதிக்கு மூலம்.**

இனி, இப்பொழுது கெட்டழிந்துபோகின்றவனுடைய அநர்த்தத்திற்கெல்லாம் காரணமானதைப்பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்:

**௬௨. விஷயங்களை நினைக்கும் புருஷனுக்கு அவற்றின்மேல் பற்று உண்டாகிறது: பற்றினின்றும் ஆசை உண்டாகிறது: ஆசையினின்றும் கோபம் உண்டாகின்றது.**

ஓசைமுதலிய விஷயவிசேஷங்களில் [அவ்விஷயங்களின்மேல் தானாக ஏற்றி வைத்துக்கொண்ட அழகுமுதலியவற்றிலே] கருத்தைச்செலுத்தும் புருஷனுக்கு அந்த விஷயங்களின்மேல் பிரியம் உண்டாகின்றது. ஏதாவதொருகாரணத்தால் ஆசை தடைப்பட, அதனின்றும் கோபம் உண்டாகின்றது. (௬௨)

**௬௩. கோபத்தினின்று மயக்கமும், மயக்கத்தினின்று நினைவுத்தவறும், நினைவுத்தவறினின்று அறிவுகேடும் உண்டாகின்றது. அறிவுகெடுதலால் (ஒருவன்) முற்றும் கெட்டுப்போகிறான்.**

கோபத்தினின்று மயக்கம் உண்டாகின்றது. (மயக்கம் -) செய்யத்தக்கனவற்றையும் செய்யத்தகாதனவற்றையும்பற்றிய ஆராய்ச்சியில்லாமை. கோபங்கொண்டவன் (ஒன்றுந்தெரியாது) மயங்கிவிட்டவனாய்க் குருவையும் பழித்திடுகிறானன்றோ. மயக்கத்தினின்றும் நினைவுத்தவறு (உண்டாகின்றது): சாஸ்திரம் ஆசார்யன் இவர்களின் உபதேசத்தால் (புத்தியுள்) நாட்டப்பட்ட பயிற்சியாலாகும் (தருமநியாயங்களின்) நினைவு, தவறிப்போகின்றது. (அந்த) நினைவு உண்டாவதற்குக்காரணம் அமைந்திருக்க [தான் கேட்டுள்ள நல்லுபதேசம் ஒருவனுடைய நினைவுக்கு வரக்கூடியதாயிருந்தும்] (கோபம் வந்தபோது அவன் மயக்கத்தால் மூடப்படுகின்றமையால் அவனுக்கு அந்த நினைவு) உண்டாவதில்லை. அந்த நினைவுத்தவறினின்றும் அறிவுகேடு வருகின்றது: அந்தக்கரணத்திற்கு கார்யஅகார்யங்களைப் பகுத்தறியமுடியாமை, அறிவுகேடு எனப்படு

புத்தே: நாஶ உச்யதே। புத்திநாஶாத் ப்ரணஶ்யதி। தாவதேவ ஹி புரு-ஷ: யாவதந்த:கரணம் ததீயம் கார்யாகார்யவிவேகயோக்யம்। ததயோக்யத்வே நஷ்ட ஏவ புருஷோ பவதி। அத: தஸ்ய அந்த:கரணஸ்ய புத்தே: நாஶாத் ப்ரணஶ்யதி புருஷார்தாயோக்யோ பவதி இத்யர்த:॥ ௬௩॥

ஸர்வாநர்தஸ்ய மூலம் உக்தம் விஷயாபித்யாநம்। அத இதாநீம் மோக்ஷ-காரணம் இதம் உச்யதே—

௬௪. ராகத்வேஷவியுக்தைஸ்து விஷயாநிந்த்ரியைஶ்சரந் ।
ஆத்மவஶ்யைர்விதேயாத்மா ப்ரஸாதமதிகச்சதி ॥

ராகத்வேஷவியுக்தை: ராகஶ்ச த்வேஷஶ்ச ராகத்வேஷௌ, தத்புர:ஸரா ஹி இந்த்ரியாணாம் ப்ரவ்ருத்தி: ஸ்வாபாவிகீ, தத்ர யோ முமுக்ஷு: பவதி ஸ: தாப்யாம் வியுக்தை: ஶ்ரோத்ராதிபி: இந்த்ரியை: விஷயாந் அவர்ஜநீயாந் சரந் உபலபமாந: ஆத்மவஶ்யை: ஆத்மந: வஶ்யாநி வஶீபூதாநி இந்த்ரியாணி தை: ஆத்மவஶ்யை: விதேயாத்மா இச்சாத: விதேய: ஆத்மா அந்த:கரணம் யஸ்ய ஸ: அயம் ப்ரஸாதம் அதிகச்சதி। ப்ரஸாத: ப்ரஸந்நதா ஸ்வாஸ்த்யம்॥ ௬௪॥

ப்ரஸாதே ஸதி கிம் ஸ்யாத் இதி? உச்யதே—

---

கின்றது. அறிவுகேட்டினால் முற்றும் அழிந்துவிடுகிறான்: எவ்வளவுகாலம் அவனுடைய அந்தக்கரணம் கார்யாகார்யங்களைப் பகுத்தறிய வல்லமைபெற்றுள்ளதோ அவ்வளவுகாலமேயன்றோ புருஷன். அதற்கு [அவற்றைப் பகுத்தறிதற்கு]த் தகுதியற்றால், புருஷன் அழிந்தவனாகவே ஆகிறான். ஆகவே அவனுடைய அந்தக்கரணத்தின் அறிவுகேட்டினால் அழிந்துவிடுகிறான்: புருஷார்த்தத்திற்குத் தகாதவன் ஆகிறான் என்பது பொருள். (௬௩)

**இந்திரியங்களின் அடக்கம் மனத்தெளிவையும், ஸுகத்தையும் கொடுக்கும்.**

விஷயங்களைக் கருதுதலானது அனர்த்தங்கட்கெல்லாம் காரணம் என்று கூறப்பட்டது. இனி இப்பொழுது மோக்ஷத்திற்கு வழி, இது எனப்படுகின்றது:

**௬௪. அந்தக்கரணம் அடங்கியவனே, விருப்பவெறுப்புக்கள் நீங்கப்பெற்றுத் தனக்கு அடங்கிநிற்கும் இந்திரியங்களால் விஷயங்களிற்சென்று (மனத்) தெளிவைப் பெறுகிறான்.**

இந்திரியங்களுடைய இயற்கையானபோக்கானது விருப்பவெறுப்புக்களை முன்னிட்டன்றோ இருப்பது. இனி, (ஸம்ஸாரத்தினின்றும்) விடுபடவிரும்புகிறவன் எவனோ, அவன் அவற்றினின்றும் நீங்கியவனாய்த் தன்வசப்பட்ட செவிமுதலிய இந்திரியங்களால், (உணவுமுதலிய) தவிர்க்கத்தகாதவிஷயங்களை நாடிக்கொள்பவனாய்த் (தன்) இஷ்டப்படி நடக்கக்கூடிய அந்தக்கரணத்தைப் பெற்றுத் தெளிவை அடைகிறான். தெளிவு - கலங்காமை, நிலைபெற்ற தன்மை, அமைதியுடைமை. (௬௪)

தெளிவு உண்டானால், என்ன உண்டாகும் என்பது?—(விடை) கூறப்படுகின்றது:

௬௫. ப்ரஸாதே ஸர்வது:கானாம் ஹாநிரஸ்யோபஜாயதே ।
ப்ரஸந்நசேதஸோ ஹ்யாஶு புத்தி: பர்யவதிஷ்டதே ॥

ப்ரஸாதே ஸர்வது:கானாம் ஆத்யாத்மிகாதீநாம் ஹாநி: விநாஶ: அஸ்ய யதே: உபஜாயதே । கிம் ச—ப்ரஸந்நசேதஸ: ஸ்வஸ்தாந்த:கரணஸ்ய ஹி யஸ்மாத் ஆஶு ஶீக்ரம் புத்தி: பர்யவதிஷ்டதே ஆகாஶமிவ பரி ஸமந்தாத் அவதிஷ்டதே, ஆத்மஸ்வரூபேணைவ நிஶ்சலீபவதி இத்யர்த: ॥

ஏவம் ப்ரஸந்நசேதஸ: அவஸ்திதபுத்தே: க்ருதக்ருத்யதா யத:, தஸ்மாத் ராகத்வேஷவியுக்தை: இந்த்ரியை: ஶாஸ்த்ராவிருத்தேஷு அவர்ஜநீயேஷு யுக்த: வ்யவஹரேத் இதி வாக்யார்த: ॥ ௬௫ ॥

ஸேயம் ப்ரஸந்நதா ஸ்தூயதே—

௬௬. நாஸ்தி புத்திரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பாவநா ।
ந சாபாவயத: ஶாந்திரஶாந்தஸ்ய குத: ஸுகம் ॥

நாஸ்தி ந வித்யதே ந பவதி இத்யர்த:, புத்தி: ஆத்மஸ்வரூபவிஷயா அயுக்தஸ்ய அஸமாஹிதஸ்ய । ந ச அயுக்தஸ்ய பாவநா ஆத்மஜ்ஞாநாபிநிவேஶ: । ததா—ந ச அபாவயத: ஆத்மஜ்ஞாநாபிநிவேஶம் அகுர்வத: ஶாந்தி: உபஶம: । அஶாந்தஸ்ய குத: ஸுகம் ? இந்த்ரியாணாம் ஹி விஷயஸேவாத்ருஷ்ணாத: நிவ்ருத்தி:

---

௬௫. தெளிவுள்ளவழி, இவனுடைய துன்பங்கட்கெல்லாம் கழிவு பிறக்கின்றது ; ஏனெனில், மனந்தெளிந்தவனுக்குப் புத்தி விரைவாக நிலைத்துநிற்கின்றது.

தெளிவுண்டானவழி, இந்த யதிக்குத் தன்னைப்பற்றிவருவன முதலிய துன்பங்களெல்லாவற்றிற்கும் கழிவு உண்டாகின்றது. அன்றியும், சுத்தமான அந்தக்கரணமுள்ளவனுக்கு எதனால் புத்தியானது விரைவாக நிலைத்துநிற்கின்றதோ, அதாவது-ஆகாசம்போல எங்கும் நிலைபெறுகின்றதோ, ஆத்மாவின் ஸ்வரூபமாகவே அலையாது அமைந்துநிற்கின்றதோ, (அதனால், புத்தித்தெளிவுக்காக முயற்சிசெய்யவேண்டும்).

இவ்வாறு மனம்தெளிந்து புத்திநிலைத்தவனுக்குப் புருஷார்த்தம் கைகூடுகின்றமையால். ( ஸம்ஸாரத்தினின்றும் விடுபடவிரும்புகிறவன் ) விருப்பவெறுப்புக்கள் நீங்கிய இந்திரியங்களால் சாஸ்திரத்தோடுமாறுபடாத (உணவுமுதலிய) தவிர்க்கமுடியாதவிஷயங்களை அமைதியோடு நாடவேண்டும் என்பது, (இந்த) ஸந்தர்ப்பத்திற் கூறப்பட்ட பொருளாம். (௬௫)

ஆதலால், இந்த (மனத்)தெளிவைப் புகழ்ந்து சொல்லுகிறார் :

௬௬. ஒருநிலையில்லாதவனுக்கு ஞானம் உண்டாவதில்லை : ஒருநிலையில்லாதவனுக்கு (ஆத்ம)த்யாகமும் உண்டாவதில்லை : (ஆத்ம)த்யாகமில்லாதவனுக்கு ஒழிபும் உண்டாவதில்லை : ஒழிபற்றவனுக்கு ஸுகம் ஏது ?

மனம்ஒருநிலைப்படாதவனுக்கு ஆத்மஸ்வரூபத்தைப்பற்றிய அறிவு உண்டாகாது. ஒருநிலைப்படாதவனுக்கு ஆத்மாவை அறிதலிலே மிக்கஊக்கமும் உண்டாகாது. அவ்வாறே, ஆத்மாவை அறிதலிலே மிக்கஊக்கங்கொள்ளாதவனுக்கு ஒழிபு உண்டாவதில்லை. ஒழிபற்றவனுக்கு ஸுகம் ஏது ? இந்திரியங்கள் விஷயநுகர்ச்சியிலுள்ள

𑌸𑍁𑌖𑌮𑍍, 𑌨 𑌵𑌿𑌷𑌯𑌵𑌿𑌷𑌯𑌾 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾 । 𑌦𑍁𑌃𑌖𑌮𑍇𑌵 𑌹𑌿 𑌸𑌾 । 𑌨 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾𑌯𑌾𑌂 𑌸𑌤𑍍𑌯𑌾𑌂 𑌸𑍁𑌖𑌸𑍍𑌯 𑌗𑌨𑍍𑌧𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑌪𑌿 𑌉𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௬௬ ॥

𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௬௭. 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌹𑌿 𑌚𑌰𑌤𑌾𑌂 𑌯𑌨𑍍𑌮𑌨𑍋𑌽𑌨𑍁𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ।
𑌤𑌦𑌸𑍍𑌯 𑌹𑌰𑌤𑌿 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌂 𑌵𑌾𑌯𑍁𑌰𑍍𑌨𑌾𑌵𑌮𑌿𑌵𑌾𑌮𑍍𑌭𑌸𑌿 ॥

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌹𑌿 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌚𑌰𑌤𑌾𑌂 𑌸𑍍𑌵𑌸𑍍𑌵𑌵𑌿𑌷𑌯𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑌾𑌨𑌾𑌂 𑌯𑌤𑍍 𑌮𑌨𑌃 𑌅𑌨𑍁𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 𑌅𑌨𑍁𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌤𑌤𑍍 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌷𑌯𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌨𑍇𑌨 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 𑌮𑌨𑌃 𑌅𑌸𑍍𑌯 𑌯𑌤𑍇𑌃 𑌹𑌰𑌤𑌿 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌵𑍇𑌕𑌜𑌾𑌂 𑌨𑌾𑌶𑌯𑌤𑌿 । 𑌕𑌥𑌮𑍍? 𑌵𑌾𑌯𑍁𑌃 𑌨𑌾𑌵𑌮𑌿𑌵 𑌅𑌮𑍍𑌭𑌸𑌿 𑌉𑌦𑌕𑍇 𑌜𑌿𑌗𑌮𑌿𑌷𑌤𑌾𑌂 𑌸𑌾𑌂𑌯𑌾𑌤𑍍𑌰𑌿𑌕𑌾𑌣𑌾𑌂 𑌮𑌾𑌰𑍍𑌗𑌾𑌤𑍍 𑌉𑌦𑍍𑌧𑍃𑌤𑍍𑌯 𑌉𑌨𑍍𑌮𑌾𑌰𑍍𑌗𑍇 𑌯𑌥𑌾 𑌵𑌾𑌯𑍁𑌃 𑌨𑌾𑌵𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌯𑌤𑌿 𑌏𑌵𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌷𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌂 𑌹𑍃𑌤𑍍𑌵𑌾 𑌮𑌨𑌃 𑌵𑌿𑌷𑌯𑌵𑌿𑌷𑌯𑌾𑌂 𑌕𑌰𑍋𑌤𑌿 ॥ ௬௭ ॥

'𑌯𑌤𑌤𑍋 𑌹𑌿' 𑌇𑌤𑍍𑌯𑍁𑌪𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌅𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌅𑌨𑍇𑌕𑌧𑌾 𑌉𑌪𑌪𑌤𑍍𑌤𑌿𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌤𑌂 𑌚 𑌅𑌰𑍍𑌥𑌮𑍍 𑌉𑌪𑌪𑌾𑌦𑍍𑌯 𑌉𑌪𑌸𑌂𑌹𑌰𑌤𑌿—

௬௮. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌨𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 ।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌭𑍍𑌯𑌃 𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾 ॥

---

ஆசையினின்றும் நீங்குதலன்றோ ஸுகமாவது : விஷயங்களைப்பற்றிய ஆசை(ஸுகம்) அன்று ; அது துன்பமேயன்றோ. ஆசையுள்ளவிடத்து ஸுகத்தின் நாற்றமாத்திரமும் உண்டாகாது என்பது பொருள். (௬௬)

**உறுதியான ஞானத்தைத் தருவது, இந்திரியஅடக்கம்.**

ஒருநிலைப்படாதவனுக்கு ஏன் ஞானம் உண்டாவதில்லை என்பது ?— (அதற்கு விடை) கூறப்படுகின்றது :

**௬௭. ஏனெனில், எந்த மனமானது (விஷயங்களில்)திரிகின்ற இந்திரியங்களைப் பின்தொடர்கின்றதோ, அது, ஜலத்திலே கப்பலைக் காற்று (அடித்துக்கொண்டுபோவது)போல, இவனுடைய அறிவைக் கவர்ந்துகொண்டுபோகின்றது.**

ஏனெனில்,தம்தம் விஷயங்களிற்செல்லுகின்ற இந்திரியங்களை எந்த மனம் பின்பற்றுகின்றதோ அது, (அதாவது -)இந்திரியவிஷயங்களை ஆராய்ந்துகொண்டுசென்ற மனமானது ஆத்மாஅநாத்மாக்களின் ஆராய்ச்சியால் வருவதான இந்த யதியின் அறிவை அழிக்கின்றது.—எப்படி ?—காற்றானது ஜலத்திலே செல்லப்புகுந்த கப்பற்காரர்களுடைய வழியினின்றும் கப்பலை விலக்கி, தப்புவழியிலே செலுத்துகின்றது; இதுபோல, மனமானது, ஆத்மாவைப்பற்றிய அறிவைக் கவர்ந்து, விஷயங்களை நோக்கும்படி செய்கின்றது. (௬௭)

“புத்திசாலியான” (௨ - ௬௦) என்றுகூறிய விஷயத்திற்குப் பலவாறாகப் பொருத்தத்தைக் கூறிப் பின்பு அதேவிஷயத்தை நிரூபித்து முடிக்கிறார் :

**௬௮. ஆதலால், உயர்தோளா ! எவனுடைய இந்திரியங்கள் இந்திரியவிஷயங்களினின்று முழுதும் அடக்கப்பட்டனவோ, அவனுடைய ஞானம் நிலைத்தது.**

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍌 𑌦𑍋𑌷𑌃 𑌉𑌪𑌪𑌾𑌦𑌿𑌤𑌃 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌯𑌸𑍍𑌯 𑌯𑌤𑍇𑌃 𑌹𑍇 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌨𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍈𑌃 𑌮𑌾𑌨𑌸𑌾𑌦𑌿𑌭𑍇𑌦𑍈𑌃 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌭𑍍𑌯𑌃 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑌿𑌭𑍍𑌯𑌃 𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾 ॥௬௮॥

𑌯𑍋𑌽𑌯𑌂 𑌲𑍌𑌕𑌿𑌕𑍋 𑌵𑍈𑌦𑌿𑌕𑌶𑍍𑌚 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌃 𑌸𑌃 𑌉𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌵𑌿𑌵𑍇𑌕𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌸𑍍𑌥𑌿𑌤𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍌 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇, 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌶𑍍𑌚 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌤𑍍 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃, 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌮𑌰𑍍𑌥𑌂 𑌸𑍍𑌫𑍁𑌟𑍀𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌆𑌹—

௬௯. 𑌯𑌾 𑌨𑌿𑌶𑌾 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌤𑌸𑍍𑌯𑌾𑌂 𑌜𑌾𑌗𑌰𑍍𑌤𑌿 𑌸𑌂𑌯𑌮𑍀 ।
𑌯𑌸𑍍𑌯𑌾𑌂 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌸𑌾 𑌨𑌿𑌶𑌾 𑌪𑌶𑍍𑌯𑌤𑍋 𑌮𑍁𑌨𑍇𑌃 ॥

𑌯𑌾 𑌨𑌿𑌶𑌾 𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌃 𑌸𑌰𑍍𑌵𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑌾𑌮𑍍 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌕𑌰𑍀 𑌤𑌮𑌃𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑍍 । 𑌕𑌿𑌂 𑌤𑌤𑍍? 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌸𑍍𑌥𑌿𑌤𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌵𑌿𑌷𑌯𑌃 । 𑌯𑌥𑌾 𑌨𑌕𑍍𑌤𑌂𑌚𑌰𑌾𑌣𑌾𑌮𑍍 𑌅𑌹𑌰𑍇𑌵 𑌸𑌤𑍍 𑌅𑌨𑍍𑌯𑍇𑌷𑌾𑌂 𑌨𑌿𑌶𑌾 𑌭𑌵𑌤𑌿, 𑌤𑌦𑍍𑌵𑌤𑍍 𑌨𑌕𑍍𑌤𑌂𑌚𑌰𑌸𑍍𑌥𑌾𑌨𑍀𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌨𑌿𑌶𑌾 𑌇𑌵 𑌨𑌿𑌶𑌾 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍍, 𑌅𑌗𑍋𑌚𑌰𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌤𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍀𑌨𑌾𑌮𑍍 । 𑌤𑌸𑍍𑌯𑌾𑌂 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌯𑌾𑌮𑍍 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌯𑌾𑌃 𑌪𑍍𑌰𑌬𑍁𑌦𑍍𑌧𑍋 𑌜𑌾𑌗𑌰𑍍𑌤𑌿 𑌸𑌂𑌯𑌮𑍀 𑌸𑌂𑌯𑌮𑌵𑌾𑌨𑍍, 𑌜𑌿𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿-

---

எதனால், இந்திரியங்கள் (விஷயங்களிற்)செல்வதனால் (வரும்) தீங்கு உணர்த்தப்பட்டதோ, அதனால், மானஸம் முதலிய பலவகையாலும் [மனமொழிமெய்களால்] எந்த யதியினுடைய இந்திரியங்கள் ஓசைமுதலிய விஷயங்களினின்றும் அடக்கப்பட்டனவோ, அவனுடைய ஞானம் நிலைத்தது. (௬௮)

(௬) ஜீவன்முக்தனுக்கு உலகம் கனவுதான்.

"லௌகிகமாகவும் வைதிகமாகவுமுள்ள இந்த வ்யவஹாரம் எதுவோ, அது, அஜ்ஞானத்தின் கார்ய மாதலால், விவேகபுத்தி பிறந்து ஞானம் நிலைத்தவனுக்கு அஜ்ஞானம் நீங்கியவுடனே நீங்கிவிடுகின்றது. அஜ்ஞானம் ஞானத்தின் விரோதத்தாலும் [அதன்முன் நிற்காததாலாலும்] நீங்குகின்றது" என்ற இவ்விஷயத்தைத் தெளியச்செய்பவராய்(ப் பகவான்) அருளிச்செய்கிறார் :

௬௯. எது பிராணிகட்கெல்லாம் இரவோ, அதில், அடக்கமுள்ளவன் விழித்திருக்கிறான். எதில் பிராணிகள் விழித்திருக்கின்றனவோ, அது, (உண்மையைக்) காணும் முனிவனுக்கு இரவு.

எது தாமஸத்தன்மையையுடைமையால் ஸகலபிராணிகட்கும் ஒவ்வொரு பொருளைப்பற்றியும் வெவ்வேறாகப் பகுத்தறியமுடியாமையைச் செய்வதான இரவோ, அது யாது?—ஞானம்நிலைத்தவனுக்கு எட்டுவதான பரமார்த்தஉண்மை. இரவில் திரிவன(வாகிய கோட்டான்முதலிய)வற்றிற்குப் பகலாகவேஇருப்பது, (காக்கை முதலிய)மற்றையவற்றிற்கு இரவாகவே எப்படி ஆகின்றதோ, அப்படியே பரம்பொருளின் உண்மையானது இரவில் திரிவனவற்றை ஒத்த அஜ்ஞானிகளான ஸகலபிராணிகட்கும் இரவுபோன்றுள்ளமையால் இரவாகவே இருக்கின்றது ; அதில் அறிவில்லாதவர்க்கு (அது) எட்டாததலின். அடக்கமுடையவனாய் இந்திரியங்களைஜயித்த

यो योगी इत्यर्थः। यस्यां ग्राह्यग्राहकभेदलक्षणायाम् अविद्यानिशायाम्
प्रसुप्तानि एव भूतानि जाग्रति इति उच्यन्ते, यस्यां निशायां प्र-
सुप्ता इव स्वप्नदृशः सा निशा अविद्यारूपत्वात् परमार्थतत्त्वं पश्य-
तः मुनेः इति ॥

अतः कर्माणि अविद्यावस्थायामेव चोद्यन्ते, न विद्यावस्थायाम्। वि-
द्यायां हि सत्याम् उदिते सवितरि शार्वरमिव तमः प्रणाशम् उपगच्छति
अविद्या। प्राक् विद्योत्पत्तेः अविद्या प्रमाणबुद्ध्या गृह्यमाणा क्रिया-
कारकफलभेदरूपा सती सर्वकर्महेतुत्वं प्रतिपद्यते। न अप्र-
माणबुद्ध्या गृह्यमाणायाः कर्महेतुत्वोपपत्तिः, "प्रमाणभूतेन
वेदेन मम चोदितं कर्तव्यं कर्म" इति हि कर्मणि कर्ता प्रवर्तते "न
अविद्यामात्रम् इदं सर्वं निशा इव" इति। यस्य पुनः "निशा इव अवि-
द्यामात्रमिदं सर्वं भेदजातम्" इति ज्ञानम्, तस्य आत्मज्ञस्य सर्वकर्मसं-
न्यासे एव अधिकारो न प्रवृत्तौ। तथा च दर्शयिष्यति– 'तद्बुद्धयस्तदात्मा-
नः' इत्यादिना ज्ञाननिष्ठायामेव तस्य अधिकारम् ॥

---

(ஞான)யோகியானவன், அஜ்ஞானஉறக்கம் தெளிந்து அந்தப் பரமார்த்தஉண்மையிலே விழித்துக்கொண்டிருக்கிறன். உணரப்படுவதும் உணர்வதுமான பேதமாகிய எந்த அஜ்ஞானஇரவிலே உறங்கிக்கொண்டேயிருக்கும் பிராணிகள் விழித்திருக்கின்றன என்று கூறப்படுகின்றனவோ, எந்த இரவிலே (அவை) உறங்கினவை போலக் கனவுகாண்கின்றனவோ, அது அஜ்ஞானவடிவ மாதலால், பரமார்த்தஉண்மையைக் காணும் முனிவனுக்கு இரவென்பதாம்.

**கர்மம் ஞானிக்கு அன்று.**

ஆகவே, அஜ்ஞானநிலையில்தான் கர்மங்கள் விதிக்கப்படுகின்றன; ஞானநிலையில் அல்ல. சூரியன் உதிக்க இரவின் இருள் (கெடுமாறு)போல, ஞானமுண்டாக அஜ்ஞானம் முழுவதும் நாசமடைகின்றதன்றே. ஞானம் உண்டாவதற்குமுன் அஜ்ஞானமானது, செய்கையும் செய்பவனும் பயனுமாகிய பேதவடிவமாய்நின்று, ப்ரமாணபுத்தியால் கிரகிக்கப்பட்டு [அந்தப் பேதபுத்தி அஜ்ஞானநிலைமையிலே வாஸ்தவமாய்த் தோற்றுதலால்] ஸகலகர்மத்திற்கும் காரணமாதலைப் பெறுகின்றது. "(இந்தப் பேதபுத்தி) ப்ரமாண மன்று" எனக் கொள்ளப்படும்பொழுது, (அந்த அஜ்ஞானமானது) கர்மத்திற்குக் காரணமாதல் பொருந்தாது. "ப்ரமாணமாயுள்ள வேதத்தினுல் எனக்கு விதிக்கப்பட்ட கர்மத்தைச் செய்யவேண்டும்" என்று நினைத்தன்றே செய்பவன் செய்கையில் தலைப்படுகிறன். "இதெல்லாம் இரவுபோல அஜ்ஞானமேதான்" என்று(நினைத்து) அன்று(செய்பவன் செய்கையில் தலைப்படுவது). "இந்தப் பேதக்கூட்ட(மாகிய உலகத்தோற்ற)மெல்லாம் இரவுபோல அஜ்ஞானமேதான்" என்னும் ஞானம் எவனுக்கோ, அந்த ஆத்மஞானிக்கு ஸகலகர்மங்களையும் துறத்தலிலேதான் அதிகாரம்; கர்மத்தைச் செய்வதில் அன்று. அவ்வண்ணமே (பகவான்)"அதிலே புத்தியையுடையவராய்" (ரு - கள) என்பதுமுதலாக ஞானநிஷ்டையிலேயே அவனுக்கு அதிகாரத்தைக் காட்டுவர்.

तदापि प्रवर्तकप्रमाणाभावे प्रवृत्त्यनुपपत्तिः इति चेत् — न, स्वात्मविषयत्वादात्मविज्ञानस्य । न हि आत्मनः स्वात्मनि प्रवर्तकप्रमाणापेक्षता, आत्मत्वादेव । तदन्तत्वाच्च सर्वप्रमाणानां प्रमाणत्वस्य । न हि आत्मस्वरूपाधिगमे सति पुनः प्रमाणप्रमेयव्यवहारः संभवति । प्रमातृत्वं हि आत्मनः निवर्तयति अन्त्यं प्रमाणम्; निवर्तयदेव च अप्रमाणीभवति, स्वप्नकालप्रमाणमिव प्रबोधे । लोके च वस्त्वधिगमे प्रवृत्तिहेतुत्वादर्शनात् प्रमाणस्य । तस्मात् न आत्मविदः कर्मणि अधिकार इति सिद्धम् ॥ ௬௯ ॥

विदुषः त्यक्तैषणस्य स्थितप्रज्ञस्य यतेः एव मोक्षप्राप्तिः न तु असंन्यासिनः कामकामिनः इत्येतमर्थं दृष्टान्तेन प्रतिपादयिष्यन् आह —

௭௦. आपूर्यमाणमचलप्रतिष्ठं समुद्रमापः प्रविशन्ति यद्वत् ।
तद्वत्कामा यं प्रविशन्ति सर्वे स शान्तिमाप्नोति न कामकामी ॥

---

(ஆக்ஷேபம்) :—(ஞானநிஷ்டையை) மேற்கொள்ளும்படி செய்கிற விதி இல்லாதிருந்தால், அதையும் மேற்கொள்ளுதல் கூடாதெனின்,—

(ஸமாதாநம்) :—அப்படியன்று ; ஆத்மஞானமென்பது தன் ஆத்மாவைப் பற்றிய தாதலின். தன்னைத் தன் ஆத்மாவினிடத்துச் செல்லும்படி செய்கிற விதி வேண்டுவதில்லையன்றோ ; (தான்) ஆத்மாவேயாதலாலும், ப்ரமாணங்களெல்லாம் ப்ரமாணமாயிருத்தலென்பது அதுவரையிலு மாதலாலுமென்க [ப்ரமாணங்களெல்லாம் உண்மையாயிருத்தலானது, ஆத்மஞானம் உண்டாகிறவரையிலும்தான் ; பின்பு அவை, உண்மையாயிருக்கமாட்டா]. ஆத்மா இன்னதென்று கண்டறிந்தவிடத்துப் பின்பு (இது)ப்ரமாணம் [அறிதற்கான கருவி],(இது) ப்ரமேயம் [அறியப்படும் பொருள்] என,(பேதபுத்தியினால் வரக்கூடிய) வழக்கு நிகழாதன்றே. ஏனெனில், முடிவான ப்ரமாணமா(கிய வேதமா)னது ப்ரமாதாவாயிருத்தலை [ஒருபொருளை அறிதற்குக் கர்த்தாவாகின்றதென்பதை]ஆத்மாவுக்கு நீக்குகின்றது. (அப்படி) மறுக்குமளவிலேயே, கனாக்காலத்து அறிவு விழிப்புநிலையிலே (ப்ரமாணமாகாதவாறு)போல (அந்த வேதமும்) ப்ரமாணமாவதில்லை. லோகத்திலேயும் ஒரு பொருளை (ஒருவன் இன்னதென்று சரியாய்) அறிந்தவிடத்து,ப்ரமாணமானது (மறுபடியும் அவனை, அதை அறியப்) புகும்படி செய்வதைக் காணாமையின். ஆகவே, 'ஆத்மாவை அறிபவனுக்குக் கர்மத்தில் அதிகார மில்லை' என்பது பெறப்பட்டது. (௬௯)

(௭) தனது அடக்கமும், ஆசையை அறுத்தலும்.

'ஆசையை ஒழித்தவனும் ஞானம் நிலைபெற்ற ஞானியான யதிக்குத்தான் முக்திகைகூடுதல்; (கர்மத்தைத்) துறக்காமலும், கர்மத்தை விரும்பியுமுள்ளவனுக்கு அன்று' என்ற இவ்விஷயத்தைத் திருஷ்டாந்தத்தால் உணர்த்த (மீண்டும்) அருளிச்செய்கிறார் :

௭௦. (தானே) எப்புறமும் நிரம்பியதாய்(த் தன்) நிலைமாறாதுநிற்கும் ஸமுத்திரத்தை (நதியின்) ஜலங்கள் எவ்வாறு புகுகின்றனவோ, அவ்வாறே ஆசைகளெல்லாம் எவனைப் புகுகின்றனவோ, அவன் சாந்தியை அடைகிறான்; காமத்தை விரும்புகிறவன் (அதனை அடைவது)இல்லை.

ஆபூர்யமாணம் அத்பி: அசலப்ரதிஷ்டம் அசலதயா ப்ரதிஷ்டா அவஸ்திதி: யஸ்ய தம் அசலப்ரதிஷ்டம் ஸமுத்ரம் ஆப: ஸர்வதோ கதா: ப்ரவிஶந்தி ஸ்வாத்மஸ்தம் அவிக்ரியமேவ ஸந்தம் யத்வத் தத்வத் காமா: விஷயஸந்நிதாவபி ஸர்வத: இச்சாவிஶேஷா: யம் புருஷம், ஸமுத்ரமிவ ஆப:, அவிகுர்வந்த: ப்ரவிஶந்தி ஸர்வே ஆத்மந்யேவ ப்ரலீயந்தே ந ஸ்வாத்மவஶம் குர்வந்தி ஸ: ஶாந்திம் மோக்ஷமாப்நோதி । ந இதர: காமகாமீ காம்யந்த இதி காமா: விஷயா: தாந் காமயிதும் ஶீலம் யஸ்ய ஸ: காமகாமீ । ஸ ந ப்ராப்நோதி இத்யபிப்ராய: ॥ ௭0 ॥

யஸ்மாத் ஏவம் தஸ்மாத்—

௭௧. விஹாய காமாந் ய: ஸர்வாந் புமாம்ஶ்சரதி நி:ஸ்ப்ருஹ: ।
நிர்மமோ நிரஹங்கார: ஸ ஶாந்திமதிகச்சதி ॥

விஹாய பரித்யஜ்ய காமாந் ய: ஸம்ந்யாஸீ புமாந் ஸர்வாந் அஶேஷத: சரதி ஜீவநமாத்ரசேஷ்டாஶேஷ: பர்யடதி இத்யர்த: । நி:ஸ்ப்ருஹ: ஶரீரஜீவநமாத்ரேऽபி நிர்கதா ஸ்ப்ருஹா யஸ்ய ஸ: நி:ஸ்ப்ருஹ: ஸந் நிர்மம: ஶரீரஜீவநமாத்ராக்ஷேபகபரிக்ரஹேऽபி 'மம இதம்' இதி அபிநிவேஶவர்ஜித: நிரஹங்கார: வித்யாவத்த்வாதிநிமித்தாத்மஸம்பாவநாரஹித: இத்யேதத் । ஸ ஏவம்பூத: ஸ்திதப்ரஜ்ஞ: ப்ரஹ்மவித் ஶாந்திம் ஸர்வஸம்ஸாரது:கோபரமலக்ஷணாம் நிர்வாணாக்யாம் அதிகச்சதி ப்ராப்நோதி ப்ரஹ்மபூதோ பவதி இத்யர்த: ॥ ௭௧ ॥

---

ஜலங்களால் எப்புறமும் நிரம்பியதாய், மாறுத நிலையுள்ளதாய், வேறுபாடில்லாமலே (ஒரேதன்மையாகத்) தன் நிலையிலே நிற்பதான ஸமுத்திரத்தை எங்குமுள்ள ஜலங்கள் எவ்வாறு புகுகின்றனவோ, அவ்வாறே—(அந்த) ஜலங்கள் ஸமுத்திரத்தைப் புகுமாறுபோல—பலவகைப்பட்ட ஆசைகளெல்லாம் எந்த முனிவனை விஷயங்களின் முன்னிலையிலும் விகாரப்படுத்தாமல் புகுகின்றனவோ (அதாவது -) எந்த முநியைத் தம் வசமாகச் செய்யமுடியாது, ஆத்மாவினிடத்தேயே ஒடுங்குகின்றனவோ, அவன் சாந்தியை = முக்தியைப் பெறுகிறான். விஷயங்களை விரும்பும் தன்மையனான மற்றையவன் அன்று; அவன் (மோக்ஷத்தைப்) பெறுவதில்லை என்று பொருள். (௭0)

இப்படியிருத்தலின்,

***௭௧. எந்தப் புருஷன் ஸகலகர்மங்களையும் விட்டு, பற்றற்றவனாய், அஹங்கார மமகாரங்கள் இல்லாதவனாய்த் திரிகின்றானோ, அவன் சாந்தியைப் பெறுகிறான்.***

எந்தத் துறவியான புருஷன் கர்மங்களை(ச் சிறிதும்) மிச்சமில்லாது முழுதும் ஒழித்துத் திரிகின்றானோ அதாவது - ஜீவித்திருப்பதற்குமாத்திரம்(வேண்டிய) செய்கையை மிச்சம் வைத்துக்கொண்டவனாகத் திரிகின்றானோ, பற்றற்றவனாய் = கேவலம் சரீரம்ஜீவித்திருப்பதிலுங்கூடப் பற்று நீங்கியவனாய், மமகாரம் இல்லாதவனாய் = சரீரம் ஜீவித்திருப்பதற்குமாத்திரம் வேண்டிய உடைமையிலும் "இது எனது" என்னும் பிடிப்பில்லாதவனாய், அஹங்காரம் இல்லாதவனாய் = கல்வியுடைமை முதலியவற்றால் உண்டாகும் ("நான்" எனத்) தன்னையே (தான்) மதித்தல் இல்லாதவனாய் இருக்கின்றானோ, அவன் இவ்வாறிருப்பவனாய், ஞானம் நிலைத்தவனாய், ப்ரஹ்மத்தை அறிந்தவனாய், ஸம்ஸாரத்துன்பமெல்லாம் ஒழிந்திடுதலாகிய நிர்வாணமென்னும் பெயருடைய சாந்தியை [மோக்ஷத்தை]ப் பெறுகிறான் : ப்ரஹ்மமாகவே ஆகிறான் என்பது பொருள். [நிர்வாணம் - பேரின்பம்.] (௭௧)

ஸைஷா ஜ்ஞாநநிஷ்டா² ஸ்தூயதே—

௭௨. ஏஷா ப்³ராஹ்மீ ஸ்தி²தி: பார்த² நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி ।
ஸ்தி²த்வாஸ்யாமந்தகாலே(அ)பி ப்³ரஹ்மநிர்வாணம்ருச்ச²தி ॥

இதி ஸ்ரீமஹாபா⁴ரதே ஶதஸாஹஸ்ர்யாம் ஸம்ஹிதாயாம் வையா-
ஸிக்யாம் பீ⁴ஷ்மபர்வணி ஸ்ரீமத்³ப⁴க³வத்³கீ³தாஸூபநிஷத்ஸு ப்³ரஹ்மவித்³யாயாம்
யோக³ஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே³ ஸாங்க்²யயோகோ³ நாம த்³வித்ீ-
யோ(அ)த்⁴யாய: ॥

ஏஷா யதோ²க்தா ப்³ராஹ்மீ ப்³ரஹ்மணி ப⁴வா இயம் ஸ்தி²தி: ஸர்வம் கர்ம ஸம்ந்யஸ்ய
ப்³ரஹ்மரூபேணைவ அவஸ்தா²நமித்யேதத் । ஹே பார்த² ந ஏநாம் ஸ்தி²-
திம் ப்ராப்ய லப்³த்⁴வா விமுஹ்யதி ந மோஹம் ப்ராப்நோதி । ஸ்தி²த்வா அஸ்யாம் ஸ்தி²-
தௌ ப்³ராஹ்ம்யாம் யதோ²க்தாயாம் அந்தகாலே(அ)பி அந்த்யே வயஸி ப்³ரஹ்மநி-
ர்வாணம் ப்³ரஹ்மநிர்வ்ருதிம் மோக்ஷம் ருச்ச²தி க³ச்ச²தி । கிமு வக்தவ்யம் ப்³ரஹ்மசர்யா-
தே³வ ஸம்ந்யஸ்ய யாவஜ்ஜீவம் யோ ப்³ரஹ்மண்யேவ அவதிஷ்ட²தே ஸ ப்³ரஹ்மநிர்வா-
ணம்ருச்ச²தி இதி ॥ ௭௨ ॥

இதி ஸ்ரீமத்³ப⁴க³வத்³கீ³தாபா⁴ஷ்யே த்³விதீயோ(அ)த்⁴யாய: ॥

---

**ஞானமே ப்ரஹ்மாநந்தத்தைத் தருவது.**

ஆதலால், இந்த நிஷ்டையானது பாராட்டப்படுகின்றது :

௭௨. பார்த்த ! இது ப்ரஹ்மத்தைப்பற்றிய நிலை. இதனை அடைந்து (ஒருவனும்) மயங்கமாட்டான். (ஒருவன்) கடைசிக்காலத்திலும் [முதுமைப்பருவத்திலும்] இதிலே நின்று ப்ரஹ்மாநந்தத்தை அடைகிறான்.

ஸ்ரீ மகாபாரதத்திலே நூறாயிரக்கிரந்த ஸம்ஹிதையாய், வ்யாஸர் அருளிச்செய்ததாய், பீஷ்மபர்வத்திலே ஸ்ரீமத் பகவத்கீதைகளாக, உபநிஷத்துகளாக, ப்ரஹ்ம வித்யையாக, யோகசாஸ்திரமாக இருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணார்ஜுநஸம்வாதத்திலே ஸாங்க்யயோகம் என்னும் இரண்டாம் அத்தியாயம் முற்றும்.

மேற்கூறிய இது, ப்ரஹ்மத்தைப்பற்றிய நிலை : எல்லாவற்றையும் துறந்து ப்ரஹ்மஸ்வரூபமாகவே நிற்றலென்பது. ஏ ! பார்த்த ! இந்த நிலையைப்பெற்று (ஒருவனும்) மயக்கத்தை அடையமாட்டான். (ஒருவன்) ப்ரஹ்மத்தைப்பற்றிய மேற்கூறிய இந்தநிலையில் கடைசிவயதில் இருந்தாலும், ப்ரஹ்மாநந்தமாகிய மோக்ஷத்தை அடைகிறான் ; (எனவே,) எவன் ப்ரஹ்மசர்யத்திலிருந்தே துறந்து, உயிர்வாழ்க்கை முழுவதும் ப்ரஹ்மத்திலேயே நிற்கின்றானோ, அவன் ப்ரஹ்மாநந்தத்தைப்பெறுகிறான் என்ற (விஷயத்தில்) என்ன சொல்லவேண்டுவது ? (௭௨)

ஸ்ரீமத் பகவத்கீதாபாஷ்யத்தில் இரண்டாவது அத்தியாயம் முற்றும்.

## 𑌤𑍃𑌤𑍀𑌯𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌃 ॥

𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌵𑌿𑌷𑌯𑌭𑍂𑌤𑍇 𑌦𑍍𑌵𑍇 𑌬𑍁𑌦𑍍𑌧𑍀 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑍇, 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍇 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌯𑍋𑌗𑍇 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌇𑌤𑌿 𑌚 । 𑌤𑌤𑍍𑌰 "𑌪𑍍𑌰𑌜𑌹𑌾𑌤𑌿 𑌯𑌦𑌾 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍" 𑌇𑌤𑌿 𑌶𑍍𑌲𑍋𑌕𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌿 𑌆 𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑌪𑌰𑌿𑌸𑌮𑌾𑌪𑍍𑌤𑍇𑌃 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌨𑌾𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌤𑌨𑍍𑌨𑌿𑌷𑍍𑌠𑌤𑌯𑌾 𑌏𑌵 𑌚 𑌕𑍃𑌤𑌾𑌰𑍍𑌥𑌤𑌾 𑌉𑌕𑍍𑌤𑌾 '𑌏𑌷𑌾 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑍀 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃' 𑌇𑌤𑌿 । 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌾𑌯 𑌚 '𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑍇𑌵𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑍇...... 𑌮𑌾 𑌤𑍇 𑌸𑌙𑍍𑌗𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌿' 𑌇𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮 𑌏𑌵 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑌵𑌾𑌨𑍍 𑌯𑍋𑌗𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑍍 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯, 𑌨 𑌤𑌤 𑌏𑌵 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑌵𑌾𑌨𑍍 । 𑌤𑌦𑍇𑌤𑌤𑍍 𑌆𑌲𑌕𑍍𑌷𑍍𑌯 𑌪𑌰𑍍𑌯𑌾𑌕𑍁𑌲𑍀𑌕𑍃𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌃 𑌉𑌵𑌾𑌚 ॥

𑌕𑌥𑌂 𑌭𑌕𑍍𑌤𑌾𑌯 𑌶𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌰𑍍𑌥𑌿𑌨𑍇 𑌯𑌤𑍍 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌸𑌾𑌧𑌨𑌂 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌂 𑌶𑍍𑌰𑌾𑌵𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌮𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍇𑌕𑌾𑌨𑌰𑍍𑌥𑌯𑍁𑌕𑍍𑌤𑍇 𑌪𑌾𑌰𑌮𑍍𑌪𑌰𑍍𑌯𑍇𑌣𑌾𑌪𑌿 𑌅𑌨𑍈𑌕𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑌶𑍍𑌰𑍇𑌯𑌃𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌫𑌲𑍇 𑌨𑌿𑌯𑍁𑌞𑍍𑌜𑍍𑌯𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑌰𑍍𑌯𑌾𑌕𑍁𑌲𑍀𑌭𑌾𑌵𑌃 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑍍𑌯, 𑌤𑌦𑌨𑍁𑌰𑍂𑌪𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃 '𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌚𑍇𑌤𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌃, 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌾𑌪𑌾𑌕𑌰𑌣𑌵𑌾𑌕𑍍𑌯𑌂 𑌚 𑌭𑌗𑌵𑌤𑌃 𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌵𑌿𑌭𑌾𑌗𑌵𑌿𑌷𑌯𑍇 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 ॥

---

## மூன்றும் அத்தியாயம் : கர்மயோகம்.

### அர்ஜுனனுடைய மனமலைப்பு.

ப்ரவிருத்தி நிவிருத்திகளைப்பற்றியவையான (கீதா)சாஸ்திரத்தின் இரண்டு கொள்கைகள் பகவானால் (இரண்டாம் அத்தியாயத்தில்) ஸாங்க்யவிஷயத்திலே புத்தி எனவும், யோகவிஷயத்திலே புத்தி எனவும் உபதேசிக்கப்பட்டன. அவற்றுள் "எப்பொழுது" (௨ - ௫௫) என்பதுமுதல் அத்தியாயம் முடிகிறவரையிலும், ஸாங்க்யபுத்தியைச் சார்ந்தவர்க்குத் துறவு அவச்யம் வேண்டுமெனக் கூறி, அந்த நிஷ்டையையுடைமையினாலேயே புருஷார்த்தம் கைகூடுதலும் "இது, ப்ரஹ்மத்தைப்பற்றிய நிலை" (௨ - ௭௨) எனக் கூறப்பட்டது. அர்ஜுனனுக்கும் (பகவான்) "கர்மத்திலேதான் உனக்கு அதிகாரம்......கர்மத்தைச் செய்யாமையிலே உனக்குப் பிரியம் இருக்கக் கூடாது" (௨-௪௭)என யோகபுத்தியைப்பற்றிக் கர்மத்தையே செய்யவேண்டுமெனக் கூறினர்; (ஆனால்,) அதிலிருந்தே நன்மை[முக்தி] பெறுதலைக் கூறவில்லை. அதையும் [முக்திக்கு நேரே ஸாதநமான ஞானத்தைப் பிறர்க்கு எடுத்துக்காட்டியதையும்], இதையும்[அதற்குவிரோதமானகர்மத்தைஅநுஷ்டிக்கும்படி தனக்குச்சொன்னதையும்] பார்த்து அறிவுதிகைத்த அர்ஜுனன் (௩ - ௧,௨ - ஆம் சுலோகங்களைக்) கூறலானான் :

'எது நன்மை[முக்தி]யைப் பெறுதற்கு நேரான ஸாதநமோ,(அந்த) ஸாங்க்யபுத்திநிஷ்டையை, நன்மையைநாடும் பக்த(னான வேறொருவ)னுக்கு உபதேசித்து, (நன்கு)தெரிகின்ற பலதீங்குகளோடுகூடியதும், பரம்பரையாகவாயினும் நன்மை கைகூடுதலென்னும்பயன்(இதே ஜந்மத்தில் என்பது)நிச்சயமில்லாததுமானகர்மத்தில் (பகவான்) எப்படி என்னை ஏவக்கூடும்?' என்று அர்ஜுனன் மனத்திகைப்புக் கொண்டது ஏற்கும். "கர்மயோகமானது" (௩ - ௧) என்பதுமுதலான வினாவும் அதற்குஏற்ப உள்ளது. பின்னும், சாஸ்திரமானது கீழ்க்கூறிய (ஞானம் கர்மம் என்ற இப்)பிரிவை(த் தான் கூறும்) விஷயமாகக்கொண்டிருந்தால்(தான், அர்ஜுனனுடைய) வினாவை (ஏற்றுக்கொள்ளாது)தள்ளிவிடுகின்ற பகவானுடைய திருவாக்கும் (௩ - ௩) பொருத்தமாகும்.

केचित्तु — अर्जुनस्य प्रश्नार्थम् अन्यथा कल्पयित्वा तत्प्रतिकूलं भगवतः प्रतिवचनं वर्णयन्ति, यथा च आत्मना सम्बन्धग्रन्थे गीतार्थः निरूपितः तत्प्रतिकूलं च इह पुनः प्रश्नप्रतिवचनयोः अर्थं निरूपयन्ति। कथम्? तत्र सम्बन्धग्रन्थे तावत् — सर्वेषाम् आश्रमिणां ज्ञानकर्मणोः समुच्चयः गीताशास्त्रे निश्चितः अर्थः इति उक्तं पुनः विशेषितं च यावज्जीवश्रुतिचोदितानि कर्माणि परित्यज्य केवलात् एव ज्ञानात् मोक्षः प्राप्यते इत्येतत् एकान्तेनैव प्रतिषिद्धमिति। इह तु आश्रमविकल्पं दर्शयता यावज्जीवश्रुतिचोदितानामेव कर्मणां परित्याग उक्तः। तत् कथम् ईदृशं विरुद्धम् अर्थम् अर्जुनाय ब्रूयात् भगवान्, श्रोता वा कथं विरुद्धम् अर्थम् अवधारयेत्? ॥

तत्र एतत् स्यात् — गृहस्थानामेव श्रौतकर्मपरित्यागेन केवलादेव ज्ञानात् मोक्षः प्रतिषिध्यते, न तु आश्रमान्तराणाम् इति। एतदपि पूर्वोत्तरविरुद्धमेव। कथम्? सर्वाश्रमिणाम्

---

**ஞானமும் கர்மமும் ஒருங்கு சேரப்பெறுமை.**

ஆனல், சிலர் அர்ஜுனனுடைய வினப்பொருளை வேறுவிதமாகக் கற்பித்து, பகவான் மறுமொழியை அதற்கு[வினவுக்கு]மாருக விவரிக்கிருர்கள்; அன்றியும், (தாம் கிதைக்கு எழுதிய) முகவுரையிலே கிதையின் பொருளானது தம்மால் எப்படி ஆராய்ச்சிசெய்யப்பட்டதோ, அதற்குமாருகவும் இங்கே[மூன்ரும் அத்தியாயத் தொடக்கத்திலே] வினவிடைகளின் பொருளை ஆராய்ச்சி செய்கிருர்கள்.—எப்படி யெனில்?—அந்த முகவுரையிலே 'ஆச்ரமத்தார் அனைவர்க்கும் ஞானம்கர்மம்என்ற இரண்டும் கூடுதலானது, கிதாசாஸ்திரத்திலே நிர்ணயிக்கப்பட்டபொருள்' என்று கூறப்பட்டது; பின்னல்,"உயிர்வாழ்க்கைமுழுவதும்" என்னும் சுருதியினல் விதிக்கப் பட்ட கர்மங்களைத் துறந்து, ஞானமொன்றினுலேமாத்திரம் முக்தி கிடைக்கும்என்ற இது முற்றிலுமே மறுக்கப்பட்ட தென்றும் சிறப்பித்துக் கூறப்பட்டது. இங்கேயோ [மூன்ரும் அத்தியாயத்தொடக்கத்திலோ], (பகவான்) ஆச்ரமவேறுபாட்டை[ஞானம் கர்மம்என்ற இரண்டனுள் ஒருவனுக்கு ஏதாவதொன்றிலேயே நிஷ்டையை] உணர்த்துகிருர்; உணர்த்தவே, "உயிர்வாழ்க்கைமுழுவதும்" என்னுஞ் சுருதியினல் விதிக்கப் பட்ட (அந்தக்)கர்மங்களையே துறந்திடுதல் கூறப்பட்டதாயிற்று. இத்தகைய மாறு பட்ட அந்தவிஷயத்தைப் பகவான் எப்படி அர்ஜுனனுக்குக் கூறுவார்? அல்லது, கேட்பவன்தான் மாறுபட்டபொருளை எப்படிக் கேட்பான்?

அவ்வாறுகொள்ளுமிடத்து இது (அவர்களுடைய கருத்தாக) இருக்கலாம்:— "சுருதிஸ்மிருதிகளில் விதிக்கப்பட்ட கர்மங்களைத் துறந்திடுதலோடு(கூடிய) ஞான மொன்றினுலேயே முக்தி (கிடைக்காதென்று)மறுக்கப்படுகின்றது கிருகஸ்தர்களுக்கே தான்; மற்றைய ஆச்ரமத்தார்க்கு அன்று" என்ற இதுவும், முன் பின்னுக்கு மாறுப ட்டதுதான்.—எப்படி?—'ஆச்ரமத்தார்எல்லார்க்குமே ஞானம்கர்மம்என்றஇரண்டும்

𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌃 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑍋 𑌗𑍀𑌤𑌾𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌃 𑌅𑌰𑍍𑌥𑌃 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌯 𑌇𑌹 𑌅𑌥 𑌤𑌦𑍍𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌂 𑌕𑍇𑌵𑌲𑌾𑌦𑍇𑌵 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑍍 𑌮𑍋𑌕𑍍𑌷𑌂 𑌬𑍍𑌰𑍂𑌯𑌾𑌦𑍍 𑌆𑌶𑍍𑌰𑌮𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌣𑌾𑌮𑍍॥

𑌅𑌥 𑌮𑌤𑌂—𑌶𑍍𑌰𑍌𑌤𑌕𑌰𑍍𑌮𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌯𑌾 𑌏𑌤𑌦𑍍𑌵𑌚𑌨𑌂 “𑌕𑍇𑌵𑌲𑌾𑌦𑍇𑌵 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 𑌶𑍍𑌰𑍌𑌤𑌕𑌰𑍍𑌮𑌰𑌹𑌿𑌤𑌾𑌤𑍍 𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌧𑍍𑌯𑌤𑍇” 𑌇𑌤𑌿; 𑌤𑌤𑍍𑌰 𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌮𑌪𑌿 𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌵𑌤𑍍 𑌉𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 “𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑍇𑌵 𑌕𑍇𑌵𑌲𑌾𑌤𑍍” 𑌇𑌤𑌿 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿। 𑌏𑌤𑌦𑌪𑌿 𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌮𑍍। 𑌕𑌥𑌮𑍍? 𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌸𑍍𑌯𑍈𑌵 𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌿𑌤𑌾𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 𑌮𑍋𑌕𑍍𑌷𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌧𑍍𑌯𑌤𑍇 𑌨 𑌤𑍁 𑌆𑌶𑍍𑌰𑌮𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌣𑌾𑌮𑌿𑌤𑌿 𑌕𑌥𑌂 𑌵𑌿𑌵𑍇𑌕𑌿𑌭𑌿𑌃 𑌶𑌕𑍍𑌯𑌮𑍍 𑌅𑌵𑌧𑌾𑌰𑌯𑌿𑌤𑍁𑌮𑍍। 𑌕𑌿𑌂 𑌚 𑌯𑌦𑌿 𑌮𑍋𑌕𑍍𑌷𑌸𑌾𑌧𑌨𑌤𑍍𑌵𑍇𑌨 𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌰𑍇𑌤𑌸𑌾𑌂 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑌥𑌾 𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌇𑌷𑍍𑌯𑌤𑌾𑌂 𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤𑍈𑌰𑍇𑌵 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑍋 𑌨 𑌶𑍍𑌰𑍌𑌤𑍈𑌃 ॥

𑌅𑌥 𑌶𑍍𑌰𑍌𑌤𑍈𑌃 𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤𑍈𑌶𑍍𑌚 𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌸𑍍𑌯𑍈𑌵 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑌃 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯, 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌰𑍇𑌤𑌸𑌾𑌂 𑌤𑍁 𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑌮𑌾𑌤𑍍𑌰𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌿𑌤𑌾𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 𑌮𑍋𑌕𑍍𑌷 𑌇𑌤𑌿। 𑌤𑌤𑍍𑌰 𑌏𑌵𑌂 𑌸𑌤𑌿 𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌸𑍍𑌯 𑌆𑌯𑌾𑌸𑌬𑌾𑌹𑍁𑌲𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌶𑍍𑌰𑍌𑌤𑌂 𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤𑌂 𑌚 𑌬𑌹𑍁𑌦𑍁𑌃𑌖𑌰𑍂𑌪𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌶𑌿𑌰𑌸𑌿 𑌆𑌰𑍋𑌪𑌿𑌤𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 ॥

---

கூடுதலானது, கீதாசாஸ்திரத்திலே நிர்ணயிக்கப்பட்ட பொருள்' என்று (முக வுரையிலே) பிரதிஜ்ஞைசெய்து, இங்கே[மூன்றும் அத்தியாயத்திலே] அதற்குமாருக, ஞானமொன்றினுலேயேமாத்திரம் மற்றைய ஆச்ரமங்களுக்கு மோக்ஷ(உபாய)த்தை எப்படிக் கூறலாம்?

(இனி, இது) கருத்தாயின் :—"ச்ரௌதகர்மம்(சேர்தல்)இல்லாத ஞானமொன்றினுலேமட்டும் மோக்ஷமானது, கிருகஸ்தர்களுக்கு மறுக்கப்படுகின்றது" என்ற இவ்வசநம் ச்ரௌதகர்மத்தைக் குறித்து(நிற்பது). ஸ்மார்த்தகர்மமானது கிருகஸ்தர்களுக்கு இருந்தும், (அது ச்ரௌதகர்மம்போல ப்ரதாந மன்ருகையால் அதனை) இல்லாததுபோலக்கொண்டு அ(ந்த வசநத்)திலே "ஞானமொன்றினுலேமட்டும்" எனப்படுகின்றது என்பது. இதுவும் மாறுபட்டது(தான்).—எப்படி?—"ஸ்மார்த்த கர்மத்தோடு ஒருங்கு சேரப்பெற்ற ஞானத்தாலே மோக்ஷமானது மறுக்கப்படுகின்றது கிருகஸ்தர்களுக்கேயன்றி, மற்றை ஆச்ரமங்களுக்கு அன்று" என்று விவேகிகளால் எப்படிக் கொள்ளக்கூடும்? இன்னும், ஸந்யாஸிகளுக்கு ஸ்மார்த்தகர்மங்கள் மோக்ஷஸாதநமாக (ஞாநத்தோடு) ஒருங்கு சேர்க்கப்படுமாயின், அவ்வாறே கிருகஸ்தனுக்கும் ஸ்மார்த்தகர்மங்களோடேயே(ஞாநத்தை) ஒருங்கு சேர்த்தலைக்கொள்ளலாம். ச்ரௌதகர்மங்களோடு (ஞானத்தை ஒருங்கு சேர்த்துக்கொள்ள)வேண்டாம்.

இனி, "முக்தியின் பொருட்டு(ஞாநத்தை,) ச்ரௌத(மும்) ஸ்மார்த்த(முமான கர்ம)ங்களோடு ஒருங்கு சேர்த்தல் கிருகஸ்தனுக்கே; ஸந்யாஸிகளுக்கோ ஸ்மார்த்தகர்மத்தோடுமாத்திரம் ஒருங்கு சேரப்பெற்ற ஞாநத்தால் முக்தியாம்" என்ருலோ,—

அது இவ்வாறுள்ளவளவிலே, உழைப்பு மிகுதியால், பல துன்பவடிவமாகிய ச்ரௌதமும் ஸ்மார்த்தமுமான கர்மம் கிருகஸ்தன் தலையிலே ஏற்றப்பட்டதாகும்.

𑌯𑌤𑍍𑌤𑍁 𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌸𑍍𑌯𑍈𑌵 𑌕𑌰𑍍𑌮𑌿𑌣𑍋 𑌮𑍋𑌕𑍍𑌷𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌨 𑌪𑌰𑌿𑌵𑍍𑌰𑌾𑌜𑌕𑌾𑌨𑌾𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌵𑌿𑌹𑌿𑌤𑌕𑌰𑍍𑌮𑌾𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿 । 𑌤𑌦𑌪𑌿 𑌅𑌸𑌤𑍍, 𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌇𑌤𑌿𑌹𑌾𑌸𑌪𑍁𑌰𑌾𑌣𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌷𑍁 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌙𑍍𑌗𑌤𑍍𑌵𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌵𑌿𑌧𑌾𑌨𑌾𑌤𑍍, 𑌆𑌶𑍍𑌰𑌮𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑌵𑌿𑌧𑌾𑌨𑌾𑌚𑍍𑌚 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯𑍋𑌃 ॥

𑌸𑌿𑌦𑍍𑌧𑌃 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌶𑍍𑌰𑌮𑌿𑌣𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌃 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑌃—𑌨; 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍋𑌃 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌵𑌿𑌧𑌾𑌨𑌾𑌤𑍍 । '𑌪𑍁𑌤𑍍𑌰𑍈𑌷𑌣𑌾𑌯𑌾𑌶𑍍𑌚 𑌵𑌿𑌤𑍍𑌤𑍈𑌷𑌣𑌾𑌯𑌾𑌶𑍍𑌚 𑌲𑍋𑌕𑍈𑌷𑌣𑌾𑌯𑌾𑌶𑍍𑌚 𑌵𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌯𑌾𑌥 𑌭𑌿𑌕𑍍𑌷𑌾𑌚𑌰𑍍𑌯𑌂 𑌚𑌰𑌨𑍍𑌤𑌿,' '𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌨𑍍𑌯𑌾𑌸𑌮𑍇𑌷𑌾𑌂 𑌤𑌪𑌸𑌾𑌮𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌮𑌾𑌹𑍁𑌃,' '𑌨𑍍𑌯𑌾𑌸 𑌏𑌵𑌾𑌤𑍍𑌯𑌰𑍇𑌚𑌯𑌤𑍍' 𑌇𑌤𑌿 । '𑌨 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌨 𑌪𑍍𑌰𑌜𑌯𑌾 𑌧𑌨𑍇𑌨 𑌤𑍍𑌯𑌾𑌗𑍇𑌨𑍈𑌕𑍇 𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑌾𑌨𑌶𑍁𑌃' 𑌇𑌤𑌿 𑌚 । '𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌾𑌦𑍇𑌵 𑌪𑍍𑌰𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌃 𑌶𑍍𑌰𑍁𑌤𑌯𑌃 ॥

'𑌤𑍍𑌯𑌜 𑌧𑌰𑍍𑌮𑌮𑌧𑌰𑍍𑌮𑌂 𑌚 𑌉𑌭𑍇 𑌸𑌤𑍍𑌯𑌾𑌨𑍃𑌤𑍇 𑌤𑍍𑌯𑌜 ।
𑌉𑌭𑍇 𑌸𑌤𑍍𑌯𑌾𑌨𑍃𑌤𑍇 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌯𑍇𑌨 𑌤𑍍𑌯𑌜𑌸𑌿 𑌤𑌤𑍍 𑌤𑍍𑌯𑌜 ॥'

---

### சுருதி முதலியவற்றில் விதித்த துறவு.

இனி, "உழைப்பு மிகுதியால் கிருகஸ்தனுக்கேமோக்ஷமாம்; மற்றைய ஆச்ரமங்களுக்கு இல்லையாம்; சுருதியில்விதித்துள்ள நித்யகர்மம் இல்லாமையால்" எனின்,—

அதுவும் சரியன்று; (ஸம்ஸாரத்தினின்றும்) விடுபட விரும்புவோனுக்கு ஞானத்திற்குத்துணையாக ஸகலகர்மங்களையும் துறத்தலை உபநிஷத்துக்கள் எல்லாவற்றிலும், புராணங்களிலும், இதிஹாஸங்களிலும், யோகநூல்களிலும், விதித்தலாலும் (முதல் மூன்று ஆச்ரமங்களினின்று நான்காம் ஆச்ரமத்திற்கு) முறையாகவாயினும், (அல்லது முதல் மூன்று ஆச்ரமங்களுள் ஏதாவதொன்றிலிருந்து நான்காம் ஆச்ரமத்திற்குச்) சடக்கென்றாயினும் (போகவிரும்பியவனுக்கு அப்படியே) ஆச்ரமங்களை சுருதிஸ்மிருதிகளில் விதித்தலாலும் என்க.

அப்பொழுது ஆச்ரமங்கள் எல்லாவற்றிற்கும் ஞானகர்மங்கள் இரண்டும் ஒருங்குசேரல் அமைந்தது (என்றால்),—

அப்படியன்று; (ஸம்ஸாரத்தினின்றும்) விடுபட விரும்புவோனுக்கு ஸகலகர்மங்களையும் துறத்தலை விதித்தலின். "மக்களாசையையும், பொருளாசையையும், உலக ஆசையையும் விட்டுப், பின்பு, பிச்சையெடுத்து ஜீவிக்கிறார்கள்" (பி - ங - ரு - க), "ஆதலால் இத்தவங்களுள் துறவை மேலானதாகக்கூறுகிறார்கள்," "துறவே சிறப்புற்றது" (தை - ச - எகூ,எஅ) என்றும், "சிலர் கர்மத்தினாலும், மக்களினாலும், பொருளினாலும் அல்லாமல், துறவினால் சாகாத்தன்மையைப்பெற்றார்கள்" (தை -ச - கஉ) என்றும்,"ப்ரஹ்மசர்யத்தினின்றே துறக்கலாம்"(ஜா-ச)என்றும் முதலாக உள்ளவை (துறவை விதிக்கும்) சுருதிகளாம். "தருமம் அதர்மம் என்ற இரண்டையும் விட்டிடு; மெய்பொய் என்ற இரண்டையும்விட்டிடு: மெய்பொய்என்ற இரண்டையும் விட்டிட்டுப் பின்பு, எதனால் இவற்றை விட்டிடுகிறாயோ, அதனை(யும்) விட்டிடு ["நான் இவற்றை விடுகிறேன்" என்று நினைக்கும் பற்றையும் விட்டிடு]," "மணஞ்செய்து

'संसारमेव निःसारं दृष्ट्वा सारदिदृक्षया ।
प्रव्रजन्त्यकृतोद्वाहाः परं वैराग्यमाश्रिताः ॥' इति बृहस्पतिः ।
'कर्मणा बध्यते जन्तुर्विद्यया च विमुच्यते ।
तस्मात्कर्म न कुर्वन्ति यतयः पारदर्शिनः ॥' इति शुकानुशासनम् ।
इहापि च 'सर्वकर्माणि मनसा संन्यस्य' इत्यादि ॥

मोक्षस्य चाकार्यत्वात् मुमुक्षोः कर्मानर्थक्यम् । नित्यानि प्रत्यवायपरिहारार्थानीति चेत्, न, असंन्यासिविषयत्वात् प्रत्यवायप्राप्तेः । न हि अग्निकार्याद्यकरणात् संन्यासिनः प्रत्यवायः कल्पयितुं शक्यः यथा ब्रह्मचारिणामसंन्यासिनामपि ॥

---

கொள்ளாதவர்களாய் ஸம்ஸாரத்தையே ஸாரமற்றதாகக் கண்டு, ஸாரமாயுள்ளதைக் காணவேண்டுமென்னும் கருத்தோடு மிக்கவைராக்கியத்தையடைந்து துறக்கிறார்கள்'' என்பது பிருகஸ்பதி(வசனம்). ''பிராணிகள் கர்மத்தால் கட்டப்படுகின்றன; ஞானத்தால் விடுவிக்கப்படுகின்றன ; ஆதலால்,முடிவைக் கண்டறிந்த யதிகள் கர்மத்தைச் செய்வதில்லை''(மோ- உசக - எ) என்பது சுகர் உரைப்பது. இங்கேயும் [கீதையிலும்] ''ஸகலகர்மங்களையும் மனத்தால் துறந்து'' (ரு - கங) என்பதுமுதலானவை(யெல்லாம் துறவைவிதிக்கும் ஸ்மிருதிகளாம்).

மோக்ஷம் கர்மத்தின லமையமுடியாது.

மற்றும், மோக்ஷமென்ப(தனுடைய ஸ்வரூபத்தை ஆலோசித்தாலும், அ)து கார்யமாக [கர்மத்தினல் ஸாதிக்கப்படுவதாக] இல்லை; ஆகவே, (ஸம்ஸாரத்தினின்றும்) விடுபட விரும்புவோனுக்குக் கர்மம் பயன்படாது.

(ஆக்ஷேபம்) :—நித்தியகர்மங்கள்,(செய்யாதுவிட்டிடுதலால் வரும்)குற்றத்தை நீக்கிக்கொள்ளும்பொருட்டுப் பயன்படுகின்றன எனின்,—

(ஸமாதாநம்) :—அப்படியன்று ; (கர்மங்களைச் செய்யாவிடின்) குற்றம் வரும் என்பதுஸந்யாஸிகளல்லாதவர்களுக்காதலின். இன்னும்(விதிப்படி)ஸந்யாஸிகளாகாத ப்ரஹ்மசாரிகளுக்குக்(குற்றம்வருவது) போல, அக்நிகார்யம்முதலியவற்றைச் செய்யாமையினல் ஸந்யாஸிக்குக் குற்றம்(வருமென்று)கற்பிக்கமுடியாதன்றே. [ஸமித்துக்களால் ஹோமஞ்செய்தல், வேதம் ஓதுதல் முதலியன ப்ரஹ்மசாரிக்கு விதிக்கப்பட்டவை. அவற்றை அவன் செய்யாவிடில், அவனுக்குக் குற்றம் வரும். அவற்றை ஸந்யாஸி செய்யாவிடில், ஸந்யாஸிக்குக் குற்றம் வராது. எப்படியெனில்,—அந்தந்த ஆச்ரமத்திற்கு விதிக்கப்பட்டதை அந்தந்த ஆச்ரமத்திலுள்ளவர்கள் செய்யாவிடில், அவர்கட்குக் குற்றம் வருமேயன்றி, ஒரு ஆச்ரமத்திற்கு விதிக்கப்பட்டதை மற்றோராச்ரமத்திலுள்ளவர்கள் செய்யாவிட்டால், அதனல் இவர்கட்குக் குற்றம் வராது. ஒருவன் ப்ரஹ்மசர்யநிலையிலிருந்தால், அக்நிகார்யம் முதலியவற்றைச் செய்யவேண்டும். அவனே ஸந்யாஸியாய்விட்டாலோ, அவற்றைச் செய்யவேண்டியதில்லை. ஏனெனில், அவை ப்ரஹ்மசர்யநிலைக்கேயன்றி ஸந்யாஸநிலைக்கு விதிக்கப்பட்டன அல்ல ஆதலால், ப்ரஹ்மசர்யநிலையிலிருந்து ஸந்யாஸியானபின் அவற்றைச்செய்யாமையினல் குற்றம் வாராதென்க.—ஆ.]

𑌨 𑌤𑌾𑌵𑌤𑍍 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑍍 𑌅𑌭𑌾𑌵𑌾𑌦𑍇𑌵 𑌭𑌾𑌵𑌰𑍂𑌪𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰-
𑌤𑍍𑌯𑌵𑌾𑌯𑌸𑍍𑌯 𑌉𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 𑌕𑌲𑍍𑌪𑌯𑌿𑌤𑍁𑌂 𑌶𑌕𑍍𑌯𑌾,‘𑌕𑌥𑌮𑍍 𑌅𑌸𑌤𑌃 𑌸𑌜𑍍 𑌜𑌾𑌯𑍇𑌤’𑌇𑌤𑌿 𑌅𑌸𑌤𑌃
𑌸𑌜𑍍𑌜𑌨𑍍𑌮𑌾𑌸𑌂𑌭𑌵𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌃। 𑌯𑌦𑌿 𑌵𑌿𑌹𑌿𑌤𑌾𑌕𑌰𑌣𑌾𑌤𑍍 𑌅𑌸𑌂𑌭𑌾𑌵𑍍𑌯𑌮𑌪𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌵𑌾𑌯𑌂
𑌬𑍍𑌰𑍂𑌯𑌾𑌤𑍍 𑌵𑍇𑌦𑌃, 𑌤𑌦𑌾 𑌅𑌨𑌰𑍍𑌥𑌕𑌰𑌃 𑌵𑍇𑌦𑌃 𑌅𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌵𑌿𑌹𑌿𑌤𑌸𑍍𑌯
𑌕𑌰𑌣𑌾𑌕𑌰𑌣𑌯𑍋𑌃 𑌦𑍁𑌃𑌖𑌮𑌾𑌤𑍍𑌰𑌫𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌤𑌥𑌾 𑌚 𑌕𑌾𑌰𑌕𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌨
𑌜𑍍𑌞𑌾𑌪𑌕𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌅𑌨𑍁𑌪𑌪𑌨𑍍𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌨 𑌚 𑌏𑌤𑌤𑍍 𑌇𑌷𑍍𑌟𑌮𑍍 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍
𑌨 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 । 𑌅𑌤𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌃 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 ॥
‘𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌚𑍇𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌣𑌸𑍍𑌤𑍇 𑌮𑌤𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃’ 𑌇𑌤𑌿 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌾𑌨𑍁𑌪-
𑌪𑌤𑍍𑌤𑍇𑌶𑍍𑌚 । 𑌯𑌦𑌿 𑌹𑌿 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑍇 𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌚 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌯 𑌤𑍍𑌵𑌯𑌾
𑌏𑌕𑍇𑌨 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌤𑌤𑌃 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃 𑌅𑌨𑍁𑌪𑌪𑌨𑍍𑌨𑌃
‘𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌚𑍇𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌣𑌸𑍍𑌤𑍇 𑌮𑌤𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃’ 𑌇𑌤𑌿। 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌾𑌯 𑌚𑍇𑌤𑍍 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌕𑌰𑍍𑌮𑌣𑍀
𑌤𑍍𑌵𑌯𑌾 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑍇 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍇 𑌯𑌾 𑌕𑌰𑍍𑌮𑌣𑍋 𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌸𑌾𑌽𑌪𑌿 𑌉𑌕𑍍𑌤𑍈𑌵
𑌇𑌤𑌿 ‘𑌤𑌤𑍍 𑌕𑌿𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌘𑍋𑌰𑍇 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌯𑍋𑌜𑌯𑌸𑌿 𑌕𑍇𑌶𑌵’ 𑌇𑌤𑌿 𑌉𑌪𑌾𑌲𑌮𑍍𑌭𑍋

---

இனி, நித்தியகர்மங்களைச்செய்யாமையாகிய இன்மையினின்றே உண்மையாகிய குற்றம் உண்டாவதென்பதைக் கொள்ளமுடியாது; "இன்மையினின்றும் உண்மை எப்படி உண்டாகும்?" (சா - சு - உ) என, இன்மையினின்று உண்மைஉண்டாதல் கூடாமையைக்கூறுஞ்சுருதியினல். வேதமானது, விதித்ததைச் செய்யாமையினல் நேரிடக்கூடாத குற்றத்தையுங்கூறுமாயின், அப்பொழுது கெடுதிசெய்கின்றவேதம் ப்ரமாணமாகாதென்று கூறப்பட்டதாகும்; விதித்ததைச் செய்தல் செய்யாமை என்ற இரண்டும் துன்பத்தைமாத்திரம் கொடுத்தலினலென்க. மேலும் அவ்வாறே, சாஸ்திரமானது காரகமேயன்றி ஞாபகம் அன்று என, (அது) பொருத்தமில்லாப் பொருளையுடையதாகக் கற்பனைசெய்யப்பட்ட தாகும் [காரகம் - செய்வது: உண்டாக்குவது. ஞாபகம் - தெரிவிப்பது. நீர், நெருப்பு முதலிய பொருள்களின் சக்தி உலகப்பிரஸித்தம். அச்சக்தியைச் சார்ந்தே சாஸ்திரமானது தெரியாததைத் தெரிவிக்கின்றது. ஆனல், தானக அப்பொருள்கட்கு ஒருசக்தியை உண்டாக்கச் சாஸ்திரத்திற்கு முடியாது. முடியுமாயின், அது நியாயவிரோதமாதலால் சாஸ்திரம் அஸங்கதமாகும்.] இதுவோ (நமது) கொள்கையன்று. ஆகவே, ஸந்யாஸிக்குக் கர்மங்கள் (செய்யவேண்டியன) இல்லை. ஆதலால், ஞானகர்மங்கள் என்றஇரண்டும் கூடுதல் பொருந்தாதென்க.

### இரண்டும் கூடுதலென்பது, அர்ஜுனன் வினவோடு பொருந்தாமை.

மற்றும், "ஞானமானது கர்மத்தைக்காட்டிலும் சிறந்த தென்பது உமது கொள்கையானல்" (௩ - க) என்னும் அர்ஜுனனுடைய வினு பொருந்தாது. "நீ ஒருவனே ஞானத்தையும் கர்மத்தையும் சேர்த்து அநுஷ்டிக்கவேண்டும்" என்று இரண்டாம் அத்தியாயத்தில் பகவான் கூறியிருந்தாலன்றோ, அப்பொழுது "ஞானமானது கர்மத்தைக்காட்டிலும் சிறந்த தென்பது உமது கொள்கையானல்" (௩ - க) என்னும் அர்ஜுனனுடைய வினு பொருத்தமுருத தாகும். "நீ ஞானகர்மங்கள் இரண்டையும் அநுஷ்டிக்கவேண்டும்" என அர்ஜுனனுக்குக் கூறப்பட்டிருந்தால், (அப்பொழுது), கர்மத்தினும் மேலாக யாதொரு ஞானம் உள்ளதோ, அதுவும் கூறப்பட்டதுதான்; எனவே, "கேசவ! அப்பொழுது என் என்னைக் கொடியதான கர்மத்தில் ஏவுகிறீர்?"

𑌵𑌾 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑍋 𑌵𑌾 𑌨 𑌸𑍍𑌵𑌯𑌂𑌕𑍃𑌤 𑌉𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌨 𑌚 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑍍𑌯𑍈𑌵 𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌨 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌾 𑌇𑌤𑌿 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌕𑌲𑍍𑌪𑌯𑌿𑌤𑍁𑌂 𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍, 𑌯𑍇𑌨 '𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌚𑍇𑌤𑍍' 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌯𑌦𑌿 𑌪𑍁𑌨𑌃 𑌏𑌕𑌸𑍍𑌯 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌃 𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌤𑍍 𑌯𑍁𑌗𑌪𑌦𑍍 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌂 𑌨 𑌸𑌂𑌭𑌵𑌤𑍀𑌤𑌿 𑌭𑌿𑌨𑍍𑌨𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌤𑍍𑌵𑌂 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌤𑌤𑌃 𑌅𑌯𑌂 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃 𑌉𑌪𑌪𑌨𑍍𑌨𑌃 '𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌚𑍇𑌤𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌃 । 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌤𑌃 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌕𑌲𑍍𑌪𑌨𑌾𑌯𑌾𑌮𑌪𑌿 𑌭𑌿𑌨𑍍𑌨𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠𑌯𑍋𑌃 𑌭𑌗𑌵𑌤𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌚𑌨𑌂 𑌨 𑌉𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌨 𑌚 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌂 𑌭𑌗𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌚𑌨𑌂 𑌕𑌲𑍍𑌪𑌨𑍀𑌯𑌮𑍍 । 𑌅𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌚 𑌭𑌿𑌨𑍍𑌨𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠𑌯𑍋𑌃 𑌭𑌗𑌵𑌤𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌚𑌨𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌃 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 ॥

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌕𑍇𑌵𑌲𑌾𑌦𑍇𑌵 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 𑌮𑍋𑌕𑍍𑌷𑌃 𑌇𑌤𑍍𑌯𑍇𑌷𑍋𑌽𑌰𑍍𑌥𑌃 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌃 𑌗𑍀𑌤𑌾𑌸𑍁 𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌚 ॥

𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌃 '𑌏𑌕𑌂 𑌵𑌦 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌯' 𑌇𑌤𑌿 𑌚 𑌏𑌕𑌵𑌿𑌷𑌯𑍈𑌵 𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌨𑌾 𑌅𑌨𑍁𑌪𑌪𑌨𑍍𑌨𑌾 𑌉𑌭𑌯𑍋𑌃 𑌸𑌂𑌭𑌵𑍇 । '𑌕𑍁𑌰𑍁 𑌕𑌰𑍍𑌮𑍈𑌵 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍍' 𑌇𑌤𑌿 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌽𑌸𑌂𑌭𑌵𑌮𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑍍𑌯 𑌅𑌵𑌧𑌾𑌰𑌣𑍇𑌨 𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 ॥

---

(ங - க) என்று (பகவானைப்) பழித்தலாவது, வினவுதலாவது ஒருவிதத்தாலும் பொருந்தாது. "ஞானமானது" (ங - க) என்னும் வினா நிகழுமாறு "நீ கர்மத்தினும் மேலான ஞானத்தை அநுஷ்டிக்கக்கூடாது" என்று அர்ஜுனனுக்குமாத்திரம் பகவான் முன் உரைக்கவில்லை என்று கொள்வதும் சரியன்று. ஆனால், ஞானகர்மங்களுக்கு (ஒன்றற்கொன்றுள்ள) விரோதத்தால் ஒரேபுருஷன் (அவற்றை) ஒருங்கே அநுஷ்டித்தல் நிகழாதென்று (கருதி), '(அவை) வெவ்வேறு புருஷர்களால் அநுஷ்டிக்கத்தக்கவை' எனப் பகவான் முன் கூறியிருந்தால், அப்பொழுது "ஞானமானது" (ங - க) என்பது முதலான இக்கேள்வியானது பொருந்தியது. (பகவான் அருளிச்செய்ததைத்) தெளிவாகத் தெரிந்துகொள்ளாமையினால் கேள்வி கேட்கப்பட்டதெனக் கொண்டவிடத்தும், 'ஞானநிஷ்டையும் கர்மநிஷ்டையும் வெவ்வேறு புருஷர்களால் அநுஷ்டிக்கத்தக்கவை' என்ற பகவான்மறுமொழி பொருந்தாது. அன்றியும், பகவான் மறுமொழியையும் அறியாமையினாலானதாகக்கொள்ளுதல் தகாது. 'ஞானகர்மநிஷ்டைகள் வெவ்வேறு புருஷர்களால் அநுஷ்டிக்கத்தக்கவை' என்னும் பகவானுடைய இம்மறுமொழியைக் காண்கிறபடியால், ஞானகர்மங்கள் ஒருங்குசேரலென்பது இயையாதென்க.

ஆகவே, 'ஞான மொன்றினாலேயே முக்தி' என்ற இது, கீதையினும், எல்லா உபநிஷத்துக்களினும் நிர்ணயிக்கப்பட்டபொருளாம்.

இரண்டும் ஒருங்குசேரக்கூடுமாயின், ஞானகர்மங்களுள் 'ஒன்றை நிச்சயித்துச் சொல்லுக' (ங - உ) என (ஏதாவது) ஒன்றைப்பற்றியதாகவே (அர்ஜுனன் பகவானைப்) பிரார்த்தித்தல் பொருத்தமில்லையாகும். 'ஆதலால் நீ கர்மத்தையே செய்யக்கடவாய்' (ச - கரு) என்றும் அர்ஜுனனுக்கு ஞானநிஷ்டை கூடாமையைத் தேற்ற (ஏகார)த்தினால் காட்டுவர்.

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 ॥

௧. 𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌚𑍇𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌣𑌸𑍍𑌤𑍇 𑌮𑌤𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 ।
𑌤𑌤𑍍𑌕𑌿𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌘𑍋𑌰𑍇 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌯𑍋𑌜𑌯𑌸𑌿 𑌕𑍇𑌶𑌵 ॥

𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑍀 𑌚𑍇𑌤𑍍 𑌯𑌦𑌿 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌸𑌕𑌾𑌶𑌾𑌤𑍍 𑌤𑍇 𑌤𑌵 𑌮𑌤𑌾 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌹𑍇 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 । 𑌯𑌦𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌕𑌰𑍍𑌮𑌣𑍀 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌿𑌤𑍇 𑌇𑌷𑍍𑌟𑍇 𑌤𑌦𑌾 𑌏𑌕𑌂 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃𑌸𑌾𑌧𑌨𑌮𑌿𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌣𑍋 𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌇𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌅𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌕𑌰𑌣𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌅𑌨𑍁𑌪𑌪𑌨𑍍𑌨𑌮𑌰𑍍𑌜𑍁𑌨𑍇𑌨 𑌕𑍃𑌤𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍; 𑌨 𑌹𑌿 𑌤𑌦𑍇𑌵 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌫𑌲𑌤𑍋𑌽𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌤𑌥𑌾 𑌚, 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑍍𑌕𑌰𑍀 𑌭𑌗𑌵𑌤𑍋𑌕𑍍𑌤𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃, 𑌅𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑍍𑌕𑌰𑌂 𑌚 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵 𑌇𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌯𑌤𑌿, 𑌤𑌤𑍍 𑌕𑌿𑌂 𑌨𑍁 𑌕𑌾𑌰𑌣𑌮𑌿𑌤𑌿 𑌭𑌗𑌵𑌤 𑌉𑌪𑌾𑌲𑌮𑍍𑌭𑌮𑌿𑌵 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌤𑌤𑍍 𑌕𑌿𑌂 𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌘𑍋𑌰𑍇 𑌕𑍍𑌰𑍂𑌰𑍇 𑌹𑌿𑌂𑌸𑌾𑌲𑌕𑍍𑌷𑌣𑍇 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌯𑍋𑌜𑌯𑌸𑌿 𑌕𑍇𑌶𑌵 𑌇𑌤𑌿 𑌚 𑌯𑌦𑌾𑌹 𑌤𑌦𑌪𑌿 𑌨𑍋𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

𑌅𑌥 𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤𑍇𑌨𑍈𑌵 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌉𑌕𑍍𑌤𑌃 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑍇𑌨 𑌚 𑌅𑌵𑌧𑌾𑌰𑌿𑌤𑌶𑍍𑌚𑍇𑌤𑍍 '𑌤𑌤𑍍 𑌕𑌿𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌘𑍋𑌰𑍇 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌯𑍋𑌜𑌯𑌸𑌿' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌕𑌥𑌂 𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌵𑌚𑌨𑌮𑍍 ॥ ௧ ॥

---

ஞானமா கர்மமா எது சிறந்தது?

அர்ஜுனன் சொல்லலுற்றான்:

க. ஜநார்த்தந! ஞானம் கர்மத்தினும் மேலானதென்பது உமது கருத்தானால், அப்பொழுது என் கேசவ! என்னைக் கொடியதான கர்மத்தில் ஏவுகிறீர்?

ஞானகர்மங்கள் இரண்டும் ஒருங்குசேர்தல் (முக்திக்கு ஸாதனம் என்பது பகவான்) கருத்தானால், அப்பொழுது (ஒருங்கு சேர்க்கப்பட்ட) மோக்ஷஸாதனம் ஒன்றுதான். எனவே, 'கர்மத்தைக்காட்டிலும் ஞானம் மேலானது' என்று கர்மத்தினின்றும் ஞானத்தைப் பிரித்திடுதல் அர்ஜுனன் தப்பாகச் செய்ததாகும்; அதே அதனினின்றும் பயனால் வேறுபட்டதாகாதன்றே [ஒரேபயனைப் பெறுதற்கு இரண்டு ஒருங்குசேர்ந்து ஸாதநமாயிருந்தால், அவற்றுள் ஒன்றற்கொன்று கீழானது மேலானது என்றவேறுபாடு எப்படிக் கூடும்? கூடாது. உதாரணமாக, பித்தம் தணிதலென்னும் பயனைப் பெறுதற்குக் குளிர்ச்சியும் இனிமையுமான இரண்டுபதார்த்தங்களை ஒருங்குசேர்த்துப் புஜித்தல் ஸாதநமாயின், அவற்றுள் மற்றயதைக்காட்டிலும் இனிமையான பதார்த்தம் மேலானதென்னும் வேறுபாடு பொருந்தாதன்றோ.] இன்னும் அவ்வாறே, "பகவான் கர்மத்தைக்காட்டிலும் ஞானம் நன்மைசெய்வதாகக் கூறினர்; நன்மைசெய்வதல்லாததான கர்மத்தை (நீ) செய்யக்கடவாய் என்று எனக்கு உபதேசிக்கிறார். அஃதென்ன காரணமோ?" என்று பகவானைப் பழிக்கிறவன்போல 'கேசவ! அப்பொழுது ஹிம்ஸையாகிய கொடிய கர்மத்தில் எக்காரணத்தால் என்னை ஏவுகிறீர்?' என்று (அர்ஜுனன்) கூறுவதும் பொருந்தாது.

இனி, ஸ்மார்த்தகர்மமாத்திரம் (ஞானம்) ஒருங்குசேர்தல் பகவானால் எல்லோருக்கும் கூறப்பட்டு, அர்ஜுனனாலும் (அப்படியே) கிரகித்துக்கொள்ளப்பட்டது என்றால்,—"அப்பொழுது என் என்னைக் கொடியதான கர்மத்தில் ஏவுகிறீர்?" என்பதுமுதலான வார்த்தை எப்படி நேராகும்? (க)

किंच—

௨. व्यामिश्रेणेव वाक्येन बुद्धिं मोहयसीव मे।
तदेकं वद निश्चित्य येन श्रेयोऽहमाप्नुयाम्॥

व्यामिश्रेणेव यद्यपि विविक्ताभिधायी भगवान्, तथापि मम मन्दबुद्धेः व्यामिश्रमिव भगवद्वाक्यं प्रतिभाति। तेन मम बुद्धिं मोहयसि इव, मम बुद्धिव्यामोहापनयाय हि प्रवृत्तः त्वं तु कथं मोहयसि? अतः ब्रवीमि बुद्धिं मोहयसि इव मे इति। त्वं तु भिन्नकर्तृकयोः ज्ञानकर्मणोः एकपुरुषानुष्ठानासंभवं यदि मन्यसे, तत्र एवं सति तत् तयोः एकं बुद्धिं कर्म वा इदमेव अर्जुनस्य योग्यं बुद्धिशक्त्यवस्थानुरूपमिति निश्चित्य वद ब्रूहि, येन ज्ञानेन कर्मणा वा अन्यतरेण श्रेयः अहमाप्नुयाम्॥

यदि हि कर्मनिष्ठायां गुणभूतमपि ज्ञानं भगवता उक्तं स्यात् कथं "तयोः एकं वद" इति एकविषयैव अर्जुनस्य शुश्रूषा स्यात्। न हि भगवता पूर्वमुक्तं "अन्यतरदेव ज्ञानकर्मणोः वक्ष्यामि, नैव द्वयम्" इति, येन उभयप्राप्त्यसंभवं आत्मनो मन्यमानः एकमेव प्रार्थयेत्॥ ௨॥

---

அன்றியும்,

௨. மலைக்கச்செய்வதுபோன்ற வார்த்தையினால் என்னுடைய புத்தியை மயக்குகின்றீர்போலும். நான் எதனால் நன்மையைப் பெறுவேனோ, அந்த ஒன்றை [ஞானகர்மங்களுள், உனக்கு உரியது இன்னதுதான் என்பதை]ப் பிரித்துச் சொல்லவேண்டும்.

பகவான் தெளிவாகப் பேசுபவராயினும், மந்தபுத்தியான எனக்குப் பகவான் வார்த்தையானது மலைக்கச்செய்வதுபோலத் தோற்றுகின்றது. அதனால் என் மதியை மயக்குகின்றீர்போலும்: மந்தபுத்தியான என்னுடைய மயக்கத்தைப் போக்குதற்கென்றே தலைப்பட்டுள்ள நீங்கள் (என்னை) எப்படி மயங்கச்செய்வீர்கள்? [செய்ய மாட்டீர்கள்]. ஆதலால் கூறுகிறேன் "எனது புத்தியை மயங்கச்செய்கின்றீர்போலும்" என்று. ஆனால், "ஞானத்தை அநுஷ்டிப்பவன் வேறு, கர்மத்தை அநுஷ்டிப்பவன் வேறு; ஒருவனே (ஒரேகாலத்து இவ்விரண்டையும் ஒருங்கே) அநுஷ்டித்தல் நிகழாது" என நீங்கள் நினைத்தால், (அப்பொழுது) அது இவ்வாறிருக்க, அவற்றுள் (ஏதாவது)ஒன்றை = ஞானத்தை அல்லது கர்மத்தை—"இதுவே அர்ஜுனனுக்குத் தக்கது, (அவனுடைய) புத்திவல்லமைக்கும், நிலைமைக்கும் ஏற்றது" என நிச்சயித்து அருளிச்செய்க. ஞானமாகவாயினும், கர்மமாகவாயினுமுள்ள எந்த எதாவதொன்றினால் நான் நன்மையைப்பெறுவேனோ, (அதனை உரைத்தருளுக).

பகவான் ஞானத்தைக் கர்மநிஷ்டைக்குத் துணையாகவாவது கூறியிருந்தால், அப்பொழுது "அவ்விரண்டனுள் ஒன்றைச் சொல்லவேண்டும்" என ஒன்றைப்பற்றியதாகவே அர்ஜுனன் எப்படிக் கேட்கவிரும்பலாகும்? (அவன்), தான் இரண்டையும் பெறமுடியாதென்று நினைக்கின்றவனாய் ஒன்றையே வேண்டும்படிக்கு, பகவான் முன் "ஞானகர்மங்களுள் எதாவதொன்றுதான் சொல்லுவேன், இரண்டையும் (சொல்ல)மாட்டேன்" எனக் கூறவில்லையன்றோ. (௨)

𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑌮𑍇𑌵 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌚𑌨𑌂 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚—

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 ॥

௩. 𑌲𑍋𑌕𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌾 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌪𑍁𑌰𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌮𑌯𑌾𑌨𑌘 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍍 ॥

𑌲𑍋𑌕𑍇 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑍃𑌤𑌾𑌨𑌾𑌂 𑌤𑍍𑌰𑍈𑌵𑌰𑍍𑌣𑌿𑌕𑌾𑌨𑌾𑌂 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌾 𑌦𑍍𑌵𑌿𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌾 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌤𑌾𑌤𑍍𑌪𑌰𑍍𑌯𑌂 𑌪𑍁𑌰𑌾 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌸𑌰𑍍𑌗𑌾𑌦𑍌 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌤𑌾𑌸𑌾𑌮𑍍 𑌅𑌭𑍍𑌯𑍁𑌦𑌯𑌨𑌿𑌃𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌸𑌾𑌧𑌨𑌂 𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌸𑌂𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑌮𑍍 𑌆𑌵𑌿𑌷𑍍𑌕𑍁𑌰𑍍𑌵𑌤𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌮𑌯𑌾 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑍇𑌨 𑌈𑌶𑍍𑌵𑌰𑍇𑌣 𑌹𑍇 𑌅𑌨𑌘 𑌅𑌪𑌾𑌪 । 𑌤𑌤𑍍𑌰 𑌕𑌾 𑌸𑌾 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌾 𑌇𑌤𑌿? 𑌆𑌹— 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍇𑌵 𑌯𑍋𑌗𑌃 𑌤𑍇𑌨 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌷𑌯𑌵𑌿𑌵𑍇𑌕𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌤𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌮𑌾𑌦𑍇𑌵 𑌕𑍃𑌤𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌾𑌨𑌾𑌂 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍁𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑌾𑌂 𑌪𑌰𑌮𑌹𑌂𑌸𑌪𑌰𑌿𑌵𑍍𑌰𑌾𑌜𑌕𑌾𑌨𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑍇𑌵 𑌅𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑌾𑌂 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 । 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌕𑌰𑍍𑌮𑍈𑌵 𑌯𑍋𑌗𑌃 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌃 𑌤𑍇𑌨 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌿𑌣𑌾𑌂 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥

𑌯𑌦𑌿 𑌚 𑌏𑌕𑍇𑌨 𑌪𑍁𑌰𑍁𑌷𑍇𑌣 𑌏𑌕𑌸𑍍𑌮𑍈 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌚 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌯 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌂 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌇𑌷𑍍𑌟𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑌾𑌣𑌂 𑌵𑌾 𑌗𑍀𑌤𑌾𑌸𑍁 𑌵𑍇-

---

ஞானவழியும், கர்மவழியும்.

ஸ்ரீபகவான், வினவுக்குஏற்பவே மறுமொழி கூறலானார் :

ஸ்ரீபகவான் சொல்லலுற்றார் :

௩. **பாபமற்றவனே! முன்பு இவ்வுலகத்திலே ஸாங்க்யர்களுக்கு ஞானயோகத்தாலும், யோகிகளுக்குக் கர்மயோகத்தாலும் இருவகையான நிஷ்டைகளை யான் கூறினேன்.**

எல்லாவற்றையும் அறிகின்ற ஈச்வரனான யான், முன்பு ஸிருஷ்டித்தொடக்கத்தில் ஜனங்களைப் படைத்து, அவர்கட்குச் செல்வமும் முக்தியும் கிடைப்பதற்கு ஸாதனமான வேதப்பொருளின் ஸம்பிரதாயத்தை வெளிப்படுத்தியபொழுது, இவ்வுலகத்திலே, நாற்பொருளை அநுஷ்டிக்க அதிகாரம்பெற்ற மூன்று வர்ணத்தார்க்கும் இருவிதமான நிஷ்டையை=நிலையை, அநுஷ்டிக்கக்கடவதிலே அமர்ந்துநிற்றலைக் கூறலானேன். இனி, அந்த இருவகைத்தான நிஷ்டை யாதென்றவிடத்துக் கூறுகிறார் :— அவற்றுள் ஞானமாகிய யோகத்தால், ஆத்மாஅநாத்மாக்களைப் பகுத்தறியும் ஞானமுடையவராய், ப்ரஹ்மசர்யநிலையினின்றே துறந்தவராய், வேதாந்தஞானத்தால் பொருள்களை நன்குநிர்ணயித்தவராய், பரமஹம்ஸரென்னும் ஸந்யாஸிகளாய், ப்ரஹ்மத்திலேயே நிற்கின்ற ஸாங்க்யர்களுக்கு ஞானநிஷ்டையைக் கூறினேன்; கர்மமாகிய யோகத்தால் யோகிகளான கர்மிகளுக்கு நிஷ்டை கூறப்பட்டது என்பது பொருள்.

ஒரே புருஷனாலே ஒரேபுருஷார்த்தத்தின்பொருட்டு ஞானமும் கர்மமும் ஒருங்கே சேர்த்துஅநுஷ்டிக்கவேண்டியதென்பது கீதையிலே பகவானாலே (தமது) கருத்தாக (முன்) கூறப்பட்டதும் அல்லது (பின்) கூறப்படுவதும், வேதங்களிலும் ஓதப்

द्वेष्यं वोक्तुम्, कथं च पुनः अर्जुनाय उपसन्नाय प्रियाय विशिष्टभिन्नपुरुषकर्तृके एव ज्ञानकर्मनिष्ठे ब्रूयात्? यदि पुनः अर्जुनः ज्ञानं कर्म च द्वयं श्रुत्वा स्वयमेव अनुष्ठास्यति अन्येषां तु भिन्नपुरुषानुष्ठेयतां वक्ष्यामि इति मतं भगवतः कल्प्येत, तदा रागद्वेषवान् अप्रमाणभूतो भगवान् कल्पितः स्यात्। तच्चायुक्तम्। तस्मात् कयाऽपि युक्त्या न समुच्चयो ज्ञानकर्मणोः ॥ ३ ॥

यत् अर्जुनेन उक्तं कर्मणो ज्यायस्त्वं बुद्धेः, तच्च स्थितम्, अनिराकरणात्; तस्याश्च ज्ञाननिष्ठायाः संन्यासिभिरेव अनुष्ठेयत्वम्, भिन्नपुरुषानुष्ठेयत्ववचनात्। भगवतः एवमेव अनुमतमिति गम्यते। मां च बन्धकारणे कर्मण्येव नियोजयसि इति विषण्णमनसम् अर्जुनं कर्म नारभे इत्येवं मन्वानम् आलक्ष्य आह भगवान् — "न कर्मणाम् अनारम्भात्" इति ॥

अथवा — ज्ञानकर्मनिष्ठयोः परस्परविरोधात् एकेन पुरुषेण युगपत् अनुष्ठातुम् अशक्यत्वे इतरेतरानपेक्षयोः एव पुरुषार्थहेतुत्वे प्राप्ते कर्मनिष्ठाया ज्ञाननिष्ठाप्राप्ति-

---

பட்டதுமாக இருந்தால், பகவான் (தன்னை) வழிபட்ட அன்பனான அர்ஜுனனுக்கு "ஞானநிஷ்டையை அநுஷ்டித்தற்கு உரிய புருஷன் வேறு, கர்மநிஷ்டையை அநுஷ்டித்தற்கு உரிய புருஷன் வேறு" என்றே இங்கு எப்படிக் கூறலாம்? மற்று, "அர்ஜுனன் ஞானம்கர்மம் இரண்டையும் கேட்டுத் தானாகவே (அவற்றை ஒருங்கே) அநுஷ்டிப்பான்; மற்றையோர்க்கோ 'அவை வேறுவேறுபுருஷர்களால் அநுஷ்டிக்கத்தக்கவை' எனக்கூறுவேன்" என்று பகவான் கருத்தெனக்கொண்டால், அப்பொழுது பகவான் விருப்பவெறுப்பினை யுடையவராக, அப்ராமாணிகராக நினைக்கப்பட்டவ ராவர். அதுவோ தக்கதன்று. ஆகவே, எந்தயுக்தியினாலும் ஞானகர்மங்கள் ஒருங்குசேர்தல் அமையா தென்க. (௩)

கர்மயோகமானது ஒருவனைக் கர்மத்தினின்றும் விடுவிக்கும்.

ஞானம் கர்மத்தின் மேலான தென்று அர்ஜுனன் கூறியது நிலைத்தது; (பகவான் அதனை) மறுக்காமையால். பின்னும், அந்த ஞானநிஷ்டையானது ஸந்யாஸிகளாலேயே அநுஷ்டிக்கத்தக்க தென்பதும், "(ஞானகர்மங்கள்) வெவ்வேறு புருஷர்களால் அநுஷ்டிக்கத்தக்கவை" என்னும் திருவாக்கினால் (நிலைத்தது). இப்படியே பகவான் கருத்தென்று தெரியவருகின்றது. இனி "(ஸம்ஸாரக்)கட்டுக்குக்காரணமான கர்மத்திலேயே என்னை ஏவுகிறீர்" என்று மனம்வருந்திய அர்ஜுனன் 'கர்மத்தைச் செய்யமாட்டேன்' என நினைத்திருப்பதாகக் கண்டு, பகவான் "ஒருவன் கர்மங்களை" (௩-௪) என்பதை அருளிச்செய்கின்றார்:

அல்லது, (பின்வருமாறுகொண்டாலும் அமையும்):—'ஞானகர்மநிஷ்டைகள் ஒன்றற்கொன்று மாறுபட்டிருத்தலால், ஒரேபுருஷன் (அவற்றை) ஒரேஸமயத்தில் அநுஷ்டிக்கக்கூடாமையின், (அவை) ஒன்றையொன்று சார்ந்துநிற்காமலே புருஷார்த்தத்தைத் தருவன' என்பதாயிற்று. ஆகவே, கர்மநிஷ்டையானது ஞானநிஷ்டையைப்

𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑍇𑌨 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑍍𑌥𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌂, 𑌨 𑌸𑍍𑌵𑌾𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑍇𑌣 ; 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌤𑍁 𑌕𑌰𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠𑍋𑌪𑌾𑌯𑌲𑌬𑍍𑌧𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾 𑌸𑌤𑍀 𑌸𑍍𑌵𑌾𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑍇𑌣 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑍍𑌥𑌹𑍇𑌤𑍁𑌃 𑌅𑌨𑍍𑌯𑌾𑌨𑌪𑍇𑌕𑍍𑌷𑌾, 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌮𑌰𑍍𑌥𑌂 𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌷𑍍𑌯𑌨𑍍 𑌆𑌹 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍—

௪. 𑌨 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑌨𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌨𑍍 𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌽𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 ।
𑌨 𑌚 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑌨𑌾𑌦𑍇𑌵 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌸𑌮𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

𑌨 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌯𑌜𑍍𑌞𑌾𑌦𑍀𑌨𑌾𑌮𑌿𑌹 𑌜𑌨𑍍𑌮𑌨𑌿 𑌜𑌨𑍍𑌮𑌾𑌨𑍍𑌤𑌰𑍇 𑌵𑌾 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌨𑌾𑌮𑍁𑌪𑌾𑌤𑍍𑌤𑌦𑍁𑌰𑌿𑌤𑌕𑍍𑌷𑌯𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑍇𑌨 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌕𑌾𑌰𑌣𑌾𑌨𑌾𑌂 𑌤𑌤𑍍𑌕𑌾𑌰𑌣𑌤𑍍𑌵𑍇𑌨 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌹𑍇𑌤𑍂𑌨𑌾𑌂,

“𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍁𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌪𑍁𑌂𑌸𑌾𑌂 𑌕𑍍𑌷𑌯𑌾𑌤𑍍 𑌪𑌾𑌪𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 ।
𑌯𑌥𑌾𑌽𑌽𑌦𑌰𑍍𑌶𑌤𑌲𑌪𑍍𑌰𑌖𑍍𑌯𑍇 𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 ॥”

𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌸𑍍𑌮𑌰𑌣𑌾𑌤𑍍, 𑌅𑌨𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌤𑍍 𑌅𑌨𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌤𑍍 𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌨𑌿𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑌭𑌾𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮𑌶𑍂𑌨𑍍𑌯𑌤𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌂 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇𑌣𑍈𑌵 𑌅𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑌿𑌤𑌿 𑌯𑌾𑌵𑌤𑍍, 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌨 𑌅𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 𑌨 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । “𑌨 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑌨𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌨𑍍 𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌽𑌶𑍍𑌨𑍁𑌤𑍇” 𑌇𑌤𑌿 𑌵𑌚𑌨𑌾𑌤𑍍 𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑍍𑌯𑌯𑌾𑌤𑍍 𑌤𑍇𑌷𑌾𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌨𑍍𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 । 𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑍁𑌨𑌃 𑌕𑌾𑌰𑌣𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑌨𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌨𑍍𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌨 𑌅𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇, 𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑍋𑌪𑌾𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌸𑍍𑌯 । 𑌨 𑌹𑌿 𑌉𑌪𑌾𑌯𑌮𑌨𑍍𑌤𑌰𑍇𑌣

---

பெறக் காரணமாவதால் புருஷார்த்தத்தைத் தருவதென்பது; ஸ்வதந்திரமாகவே [தானாகவே] (அது புருஷார்த்தத்தைத் தருவது) அன்று. ஞானநிஷ்டையோ, கர்மநிஷ்டையாகிய உபாயத்தால் கிடைக்கப்பெறுவதாய், பிறஉதவி இல்லாமல் ஸ்வதந்திரமாகவே [நேராகவே] புருஷார்த்தத்தைத் தருவது. என்ற இவ்விஷயத்தைத் தெளிய விளக்கும்பொருட்டுப் பகவான் கூறுகிறார்:

௪. ஒருவன் கர்மங்களைச் செய்யாமையினால் நைஷ்கர்ம்யத்தை [கர்மமற்றநிலையை]ப் பெறுகிறானில்லை ; (அவற்றைத்) துறத்தலினாலேயே ஸித்தியை அடைகிறானுமில்லை.

இப்பிறப்பிலாயினும், முற்பிறப்பிலாயினும் அநுஷ்டிக்கப்பட்ட யஜ்ஞம் முதலிய கர்மங்கள் முன்செய்த பாவத்தைத் தேயப்பண்ணுவதால் சித்தசுத்தியை உண்டாக்குகின்றன ; (அவை) அதனை உண்டாக்குவதனால் ஞானமுண்டாதல்மூலமாக ஞானநிஷ்டைக்குக் காரணமாகின்றன. (அவை அவ்வாறு ஞானத்திற்குக் காரணமாதலை), “பாவகர்மம் தேய்தலாலே மனிதர்க்கு ஞானம் உண்டாகின்றது; (அவ்வளவிலே ஒருவன்) துலக்கமான கண்ணாடியிற்போலத் தன்னில் தன்னைக் காண்கிறான்” (ம-சா-௨௦௪-௮) என்பது முதலிய ஸ்மிருதிவசநங்களால் (அறிக). (கர்மங்களைச்) செய்யாமையினால் நைஷ்கர்ம்யத்தை-கர்மம் நீங்கிய தன்மையை, பிரவிருத்தியில்லாமற்போன நிலையை, ஞானயோகத்தால் நிஷ்டையை, அதாவது-தொழிலைப்பெறாத ஆத்மஸ்வரூபமாகவே நிற்றலை ஒருவன் அடையமாட்டான். “ஒருவன் கர்மங்களைச் செய்யாமையினால் நைஷ்கர்ம்யத்தைப் பெறுகிறானில்லை” என்னும் திருவாக்கினால், “அதன் மறுதலையால், (அதாவது-) அவற்றை அநுஷ்டித்தலால் கர்மம்நீங்கிய நிலையைப் பெறுவான்”

𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌾𑌶𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌤𑌃 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌤𑌶𑍍𑌚 𑌆𑌤𑍍𑌮𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌅𑌵𑌬𑍋𑌧𑌃, 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑌃 𑌤𑌦𑌨𑍁𑌭𑌵𑌃 𑌤𑌯𑍋𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌹𑍇𑌤𑍍𑌵𑍋𑌃 𑌨𑌾𑌶𑌨𑌂 𑌪𑍍𑌰𑌜𑌹𑌿𑌹𑌿 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௪௧ ॥

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍍𑌯𑌾𑌦𑍌 𑌨𑌿𑌯𑌮𑍍𑌯 𑌕𑌾𑌮𑌂 𑌶𑌤𑍍𑌰𑍁𑌂 𑌜𑌹𑌿𑌹𑌿 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌤𑌤𑍍𑌰 𑌕𑌿𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 𑌕𑌾𑌮𑌂 𑌜𑌹𑍍𑌯𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௪௨. 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌪𑌰𑌾𑌣𑍍𑌯𑌾𑌹𑍁𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌰𑌂 𑌮𑌨𑌃 ।
𑌮𑌨𑌸𑌸𑍍𑌤𑍁 𑌪𑌰𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌯𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌪𑌰𑌤𑌸𑍍𑌤𑍁 𑌸𑌃 ॥

௪௩. 𑌏𑌵𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌪𑌰𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌸𑌂𑌸𑍍𑌤𑌭𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 ।
𑌜𑌹𑌿 𑌶𑌤𑍍𑌰𑍁𑌂 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌕𑌾𑌮𑌰𑍂𑌪𑌂 𑌦𑍁𑌰𑌾𑌸𑌦𑌮𑍍 ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑍇 𑌶𑌤𑌸𑌾𑌹𑌸𑍍𑌰𑍍𑌯𑌾𑌂 𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌯𑌾𑌂 𑌵𑍈𑌯𑌾𑌸𑌿𑌕𑍍𑌯𑌾𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌪𑌰𑍍𑌵𑌣𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍂𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌮 𑌤𑍃𑌤𑍀𑌯𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑍀𑌨𑌿 𑌪𑌞𑍍𑌚 𑌦𑍇𑌹𑌂 𑌸𑍍𑌥𑍂𑌲𑌂 𑌬𑌾𑌹𑍍𑌯𑌂 𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑌿𑌨𑍍𑌨𑌂 𑌚 𑌅𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌸𑍌𑌕𑍍𑌷𑍍𑌮𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌤𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌯𑌪𑍇𑌕𑍍𑌷𑌯𑌾 𑌪𑌰𑌾𑌣𑌿 𑌪𑍍𑌰𑌕𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑌿 𑌆𑌹𑍁𑌃 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃 । 𑌤𑌥𑌾—𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌰𑌂 𑌮𑌨𑌃 𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑍍 ।

---

யனிடத்தினின்றும் ஆத்மாமுதலானவற்றை உணர்தல். விஜ்ஞானம் - அப்பொருள்களைச் சிறப்பாக அநுபவித்தல். நன்மையைப் பெறுதற்குக் காரணமான அந்த ஞானவிஜ்ஞானங்கட்குக் கேடுசெய்கின்ற (காமத்)தை உன்னிடமிருந்து உதறித்தள்ளிவிடு என்பது பொருள். (௪௧)

"முதலில் இந்திரியங்களை வசப்படுத்திக்கொண்டு, காமமாகிய சத்துருவைக் கொல்லு" என்று கூறப்பட்டது. அங்ஙனம், எங்கேநின்றுகொண்டு [யாரை அண்டினால்] காமத்தைக் கொல்வது என்பது?—(அதனைக்) கூறுவோம்:

௪௨. (ஞானிகள்) இந்திரியங்களை மேலாகக் கூறுகிறார்கள்: இந்திரியங்களைக் காட்டிலும் மனம் மேலானது: மனத்தைக்காட்டிலும் புத்தியோ மேலானது: புத்தியைக்காட்டிலும் மேலானது எதுவோ, அது (ஆத்மா).

௪௩. உயர்தோள! நீ இவ்வாறு புத்திக்குமேலானதை அறிந்து, மனத்தை மனத்தால் நிறுத்தி, வெல்லுதற்கு அரிதான காமமாகிய சத்துருவைக் கொல்லு.

ஸ்ரீ மகாபாரதத்திலே நூறாயிரக்கிரந்த ஸம்ஹிதையாய், வ்யாஸர் அருளிச்செய்ததாய், பீஷ்மபர்வத்திலே ஸ்ரீமத் பகவத்கிதைகளாக, உபநிஷத்துக்களாக, ப்ரஹ்ம வித்யையாக, யோகசாஸ்திரமாக இருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணார்ஜுநஸம்வாதத்திலே கர்மயோகம் என்னும் மூன்றாம் அத்தியாயம் முற்றும்.

செவிமுதலிய இந்திரியங்கள் ஐந்து. வெளியிலே இருப்பதும் அளவிற்குஉட்பட்டதுமான ஸ்தூல [பருத்த] உடம்பை நோக்க, (அவை) நுண்மையாகவும் உள்ளேயிருப்பனவாகவும் வியாபகமாகவும்[அதிகத்தொழிலையுடையனவாகவும்] மற்றுமிவை போன்றனவாகவும் இருப்பதைப் பார்த்து ஞானிகள் (அந்த இந்திரியங்களை அந்த

ததா—உக்தவாந் து ய: ஸ வா புத்தே: நிஶ்சயாத்மிகா । ததா—ய: ஸர்வத்ருஶ்யேப்ய: புத்த்யந்தேப்ய: அப்யந்தர:, யம் தேஹிநம் இந்த்ரியாதிபி: ஆஶ்ரயை: யுக்த: காம: ஜ்ஞாநாவரணத்வாரேண மோஹயதி இத்யுக்தம், புத்தே: பரதஸ்து ஸ: । ஸ புத்தே: த்ரஷ்டா பர ஆத்மா ॥ ௪௨ ॥

ஏவம் புத்தே: பரம் ஆத்மாநம் புத்த்வா ஜ்ஞாத்வா ஸம்ஸ்தப்ய ஸம்யக் ஸ்தம்பநம் க்ருத்வா ஆத்மாநம் ஸ்வேநைவ ஆத்மநா ஸம்ஸ்க்ருதேந மநஸா ஸம்யக் ஸமாதாய இத்யர்த: । ஜஹி ஏநம் ஶத்ரும் ஹே மஹாபாஹோ காமரூபம் துராஸதம் து:கேந ஆஸத: ஆஸாதநம் ப்ராப்தி: யஸ்ய தம் துராஸதம் துர்விஜ்ஞேயாநேகவிஶேஷம் இதி ॥ ௪௩ ॥

இதி ஶ்ரீமத்பகவத்கீதாபாஷ்யே த்ருதீயோऽத்யாய: ॥

---

ஸ்தூல உடம்பினும்) மேலாகக் கூறுகிறார்கள். அவ்வண்ணமே, எண்ணமென்பதையும் வேற்றுமையென்பதையும் தன் வடிவாக உடைய மனம் இந்திரியங்களைக்காட்டிலும் மேலானது. அப்படியே, நிர்ணயவடிவமுள்ள புத்தியோ மனத்தைக்காட்டிலும் மேலானது. அவ்வாறே—எது, (உடம்புமுதல்) புத்திஉள்படக் காணப்படுகின்ற ஸகலத்திற்கும் அப்பால் உள்ளதோ, காமமானது இந்திரியங்கள் முதலானவற்றை இருப்பிடமாகக்கொண்டு, ஞானத்தை மறைத்து எந்தத்தேகியை மயக்குகின்றது எனக் கூறப்பட்டதோ, அது புத்தியைக்காட்டிலுங்கூட மேலானது. புத்தியைப் பார்க்கும் பரமாத்மா அது. (௪௨)

புத்திக்குமேலான ஆத்மாவை நீ இவ்வாறுதெரிந்துகொண்டு, மனத்தை உன் மனத்தாலேயே அலையாது நன்கு நிறுத்தி, அதாவது - சுத்தமாகத் தெளிந்த மனத்தால் ஸமாதானப்படுத்தி,[1] காமமாகிய இச்சத்துருவைக் கொல்லு. (அது,) அறிதற்கு அரிய பலவிசேஷங்களை [பலபல ஸ்பாவத்தை] யுடைமையால், வெல்லுதற்கு அரியது. (௪௩)

ஸ்ரீமத் பகவத்கீதாபாஷ்யத்தில் மூன்றாவது அத்தியாயம் முற்றும்.

---

[1] மனஸ் ஸமாதானத்திற்குப், பரிசுத்தமாகத் தெளிந்த மனம் காரணம்.—(ஆ.)

## 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌃 ॥

𑌯𑍋𑌽𑌯𑌂 𑌯𑍋𑌗𑌃 𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑌦𑍍𑌵𑌯𑍇𑌨 𑌉𑌕𑍍𑌤𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 𑌸𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌾𑌤𑍍𑌮𑌕𑌃, 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌃 𑌪𑌰𑌿𑌸𑌮𑌾𑌪𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌶𑍍𑌚, 𑌗𑍀𑌤𑌾𑌸𑍁 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌾𑌸𑍁 𑌅𑌯𑌮𑍇𑌵 𑌯𑍋𑌗𑍋 𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑌿𑌤𑌃 𑌭𑌗𑌵𑌤𑌾 । 𑌅𑌤𑌃 𑌪𑌰𑌿𑌸𑌮𑌾𑌪𑍍𑌤𑌂 𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌂 [illegible] 𑌤𑌂 𑌵𑌂𑌶𑌕𑌥𑌨𑍇𑌨 𑌸𑍍𑌤𑍌𑌤𑌿 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍—

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 ॥

க. 𑌇𑌮𑌂 𑌵𑌿𑌵𑌸𑍍𑌵𑌤𑍇 𑌯𑍋𑌗𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌵𑌾𑌨𑌹𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ।
𑌵𑌿𑌵𑌸𑍍𑌵𑌾𑌨𑍍𑌮𑌨𑌵𑍇 𑌪𑍍𑌰𑌾𑌹 𑌮𑌨𑍁𑌰𑌿𑌕𑍍𑌷𑍍𑌵𑌾𑌕𑌵𑍇𑌽𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 ॥

உ. 𑌏𑌵𑌂 𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌮𑌿𑌮𑌂 𑌰𑌾𑌜𑌰𑍍𑌷𑌯𑍋 𑌵𑌿𑌦𑍁𑌃 ।
𑌸 𑌕𑌾𑌲𑍇𑌨𑍇𑌹 𑌮𑌹𑌤𑌾 𑌯𑍋𑌗𑍋 𑌨𑌷𑍍𑌟𑌃 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 ॥

𑌇𑌮𑌮𑍍 𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑌦𑍍𑌵𑌯𑍇𑌨 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌯𑍋𑌗𑌂 𑌵𑌿𑌵𑌸𑍍𑌵𑌤𑍇 [illegible] 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌵𑌾𑌨𑍍 𑌅𑌹𑌂 𑌜𑌗𑌤𑍍𑌪𑌰𑌿𑌪𑌾𑌲𑌯𑌿𑌤𑍄𑌣𑌾𑌂 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌬𑌲𑌾𑌧𑌾𑌨𑌾𑌯 । 𑌤𑍇𑌨 𑌹𑌿 𑌯𑍋𑌗𑌬𑌲𑍇𑌨 𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌸𑌮𑌰𑍍𑌥𑌾 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑌰𑌿𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑍁𑌮𑍍 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌪𑌰𑌿𑌪𑌾𑌲𑌿𑌤𑍇 𑌜𑌗𑌤𑍍 𑌪𑌰𑌿𑌪𑌾𑌲𑌯𑌿𑌤𑍁𑌮𑍍 [illegible] । 𑌅𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 𑌅𑌵𑍍𑌯𑌯𑌫𑌲-

---

## நான்காம் அத்தியாயம் : ஞானயோகம்.

### ஞானயோகத்தின் வரலாறு.

கர்மயோகத்தை ஸாதனமாகக்கொண்டு, ஸந்யாஸத்தோடுகூடிநிற்கும் ஞான நிஷ்டையாகிய இந்த யாதொரு யோகமானது (முந்தின) இரண்டு அத்தியாயங்களால் சொல்லப்பட்டதோ, ப்ரவிருத்தியினால் உணரப்படும் (கர்மயோகமும்) நிவிருத்தியினால் உணரப்படும் (ஞானயோகமுமாகிய) வேதப்பொருளானது எதிலே முடிந்திருக்கின்றதோ, (அந்த) இதேயோகந்தான் கீதைமுழுவதிலும் பகவான் உபதேசிக்கக் கருதியது. ஆகவே, வேதத்திற்கூறிய பொருளை (அந்த ஞானயோகத்திலே) முடியப் பெற்றதாகக் கொண்டு, ஸ்ரீ பகவான் (அதனுடைய) ஸம்பிரதாயவரலாற்றைக் கூறி அதனைப் புகழ்கின்றார் :

ஸ்ரீ பகவான் சொல்லலுற்றார் :

க. இந்த அழிவிலா யோகத்தை யான் விவஸ்வானுக்குக் கூறினேன் : விவஸ்வான் மநு(ப்ரஜாபதி)க்குக் கூறினன் : மநு இக்ஷ்வாகுவுக்குக் கூறினன்.

உ. இவ்வாறு பரம்பரையாகவந்த இதனை ராஜர்ஷிகள் அறிந்திருந்தார்கள், வெகுகாலமானமையால் பரந்தப ! இந்த யோகம் இப்பொழுது சிதைந்து போயிற்று.

உலகத்தைப் பாதுகாக்கும் க்ஷத்திரியர்களுக்கு வலிமை உண்டாகும்பொருட்டு, (முந்தின) இரண்டு அத்தியாயங்களால் கூறிய இந்தயோகத்தை யான் (உலகத்தின்) ஸிருஷ்டித்தொடக்கத்தில் ஸூர்யனுக்குக் கூறினேன். அந்த யோகவலிமையையுடைய (க்ஷத்திரிய) ரன்றோ பிராமணரைப் பாதுகாக்க வல்லவராகிறார். பிராமணரும் க்ஷத்திரியரும் பாதுகாக்கப்பட்டவழி, உலகத்தைப் பாதுகாக்கமுடியும். அழி

𑌅𑌵𑍍𑌯𑌯𑌃 । 𑌨 𑌹𑌿 𑌅𑌸𑍍𑌯 𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌲𑌕𑍍𑌷𑌣𑌸𑍍𑌯 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌖𑍍𑌯𑌂 𑌫𑌲𑌂 𑌵𑍍𑌯𑍇𑌤𑌿 । 𑌸 𑌚 𑌵𑌿𑌵𑌸𑍍𑌵𑌾𑌨𑍍 𑌮𑌨𑌵𑍇 𑌪𑍍𑌰𑌾𑌹 । 𑌮𑌨𑍁𑌃 𑌇𑌕𑍍𑌷𑍍𑌵𑌾𑌕𑌵𑍇 𑌸𑍍𑌵𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌯 𑌪𑍍𑌰𑌥𑌮𑌰𑌾𑌜𑌾𑌯 𑌅𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 ॥ ௧ ॥

𑌏𑌵𑌂 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌪𑌰𑌂𑌪𑌰𑌯𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌮𑍍 𑌇𑌮𑌂 𑌰𑌾𑌜𑌰𑍍𑌷𑌯𑌃 𑌰𑌾𑌜𑌾𑌨𑌶𑍍𑌚 𑌤𑍇 𑌋𑌷𑌯𑌶𑍍𑌚 𑌰𑌾𑌜𑌰𑍍𑌷𑌯𑌃 𑌵𑌿𑌦𑍁𑌃 𑌇𑌮𑌂 𑌯𑍋𑌗𑌮𑍍 । 𑌸 𑌯𑍋𑌗𑌃 𑌕𑌾𑌲𑍇𑌨 𑌮𑌹𑌤𑌾 𑌦𑍀𑌰𑍍𑌘𑍇𑌣 𑌨𑌷𑍍𑌟𑌃 𑌵𑌿𑌚𑍍𑌛𑌿𑌨𑍍𑌨𑌸𑌂𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑌃 𑌸𑌂𑌵𑍃𑌤𑍍𑌤𑌃 । 𑌹𑍇 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪, 𑌶𑌤𑍍𑌰𑌵𑌃 𑌵𑌿𑌪𑌕𑍍𑌷𑌭𑍂𑌤𑌾𑌃 𑌪𑌰𑍇 𑌇𑌤𑌿 𑌉𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇, 𑌤𑌾𑌨𑍍 𑌶𑍌𑌰𑍍𑌯𑌤𑍇𑌜𑍋𑌬𑌲𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌸𑌨𑍍𑌤𑌾𑌪𑌯𑌤𑌿 𑌇𑌤𑌿 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪𑌃 𑌶𑌤𑍍𑌰𑍁𑌤𑌾𑌪𑌨 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௨ ॥

𑌦𑍁𑌰𑍍𑌬𑌲𑌾𑌨𑍍 𑌅𑌜𑌿𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌨𑌷𑍍𑌟𑌂 𑌯𑍋𑌗𑌮𑍍 𑌇𑌮𑌂 𑌉𑌪𑌲𑌭𑍍𑌯 𑌲𑍋𑌕𑌂 𑌚 𑌅𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑍍𑌥𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑌮𑍍—

௩. 𑌸 𑌏𑌵𑌾𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌤𑍇𑌽𑌦𑍍𑌯 𑌯𑍋𑌗𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌃 𑌪𑍁𑌰𑌾𑌤𑌨𑌃 ।
𑌭𑌕𑍍𑌤𑍋𑌽𑌸𑌿 𑌮𑍇 𑌸𑌖𑌾 𑌚𑍇𑌤𑌿 𑌰𑌹𑌸𑍍𑌯𑌂 𑌹𑍍𑌯𑍇𑌤𑌦𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥

𑌸 𑌏𑌵 𑌅𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌤𑍇 [illegible] 𑌅𑌦𑍍𑌯 𑌯𑍋𑌗𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌃 𑌪𑍁𑌰𑌾𑌤𑌨𑌃, 𑌭𑌕𑍍𑌤𑌃 𑌅𑌸𑌿 𑌮𑍇 𑌸𑌖𑌾 𑌚 𑌅𑌸𑌿 𑌇𑌤𑌿 । 𑌰𑌹𑌸𑍍𑌯𑌂 𑌹𑌿 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌏𑌤𑌤𑍍 𑌉𑌤𑍍𑌤𑌮𑌂 𑌯𑍋𑌗𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௩ ॥

𑌭𑌗𑌵𑌤𑌾 𑌵𑌿𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌮𑌾 𑌭𑍂𑌤𑍍 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌇𑌤𑌿 𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑌾𑌯 𑌚𑍋𑌦𑍍𑌯𑌮𑍍 𑌇𑌵 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚—

---

விலாப்பயனை யுடையதாதலின் (இந்த யோகம்) அழிவிலாதது. உள்ளதை உள்ள படி உணர்தலிலே ஊன்றிநிற்றலாகிய இ(ந்தயோகத்)தினுடைய மோக்ஷமென்னும் பயனது, (ஒருபொழுதும்) அழிவுறுவதில்லையன்றே. அந்த விவஸ்வான் (இந்த யோகத்தை) மநுவுக்குக்கூறினன்: மநு, தனது புத்திரன் இக்ஷ்வாகுவாகிய (ஸூர்யவம்சத்து) முதல் அரசனுக்குக் கூறினன். [விவஸ்வான் - ஸூர்யன்.] (௧)

இவ்வாறு க்ஷத்திரிய பரம்பரையாக வந்த இந்த யோகத்தை ராஜர்ஷிகள் அறிந்திருந்தார்கள். ராஜர்ஷிகளென்பார் - அரசர்களாயும் ரிஷிகளாயும் இருப்பவர். (அத்தகையார் - ஜநகர், புரூரவஸ் முதலாயினோரென்க.) நீடித்தகாலமானமையால் அந்தயோகம் (வரவரத் தேய்ந்து) ஸம்பிரதாயம் இடைவிட்டுப்போனதாயிற்று. தனக்கு எதிரியாயுள்ளவர்கள் 'பரர்கள்' எனப்படுகிறார்கள். அவர்களை (த்தன்) பராக்கிரம ஒளியின் கிரணங்களால் எரிக்கிறவன் - பரந்தபன் : பகைவர்களைத் தவிக்கச் செய்வோன் என்றபடி. (௨)

இந்த யோகமானது, மனத்திடனில்லாதவராக இந்திரியங்களை அடக்காதவராக இருந்தவரைச் சார்ந்து சிதைந்திருக்கவும், (ஆகவே) உலகத்திற்குப் புருஷார்த்தம் கிட்டாதிருக்கவும் கண்டு,

௩. இந்தப் பழமையான அதேயோகமானது, நீ என்னுடைய பக்தனாகவும் தோழனாகவும் இருக்கிறாய் என உனக்கு என்னால் இன்று கூறப்பட்டது ; ஏனெனில், இது உயர்ந்த ரஹஸ்யம்.

இது - யோகம் : அதாவது, ஞானம். (௩)

பகவானுடைய அவதாரங்கள்.

பகவானாலே (ஒன்றற்கொன்று) விரோதமாகக் கூறப்பட்டுள்ளது என்ற எண்ணம் ஒருவர்க்கும் உண்டாகக்கூடாது என, (அவருடைய திருவாக்கிலே அத்தகைய விரோதத்தைப்) பரிகரித்தற்பொருட்டு ஆக்ஷேபம் செய்கிறவன்போல அர்ஜுனன் கூறலானான் :

அர்ஜுந உவாச ॥

ச. அபரம் ப⁴வதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத: ।
கத²மேதத்³விஜாநீயாம் த்வமாதௌ³ ப்ரோக்தவாநிதி ॥

அபரம் அர்வாக் வஸுதே³வக்³ருஹே ப⁴வதோ ஜந்ம । பரம் பூர்வம் ஸர்கா³தௌ³ ஜந்ம உத்பத்தி: விவஸ்வத: ஆதி³த்யஸ்ய । தத் கத²ம் ஏதத் விஜாநீயாம் அவிருத்³தா⁴ர்த²தயா, ய: த்வமேவ ஆதௌ³ ப்ரோக்தவாந் இமம் யோக³ம் ஸ ஏவ இதா³நீம் மஹ்யம் ப்ரோக்தவாந் அஸி இதி ॥ ச ॥

யா வாஸுதே³வே அநீஶ்வராஸர்வஜ்ஞாஶங்கா மூர்கா²ணாம் தாம் பரிஹரந் ஶ்ரீப⁴க³வாந் உவாச, யத³ர்தோ² ஹி அர்ஜுநஸ்ய ப்ரஶ்ந:—

ஶ்ரீப⁴க³வாநுவாச ॥

ரு. ப³ஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந ।
தாந்யஹம் வேத³ ஸர்வாணி ந த்வம் வேத்த² பரந்தப ॥

ப³ஹூநி மே மம வ்யதீதாநி அதிக்ராந்தாநி ஜந்மாநி தவ ச ஹே அர்ஜுந । தாநி அஹம் வேத³ ஜாநே ஸர்வாணி ந த்வம் வேத்த² ந ஜாநீஷே, த⁴ர்மாத⁴ர்மாதி³ப்ரதிப³த்³த⁴ஜ்ஞாநஶக்தித்வாத் । அஹம் புந: நித்யஶுத்³த⁴பு³த்³த⁴முக்தஸ்வபா⁴வத்வாத் அநாவரணஜ்ஞாநஶக்தி: இதி வேத³ அஹம் ஹே பரந்தப ॥ ரு ॥

கத²ம் தர்ஹி தவ நித்யேஶ்வரஸ்ய த⁴ர்மாத⁴ர்மாபா⁴வேऽபி ஜந்ம இதி? உச்யதே—

---

அர்ஜுனன் சொல்லலுற்றான் :

ச. உங்களுடைய பிறப்புப் பிந்தினது ; ஸூர்யனுடைய பிறப்பு முந்தினது. (இப்படியிருக்க)நீங்கள் முதலில் (அந்த யோகத்தை அவனுக்கு) அருளிச்செய்தீர்கள் என்ற இதனை, நான் எவ்வாறு அறியலாகும் ?

உங்களுடைய பிறப்பு வஸுதேவருடைய வீட்டில் பிந்தி (உண்டா)னது ; ஸூர்யனுடைய பிறப்பு சிருஷ்டித்தொடக்கத்தில், (உங்களுடைய பிறப்பிற்கு) முந்தி (உண்டா)னது. ஆகவே, "நீங்கள் இந்தயோகத்தை முதலில் அருளிச்செய்தீர்கள் ; (அப்பொழுது) அருளிச்செய்தவரேயான நீங்களே இப்பொழுது எனக்கு (அதனை மறுபடியும்) அருளிச்செய்தவராக இருக்கிறீர்கள்" என, இதனை, (ஒன்றோடொன்று) மாறுபடாத விஷயமாக நான் தெரிந்துகொள்ளக்கூடிய விதம் என்ன ? (ச)

"வாஸுதேவன் ஈச்வர னல்லன், முற்றுமுணர்ந்தோ னல்லன்" என மூடர்களுக்கு உண்டாகும் சங்கையைப் பரிகரித்தற்பொருட்டு ஸ்ரீ பகவான் கூறலாயினர் : அர்ஜுனன் வினு அதன்பொருட்டாதலால்—

ஸ்ரீ பகவான் சொல்லலுற்றார் :

ரு. அர்ஜுந ! உனக்கும் எனக்கும் பல பிறவிகள் சென்றுபோயின. அவற்றையெல்லாம் யான் அறிவேன் ; நீ அறியமாட்டாய் பரந்தப !

தரும அதர்மங்கள் முதலானவற்றால் ஞானசக்தி தடைப்பட்டவனாதலின், நீ அவையெல்லாவற்றையும் அறியமாட்டாய். நானோ, இயல்பாகவே நித்யனும் சுத்தனும் முக்தனுமிருத்தலால் மறைவில்லாத [தடைப்படாத] ஞானசக்தி யுடையேன் ; ஆதலின், யான் (அவற்றை) அறிவேன் (என்பது). (ரு)

அப்பொழுது, நித்யராய் ஈச்வரராய் இருக்கின்ற உங்களுக்குத், தரும அதர்மங்கள் இல்லாதிருந்தும், பிறப்பென்பது எப்படி ?—கூறுவோம் :

௬. 𑌅𑌜𑍋𑌽𑌪𑌿 𑌸𑌨𑍍𑌨𑌵𑍍𑌯𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑍋𑌽𑌪𑌿 𑌸𑌨𑍍 ।
𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌾𑌮𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌯 𑌸𑌂𑌭𑌵𑌾𑌮𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑌾𑌯𑌯𑌾 ॥

𑌅𑌜𑍋𑌽𑌪𑌿 𑌜𑌨𑍍𑌮𑌰𑌹𑌿𑌤𑍋𑌽𑌪𑌿 𑌸𑌨𑍍, 𑌤𑌥𑌾 𑌅𑌵𑍍𑌯𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌅𑌕𑍍𑌷𑍀𑌣𑌜𑍍𑌞𑌾𑌨𑌶𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑍋𑌽𑌪𑌿 𑌸𑌨𑍍, 𑌤𑌥𑌾 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑌿𑌸𑍍𑌤𑌮𑍍𑌬𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌈𑌶𑍍𑌵𑌰𑌃 𑌈𑌶𑌨𑌶𑍀𑌲𑍋𑌽𑌪𑌿 𑌸𑌨𑍍, 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌾𑌂 𑌮𑌮 𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑍀𑌂 𑌮𑌾𑌯𑌾𑌂 𑌤𑍍𑌰𑌿𑌗𑍁𑌣𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾𑌂, 𑌯𑌸𑍍𑌯𑌾 𑌵𑌶𑍇 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌜𑌗𑌤𑍍 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇, 𑌯𑌯𑌾 𑌮𑍋𑌹𑌿𑌤𑌂 𑌸𑌤𑍍 𑌸𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌂 𑌨 𑌜𑌾𑌨𑌾𑌤𑌿, 𑌤𑌾𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌾𑌮𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌯 𑌵𑌶𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 𑌸𑌂𑌭𑌵𑌾𑌮𑌿 𑌦𑍇𑌹𑌵𑌾𑌨𑌿𑌵 𑌜𑌾𑌤 𑌇𑌵 𑌆𑌤𑍍𑌮𑌮𑌾𑌯𑌯𑌾 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌮𑌾𑌯𑌯𑌾, 𑌨 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑍋 𑌲𑍋𑌕𑌵𑌤𑍍 ॥ ௬ ॥

𑌤𑌚𑍍𑌚 𑌜𑌨𑍍𑌮 𑌕𑌦𑌾 𑌕𑌿𑌮𑌰𑍍𑌥𑌂 𑌚 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௭. 𑌯𑌦𑌾 𑌯𑌦𑌾 𑌹𑌿 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌗𑍍𑌲𑌾𑌨𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ।
𑌅𑌭𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌨𑌮𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌸𑍃𑌜𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥

𑌯𑌦𑌾 𑌯𑌦𑌾 𑌹𑌿 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌗𑍍𑌲𑌾𑌨𑌿𑌃 𑌹𑌾𑌨𑌿𑌃 𑌵𑌰𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌮𑌾𑌦𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌮𑌭𑍍𑌯𑍁𑌦𑌯𑌨𑌿𑌃𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌸𑌾𑌧𑌨𑌸𑍍𑌯 𑌭𑌵𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤, 𑌅𑌭𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌨𑌮𑍍 𑌉𑌦𑍍𑌭𑌵𑌃 𑌅𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯, 𑌤𑌦𑌾 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌸𑍃𑌜𑌾𑌮𑌿 𑌅𑌹𑌂 𑌮𑌾𑌯𑌯𑌾 ॥ ௭ ॥

---

௬. பிறவாதவனுனாலும், குறைவிலாத்தன்மையனுனாலும், பூதங்களுக்கு ஈச்வரனுனாலும், (யான்) என் மாயையை வசப்படுத்திக்கொண்டு, என்மாயையினால் பிறக்கின்றேன் [அவதரிக்கின்றேன்].

பிறப்பில்லாதவனுயினும், இன்னும் இயல்பாகவே குறைவிலா ஞானசக்தியுடையவனுயினும், மற்றும் ப்ரஹ்மாமுதல் புல்வரையிலுமுள்ள பூதங்களை (யெல்லாம்) ஆளுந் தன்மையனுயினும்,—இந்த உலகமெல்லாம் எதற்கு உட்பட்டிருக்கின்றதோ, (பின்னும் அது) எதனால் மயக்கப்பட்டு வாஸுதேவனைத் தன் ஆத்மாவாக அறியவில்லையோ, அந்த ப்ரகிருதியை (அதாவது,) விஷ்ணுவுக்கு உரியதும், முக்குணவடிவுமான என்மாயையை வசப்படுத்திக்கொண்டு, என்னுடைய மாயையினாலே உடம்பொடுநிற்பவன்போல, பிறந்தவன்போல யான் இருக்கின்றேன். (ஆனால்,) உலகத்தாரைப்போல உண்மையாகவே (பிறக்கிறேன்) இல்லை. (௬)

பகவதவதாரத்தின் பிரயோஜனம்.

இனி, அப்பிறப்பு எப்பொழுது? எதற்கு? என்பது—கூறுவோம்:

௭. பாரத! (உலகத்திலே) தருமத்திற்குக் குறைவும், அதர்மத்திற்கு ஏற்றமும் வரும்போதெல்லாம் யான் என்னைப் படைத்துக்கொள்கிறேன்.

வர்ணத்தாலும், ஆச்ரமத்தாலும், மற்றுமித்தன்மையவற்றாலும் அறியப்படுவதாய், பிராணிகளின் செல்வத்திற்கும் உறுதியான நன்மை(யாகிய முக்தி)க்கும் ஸாதனமாயிருக்கின்ற தருமத்திற்குக் குறைவும், அதர்மத்திற்கு ஏற்றமும் வரும்போதெல்லாம் யான் என்னை மாயையினால் படைத்துக்கொள்கிறேன் [ஜனங்களுக்குப் புலப்படுகின்றேன்]. (௭)

𑌕𑌿𑌮𑌰𑍍𑌥𑌮𑍍 ?—

௮. 𑌪𑌰𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌯 𑌸𑌾𑌧𑍂𑌨𑌾𑌂 𑌵𑌿𑌨𑌾𑌶𑌾𑌯 𑌚 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌾𑌮𑍍 ।
𑌧𑌰𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌪𑌨𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌸𑌂𑌭𑌵𑌾𑌮𑌿 𑌯𑍁𑌗𑍇 𑌯𑍁𑌗𑍇 ॥

𑌪𑌰𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌯 𑌪𑌰𑌿𑌰𑌕𑍍𑌷𑌣𑌾𑌯 𑌸𑌾𑌧𑍂𑌨𑌾𑌂 𑌸𑌨𑍍𑌮𑌾𑌰𑍍𑌗𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌂, 𑌵𑌿𑌨𑌾𑌶𑌾𑌯 𑌚 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌾𑌂 𑌪𑌾𑌪𑌕𑌾𑌰𑌿𑌣𑌾𑌂, 𑌕𑌿𑌞𑍍𑌚, 𑌧𑌰𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌪𑌨𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 𑌸𑍍𑌥𑌾𑌪𑌨𑌂 𑌤𑌦𑌰𑍍𑌥𑌂 𑌸𑌂𑌭𑌵𑌾𑌮𑌿 𑌯𑍁𑌗𑍇 𑌯𑍁𑌗𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌯𑍁𑌗𑌮𑍍 ॥ ௮ ॥

𑌕𑌿𑌞𑍍𑌚—

௯. 𑌜𑌨𑍍𑌮 𑌕𑌰𑍍𑌮 𑌚 𑌮𑍇 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑍇𑌵𑌂 𑌯𑍋 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃 ।
𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌦𑍇𑌹𑌂 𑌪𑍁𑌨𑌰𑍍𑌜𑌨𑍍𑌮 𑌨𑍈𑌤𑌿 𑌮𑌾𑌮𑍇𑌤𑌿 𑌸𑍋𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 ॥

𑌜𑌨𑍍𑌮 𑌮𑌾𑌯𑌾𑌰𑍂𑌪𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌚 𑌸𑌾𑌧𑍂𑌨𑌾𑌂 𑌪𑌰𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌦𑌿 𑌮𑍇 𑌮𑌮 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑍍 𑌅𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌮𑍍 𑌐𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 𑌏𑌵𑌂 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌂 𑌯𑌃 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌨 𑌯𑌥𑌾𑌵𑌤𑍍 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌦𑍇𑌹𑌮𑍍 𑌇𑌮𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌜𑌨𑍍𑌮 𑌪𑍁𑌨𑌰𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌂 𑌨 𑌏𑌤𑌿 𑌨 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 । 𑌮𑌾𑌮𑍍 𑌏𑌤𑌿 𑌆𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌸 𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌹𑍇 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 ॥ ௯ ॥

𑌨𑍈𑌷 𑌮𑍋𑌕𑍍𑌷𑌮𑌾𑌰𑍍𑌗 𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌃 ; 𑌕𑌿𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿 ? 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑌪𑌿—

௧௦. 𑌵𑍀𑌤𑌰𑌾𑌗𑌭𑌯𑌕𑍍𑌰𑍋𑌧𑌾 𑌮𑌨𑍍𑌮𑌯𑌾 𑌮𑌾𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ।
𑌬𑌹𑌵𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑌪𑌸𑌾 𑌪𑍂𑌤𑌾 𑌮𑌦𑍍𑌭𑌾𑌵𑌮𑌾𑌗𑌤𑌾𑌃 ॥

---

எதன் பொருட்டு ?—

௮. நல்லோரைப் பாதுகாத்தற்கும், தீயனசெய்வோரை முற்ற ஒழித்தற்கும், தருமத்தை நன்கு நாட்டுதற்கும் (யான்) யுகந்தோறும் அவதரிக்கின்றேன்.

நல்லோர் - நல்வழிநிற்பவர். தீயனசெய்வோர் - பாவங்களாயினவற்றைச் செய்பவர். (௮)

அன்றி

௯. திவ்வியமான என்னுடைய அவதாரத்தையும், செய்கையையும் எவன் இவ்வாறு உண்மையாய் அறிகிறானோ, அவன் (தனது) உடலைவிட்டபின்பு மறுபிறப்பைப் பெறுவதில்லை ; அர்ஜுந ! அவன் என்னை அடைகிறான்.

(மனிதர் சரீரம்போல) ப்ரகிருதியினாலாகியதல்லாததாய் ஈச்வரனுக்கு(என்று) சிறந்த அமைவதான என்னுடைய அவதாரமானது மாயையினாலாகிய தெனவும், (என்னுடைய) செய்கையானது நல்லோரைப் பாதுகாத்தல் முதலிய தெனவும் இப்படி மேற்கூறியவாறு உள்ளது உள்ளபடி எவன் அறிகிறானோ, அவன் இந்தத் தேகத்தைவிட்டவுடன் மறுபிறப்பை யடையான். அர்ஜுந ! அவன் என்னை அடைகிறான் : (ஸம்ஸாரத்தினின்று முற்றும்) விடுபடுகிறான். (௯)

ஞானயோகமொன்றுதான் முக்திக்கு ஸாதநம்.

இந்த மோக்ஷவழியானது இக்காலத்தில் தலைப்பட்டதன்று. எப்பொழுதெனின் ?—முற்காலத்திலுங்கூட,

௧௦. (பொருள்களிலே) ஆசை பயம் கோபம் இவை நீங்கியவர்களாய், என் மயமானவர்களாய், என்னைப் புகலடைந்தவராய், ஞானமாகிய தபஸினால் பரிசுத்தரான அனேகர்கள் என் தன்மையை அடையலானார்கள்.

வீதராகபயக்ரோதா: ராகஶ்ச பயம் ச க்ரோதஶ்ச வீதா விகதா யேப்ய: தே வீதராகபயக்ரோதா: மன்மயா: ப்ரஹ்மவித: ஈஶ்வராபேததர்ஶின: மாமேவ ச பரமேஶ்வரம் உபாஶ்ரிதா: கேவலஜ்ஞானநிஷ்டா இத்யர்த்த:। பஹவ: அநேகே ஜ்ஞானதபஸா ஜ்ஞானமேவ ச பரமாத்மவிஷயம் தப: தேந ஜ்ஞானதபஸா பூதா: பராம் ஶுத்திம் கதா: ஸந்த: மத்பாவம் ஈஶ்வரபாவம் மோக்ஷம் ஆகதா: ஸமப்ராப்தா:। இதரதபோऽநபேக்ஷா ஜ்ஞானநிஷ்டா இத்யஸ்ய லிங்கம் 'ஜ்ஞானதபஸா' இதி விஶேஷணம் ॥ ௧௦ ॥

தவ தர்ஹி ராகத்வேஷௌ ஸ்த:, யேந கேப்யஶ்சிதேவ ஆத்மபாவம் ப்ரயச்சஸி ந ஸர்வேப்ய: இதி; உச்யதே—

௧௧. யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம் ।
மம வர்த்மானுவர்த்தந்தே மனுஷ்யா: பார்த்த ஸர்வஶ: ॥

யே யதா யேந ப்ரகாரேண யேந ப்ரயோஜநேந யத்பலார்த்திதயா மாம் ப்ரபத்யந்தே தான் ததைவ தத்பலதாநேந பஜாமி அநுக்ருஹ்ணாமி அஹம், தேஷாம் மோக்ஷம் ப்ரதி அநர்த்திதவாத்। ந ஹி ஏகஸ்ய முமுக்ஷுத்வம் பலார்த்திதவம் ச யுகபத் ஸம்பவதி। அத: யே பலார்த்தின: தான் பலதாநேந, யே யதோ-

---

என் மயமானவர்களாய் - ப்ரஹ்மத்தை அறிந்தவராய், (தமது ஆத்மாவுக்கும்) ஈச்வரனுக்கும் பேதமில்லையெனக் காண்பவராய். பரமேச்வரனை என்னையே புகலடைந்தவராய் - ஞானமொன்றிலேயே உறுதியாகநிற்பவராய் என்றபடி. பரமாத்மாவைப்பற்றிய ஞானமென்னும் தபஸினால் சிறந்த பரிசுத்தியைப் பெற்று என் தன்மையை = ஈச்வரன் நிலையை, மோக்ஷத்தை நன்கு அடையலானார்கள். ஞானநிஷ்டையானது, (முக்தியைக் கொடுக்கும் விஷயத்திலே தனக்கு உதவியாக) வேறோர் தபஸை வேண்டிநிற்காததாம் என்பதற்கு - 'ஞானமாகிய தபஸினால்' என்னும் விசேஷணம் அறிகுறி. (௧௦)

### செல்வத்தையும், முக்தியையும் பகவான் தந்தருளுதல்.

அப்பொழுது உங்களுக்கு (ஒன்றினிடத்து) விருப்பும், (மற்றொன்றினிடத்து) வெறுப்பும் உண்டாம்; ஏனெனில், நீங்கள் ஆத்மநிலையைச் சிலர்க்குமாத்திரமேயன்றி எல்லோர்க்கும் தந்தருளுவதில்லை என்பது?—(விடை)கூறுவோம்:

௧௧. எவர்கள் என்னை எவ்வாறு அடைகிறார்களோ, அவர்களை நான் அவ்வாறே அநுக்கிரக்கிறேன். பார்த்த! மனிதர்கள் எவ்வாற்றாலும் என்வழியை அநுஸரிக்கிறார்கள்.

எவ்விதமாக எப்பிரயோஜனத்தோடு (அதாவது,) எப்பயனை வேண்டி. எவர்கள் என்னை அடைகிறார்களோ, அவ்விதமாகவே அப்பயனை அளிப்பதனால் அவர்களை அநுக்கிரகிக்கிறேன்; அவர்கட்கு முக்தியிலே விருப்பமில்லையாதலின். (ஸம்ஸாரத்தினின்றும்) விடுபட விருப்பமுடைமையும், (இம்மை மறுமைப்) பயன்களிலே விருப்பமுடைமையும் ஒருவனுக்கு ஒருங்கே நிகழாதன்றோ. ஆதலால், எப்பயனை எவர்கள் வேண்டுகிறார்களோ, அப்பயனை அளிப்பதனால் அவர்களை (அநுக்கிரகிக்கின்றேன்);

𑌤𑌕𑌾𑌰𑌿𑌣𑌃 𑌤𑍁 𑌅𑌫𑌲𑌾𑌰𑍍𑌥𑌿𑌨𑌃 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑌵𑌶𑍍𑌚 𑌤𑌾𑌨𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌰𑌦𑌾𑌨𑍇𑌨, 𑌯𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌃 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑌵𑌶𑍍𑌚 𑌤𑌾𑌨𑍍 𑌮𑍋𑌕𑍍𑌷𑌪𑍍𑌰𑌦𑌾𑌨𑍇𑌨, 𑌤𑌥𑌾 𑌆𑌰𑍍𑌤𑌾𑌨𑍍 𑌆𑌰𑍍𑌤𑌿𑌹𑌰𑌣𑍇𑌨 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌯𑌥𑌾 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌯𑍇 𑌤𑌾𑌨𑍍 𑌤𑌥𑍈𑌵 𑌭𑌜𑌾𑌮𑌿 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌨 𑌪𑍁𑌨𑌃 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌂 𑌮𑍋𑌹𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌂 𑌵𑌾 𑌕𑌂𑌚𑌿𑌦𑍍 𑌭𑌜𑌾𑌮𑌿 । 𑌸𑌰𑍍𑌵𑌥𑌾𑌪𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌵𑌸𑍍𑌥𑌸𑍍𑌯 𑌮𑌮 𑌈𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌵𑌰𑍍𑌤𑍍𑌮 𑌮𑌾𑌰𑍍𑌗𑌂 𑌅𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌃— 𑌯𑌤𑍍𑌫𑌲𑌾𑌰𑍍𑌥𑌿𑌤𑌯𑌾 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌅𑌧𑌿𑌕𑍃𑌤𑌾𑌃 𑌯𑍇 𑌪𑍍𑌰𑌯𑌤𑌨𑍍𑌤𑍇 𑌤𑍇 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾 𑌉𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇—𑌹𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍈𑌃 ॥ கக ॥

𑌯𑌦𑌿 𑌤𑌵 𑌈𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌰𑌾𑌗𑌾𑌦𑌿𑌦𑍋𑌷𑌾𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌷𑍁 𑌅𑌨𑍁𑌜𑌿𑌘𑍃𑌕𑍍𑌷𑌾𑌯𑌾𑌂 𑌤𑍁𑌲𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌫𑌲𑌦𑌾𑌨𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑍇 𑌚 𑌤𑍍𑌵𑌯𑌿 𑌸𑌤𑌿 "𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌃 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍" 𑌇𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑍈𑌵 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑌵𑌃 𑌸𑌨𑍍𑌤𑌃 𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌤𑍍𑌵𑌾𑌮𑍇𑌵 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌨 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌇𑌤𑌿? 𑌶𑍃𑌣𑍁 𑌤𑌤𑍍𑌰 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍—

கஉ. 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌯𑌜𑌨𑍍𑌤 𑌇𑌹 𑌦𑍇𑌵𑌤𑌾𑌃 ।
𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌂 𑌹𑌿 𑌮𑌾𑌨𑍁𑌷𑍇 𑌲𑍋𑌕𑍇 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌜𑌾 ॥

---

ஆனால், எவர்கள் (சாஸ்திரத்திற்)கூறியபடி (ஸகலத்தையும்) செய்பவராய், (இம்மை மறுமைப்) பயன்களை வேண்டாதவராய், (ஸம்ஸாரத்தினின்றும்) விடுபட விரும்புபவராய் (இருக்கின்றார்களோ), அவர்கட்கு ஞானத்தைக் கொடுத்து (அருளுகின்றேன்) : ஞானிகளாயும், துறவிகளாயும், (ஸம்ஸாரத்தினின்றும்) விடுபட விரும்புபவராயும் இருப்பவர்கள் எவர்களோ, அவர்களை மோக்ஷமளிப்பதனால் (அருளுகின்றேன்) : அவ்வண்ணமே, துயருற்றவர்களைத் துயரத்தைப் போக்குவதனால் என இவ்வாறாக (அநுக்கிரகிக்கின்றேன்). எவர்கள் (என்னை) எவ்வாறு அடைகிறார்களோ, அவர்களை அவ்வாறே யான் அநுக்கிரகிக்கின்றேன் என்பது பொருள். மற்று, விருப்பினாலாவது, வெறுப்பினாலாவது, மருட்சியினாலாவது நான் ஒருவனையும் அநுக்கிரகிப்பதில்லை. எல்லா நிலையையும் உடையவனான [எங்கும் ஆத்மஸ்வரூபமாகவேயுள்ள] ஈச்வரனாகிய என்(னால் கூறப்பட்டுள்ள ஞானகர்ம)மார்க்கத்தை மனிதர்கள் எவ்வகையாலும் அநுஸரிக்கிறார்கள். எப்பயனை வேண்டி(அதற்குஏற்ப)எக்கர்மத்தைச்செய்ய உரியவராகி எவர்கள் முயற்சிசெய்கின்றார்களோ, (அப்பயனைப் பெறுதற்கு அத்தொழிலைச்செய்யும்) அவர்கள் 'மனிதர்கள்' எனப்படுகிறார்கள்[இங்கே 'மனிதர்கள்' என்பதற்கு - மநுஷ்யர்களும், (ராக்ஷஸன் குரங்கு யானை முதலிய) மற்றைப் பிராணிகளும் என்பது பொருள்.—ஆ.] (கக)

ஈச்வரனாகிய உங்களுக்கு ஆசை முதலியகுற்றங்கள் இல்லாமையால் (பிராணிகளை) ஈடேற்றவேண்டுமென்றும் விருப்பம் ஸகலப்பிராணிகள்மேலும் ஸமமாயுள்ளது : தாங்களோ எப்பயனையும் தந்தருளவல்லவர். (இவ்வாறுள்ள)வளவிலே, ஸகலரும் " எல்லாம் வாஸுதேவனே " என்னும் ஞானத்தினாலேயே (ஸம்ஸாரத்தினின்றும்) விடுபட விரும்பியவராய் உங்களையே ஏன் அடைகிறார்களில்லை? எனில்,— அவ்விஷயத்திலே காரணங் (கூறுகிறேன்), கேள் :

கஉ. (தாம் செய்யும்) கர்மங்களின் ஸித்தியை [பயன் கைகூடுதலை] விரும்புறவர்கள் இங்கே தேவதைகளை ஆராதிக்கிறார்கள் ; ஏனெனில், கர்மத்தினாலுண்டாகும் ஸித்தியானது மநுஷ்யலோகத்திலே விரைவாக ஆகின்றது.

𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌯𑌨𑍍𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌫𑌲𑌨𑌿𑌷𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌂 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 𑌇𑌹 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌲𑍋𑌕𑍇 𑌦𑍇𑌵𑌤𑌾𑌃 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌗𑍍𑌨𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌃; '𑌅𑌥 𑌯𑍋𑌽𑌨𑍍𑌯𑌾𑌂 𑌦𑍇𑌵𑌤𑌾𑌮𑍍 𑌉𑌪𑌾𑌸𑍍𑌤𑍇 𑌅𑌨𑍍𑌯𑌃 𑌅𑌸𑍌 𑌅𑌨𑍍𑌯𑌃 𑌅𑌹𑌮𑍍 𑌅𑌸𑍍𑌮𑌿 𑌇𑌤𑌿 𑌨 𑌸 𑌵𑍇𑌦 𑌯𑌥𑌾 𑌪𑌶𑍁𑌃 𑌏𑌵𑌂 𑌸 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌮𑍍' 𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌃 । 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌹𑌿 𑌭𑌿𑌨𑍍𑌨𑌦𑍇𑌵𑌤𑌾𑌯𑌾𑌜𑌿𑌨𑌾𑌂 𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌂 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌂 𑌶𑍀𑌘𑍍𑌰𑌂 𑌹𑌿 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌮𑌾𑌨𑍁𑌷𑍇 𑌲𑍋𑌕𑍇—𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌲𑍋𑌕𑍇 𑌹𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌃 । '𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌂 𑌮𑌾𑌨𑍁𑌷𑍇 𑌲𑍋𑌕𑍇' 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌾𑌤𑍍 𑌅𑌨𑍍𑌯𑍇𑌷𑍍𑌵𑌪𑌿 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌦𑌰𑍍𑌶𑌯𑌤𑌿 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 । 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌲𑍋𑌕𑍇 𑌵𑌰𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌮𑌾𑌦𑌿𑌕𑌰𑍍𑌮𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌃 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑌃—𑌤𑍇𑌷𑌾𑌂 𑌚 𑌵𑌰𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌮𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌿𑌣𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌫𑌲𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃 𑌭𑌵𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌜𑌾 𑌕𑌰𑍍𑌮𑌣𑍋 𑌜𑌾𑌤𑌾 ॥ ௧௨ ॥

𑌮𑌾𑌨𑍁𑌷𑍇 𑌏𑌵 𑌲𑍋𑌕𑍇 𑌵𑌰𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌮𑌾𑌦𑌿𑌕𑌰𑍍𑌮𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌃 𑌨 𑌅𑌨𑍍𑌯𑍇𑌷𑍁 𑌲𑍋𑌕𑍇𑌷𑍁 𑌇𑌤𑌿 𑌨𑌿𑌯𑌮𑌃 𑌕𑌿𑌂𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤 𑌇𑌤𑌿? 𑌅𑌥𑌵𑌾—𑌵𑌰𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌮𑌾𑌦𑌿𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌾𑌗𑍋𑌪𑌚𑌿𑌤𑌾𑌃 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾 𑌮𑌮 𑌵𑌰𑍍𑌤𑍍𑌮 𑌅𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌶 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑍁𑌨𑌃 𑌕𑌾𑌰𑌣𑌾𑌤𑍍 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌤𑌵𑍈𑌵 𑌵𑌰𑍍𑌤𑍍𑌮 𑌅𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌨 𑌅𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௧௩. 𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌵𑌰𑍍𑌣𑍍𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌸𑍃𑌷𑍍𑌟𑌂 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌃 ।
𑌤𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌪𑌿 𑌮𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥

---

இவ்வுலகத்திலே, (தாம் செய்யும்) கர்மங்களின் பயன் (தமக்குக்) கைகூடுதலை வேண்டுகிறவர்கள், இந்திரன் அக்நி முதலான தேவதைகளைத் தொழுகிறார்கள். (இதனை,) "இனி எவன் 'அவன் வேறு, நான் வேறு' எனக்கொண்டு வேறுதேவதையை உபாஸிக்கிறானோ, அவன்,—(மனிதர்கட்கு) ஆடுமாடுமுதலியன எப்படியோ, அப்படியே தேவதைகட்கு" (பி-௧-௪-௧௦) என்னும் சுருதியினால் (அறிக). பயனை விரும்பி வேறு தேவதைகளைப் பூஜிப்பவராய், வர்ணத்திற்கும் ஆச்ரமத்திற்கும் உரித்தானவராய், (ஆகவே அவ்வர்ணாச்ரமங்கட்குஏற்ப தம்தம்) கர்மத்தைச் செய்கின்ற அவர்கட்கு (அக்) கர்மத்தால் வரும் பயன் விரைவாகக் கைகூடுகின்றது.—சாஸ்திரத்தின் அதிகாரம் மனுஷ்யலோகத்திலேதான். "மனுஷ்யலோகத்திலே விரைவாக" என்னும் விசேஷணத்தால், மற்றைய லோகங்களிலும் கர்மத்தின்பயன் கைகூடுதலைப் பகவான் எடுத்துக்காட்டுகிறார். மனுஷ்யலோகத்திலே வர்ணம் ஆச்ரமம் முதலானவற்றிற்கேற்ப கர்மத்திலே அதிகாரம் என்பது, (இவ்வுலகத்திற்கும் மற்றைய உலகங்களுக்குமுள்ள) வேறுபாடு. (௧௨)

**ஜாதிஎன்பது மனுஷ்யலோகத்திலே பகவானால் நியமிக்கப்பட்ட ஒழுங்கு.**

"மனுஷ்யலோகத்திலேதான் வர்ணம் ஆச்ரமம் முதலானவற்றிற்கு ஏற்ப கர்மத்திலே அதிகாரம்; மற்றைய லோகங்களில் (இவ்வாறு) இல்லை" என்னும் நியமம் எதனாலாகியது என்பது?—அல்லது, "வர்ணம் ஆச்ரமம் முதலிய வேறுபாட்டையுடைய மனிதர்கள் எவ்வகையாலும் என் வழியை அநுஸரிக்கிறார்கள்" என்று (கீழ்க்)கூறப்பட்டதே. (அவர்கள்) எக்காரணத்தால் உம்முடைய வழியையேயன்றி வேறொருத்தனுடைய (வழியை) அநுஸரிப்பதில்லை" என்பது? (விடை) கூறுவோம்:

௧௩. நான்கு ஜாதியும், குணம் கர்மம் என்றவற்றின் பலவகையான அளவிற்குத்தக்கபடி என்னால் படைக்கப்பட்டது. (யான்) அதனைச் செய்தவனாயினும், (அதனைச்) செய்யாதவனாக நிர்விகாரியாக இருக்கிறேன் என்று என்னை நீ அறியக்கடவாய்.

𑌚𑌤𑍍𑌵𑌾𑌰 𑌏𑌵 𑌵𑌰𑍍𑌣𑌾𑌃 𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌵𑌰𑍍𑌣𑍍𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌈𑌶𑍍𑌵𑌰𑍇𑌣 𑌸𑍃𑌷𑍍𑌟𑌮𑍍 𑌉𑌤𑍍𑌪𑌾𑌦𑌿𑌤𑌂 "𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍋𑌽𑌸𑍍𑌯 𑌮𑍁𑌖𑌮𑌾𑌸𑍀𑌤𑍍" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌃, 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌃 𑌗𑍁𑌣𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌃 𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌶𑍍𑌚। 𑌗𑍁𑌣𑌾𑌃 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑌾𑌂𑌸𑌿। 𑌤𑌤𑍍𑌰 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌸𑍍𑌯 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 '𑌶𑌮𑍋 𑌦𑌮𑌃 𑌤𑌪𑌃' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍀𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿, 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍋𑌪𑌸𑌰𑍍𑌜𑌨𑌰𑌜𑌃𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌸𑍍𑌯 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌶𑍌𑌰𑍍𑌯𑌤𑍇𑌜𑌃𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑍀𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿, 𑌤𑌮𑌉𑌪𑌸𑌰𑍍𑌜𑌨𑌰𑌜𑌃𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌸𑍍𑌯 𑌵𑍈𑌶𑍍𑌯𑌸𑍍𑌯 𑌕𑍃𑌷𑍍𑌯𑌾𑌦𑍀𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿, 𑌰𑌜𑌉𑌪𑌸𑌰𑍍𑌜𑌨𑌤𑌮𑌃𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌸𑍍𑌯 𑌶𑍂𑌦𑍍𑌰𑌸𑍍𑌯 𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑍈𑌵 𑌕𑌰𑍍𑌮 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌃 𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌵𑌰𑍍𑌣𑍍𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌸𑍃𑌷𑍍𑌟𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃। 𑌤𑌚𑍍𑌚 𑌇𑌦𑌂 𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌵𑌰𑍍𑌣𑍍𑌯𑌂 𑌨 𑌅𑌨𑍍𑌯𑍇𑌷𑍁 𑌲𑍋𑌕𑍇𑌷𑍁, 𑌅𑌤𑌃 𑌮𑌾𑌨𑍁𑌷𑍇 𑌲𑍋𑌕𑍇 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌮𑍍 ॥

𑌹𑌨𑍍𑌤! 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌵𑌰𑍍𑌣𑍍𑌯𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌗𑌾𑌦𑍇𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌤𑌤𑍍𑌫𑌲𑍇𑌨 𑌯𑍁𑌜𑍍𑌯𑌸𑍇, 𑌅𑌤𑌃 𑌨 𑌤𑍍𑌵𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌨𑌿𑌤𑍍𑌯𑍇𑌶𑍍𑌵𑌰𑌶𑍍𑌚 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇— 𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌮𑌾𑌯𑌾𑌸𑌂𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑍇𑌣 𑌤𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌪𑌿 𑌸𑌨𑍍𑌤𑌂 𑌮𑌾𑌂 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌃 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌅𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑍍 𑌅𑌤𑌏𑌵 𑌅𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 𑌅𑌸𑌂𑌸𑌾𑌰𑌿𑌣𑌂 𑌚 𑌮𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 ॥ ௧௩ ॥

---

நான்கேயான ஜாதியானது, குணத்தின் பலவிதமான [ஏற்றத்தாழ்ச்சியான] அளவிற்குத் தக்கபடியும், (அவ்வாறே) கர்மத்தின் பலவிதமான அளவிற்குத் தக்கபடியும் ஈச்வரனாகிய என்னால் அமைக்கப்பட்டது. (இதனை,) "ப்ராஹ்மணன் இதனுடைய முக மானான்" (ருக் - ௧௦ - ௯௦) என்பதுமுதலான சுருதியினால் (அறிக). குணங்கள் - ஸத்துவம், ராஜஸ், தமஸ் என்பன. அவற்றுள் [அந்த நான்கு வர்ணங்களுள்], ஸாத்விகனான (அதாவது) ஸத்துவகுணத்தை முதன்மையாகவுடைய ப்ராஹ்மணனுக்குச் சாந்தம் அடக்கம் தவம் என்பன முதலானவை, (உரிய) கர்மங்கள் (௧௮ - ௪௨). ஸத்துவகுணத்தைத் துணையாகப் பெற்றுள்ள ரஜோகுணத்தை முதன்மையாகவுடைய க்ஷத்திரியனுக்கு சௌர்யம் பராக்கிரமம் முதலியவை (உரிய) கர்மங்கள் (௧௮ - ௪௩). தமோகுணத்தைத் துணையாகப்பெற்றுள்ள ரஜோகுணத்தை முதன்மையாகவுடைய வைச்யனுக்கு வேளாண்மைமுதலியன (உரிய) கர்மங்கள் (௧௮ - ௪௪). ரஜோகுணத்தைத் துணையாய்ப்பெற்றுள்ள தமோகுணத்தை முதன்மையாகவுடைய சூத்திரனுக்கு (உரியது)ஊழியம் என்னும் ஒரேகர்மந்தான் (௧௮-௪௪) என இவ்வாறு குணம் கர்மம் என்றவற்றின் பலவிதமான அளவிற்குஏற்ப நான்கு வர்ணமும் என்னால் படைக்கப்பட்டது என்பது பொருள். பிரஸித்தமான இந்த நான்குஜாதியும் மற்றையஉலகங்களில் இல்லை; ஆதலால்தான் "மனுஷ்யலோகத்திலே" (௪ - ௧௨) என்னும் விசேஷணம்.

(ஆக்ஷேபம்):—"ஆ! அப்பொழுது,நான்குவர்ணத்தையும் படைத்தல் முதலிய தொழில்கட்கு (நீங்கள்) கர்த்தாவாதலால், அதன்பயன் (உமக்கே) வந்துசேரும். ஆகவே நீங்கள் (ஸம்ஸாரத்தினின்றும்) என்றும் விடுபட்டவராகவும், என்றும் ஈச்வரராகவும் ஆகமாட்டீர்கள் என்பது?

(ஸமாதானம்):—(விடை) கூறுவோம் :—மாயையின் வ்யவஹாரத்தால் (யான்) அந்தத்தொழிலுக்குக் கர்த்தாவாக இருந்தாலும், உண்மையாக அகர்த்தாவாதலால் நான் ஸம்ஸாரத்திற்கு உட்படாதவன் என்று தெரிந்துகொள். (௧௩)

𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍁 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌂 𑌮𑌾𑌂 𑌮𑌨𑍍𑌯𑌸𑍇 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌃 𑌤𑍇𑌷𑌾𑌮𑍍 𑌅𑌕𑌰𑍍𑌤𑌾 𑌏𑌵 𑌅𑌹𑌮𑍍, 𑌯𑌤𑌃—

௧௪. 𑌨 𑌮𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌲𑌿𑌮𑍍𑌪𑌨𑍍𑌤𑌿 𑌨 𑌮𑍇 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑍇 𑌸𑍍𑌪𑍃𑌹𑌾 ।
𑌇𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌯𑍋𑌽𑌭𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌭𑌿𑌰𑍍𑌨 𑌸 𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ॥

𑌨 𑌮𑌾𑌂 𑌤𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌲𑌿𑌮𑍍𑌪𑌨𑍍𑌤𑌿 𑌦𑍇𑌹𑌾𑌦𑍍𑌯𑌾𑌰𑌮𑍍𑌭𑌕𑌤𑍍𑌵𑍇𑌨, 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌾𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 । 𑌨 𑌚 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌫𑌲𑍇𑌷𑍁 𑌮𑍇 𑌸𑍍𑌪𑍃𑌹𑌾 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾 । 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍁 𑌸𑌂𑌸𑌾𑌰𑌿𑌣𑌾𑌮𑍍 "𑌅𑌹𑌂 𑌕𑌰𑍍𑌤𑌾" 𑌇𑌤𑍍𑌯𑌭𑌿𑌮𑌾𑌨𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁, 𑌸𑍍𑌪𑍃𑌹𑌾 𑌚 𑌤𑌤𑍍𑌫𑌲𑍇𑌷𑍁, 𑌤𑌾𑌨𑍍 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌲𑌿𑌮𑍍𑌪𑌨𑍍𑌤𑌿 𑌇𑌤𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍, 𑌤𑌦𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 𑌨 𑌮𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌲𑌿𑌮𑍍𑌪𑌨𑍍𑌤𑌿 । 𑌇𑌤𑌿 𑌏𑌵𑌂 𑌯𑌃 𑌅𑌨𑍍𑌯𑍋𑌽𑌪𑌿 𑌮𑌾𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌤𑍍𑌵𑍇𑌨 𑌅𑌭𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 "𑌨 𑌅𑌹𑌂 𑌕𑌰𑍍𑌤𑌾, 𑌨 𑌮𑍇 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑍇 𑌸𑍍𑌪𑍃𑌹𑌾" 𑌇𑌤𑌿 𑌸 𑌕𑌰𑍍𑌮𑌭𑌿𑌃 𑌨 𑌬𑌧𑍍𑌯𑌤𑍇, 𑌤𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌨 𑌦𑍇𑌹𑌾𑌦𑍍𑌯𑌾𑌰𑌮𑍍𑌭𑌕𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௧௪ ॥

"𑌨 𑌅𑌹𑌂 𑌕𑌰𑍍𑌤𑌾, 𑌨 𑌮𑍇 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑍇 𑌸𑍍𑌪𑍃𑌹𑌾" 𑌇𑌤𑌿—

௧௫. 𑌏𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌕𑍃𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌰𑌪𑌿 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍁𑌭𑌿𑌃 ।
𑌕𑍁𑌰𑍁 𑌕𑌰𑍍𑌮𑍈𑌵 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌤𑌰𑌂 𑌕𑍃𑌤𑌮𑍍 ॥

𑌏𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌕𑍃𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌃 𑌅𑌪𑌿 𑌅𑌤𑌿𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑍈𑌃 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍁𑌭𑌿𑌃 । 𑌕𑍁𑌰𑍁 𑌤𑍇𑌨 𑌕𑌰𑍍𑌮𑍈𑌵, 𑌨 𑌤𑍂𑌷𑍍𑌣𑍀𑌮𑍍 𑌆𑌸𑌨𑌮𑍍, 𑌨𑌾𑌪𑌿 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌃

---

பற்றற்றுச் செய்யும் கர்மமானது ஒருவனைக் கட்டுப்படுத்துவதில்லை.

மற்று, நீ என்னை எந்தத் தொழில்கட்குக் கர்த்தாவாக நினைக்கின்றனையோ அவற்றிற்கு யான் உண்மையாகவே அகர்த்தாதான்; ஏனெனில்,

௧௪. "கர்மங்கள் என்னைப் பற்றுவதில்லை: கர்மத்தின் பயனிலே எனக்கு ஆசை இல்லை" என எவன் என்னை அறிகிருனே, அவன் கர்மங்களால் கட்டப்படுவதில்லை.

(எனக்கு) அகங்காரமின்மையால், அந்தக்கர்மங்கள் (எனக்கு) உடம்பு முதலியவற்றை உண்டாக்கி என்னைப் பற்றுவதில்லை; அக்கர்மங்களின் பயன்களிலே எனக்கு ஆசையும் இல்லை. ஆனுல், ஸம்ஸாரிகளான [உலகவாழ்க்கையில் பற்றுக்கொண்ட] எவர்கட்குக் கர்மங்களிலே "நான் கர்த்தா" என்ற எண்ணமும், அவற்றின் பயன்களிலே ஆசையும் உள்ளனவோ, அவர்களைக் கர்மங்கள் பற்றுகின்றன என்பது ஏற்கும். அவை (எனக்கு) இல்லாததனுல், கர்மங்கள் என்னைப் பற்றமாட்டா. "நான் கர்த்தா இல்லை, எனக்குக் கர்மத்தின் பயனிலெ ஆசை இல்லை" என இவ்வாருக அறிகிறவன் வேறு எவனுனுலும் ஆருக; அவன் கர்மங்களால் கட்டப்படுவதில்லை: அவனுக்குங்கூடச் சரீரம்முதலானவற்றை உண்டாக்கும் கர்மங்கள் இல்லை என்பது பொருள். (௧௪)

"நான் கர்த்தா இல்லை, எனக்குக் கர்மத்தின் பயனிலே ஆசை இல்லை" என

௧௫. இவ்வாருக அறிந்து, (ஸம்ஸாரத்தினின்றும்) விடுபடவிரும்பிய முன்னேர்களாலும் கர்மமானது செய்யப்பட்டது. ஆதலால், முந்தின பண்டைக்காலத்தில் முன்னேர்களால் செய்யப்பட்ட கர்மத்தையே நீ செய்யக்கடவாய்.

(ஸம்ஸாரத்தினின்றும்) விடுபடவிரும்பிய முன்னேர்களாலும் அநுஷ்டிக்கப்பட்டமையால், நீ கர்மத்தையே செய்யவேண்டுமேயன்றி மௌனமாக உட்கார்ந்திரு

कर्तव्यः, तस्मात् त्वं पूर्वैरपि अनुष्ठितत्वात्, यदि अज्ञः तदा आत्मशुद्ध्यर्थं, तत्त्ववित् चेत् लोकसंग्रहार्थं, पूर्वैः जनकादिभिः पूर्वतरं कृतं न अधुनातनं कृतं निर्वर्तितम् ॥ ௧௫ ॥

तत्र कर्म चेत् कर्तव्यं त्वद्वचनादेव करोम्यहम् । किं विशेषितेन 'पूर्वैः पूर्वतरं कृतम्' इति? उच्यते — यस्मात् महत् वैषम्यं कर्मणि । कथम्?—

௧௬. किं कर्म किमकर्मेति कवयोऽप्यत्र मोहिताः ।
तत्ते कर्म प्रवक्ष्यामि यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥

किं कर्म किं च अकर्म इति कवयः मेधाविनः अपि अत्र अस्मिन् कर्मादिविषये मोहिताः मोहं गताः । तत् ते तुभ्यं कर्म अकर्म च प्रवक्ष्यामि यत् ज्ञात्वा विदित्वा कर्मादि मोक्ष्यसे अशुभात् संसारात् ॥ ௧௬ ॥

न च एतत् त्वया मन्तव्यम् — कर्म नाम देहादिचेष्टा लोकप्रसिद्धम्, अकर्म नाम तदक्रिया तूष्णीमासनम्; किं तत्र बोद्धव्यम् इति? कस्मात्? उच्यते —

---

த்தலையாவது, (கர்மங்களைத்) துறந்திடுதலையாவது செய்யக்கூடாது. நீ அஜ்ஞானியானால், அப்பொழுது சித்தசுத்திக்காக(க் கர்மத்தை அநுஷ்டிக்கவேண்டும்); நீ உண்மையுணர்ந்தோனானால், உலகத்தை நல்வழிதிருத்த(க் கர்மத்தை அநுஷ்டிக்க வேண்டும். அன்றியும், அக்கர்மமானது) மிகப்பழைய காலத்திலே ஜநகாதியரான முன்னோர்களால் அநுஷ்டிக்கப்பட்டுவந்ததேயன்றி இப்பொழுது (புதிதாக) அநுஷ்டிக்கப்பட்டதன்று. (௧௫)

**கர்மம் இன்னது, அகர்மம் இன்னது என்பது.**

இ(ம் மநுஷ்யலோகத்)திலே கர்மத்தைச் செய்யவேண்டுமென்றால், நீங்கள் சொல்வதனாலேயே நான் (அதனைச்) செய்வேன். (ஆகவே, அங்ஙனம்) "முன்னோர்களாலே மிகப்பழைய காலத்திலே செய்யப்பட்டது" என்று சிறப்பித்துக்கூறியதனால் என்ன என்பது? — கூறுவோம்: ஏனெனில், கர்மத்(தை அறியும் விஷயத்)திலே அதிக அருமை இருக்கின்றது.—எப்படி?—

**௧௬. கர்மமென்பது என்ன? அகர்மமென்பது என்ன? என்றஇதிலே, அறிவுடையோரும் மயங்கிவிட்டார்கள். நீ எதனை அறிந்து, தீமையினின்றும் விடுவிக்கப்படுவாயோ, அந்தக் கர்மத்தையும் அகர்மத்தையும் யான் உனக்கு உபதேசிப்பேன்.**

இவ்விஷயத்திலே அறிவுள்ளவருங்கூட மயக்கமடைந்துள்ளார். ஆகவே, யான் உனக்குக் கர்மத்தையும் அகர்மத்தையும் (அவை இன்னவை யென்று) விரித்துக் கூறுவேன். நீ கர்மம்முதலான எவற்றை அறிந்து ஸம்ஸாரத்தினின்றும் விடுவிக்கப்படுவாயோ, (அவற்றை விவரமாகச் சொல்வேன்). (௧௬)

கர்மமென்பது, உடம்புமுதலியவற்றின் அசைவு; அகர்மமென்பது, அவற்றின் தொழிலின்மை. உலகத்திலே (இவை யாவர்க்கும்) தெரிந்தவை. (ஆகவே,) அதில் தெரிந்துகொள்ளவேண்டியதென்ன? [ஒன்றும் இல்லை]—என்று நீ இவ்வாறு கொள்ளவும் கூடாது.—ஏன்?—கூறுவோம்:

கஎ. 𑌕𑌰𑍍𑌮𑌣𑍋 𑌹𑍍𑌯𑌪𑌿 𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂 𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌵𑌿𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 ।
𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌶𑍍𑌚 𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂 𑌗𑌹𑌨𑌾 𑌕𑌰𑍍𑌮𑌣𑍋 𑌗𑌤𑌿𑌃 ॥

𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌹𑌿𑌤𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌅𑌪𑌿 𑌅𑌸𑍍𑌤𑌿 𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂, 𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌅𑌸𑍍𑌤𑍍𑌯𑍇𑌵 𑌵𑌿𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌸𑍍𑌯, 𑌤𑌥𑌾 𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌶𑍍𑌚 𑌤𑍂𑌷𑍍𑌣𑍀𑌂𑌭𑌾𑌵𑌸𑍍𑌯 𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌮𑍍 𑌅𑌸𑍍𑌤𑌿 𑌇𑌤𑌿 𑌤𑍍𑌰𑌿𑌷𑍍𑌵𑌪𑌿 𑌅𑌧𑍍𑌯𑌾𑌹𑌾𑌰𑌃 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 । 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌗𑌹𑌨𑌾 𑌵𑌿𑌷𑌮𑌾 𑌦𑍁𑌰𑍍𑌜𑍍𑌞𑍇𑌯𑌾—𑌕𑌰𑍍𑌮𑌣 𑌇𑌤𑌿 𑌉𑌪𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌰𑍍𑌥𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌦𑍀𑌨𑌾𑌮𑍍—𑌕𑌰𑍍𑌮𑌾𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌗𑌤𑌿𑌃 𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍍 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ கஎ ॥

𑌕𑌿𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌦𑍇𑌃 𑌯𑌤𑍍 𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌮𑍍? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

கஅ. 𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌦𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌚 𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 ।
𑌸 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌨𑍍𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑍇𑌷𑍁 𑌸 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍 ॥

𑌕𑌰𑍍𑌮𑌣𑌿, 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮 𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑌮𑌾𑌤𑍍𑌰𑌂, 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌅𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍍𑌮𑌾𑌭𑌾𑌵𑌂 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍, 𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌚 𑌕𑌰𑍍𑌮𑌾𑌭𑌾𑌵𑍇 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌵𑍃-

---

கஎ. ஏனெனில், கர்மத்தைப்பற்றியும் தெரிந்துகொள்ளவேண்டியது உண்டு: விகர்மத்தைப்பற்றியும் தெரிந்துகொள்ளவேண்டியது உண்டு: அகர்மத்தைப்பற்றியும் தெரிந்துகொள்ளவேண்டியது உண்டு. கர்மத்தின் போக்கானது அறிதற்கு அரியது. [விகர்மம் - விலக்கப்பட்ட கர்மம். அகர்மம் - ஒன்றுஞ்செய்யாது சும்மாஇருத்தல்.]

ஏனெனில், சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட கர்மத்தைப்பற்றியும் தெரிந்துகொள்ளவேண்டியது இருக்கின்றது: விலக்கப்பட்ட விகர்மத்தைப்பற்றித் தெரிந்துகொள்ளவேண்டியதும் இருக்கவேஇருக்கின்றது. அவ்வாறே, மௌனமாயிருத்தலாகிய அகர்மத்தைப்பற்றியும் தெரிந்துகொள்ளவேண்டியது இருக்கின்றது. ஏனெனில், கர்மம் விகர்மம் அகர்மம் என்றவற்றின் போக்கானது=உள்ளது உள்ளபடியான தன்மையானது, அதாவது,(அவற்றின்)உண்மை கஷ்டமானது, அறிதற்குஅரிதானது.— "இருக்கின்றது" என்பதை மூன்றி(டங்களி)லும் வருவித்துக்கொள்க. "கர்மத்தின்" என்பது, கர்மம் முதலானவற்றின் உபலக்ஷணத்திற்காக. (உபலக்ஷணம் - ஒரு சொல், தன்னோடு தன்இனங்களையும் கொள்ளுதற்கு உரியதாய்நிற்றல். சோற்றை உண்டான் என்றால் - அதனோடு கறிமுதலியவற்றையும் தின்றான் என்பது கூறாமலே அமைதலால், சோறுஎன்னும் சொல் - மற்றைக் கறிமுதலிய தன் இனங்களையும் கொள்ளுதற்கு உரியதாய்நிற்றல் காண்க.) (கஎ)

ஆனால், "(கர்மஅகர்மங்களைப்பற்றித்) தெரிந்துகொள்ளவேண்டியதைக் கூறுவேன்" என்று (நீங்கள்) மேற்கொண்டுள்ள (அக்) கர்மம்முதலானவற்றின் உண்மை என்ன ?—கூறுவோம்:

கஅ. எவன் கர்மத்திலே அகர்மத்தைக் காணக்கூடுமோ, எவன் அகர்மத்திலும் கர்மத்தைக் காணக்கூடுமோ, அவன், மனிதர்களுள் அறிவுள்ளவன்; அவன் (ஞானநிஷ்டையைக்) கூடினவன், கர்மங்களெல்லாவற்றையும் செய்தவன்.

செய்யப்படுகிறதென்பது - செய்கை, கர்மம், தொழில் பொது [செல்லல், நிற்றல், நினைத்தல்முதலிய எல்லாத்தொழிலுமாம்]. பிரவிருத்தியும் நிவிருத்தியும்,

𑌤𑍍𑌤𑌿𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑍋𑌃—𑌵𑌸𑍍𑌤𑍁 𑌅𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑍈𑌵 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌕𑌾𑌰𑌕𑌾𑌦𑌿𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌃 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌭𑍂𑌮𑌾𑌵𑍇𑌵—𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿, 𑌸 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌨𑍍 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑍇𑌷𑍁, 𑌸 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌯𑍋𑌗𑍀 𑌚, 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌚𑍍𑌚 𑌸𑌃, 𑌇𑌤𑌿 𑌸𑍍𑌤𑍂𑌯𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮𑌾𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌃 𑌇𑌤𑌰𑍇𑌤𑌰𑌦𑌰𑍍𑌶𑍀 ॥

𑌨𑌨𑍁 𑌕𑌿𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ‘𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌅𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍 𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌚 𑌕𑌰𑍍𑌮’ 𑌇𑌤𑌿 ; 𑌨 𑌹𑌿 𑌕𑌰𑍍𑌮 𑌅𑌕𑌰𑍍𑌮 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌅𑌕𑌰𑍍𑌮 𑌵𑌾 𑌕𑌰𑍍𑌮 । 𑌤𑌤𑍍𑌰 𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌂 𑌕𑌥𑌂 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾?—𑌨, 𑌅𑌕𑌰𑍍𑌮 𑌏𑌵 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌃 𑌸𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌵𑌤𑍍 𑌅𑌵𑌭𑌾𑌸𑌤𑍇 𑌮𑍂𑌢𑌦𑍃𑌷𑍍𑌟𑍇𑌃 𑌲𑍋𑌕𑌸𑍍𑌯, 𑌤𑌥𑌾 𑌕𑌰𑍍𑌮 𑌏𑌵 𑌅𑌕𑌰𑍍𑌮𑌵𑌤𑍍 । 𑌤𑌤𑍍𑌰 𑌯𑌥𑌾𑌭𑍂𑌤𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌰𑍍𑌥𑌮𑍍-

---

செய்பவனாகிய கர்த்தாவைச் சார்ந்துநிற்றலின், (கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் காணக்கூடு மென்க. பிரவிருத்தி - கர்மம், செய்தலென்னும் முயற்சி. நிவிருத்தி - அகர்மம், ஒய்தலென்னும் முயற்சி.) மெய்ப்பொருளை அடையாவிடத்தன்றோ செய்கையென்னும் வ்யவஹாரமும், செய்பவனென்னும் வ்யவஹாரமும், மற்றுமிவைபோன்ற வ்யவஹாரமுமாகிய ஸகலமுமே அஜ்ஞானநிலையிலேயே நிகழ்கின்றது. எவன் கர்மத்திலே கர்மமின்மையைக் காண்கிறானோ, எவன் கர்மமின்மையிலேயும் கர்மத்தைக் காண்கிறானோ, அவன் மனிதர்களுள் அறிவுடையவன் : அவன் யோகி: அவன் எல்லாக்கர்மங்களையும் செய்தவன் என்று, கர்மஅகர்மங்களிரண்டினும் ஒன்றில் மற்றொன்றைக் காண்பவன் (இவ்வாறு) கொண்டாடப்படுகிறான்.

(ஆக்ஷேபம்) :— அப்படியானால், “எவன் கர்மத்திலே அகர்மத்தையும், அகர்மத்திலேயும் கர்மத்தையும் காண்கிறானோ” என்று இதென்ன விரோதமாகக்கூறப்படுகின்றது ? நிச்சயமாகக் கர்மம் அகர்ம மாகாது, அகர்மும் கர்மமாகாது. (ஒன்றைக்) காண்பவன், அதில் (அதற்கு) விரோதமானதை எப்படிக் காண்பான் ? [காண முடியாது.]

(ஸமாதானம்) :— அப்படியன்று ; உண்மையிலே அகர்மமாகவேஇருப்பது, விவேகபுத்திமயங்கிய ஜனங்களுக்குக் கர்மம்போலத் தோற்றுகின்றது ; அவ்வாறே, கர்மமாகவே (இருப்பது) அகர்மம்போல(த் தோற்றுகின்றது). பகவான் அவற்றை உள்ளபடி உணர்த்தும்பொருட்டு “எவன் கர்மத்திலே அகர்மத்தைக் காண்கிறானோ”—என்று தொடங்குகின்ற (சுலோகத்)தைக் கூறலானார். (மயக்கவுணர்வினால் ஆத்மாவினிடத்துத் தோன்றிய கர்மத்திலே அகர்மத்தைக் காணுதலென்பது - மயக்கவுணர்வினால் தோன்றிய வெள்ளியிலே இப்பியைக் காண்பது போல. பின்னும் அம்மயக்கவுணர்வினால் அவ்வாத்மாவினிடத்துத் தோன்றிய அகர்மத்திலே கர்மத்தைக் காணுதலென்பதும் அது. எப்படியெனில், —ஒருபொருளின் உணர்ச்சியைப் பெற்றாலன்றி, ‘அப்பொருள் இல்லை’ என்னும் உணர்ச்சி வாராது. இப்பியைப் பார்த்து வெள்ளியென்றவிடத்து, இப்பியிலே வெள்ளி கற்பிக்கப்பட்டது. அவ்வண்ணமே அதனைப் பார்த்து ‘இங்கே முன் தோன்றிய வெள்ளி இல்லை’ என்றவிடத்து இல்லை என்னும் உணர்ச்சியானது, கற்பிக்கப்பட்ட வெள்ளியின் உணர்ச்சியைத் தழுவிநிற்றலால், இப்பியிலே வெள்ளி இல்லை என்பதும் கற்பனைதான். இதனை நன்மையாக ஆராய்ந்தறிக. இவ்வாறே, ஆத்மாவினிடத்துக்

𑌨𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍—‘𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑍇𑌨 𑌨 𑌵𑌿𑌰𑍋𑌧𑌃। 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌯𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃, ‘𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌮𑍍’ 𑌇𑌤𑌿 𑌚 𑌯𑌥𑌾𑌭𑍂𑌤𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇। 𑌨 𑌚 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑍍 𑌮𑍋𑌕𑍍𑌷𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍; ‘𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇𑌽𑌶𑍁𑌭𑌾𑌤𑍍’ 𑌇𑌤𑌿 𑌚𑍋𑌕𑍍𑌤𑌮𑍍। 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌾𑌕𑌰𑍍𑌮𑌣𑍀 𑌵𑌿𑌪𑌰𑍍𑌯𑌯𑍇𑌣 𑌗𑍃𑌹𑍀𑌤𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌭𑌿𑌃 𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑍍𑌯𑌯𑌗𑍍𑌰𑌹𑌣𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌭𑌗𑌵𑌤𑍋 𑌵𑌚𑌨𑌂 ‘𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿। 𑌨 𑌚𑌾𑌤𑍍𑌰 𑌕𑌰𑍍𑌮𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑌮𑌕𑌰𑍍𑌮𑌾𑌸𑍍𑌤𑌿, 𑌕𑍁𑌣𑍍𑌡𑍇 𑌬𑌦𑌰𑌾𑌣𑍀𑌵। 𑌨𑌾𑌪𑌿 𑌅𑌕𑌰𑍍𑌮𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌸𑍍𑌤𑌿, 𑌕𑌰𑍍𑌮𑌾𑌭𑌾𑌵𑌤𑍍𑌵𑌾𑌦𑌕𑌰𑍍𑌮𑌣𑌃। 𑌅𑌤𑌃 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌗𑍃𑌹𑍀𑌤𑍇 𑌏𑌵 𑌕𑌰𑍍𑌮𑌾𑌕𑌰𑍍𑌮𑌣𑍀 𑌲𑍌𑌕𑌿𑌕𑍈𑌃, 𑌯𑌥𑌾 𑌮𑍃𑌗𑌤𑍃𑌷𑍍𑌣𑌿𑌕𑌾𑌯𑌾𑌮𑍁𑌦𑌕𑌂, 𑌶𑍁𑌕𑍍𑌤𑌿𑌕𑌾𑌯𑌾𑌂 𑌵𑌾 𑌰𑌜𑌤𑌮𑍍॥

𑌨𑌨𑍁 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍍𑌮𑍈𑌵 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌨 𑌕𑍍𑌵𑌚𑌿𑌦𑍍𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌰𑌤𑌿—𑌤𑌨𑍍𑌨, 𑌨𑍌𑌸𑍍𑌥𑌸𑍍𑌯 𑌨𑌾𑌵𑌿 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌂 𑌤𑌟𑌸𑍍𑌥𑍇𑌷𑍍𑌵𑌗𑌤𑌿𑌷𑍁 𑌨𑌗𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑌤𑌿𑌕𑍂𑌲𑌗𑌤𑌿𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍, 𑌦𑍂𑌰𑍇𑌷𑍁 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾𑌽𑌸𑌂𑌨𑌿𑌕𑍃𑌷𑍍𑌟𑍇𑌷𑍁 𑌗𑌚𑍍𑌛𑌤𑍍𑌸𑍁 𑌗𑌤𑍍𑌯𑌭𑌾𑌵𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍, 𑌏𑌵𑌮𑍍

---

கர்மமும், கர்மமில்லை என்பதும் கற்பனை என்று கண்டுகொள்க.—ஆ.) ஆகவே, விரோதமில்லை. அறிவுடைமை முதலியவை (மற்றைய ஞானத்தாலல்லாமல் ஆத்மஞானமொன்றினுல்மாத்திரம்) அமையுமாதலாலும், "(கர்மஅகர்மங்களைப்பற்றித்) தெரிந்துகொள்ளவேண்டியது உண்டு" (ச-கஎ) என்றதனுலும் (பகவான்) உள்ளதை உள்ளபடி உணர்த்துதலை அருளிச்செய்கிறுர். அன்றியும், தீமையினின்று நீங்குதலும் மயக்கஉணர்வினுல் அமையாது; (ஏனெனில்,) "எதனை அறிந்து நீ தீமையினின்றும் நீங்குவாயோ" (ச - கசு) என்றும் கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால், பிராணிகள் (எல்லாம்) கர்ம அகர்மங்கள் இரண்டனையும் விபரீதமாகக் கொண்டிருக்கின்றன (என்று,) "எவன் கர்மத்திலே அகர்மத்தை" என்று தொடங்கும் பகவான் திருவாக்கானது அவர்கள் (அவ்வாறு) விபரீதமாகக் கொண்டிருத்தலை நீக்குதற்கென்க. இனி, இலந்தைக் கனிகள் ஒரு பாண்டத்தில் (இருப்பது)போல, இங்கே [உலகவ்யவஹாரத்திலாயினும், சாஸ்திரவ்யவஹாரத்திலாயினும்] அகர்மம் கர்மத்தை இடமாகவுடையதில்லை; (அவ்வாறே,) கர்மமும் அகர்மத்தை இடமாகவுடையதில்லை; அகர்மமென்பது கர்மமின்மையாதலின். ஆகவே, கர்மஅகர்மங்கள் இரண்டும் ஸாமாந்ய ஜனங்களால் கானலில் ஜலம்போலவாவது இப்பியில் வெள்ளிபோலாவது விபரீதமாகக் கிரகிக்கப்பட்டேயுள்ளன (என்பது, பகவான் கருத்தென்க).

(ஆக்ஷேபம்):—அப்படியானுல், கர்மமென்பது எல்லார்க்கும் கர்மந்தான்; ஒரு இடத்திலாயினும் (அது வேறென்றுகப்) பிறழ்வதில்லை.

(ஸமாதாநம்):—அது சரியன்று; கப்பலில் இருப்பவனுக்குக் கப்பல் செல்லுகையில் (தாம் நிலைபெயர்ந்து)செல்லுதலில்லாதவையாய்க் கரையில் நிற்கும் மரங்களினிடத்து (அவை அவனுக்கு) எதிராகச் செல்லுதல் தோற்றுதலாலும், ஸமீபத்தில்லாது தூரத்திற்செல்லுகின்றவற்றினிடத்து(அவை)செல்லுதலின்மை கண்ணுக்குத் தோற்றுதலாலுமென்க. இவ்வண்ணமே இங்கு [ஆத்மாவினிடத்து]ம் அகர்மத்திலே

[illegible] 𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌚 𑌅𑌕𑌰𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌦𑌰𑍍𑌶𑌨𑌂, 𑌯𑍇𑌨 𑌤𑌨𑍍𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑌣𑌾𑌯𑍇𑌦𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 '𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 ॥

𑌤𑌦𑍇𑌤𑌤𑍍 𑌉𑌕𑍍𑌤𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌚𑌨𑌮𑌪𑌿 𑌅𑌸𑌕𑍃𑌤𑍍 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌦𑌰𑍍𑌶𑌨𑌭𑌾𑌵𑌿𑌤𑌤𑌯𑌾 𑌮𑍋𑌮𑍁𑌹𑍍𑌯𑌮𑌾𑌨𑍋 𑌲𑍋𑌕𑌃 𑌶𑍍𑌰𑍁𑌤𑌮𑌪𑌿 𑌅𑌸𑌕𑍃𑌤𑍍 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌵𑌿𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯𑌵𑌿𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌮𑍍 𑌅𑌵𑌤𑌾𑌰𑍍𑌯𑌾𑌵𑌤𑌾𑌰𑍍𑌯 𑌚𑍋𑌦𑌯𑌤𑌿 𑌇𑌤𑌿 𑌪𑍁𑌨𑌃𑌪𑍁𑌨𑌃 𑌉𑌤𑍍𑌤𑌰𑌮𑍍 𑌆𑌹 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍, 𑌦𑍁𑌰𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌆𑌲𑌕𑍍𑌷𑍍𑌯 𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌃 ॥

'𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋𑌽𑌯𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑍍' '𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌮𑍍𑌰𑌿𑌯𑌤𑍇' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌭𑌾𑌵𑌃 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌨𑍍𑌯𑌾𑌯𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌃 𑌉𑌕𑍍𑌤𑌃 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑌾𑌣𑌶𑍍𑌚 । 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌭𑌾𑌵𑍇 𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌨𑌿𑌰𑍂𑌢𑌮𑍍; 𑌯𑌤𑌃—"𑌕𑌿𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌿𑌮𑌕𑌰𑍍𑌮𑍇𑌤𑌿 𑌕𑌵𑌯𑍋𑌽𑌪𑍍𑌯𑌤𑍍𑌰 𑌮𑍋𑌹𑌿𑌤𑌾𑌃" । 𑌦𑍇𑌹𑌾𑌦𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌅𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑍍𑌯 "𑌅𑌹𑌂 𑌕𑌰𑍍𑌤𑌾, 𑌮𑌮𑍈𑌤𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮, 𑌮𑌯𑌾 𑌅𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌫𑌲𑌂 𑌭𑍋𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍" 𑌇𑌤𑌿 𑌚, 𑌤𑌥𑌾 "𑌅𑌹𑌂 𑌤𑍂𑌷𑍍𑌣𑍀𑌂 𑌭𑌵𑌾𑌮𑌿, 𑌯𑍇𑌨 𑌅𑌹𑌂 𑌨𑌿𑌰𑌾𑌯𑌾𑌸𑌃 𑌅𑌕𑌰𑍍𑌮𑌾 𑌸𑍁𑌖𑍀 𑌸𑍍𑌯𑌾𑌮𑍍" 𑌇𑌤𑌿 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑌣𑌾𑌶𑍍𑌰𑌯𑌂 𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑍋𑌪𑌰𑌮𑌂 𑌤𑌤𑍍𑌕𑍃𑌤𑌂 𑌚 𑌸𑍁𑌖𑌿𑌤𑍍𑌵𑌮𑍍

---

கர்மம் தோற்றுதலும், கர்மத்திலே அகர்மம் தோற்றுதலும் விபரீதமான தோற்றமாதலால், (பகவான்) அதனை நீக்கும்பொருட்டு "எவன் கர்மத்திலே அகர்மத்தைக் காண்கிறானே" என்று தொடங்கும் (திருவாக்கை) அருளிச்செய்யலானார்.

அத்தகைய இ(ச்சங்கையான)து அடிக்கடி மறுமொழி கூறப்பெற்றதாயினும், மிக்க விபரீதமான உணர்வினால் (பொய்ப்பொருளின்) வாஸனையே பதியப் பெற்றுள்ளமையால் அடுத்தடுத்து மயக்கமுறும் உலகமானது, ஒருதடவைக்குப் பலதடவை கேட்கப்பட்டிருப்பதுமான உண்மையை மறந்து மறந்து, (ஏதோ ஒரு) பொய்ம்மையான விஷயத்திற் புகுந்து புகுந்து (ஆத்மாவினிடத்தும் கர்மம் உண்டென்று) ஆக்ஷேபிக்கின்றது என, மெய்ப்பொருளை அறிதல் அருமை என்பதையும் நோக்கிப் பகவான் மீண்டும் மீண்டும் விடை அருளிச்செய்கிறார்.

ஆத்மாவிடத்துக் கர்மமில்லை என்பது, சுருதியினும் ஸ்மிருதியினும் யுக்தியினாலும் நன்கு தெரிந்திருப்பது; "இது புலப்படாதது, இது நினைக்கமுடியாதது" (உ - உ௫), "இது பிறப்பதில்லை, இறப்பதில்லை" (உ -உ௦) என்பன முதலாகக் கூறப்பட்டுள்ளது; (௫ - ௧௩ முதலாக மேலே) கூறப்படுவது. அந்த ஆத்மாவினிடத்து, கர்மமின்மையாகிய அகர்மத்தில் கர்மமாகிய விபரீதத்தை[விரோதத்தை]க் காணுதலானது (பிராணிகளுடைய மனத்தினுள்) அளவுகடந்து வேரூன்றியிருப்பதாம். ஏனெனில், "எது கர்மம்? எது அகர்மம்? என்ற இவ்விஷயத்தில் ஞானிகளும் மயங்கியுள்ளார்" (௪ -௧௬). "நான் செய்பவன், இது என்னுடைய தொழில், இத்தொழிலின் பயனை நான் அநுபவிக்கவேண்டும்" என உடம்பு முதலியவற்றைச் சார்ந்துநிற்கும் கர்மத்தை ஆத்மாவினிடத்து ஏற்றி, அவ்வண்ணமே, "நான் தொல்லையில்லாது, தொழிலில்லாது ஸுகியாயிருக்குமாறு மௌனமாயிருக்கின்றேன்" என, தேகம் மனம் இந்திரியங்களென்றவற்றைச் சார்ந்துநிற்கும் (ஒய்வையும், அதாவது,) தொழில் ஒய்ந்துஇருத்தலையும், அதனால் உண்டான ஸௌக்கியத்தையும் [ஸுகமாயிருத்தலையும்]

𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌅𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑍍𑌯 "𑌨 𑌕𑌰𑍋𑌮𑌿 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍, 𑌤𑍂𑌷𑍍𑌣𑍀𑌂 𑌸𑍁𑌖𑌮𑌾𑌸𑍇" 𑌇𑌤𑌿 𑌅𑌭𑌿𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 𑌲𑍋𑌕𑌃 । 𑌤𑌤𑍍𑌰 𑌇𑌦𑌂 𑌲𑍋𑌕𑌸𑍍𑌯 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌪𑌨𑌯𑌾𑌯 𑌆𑌹 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍—'𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 ॥

𑌅𑌤𑍍𑌰 𑌚 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍍𑌮𑍈𑌵 𑌸𑌤𑍍 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑌣𑌾𑌶𑍍𑌰𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮𑌰𑌹𑌿𑌤𑍇 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑍇 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑌧𑍍𑌯𑌸𑍍𑌤𑌮𑍍, 𑌯𑌤𑌃 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑍋𑌽𑌪𑌿 "𑌅𑌹𑌂 𑌕𑌰𑍋𑌮𑌿" 𑌇𑌤𑌿 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌤𑌃 𑌆𑌤𑍍𑌮𑌸𑌮𑌵𑍇𑌤𑌤𑌯𑌾 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌨𑌦𑍀𑌕𑍂𑌲𑌸𑍍𑌥𑍇𑌷𑍍𑌵𑌿𑌵 𑌵𑍃𑌕𑍍𑌷𑍇𑌷𑍁 𑌗𑌤𑌿𑌪𑍍𑌰𑌾𑌤𑌿𑌲𑍋𑌮𑍍𑌯𑍇𑌨 𑌅𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍍𑌮𑌾𑌭𑌾𑌵𑌂 𑌯𑌥𑌾𑌭𑍂𑌤𑌂 𑌗𑌤𑍍𑌯𑌭𑌾𑌵𑌮𑌿𑌵 𑌵𑍃𑌕𑍍𑌷𑍇𑌷𑍁 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍, 𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌚 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑌣𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑍋𑌪𑌰𑌮𑍇 𑌕𑌰𑍍𑌮𑌵𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌅𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑌿𑌤𑍇—"𑌤𑍂𑌷𑍍𑌣𑍀𑌂 𑌅𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌸𑍁𑌖𑌮𑍍 𑌆𑌸𑍇" 𑌇𑌤𑍍𑌯𑌹𑌂𑌕𑌾𑌰𑌾𑌭𑌿𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌾𑌤𑍍—𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌚 𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍, 𑌯𑌃 𑌏𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌜𑍍𑌞𑌃 𑌸 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌨𑍍 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌃 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑍇𑌷𑍁 𑌸 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌯𑍋𑌗𑍀 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌚𑍍𑌚, 𑌸𑌃 𑌅𑌶𑍁𑌭𑌾𑌤𑍍 𑌮𑍋𑌕𑍍𑌷𑌿𑌤𑌃 𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥

---

ஆத்மாவிடத்து ஏற்றி "நான் ஒன்றுஞ்செய்வதில்லை, மௌநமாக ஸுகமாய் இருக்கின்றேன்" என்று உலகம் அபிமானித்துநிற்கின்றது [நான் என்னும் அஹங்கார முனைப்போடு அவ்வாறு எண்ணிக்கொண்டிருக்கின்றது]. அது (அவ்வாறு) இருப்பதனால், ஜனங்களுடைய மயக்கஉணர்வைப் போக்குதற்காகப் பகவான் "எவன் கர்மத்திலே அகர்மத்தைக் காண்கிறானோ" என்று தொடங்குகின்ற இதனைக் கூறலானார்.

இனி, இங்கு [வ்யவஹாரநிலையிலே] தேகம் மனம் இந்திரியங்கள் என்றவற்றைச் சார்ந்துநிற்கும் கர்மம் கர்மமாகவே இருந்துகொண்டு, கர்மமில்லாத நிர்விகாரியான ஆத்மாவினிடத்து எல்லாராலும் ஏற்றப்பட்டிருக்கின்றது; ஏனெனில், அறிவுள்ளவனுங் கூட "நான் செய்கிறேன்" எனக்கொள்கிறான். ஆகவே (இச்சுலோகத்தின் கருத்து வருமாறு):—(தெப்பத்திலிருப்பவன்) எதிரே செல்லுதலால், (விரைந்து நடப்பன போலத் தோற்றுகின்றனவாய்) நதிக்கரையில் நிற்கும் மரங்களினிடத்து நடத்தலின்மையை(க் காண்பது)போல, எவன், ஆத்மாவொடு ஸமவேதமாயிருப்பதாக ஸகல ஜனங்களும் (விபரீதமாய்த்) தெரிந்துள்ள கர்மத்திலே கர்மமின்மையை உள்ளபடி காண்கிறானோ, (அவன் அறிவுள்ளவன்). [ஸமவேதமாயிருப்பது = (நூலொடு வெண்மைநிறம்போல) ஒற்றித்திருப்பது.] தேகம் மனம் இந்திரியங்கள் என்றவற்றினுடைய தொழிலின் ஓய்வாகிய அகர்மமானது. "நான் மௌனமாய் ஒன்றுஞ்செய்யாமல் ஸுகமாய் இருக்கிறேன்" என்னும் அஹங்காரமுனைப்பு(ஆகிய தொழிலு)க்குக் காரணமாவதால், ஆத்மாவினிடத்துக் கர்மம்போல(ப் பொய்ம்மையாக) ஏற்றப்பட்ட அகர்மத்திலும் எவன் கர்மத்தை [நான் ஒன்றுஞ்செய்யாமல் ஸுகமாய் இருக்கின்றேன் என்று அகங்கரித்தல் போன்ற தொழிலை]க் காண்கின்றானோ,—(அதாவது,) எவன் இவ்வாறாகக் கர்மஅகர்மங்களின் வேறுபாட்டை பகுத்தறிபவனோ, அவன் மனிதரில் அறிவுடையவன், அவன் யோகி, ஸகல கர்மங்களையும் செய்தவன்: அவன் தீமையினின்றும் விடுபட்டவனாய்ச் செய்யவேண்டியதைச் செய்திருப்பவனாய் [முக்தி கைகூடப்பெற்றவனாய்] இருக்கிறான் என்பது (தேர்ந்த) பொருள்.

𑌅𑌯𑌂 𑌶𑍍𑌲𑍋𑌕𑌃 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌃 𑌕𑍈𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 । 𑌕𑌥𑌮𑍍? 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌿𑌲 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑍍 𑌈𑌶𑍍𑌵𑌰𑌾𑌰𑍍𑌥𑍇 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍀𑌯𑌮𑌾𑌨𑌾𑌨𑌾𑌂 𑌫𑌲𑌾𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 𑌅𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌤𑌾𑌨𑌿 𑌉𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌗𑍌𑌣𑍍𑌯𑌾 𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌾 । 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌚 𑌅𑌕𑌰𑌣𑌮𑍍 𑌅𑌕𑌰𑍍𑌮; 𑌤𑌚𑍍𑌚 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌵𑌾𑌯𑌫𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌗𑍌𑌣𑍍𑌯𑍈𑌵 𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌾 । 𑌤𑌤𑍍𑌰 𑌨𑌿𑌤𑍍𑌯𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌅𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍 𑌫𑌲𑌾𑌭𑌾𑌵𑌾𑌤𑍍; 𑌯𑌥𑌾 𑌧𑍇𑌨𑍁𑌰𑌪𑌿 𑌗𑍌𑌃 𑌅𑌗𑍌𑌃 𑌇𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌕𑍍𑌷𑍀𑌰𑌾𑌖𑍍𑌯𑌂 𑌫𑌲𑌂 𑌨 𑌪𑍍𑌰𑌯𑌚𑍍𑌛𑌤𑌿 𑌇𑌤𑌿, 𑌤𑌦𑍍𑌵𑌤𑍍 । 𑌤𑌥𑌾 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌕𑌰𑌣𑍇 𑌤𑍁 𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌚 𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍 𑌨𑌰𑌕𑌾𑌦𑌿𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌵𑌾𑌯𑌫𑌲𑌂 𑌪𑍍𑌰𑌯𑌚𑍍𑌛𑌤𑌿 𑌇𑌤𑌿 ॥

𑌨 𑌏𑌤𑌤𑍍 𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌨𑌮𑍍 । 𑌏𑌵𑌂𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 𑌅𑌶𑍁𑌭𑌾𑌤𑍍 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 '𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇𑌽𑌶𑍁𑌭𑌾𑌤𑍍' 𑌇𑌤𑌿 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌵𑌚𑌨𑌂 𑌬𑌾𑌧𑍍𑌯𑍇𑌤 । 𑌕𑌥𑌮𑍍? 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌤𑍍 𑌅𑌶𑍁𑌭𑌾𑌤𑍍 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌨𑌾𑌮 𑌮𑍋𑌕𑍍𑌷𑌣𑌮𑍍, 𑌨 𑌤𑍁 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌫𑌲𑌾𑌭𑌾𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 । 𑌨 𑌹𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌫𑌲𑌾𑌭𑌾𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 𑌅𑌶𑍁𑌭𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌤𑍍𑌵𑍇𑌨 𑌚𑍋𑌦𑌿𑌤𑌮𑍍, 𑌨𑌿𑌤𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌾 । 𑌨 𑌚 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌏𑌵𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌏𑌤𑍇𑌨 𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌨 𑌹𑌿 𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 "𑌕𑌰𑍍𑌮" 𑌇𑌤𑌿 𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑌯𑌾 𑌇𑌹 𑌚𑍋𑌦𑍍𑌯𑌤𑍇, 𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑍍𑌯 𑌤𑍁 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌤𑍍 ।

---

சிலர் இச்சுலோகத்தை வேறுவகையாக உரைத்தனர்.—எப்படி ?—ஈச்வரனுக்கென்று அநுஷ்டிக்கப்படும் நித்யகர்மங்களுக்குப் பயன் இல்லாமையால், அவைகள் உபசாரவழக்கினல் அகர்மங்கள் எனப்படுகின்றன. இனி, அவற்றைச் செய்யாதிருத்தல், அகர்மமென்பது. அது குற்றத்தை விளைப்பதனுல், உபசாரவழக்கினுலேயே கர்மம் எனப்படுகின்றது. பசு 𑌗𑍌𑌃 [பசு]வாயிருந்தாலும், பால் என்கிற பயனைக் கொடுப்பதில்லை என (அது) 𑌅𑌗𑍌𑌃 [பசு அன்று] என்று கூறப்படுமாறுபோல, எவன் அந்த நித்யகர்மத்திலே பயனில்லாமையினுல் அகர்மத்தைக் காண்கிறுனே, அவ்வாறே எவன் (அகர்மமானது)நரகம் முதலான கெடுதியாகிய பயனைத் தருகின்றதென, நித்யகர்மத்தைச் செய்யாமையாகிய (அந்த) அகர்மத்திலும் கர்மத்தைக் காண்கிறுனே, (அவன் அறிவுடையவன்..... ..... .....).

இந்த உரை சரியன்று. இத்தகைய அறிவினுல் தீமையினின்றும் நீங்குதல் அமையாதாதலின், “நீ எதனை அறிந்து கெடுதியினின்றும் விடப்படுவாயோ” (௪-௧௬) எனப் பகவான் அருளிச்செய்த திருவாக்கு மாறுபடநிற்பதாகும் [வீணுகும்].—எப்படி ?—நித்யகர்மங்களை அநுஷ்டித்தலால் கெடுதியினின்று நீங்குதலென்பது இருக்கட்டும் [வாதத்திற்காக அதனை ஒத்துக்கொள்வோம்]. என்ருலும், அவற்றிற்குப் பயனில்லையென்னும் அறிவினுல் (அவ்வாறு நீங்குதல்) அமையாது. தீமையினின்றும் நீங்குதல், நித்யகர்மங்களுக்குப் பயனில்லையென்னும் அறிவின் பயனுகவாவது, நித்யகர்மங்களுடைய அறிவின் பயனுகவாவது (சுருதியில்) விதிக்கப்படவில்லையன்றே. பின்னும்,(அது)பகவானுலேயே இங்கு க்கூறப்படவில்லை.அகர்மத்தில் கர்மத்தைக் காண்பதற்கு, இதனுல் மறுமொழி கூறப்பட்டது.அகர்மத்தினிடத்திலே கர்மமென்று காண்பது அவச்யமென இங்கு விதிக்கப்படுவதில்லை [அகர்மத்தைக் கர்மமாகக் கொள்ளவேண்டுமென்று இச்சுலோகத்தில் விதிக்கப்படவில்லை]. மற்று, நித்ய

𑌨 𑌚 "𑌅𑌕𑌰𑌣𑌾𑌤𑍍 𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌵𑌾𑌯𑍋 𑌭𑌵𑌤𑌿" 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌫𑌲𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌨𑌾𑌪𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌕𑌰𑌣𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌚𑍋𑌦𑌿𑌤𑌮𑍍 । 𑌨𑌾𑌪𑌿 "𑌕𑌰𑍍𑌮 𑌅𑌕𑌰𑍍𑌮" 𑌇𑌤𑌿 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 𑌅𑌶𑍁𑌭𑌾𑌤𑍍 𑌮𑍋𑌕𑍍𑌷𑌣𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌯𑍁𑌕𑍍𑌤𑌤𑌾 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌿 𑌚 𑌫𑌲𑌮𑍍 𑌉𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇, 𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌰𑍍𑌵𑌾 । 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍇𑌵 𑌹𑌿 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 𑌅𑌶𑍁𑌭𑌰𑍂𑌪𑌮𑍍 । 𑌕𑍁𑌤𑌃 𑌅𑌨𑍍𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌅𑌶𑍁𑌭𑌾𑌤𑍍 𑌮𑍋𑌕𑍍𑌷𑌣𑌮𑍍? 𑌨 𑌹𑌿 𑌤𑌮𑌃 𑌤𑌮𑌸𑍋 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌕𑌂 𑌭𑌵𑌤𑌿 ॥

𑌨𑌨𑍁 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌯𑌤𑍍 𑌅𑌕𑌰𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌵𑌾 𑌕𑌰𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌨 𑌤𑌤𑍍 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍; 𑌕𑌿𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿? 𑌗𑍌𑌣𑌂 𑌫𑌲𑌭𑌾𑌵𑌾𑌭𑌾𑌵𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌮𑍍—𑌨, 𑌕𑌰𑍍𑌮𑌾𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑌪𑌿 𑌗𑍌𑌣𑌾𑌤𑍍 𑌫𑌲𑌸𑍍𑌯 𑌅𑌶𑍍𑌰𑌵𑌣𑌾𑌤𑍍 । 𑌨𑌾𑌪𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑌹𑌾𑌨𑍍𑌯𑌶𑍍𑌰𑍁𑌤𑌕𑌲𑍍𑌪𑌨𑌾𑌯𑌾𑌂 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 𑌵𑌿𑌶𑍇𑌷 𑌉𑌪𑌲𑌭𑍍𑌯𑌤𑍇 । 𑌸𑍍𑌵𑌶𑌬𑍍𑌦𑍇𑌨𑌾𑌪𑌿 𑌶𑌕𑍍𑌯𑌂 𑌵𑌕𑍍𑌤𑍁𑌂 "𑌨𑌿𑌤𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌫𑌲𑌂 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿, 𑌅𑌕𑌰𑌣𑌾𑌤𑍍 𑌚 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌨𑌰𑌕𑌪𑌾𑌤𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍" 𑌇𑌤𑌿; 𑌤𑌤𑍍𑌰 𑌵𑍍𑌯𑌾𑌜𑍇𑌨 𑌪𑌰𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌨𑌰𑍂𑌪𑍇𑌣 '𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾

---

கர்மத்தைச் செய்யவேண்டுமென்பதுதான் விதிக்கப்படுகின்றது). மேலும், "நித்யகர்மத்தைச்செய்யாமையினல் குற்றம் வருகின்றது" என்னும்அறிவினல் ஒரு பயனும் வாராது. அன்றியும், (பகவான்என்ற புத்தியை வைக்கப்பெறும் விக்கிரகம் முதலியனபோல) "நித்யகர்மத்தைச் செய்யாமையானது,(கர்மமென்ற)எண்ணத்தை வைக்கப்பெறும் பொருள்" எனவும் விதிக்கப்படவில்லை. மற்றும், கர்மத்தை அகர்மமென்று (அறியும்)பொய்யறிவினல் தீமையினின்று நீங்குதலும், அறிவுடைமையும், நிஷ்டைகூடிநிற்றலும், கர்மங்களனைத்தையும் அநுஷ்டித்திருப்பதும், இன்னும் இவை போன்றதும் பயனுகவாவது,புகழ்ச்சியாகவாவது அமையாது.பொய்யறிவுஎன்பதே நேரான தீமைவடிவந்தான்; (அது ஒன்றை)மற்ருெரு தீமையினின்றும் நீக்குதல் எது? இருள் இருளை நீக்குவதாகாதன்றே.

(ஆக்ஷேபம்) :—அப்படியானல், கர்மத்தை அகர்மமாகக் காண்பதும் அகர்மத்தைக் கர்மமாகக் காண்பதும் எதுவோ, அது [அவ்வறிவு] பொய்யறிவு அன்று. அப்பொழுதென்னவெனில்,—(அவ்வறிவு) - "(கர்மத்தை அகர்மமாகக் காண்பதிலே) பயன் உண்டு, (அகர்மத்தைக் கர்மமாகக் காண்பதிலே) பயன் இல்லை" என்பதனல் உண்டாகும் கௌணமான அறிவு. (கௌணம் - உபசாரம் : அதாவது, லக்ஷணையால் வேருெருபொருளை அறிவிப்பது. "லக்ஷணையாவது - பெயராக வினையாக நிற்கும் சொற்கள் தம்தம்பொருளை உணர்த்தாது.......தாத்பர்யபொருளை.....அறிவித்தல்." இவன் மாடு என்றவிடத்து,மாடென்னும்சொல் தன்பொருளைஉணர்த்தாது,மடையன் என்னும் தாத்பர்யத்தை அறிவித்துநின்றது காண்க).

(ஸமாதாநம்) :—அப்படியன்று; கர்மஅகர்மங்களைப்பற்றிய கௌணமான அறிவினுலும் பயன் உண்டு எனச் சுருதியிலே கூறப்படாமையின். அன்றியும், (பிரகிருதத்தில்)கூறியதை விட்டிட்டு, கூருததைக் கற்பித்துக்கொள்வதனல் ஒருவிசேஷமும் காணப்படவில்லை."நித்யகர்மங்களுக்குப் பயனில்லை,ஆனல் அவற்றைச் செய்யாமையினல் நரகத்துவீழ்தலாகும்"என நேராகவே சொல்லக்கூடியதாயிருக்க,அப்பொழுது பிறர்க்கு மயக்கமாயிருக்கும் "எவன் கர்மத்தில் அகர்மத்தைக் காண்கிருனே"

[illegible]

---

என்று தொடங்கும் கபட(வாக்கியத்தால்) ஆவதென்ன? அங்கு இவ்வாறு உரைப்பவரால் "பகவானுடைய திருவாக்கானது உலகம் மயங்குதற்பொருட்டாம்" எனத் தெளிவாகக் கற்பனைசெய்யப்பட்டதாகும். மேலும், இந்த(நித்யகர்மாநுஷ்டான) விஷயம் கபடரூபமான வாக்கியத்தால் பாதுகாக்கத்தக்கதில்லை; (அது வேறு)வேறு சொற்களால் மீண்டும் மீண்டும் சொல்லப்படும்பொழுது, எளிதில் அறியக்கூடியதாகும் என்று இவ்வாறு கூறவும்படாது. ஏனெனில், "கர்மத்திலேதான் அதிகாரம்" (உ - சஎ) என்னுமிடத்து மிகத்தெளிவாகக் கூறப்பட்ட அவ்விஷயத்தை மறுபடியும் கூறவேண்டியதில்லை. எங்கும்[சாஸ்திரத்திலும், உலகத்திலும்]புகழப்பெற்றதும் செய்தற்குமுரியதாயு மிருப்பதையே (ஒருவன்) தெரிந்துகொள்ளவேண்டும். வீணைதைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்று கூறப்படவில்லை. மேலும், பொய்யறிவானது அறிதற்கு உரியதில்லை. (அவ்வாறே,) அதனால் எதிரே நிறுத்தப்பட்ட போலியான பொருளும் (அறிதற்கு உரியதில்லை) [அப்பொய்யறிவுக்கு விஷயமான பொருள், தோற்றமாதலால் அதுவும் அறிதற்குயோக்யமானதில்லை.] மற்றும், நித்யகர்மங்களைச் செய்யாமையாகிய இன்மையினின்றும் குற்றமாகிய உண்மை உண்டாகமாட்டாது; "பொய்ம்மைக்கு உண்மை இல்லை "(உ - கசு)எனவும், " இன்மையினின்றும் உண்மை எப்படிஉண்டாகும்? "(சா - சு - உ - உ)எனவும் இன்மையினின்றுஉண்மைஉண்டாதலை மறுத்தலின். இன்மையினின்று உண்மை உண்டாதலைக் கூறுபவரால், " இன்மையே உண்மையாகும், உண்மையும் இன்மையாகும் " எனக் கூறப்பட்டதாகும். அதுவோ நேரன்று; ஸகலநியாயங்களுக்கும் முரண்படுதலின். இன்னும், சாஸ்திரமானது பயனில்லாத கர்மத்தை விதிக்காது; (இது)துன்பவடிவமாதலானும், துன்பத்தைத் தெரிந்துவேணுமென்று செய்துகொள்ளுதல் அமையாதாதலானு மென்க. இனி, அதனைச்செய்யாதவிஷயத்தில் நரகத்துவீழ்தலை ஒத்துக்கொள்வதனால், செய்தாலும் செய்யாவிட்டாலும் இருவிதத்திலும் கெடுதிக்காகவே யுள்ள சாஸ்திரமானது

𑌯𑌥𑌾 𑌚𑌾𑌪𑌿 𑌕𑌰𑍍𑌮𑌣𑍇 𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑍇 𑌚 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌨𑌿𑌷𑍍𑌫𑌲𑌂 𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌸𑍍𑌵𑌾𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌮𑌵𑌿𑌰𑍋𑌧𑌶𑍍𑌚 "𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌨𑌿𑌷𑍍𑌫𑌲𑌂 𑌕𑌰𑍍𑌮" 𑌇𑌤𑌿 𑌅𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌮𑍍𑌯 "𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯" 𑌇𑌤𑌿 𑌬𑍍𑌰𑍁𑌵𑌤𑌃 ॥

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌯𑌥𑌾𑌶𑍍𑌰𑍁𑌤 𑌏𑌵𑌾𑌰𑍍𑌥𑌃 '𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍇𑌃 । 𑌤𑌥𑌾 𑌚 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌃 𑌅𑌸𑍍𑌮𑌾𑌭𑌿𑌃 𑌶𑍍𑌲𑍋𑌕𑌃 ॥ ௧௮ ॥

𑌤𑌦𑍇𑌤𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌾𑌦𑌿𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌸𑍍𑌤𑍂𑌯𑌤𑍇 —

௧௯. 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌃 𑌕𑌾𑌮𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌃 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌦𑌗𑍍𑌧𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌂 𑌤𑌮𑌾𑌹𑍁𑌃 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌂 𑌬𑍁𑌧𑌾𑌃 ॥

𑌯𑌸𑍍𑌯 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌯𑌾𑌵𑌨𑍍𑌤𑌃 𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿, 𑌸𑌮𑌾𑌰𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌃, 𑌕𑌾𑌮𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌃 𑌕𑌾𑌮𑍈𑌃 𑌤𑌤𑍍𑌕𑌾𑌰𑌣𑍈𑌶𑍍𑌚 𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑍈𑌃 𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌃 𑌮𑍁𑌧𑍈𑌵 𑌚𑍇𑌷𑍍𑌟𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌾 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍀𑌯𑌨𑍍𑌤𑍇; 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌨 𑌚𑍇𑌤𑍍 𑌲𑍋𑌕𑌸𑌙𑍍𑌗𑍍𑌰𑌹𑌾𑌰𑍍𑌥𑌂, 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌨 𑌚𑍇𑌤𑍍 𑌜𑍀𑌵𑌨𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌂 । 𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌦𑌗𑍍𑌧𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌦𑌾𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌦𑌿𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑌦𑍇𑌵 𑌅𑌗𑍍𑌨𑌿𑌃 𑌤𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌨𑌾 𑌦𑌗𑍍𑌧𑌾𑌨𑌿 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌯𑌸𑍍𑌯 𑌤𑌮𑌾𑌹𑍁𑌃 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌃 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌂 𑌬𑍁𑌧𑌾𑌃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑌃 ॥ ௧௯ ॥

---

வீண் என்று கொள்ளப்பட்டதாகும். அன்றியும், "நித்யகர்மத்திற்குப் பயனில்லை" எனக்கொண்டு, பின்னே "(அது) முக்திக்குப் பயன்படுவதாம்" என்பார்க்குத் தம் கொள்கைக்கு விரோதமு முண்டாகும்.

ஆதலால், " கர்மத்தில் அகர்மத்தை " என்றுதொடங்கும் வாக்கியத்திற்கு உள்ளபடியான சொல்அர்த்தமேதான், (லக்ஷணையால் வரும் அர்த்தமன்று). அவ்வாறே நாம்(இச்)சுலோகத்தை உரைத்திருக்கின்றோம். (௧௮)

பண்டிதனென்பவன் எவன்?

ஆதலால், இதனை = கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் காண்பதனைப் (பகவான்) புகழ்ந்து கூறுகிறார் :

௧௯. எவனுடைய கர்மங்களெல்லாம், ஆசையும் அபிமானமும் அற்றனவோ, அவனை (அதாவது) ஞானமாகிய தீயினால் (ஸகல) கர்மமும் எரிக்கப்பெற்றவனை ஞானிகள் " பண்டிதன் " என்கிறார்கள்.

கீழ்க்கூறிய(உண்மையைக்)காண்பவனால் (தான்) செய்யுங் கர்மங்களெல்லாம், ஆசைகளும் அவற்றிற்குக் காரணமான அபிமானங்களும்அற்ற வெறுஞ்செய்கைகளாகச் சும்மா அநுஷ்டிக்கப்படுகின்றன. (அவன் உலகவாழ்க்கையை) மேற்கொண்டவனாயின், உலகத்தை நல்வழிப்படுத்துதற்காக (அக்கர்மங்களைச் செய்கிறான்; அவன் அவ்வுலகவாழ்க்கையினின்றும்) ஒழிந்தவனாயின், ஜீவித்தற்குமாத்திரம் (அவற்றைச் செய்கிறான்). எவனுடைய நல்வினை தீவினைகள் (எல்லாம்), கர்மத்தில் அகர்மத்தையும் அகர்மத்தில் கர்மத்தையும் காண்பதான ஞானமென்னும் தீயினால் எரிக்கப்பட்டுள்ளனவோ, அவனைஞானிகளான ப்ரஹ்மவித்துக்கள் [ப்ரஹ்மத்தை அறிந்தவர்கள்] உண்மையான பண்டிதன் என்கிறார்கள். (௧௯)

यस्तु अकर्मादिदर्शी सोऽकर्मादिदर्शनादेव निष्कर्मा संन्यासी जीवनमात्रार्थचेष्टः सन् कर्मणि न प्रवर्तते यद्यपि प्राक् विवेकतः प्रवृत्तः । यस्तु प्रारब्धकर्मा सन् उत्तरकाले उत्पन्नात्मसम्यग्दर्शनः स्यात् स कर्मणि प्रयोजनमपश्यन् ससाधनं कर्म परित्यजत्येव । स कुतश्चिन्निमित्तात् कर्मपरित्यागासंभवे सति कर्मणि तत्फले च सङ्गरहिततया स्वप्रयोजनाभावात् लोकसंग्रहार्थं पूर्ववत् कर्मणि प्रवृत्तोऽपि नैव किंचित्करोति, ज्ञानाग्निदग्धकर्मत्वात्। तदीयं कर्म अकर्मैव संपद्यत इत्येतमर्थं दर्शयिष्यन्नाह—

௨௰. त्यक्त्वा कर्मफलासङ्गं नित्यतृप्तो निराश्रयः ।
कर्मण्यभिप्रवृत्तोऽपि नैव किंचित्करोति सः ॥

त्यक्त्वा कर्मस्वभिमानं फलासङ्गं च यथोक्तेन ज्ञानेन नित्यतृप्तः निराकाङ्क्षो विषयेषु इत्यर्थः । निराश्रयः आश्रयरहितः, आश्रयो नाम यदाश्रित्य पुरुषार्थं सिसाधयिषति, दृष्टादृष्टेष्टफलसाधनाश्रयरहित इत्यर्थः । तेन एवंभूतेन स्वप्रयोजना-

---

உலகத்திற்கு நல்லொழுக்கத்தை நடத்திக்காட்டும் ஞானியின் ஒழுக்கம்.

இனி, கர்மத்தில் அகர்மத்தையும் அகர்மத்தில் கர்மத்தையும் காண்பவன் எவனோ, அவன் (ஆத்மா அநாத்மாக்களைப்) பகுத்தறிதற்குமுன் (கர்மத்தை) மேற்கொண்டவனாயினும்,(அவற்றைப் பகுத்தறிந்தபின்)கர்மம்முதலானவற்றிலே அகர்மம் முதலானவற்றைக் காண்பதனாலேயே கர்மம் நீங்கியவனாய், துறவியாய், ஜீவித்தற்குமாத்திரம்வேண்டிய செய்கையை யுடையவனாய் (இருப்பதனால்) கர்மத்தை மேற்கொள்வதில்லை. ஆனால், எவன் கர்மத்தைச் செய்துவருகையிலே, பின்பு, ஆத்மாவை உள்ளபடி உணரும் அறிவுண்டாகப்பெற்ற (ஞானியா)வனோ[ஒருவன் கர்மத்தைச் செய்துவருகையிலே, அவனுக்குச் சீக்கிரமாகவாவது தாமதமாகவாவது ஆத்மஞானம் உண்டாகலாமாதலின்,அப்பொழுது அவ்வாறு ஞானம் உதிக்கப்பெற்றவன் எவனோ], அவன் எக்கர்மத்திலும் பயனைக் காணாதவனாய், கர்மத்தையும்(அதற்கான)கருவிகளையும் துறந்தேவிடுகிறான். அவன் ஏதோ ஒருகாரணத்தால் கர்மத்தைத் துறக்கக்கூடாமலிருக்கும்போது, கர்மத்திலும் அதன் பயனிலும் பற்றில்லாமையினால் தனக்கு ஒருபயனும் இல்லையாகவே, உலகத்தை நல்வழிப்படுத்தும்பொருட்டு முன்போலவே கர்மத்தை மேற்கொண்டிருந்தாலும், (அவன்) ஒன்றுஞ் செய்கிறானே இல்லை; ஞானமென்னும் தீயினால் கர்மம் (எல்லாம்) எரிக்கப்பட்டமையின், அவனுடைய கர்மமானது அகர்மமாகவே ஆகின்றது. என்ற இவ்விஷயத்தை உணர்த்தும்பொருட்டு(ப் பகவான்) கூறுகிறார்:

௨௰. கர்மத்தின் பயனிலே பற்றை விட்டு, எப்பொழுதும் திருப்தியுடையவனாய் ஆச்ரயமின்றி நிற்கின்றவன் கர்மத்தை மேற்கொண்டிருந்தாலும், அவன் ஒன்றுஞ் செய்கின்றானே இல்லை. [ஆச்ரயம் - ஒருபொருளினுடைய அபேக்ஷை.]

(ஞானியானவன்) மேற்கூறிய ஞானத்தால் கர்மங்களிலே அபிமானத்தையும், பயனிலே பற்றையும் விட்டு எப்பொழுதும் திருப்தியுள்ளவன், விஷயங்களிலே விருப்பமற்றவன் என்பது பொருள். (ஒருவன்)எதனைச் சார்ந்துநின்று தனக்குவேண்டியதைச் சாதித்துக்கொள்ளக் கருதுகின்றானோ, அது - ஆச்ரயம். (அஃதில்லாதவன்), ஆச்ரயமில்லாதவன், இம்மைமறுமைப்பயன்களுக்கான ஸாதநங்களை ஆச்ரயிக்காதவன்[அவற்றைத் தேடாதவன்] என்றபடி. இவ்வாறுள்ள அ(ந்த ஞானியான)வன்

பாவாத் ஸஸாதநம் கர்ம த்யக்தவ்யமேவ இதி ப்ராப்தே, தத: நிர்கமாஸம்பவாத் லோகஸங்க்ரஹசிகீர்ஷயா ஶிஷ்டவிகர்ஹணாபரிஜிஹீர்ஷயா வா பூர்வவத் கர்மணி அபிப்ரவ்ருத்தோऽபி நிஷ்க்ரியாத்மதர்ஶநஸம்பந்நத்வாத் நைவ கிஞ்சித் கரோதி ஸ: ॥ ௨௦ ॥

யஃ புந: பூர்வோக்தவிபரீத: ப்ராகேவ கர்மாரம்பாத் ப்ரஹ்மணி ஸர்வாந்தரே ப்ரத்யகாத்மநி நிஷ்க்ரியே ஸஞ்ஜாதாத்மதர்ஶந: ஸ த்ருஷ்டாத்ருஷ்டேஷ்ட-விஷயாஶீர்விவர்ஜிததயா த்ருஷ்டாத்ருஷ்டார்தே கர்மணி ப்ரயோஜநமபஶ்யந் ஸ-ஸாதநம் கர்ம ஸந்ந்யஸ்ய ஶரீரயாத்ராமாத்ரசேஷ்ட: யதி: ஜ்ஞாநநிஷ்டோ முச்யத இத்யேதமர்தம் தர்ஶயிதுமாஹ—

௨௧. நிராஶீர்யதசித்தாத்மா த்யக்தஸர்வபரிக்ரஹ: ।
ஶாரீரம் கேவலம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பிஷம் ॥

நிராஶீ: நிர்கதா: ஆஶிஷ: யஸ்மாத் ஸ: நிராஶீ:, யதசித்தாத்மா சித்தம் அந்த:கரணம் ஆத்மா பாஹ்ய: கார்யகரணஸங்காத: தௌ உபாவபி யதௌ ஸம்யதௌ யேந ஸ: யதசித்தாத்மா, த்யக்தஸர்வபரிக்ரஹ: த்யக்த: ஸர்வ: பரிக்ரஹ:

---

தனக்கு ஒருபயனும் இல்லையாதலின் கர்மத்தையும்(அதற்கான)ஸாதநங்களையும் விட்டொழியவேவேண்டும் என்று அமையும்; அமையவே,(அங்ஙனம்) அவற்றினின்றும் நீங்குதலேஃ செய்யமுடியாது நேர்தலின், உலகத்தை நல்வழி நடக்கச் செய்யவேண்டும் என்னும் கருத்தினாலாவது, நல்லோர்பழிப்பை வாராமல் தவிர்த்துக்கொள்ளவேண்டும்என்னும் எண்ணத்தினாலாவது அவன் முன்போலக் கர்மத்தை மேற்கொண்டிருந்தாலும், கர்மமில்லா ஆத்மாவின் காட்சியைப் பெற்றிருத்தலால் (அவன் உண்மையாகவே) ஒன்றுஞ் செய்வதே இல்லை. (௨௦)

உடம்பு நிற்றற்பொருட்டு ஞானிசெய்யும் செய்கை.

மற்று, எவன் (தான்) கர்மத்தில் தலைப்படுதற்கு முன்னமேயே, எல்லாவற்றினும் உள்ளேயுள்ள ஆத்மாவான கர்மமில்லா ப்ரஹ்மத்தினிடத்து (அதுவே, தான் என்னும்) ஆத்மக்காட்சி உண்டாகப்பெற்றவனாய், முற்கூறியவனுக்கு மாறாய் [உலக நன்மைமுதலியவற்றைக் கவனியாதவனாய்]இருக்கின்றானோ, அவன் இம்மைமறுமைகளில் வேண்டப்படும் விஷயங்களிலே ஆசையொழிந்தவனாதலால் இம்மைமறுமைக்கான கர்மத்தில் ஒருபயனையும் காணாது, கர்மத்தையும் (அதற்கான) ஸாதநத்தையும் துறந்து, உடம்புநிற்றற்குமாத்திரம்(வேண்டிய) செய்கைகளை யுடையவனாய் ஞானத்திலே உறுதியாக நிற்கும் யதியாய்[ஊக்கமுள்ளவனாய்] (துன்பத்தினின்றும்)விடுபடுகிறான். என்னும் விஷயத்தை உணர்த்தும்பொருட்டு(ப் பகவான்) அருளிச்செய்கிறார் :

௨௧. ஆசை நீங்கி, மனத்தையும் தன்னையும் [இந்திரியங்களோடு சரீரத்தையும்]அடக்கி, (தனது பணம்,நிலம், முதலிய) ஸகல உடைமைகளையும் விட்டிட்டு,சாரீரகர்மத்தைமாத்திரம் செய்பவன் பாவத்தை அடைவதில்லை. [சாரீரகர்மம் – சரீரம் நிலைத்திருப்பதற்குமாத்திரம்வேண்டிய கர்மம்.]

எவனிடத்தினின்று ஆசைகள் போய்விட்டனவோ, எவனாலே அந்தக்கரணமும், வெளியில் தோற்றுவதான தேகேந்திரியங்களின் சேர்க்கையுமாகிய இரண்டும் அடக்கப்பட்டனவோ, (இன்னும்)எவனாலே(தனது பொருள், வீடுமுதலிய) உடைமைகளெல்லாம் விடப்பட்டனவோ, அவன் (தனது) சரீரம் நிலைத்திருப்பதற்குமாத்திரம்

𑌯𑍇𑌨 𑌸𑌃 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑌃, 𑌶𑌾𑌰𑍀𑌰𑌂 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌂 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌅𑌭𑌿𑌮𑌾𑌨𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌨 𑌆𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑌮𑍍 𑌅𑌨𑌿𑌷𑍍𑌟𑌰𑍂𑌪𑌂 𑌪𑌾𑌪𑌂 𑌧𑌰𑍍𑌮𑌂 𑌚 । 𑌧𑌰𑍍𑌮𑍋𑌽𑌪𑌿 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍋𑌃 𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑌮𑍇𑌵 𑌬𑌨𑍍𑌧𑌾𑌪𑌾𑌦𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌭𑌵𑌤𑌿, 𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌤𑍍 𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥

‘𑌶𑌾𑌰𑍀𑌰𑌂 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌕𑌰𑍍𑌮’ 𑌇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰 𑌕𑌿𑌂 𑌶𑌰𑍀𑌰𑌨𑌿𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑍍𑌯𑌂 𑌶𑌾𑌰𑍀𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑌮𑍍? 𑌆𑌹𑍋𑌸𑍍𑌵𑌿𑌤𑍍 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌂 𑌶𑌾𑌰𑍀𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌇𑌤𑌿?

𑌕𑌿𑌂 𑌚 𑌅𑌤𑌃—𑌯𑌦𑌿 𑌶𑌰𑍀𑌰𑌨𑌿𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑍍𑌯𑌂 𑌶𑌾𑌰𑍀𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮, 𑌯𑌦𑌿 𑌵𑌾 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌂 𑌶𑌾𑌰𑍀𑌰𑌮𑍍 𑌇𑌤𑌿 ? ॥

𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

𑌯𑌦𑌾 𑌶𑌰𑍀𑌰𑌨𑌿𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌶𑌾𑌰𑍀𑌰𑌮𑍍 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌤𑌦𑌾 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌦𑍃𑌷𑍍𑌟𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌮𑌪𑌿 𑌶𑌰𑍀𑌰𑍇𑌣 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌨𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌬𑍍𑌰𑍁𑌵𑌤𑍋 𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌾𑌭𑌿𑌧𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌸𑌜𑍍𑌯𑍇𑌤 । 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌯𑌂 𑌚 𑌕𑌰𑍍𑌮 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌦𑍃𑌷𑍍𑌟𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌂 𑌶𑌰𑍀𑌰𑍇𑌣 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌨𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑌮𑍍 𑌇𑌤𑍍𑌯𑌪𑌿 𑌬𑍍𑌰𑍁𑌵𑌤𑌃 𑌅𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌃 । ‘𑌶𑌾𑌰𑍀𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍’ 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌾𑌤𑍍 𑌕𑍇𑌵𑌲𑌶𑌬𑍍𑌦𑌪𑍍𑌰𑌯𑍋𑌗𑌾𑌚𑍍𑌚 𑌵𑌾𑌙𑍍𑌮𑌨𑌸𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌿𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌵𑌿𑌧𑌿𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧-

---

வேண்டிய செய்கையைமட்டும், அதிலுங்கூட அபிமானமில்லாது செய்பவனுய்த் தீமையாகிய பாவத்தையும், புண்யத்தையும் அடைவதில்லை. (ஸம்ஸாரத்தினின்றும்) விடுபடவிரும்புவோனுக்குப் புண்யமும் பாவமேதான்; (பிறப்பிறப்பு முதலியஸம்ஸாரக்) கட்டை விளைப்பதாதலின். ஆதலால், (அவன்) அவற்றினின்றும் நீங்கினவனுகிறுன், ஸம்ஸாரத்தினின்றும் விடுபட்டவனுகிறுன் என்பது பொருள்.

“சாரிரகர்மத்தை மாத்திரம்” என்றவிடத்து, சரிரத்தால் செய்யத்தக்க கர்மம் - சாரிரகர்மம் என்று கருத்தா? அல்லது, சரிரம் நிலேத்திருப்பதற்குமாத்திரம் வேண்டிய கர்மம் - சாரிரகர்மம் என்று கருத்தா?

ஆகவே, இன்னும், (ஒருவினு வருமாறு):—சரிரத்தால் செய்யத்தக்க கர்மம் சாரிரகர்மம் என்ருல், (வரும் குற்றமென்ன?) அல்லது, சரிரம் நிலேத்திருப்பதற்கு மாத்திரம் வேண்டிய கர்மம் - சாரிரகர்மம் என்ருல், (வரும் பயனென்ன?)

கூறுவோம்:

(முதல்வகை):—சரிரத்தால்செய்யத்தக்க கர்மம்-சாரிரகர்மம் என்ருல், இம்மை மறுமைகளிலே பயனே விளேப்பதாய்(ச் சாஸ்திரத்தில்) விலக்கப்பட்ட கர்மத்தையும் செய்பவன் பாவத்தை அடையமாட்டான் என்றுசொல்வார்க்கு, அப்பொழுது (அச்சாஸ்திரத்தோடு) மாறுபடக் கூறுதல் (என்னும் குற்றம்) வரும். இனி, “இம்மைமறுமைகளில் பயனே விளேப்பதும், சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டதுமான கர்மத்தைச் செய்பவன்பாவத்தை அடையமாட்டான்” என்றுசொல்வார்க்கும், வாராததை விலக்குதல்(என்னும்குற்றம்)வரும். (அல்லது,) “சாரிரகர்மத்தைச்செய்பவன்” என்னும் விசேஷணத்தாலும், “மாத்திரம்” என்னும்சொல்லின்பிரயோகத்திலுைம் “விதிவிலக்குக்களேப்

विषयं धर्माधर्मशब्दवाच्यं कुर्वन् प्राप्नोति किल्बिषम् इत्युक्तं स्यात्। तत्रापि वाङ्मनसाभ्यां विहितानुष्ठानपक्षे किल्बिषप्राप्तिवचनं विरुद्धम् आपद्येत। प्रतिषिद्धसेवापक्षेऽपि भूतार्थानुवादमात्रम् अनर्थकं स्यात्॥

यदा तु शरीरस्थितिमात्रप्रयोजनं शारीरं कर्म अभिप्रेतं भवेत्, तदा दृष्टादृष्टप्रयोजनं कर्म विधिप्रतिषेधगम्यं शरीरवाङ्मनसनिर्वर्त्यम् अन्यद् अकुर्वन् तैरेव शरीरादिभिः शरीरस्थितिमात्रप्रयोजनं केवलशब्दप्रयोगात् "अहं करोमि" इत्यभिमानवर्जितः शरीरादिचेष्टामात्रं लोकदृष्ट्या कुर्वन् नाप्नोति किल्बिषम् इति। एवंभूतस्य पापशब्दवाच्यकिल्बिषप्राप्त्यसंभवात् किल्बिषं संसारं न प्राप्नोति; ज्ञानाग्निदग्धसर्वकर्मत्वात् अप्रतिबन्धेन मुच्यत एव इति पूर्वोक्तसम्यग्दर्शनफलानुवाद एव एषः। एवं 'शारीरं केवलं कर्म' इत्यस्य अर्थस्य परिग्रहे निरवद्यं भवति ॥ உக ॥

त्यक्तसर्वपरिग्रहस्य यतेः अन्नादेः शरीरस्थितिहेतोः परि-

---

பற்றிநிற்பதும், தருமம்அதர்மம்என்னும்சொற்களால் வழங்கப்படுவதும்,மனமொழிகளால் செய்யத்தக்கதுமான கர்மத்தைச் செய்பவன் பாவத்தை அடைகிறான்" என்பது (கருத்தெனக்)கூறலாம். அதிலேயுங்கூட—விதித்ததை,மனமொழிகளால் அநுஷ்டிக்கும் பக்ஷத்தில் பாவமடைதலைச் சொல்லுதல் விரோதமாகும். விலக்கியதைக்கொள்ளும்பக்ஷத்திலும்,முன்னமே அமைந்துள்ள விஷயத்தை வீணாகத் திரும்பச்சொல்லுதல்மாத்திரம் ஆகும்.

(இரண்டாம் வகை):—இனி, சரீரம் நிலைத்திருப்பதற்குமாத்திரம் வேண்டிய கர்மம் - சாரீரகர்மம் என்பது கருத்தென்றால், இம்மைமறுமைகளில் பயனை விளைப்பதும், விதிவிலக்குக்களால் உணரப்படுவதும், மனமொழிமெய்களால் செய்யப்படுவதுமான மற்றைய கர்மத்தைச் செய்யாதவனாய், சரீரம் நிலைத்திருப்பதற்குமாத்திரம்வேண்டியனவாகிய சரீராதியின் செய்கைகளைமட்டும், "மாத்திரம்"என்னும் சொல்லின் பிரயோகத்தால் "நான் செய்கிறேன்"என்னும் அபிமானமில்லாது அதே சரீரம்முதலியவற்றால் உலகப்பார்வைக்குச் செய்(பவன்போலத் தோன்று)கிறவன் பாவத்தை அடையமாட்டான் என்பது அப்பொழுது (பொருந்தும்). இவ்வாறுள்ளவன் பாவமென்னும் சொல்லால் கூறப்படும்கில்பிஷத்தை அடைதல் நிகழாததலின், (அவன்)பாவத்தை = ஸம்ஸாரத்தை அடையமாட்டான். ஞானமாகிய தீயினால் ஸகல கர்மங்களும் எரிக்கப்பட்டமையின் (அவன்,ஸம்ஸாரத்தினின்றும்)தடையில்லாது விடுபடவேபடுகிறான். எனவே, முன்(ச-கஅ)கூறிய நல்லறிவின் பயனை அநுவதித்தலேதான், இது. "சாரீரகர்மத்தைமாத்திரம்" என்பதற்கு இவ்வாறாகப் பொருள்கொள்ளுமிடத்து, ('சாரிரம்' 'மாத்திரம்'என்ற இரண்டும்)குற்றமில்லாதவை யாகின்றன. (உக)

(தனது) உடைமைகளெல்லாவற்றையும் கைவிட்ட யதிக்குச் சரீரம் நிலைத்திருப்பதற்குக் காரணமான உணவு முதலியஉடைமை இல்லாமையின், இரத்தல் முதலி

𑌗𑍍𑌰𑌹𑌸𑍍𑌯 𑌅𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 𑌯𑌾𑌚𑌨𑌾𑌦𑌿𑌨𑌾 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑌾𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌾𑌯𑌾𑌮𑍍 “𑌅𑌯𑌾𑌚𑌿𑌤𑌮𑌸𑌂𑌕𑍍𑌲𑍃𑌪𑍍𑌤𑌮𑍁𑌪𑌪𑌨𑍍𑌨𑌂 𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌯𑌾” 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 𑌵𑌚𑌨𑍇𑌨 𑌅𑌨𑍁𑌜𑍍𑌞𑌾𑌤𑌮𑍍 𑌯𑌤𑍇𑌃 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌹𑍇𑌤𑍋𑌃 𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍇𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌦𑍍𑌵𑌾𑌰𑌮𑍍 𑌆𑌵𑌿𑌷𑍍𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨𑌾𑌹 —

௨௨. 𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌾𑌲𑌾𑌭𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑌃 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌾𑌤𑍀𑌤𑍋 𑌵𑌿𑌮𑌤𑍍𑌸𑌰𑌃 ।
𑌸𑌮𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑍌 𑌚 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌪𑌿 𑌨 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ॥

𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌾𑌲𑌾𑌭𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑌃 𑌅𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌿𑌤𑍋𑌪𑌨𑌤𑍋 𑌲𑌾𑌭𑍋 𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌾𑌲𑌾𑌭𑌃 𑌤𑍇𑌨 𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑌃 𑌸𑌞𑍍𑌜𑌾𑌤𑌾𑌲𑌂𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌃 । 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌾𑌤𑍀𑌤𑌃 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑍈𑌃 𑌶𑍀𑌤𑍋𑌷𑍍𑌣𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌹𑌨𑍍𑌯𑌮𑌾𑌨𑍋𑌽𑌪𑌿 𑌅𑌵𑌿𑌷𑌣𑍍𑌣𑌚𑌿𑌤𑍍𑌤𑌃 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌾𑌤𑍀𑌤𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌵𑌿𑌮𑌤𑍍𑌸𑌰𑌃 𑌵𑌿𑌗𑌤𑌮𑌤𑍍𑌸𑌰𑌃 𑌨𑌿𑌰𑍍𑌵𑍈𑌰𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌸𑌮𑌃 𑌤𑍁𑌲𑍍𑌯𑌃 𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌾𑌲𑌾𑌭𑌸𑍍𑌯 𑌸𑌿𑌦𑍍𑌧𑍌 𑌅𑌸𑌿𑌦𑍍𑌧𑍌 𑌚 । 𑌯𑌃 𑌏𑌵𑌂𑌭𑍂𑌤𑍋 𑌯𑌤𑌿𑌃 𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍇𑌃 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌹𑍇𑌤𑍋𑌃 𑌲𑌾𑌭𑌾𑌲𑌾𑌭𑌯𑍋𑌃 𑌸𑌮𑌃 𑌹𑌰𑍍𑌷𑌵𑌿𑌷𑌾𑌦𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌦𑍌 𑌅𑌕𑌰𑍍𑌮𑌾𑌦𑌿𑌦𑌰𑍍𑌶𑍀 𑌯𑌥𑌾𑌭𑍂𑌤𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌃 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑍇 𑌭𑌿𑌕𑍍𑌷𑌾𑌟𑌨𑌾𑌦𑍌 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌶𑌰𑍀𑌰𑌾𑌦𑌿𑌨𑌿𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑍍𑌯𑍇 “𑌨𑍈𑌵 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌕𑌰𑍋𑌮𑍍𑌯𑌹𑌮𑍍, 𑌗𑍁𑌣𑌾 𑌗𑍁𑌣𑍇𑌷𑍁 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇” 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌸𑌦𑌾 𑌸𑌂𑌪𑌰𑌿𑌚𑌕𑍍𑌷𑌾𑌣𑌃 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍 𑌨𑍈𑌵 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌭𑌿𑌕𑍍𑌷𑌾𑌟𑌨𑌾-

---

யவற்ருல் சரீரத்தை நிலைத்திருக்கச் செய்யவேண்டும் என்று அமைந்தது; அமைய வே, யதிக்குச் சரீரம் நிலைத்திருப்பதற்குக் காரணமான உணவு முதலானவை கிடைக்கும் வழியானது, “(பிக்ஷை பிறரிடம்) இரக்கப்படாததாக, (முன்னமே) அமர்த்திவைக்கப்படாததாக, தற்செயலாய் [தன் பிரயத்தினமின்றி]க் கொண்டுவரப்பட்டதாக(இருக்கவேண்டும்)” (போ - உ - அ - கஉ)என்பது முதலான வசனங்களால் அநுமதிபெற்றதென்பதை வெளிப்படுத்தக் கூறுகிருர் :

உஉ. தானுகக் கிடைப்பதைக்கொண்டு திருப்தியடைந்தவன், த்வந்தங்களைக் கடந்தவன் : பொருமையில்லாதவன் : (உணவுமுதலியன)கிடைத்தலிலும் கிடையாமையிலும் ஒப்பநிற்பவன். (அவன் ஒருகர்மத்தைச்)செய்தாலும், (அதனுல்)கட்டப்படுவதில்லை.

தானுகக்கிடைப்பதென்பது - (தான் பிறரிடம்)வேண்டாது வருவது. அதனுல்(இது)போது மென்றஎண்ணம்வந்தவன் (ஞானியாவன்). குளிர்வெப்பம்முதலியவற்ருல் தாக்கப்பட்டாலும், மனம்வருந்திக் கலங்காதவன் - த்வந்தங்களைக் கடந்தவன் எனப்படுகிருன். பொருமை நீங்கினவன் - வைரமில்லாப் புத்தியுடையோன். தற்செயலாய்க் கிடைப்பது(தனக்கு) அமைந்தாலும் அமையாவிட்டாலும் (அவன்)ஸமமானவன். இவ்வாருன எந்த யோகியானவன் சரீரம் நிலைத்திருப்பதற்குக் காரணமான உணவு முதலியவை கிடைத்தாலும் கிடையாவிடினும் ஸமமாயிருந்து, ஸந்தோஷமும் வருத்தமு மில்லாது, கர்மம் முதலானவற்றிலே அகர்மம் முதலானவற்றைக் கண்டு, ஆத்மாவை உள்ளபடிஉணர்தலிலே உறுதியாகநின்று, சரீரம் நிலைத்திருப்பதற்குமாத்திரம் வேண்டியனவும் சரீரம்முதலியவற்ருல் செய்யப்படுவனவுமாகிய பிக்ஷைக்குச்செல்லுதல் முதலான கர்மங்களிலே “நான் ஒன்றுஞ்செய்கிறேனில்லை, இந்திரியங்கள் விஷயங்களிற் செல்லுகின்றன” என்று இவ்வாருக எப்பொழுதும் நன்குஉணர்ந்து, ஆத்மா கர்த்தா இல்லை என்பதைக் காண்பவனுய் (இருக்கின்ருனே, அவன்) பிக்ஷைக்குச் செல்லுதல் முதலிய ஒரு கர்மத்தையும் செய்வதே இல்லை.

𑌦𑌿𑌕𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍋𑌤𑌿, 𑌲𑍋𑌕𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 𑌤𑍁 𑌲𑍌𑌕𑌿𑌕𑍈𑌃 𑌆𑌰𑍋𑌪𑌿𑌤𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇 𑌭𑌿𑌕𑍍𑌷𑌾𑌟𑌨𑌾𑌦𑍌 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌭𑌵𑌤𑌿 । 𑌸𑍍𑌵𑌾𑌨𑍁𑌭𑌵𑍇𑌨 𑌤𑍁 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌾𑌦𑌿𑌜𑌨𑌿𑌤𑍇𑌨 𑌅𑌕𑌰𑍍𑌤𑍈𑌵 । 𑌸 𑌏𑌵𑌂 𑌪𑌰𑌾𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑌿𑌤𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌃 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌂 𑌭𑌿𑌕𑍍𑌷𑌾𑌟𑌨𑌾𑌦𑌿𑌕𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌪𑌿 𑌨 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 𑌬𑌨𑍍𑌧𑌹𑍇𑌤𑍋𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌸𑌹𑍇𑌤𑍁𑌕𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌨𑌾 𑌦𑌗𑍍𑌧𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿 𑌉𑌕𑍍𑌤𑌾𑌨𑍁𑌵𑌾𑌦 𑌏𑌵 𑌅𑌯𑌮𑍍 ॥ ௨௨ ॥

'𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌾𑌸𑌙𑍍𑌗𑌮𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌨𑍇𑌨 𑌶𑍍𑌲𑍋𑌕𑍇𑌨 𑌯𑌃 𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌕𑌰𑍍𑌮𑌾 𑌸𑌨𑍍 𑌯𑌦𑌾 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌤𑌦𑌾 𑌤𑌸𑍍𑌯 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌕𑌰𑍍𑌤𑍃𑌕𑌰𑍍𑌮𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌾𑌭𑌾𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 𑌕𑌰𑍍𑌮𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇 𑌕𑌥𑌂𑌚𑌿𑌤𑍍 𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌾𑌤𑍍 𑌤𑌦𑌸𑌂𑌭𑌵𑍇 𑌸𑌤𑌿 𑌪𑍂𑌰𑍍𑌵𑌵𑌤𑍍 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌅𑌪𑌿 '𑌨𑍈𑌵 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌸𑌃' 𑌇𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌭𑌾𑌵𑌃 𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌃 । 𑌯𑌸𑍍𑌯 𑌏𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌭𑌾𑌵𑍋 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌃 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵—

௨௩. 𑌗𑌤𑌸𑌙𑍍𑌗𑌸𑍍𑌯 𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌚𑍇𑌤𑌸𑌃 ।
𑌯𑌜𑍍𑌞𑌾𑌯𑌾𑌚𑌰𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌮𑌗𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌲𑍀𑌯𑌤𑍇 ॥

---

ஆனால், (அஜ்ஞானியிடத்துப்போல, அவனிடத்தும் ஸ்நாநபாநம் முதலிய) உலகவ்யவஹாரத்தை ஸமமாகக் காண்கிறபடியால், ஸாமாந்யஜனங்கள், "(அவனும் நம்மைப் போலக் கர்மத்தைச்செய்யும்)கர்த்தாதான்." என ஏற்றுதலால், (அவன்)பிக்ஷைக்குச் செல்லுதல் முதலான கர்மத்தில் கர்த்தா வாகிறான். மற்று, சாஸ்திரப்பிரமாணம் முதலியவற்றால் உண்டான தன்அநுபவத்தால்(அவன்) அகர்த்தாதான் என்க. அவன் கர்த்தா என்பதை இவ்வாறு பிறரால் ஏற்றப்பட்டுச் சரீரம் நிலைத்திருப்பதற்குமாத்திரம்வேண்டியனவாகிய பிக்ஷைக்குச் செல்லுதல் முதலான கர்மங்களைச் செய்தாலும், (அவன் அவற்றால்) கட்டப்படுவதில்லை; கட்டுக்குக் காரணமான கர்மமும், அதன்காரணமும் ஞானமென்னும் தீயினால் எரிக்கப்பட்டமையின். எனவே, இது (௪ - ௧௯, ௨௧ - ஆம் சுலோகங்களில்) கூறியுள்ளதின் அநுவாதமே யென்க. (௨௨)

ஞானியின் உலகவ்யவஹாரமானது அவனைக் கட்டுப்படுத்தாது.

எவன் கர்மத்தைச் செய்துவருகையிலே "கர்மமில்லா ப்ரஹ்மமே, தான்" என்பதை எப்பொழுது காணப்பெறுவானோ, அப்பொழுது தனக்குச் செய்கையென்பதும், செய்பவனென்பதும், பயனென்பதும் இல்லாதிருத்தலைக் காண்கின்ற அவனுக்குக் கர்மத்தை விட்டிடுதல் வந்திருக்குமளவிலே, ஏதோ ஒருகாரணத்தால் அது முடியாதிருக்க,(அங்ஙனம் அவன்) முன்போலக் கர்மத்தை மேற்கொண்டிருந்தாலும், "அவன் உண்மையாகவே ஒன்றுஞ் செய்வதில்லை" (௪ - ௨௦)என (அவனுக்கு)க் கர்மமில்லாதிருத்தல் "கர்மத்தின் பயனிலே" (௪ - ௨௦)என்னும் சுலோகத்தினால் உணர்த்தப்பட்டது. எவனுக்கு இவ்வாறு கர்ம மின்மையானது உணர்த்தப்பட்டதோ,அவனுக்குத்தான் (கர்மக்கட்டு இல்லை)—

௨௩. பற்றில்லாதவனாய், விடுபட்டவனாய், ஞானத்திலே மனம் நிலைத்தவனாய்ப் பகவானுக்காகச் செய்கிறவனுடைய கர்மமெல்லாம் கரைந்துபோகின்றன.

गतसङ्गस्य सर्वतो निवृत्तासक्तेः मुक्तस्य निवृत्तधर्माधर्मा-
दिबन्धनस्य ज्ञानावस्थितचेतसः ज्ञाने एव अवस्थितं चेतः यस्य
सोऽयं ज्ञानावस्थितचेताः तस्य यज्ञाय यज्ञनिर्वृत्त्यर्थम् आचरतः
निर्वर्तयतः कर्म समग्रं सह अग्रेण फलेन वर्तते इति समग्रं कर्म
तत् प्रविलीयते विनश्यति इत्यर्थः ॥ २३ ॥

कस्मात् पुनः कारणात् क्रियमाणं कर्म स्वकार्यारम्भकं समग्रं
प्रविलीयते इति? उच्यते यतः—

२४. ब्रह्मार्पणं ब्रह्म हविर्ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम्।
ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्मकर्मसमाधिना ॥

ब्रह्म अर्पणं येन करणेन ब्रह्मविद् हविः अग्नौ अर्पयति
तत् ब्रह्मैव इति पश्यति, तस्य आत्मव्यतिरेकेण अभावं पश्यति, यथा
शुक्तिकायां रजताभावम्; तदुच्यते ब्रह्मैव अर्पणमिति, यथा यत्
रजतं तत् शुक्तिकैवेति । 'ब्रह्म, अर्पणम्' इति असमस्ते पदे । यत्
अर्पणबुद्ध्या गृह्यते लोके तत् अस्य ब्रह्मविदः ब्रह्मैव इत्यर्थः।
ब्रह्म हविः तथा यत् हविर्बुद्ध्या गृह्यमाणं तत् ब्रह्मैव अस्य ।
तथा ब्रह्माग्नौ इति समस्तं पदम् । अग्निरपि ब்रह्मैव यत्र हूयते

---

எல்லாவற்றினின்றும் பற்று ஒழியவும், தருமம்அதர்மம்முதலானகட்டினின்று (தான்) நீங்கவும், ஞானத்திலேயே மனம் நிலைக்கவும் பெற்று, பகவானுடைய பிரீதிக்காகச் செய்கிறவனுடைய கர்மமானது பயனோடு கரைந்துபோகின்றது : (அவனுக்கு அக்கர்மமும், அதன் பயனும்) இல்லாமற்போகின்றன என்பது பொருள். (௨௩)

ஞானமென்னும் யாகம்.

மற்று, எக்காரணத்தால் (அவன்) செய்யும் கர்மமானது தன்பயனை விளைவித் தலைச்செய்யாது முழுதும் இல்லாமற்போவதென்பது? கூறுவோம் : ஏனெனில்,

௨௪. அர்ப்பிப்பது ப்ரஹ்மம் : ஹவிஸ் ப்ரஹ்மம் : அக்நியாகிய ப்ரஹ்மத்திலே (யஜமானனாகிய) ப்ரஹ்மத்தால் ஹோமஞ் செய்யப்படுதல் ப்ரஹ்மம் : ப்ரஹ்மமாகிய கர்மத்திலே ஸமாதியுள்ள அவனால் அடையப்படுவது (ம்) ப்ரஹ்மமே.

ப்ரஹ்மத்தை அறிந்தவன் எக்கருவியினால் ஹவிஸை அக்நியில் இடுகின்றானோ, அது ப்ரஹ்மம்தான் எனக்காண்கிறான். இப்பியிலே வெள்ளியின்மையை[இப்பியன்றி வெள்ளி இல்லையென]க் காண்பதுபோல, ஆத்மாவன்றி அஃதில்லை யெனக் காண்கிறான். ஆதலால், ஹவிஸை) அர்ப்பிக்கும் கருவி ப்ரஹ்மமே எனப்படுகின்றது. உதாரணமாக, வெள்ளியாகத் தோற்றுவது இப்பியாகவே இருப்பதுதான் என்க. ப்ரஹ்ம, அர்பணம் என்பன தொகாநிலைச் சொற்கள். உலகத்தில் (ஜனங்கள்) எதனை, (ஹவிஸை) அர்ப்பிக்கும் கருவியெனக் கொள்கிறார்களோ, அது இந்த ஆத்மஞானிக்கு ப்ரஹ்மமே என்பது பொருள். அவ்வாறே, (அவர்கள்) எதனை ஹவிஸ் எனக்கொள்கிறார்களோ, அது அவனுக்கு ப்ரஹ்மமேதான். அவ்வண்ணமே [முன்போல அல்லாது], ப்ரஹ்மாக்நௌ என்பது தொகைநிலைப்பதம். (யஜமானனாகிய)செய்பவனென்னும் ப்ரஹ்மமானது எதிலே (ஹவிஸை) ஹோமஞ்செய்கின்றதோ, (அந்த) அக்நியும்

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌾 𑌕𑌰𑍍𑌤𑍍𑌰𑌾, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌕𑌰𑍍𑌤𑍇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌯𑌤𑍍 𑌤𑍇𑌨 𑌹𑍁𑌤𑌂 𑌹𑌵𑌨𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 𑌤𑌤𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 । 𑌯𑌤𑍍 𑌤𑍇𑌨 𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌫𑌲𑌂 𑌤𑌦𑌪𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑌾𑌧𑌿𑌨𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌕𑌰𑍍𑌮 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑌰𑍍𑌮 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌸𑌮𑌾𑌧𑌿𑌃 𑌯𑌸𑍍𑌯 𑌸 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑌾𑌧𑌿𑌃 𑌤𑍇𑌨 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑌾𑌧𑌿𑌨𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 ॥

𑌏𑌵𑌂 𑌲𑍋𑌕𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑌂 𑌚𑌿𑌕𑍀𑌰𑍍𑌷𑍁𑌣𑌾𑌽𑌪𑌿 𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌃 𑌅𑌕𑌰𑍍𑌮, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑍁𑌪𑌮𑍃𑌦𑌿𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌏𑌵𑌂 𑌸𑌤𑌿 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌽𑌪𑌿 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌃 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌯𑌜𑍍𑌞𑌤𑍍𑌵𑌸𑌂𑌪𑌾𑌦𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌸𑍁𑌤𑌰𑌾𑌮𑍍 𑌉𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇; 𑌯𑌤𑍍 𑌅𑌰𑍍𑌪𑌣𑌾𑌦𑌿 𑌅𑌧𑌿𑌯𑌜𑍍𑌞𑍇 𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌂 𑌤𑌤𑍍 𑌅𑌸𑍍𑌯 𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌦𑌰𑍍𑌶𑌿𑌨 𑌇𑌤𑌿 । 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌤𑍍𑌵𑍇 𑌅𑌰𑍍𑌪𑌣𑌾𑌦𑍀𑌨𑌾𑌮𑍇𑌵 𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌭𑌿𑌧𑌾𑌨𑌮𑍍 𑌅𑌨𑌰𑍍𑌥𑌕𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌜𑌾𑌨𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌭𑌾𑌵𑌃, 𑌕𑌾𑌰𑌕𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌭𑌾𑌵𑌾𑌚𑍍𑌚 । 𑌨 𑌹𑌿 𑌕𑌾𑌰𑌕𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌹𑌿𑌤𑌂 𑌯𑌜𑍍𑌞𑌾𑌖𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌦𑍃𑌷𑍍𑌟𑌮𑍍 । 𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌵 𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌕𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌶𑌬𑍍𑌦𑌸𑌮-

---

ப்ரஹ்மமேதான். செய்பவன் ப்ரஹ்மமே என்பது (இங்கே சொல்லுவான்) குறிப்பு. அவன் ஹோமஞ் செய்தலென்னும் தொழில், ப்ரஹ்மம்தான். அதனால்அடையவேண்டிய பயன் எதுவோ, அதுவும் ப்ரஹ்மம்தான். ப்ரஹ்மமாகிய கர்மத்திலே ஸமாதியுடைய [ப்ரஹ்மத்தைக் காண்பதாகிய கர்மத்திலே தலைப்பட்டு அந்த ப்ரஹ்மத்தையெ எங்கும் காண்ப]வனால் அடையப்படுவது(ம்) ப்ரஹ்மமேதான் என்க.

இவ்வாறு, உலகத்தை நல்வழிப்படுத்த விரும்புவோனும் செய்கின்ற கர்மமானது உண்மையாகவே அகர்மமாம்; (ஸகலமும்) ப்ரஹ்மமென்ற புத்தியினாலே (கர்மமென்னும் புத்தியானது) தள்ளுண்டுபோனமையின். இவ்வாறுள்ளதனால்,(ஒருவன்) கர்மத்தினின்றும் ஒழிந்தவனானாலும், ஸகலகர்மங்களையும் துறந்த (அ)வனுடைய மெய்யறிவைப் புகழ்தற்பொருட்டு ஞானத்திலே யஜ்ஞத்தை ஏற்றிக்கூறுதல் நன்றாகப் பொருந்துகின்றது. வாஸ்தவமான யாகத்திலே வழங்கப்படுவனவாகிய (ஹவிஸை) அர்ப்பிக்கும் கருவி முதலியன எவைகளோ, அவைகள், பரம்பொருளைக் காண்கின்ற இவனுக்குத் தன் ஆத்மாவான ப்ரஹ்மமேதான் என்பது. அவ்வாறில்லாவிட்டால், ஸகலமும் ப்ரஹ்மமாயிருக்க, (ஹவிஸை) அர்ப்பிக்கும் கருவி முதலியவற்றைமாத்திரம் ப்ரஹ்மமாகச் சிறப்பித்துக் கூறுதல் பயனில்லாததாகும். ஆகவே, "இதெல்லாம் ப்ரஹ்மமேதான்" என்று அறிகிறவனுக்குக் கர்மமில்லை. அன்றியும், காரகத்தைப்பற்றிய எண்ணமே இல்லையாதலாலும், (அவனுக்குக் கர்மமில்லை யென்க. காரகம் - ஒரு தொழில் உண்டாகிமுடிவுபெறுதற்கு உபயோகமாயிருப்பது. யஜமானன் இந்திரனுக்கு ஹவிஸை அகப்பையினால் அக்நியிலே அர்ப்பித்தான் என்றவிடத்து, அர்ப்பித்தலென்னும் தொழிலுக்கு யஜமானன் என்பது செய்பவன்என்னும் காரகம்: இந்திரனுக்கு என்பது கொள்பவன்என்னும் காரகம்: ஹவிஸை என்பது செயப்படுபொருள் என்னும் காரகம்: அகப்பையினால் என்பது கருவியென்னும் காரகம்: அக்நியிலேஎன்பது இடம்என்னும் காரகம். இவ்வாறே மற்றையதையும் கண்டுகொள்க.) யாகமெனப்படும் கர்மமானது காரகபுத்தியில்லாததாகக் காணப்படவில்லையன்றோ. அக்நிஹோத்ரம் முதலிய ஸகலமுமே (ஹவிஸை, 'இந்திரனுக்கு' 'அக்நிக்கு' என்பனமுதலா

[illegible] 𑌦𑍇𑌵𑌤𑌾𑌵𑌿𑌶𑍇𑌷𑌸𑌂𑌪𑍍𑌰𑌦𑌾𑌨𑌾𑌦𑌿𑌕𑌾𑌰𑌕𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌫𑌲𑌾𑌭𑌿𑌸𑌨𑍍𑌧𑌿𑌶𑍍 𑌚 𑌦𑍃𑌷𑍍𑌟𑌃; 𑌨 𑌉𑌪𑌮𑍃𑌦𑌿𑌤𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌕𑌾𑌰𑌕𑌫𑌲𑌭𑍇𑌦𑌬𑍁𑌦𑍍𑌧𑌿 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌫𑌲𑌾𑌭𑌿𑌸𑌨𑍍𑌧𑌿𑌰𑌹𑌿𑌤𑌂 𑌵𑌾 । 𑌇𑌦𑌂 𑌤𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑍁𑌪𑌮𑍃𑌦𑌿𑌤𑌾𑌰𑍍𑌪𑌣𑌾𑌦𑌿𑌕𑌾𑌰𑌕𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌫𑌲𑌭𑍇𑌦𑌬𑍁𑌦𑍍𑌧𑌿 𑌕𑌰𑍍𑌮 । 𑌅𑌤𑌃 𑌅𑌕𑌰𑍍𑌮𑍈𑌵 𑌤𑌤𑍍 । 𑌤𑌥𑌾 𑌚 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌂 ‘𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍’ ‘𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌭𑌿𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍋𑌽𑌪𑌿 𑌨𑍈𑌵 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌸𑌃’ ‘𑌗𑍁𑌣𑌾 𑌗𑍁𑌣𑍇𑌷𑍁 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇’ ‘𑌨𑍈𑌵 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌕𑌰𑍋𑌮𑍀𑌤𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌮𑌨𑍍𑌯𑍇𑌤 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌤𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 । 𑌤𑌥𑌾 𑌚 𑌦𑌰𑍍𑌶𑌯𑌂𑌸𑍍 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌰 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌕𑌾𑌰𑌕𑌫𑌲𑌭𑍇𑌦𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑍁𑌪𑌮𑌰𑍍𑌦𑌂 𑌕𑌰𑍋𑌤𑌿 । 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾 𑌚 𑌕𑌾𑌮𑍍𑌯𑌾𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑍌 𑌕𑌾𑌮𑍋𑌪𑌮𑌰𑍍𑌦𑍇𑌨 𑌕𑌾𑌮𑍍𑌯𑌾𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌹𑌾𑌨𑌿𑌃 । 𑌤𑌥𑌾 𑌮𑌤𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌾𑌮𑌤𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌾𑌣𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌵𑌿𑌶𑍇𑌷𑌸𑍍𑌯 𑌆𑌰𑌮𑍍𑌭𑌕𑌤𑍍𑌵𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌮𑍍 । 𑌤𑌥𑌾 𑌇𑌹𑌾𑌪𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑍁𑌪𑌮𑍃𑌦𑌿𑌤𑌾𑌰𑍍𑌪𑌣𑌾𑌦𑌿𑌕𑌾𑌰𑌕𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌫𑌲𑌭𑍇𑌦𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌬𑌾𑌹𑍍𑌯𑌚𑍇𑌷𑍍𑌟𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣 𑌕𑌰𑍍𑌮𑌾𑌪𑌿 𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌅𑌕𑌰𑍍𑌮 𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌤𑌃 𑌉𑌕𑍍𑌤𑌂 ‘𑌸𑌮𑌗𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌲𑍀𑌯𑌤𑍇’ 𑌇𑌤𑌿 ॥

---

கச்) சொல்லிக் கொடுக்கப்பெறும் சிறப்புத்தெய்வமாகிய கொள்பவனென்னும் காரகத்தையும், மற்றுமிதுபோன்ற காரகத்தையும்பற்றின எண்ணத்தையும், (நான்)செய்பவனென்னும் அபிமானத்தையும், பயனை எதிர்நோக்குதலையும் உடைய கர்மமாகக் காணப்படுவதேயன்றி, செய்கை யென்பதும், காரகமென்பதும், பயனென்பதுமான பேதபுத்தி ஒடுங்கப்பெற்றதாகவாயினும், (நான்) செய்பவன்என்னும் அபிமானமும் பயனை எதிர்நோக்குதலும் இல்லாததாகவாயினும் காணப்படவில்லை. இதுவோ[ஞான யஜ்ஞமோ](ஹவிஸை) அர்ப்பிக்கும் கருவிமுதலான காரகமென்பதும் செய்கையென்பதும் பயனென்பதுமான பேதபுத்தி, (ஸகலமும்) ப்ரஹ்மமென்ற புத்தியினால் தள்ளுண்டுபோகப்பெற்ற கர்மமாம். ஆகவே, அது அகர்மமேயென்க. அவ்வண்ணமே "எவன்கர்மத்தில்" (௪ - ௧௮), "கர்மத்தை மேற்கொண்டிருந்தாலும்" (௪ - ௨௦), "குணங்கள்" (௩ - ௨௮), "(நிஷ்டை)கூடி உண்மை உணர்ந்தவன்" (௫ - ௮) என்பன முதலியவற்றால் (அது) உணர்த்தப்பட்டது. அவ்வாறே (பகவான்), செய்கையென்பதும் காரகமென்பதும் பயனென்பதுமான பேதபுத்தி விண்டுபோதலைச் செய்கிறார் [அப்பேதபுத்தியை நீங்கும்படி செய்கிறார்]. இனி, காம்யமான அக்நிஹோத்ரம் முதலியவற்றிலே காமமானது போய்விட [பயனை விரும்பாதுஅவற்றைச்செய்ய],(அவை) காம்யாக்நிஹோத்ரம் முதலியவையாக ஆவதில்லை யென்பதும், அவ்வாறே,(இத்தொழிலை நான் செய்யவேண்டும், இதன் பயனை நான் அநுபவிக்கவேண்டும்) என்னும்எண்ணத்தோடாயினும், எண்ணமில்லாதாயினும், வேறுவகையாகவாயினும்(செய்யப்படும்) கர்மங்கள் தம்தமக்குஉரிய பயன்களை விளைக்கின்றன வென்பதும் (நமக்குத்) தெரிந்தவை. அவ்வாறு இங்கும், (ஹவிஸை) அர்ப்பிக்கும் கருவிமுதலான காரகமென்பதும் செய்கையென்பதும் பயனென்பதுமான பேதபுத்தி விண்டுபோன ஞானியின் (தொழிலானது) வெளிச்செய்கையினால்மாத்திரம் கர்மமாகத் தோன்றினாலும், அகர்மமாகின்றது. ஆதலால் கூறப்பட்டது " ஸகல (கர்ம) மும் கரைந்துபோகின்றன " (௪ - ௨௩) என்று.

𑌅𑌤𑍍𑌰 𑌕𑍇𑌚𑌿𑌦𑌾𑌹𑍁𑌃—𑌯𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌤𑍍𑌸𑍍𑌰𑍁𑌵𑌾𑌦𑍀𑌨𑌿; 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌕𑌿𑌲 𑌸𑍍𑌰𑍁𑌵𑌾𑌦𑌿𑌨𑌾 𑌪𑌞𑍍𑌚𑌵𑌿𑌧𑍇𑌨 𑌕𑌾𑌰𑌕𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌸𑌤𑍍 𑌤𑌦𑍇𑌵 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍋𑌤𑌿। 𑌤𑌤𑍍𑌰 𑌨 𑌸𑍍𑌰𑍁𑌵𑌾𑌦𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑍍𑌯𑌤𑍇; 𑌕𑌿𑌂 𑌤𑍁 𑌸𑍍𑌰𑍁𑌵𑌾𑌦𑌿𑌷𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇; 𑌯𑌥𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌾𑌦𑍌 𑌵𑌿𑌷𑍍𑌣𑍍𑌵𑌾𑌦𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃, 𑌯𑌥𑌾 𑌵𑌾 𑌨𑌾𑌮𑌾𑌦𑍌 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌇𑌤𑌿 ॥

𑌸𑌤𑍍𑌯𑌮𑍍, 𑌏𑌵𑌮𑌪𑌿 𑌸𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌦𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑌂 𑌨 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍। 𑌅𑌤𑍍𑌰 𑌤𑍁 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌶𑌬𑍍𑌦𑌿𑌤𑌮𑌨𑍇𑌕𑌾𑌨𑍍𑌯𑌜𑍍𑌞𑌶𑌬𑍍𑌦𑌿𑌤𑌾𑌨𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌨𑍁𑌪𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 '𑌶𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌮𑌯𑌾𑌦𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌃' 𑌇𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌸𑍍𑌤𑍌𑌤𑌿। 𑌅𑌤𑍍𑌰 𑌚 𑌸𑌮𑌰𑍍𑌥𑌮𑌿𑌦𑌂 𑌵𑌚𑌨𑌂 '𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌰𑍍𑌪𑌣𑌮𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌯𑌜𑍍𑌞𑌤𑍍𑌵𑌸𑌂𑌪𑌾𑌦𑌨𑍇; 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌤𑍍𑌵𑍇 𑌅𑌰𑍍𑌪𑌣𑌾𑌦𑍀𑌨𑌾𑌮𑍇𑌵 𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌭𑌿𑌧𑌾𑌨𑌮𑌨𑌰𑍍𑌥𑌕𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍। 𑌯𑍇 𑌤𑍁 𑌸𑍍𑌰𑍁𑌵𑌾𑌦𑌿𑌷𑍁 𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌾𑌯𑌾𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌵𑌤𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 𑌨𑌾𑌮𑌾𑌦𑌿𑌷𑍍𑌵𑌿𑌵 𑌚𑍇𑌤𑌿 𑌬𑍍𑌰𑍁𑌵𑌤𑍇 𑌨 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌉𑌕𑍍𑌤𑌾 𑌇𑌹 𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑌿𑌤𑌾, 𑌸𑍍𑌰𑍁𑌵𑌾𑌦𑌿𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 ।

---

இதில் சிலர் கூறுவர்:—எது ப்ரஹ்மமோ, அது (ஹவிஸை) அர்ப்பிக்கும் கருவி முதலியதாம். ப்ரஹ்மமே (ஹவிஸை) அர்ப்பிக்கும் கருவி முதலிய ஐந்து காரகவடிவமாய் இருந்துகொண்டு அதேகர்மத்தைச் செய்கின்றதென்பர். (ஐந்து காரகமாவன - செய்பவன், செயப்படுபொருள், கருவி, கொள்பவன், இடம் என முற்கூறப்பட்டவை. ஹவிஸை) அர்ப்பிக்கும் கருவியென்னும் புத்தியும், இன்னுமிதுபோன்ற புத்தியும் அதிலே நீக்கப்படுவதில்லை; மற்று, (ஹவிஸை) அர்ப்பிக்கும் கருவி முதலானவற்றிலே ப்ரஹ்மமென்னும் புத்தியானது வைக்கப்படுகின்றது. விக்கிரகம் முதலானவற்றிலே விஷ்ணுமுதலான புத்திபோலவும், (பகவானுடைய) திருநாமம் முதலானவற்றிலே ப்ரஹ்மமென்னும் புத்திபோலவுமென்க.

உண்மை; பிரகிருதமானது ஞானமென்னும் யஜ்ஞத்தைப் புகழ்தற்காக இல்லாவிட்டால், இப்படியும் இருக்கலாம். ஆனல், (பகவான்) யஜ்ஞமென்று சொல்லப்பட்ட பல கர்மவிசேஷங்களை எடுத்துக்கூறிப், பின்னே, ஞானயஜ்ஞமென்று சொல்லப்பட்ட மெய்யறிவாகிய ஞானத்தை "திரவியங்களாலாகும் யஜ்ஞத்தைக்காட்டிலும் ஞானயஜ்ஞம் மேலானது" (௪ - ௩௩)எனப் புகழ்கின்றார். அன்றியும், இங்கே "அர்ப்பிப்பது ப்ரஹ்மம்"என்று தொடங்கும் இத்திருவாக்கானது ஞானத்தின்மீது யஜ்ஞத்தை ஏற்றிக்கூறுவதிலே கருத்துடையதென்க. அப்படியல்லாவிட்டால், ஸகலமும்ப்ரஹ்மமாயிருக்க, அர்ப்பிப்பது முதலானவற்றையே ப்ரஹ்மமாக விசேஷித்துக் கூறுதல் வீணாகும். மற்று, எவர்கள் விக்கிரகத்திலே விஷ்ணுவென்று நோக்குதல்போலவும், (பகவானுடைய) திருநாமம் முதலியவற்றிலே ப்ரஹ்மமென நோக்குதல்போலவும், (ஹவிஸை) அர்ப்பிக்கும் கருவி முதலானவற்றிலே ப்ரஹ்மமென்னும் நோக்கானது வைக்கப்படுகின்றது என்று கூறுகிறார்களோ, அவர்களுடைய (கருத்தின்படி பகவான்) இங்கு உபதேசிக்கவிரும்பியது, (இதுவரையிலும்) கூறிவந்த ப்ரஹ்மவித்யை அன்று; (இங்குக் கூறிய) அறிவானது (ஹவிஸை) அர்ப்பிக்கும் கருவி முத

𑌨 𑌚 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌸𑌂𑌪𑌾𑌦𑌨𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌮𑍋𑌕𑍍𑌷𑌫𑌲𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 । ‘𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌤𑍇𑌨 𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍’ 𑌇𑌤𑌿 𑌚 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌂 𑌚 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 𑌅𑌨𑍍𑌤𑌰𑍇𑌣 𑌮𑍋𑌕𑍍𑌷𑌫𑌲𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 ॥

𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌵𑌿𑌰𑍋𑌧𑌶𑍍𑌚; 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌂 ‘𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰, 𑌅𑌨𑍍𑌤𑍇 𑌚 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌉𑌪𑌸𑌂𑌹𑌾𑌰𑌾𑌤𑍍 । ‘𑌶𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌮𑌯𑌾𑌦𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌜𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌃’ ‘𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 𑌪𑌰𑌾𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌮𑍇𑌵 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌉𑌪𑌕𑍍𑌷𑍀𑌣𑌃 𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 । 𑌤𑌤𑍍𑌰 𑌅𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑍍𑌰𑍁𑌵𑌾𑌰𑍍𑌪𑌣𑌾𑌦𑍌 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 𑌅𑌕𑌾𑌣𑍍𑌡𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌾𑌯𑌾𑌮𑌿𑌵 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌅𑌨𑍁𑌪𑌪𑌨𑍍𑌨𑌮𑍍 ॥

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌯𑌥𑌾𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌾𑌰𑍍𑌥 𑌏𑌵 𑌅𑌯𑌂 𑌶𑍍𑌲𑍋𑌕𑌃 ॥ ௨௪ ॥

𑌤𑌤𑍍𑌰 𑌅𑌧𑍁𑌨𑌾 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌸𑍍𑌯 𑌯𑌜𑍍𑌞𑌤𑍍𑌵𑌂 𑌸𑌂𑌪𑌾𑌦𑍍𑌯 𑌤𑌤𑍍𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌮𑍍 𑌅𑌨𑍍𑌯𑍇𑌽𑌪𑌿 𑌯𑌜𑍍𑌞𑌾 𑌉𑌪𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌯𑌨𑍍𑌤𑍇—

௨௫. 𑌦𑍈𑌵𑌮𑍇𑌵𑌾𑌪𑌰𑍇 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌗𑍍𑌨𑌾𑌵𑌪𑌰𑍇 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨𑍈𑌵𑍋𑌪𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 ॥

---

வியவற்றைப்பற்றிய தாதலின். இனி, ப்ரஹ்மமென்று நோக்குதலை (ஒன்றிலே) ஏற்றிக்கொள்வதென்னும் ஞானத்தாலும் முக்தியாகிய பயனைப் பெறமுடியாது. ஆனால், "அதனால் ப்ரஹ்மமே அடையத்தக்கது" எனக்கூறப்படுகின்றது. மற்றும், மெய்யறிவுஇல்லாமல் முக்தியென்னும் பயனை அடையக்கூடு மென்பதும் விரோதமாகும்.

அன்றியும், பிரகிருதத்திற்கும் விரோதமென்க. "எவன் கர்மத்தில்" (௪ - ௧௮) என்றவிடத்தும், (இவ்வத்தியாய)முடிவிலும் எடுத்துக்கொண்ட விஷயம் மெய்யறிவு என்பது ; (அங்கு) அதனையே முடித்தலா லென்க. (இந்த) அத்தியாயமானது "திரவியங்களாலாகும் யஜ்ஞத்தைக்காட்டிலும் ஞானமென்னும் யஜ்ஞம் மேலானது" (௪. ௩௩), "ஞானத்தை அடைந்து" (௪ - ௩௯) என்பனமுதலாக மெய்யறிவைப் பாராட்டுதலையே செய்துகொண்டு முற்றுப்பெற்றது. அது அவ்வாறுள்ளவளவிலே, விக்கிரகத்தில் விஷ்ணுவென்று நோக்குதல்போல, (ஹவிஸை) அர்ப்பிக்கும் கருவி முதலானவற்றிலே ப்ரஹ்மமென நோக்குதல், பிருகிருதமில்லாஇடத்திலே காரணமின்றிக் கூறப்படுகின்றதென்பது பொருந்தாது.

ஆதலால், இச்சுலோகத்திற்கு (யாம்) உரைத்தபடியே பொருளென்க. (௨௪)

**கர்மத்தினுல் செய்யப்படும் யஜ்ஞங்கள்.**

இனி, இப்பொழுது மெய்யறிவிலே யஜ்ஞத்தை ஏற்றிக்கூறியபின், அதனைப் புகழ்தற்பொருட்டு மற்றை யஜ்ஞங்களையும் (பகவான்) எடுத்துக்கூறுகிறார் :

௨௫. மற்றையோர்கள் தேவதைகளுக்கே யஜ்ஞத்தைச் செய்கிறார்கள் : வேறொருவர், ப்ரஹ்மமாகிய அக்கினியிலே ஆத்மாவை ஆத்மாவினாலேயே ஹோமஞ் செய்கிறார்கள்.

𑌦𑍈𑌵𑌮𑍇𑌵 𑌦𑍇𑌵𑌾 𑌇𑌜𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌯𑍇𑌨 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 𑌅𑌸𑍌 𑌦𑍈𑌵𑍋 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌤𑌮𑍇𑌵 𑌅𑌪𑌰𑍇 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 𑌕𑌰𑍍𑌮𑌿𑌣𑌃 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌗𑍍𑌨𑍌 ‘𑌸𑌤𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌨𑌨𑍍𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮’ ‘𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮’ ‘𑌯𑌤𑍍𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌦𑌪𑌰𑍋𑌕𑍍𑌷𑌾𑌤𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌯 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌰𑌃’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌵𑌚𑌨𑍋𑌕𑍍𑌤𑌮𑌶𑌨𑌾𑌯𑌾𑌪𑌿𑌪𑌾𑌸𑌾𑌦𑌿𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌸𑌾𑌰𑌧𑌰𑍍𑌮𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌂 ‘𑌨𑍇𑌤𑌿 𑌨𑍇𑌤𑌿’ 𑌇𑌤𑌿 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌾𑌶𑍇𑌷𑌵𑌿𑌶𑍇𑌷𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌶𑌬𑍍𑌦𑍇𑌨 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌚𑍍𑌚𑌾𑌗𑍍𑌨𑌿𑌶𑍍𑌚 𑌸𑌃 । 𑌹𑍋𑌮𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑌯𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌅𑌗𑍍𑌨𑌿𑌃 । 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌗𑍍𑌨𑍌 𑌅𑌪𑌰𑍇 𑌅𑌨𑍍𑌯𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑌃 𑌯𑌜𑍍𑌞𑌮𑍍—𑌯𑌜𑍍𑌞𑌶𑌬𑍍𑌦𑌵𑌾𑌚𑍍𑌯𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾, 𑌆𑌤𑍍𑌮𑌨𑌾𑌮𑌸𑍁 𑌯𑌜𑍍𑌞𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌯 𑌪𑌾𑌠𑌾𑌤𑍍—𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌃 𑌪𑌰 𑌏𑌵 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌨𑍍𑌤𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑍁𑌪𑌾𑌧𑌿𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑌧𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌾𑌧𑌿𑌧𑌰𑍍𑌮𑌕𑌮𑌾𑌹𑍁𑌤𑌿𑌰𑍂𑌪𑌂 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨𑍈𑌵 𑌉𑌕𑍍𑌤𑌲𑌕𑍍𑌷𑌣𑍇𑌨 𑌉𑌪𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 𑌪𑍍𑌰𑌕𑍍𑌷𑌿𑌪𑌨𑍍𑌤𑌿, 𑌸𑍋𑌪𑌾𑌧𑌿𑌕𑌸𑍍𑌯 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌨𑌿𑌰𑍁𑌪𑌾𑌧𑌿𑌕𑍇𑌨 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇𑌣𑍈𑌵 𑌯𑌦𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌸 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌹𑍋𑌮𑌃 𑌤𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑍈𑌕𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌃 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥

---

எந்த யாகத்தால் (இந்திரன்முதலிய) தேவர்கள் உபாஸிக்கப்படுகிறார்களோ, அது தைவமான யஜ்ஞம். அதேயஜ்ஞத்தைச் சில கர்மயோகிகள் அநுஷ்டிக்கிறார்கள். “ப்ரஹ்மம் மெய்ப்பொருளாயும், அறிவாயும்,முடிவில்லதாயு முள்ளது” (தை - ௨-௧) “ப்ரஹ்மம் அறிவும் ஆநந்தமு மாயிருப்பது” (பி - ௩ - ௯ -௨௮), “எது ஸமீபத்திலும் தூரத்திலும் உள்ளதோ, எது எல்லாவற்றிற்கும் உள்ளேயுள்ள ஆத்மாவாகஇருக்கின்றதோ, (அது)ப்ரஹ்மம்”(பி-௩-௨-௧) என்பனமுதலிய (சுருதி) வாக்கியங்களால் கூறப்பட்டு, பசி நீர்வேட்கைமுதலிய எவ்வித ஸம்ஸாரத்தன்மையுமின்றி, “அன்று அன்று” (பி - ௪ - ௪ - ௨௨) என எத்தகைய சிறப்பியல்புமில்லாதது, ப்ரஹ்மமென்னும் சொல்லால் கூறப்படுகின்றது. ஹோமத்திற்கு இடமாகக்கொண்டதனால், ப்ரஹ்மம் அக்நி யென்க. ப்ரஹ்மத்தை அறிபவரான சிலர் ப்ரஹ்மமாகிய அக்நியிலே, உண்மையாகப் பரப்ரஹ்மமாகவே உள்ளதாய் புத்தி முதலிய உபாதிகளோடு கூடி (அதனால் தன்னிடத்து அவ்)வுபாதிகளின் தன்மையெல்லாம் ஏற்றப்பட்டுநிற்கும் ஆத்மாவாகிய ஆகுதியை, (கீழ்க்) கூறிய லக்ஷணமுள்ள [பசிமுதலிய எத்தகைய ஸம்ஸாரத்தன்மையும், எவ்விதமான சிறப்பியல்பு மில்லாத]ஆத்மாவினாலேயே அர்ப்பிக்கிறார்கள் : உபாதியுடைய ஆத்மாவை உபாதியில்லாத பரப்ரஹ்மஸ்வரூபமாகவே கண்டுதெளிதல் எதுவோ, அது அதிலே [ப்ரஹ்மத்திலே] ஹோமஞ்செய்தலென்பது ; ப்ரஹ்மமும் தானும் ஒன்றெனக் காண்பதிலே உறுதியாகநிற்கும் துறவிகள் அதனைச் செய்கிறார்கள் என்பது (தேர்ந்த) பொருள். (யாஸ்கர்) ஆத்மாவின் பெயர்களுள் யஜ்ஞமென்னும்சொல்லை எடுத்துச்சொல்வதனால், யஜ்ஞமென்னும் சொல்லுக்கு - (இங்கு)ஆத்மா என்று பொருள். (எது தன் தன்மையை வேறொன்றனிடத்து இருப்பதாகத் தோற்றுவிக்கின்றதோ, அது உபாதியெனப்படும். ஒரு ஸ்படிகத்தின் அருகிலேயுள்ள செம்பருத்திப்பூவானது தன் தன்மையாகிய சிவப்புநிறத்தை அந்தஸ்படிகத்திலே இருப்பதாகத்தோற்றுவிக்கின்றது, அதாவது,அது ஸ்படிகமாகத் தோன்றாது சிவப்புக்கல்லாகவே தோன்றுகின்றது. ஆகவே ஸ்படிகத்திற்கு செம்பருத்திப்பூ உபாதியாம். அது போல, இங்கும் கண்டுகொள்க).

സോഽയം സമ്യഗ്ദർശനലക്ഷണഃ യജ്ഞഃ ദൈവയജ്ഞാദിഷു യജ്ഞേഷു ഉപ-ക്ഷിപ്യതേ 'ബ്രഹ്മാർപ്പണം' ഇത്യാദിശ്ലോകൈഃ പ്രസ്തുതഃ 'ശ്രേയാൻ ദ്രവ്യമയാദ് യജ്ഞാജ് ജ്ഞാനയജ്ഞഃ പരന്തപ' ഇത്യാദിനാ സ്തുത്യർത്ഥം ॥ ൨൫ ॥

൨൬. ശ്രോത്രാദീനീന്ദ്രിയാണ്യന്യേ സംയമാഗ്നിഷു ജുഹ്വതി ।
ശബ്ദാദീൻ വിഷയാനന്യ ഇന്ദ്രിയാഗ്നിഷു ജുഹ്വതി ॥

ശ്രോത്രാദീനി ഇന്ദ്രിയാണി അന്യേ യോഗിനഃ സംയമാഗ്നിഷു । പ്രതീന്ദ്രിയം സംയമോ ഭിദ്യതേ ഇതി ബഹുവചനം । സംയമാ ഏവ അഗ്നയഃ തേഷു ജുഹ്വതി ഇന്ദ്രിയസംയമമേവ കുർവന്തി ഇത്യർത്ഥഃ । ശബ്ദാദീൻ വിഷയാൻ അന്യേ ഇന്ദ്രിയാഗ്നിഷു ഇന്ദ്രിയാണ്യേവ അഗ്നയഃ തേഷു ഇന്ദ്രിയാഗ്നിഷു ജുഹ്വതി ശ്രോത്രാദിഭിഃ അവിരുദ്ധവിഷയഗ്രഹണം ഹോമം മന്യന്തേ ॥ ൨൬ ॥

കിഞ്ച—

൨൭. സർവാണീന്ദ്രിയകർമ്മാണി പ്രാണകർമ്മാണി ചാപരേ ।
ആത്മസംയമയോഗാഗ്നൗ ജുഹ്വതി ജ്ഞാനദീപിതേ ॥

സർവാണി ഇന്ദ്രിയകർമ്മാണി ഇന്ദ്രിയാണാം കർമ്മാണി ഇന്ദ്രിയകർമ്മാണി, തഥാ പ്രാണകർമ്മാണി പ്രാണോ വായുഃ ആധ്യാത്മികഃ തത്കർമ്മാണി ആകുഞ്ചന-

---

" அர்ப்பிப்பது ப்ரஹ்மம்" (ச - உச) என்றுதொடங்கும் சுலோகத்திலே பிரஸ்தாபிக்கப்பட்ட மெய்யறிவுஎன்னும் அத்தகைய இந்தயஜ்ஞத்தை "பரந்தப! திரவியங்களா லாகும் யஜ்ஞத்தைக்காட்டிலும் ஞானயஜ்ஞம் மேலானது" (ச - ௩௩) என்பதுமுதலாகக் கொண்டாடும்பொருட்டு தைவயஜ்ஞம்முதலிய யஜ்ஞங்களின் இடையே (அந்த ஞானயஜ்ஞத்தைப் பகவான்) வைத்தருளுகிறுர். (உரு)

உசா. மற்றையோர்கள் செவிமுதலிய இந்திரியங்களை அடக்கமென்னும் அக்கினிகளில் ஹோமஞ்செய்கிறுர்கள். வேறொருவர் ஓசைமுதலிய விஷயங்களை இந்திரியங்களென்னும் அக்கினிகளில் ஹோமஞ்செய்கிறுர்கள்.

அடக்குதலென்பது ஒவ்வொரு இந்திரியத்திற்கும் வெவ்வேறுயுள்ள தென ('அக்னிகளில்' என்னும்)பன்மை (வழங்கலாயிற்று).சிலயோகிகள் செவிமுதலிய இந்திரியங்களை, (அவற்றை) அடக்குதலென்னும் அக்னிகளிலே ஹோமஞ்செய்கிறுர்கள்: இந்திரிய அடக்கத்தையே செய்கிறுர்கள் என்பது பொருள். சிலர் ஓசைமுதலியவிஷயங்களை இந்திரியங்களென்னும் அக்னிகளில் ஹோமஞ்செய்கிறுர்கள்: (சாஸ்திரத்திற்கு) விரோதமில்லாத விஷயங்களைச் செவிமுதலியவற்ருல் கிரகிப்பதை(யே) ஹோமமாகக் கொள்கிறுர்கள் [தமக்குக் கிடைத்தவற்றுள், விலக்கப்பட்ட விஷயங்களைத் தவிர்த்து, மற்றையவற்றை அந்தந்த இந்திரியங்களால் விருப்பவெறுப்பில்லாது அநுபவிக்கிறுர்க ளென்க.—ஆ.] (உசா)

மேலும்,

உஎ. மற்றையோர்கள்,இந்திரியங்கள் பிராணன் என்றவற்றின் தொழில்களையெல்லாம் ஞானத்தால் பிரகாசிப்பிக்கப்பட்ட ஆத்மஅடக்கமென்னும் யோகாக்கினியிலே ஹோமஞ் செய்கிறுர்கள்.

பிராண னென்பது - ஒவ்வொரு சரீரத்திலுமுள்ள வாயு. அதன் தொழில்-வளைதல்,நிமிர்தல் முதலியன. ஆத்மஅடக்கமாவது - ஆத்மாவினிடத்து (மனத்தை அலையாது)நிறுத்துதல். அதுவே யோகமென்னும் அக்கினி. எண்ணெயினுல் விளக்குப்

𑌪𑍍𑌰𑌾𑌣𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌤𑌾𑌨𑌿 𑌚 𑌅𑌪𑌰𑍇 𑌆𑌤𑍍𑌮𑌸𑌂𑌯𑌮𑌯𑍋𑌗𑌾𑌗𑍍𑌨𑍌 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌸𑌂𑌯𑌮𑌃 𑌆𑌤𑍍𑌮𑌸𑌂𑌯𑌮𑌃 𑌸 𑌏𑌵 𑌯𑍋𑌗𑌾𑌗𑍍𑌨𑌿𑌃 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌆𑌤𑍍𑌮𑌸𑌂𑌯𑌮𑌯𑍋𑌗𑌾𑌗𑍍𑌨𑍌 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 𑌪𑍍𑌰𑌕𑍍𑌷𑌿𑌪𑌨𑍍𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌦𑍀𑌪𑌿𑌤𑍇 𑌸𑍍𑌨𑍇𑌹𑍇𑌨𑍇𑌵 𑌪𑍍𑌰𑌦𑍀𑌪𑍇 𑌵𑌿𑌵𑍇𑌕𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌉𑌜𑍍𑌜𑍍𑌵𑌲𑌭𑌾𑌵𑌮𑌾𑌪𑌾𑌦𑌿𑌤𑍇 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 𑌪𑍍𑌰𑌵𑌿𑌲𑌾𑌪𑌯𑌨𑍍𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௨௭ ॥

௨௮. 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌯𑌜𑍍𑌞𑌾𑌸𑍍𑌤𑌪𑍋𑌯𑌜𑍍𑌞𑌾 𑌯𑍋𑌗𑌯𑌜𑍍𑌞𑌾𑌸𑍍𑌤𑌥𑌾𑌪𑌰𑍇 ।
𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌾𑌶𑍍𑌚 𑌯𑌤𑌯𑌃 𑌸𑌂𑌶𑌿𑌤𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 ॥

𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 𑌤𑍀𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌂 𑌯𑌜𑍍𑌞𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌯𑍇 𑌤𑍇 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 । 𑌤𑌪𑍋𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 𑌯𑍇 𑌤𑌪𑌸𑍍𑌵𑌿𑌨𑌃 𑌤𑍇 𑌤𑌪𑍋𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 । 𑌯𑍋𑌗𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌾𑌹𑌾𑌰𑌾𑌦𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 𑌯𑍋𑌗𑌃 𑌯𑌜𑍍𑌞𑍋 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌯𑍋𑌗𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 । 𑌤𑌥𑌾 𑌅𑌪𑌰𑍇 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌾𑌶𑍍𑌚 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 𑌯𑌥𑌾𑌵𑌿𑌧𑌿 𑌋𑌗𑌾𑌦𑍍𑌯𑌭𑍍𑌯𑌾𑌸𑌃 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 । 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌪𑌰𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 । 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌾𑌶𑍍𑌚 𑌯𑌤𑌯𑌃 𑌯𑌤𑌨𑌶𑍀𑌲𑌾𑌃 𑌸𑌂𑌶𑌿𑌤𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 𑌶𑌿𑌤𑌾𑌨𑌿 𑌤𑌨𑍂𑌕𑍃𑌤𑌾𑌨𑌿 𑌤𑍀𑌕𑍍𑌷𑍍𑌣𑍀𑌕𑍃𑌤𑌾𑌨𑌿 𑌵𑍍𑌰𑌤𑌾𑌨𑌿 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌸𑌂𑌶𑌿𑌤𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 ॥ ௨௮ ॥

𑌕𑌿𑌂 𑌚—

௨௯. 𑌅𑌪𑌾𑌨𑍇 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌽𑌪𑌾𑌨𑌂 𑌤𑌥𑌾𑌪𑌰𑍇 ।
𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑌗𑌤𑍀 𑌰𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑌪𑌰𑌾𑌯𑌣𑌾𑌃 ॥

---

(பிரகாசிப்பிக்கப்பெறுவது) போல, விவேகஅறிவினால் பிரகாசத் தன்மையை அடைவிக்கப்பெற்ற அந்தஅக்கினியிலே இந்திரியங்கள் பிராணன்இவற்றின் தொழில்களையெல்லாம் சிலர் அர்ப்பிக்கிறார்கள்: கரையச்செய்கிறார்கள், ஒடுங்கச்செய்கிறார்கள் என்பது பொருள் [ஸகலத் தொழிலையும் தடுத்து, ஆத்மாவினிடத்து மனம் தலைக்கூடுதலைச் செய்கிறார்க ளென்க.—ஆ.] (௨௭)

௨௮. மற்றையோர் திரவியமென்னும் யஜ்ஞத்தையுடையவர்: தபஸ்என்னும் யஜ்ஞத்தை யுடையவர்: யோகமென்னும் யஜ்ஞத்தையுடையவர்: ஓதுதலென்னும் யஜ்ஞத்தையுடையர்: ஞானமென்னும் யஜ்ஞத்தையுடையவர். இன்னும், சில யதிகள் கடுமையான விரதங்களையுடையவர்.

யோக்யர்கட்குப் பொருள் கொடுத்தலை, சிலர் யஜ்ஞமென்னும் புத்தியோடு செய்கிறார்கள். தவம்புரிபவர் எவரோ, அவர் தபஸ்என்னும் யஜ்ஞத்தைக் கொண்டவர். சிலர், பிராணனை அடக்குதலும் மனத்தை விஷயங்களினின்றும் உள்ளே மடக்குதலும் முதலிய யோகத்தை யஜ்ஞமாகக் கொண்டவர். சிலர், ரிக்வேதம் முதலானவற்றை அப்யஸித்தலை யஜ்ஞமாகக் கொண்டவர். சிலர், சாஸ்திரத்தின் பொருளை நன்குஉணர்தலென்னும் யஜ்ஞத்தைக் கொண்டவர். சிலர் ஊக்கமுள்ள இயல்பினராய் கடுமையான விரதங்களைக் கொண்டவர். (எனவே, இதனுள் ஆறு யஜ்ஞம் கூறப்பட்டன.) (௨௮)

அன்றியும்,

௨௯. சிலர் அபானத்தில் பிராணனை ஹோமஞ்செய்கிறார்கள். அவ்வாறே சிலர், பிராணனில் அபானத்தை ஹோமஞ் செய்கிறார்கள். சிலர் பிராண அபானன்களுடைய போக்குக்களைத் தடுத்து, பிராணாயாமத்திலேயே கருத்தூன்றியவராய் இருக்கிறார்கள். [அபானன் – உள்ளேவரும் மூச்சு, பிராணன் - வெளியே செல்லும் மூச்சு.]

அபானே அபானவ்ருத்தௌ ஜுஹ்வதி ப்ரக்ஷிபந்தி ப்ராணம் ப்ராணவ்ருத்திம், பூரகாக்²யம் ப்ராணாயாமம் குர்வந்தீத்யர்த²꞉ । ப்ராணே அபானம் ததா² அபரே ஜுஹ்வதி, ரேசகாக்²யம் ச ப்ராணாயாமம் குர்வந்தீத்யேதத் । ப்ராணாபானக³தீ முக²நாஸிகாப்⁴யாம் வாயோ꞉ நிர்க³மனம் ப்ராணஸ்ய க³தி꞉, தத்³விபர்யயேண அதோ⁴க³மனம் அபானஸ்ய க³தி꞉, தே ப்ராணாபானக³தீ ருத்³த்⁴வா நிருத்⁴ய ப்ராணாயாமபராயணா꞉ ப்ராணாயாமதத்பரா꞉ கும்ப⁴காக்²யம் ப்ராணாயாமம் குர்வந்தீத்யர்த²꞉ ॥ ௨௯ ॥

கிஞ்ச—

௩௦. அபரே நியதாஹாரா꞉ ப்ராணாந் ப்ராணேஷு ஜுஹ்வதி ।
ஸர்வேঽப்யேதே யஜ்ஞவிதோ³ யஜ்ஞக்ஷபிதகல்மஷா꞉ ॥

அபரே நியதாஹாரா꞉ நியத꞉ பரிமித꞉ ஆஹார꞉ யேஷாம் தே நியதாஹாரா꞉ ஸந்த꞉ ப்ராணாந் வாயுபே⁴தா³ந் ப்ராணேஷு ஏவ ஜுஹ்வதி, யஸ்ய யஸ்ய வாயோ꞉ ஜய꞉ க்ரியதே இதராந் வாயுபே⁴தா³ந் தஸ்மிந் தஸ்மிந் ஜுஹ்வதி, தே தத்ர ப்ரவிஷ்டா இவ ப⁴வந்தி । ஸர்வேঽபி ஏதே யஜ்ஞவித³꞉ யஜ்ஞக்ஷபிதகல்மஷா꞉ யஜ்ஞை꞉ யதோ²க்தை꞉ க்ஷபித꞉ நாஶித꞉ கல்மஷ꞉ யேஷாம் தே யஜ்ஞக்ஷபிதகல்மஷா꞉ ॥ ௩௦ ॥

ஏவம் யதோ²க்தாந் யஜ்ஞாந் நிர்வர்த்ய—

௩௧. யஜ்ஞஶிஷ்டாம்ருதபு⁴ஜோ யாந்தி ப்³ரஹ்ம ஸநாதநம் ।
நாயம் லோகோঽஸ்த்யயஜ்ஞஸ்ய குதோঽந்ய꞉ குருஸத்தம ॥

---

சிலர், அபானத்தின் செய்கையிலே பிராணன் செய்கையை அர்ப்பிக்கிறார்கள்: பூரகமென்னும் பிராணாயாமத்தைச் செய்கிறார்கள் என்பது பொருள். அவ்வாறே சிலர் பிராணனிலே, அபானனை அர்ப்பிக்கிறார்கள்: ரேசகமென்னும் பிராணாயாமத்தைச் செய்கிறார்கள் என்பது பொருள். வாய்மூக்குக்களின் வழியாகக் காற்று வெளியே செல்லுதல் பிராணனுடைய போக்கு. அதற்கு மறுதலையாக உள்ளே செல்லுதல் அபானனுடைய போக்கு. சிலர், பிராண அபானன்களுடைய அப்போக்குக்களைத் தடுத்து, பிராணாயாமத்திலேயே கருத்துள்ளவராய் இருக்கிறார்கள் : கும்பகமென்னும் பிராணாயாமத்தைச் செய்கிறார்கள் என்பது பொருள். (௨௯)

இன்னும்,

௩௦. சிலர் மிதமான ஆஹாரமுடையவராய் வாயுக்களை வாயுக்களில் அர்ப்பிக்கிறார்கள். இவர்களெல்லோருமே யஜ்ஞங்களை அறிந்தவர்கள், (கீழ்க்கூறிய) யஜ்ஞங்களால் பாவந்தேயப் பெற்றவர்கள்.

சிலர் (தம்) உணவை அளவாக அமைத்துக்கொண்டு, பலவாயுள்ள வாயுக்களை வாயுக்களிலேயே ஹோமஞ்செய்கிறார்கள் ; எந்தெந்த வாயுவானது ஜயிக்கப்படுகின்றதோ, அந்தந்த(வாயுவிலே)மற்றைய வாயுவிசேஷங்களை அர்ப்பிக்கிறார்கள். அவை அவற்றுள் புகுந்து [ஒடுங்கி]விட்டனபோல ஆகின்றன. (௩௦)

இவ்வாறு கீழ்க்கூறிய யஜ்ஞங்களைச் செய்து முடித்து,

௩௧. யஜ்ஞத்தின் சேஷமான அமிருதத்தைப் புஜிப்பவர்கள் சாச்வதமான ப்ரஹ்மத்தை அடைகிறார்கள். யஜ்ஞமில்லாதவனுக்கு இவ்வுலகம் இல்லை ; கௌரவரிற் சிறந்தோனே ! மற்றையது எங்கிருந்து ? [இல்லையே இல்லை].

𑌯𑌜𑍍𑌞𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌮𑍃𑌤𑌭𑍁𑌜𑌃 𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌶𑌿𑌷𑍍𑌟𑌂 𑌯𑌜𑍍𑌞𑌶𑌿𑌷𑍍𑌟𑌂 𑌯𑌜𑍍𑌞𑌶𑌿𑌷𑍍𑌟𑌂 𑌚 𑌤𑌚𑍍𑌚 𑌅𑌮𑍃𑌤𑌂 𑌚 𑌯𑌜𑍍𑌞𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌮𑍃𑌤𑌂 𑌤𑌦𑍍 𑌭𑍁𑌞𑍍𑌜𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌯𑌜𑍍𑌞𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌮𑍃𑌤𑌭𑍁𑌜𑌃। 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌾𑌨𑍍 𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑍍 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌤𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌟𑍇𑌨 𑌕𑌾𑌲𑍇𑌨 𑌯𑌥𑌾𑌵𑌿𑌧𑌿 𑌚𑍋𑌦𑌿𑌤𑌂 𑌅𑌨𑍍𑌨𑌮𑍍 𑌅𑌮𑍃𑌤𑌾𑌖𑍍𑌯𑌂 𑌭𑍁𑌞𑍍𑌜𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌯𑌜𑍍𑌞𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌮𑍃𑌤𑌭𑍁𑌜𑍋 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌨𑌾𑌤𑌨𑌂 𑌚𑌿𑌰𑌨𑍍𑌤𑌨𑌂 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑌵𑌶𑍍𑌚𑍇𑌤𑍍; 𑌕𑌾𑌲𑌾𑌤𑌿𑌕𑍍𑌰𑌮𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌯𑌾 𑌇𑌤𑌿 𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌾𑌤𑍍 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 । 𑌨 𑌅𑌯𑌂 𑌲𑍋𑌕𑌃 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌸𑌾𑌧𑌾𑌰𑌣𑍋𑌽𑌪𑌿 𑌅𑌸𑍍𑌤𑌿 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌏𑌕𑍋𑌽𑌪𑌿 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌯𑌸𑍍𑌯 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌸𑌃 𑌅𑌯𑌜𑍍𑌞𑌃 𑌤𑌸𑍍𑌯 । 𑌕𑍁𑌤𑌃 𑌅𑌨𑍍𑌯𑍋 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌸𑌾𑌧𑌨𑌸𑌾𑌧𑍍𑌯𑌃 𑌕𑍁𑌰𑍁𑌸𑌤𑍍𑌤𑌮 ॥ ௩௧ ॥

௩௨. 𑌏𑌵𑌂 𑌬𑌹𑍁𑌵𑌿𑌧𑌾 𑌯𑌜𑍍𑌞𑌾 𑌵𑌿𑌤𑌤𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌮𑍁𑌖𑍇 ।
𑌕𑌰𑍍𑌮𑌜𑌾𑌨𑍍𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌤𑌾𑌨𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌏𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌵𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 ॥

𑌏𑌵𑌂 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌾 𑌬𑌹𑍁𑌵𑌿𑌧𑌾 𑌬𑌹𑍁𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌾 𑌯𑌜𑍍𑌞𑌾 𑌵𑌿𑌤𑌤𑌾 𑌵𑌿𑌸𑍍𑌤𑍀𑌰𑍍𑌣𑌾𑌃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌵𑍇𑌦𑌸𑍍𑌯 𑌮𑍁𑌖𑍇 𑌦𑍍𑌵𑌾𑌰𑍇 । 𑌵𑍇𑌦𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 𑌅𑌵𑌗𑌮𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌮𑍁𑌖𑍇 𑌵𑌿𑌤𑌤𑌾 𑌉𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇; 𑌤𑌦𑍍𑌯𑌥𑌾 ‘𑌵𑌾𑌚𑌿 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 𑌜𑍁𑌹𑍁𑌮𑌃’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌯𑌃 । 𑌕𑌰𑍍𑌮𑌜𑌾𑌨𑍍 𑌕𑌾𑌯𑌿𑌕𑌵𑌾𑌚𑌿𑌕𑌮𑌾𑌨𑌸𑌕𑌰𑍍𑌮𑍋𑌦𑍍𑌭𑌵𑌾𑌨𑍍 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌤𑌾𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌜𑌾𑌨𑍍, 𑌨𑌿𑌰𑍍𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑍋 𑌹𑌿 𑌆𑌤𑍍𑌮𑌾 । 𑌅𑌤𑌃 𑌏𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌵𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 𑌅𑌶𑍁𑌭𑌾𑌤𑍍 । 𑌨 𑌮𑌦𑍍𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑌾 𑌇𑌮𑍇, 𑌨𑌿𑌰𑍍𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑍋𑌽𑌹𑌮𑍍 𑌉𑌦𑌾𑌸𑍀𑌨 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂

---

கீழ்க்கூறிய யஜ்ஞங்களைச் செய்த காலம்போக மிச்சமாயுள்ள காலத்திலே, (தமக்கு)விதிக்கப்பட்ட அமிருதமென்னும் அந்நத்தை எவர்கள் விதிப்படி புஜிக்கிறார்களோ, அவர்கள், (ஸம்ஸாரத்தினின்றும்)விடுபட விரும்புபவரானால், நித்யமான ப்ரஹ்மத்தைக் காலக்கிரமப்படி அடைகிறார்கள். 'காலக்கிரமப்படி' என்பது யுக்தியினால் தெரியவருகின்றது. (யுக்தி - பொருந்தும்விதம்.) கீழ்க்கூறிய யஜ்ஞங்களுள் எவனுக்கு ஒருயஜ்ஞமேனும் இல்லையோ, அவனுக்கு, ஸகலப்பிராணிகட்கும்பொதுவான இவ்வுலகமே இல்லை (என்றால், ஜ்யோதிஷ்டோமம் முதலிய) சிறப்புஸாதநங்களால் ஸாதிக்கத்தக்க மற்றைய (உலகம்) ஏது? கௌரவோத்தம! [இல்லையே இல்லை யென்க.] (௩௧)

௩௨. இவ்வாறு பலவகையாயுள்ள யஜ்ஞங்கள் வேதத்தின் முகத்திலே விரிந்துள்ளன. அவையெல்லாம் கர்மத்தினாலானவை யெனத்தெரிந்துகொள். நீ இவ்வாறு தெரிந்து (தீமையினின்றும்) விடுபடுவாய்.

கீழ்க்கூறிய பலவிதமான யஜ்ஞங்கள் வேதத்தின் முகத்திலே விஸ்தாரமாயுள்ளவை. வேதத்தின் வழியாக [வேதத்தினின்று] அறியப்படுகின்றவை, "வேதத்தின் முகத்திலே விரிந்துள்ளவை" எனப்படுகின்றன. அது, "வாக்கிலேயன்றோ பிராணன்களை ஹோமஞ்செய்கின்றோம்" என்பது முதலாக வரும். அவையெல்லாவற்றையும் மனமொழிமெய்களின் செய்கைகளால் உண்டாவனவாக (அதாவது,) ஆத்மாவல்லாதவற்றினின்றும் தோன்றுவனவாக அறிந்துகொள்; ஏனெனில், ஆத்மா தொழிலில்லாதது. ஆகவே, நீ இவ்வாறு அறிந்து கெடுதியினின்றும் நீங்குவாய். "இவை எனது செய்கைகளல்ல, நான் தொழிலில்லாதவன், உதாஸீநன்"

𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌅𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 𑌅𑌶𑍁𑌭𑌾𑌤𑍍 𑌸𑌂𑌸𑌾𑌰𑌬𑌨𑍍𑌧𑌨𑌾𑌤𑍍 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௩௨ ॥

'𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌰𑍍𑌪𑌣𑌮𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍍𑌲𑍋𑌕𑍇𑌨 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌸𑍍𑌯 𑌯𑌜𑍍𑌞𑌤𑍍𑌵𑌂 𑌸𑌂𑌪𑌾𑌦𑌿𑌤𑌮𑍍 । 𑌯𑌜𑍍𑌞𑌾𑌶𑍍𑌚 𑌅𑌨𑍇𑌕𑍇 𑌉𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑌾𑌃 । 𑌤𑍈𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑍍𑌥𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑍈𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌸𑍍𑌤𑍂𑌯𑌤𑍇 । 𑌕𑌥𑌮𑍍 ?—

௩௩. 𑌶𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌮𑌯𑌾𑌦𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌃 𑌪𑌰𑌂𑌤𑌪 ।
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌖𑌿𑌲𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌪𑌰𑌿𑌸𑌮𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 ॥

𑌶𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌮𑌯𑌾𑌤𑍍 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌸𑌾𑌧𑌨𑌸𑌾𑌧𑍍𑌯𑌾𑌤𑍍 𑌯𑌜𑍍𑌞𑌾𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌃 𑌹𑍇 𑌪𑌰𑌂𑌤𑌪 । 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌮𑌯𑍋 𑌹𑌿 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌫𑌲𑌸𑍍𑌯 𑌆𑌰𑌂𑌭𑌕𑌃, 𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌃 𑌫𑌲𑌸𑍍𑌯 𑌆𑌰𑌂𑌭𑌕𑌃, 𑌅𑌤𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌯𑌤𑌰𑌃 । 𑌕𑌥𑌮𑍍 ? 𑌯𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌮𑌸𑍍𑌤𑌮𑍍 𑌅𑌖𑌿𑌲𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌮𑍋𑌕𑍍𑌷𑌸𑌾𑌧𑌨𑍇 𑌪𑌰𑌿𑌸𑌮𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । '𑌯𑌥𑌾 𑌕𑍃𑌤𑌾𑌯 𑌵𑌿𑌜𑌿𑌤𑌾𑌯𑌾𑌧𑌰𑍇𑌯𑌾𑌃 𑌸𑌂𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑍇𑌨𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑌦𑌭𑌿𑌸𑌮𑍇𑌤𑌿 𑌯𑌤𑍍 𑌕𑌿𑌂𑌚 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 𑌸𑌾𑌧𑍁 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌯𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑍇𑌦 𑌯𑌤𑍍 𑌸 𑌵𑍇𑌦' 𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌃 ॥ ௩௩ ॥

---

என நீ இவ்வாறு தெளிந்தவுடன், இந்த மெய்யறிவினாலே, தீமையாகிய ஸம்ஸாரக் கட்டினின்றும் விடுபடுவாய் என்பது (தேர்ந்த) பொருள். (உதாஸீநன் - உபேக்ஷையுள்ளவன், அதாவது, விவாதஞ்செய்கின்ற இருவருடைய வெற்றி தோல்விகளோடு ஸம்பந்தப்படாது, அவற்றால் வரும் மகிழ்ச்சி வருத்தங்களையும் அடையாது, யாதொரு விகாரமுமின்றி இருப்பவன்.) (௩௨)

ஞானமென்னும் யஜ்ஞமானது மற்றைய யஜ்ஞங்களினும் மேலானது.

“ அர்ப்பிப்பது ப்ரஹ்மம் ” (௪ - ௨௪) என்று தொடங்கும் சுலோகத்தினால் மெய்யறிவிலே யஜ்ஞமானது ஏற்றிக்கூறப்பட்டது. பின்னும், பல யஜ்ஞங்களும் உபதேசிக்கப்பட்டன. ஒருவன்விரும்பிய பயனை ஸித்தமாகவுடைய [அதனைப் பெறுதற்கு ஸாதனமான] அந்த (மற்றைய யஜ்ஞங்களோடு) ஞானத்தை (வைத்துப் பகவான்) புகழ்கிறார் :— எப்படி ?—

**௩௩. பரந்தப ! ஞானமென்னும் யஜ்ஞமானது திரவியங்களாலாகும் யஜ்ஞத்தைப்பார்க்கிலும் மேலானது; பார்த்த ! ஸகலகர்மமும் ஞானத்திலே மிச்சமில்லாது முடியப்பெறுகின்றன.**

பரந்தப ! திரவியங்களாகிய ஸாதனங்களால் ஸாதிக்கப்படும் யஜ்ஞந்தான் பயனை விளைப்பது. ஞானமென்னும் யஜ்ஞமென்பது பயனை விளைவியாதது. ஆதலால், (இது) மேலானதாம்.—எப்படி ?— முக்திக்கு ஸாதனமான ஞானத்திலே ஸகல கர்மமும் முடியப்பெறுகின்றன, அடங்கிநிற்கின்றன என்பது பொருள். ஆகவே, (ஞானயஜ்ஞம் உயர்ந்ததென்க. இதனை, “ சூதாட்டத்திலே) வெல்லப்பட்ட கிருதமென்னும் (வருமானத்திற்கு, அதற்குக்) கீழான (திரேதா, த்வாபரன்,கலி என்னும் வருமானங்கள்) வந்துசேர்வதுபோல, ஜனங்கள் செய்யும் நற்செய்கையெல்லாம் அவனைச் சேர்கின்றது. அவன் அறிந்ததை அறிபவன் எவனோ, (அவனும் அதனையே அடைகிறான் ” (சா - ௪ - ௧ - ௪) என்னும் சுருதியினால் (உணர்க). (௩௩)

तदेतत् विशिष्टं ज्ञानं तर्हि केन प्राप्यत इति? उच्यते—

௩௪. तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया ।
उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः ॥

तद्विद्धि विजानीहि येन विधिना प्राप्यत इति । आचार्यान् अभिगम्य प्रणिपातेन प्रकर्षेण नीचैः पतनं प्रणिपातः दीर्घनमस्कारः तेन "कथं बन्धः? कथं मोक्षः? का अविद्या? का विद्या?" इति परिप्रश्नेन सेवया गुरुशुश्रूषया एवमादिना । प्रश्रयेण आवर्जिता आचार्या उपदेक्ष्यन्ति कथयिष्यन्ति ते ज्ञानं यथोक्तविशेषणं ज्ञानिनः । ज्ञानवन्तोऽपि केचित् यथावत् तत्त्वदर्शनशीलाः, अपरे न भवन्ति; अतो विशिनष्टि तत्त्वदर्शिनः इति । ये सम्यग्दर्शिनः तैः उपदिष्टं ज्ञानं कार्यक्षमं भवति न इतरत् इति भगवतो मतम् ॥ ௩௪ ॥

तथा च सति इदमपि समर्थं वचनम्—

௩௫. यज्ज्ञात्वा न पुनर्मोहमेवं यास्यसि पाण्डव ।
येन भूतान्यशेषेण द्रक्ष्यस्यात्मन्यथो मयि ॥

---

ஒருவன் ஞானத்தைத் தேடவேண்டிய விதமும், இடமும்.

அத்தகைய இச்சிறந்த ஞானமானது அங்ஙனம் எதனால் கிடைக்குமென்பது ? கூறுவோம் :

௩௪. ஸாஷ்டாங்க நமஸ்காரத்தினாலும், கேள்வியினாலும், பணிவிடையினாலும் அதனை அறிந்துகொள். உண்மையைக் கண்டுணர்ந்த ஞானிகள் ஞானத்தை உனக்கு உபதேசிப்பார்கள்.

அது எவ்விதத்தால் கிடைக்குமென்பதைத் தெரிந்துகொள். ஆசார்யரிடம் சென்று நன்றாகக் கீழேவிழுந்து வணங்குதலென்னும் நெடிய நமஸ்காரத்தாலும், "(இந்த ஸம்ஸாரக்)கட்டு (வந்தது) எவ்வாறு ? (இதனின்றும்)விடுபடுதல் எவ்வாறு ? அறியாமையென்பது என்ன ? அறிவு என்பது என்ன ?" என்னும் கேள்வியினாலும், ஆசார்யருக்குப் பணிவிடைசெய்தலாலும், மற்றுமிவைபோன்றவற்றாலும்(நீ ஞானத்தைப் பெறுவாய். பக்தி சிரத்தையோடமைந்த மிக்க ஒடுக்கவணக்கமென்னும்) வழிபாட்டினால் (தமது கருத்திலே) அருள்சுரக்கப்பெற்ற ஞானிகளான ஆசார்யர்கள், கீழே சிறப்பித்துக்கூறிய ஞானத்தை உனக்கு உரைத்தருளுவார்கள். ஞானவான்களாயினும், சிலரே உண்மையை உள்ளபடிகாண்கும் இயல்பினர். மற்றையோர் (அவ்வாறு) அல்லர். ஆதலால் சிறப்பித்துக்கூறுகிறார் "உண்மையைக் கண்டுணர்ந்த" என்று. எவர்கள் மெய்யறிவைப் பெற்றவர்களோ, அவர்கள் உபதேசித்த ஞானம் (தான்), கார்யத்தை ஸாதிக்க வலியதாகின்றது; மற்றையது இல்லை என்பது பகவான் கருத்தென்க. (௩௪)

அவ்வாறுள்ளவளவிலேதான் இத்திருவாக்கும் பொருத்தமுடையதாகும் :

௩௫. பாண்டவ ! நீ எதனை அறிந்து மறுபடியும் இவ்வாறு மயக்கத்தை அடையாயோ, எதனால் ஸகலப்பொருள்களையும் நீ உன்னிடத்தும் என்னிடத்தும் காண்பாயோ, (அந்த ஞானத்தைத் தேடிக்கொள்).

𑌯𑌜𑍍 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌯𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑍈𑌃 𑌉𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑌂 𑌅𑌧𑌿𑌗𑌮𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌪𑍁𑌨𑌃 𑌭𑍂𑌯𑌃 𑌮𑍋𑌹𑌮𑍍 𑌏𑌵𑌂 𑌯𑌥𑌾 𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌮𑍋𑌹𑌂 𑌗𑌤𑌃 𑌅𑌸𑌿 𑌪𑍁𑌨𑌃 𑌏𑌵𑌂 𑌨 𑌯𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 𑌹𑍇 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵 । 𑌕𑌿𑌞𑍍𑌚—𑌯𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌅𑌶𑍇𑌷𑍇𑌣 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑍀𑌨𑌿 𑌸𑍍𑌤𑌮𑍍𑌬𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌨𑌿 𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑌿 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 "𑌮𑌤𑍍𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌇𑌮𑌾𑌨𑌿" 𑌇𑌤𑌿 𑌅𑌥𑍋 𑌅𑌪𑌿 𑌮𑌯𑌿 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑍇 "𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑍇 𑌚 𑌇𑌮𑌾𑌨𑌿" 𑌇𑌤𑌿; 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑍇𑌶𑍍𑌵𑌰𑍈𑌕𑌤𑍍𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌂 𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑌿 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௩௫ ॥

𑌕𑌿𑌞𑍍𑌚—𑌏𑌤𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌮𑌾𑌹𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌮𑍍—

௩௬. 𑌅𑌪𑌿 𑌚𑍇𑌦𑌸𑌿 𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌾𑌪𑌕𑍃𑌤𑍍𑌤𑌮𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌲𑌵𑍇𑌨𑍈𑌵 𑌵𑍃𑌜𑌿𑌨𑌂 𑌸𑌨𑍍𑌤𑌰𑌿𑌷𑍍𑌯𑌸𑌿 ॥

𑌅𑌪𑌿 𑌚𑍇𑌤𑍍 𑌅𑌸𑌿 𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌾𑌪𑌕𑍃𑌦𑍍𑌭𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 𑌅𑌤𑌿𑌶𑌯𑍇𑌨 𑌪𑌾𑌪𑌕𑍃𑌤𑍍 𑌪𑌾𑌪𑌕𑍃𑌤𑍍𑌤𑌮𑌃 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌲𑌵𑍇𑌨𑍈𑌵 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍇𑌵 𑌪𑍍𑌲𑌵𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌵𑍃𑌜𑌿𑌨𑌂 𑌵𑍃𑌜𑌿𑌨𑌾𑌰𑍍𑌣𑌵𑌂 𑌪𑌾𑌪𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑌂 𑌸𑌨𑍍𑌤𑌰𑌿𑌷𑍍𑌯𑌸𑌿 । 𑌧𑌰𑍍𑌮𑍋𑌽𑌪𑌿 𑌇𑌹 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍋𑌃 𑌪𑌾𑌪𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ ௩௬ ॥

𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌕𑌥𑌂 𑌨𑌾𑌶𑌯𑌤𑌿 𑌪𑌾𑌪𑌮𑍍 𑌇𑌤𑌿? 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌤 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௩௭. 𑌯𑌥𑍈𑌧𑌾𑌂𑌸𑌿 𑌸𑌮𑌿𑌦𑍍𑌧𑍋𑌽𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌭𑌸𑍍𑌮𑌸𑌾𑌤𑍍𑌕𑍁𑌰𑍁𑌤𑍇𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌃 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌭𑌸𑍍𑌮𑌸𑌾𑌤𑍍𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 𑌤𑌥𑌾 ॥

𑌯𑌥𑌾 𑌏𑌧𑌾𑌂𑌸𑌿 𑌕𑌾𑌷𑍍𑌠𑌾𑌨𑌿 𑌸𑌮𑌿𑌦𑍍𑌧𑌃 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 𑌇𑌦𑍍𑌧𑌃 𑌦𑍀𑌪𑍍𑌤𑌃 𑌅𑌗𑍍𑌨𑌿𑌃 𑌭𑌸𑍍𑌮𑌸𑌾𑌤𑍍 𑌭𑌸𑍍𑌮𑍀𑌭𑌾𑌵𑌂 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 𑌹𑍇 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨, 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍇𑌵 𑌅𑌗𑍍𑌨𑌿𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌃 𑌸𑌰𑍍𑌵-

---

பாண்டவ! அவர்கள் உபதேசித்த ஞானத்தைப் பெற்று, நீ இப்பொழுது மயக்கமுற்றிருப்பதுபோல மீண்டும் இவ்வாறு மயக்கமுறமாட்டாய். அன்றியும், ப்ரஹ்மாமுதலாகப் புல் ஈறாகவுள்ள ஸகலப்பொருள்களையும், "இவை என்னிடத்து இருக்கின்றன" எனஉன்னிடத்தும், "இவை பரமேச்வரனிடத்தும் இருக்கின்றன" என வாஸுதேவனான என்னிடத்தும் ஞானத்தினால் நேரே காண்பாய்: உபநிஷத்துக்களிலெல்லாம் மிகத்தெளிவா யுணர்த்தப்பட்ட ஜீவேச்வர ஐக்கியத்தை [ஜீவனும் ஈச்வரனும் ஒன்றென்பதை]க் கண்டுதேறுவாய் என்பது பொருள். (௩௫)

**ஞானமென்பது ஸகலபாவத்தையும், ஸகலகர்மத்தையும் எரித்துவிடும்.**

இனி இதன் பெருமையை(க் கேள்):

௩௬. **நீ, பாவஞ்செய்தோர் எல்லாரையும் பார்க்கிலும் அதிக பாவஞ்செய்தவனாயினும், ஞானமாகிய தெப்பத்தினாலேயே ஸகலபாவங்களையும் கடந்திடுவாய்.**

நீ ஞானத்தையே தெப்பமாகச்செய்துகொண்டு பாவமாகிய கடலைக் கடந்துவிடுவாய். (ஸம்ஸாரத்தினின்றும்) விடுபட விரும்புவோனுக்கு, இங்கே புண்யமும் பாவமென்க. (௩௬)

ஞானமானது பாவத்தை எவ்வாறு அழிக்கின்றது என்பது ?—திருஷ்டாந்தம் கூறுவோம் :

௩௭. **அர்ஜுந! ஜ்வலிக்கின்ற தணலானது விறகுகளை எவ்வாறு நீறாகச் செய்கின்றதோ, அவ்வாறே ஞானமென்னும் தணலானது ஸகலபாவத்தையும் நீறாகச் செய்கின்றது.**

அர்ஜுந! நன்கு எரியும் தீயானது விறகுகளைச் சாம்பலாக்குவதுபோல, ஞானமென்னும் தீயானது ஸகலகர்மங்களையும் சாம்பலாக்குகின்றது: வித்து ஆகாத

𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌭𑌸𑍍𑌮𑌸𑌾𑌤𑍍 𑌕𑌰𑍁𑌤𑍇 𑌤𑌥𑌾 𑌨𑌿𑌰𑍍𑌬𑍀𑌜𑌂 𑌕𑌰𑍋𑌤𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌨 𑌹𑌿 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌦𑍇𑌵 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌇𑌨𑍍𑌧𑌨𑌵𑌤𑍍 𑌭𑌸𑍍𑌮𑍀𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 𑌶𑌕𑍍𑌨𑍋𑌤𑌿 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌨𑌿𑌰𑍍𑌬𑍀𑌜𑌤𑍍𑌵𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 𑌇𑌤𑍍𑌯𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑌃 । 𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑍇𑌨 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌶𑌰𑍀𑌰𑌮𑌾𑌰𑌬𑍍𑌧𑌂 𑌤𑌤𑍍 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌫𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌉𑌪𑌭𑍋𑌗𑍇𑌨𑍈𑌵 𑌕𑍍𑌷𑍀𑌯𑌤𑍇, 𑌅𑌤𑍋 𑌯𑌾𑌨𑌿 𑌅𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌫𑌲𑌾𑌨𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍 𑌕𑍃𑌤𑌾𑌨𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌹𑌭𑌾𑌵𑍀𑌨𑌿 𑌚 𑌅𑌤𑍀𑌤𑌾𑌨𑍇𑌕𑌜𑌨𑍍𑌮𑌕𑍃𑌤𑌾𑌨𑌿 𑌚 𑌤𑌾𑌨𑍍𑌯𑍇𑌵 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑌸𑍍𑌮𑌸𑌾𑌤𑍍 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 ॥ ௩௭ ॥

𑌯𑌤𑌃 𑌏𑌵𑌮𑍍 𑌅𑌤𑌃—

௩௮. 𑌨 𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌸𑌦𑍃𑌶𑌂 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌮𑌿𑌹 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ।
𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌯𑌂 𑌯𑍋𑌗𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌃 𑌕𑌾𑌲𑍇𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 ॥

𑌨 𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌸𑌦𑍃𑌶𑌂 𑌤𑍁𑌲𑍍𑌯𑌂 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂 𑌪𑌾𑌵𑌨𑌂 𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌕𑌰𑌮𑌿𑌹 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌤𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵 𑌯𑍋𑌗𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌃 𑌯𑍋𑌗𑍇𑌨 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌮𑌾𑌧𑌿𑌯𑍋𑌗𑍇𑌨 𑌚 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌃 𑌸𑌂𑌸𑍍𑌕𑍃𑌤𑌃 𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑌾𑌂 𑌆𑌪𑌨𑍍𑌨𑌃 𑌸𑌨𑍍 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍁𑌃 𑌕𑌾𑌲𑍇𑌨 𑌮𑌹𑌤𑌾 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 𑌲𑌭𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௩௮ ॥

𑌯𑍇𑌨 𑌏𑌕𑌾𑌨𑍍𑌤𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌃 𑌭𑌵𑌤𑌿 𑌸 𑌉𑌪𑌾𑌯𑌃 𑌉𑌪𑌦𑌿𑌶𑍍𑌯𑌤𑍇—

---

படி[முளைக்கும் சக்தி அற்றுப்போம்படி]செய்கின்றது என்பது பொருள். விறகுகளை (த் தீயானது நேரே சாம்பலாக்குவது)போல, ஞானமென்னும் தீயானது கர்மங்களை நேரேயே சாம்பலாக்கமுடியாதன்றோ. ஆகவே, ஸகலகர்மங்களும் வித்துஆகாததற்கு மெய்யறிவு காரண மென்பது கருத்து. எக்கர்மத்தினால் (இவ்)வுடல் ஆக்கப்பட்டதோ [வந்ததோ], அது, (தன்) பயனைக் கொடுக்கத் தலைப்பட்டுள்ளமையால், அநுபவத்தினாலேயே கழிந்துபோகின்றது (என்பதை) யுக்தியினால் (கண்டுகொள்க. யுக்தி - பொருந்தும்விதம்.) ஆகவே, (தம்தம்) பயனைக் கொடுக்கத் தலைப்படாத (கர்மங்கள்) எவைகளோ, அவைகளெல்லாவற்றையுந்தான் (ஞானமென்னும் தீயானது நீறச்செய்கின்றது. (அவை யாவையெனின்,) ஞான முண்டாதற்குமுன் செய்யப்பட்டவையும், ஞானத்தோடு உடன்நிகழ்பவையும், சென்ற பல பிறவிகளிலே ஸம்பாதிக்கப்பெற்றவையுமா மென்க. (௩௭)

இவ்வாறிருப்பதனால்,

௩௮. ஞானத்திற்கு ஸமமாகத் தூய்மையைச்செய்வது இங்கு இல்லையேஇல்லை [ஒருவனைப் பரிசுத்தப்படுத்தும்விஷயத்திலே ஞானத்திற்கு ஸமமாக வேறொன்று, வ்யவஹாரநிலையிலே இல்லை]. யோகத்தால் சீர்திருத்தப்பட்டவன் அதனைத் தானே தன்னிடத்து (தக்க)காலத்தில் அடைகிறான்.

(ஸம்ஸாரத்தினின்றும்) விடுபட விரும்புவோன், கர்மயோகத்தாலும் ஸமாதியோகத்தாலும் (ஞானமடைதற்கு) ஏற்றதகுதிவரப்பெற்றவனாய் வெகுகாலத்திற்குப் பின் ஞானத்தைத் தானாகவே தன்னிடத்துப் பெறுகின்றான் என்க. (௩௮)

ஞானத்தைப் பெறுதற்கு அந்தரங்கமான ஸாதநம்.

ஞானத்தைப் பெறுதலானது எதனால் நிச்சயமாகக் கைகூடுகின்றதோ, அந்த (அந்தரங்கமான) வழியை(ப் பகவான்) உபதேசித்தருளுகிறார் :

௩௯. 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌨𑍍 𑌲𑌭𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑌤𑍍𑌪𑌰𑌃 𑌸𑌂𑌯𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 𑌪𑌰𑌾𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑍍 𑌅𑌚𑌿𑌰𑍇𑌣𑌾𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌨𑍍 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌲𑍁𑌃 𑌲𑌭𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 । 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌲𑍁𑌤𑍍𑌵𑍇𑌽𑌪𑌿 𑌭𑌵𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 𑌮𑌨𑍍𑌦𑌪𑍍𑌰𑌸𑍍𑌥𑌾𑌨𑌃, 𑌅𑌤 𑌆𑌹—𑌤𑌤𑍍𑌪𑌰𑌃 𑌗𑍁𑌰𑍂𑌪𑌾𑌸𑌦𑌨𑌾𑌦𑌿𑌷𑍁 𑌅𑌭𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌲𑌬𑍍𑌧𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑍇 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌨𑍍 । 𑌤𑌤𑍍𑌪𑌰𑌃 𑌅𑌪𑌿 𑌅𑌜𑌿𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌇𑌤𑍍𑌯𑌤 𑌆𑌹—𑌸𑌂𑌯𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃 𑌸𑌂𑌯𑌤𑌾𑌨𑌿 𑌵𑌿𑌷𑌯𑍇𑌭𑍍𑌯𑍋 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌨𑌿 𑌯𑌸𑍍𑌯 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌸 𑌸𑌂𑌯𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃 । 𑌯 𑌏𑌵𑌂𑌭𑍂𑌤𑌃 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌨𑍍 𑌤𑌤𑍍𑌪𑌰𑌃 𑌸𑌂𑌯𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌶𑍍𑌚 𑌸𑌃 𑌅𑌵𑌶𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌲𑌭𑌤𑍇 । 𑌪𑍍𑌰𑌣𑌿𑌪𑌾𑌤𑌾𑌦𑌿𑌸𑍍𑌤𑍁 𑌬𑌾𑌹𑍍𑌯𑌃 𑌅𑌨𑍈𑌕𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑍋𑌽𑌪𑌿 𑌭𑌵𑌤𑌿, 𑌮𑌾𑌯𑌾𑌵𑌿𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌸𑌂𑌭𑌵𑌾𑌤𑍍; 𑌨 𑌤𑍁 𑌤𑌤𑍍 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑍌 𑌇𑌤𑍍𑌯𑍇𑌕𑌾𑌨𑍍𑌤𑌤𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌲𑌬𑍍𑌧𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑌃 । 𑌕𑌿𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌲𑌾𑌭𑌾𑌤𑍍 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 𑌪𑌰𑌾𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌖𑍍𑌯𑌾𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑍍 𑌉𑌪𑌰𑌤𑌿𑌮𑍍 𑌅𑌚𑌿𑌰𑍇𑌣 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌮𑍇𑌵 𑌅𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 । 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌮𑍇𑌵 𑌮𑍋𑌕𑍍𑌷𑌃 𑌭𑌵𑌤𑍀𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌨𑍍𑌯𑌾𑌯𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌃 𑌸𑍁𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌃 𑌅𑌰𑍍𑌥𑌃 ॥ ௩௯ ॥

---

**௩௯. நம்பிக்கையை யுடையவனாய், அதிலே கருத்தையூன்றி இந்திரியங்களை நன்கு அடக்கியவன் ஞானத்தையடைகிறான் ; ஞானத்தை அடைந்த பின்னர், தாமதமில்லாது உயர்ந்த ஒழிவைப் பெறுகிறான்.**

(வேதம்முதலியவற்றிலே)நம்பிக்கையையுடையவன் ஞானத்தை அடைகிறான். நம்பிக்கையுடைமை இருந்தாலும், ஒருவன்(ஞானஸாதநத்திலே)செல்ல மந்தனாய் [நோக்கமில்லாதவனாய்]இருக்கிறான். ஆதலால், “ ஞானமடைதற்கு ஸாதநமாயிருப்பவையான குருவை வழிபடுதல்முதலானவற்றிலே ஊக்கமுள்ளவனாய்(இருக்கவேண்டும்) ” என்கிறார். அவற்றிலே ஊக்கமுடையோனாயினும், (அவன் தன்)இந்திரியங்களை ஜயிக்காதவனாக இருக்கலாமென, “ விஷயங்களினின்றும் இந்திரியங்களை(உள்ளே) மடக்கினவனாக(இருக்கவேண்டும்)”என்கிறார்.(குருவினுடைய திருவாக்குக்களிலே) நம்பிக்கையும், அ(வரை வழிபடுதல்முதலான)வற்றிலே ஊக்கமும் உடையவனாய் இந்திரியங்களை நன்கு அடக்கி இவ்வாறு நிற்பவன் எவனோ, அவன் அவச்யம் ஞானத்தைப் பெறுகிறான். பகிரங்க(ஸாதந)மான ஸாஷ்டாங்கநமஸ்காரம் முதலியவையோ, (பயனைக் கொடுக்கத்)தவறுபவையாகவும் ஆகின்றன ; (மனத்திலொன்றும், வெளியிலொன்றுமாகக் காட்டுவதனால்)கள்ளமாயத்தன்மைமுதலியன நிகழக்கூடுமாகலின். ஆனால், அவை நம்பிக்கையுடைமைமுதலானவற்றிலே நிகழமாட்டா என(இந்நம்பிக்கையுடைமைமுதலியவை), ஞானத்தைப் பெறுதற்குத் தவறாத வழியாம். மற்று, ஞானத்தைப் பெறுதலால் ஆவதென்ன என்பது ? கூறுவோம் :—(அவன்)ஞானத்தையடைந்தபின்னர், மோக்ஷமெனப்படும் உயர்ந்த ஒழிவைத் தாமதமின்றிச் சீக்கிரமாகவே அடைகிறான். மெய்யறிவினால் விரைவாகவே மோக்ஷம் அமைகின்றதென்பது எல்லாசாஸ்திரங்களாலும் யுக்தியினாலும் நிரூபித்து நன்குநிர்ணயிக்கப்பட்டதான விஷயமென்க. (௩௯)

𑌅𑌤𑍍𑌰 𑌸𑌂𑌶𑌯𑌃 𑌨 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌃, 𑌪𑌾𑌪𑌿𑌷𑍍𑌠𑍋 𑌹𑌿 𑌸𑌂𑌶𑌯𑌃। 𑌕𑌥𑌮𑍍? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௪௦. 𑌅𑌜𑍍𑌞𑌶𑍍𑌚𑌾𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌶𑍍𑌚 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿 ।
𑌨𑌾𑌯𑌂 𑌲𑍋𑌕𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌪𑌰𑍋 𑌨 𑌸𑍁𑌖𑌂 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥

𑌅𑌜𑍍𑌞𑌶𑍍𑌚 𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌶𑍍𑌚 𑌅𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌶𑍍𑌚 𑌗𑍁𑌰𑍁𑌵𑌾𑌕𑍍𑌯𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌷𑍁 𑌅𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌸𑌵𑌾𑌂𑌶𑍍𑌚 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌚 𑌸𑌂𑌶𑌯𑌚𑌿𑌤𑍍𑌤𑌶𑍍𑌚 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿 । 𑌅𑌜𑍍𑌞𑌾𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑍌 𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌃, 𑌨 𑌤𑌥𑌾 𑌯𑌥𑌾 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 । 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌤𑍁 𑌪𑌾𑌪𑌿𑌷𑍍𑌠𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌮𑍍 । 𑌕𑌥𑌮𑍍? 𑌨𑌾𑌯𑌂 𑌸𑌾𑌧𑌾𑌰𑌣𑍋𑌽𑌪𑌿 𑌲𑍋𑌕𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌨 𑌪𑌰𑌃 𑌲𑍋𑌕𑌃 𑌅𑌸𑍍𑌤𑌿 । 𑌨 𑌸𑍁𑌖𑌂, 𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌸𑌂𑌶𑌯𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌸𑌂𑌶𑌯𑌚𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑌂𑌶𑌯𑍋 𑌨 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 ॥ ௪௦ ॥

𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍?—

௪௧. 𑌯𑍋𑌗𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌛𑌿𑌨𑍍𑌨𑌸𑌂𑌶𑌯𑌮𑍍 ।
𑌆𑌤𑍍𑌮𑌵𑌨𑍍𑌤𑌂 𑌨 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌧𑌨𑌂𑌜𑌯 ॥

𑌯𑍋𑌗𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌂 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌦𑌰𑍍𑌶𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑍇𑌨 𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌯𑍇𑌨 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌾 𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑌾𑌖𑍍𑌯𑌾𑌨𑌿 𑌤𑌂 𑌯𑍋𑌗𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌮𑍍 । 𑌕𑌥𑌂 𑌯𑍋𑌗𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑍇𑌤𑌿? 𑌆𑌹— 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌛𑌿𑌨𑍍𑌨𑌸𑌂𑌶𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑍈𑌕𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑍇𑌨 𑌸𑌂𑌛𑌿𑌨𑍍𑌨𑌃 𑌸𑌂𑌶𑌯𑍋 𑌯𑌸𑍍𑌯

---

**ஞானம் ஸம்சயத்தை அறச்செய்வது.**

இதிலே ஸம்சயப்படக்கூடாது ; ஏனெனில், ஸம்சயமென்பது மிகப்பெரிய பாவமாம்.—எப்படி ?— கூறுவோம் :

௪௦. அறியாதவனும், நம்பாதவனும், ஸந்தேகத்தன்மையனும் கெட்டுப்போகிறார்கள். ஸந்தேகத்தன்மையனுக்கு இவ்வுலகம் இல்லை, மற்றை (உலகமும்) இல்லை, ஸுக(மு)ம் இல்லை.

ஆத்மாவை அறியாதவனும், குருவினுடைய திருவாக்கிலும் சாஸ்திரத்திலும் நம்பிக்கையில்லாதவனும், ஸந்தேகப்பட்ட மனத்தினனும் கெட்டுப்போகிறார்கள். அஜ்ஞானியும், நம்பிக்கையில்லாதவனும் கெட்டுப்போகிறார்கள் என்றாலும், ஸந்தேக மனத்தினன் எவ்வாறு அவ்வாறு (இவர்கள் கெட்டுப்போவது) இல்லை. ஸம்சயமன முடையவனேதான் எல்லாரிலும் மிகப்பெரியபாவி.—எப்படி ?—(அவனுக்கு, எல்லார்க்கும்) பொதுவாயுள்ளதுமான இவ்வுலகம் இல்லை. அவ்வண்ணமே, பரலோக மில்லை. ஸந்தேகமனமுள்ளவனுக்குஅவற்றிலும்[இம்மைமறுமை இரண்டிலும்]ஸம்சய முண்டாதலால், ஸுக மில்லை. ஆதலால், ஸம்சயப்படக்கூடாது. (௪௦)

ஏனெனில்,

*௪௧. தநஞ்ஜய ! யோகத்தால் கர்மத்தைத் துறந்து, ஞானத்தால் ஸம்சயமறப் பெற்று, கவனத்தோடிருப்பவனைக் கர்மங்கள் கட்டுப்படுத்தமாட்டா.*

பரம்பொருளைக் காண்பவன், (அப்)பரம்பொருளைக், காணுதலென்னும் யோகத்தினால், தருமம்அதர்மம் எனப்படுகின்ற கர்மங்களைத் துறந்துநிற்கிறான் என்பது எப்படி ?—கூறுகிறார்:—(அவன்), தன்னையும் ஈச்வரனையும் ஒன்றாகக் காணுதலென்னும் ஞானத்தினால் ஸம்சயமறப்பெற்றவன். தநஞ்ஜய! எவன் இவ்வாறுயோகத்தால்

𑌸𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌛𑌿𑌨𑍍𑌨𑌸𑌂𑌶𑌯𑌃 । 𑌯 𑌏𑌵𑌂 𑌯𑍋𑌗𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑌾 𑌤𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌵𑌨𑍍𑌤𑌮𑍍 𑌅𑌪𑍍𑌰𑌮𑌤𑍍𑌤𑌂 𑌗𑍁𑌣𑌚𑍇𑌷𑍍𑌟𑌾𑌰𑍂𑌪𑍇𑌣 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌨 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌅𑌨𑌿𑌷𑍍𑌟𑌾𑌦𑌿𑌰𑍂𑌪𑌂 𑌫𑌲𑌂 𑌨 𑌆𑌰𑌭𑌨𑍍𑌤𑍇 𑌹𑍇 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯 ॥ ௪௧ ॥

𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌤𑍍 𑌅𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌕𑍍𑌷𑌯𑌹𑍇𑌤𑍁𑌕𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌛𑌿𑌨𑍍𑌨𑌸𑌂𑌶𑌯𑌃 𑌨 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮𑌭𑌿𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌦𑌗𑍍𑌧𑌕𑌰𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌦𑍇𑌵, 𑌯𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌵𑌿𑌷𑌯𑍇 𑌸𑌂𑌶𑌯𑌵𑌾𑌨𑍍 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿—

௪௨. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌭𑍂𑌤𑌂 𑌹𑍃𑌤𑍍𑌸𑍍𑌥𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌸𑌿𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌛𑌿𑌤𑍍𑌤𑍍𑌵𑍈𑌨𑌂 𑌸𑌂𑌶𑌯𑌂 𑌯𑍋𑌗𑌮𑌾𑌤𑌿𑌷𑍍𑌠𑍋𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠 𑌭𑌾𑌰𑌤 ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑍇 𑌶𑌤𑌸𑌾𑌹𑌸𑍍𑌰𑍍𑌯𑌾𑌂 𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌯𑌾𑌂 𑌵𑍈𑌯𑌾𑌸𑌿𑌕𑍍𑌯𑌾𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌪𑌰𑍍𑌵𑌣𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍁 𑌉𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌮 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑌾𑌪𑌿𑌷𑍍𑌠𑌮𑍍 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌭𑍂𑌤𑌮𑍍 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌾𑌤𑍍 𑌜𑌾𑌤𑌂 𑌹𑍃𑌤𑍍𑌸𑍍𑌥𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑍌 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌸𑌿𑌨𑌾 𑌶𑍋𑌕𑌮𑍋𑌹𑌾𑌦𑌿𑌦𑍋𑌷𑌹𑌰𑌂 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑌦𑍇𑌵 𑌅𑌸𑌿𑌃 𑌖𑌡𑍍𑌗𑌃 𑌤𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌸𑌿𑌨𑌾 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌸𑍍𑌵𑌸𑍍𑌯, 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌸𑌂𑌶𑌯𑌸𑍍𑌯 । 𑌨 𑌹𑌿 𑌪𑌰𑌸𑍍𑌯 𑌸𑌂𑌶𑌯𑌃 𑌪𑌰𑍇𑌣 𑌛𑍇𑌤𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾-

---

கர்மங்களைத் துறந்தவனை, அந்த ஸாவதான(ஞானியை முக்)குணங்களின் செய்கைகளாகக் காணப்பட்ட கர்மங்கள் கட்டுப்படுத்துவதில்லை, தீமைமுதலாகியபயனை விளைப்பதில்லை யென்க. (௪௧)

க. கர்மயோகத்தை அநுஷ்டித்தலால் அழுக்குத் தேய்ந்துபோக, அதனால் ஞானமுண்டாக, அந்தஞானத்தால் ஸம்சயமறப்பெற்றவனைக் கர்மங்கள் கட்டுவதில்லை; ஞானமென்னும் தீயினால் கர்ம(மனைத்து)ம் எரிக்கப்பட்டமையினாலேயே யென்க. உ. அன்றியும்,ஞானகர்மங்களை அநுஷ்டிக்கும்விஷயத்திலே ஸந்தேகமுடையவன் கெட்டுப்போகிறான் (என்றஇவ்விரண்டும்)எதனால் உள்ளனவோ,

௪௨. அதனால், நீ, அஜ்ஞானத்தா லுண்டாகி நெஞ்சிலே நிலைத்திருப்பதாய், ஆத்மாவைப்பற்றிய இச் சந்தேசத்தை ஞானமென்னும் அரிவாளால் அரிவி யோகத்தைக் கைக்கொள். பாரத ! எழுந்திரு.

ஸ்ரீ மகாபாரதத்திலே நூறாயிரக்கிரந்த ஸம்ஹிதையாய், வ்யாஸர் அருளிச்செய்ததாய், பீஷ்மபர்வத்திலே ஸ்ரீமத் பகவத்கீதைகளாக, உபநிஷத்துக்களாக, ப்ரஹ்ம வித்யையாக, யோகசாஸ்திரமாக இருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணார்ஜுநஸம்வாதத்திலே ஞானயோகம் என்னும் நான்காம் அத்தியாயம் முற்றும்.

ஆதலால், நீ, மிகப்பொல்லாததும் அவிவேகத்தால் உண்டானதும் புத்தியிலே நிலைத்திருப்பதும் தான்[நீ]கெடுதற்குக் காரணமானதுமாய் ஆத்மாவைப்பற்றியதான த[உ]ன்னுடை இச்சம்சயத்தை. துன்பம்மயக்கம்முதலான தீங்குகளைப் போக்கும் மெய்யறிவென்னும் அரிவாளால் அரிவி, மெய்யறிவுக்கு ஸாதநமான கர்மாநுஷ்டானத்தைக் கைக்கொள், அதாவது(அதனைச்)செய், பாரத ! இனி இப்பொழுது போர் புரிய எழுந்திரு. என(ப் பகவான் அருளிச்செய்யலானார்).

𑌧𑌃, 𑌯𑍇𑌨 𑌸𑍍𑌵𑌸𑍍𑌯𑍇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑍍𑌯𑍇𑌤 । 𑌅𑌤𑌃 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌷𑌯𑍋𑌽𑌪𑌿 𑌸𑍍𑌵𑌸𑍍𑌯𑍈𑌵 𑌭𑌵𑌤𑌿 । 𑌛𑌿𑌤𑍍𑌤𑍍𑌵𑌾 𑌏𑌨𑌂 𑌸𑌂𑌶𑌯𑌂 𑌸𑍍𑌵𑌵𑌿𑌨𑌾𑌶𑌹𑍇𑌤𑍁𑌭𑍂𑌤𑌂, 𑌯𑍋𑌗𑌂 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑍋𑌪𑌾𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌮𑌾𑌤𑌿𑌷𑍍𑌠 𑌕𑍁𑌰𑍁 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌉𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠 𑌚 𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌯 𑌹𑍇 𑌭𑌾𑌰𑌤 𑌇𑌤𑌿 ॥ ௪௨ ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌭𑌾𑌷𑍍𑌯𑍇 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

---

ஸம்சயமானது ஆத்மாவைப்பற்றிய தாதலின், "தன்னுடைய" (என்பதை வருவித்துக்கொள்க). ஒருவனுடைய ஸம்சயத்தை வேறொருவன் அறுக்கமுடியாததலின், தன்னுடைய என்று சிறப்பித்துக்கூறவேண்டும். ஆதலால்,(ஸம்சயமானது) ஆத்மாவைப்பற்றியதாயினும், தன்னுடையதாகவே ஆகின்றது.(தான் - ஆத்மா. ஒருவன் இப்பியைப் பார்த்து, இது இப்பியோ வெள்ளியோ என ஐயமுற்றவிடத்து அச்சந்தேகம் இப்பியைப்பற்றியதாய் அவனிடத்து உள்ளது. இங்கேயோ,இவ்வாறு இல்லை. ஸம்சயமானது தன்னைப்பற்றியதாய்த் தன்னிடத்தே உள்ளது. இதனை விளக்கும்பொருட்டு "தன்னுடைய" என்பதை வருவித்துக்கொள்ளவேண்டும் என்க.—ஆ.) (௪௨)

ஸ்ரீமத் பகவத்கீதாபாஷ்யத்தில் நான்காவது அத்தியாயம் முற்றும்.

---

𑌅𑌥

## 𑌪𑌞𑍍𑌚𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑌃 ॥

‘𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌰𑌭𑍍𑌯 ‘𑌸 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍’ ‘𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌦𑌗𑍍𑌧𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌮𑍍’ ‘𑌶𑌾𑌰𑍀𑌰𑌂 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍’ ‘𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌾𑌲𑌾𑌭𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑌃’ ‘𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌰𑍍𑌪𑌣𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌹𑌵𑌿𑌃’ ‘𑌕𑌰𑍍𑌮𑌜𑌾𑌨𑍍 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌤𑌾𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍’ ‘𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌖𑌿𑌲𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥’ ‘𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌃 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿’ ‘𑌯𑍋𑌗𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌮𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑍈𑌃 𑌪𑌦𑍈𑌃 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌚𑍋𑌦𑌿𑌤𑌵𑌾𑌨𑍍 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍; ‘𑌛𑌿𑌤𑍍𑌤𑍍𑌵𑍈𑌨𑌂 𑌸𑌂𑌶𑌯𑌂 𑌯𑍋𑌗𑌮𑌾𑌤𑌿𑌷𑍍𑌠’ 𑌇𑌤𑍍𑌯𑌨𑍇𑌨 𑌪𑌦𑍇𑌨 𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌚𑍋𑌦𑌿𑌤𑌵𑌾𑌨𑍍। 𑌉𑌭𑌯𑍋𑌶𑍍𑌚 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌗𑌤𑌿𑌵𑌤𑍍 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌤𑍍 𑌏𑌕𑍇𑌨 𑌸𑌹 𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑌶𑌕𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌕𑌾𑌲𑌭𑍇𑌦𑍇𑌨 𑌚 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌵𑌿𑌧𑌾𑌨𑌾𑌭𑌾𑌵𑌾𑌤𑍍, 𑌏𑌤𑌯𑍋𑌃 𑌅𑌨𑍍𑌯𑌤𑌰𑌕𑌰𑍍𑌤𑍍𑌵𑍍𑌯𑌤𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑍇 𑌸𑌤𑍍𑌯𑌾𑌂 𑌯𑌤𑍍 𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌯𑌤𑌰𑌂 𑌏𑌤𑌯𑍋𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌃 𑌤𑌤𑍍 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌨 𑌇𑌤𑌰𑌤𑍍 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌮𑌨𑍍𑌯𑌮𑌾𑌨𑌃 𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌯𑌤𑌰𑌬𑍁𑌭𑍁𑌤𑍍𑌸𑌯𑌾 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚—‘𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 ॥

𑌨𑌨𑍁 𑌚 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌭𑌿𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌯𑌿𑌷𑍍𑌯𑌨𑍍 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌦𑌾𑌹𑍃𑌤𑍈𑌃 𑌪𑌦𑍈𑌃 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌚𑍋𑌦𑌿𑌤𑌵𑌾𑌨𑍍, 𑌨 𑌤𑍁 𑌕𑌰𑍍𑌮𑌾-

---

## ஐந்தாம் அத்தியாயம் : ஸந்யாஸ யோகம்.

### அநுஷ்டிக்க நலமானது கர்மயோகமா ? ஸந்யாஸமா ?

“ எவன் கர்மத்தில் ” (௪ - ௧௮) என்பது முதல், “ஞானமென்னும் தீயினல்” (௪ - ௧௯), “ சாரீரகர்மத்தை ” (௪-௨௧), “ தானுகக்கிடைத்ததை ” (௪-௨௨), “ அர்ப்பிப்பது ” (௪-௨௪), “ அவை யெல்லாவற்றையும்” (௪-௩௨), “ஸகலகர்மமும்” (௪-௩௩), “ ஞானம் ” (௪ - ௩௭), “ கர்மங்களை ” (௪-௪௧) என்பன ஈறுகவுள்ள திருவாக்குக்களால் ஸகலகர்மங்களையும் துறந்திடுதலைப் பகவான் கூறினர்.“இச்சம்சயத்தை (ஞானமென்னும் வாளால்) அரிவி, (கர்ம) யோகத்தைச் செய்யக்கடவாய் ” (௪ - ௪௨) என்னும் இத்திருவாக்கினுல் ‘ கர்மாநுஷ்டானமாகிய யோகத்தையும் நீ செய்யவேண்டும் ’ எனக் கூறினர். இனி, கர்மங்களை அநுஷ்டித்தலும் கர்மங்களைத் துறந்திடுதலுமாகிய இரண்டும், நிற்றலென்பதும் நடத்தலென்பதும் போல, ஒன்றற்கொன்று விரோதித்தலால் (அவற்றை) ஒருவன் ஒருங்கே அநுஷ்டிக்கமுடியாது. அன்றியும், (அவற்றை) வெவ்வேறுகாலத்தில் அநுஷ்டிக்கலாம் எனவும் விதிக்கப்படவில்லை. ஆகவே, இவ்விரண்டனுள் ஏதாவதொன்றை அநுஷ்டிக்கவேண்டுமென்பது கருத்தினுல் அமைய, ‘கர்மங்களை அநுஷ்டித்தலும் கர்மங்களைத் துறந்திடுதலுமாகிய இவ்விரண்டனுள் எது சிறந்ததோ, அதனைச் செய்யவேண்டும் ; மற்றையது இல்லை’ என இவ்வாறுகக்கொண்டு அர்ஜுனன், சிறந்ததைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்னும் விருப்பத்தினுல் “ கிருஷ்ண ! ” (௫ - ௧) என்பதுமுதலாகக் கூறலானுன் :

(ஆக்ஷேபம்):—அப்படியானுல், பகவான் ஞானயோகத்தால் நிஷ்டையை உணர்த்தும்பொருட்டு, முன்எடுத்துக்காட்டிய திருவாக்குக்களால் கர்மங்களைத் துறந்திடு

𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 । 𑌅𑌤𑌶𑍍𑌚 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌃 𑌭𑌿𑌨𑍍𑌨𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌨𑍍𑌯𑌤𑌰𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌯𑌤𑌰𑌤𑍍𑌵𑌬𑍁𑌭𑍁𑌤𑍍𑌸𑌯𑌾 𑌅𑌯𑌂 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃 𑌅𑌨𑍁𑌪𑌪𑌨𑍍𑌨𑌃 ॥ 𑌸𑌤𑍍𑌯𑌮𑍍; 𑌏𑌵𑌂 𑌤𑍍𑌵𑌦𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑍇𑌣 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑍋 𑌨 𑌉𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇; 𑌪𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌃 𑌯𑌥𑌾𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑍇𑌣 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃 𑌯𑍁𑌜𑍍𑌯𑌤 𑌏𑌵𑍇𑌤𑌿 𑌵𑌦𑌾𑌮𑌃 । 𑌕𑌥𑌮𑍍? 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌦𑌾𑌹𑍃𑌤𑍈𑌃 𑌵𑌚𑌨𑍈𑌃 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑌯𑌾 𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑌿𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌪𑍍𑌰𑌾𑌧𑌾𑌨𑍍𑌯𑌮𑌨𑍍𑌤𑌰𑍇𑌣 𑌚 𑌤𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌤𑍁𑌃 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌸𑌂𑌭𑌵𑌾𑌤𑍍 𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌦𑌪𑌿 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌪𑌕𑍍𑌷𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌃 𑌅𑌨𑍂𑌦𑍍𑌯𑌤𑍇; 𑌨 𑌪𑍁𑌨𑌃 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌤𑍍𑌕𑌰𑍍𑌤𑍃𑌕𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌯 𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑌿𑌤𑌮𑍍 𑌇𑌤𑌿 । 𑌏𑌵𑌂 𑌮𑌨𑍍𑌵𑌾𑌨𑌸𑍍𑌯 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌃 𑌅𑌵𑌿𑌦𑍍𑌵𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌕𑌰𑍍𑌤𑍃𑌕𑌤𑍍𑌵𑌮𑌪𑌿 𑌅𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑍇𑌨 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍇𑌣 𑌤𑌯𑍋𑌃 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌤𑍍 𑌅𑌨𑍍𑌯𑌤𑌰𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑍍𑌵𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇 𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌯𑌤𑌰𑌂 𑌚 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌨 𑌇𑌤𑌰𑌤𑍍 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌯𑌤𑌰𑌵𑌿𑌵𑌿𑌦𑌿𑌷𑌯𑌾 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃 𑌨 𑌅𑌨𑍁𑌪𑌪𑌨𑍍𑌨𑌃 ॥

𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌚𑌨𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑍇𑌨𑌾𑌪𑌿 𑌪𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌃 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑌃 𑌏𑌵𑌮𑍇𑌵𑍇𑌤𑌿 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 । 𑌕𑌥𑌮𑍍? “𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍌 𑌨𑌿𑌃𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌕𑌰𑍌 𑌤𑌯𑍋𑌸𑍍𑌤𑍁

---

தலை ஆத்மாவை அறிபவனுக்குக் கூறினரேயன்றி ஆத்மாவை அறியாதவனுக்கு இல்லை. ஆகவே, கர்மங்களை அநுஷ்டித்தலும் கர்மங்களைத்துறந்திடுதலுமாகிய இரண்டும் வெவ்வேறு புருஷர்களைப் பற்றியுள்ளமையால் (அவற்றுள்) எது சிறந்ததெனத் தெரிந்துக்கொள்ளவேண்டும் என்னும் கருத்தினால் இவ்வினா (வந்ததென்பது) பொருந்தாது.

(ஸமாதாநம்) :—உண்மை ; இவ்வாறு உன் கருத்தின்படி வினாப் பொருந்தாது ; மற்று, கேட்கின்றவனுடைய சொந்தக்கருத்தின்படி வினா, பொருந்தியே நிற்கின்றதெனக்கூறுவோம்.—எப்படி?—கர்மங்களைத் துறந்திடவேண்டுமென்பது, முன் எடுத்துக்காட்டிய திருவாக்குக்களினால் பகவான் சொல்லக்கருதியது. அன்றியும், (ஸந்ந்யாஸத்திற்கு) முதன்மை இல்லாவிடில், கர்த்தாவினால் அது செய்யப்படவேண்டுமென்பது ஏற்காது. ஆதலால், கர்த்தாவானவன் அஜ்ஞானியாயினும் (விஷயங்களிலே மிக்கவைராக்கியமுள்ளவனாயின், அவனும் கர்மஸந்ந்யாஸ)பக்ஷத்தில்(அதிகாரியாவான் என்பது கருத்து. ஆகவே, இங்கு, அவ்வாறு)அமைந்தவனே குறிக்கப்படுகிறான். ஆனால், கர்மஸந்ந்யாஸத்திலே ஞானிதான் அதிகாரியென்பது கருத்தன்று ; ஆதலின், (அஜ்ஞானிக்கும் ஒருநிலைமையிலே கர்மஸந்ந்யாஸம் உண்டு என அறிக. இனி) இவ்வாறாக அஜ்ஞானியான புருஷனும், கர்மங்களை அநுஷ்டித்தலினும் கர்மங்களைத்துறந்திடுதலினும் அதிகாரியாக இருக்கிறான் என்று அர்ஜுநன் (மனத்திற்) கொள்ள, அப்பொழுது முற்கூறியபடி அவை இரண்டற்கும் ஒன்றற்கொன்றுள்ள மாறுபாட்டினால் ஏதாவதொன்றைச் செய்யவேண்டுமென்று அமைய, (அவற்றுள்) மேலானதையே செய்யவேண்டுமேயன்றி மற்றையதை இல்லை என (அவற்றுள்) மேலானதைத் தெரிந்துகொள்ளும் கருத்தோடு (கேட்ட அவன்) வினாவானது பொருந்தாததாய் இல்லையென்க.

இவ்வினாவானது ஞானியைப்பற்றியதன்று.

(பகவானுடைய) மறுமொழிவாக்கியத்தின்பொருளை ஆராய்தலாலும், கேட்கிறவனுடைய கருத்து இப்படித்தான் என்று தெரியவருகின்றது.—எப்படி ?— “ துறவும், கர்மயோகமும் உறுதியானநன்மையைச் செய்பவை ; ஆனால், அவற்றுள் கர்ம

कर्मयोगो विशिष्यते" इति वचनम्। एतस्य निरूप्यम्—किम् आत्मवित्कर्तृकयोः संन्यासकर्मयोगयोः निःश्रेयसकरत्वं प्रयोजनम् उक्त्वा तयोरेव तु कुतश्चित् विशेषात् कर्मसंन्यासात् कर्मयोगस्य विशिष्टत्वम् उच्यते? आहोस्वित् अनात्मवित्कर्तृकयोः संन्यासकर्मयोगयोः तदुभयम् उच्यते? इति॥

किं च अतः—यदि आत्मवित्कर्तृकयोः संन्यासकर्मयोगयोः निःश्रेयसकरत्वं, तयोस्तु कर्मसंन्यासात् कर्मयोगस्य विशिष्टत्वम् उच्यते; यदि वा अनात्मवित्कर्तृकयोः संन्यासकर्मयोगयोः तदुभयम् उच्यते इति॥

अत्र उच्यते—

आत्मवित्कर्तृकयोः संन्यासकर्मयोगयोः असंभवात् तयोः निःश्रेयसकरत्ववचनं कर्मसंन्यासाच्च कर्मयोगस्य विशिष्टत्वाभिधानम् इत्येतत् उभयम् अनुपपन्नम्। यदि अनात्मविदः कर्मसंन्यासः तत्प्रतिकूलश्च कर्मानुष्ठानलक्षणः कर्मयोगः संभवेताम्, तदा तयोः निःश्रेयसकरत्वोक्तिः कर्मयोगस्य च कर्मसंन्यासात् विशिष्टत्वाभिधानम्

---

யோகம் சிறப்புற்றது" (ஒ-௨) என்பது மறுமொழி. ஞானியைக்கர்த்தாவாகவுடைய துறவும் கர்மயோகமும் உறுதியானநன்மையைச் செய்பவையென்னும் பயனைக் கூறி, அவற்றுள்ளே கர்மங்களைத் துறந்திடுதலைக்காட்டிலும் கர்மயோகம் ஏதோஒருவிசேஷத்தால் மேலானது என இதனால் கூறப்படுகின்றதா? அல்லது, அஜ்ஞானியைக் கர்த்தாவாகவுடைய துறவும் கர்மயோகமுமாகிய இவற்றிற்கு அவையிரண்டும் [உறுதியான நன்மையைச் செய்வதும், கர்மயோகம் மேலானதென்பதும்] கூறப்படுகின்றனவா? என இதனை [மறுமொழியை] ஆராயவேண்டும்.

ஆகவே, இன்னும் (ஒருவினா வருமாறு):—ஞானிசெய்யும் கர்மஸந்யாஸமும் கர்மயோகமும் உறுதியானநன்மையைச் செய்பவை என்பதும், ஆனால் அவற்றுள் கர்மஸந்யாஸத்தினும் கர்மயோகம் மேலானது என்பதும் கூறப்பட்டால், (வரும் குற்றமென்ன?)அல்லது, அஜ்ஞானிசெய்யும் கர்மஸந்யாஸம் கர்மயோகம் என்றவற்றிற்கு அவையிரண்டும் கூறப்பட்டால், (வரும் பயனென்ன?) என்பது.

இதனுள், (முதல்பக்ஷத்திலே வரும் குற்றத்தைக்)கூறுவோம்:

ஞானியைக் கர்த்தாவாகவுடைய துறவும் கர்மயோகமும் நிகழக்கூடாமையின் அவை உறுதியானநன்மையைச் செய்பவை எனக்கூறுதலும், அவனுடைய கர்மஸந்யாஸத்தினும் கர்மயோகம் மேலானது எனக்கூறுதலுமாகிய இவ்விரண்டும் பொருந்தா என்க. ஆத்மாவை அறியாதவனுக்குக் கர்மங்களைத்துறந்திடுதலும், அதற்கு மாறானதும் (அதாவது,) கர்மங்களை அநுஷ்டித்தலாகிய கர்மயோகமும் நிகழக்கூடுமாயின், அவை இரண்டும் உறுதியான நன்மையைச் செய்பவை என்றலும், கர்மயோகம் கர்மங்களைத்துறந்திடுதலினும் மேலானதென்றலும் ஆகியஇவ்விரண்டும் அப்பொழுது

இத்யேதச்ச உபயம் உபபத்யதே। ஆத்மவிதஸ்து ஸம்ந்யாஸகர்மயோகயோ: அஸம்பவாத் தயோ: நிஶ்ரேயஸகரத்வவசநம் ஸம்ந்யாஸாச்ச கர்மயோக: விஶிஷ்யதே இதி ச அநுபபந்நம்॥

அத்ர ஆஹ—கிம் ஆத்மவித: ஸம்ந்யாஸகர்மயோகயோ: உபயோரபி அஸம்பவ:? ஆஹோஸ்வித் அந்யதரஸ்ய அஸம்பவ:? யதா ச அந்யதரஸ்ய அஸம்பவ: ததா கிம் கர்மஸம்ந்யாஸஸ்ய? உத கர்மயோகஸ்ய? இதி। அஸம்பவே காரணம் ச வக்தவ்யம் இதி॥ அத்ர உச்யதே—ஆத்மவித: நிவ்ருத்தமித்யாஜ்ஞாநத்வாத் விபர்யயஜ்ஞாநமூலஸ்ய கர்மயோகஸ்ய அஸம்பவ: ஸ்யாத்। ஜந்மாதிஸர்வவிக்ரியாரஹிதத்வேந நிஷ்க்ரியம் ஆத்மாநம் ஆத்மத்வேந யோ வேத்தி தஸ்ய ஆத்மவித: ஸம்யக்தர்ஶநேந அபாஸ்தமித்யாஜ்ஞாநஸ்ய நிஷ்க்ரியாத்மஸ்வரூபாவஸ்தாநலக்ஷணம் ஸர்வகர்மஸம்ந்யாஸம் உக்த்வா தத்விபரீதஸ்ய மித்யாஜ்ஞாநமூலகர்த்ருத்வாபிமாநபுர:ஸரஸ்ய ஸக்ரியாத்மஸ்வரூபாவஸ்தாநரூபஸ்ய கர்மயோகஸ்ய இஹ கீதாஶாஸ்த்ரே தத்ர தத்ர ஆத்மஸ்வரூபநிரூபணப்ரதேஶேஷு ஸம்யக்ஜ்ஞாநமித்யாஜ்ஞாநதத்கார்யவிரோதாத் அபாவ: ப்ரதிபாத்யதே யஸ்மாத் தஸ்மாத் ஆத்மவித: நிவ்ருத்தமித்யாஜ்ஞாநஸ்ய விபர்யயஜ்ஞாநமூல: கர்மயோகோ ந ஸம்பவதி இதி யுக்தம் உக்தம் ஸ்யாத்॥

---

பொருந்தும். ஆனல், ஆத்மாவை அறிந்தவனுக்குத் துறவும் கர்மயோகமும் நிகழாமையின், அவைஇரண்டும் உறுதியான நன்மையைச் செய்பவை என்று கூறலும், கர்மயோகம் துறவினும் மேலான தென்பதும் பொருந்தா என்க.

துறவும் கர்மயோகமும் ஞானிக்குப் பொருந்தா.

(ஆக்ஷேபம்) :—இதில் (பிரதிவாதி) கூறுகிருன்:— ஆத்மாவை அறிந்தவனுக்குத் துறவு கர்மயோகம் இரண்டுமே நிகழ்வதில்லையா? அல்லது, எதாவதொன்று நிகழ்வதில்லையா? எதாவதொன்று நிகழ்வதில்லையானல், அங்ஙனம் (அது)கர்மஸந்யாஸமா? அல்லது, கர்மயோகமா? என்பது. (அவை இரண்டுமாயினும், எதாவதொன்ருயினும் அவனுக்கு) நிகழாதிருத்தலிலே காரணமும் சொல்லவேண்டும் என்பது.

(ஸமாதாநம்):— இதில் (வாதி) கூறுகிருன்:— ஆத்மாவை அறிந்தவனுக்குப் பொய்யறிவு நீங்கியுள்ளமையால், மயக்கஅறிவு காரணமாகவரும் கர்மயோகம் நிகழாமை யாகும். எவன் தன்னை, பிறத்தல் முதலிய எத்தகையவிகாரங்களும் கர்மங்களும் இல்லாத ஆத்மாவாக அறிகிருனே, அந்த ஆத்மஞானிக்கு (அதாவது,) மெய்யறிவினுல் பொய்யறிவு நீங்கியவனுக்கு, கர்மமில்லா ஆத்மவடிவமாகவே நிற்றலாகிய ஸகலகர்மத்துறவைக் கூறிப், பின்னே, அதற்கு மாருனதாய், பொய்யறிவு மூலமாக வரும் (யான் தொழிலைச்) செய்பவன் என்னும் முனைப்பை முன்னிட்டு, தொழிலோடு கூடிய ஆத்மவடிவமாகவே நிற்றலாகிய [ஆத்மா தொழிலைப் பெற்றதுஎன்னும் எண்ணத்தைத் தழுவிநிற்பதாகிய]கர்மயோகமானது, மெய்யறிவு பொய்யறிவுகட்கும்(அவ்வாறே)அவற்றின்செய்கைகட்கும் உள்ள மாறுபாட்டினுல்(ஞானிக்கு)இல்லை என இங்குக் கீதாசாஸ்திரத்தில் ஆங்காங்கு ஆத்மா இன்னதென்று நிரூபிக்குமிடங்களிலே உணர்த்தப்படுகின்றது. ஆதலால், பொய்யறிவு நீங்கி ஆத்மாவை அறிந்தவனுக்கு, மயக்கஅறிவு மூலமாகவரும் கர்மயோகம் நிகழாதெனக் கூறியது நேராகுமென்க.

𑌤𑍇𑌷𑍁 𑌤𑍇𑌷𑍁 𑌵𑌾𑌕𑍍𑌯𑍇𑌷𑍁 𑌆𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑌪𑍍𑌰𑌦𑍇𑌶𑍇𑌷𑍁 𑌆𑌤𑍍𑌮-
𑌵𑌿𑌦𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌭𑌾𑌵𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿? 𑌅𑌤𑍍𑌰 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—‘𑌅𑌵𑌿𑌨𑌾𑌶𑌿 𑌤𑍁 𑌤𑌤𑍍’
𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌯 ‘𑌯 𑌏𑌨𑌂 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌹𑌨𑍍𑌤𑌾𑌰𑌮𑍍’ ‘𑌵𑍇𑌦𑌾𑌵𑌿𑌨𑌾𑌶𑌿𑌨𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍌
𑌤𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌰 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌦𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌭𑌾𑌵𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

𑌨𑌨𑍁 𑌚 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍋𑌽𑌪𑌿 𑌆𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑌪𑍍𑌰𑌦𑍇𑌶𑍇𑌷𑍁
𑌤𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌰 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑍍𑌯𑌤𑍇 𑌏𑌵; 𑌤𑌦𑍍 𑌯𑌥𑌾 ‘𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍 𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵 𑌭𑌾𑌰𑌤’
‘𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌮𑌪𑌿 𑌚𑌾𑌵𑍇𑌕𑍍𑌷𑍍𑌯’ ‘𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑍇𑌵𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑍇’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍌 । 𑌅𑌤𑌶𑍍𑌚 𑌕𑌥𑌮𑍍
𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌦𑌃 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌅𑌸𑌂𑌭𑌵𑌃 𑌸𑍍𑌯𑌾𑌦𑌿𑌤𑌿? 𑌅𑌤𑍍𑌰 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌿-
𑌥𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑌤𑍍𑌕𑌾𑌰𑍍𑌯𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌤𑍍, ‘𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌨𑍇𑌨
𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌦𑌾𑌮𑍍 𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌤𑍍𑌕𑌰𑍍𑌤𑍃𑌕𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌤𑌃 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌾-
𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌯𑌾𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌯𑌾𑌃 𑌪𑍃𑌥𑌕𑍍𑌕𑌰𑌣𑌾𑌤𑍍, 𑌕𑍃𑌤-
𑌕𑍃𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌦𑌃 𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌭𑌾𑌵𑌾𑌤𑍍, ‘𑌤𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇’
𑌇𑌤𑌿 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌭𑌾𑌵𑌵𑌚𑌨𑌾𑌚𑍍𑌚, ‘𑌨 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑌨𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌤𑍍’ ‘𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌤𑍁

---

(வினு) :—மற்று, ஆத்மா இன்னது என நிரூபிக்கின்ற எந்தெந்த இடங்களிலே, ஆத்மாவை அறிந்தவனுக்குக் கர்மமின்மையானது உணர்த்தப்படுகின்றது என்பது ?

(விடை) :—(அவற்றை) இங்குக்கூறுவோம்:— ஆத்மாவை அறிந்தவனுக்குக் கர்மமின்மையானது “அது அழிவில்லாதது”(உ - கஎ) எனப்பிரஸ்தாபிக்கப்பட்டு “ எவன் இதனை ”(உ - ககூ), “அழிவில்லாததாக ”(உ- உக)என்பனமுதலியவற்றிலே ஆங்காங்குக் கூறப்படுகின்றது.

(ஆக்ஷேபம்) :—அப்படியானுல், ஆத்மா இன்னது என்று நிரூபிக்கும் இடங்களிலே ஆங்காங்குக் கர்மயோகமும்தான் உணர்த்தப்படவேபடுகின்றது. அது, “பாரத ! ஆதலால், போர்புரியக்கடவாய்” (உ - கஅ), “ஸ்வதருமத்தையும் நோக்கியும் ” (உ - ஙக), “உனக்குக் கர்மத்திலேதான் அதிகாரம் ”(உ - சஎ)என்பனமுதலியவற்றிலே வருமாறு(காண்க). ஆதலால், ஆத்மாவை அறிந்தவனுக்கும் கர்மயோகம் நிகழாமை எப்படி என்பது ?

(ஸமாதாநம்):—இங்கே கூறுவோம் :—(க)மெய்யறிவிற்கும் பொய்யறிவிற்கும் (அவ்வாறே) அவற்றின்செய்கைகட்குமுள்ள மாறுபாட்டினுலும் : (உ) “ஞானயோகத்தால் ஸாங்க்யர்களுக்கு ” (ங - ங) என்றஇதனுல், கர்மமில்லா ஆத்மவடிவமாகவே நிற்றலாகிய ஞானயோகநிஷ்டையை, ஆத்மாவின் உண்மையை உணர்ந்த ஸாங்க்யர்களுக்கு, ஆத்மாவை அறியாதவன் செய்யும் கர்மயோக நிஷ்டையினின்றும் வேறுபடுத்தலாலும் : (ங)ஆத்மாவை அறிந்தவனுக்குப் புருஷார்த்தங் கைகூடப் பெற்றமையால் (அடையவேண்டிய)வேருெருபயன் இல்லாமையாலும் : (ச)“அவனுக்குக் கார்யமில்லை ”(ங -கஎ) என(அவன்)செய்யவேண்டியதொன்றும் இல்லாமையைக் கூறுதலாலும் : (ரு) “ கர்மங்களைச் செய்யாமையினுல் ”(ங - ச), “உயர்தோள!

𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌦𑍁𑌃𑌖𑌮𑌾𑌪𑍍𑌤𑍁𑌮𑌯𑍋𑌗𑌤𑌃’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌾𑌮𑌪𑌿
𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌵𑌿𑌧𑌾𑌨𑌾𑌤𑍍, ‘𑌯𑍋𑌗𑌾𑌰𑍂𑌢𑌸𑍍𑌯 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌶𑌮𑌃 𑌕𑌾𑌰𑌣𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇’
𑌇𑌤𑍍𑌯𑌨𑍇𑌨 𑌚 𑌉𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌾𑌭𑌾𑌵𑌵𑌚𑌨𑌾𑌤𑍍, ‘𑌶𑌾𑌰𑍀𑌰𑌂 𑌕𑍇𑌵-
𑌲𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑌮𑍍’ 𑌇𑌤𑌿 𑌚 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌕𑌾𑌰𑌣𑌾𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑌣𑍋
𑌨𑌿𑌵𑌾𑌰𑌣𑌾𑌤𑍍, ‘𑌨𑍈𑌵 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍𑌕𑌰𑍋𑌮𑍀𑌤𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌮𑌨𑍍𑌯𑍇𑌤 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌤𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌨𑍇𑌨 𑌚
𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑍇𑌷𑍍𑌵𑌪𑌿 𑌦𑌰𑍍𑌶𑌨𑌶𑍍𑌰𑌵𑌣𑌾𑌦𑌿𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌯𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌦𑌃
“𑌨𑌾𑌹𑌂 𑌕𑌰𑍋𑌮𑌿” 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌸𑍍𑌯 𑌸𑌾𑌵𑌧𑌾𑌨𑌤𑌯𑌾 𑌸𑌦𑌾 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑍍𑌵𑍋𑌪-
𑌦𑍇𑌶𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌦𑌃 𑌸𑌰𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌨𑌵𑌿𑌰𑍋𑌧𑍀 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍂𑌲𑌕𑌃 𑌕𑌰𑍍𑌮-
𑌯𑍋𑌗𑌃 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑍇𑌽𑌪𑌿 𑌨 𑌸𑌂𑌭𑌾𑌵𑌯𑌿𑌤𑍁𑌂 𑌶𑌕𑍍𑌯𑌤𑍇 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌤𑍍𑌕𑌰𑍍𑌤𑍃-
𑌕𑌯𑍋𑌰𑍇𑌵 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌯𑍋𑌃 𑌨𑌿𑌃𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌕𑌰𑌤𑍍𑌵𑌵𑌚𑌨𑌂, 𑌤𑌦𑍀𑌯𑌾𑌚𑍍𑌚 𑌕𑌰𑍍𑌮-
𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌤𑍍𑌕𑌰𑍍𑌤𑍃𑌕𑌸𑌕𑌲𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌤𑍍 𑌸-
𑌤𑍍𑌯𑍇𑌵 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌕𑌰𑍍𑌮𑍈𑌕𑌦𑍇𑌶𑌵𑌿𑌷𑌯𑌾𑌤𑍍 𑌯𑌮𑌨𑌿𑌯𑌮𑌾𑌦𑌿𑌸𑌹𑌿𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌚
𑌦𑍁𑌰𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌾𑌤𑍍 𑌸𑍁𑌕𑌰𑌸𑍍𑌯𑍈𑌵 𑌚 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌤𑍍𑌵𑌾𑌭𑌿𑌧𑌾𑌨𑌮𑍍 𑌇𑌤𑍍𑌯𑍇-
𑌵𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌚𑌨𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑍇𑌨𑌾𑌪𑌿 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌃 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑌾-
𑌯𑌃 𑌨𑌿𑌶𑍍𑌚𑍀𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 ॥

---

துறவென்பது ''(ரு - சு)என்பன முதலியவற்ருல், கர்மயோகத்தை ஆத்மஅறிவுக்குத் துணையாக விதித்தலாலும் : (சு) மெய்யறிவு உண்டானவனுக்குக் கர்மயோகமில்லாமையை "யோகத்தை அடைந்தவனுக்கு" (சு - ந )என்றஇதனல் கூறுதலாலும்: (எ)"சாரீரகர்மத்தைமாத்திரம் செய்கிறவன் பாவத்தை அடையமாட்டான்" (சு-உக) என, சரீரம் நிலைபெறுதற்குக் காரணமான கர்மத்தைத்தவிர மற்றையகர்மத்தை மறுத்தலாலும்(ஞானிக்குக் கர்மயோகமில்லை யென்க). பார்த்தல், கேட்டல் முதலிய தொழில்கள் சரீரம்நிலைத்திருப்பதற்குமாத்திரம் அமைவனவாயினும், ஆத்மாவின் உள்ளபடியான தன்மையை உணர்ந்தவன் அவற்றின்மேல் "நான்(ஒன்றும்) செய்கிறேனில்லை"என்னும் எண்ணத்தை ஒருநிலைப்பட்ட மனத்தோடு எப்பொழுதும் கொள்ளவேண்டுமென "(நிஷ்டை)கூடி உண்மைஉணர்ந்தவன் 'நான் ஒன்றுஞ் செய்வதே இல்லை 'எனக் கொள்ளவேண்டும்" (ரு - அ) என்பதனல் உபதேசித்தலின், மெய்யறிவிற்கு மாருனதாய்ப் பொய்யறிவினல் உண்டாகும் கர்மயோகமானது ஆத்ம உண்மையை உணர்ந்தவனுக்குக் கனவிலும் நினைக்கமுடியாது. ஆதலால், ஆத்மாவை அறியாதவன் செய்யும் துறவும் கர்மயோகமுந்தான் உறுதியான நன்மையைச் செய்புவை எனக்கூறுதல்(ஏற்கும்) ; அன்றியும், முன்கூறிய ஆத்மஞானி செய்யும் ஸகலகர்மத்துறவிற்கு வேருய், கர்த்தாவென்னும்புத்தி இருக்கும்பொழுதேயே சிலகர்மங்களைப்பற்றியதும் [ஸந்யாஸநிலைக்கு விதிக்கப்பட்ட சிரவணம் மநநம் முதலியதொழில்களை நான் செய்பவன்என்னும் புத்திநிற்கும்பொழுதே முந்தின ஆச்ரமச் செய்கைகளைமாத்திரம் துறந்திடுவதும்], யமம் நியமம் முதலியவற்ருேடமைந்துள்ளமையால் அநுஷ்டித்தற்கு அரியதுமான அவனுடைய[அஜ்ஞானியினுடைய] கர்மஸந்யாஸத்தைக்காட்டிலும் கர்மயோகமானது எளிதில்செய்யக்கூடியதாதலால்மேலானதென்று கூறுதலும்(ஏற்கும்). எனஇவ்வாருக மறுமொழிவாக்கியத்தின் பொருளை ஆலோசித்தலாலும், கேட்கிறவனுக்கு முற்கூறியது(தான்) கருத்தென நிர்ணயிக்கப்படுகின்றது. ஆகவே, (அர்ஜுனன் வினு நேரென்பது) நிலைத்தது.

'𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌚𑍇𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌣𑌸𑍍𑌤𑍇' 𑌇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰 𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌃 𑌸𑌹 𑌅𑌸𑌂𑌭𑌵𑌾𑌤𑍍 "𑌯𑌤𑍍 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 𑌏𑌤𑌯𑍋𑌃 𑌤𑌤𑍍 𑌮𑍇 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿" 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌪𑍃𑌷𑍍𑌟𑍋𑌽𑌰𑍍𑌜𑍁𑌨𑍇𑌨 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑍇𑌤𑌿 𑌨𑌿𑌰𑍍𑌣𑌯𑌂 𑌚𑌕𑌾𑌰 । "𑌨 𑌚 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑌨𑌾𑌦𑍇𑌵 𑌕𑍇𑌵𑌲𑌾𑌤𑍍 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌸𑌮𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿" 𑌇𑌤𑌿 𑌵𑌚𑌨𑌾𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌹𑌿𑌤𑌸𑍍𑌯 𑌤𑌸𑍍𑌯 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌸𑌾𑌧𑌨𑌤𑍍𑌵𑌮𑍍 𑌇𑌷𑍍𑌟𑌂; 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌚, 𑌵𑌿𑌧𑌾𑌨𑌾𑌤𑍍 । 𑌜𑍍𑌞𑌾𑌨𑌰𑌹𑌿𑌤𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍? 𑌕𑌿𑌂 𑌵𑌾 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍? 𑌇𑌤𑌿 𑌏𑌤𑌯𑍋𑌃 𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌯𑌤𑌰𑌂 𑌬𑍁𑌭𑍁𑌤𑍍𑌸𑍁𑌃—

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 ॥

௧. 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌪𑍁𑌨𑌰𑍍𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌶𑌂𑌸𑌸𑌿 ।
𑌯𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯 𑌏𑌤𑌯𑍋𑌰𑍇𑌕𑌮𑍍 𑌤𑌨𑍍𑌮𑍇 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 𑌸𑍁𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌮𑍍 ॥

𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌯𑌾𑌣𑌾𑌮𑍍 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌣𑌾𑌂 𑌶𑌂𑌸𑌸𑌿 𑌪𑍍𑌰𑌶𑌂𑌸𑌸𑌿 𑌕𑌥𑌯𑌸𑌿 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 । 𑌪𑍁𑌨𑌃 𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌤𑍇𑌷𑌾𑌮𑍇𑌵 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌮𑍍 𑌅𑌵𑌶𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌶𑌂𑌸𑌸𑌿 । 𑌅𑌤𑌃 𑌮𑍇 𑌕𑌤𑌰𑌤𑍍 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 𑌇𑌤𑌿 𑌸𑌂𑌶𑌯𑌃—𑌕𑌿𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌂 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃? 𑌕𑌿𑌂 𑌵𑌾 𑌤𑌦𑍍𑌧𑌾𑌨𑌮𑍍 𑌇𑌤𑌿? 𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌯𑌤𑌰𑌂 𑌚 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌮𑍍 । 𑌅𑌤𑌶𑍍𑌚 𑌯𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯𑌃 𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌯𑌤𑌰𑌮𑍍 𑌏𑌤𑌯𑍋𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌯𑍋𑌃, 𑌯𑌦𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌤𑍍 𑌶𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌵𑌾𑌪𑍍𑌤𑌿𑌃 𑌮𑌮 𑌸𑍍𑌯𑌾𑌦𑌿𑌤𑌿

---

ஞானகர்மங்கள் இரண்டும் ஒருங்கே உடன் நிகழாமையால், "கர்மமானது" (௩ - ௧)என்றவிடத்து "இவ்விரண்டனுள் எது மேலானதோ, அதனை எனக்கு உரைத்தருளவேண்டும்" எனஅர்ஜுனனால் கேட்கப்பட்ட பகவான், ஸாங்க்யர்களான துறவிகட்கு ஞானயோகத்தால் நிஷ்டையும் (கர்ம)யோகிகட்குக் கர்மயோகத்தால் நிஷ்டையும் கூறப்பட்டன என்று முடிவுசெய்தனர். மேலும், "வெறுந்துறவினால் மாத்திரம்(பொருள்)கைகூடுதலை அடைவதில்லை" (௩ - ௪)என்னும் திருவாக்கினால், ஞானத்தோடுகூடிய அது, பொருள்கைகூடுதற்கு ஸாதநமாகக் கொள்ளப்பட்டது; மற்றும், கர்மயோகத்தை விதித்தலால்(௪ - ௪௨), (அதுவும், பொருள்கைகூடுதற்கு ஸாதநமெனக் கொள்ளப்பட்டது). ஞானமில்லாத துறவு மேலானதா? அன்றி, கர்மயோகம் மேலானதா? என இவ்விரண்டனுள் மேலானதை அறிய விரும்பிய

அர்ஜுனன் சொல்லலுற்றான் :

௧. க்ருஷ்ண! கர்மங்களைத்துறந்திடுதலையும், மற்று, (கர்ம) யோகத்தையும் புகழ்ந்து பேசுகிறீர்கள். இவ்விரண்டனுள் எது மேலானதோ, அஃதொன்றையே தீர்க்கமுடிவாக எனக்கு உரைத்தருளவேண்டும்.

சாஸ்திரத்திற்கூறிய பலவகையான அநுஷ்டாநங்களைத் துறந்திடுதலைப் புகழ்கிறீர்கள், அதாவது, கூறுகிறீர்கள். மீண்டும், அவற்றையே அநுஷ்டித்தலையும் அவசியம் செய்யவேண்டுமெனக்கூறுகிறீர்கள். ஆகவே, எது மேலானதோ என்பது என் ஸம்சயம் : கர்மத்தை அநுஷ்டித்தல் மேலானதா? அல்லது, அதனை விட்டிடுதல் மேலானதா? என்பது. ஆனால், மேலானதாயிருப்பதை அநுஷ்டிக்கவேண்டும். ஆதலால், கர்மஸந்யாஸமும் கர்மயோகமுமாகிய இவ்விரண்டனுள் எது மேலானதோ, எதனை

𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑍇 𑌤𑌤𑍍 𑌏𑌕𑌮𑍍 𑌅𑌨𑍍𑌯𑌤𑌰𑌤𑍍 𑌸𑌹 𑌏𑌕𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌾𑌸𑌂𑌭𑌵𑌾𑌤𑍍 𑌮𑍇 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 𑌸𑍁𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌮𑍍 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑌂 𑌤𑌵 𑌇𑌤𑌿 ॥ ௧ ॥

𑌸𑍍𑌵𑌾𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑌂 𑌚 𑌕𑌥𑌯𑌨𑍍 𑌨𑌿𑌰𑍍𑌣𑌯𑌾𑌯 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌉𑌵𑌾𑌚—

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌉𑌵𑌾𑌚 ॥

௨. 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌶𑍍𑌚 𑌨𑌿𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌕𑌰𑌾𑌵𑍁𑌭𑍌 ।
𑌤𑌯𑍋𑌸𑍍𑌤𑍁 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍋 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 ॥

𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌶𑍍𑌚 𑌤𑍇𑌷𑌾𑌮𑍍 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌂 𑌤𑍌 𑌉𑌭𑍌 𑌅𑌪𑌿 𑌨𑌿𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌕𑌰𑍌 𑌮𑍋𑌕𑍍𑌷𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌾𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑍇𑌨 । 𑌉𑌭𑍌 𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌨𑌿𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌕𑌰𑍌, 𑌤𑌥𑌾𑌽𑌪𑌿 𑌤𑌯𑍋𑌸𑍍𑌤𑍁 𑌨𑌿𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌹𑍇𑌤𑍍𑌵𑍋𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍 𑌕𑍇𑌵𑌲𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍋 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌂 𑌸𑍍𑌤𑍌𑌤𑌿 ॥ ௨ ॥

𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿? 𑌆𑌹—

௩. 𑌜𑍍𑌞𑍇𑌯𑌃 𑌸 𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌯𑍋 𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 𑌨 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌤𑌿 ।
𑌨𑌿𑌰𑍍𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑍋 𑌹𑌿 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌸𑍁𑌖𑌂 𑌬𑌨𑍍𑌧𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

𑌜𑍍𑌞𑍇𑌯𑌃 𑌜𑍍𑌞𑌾𑌤𑌵𑍍𑌯𑌃 𑌸𑌃 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍀 𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌇𑌤𑌿 𑌯𑍋 𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌨 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌤𑌿 𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑍇 𑌤𑌤𑍍𑌸𑌾𑌧𑌨𑍇 𑌚 । 𑌏𑌵𑌂𑌵𑌿𑌧𑍋 𑌯𑌃

---

அநுஷ்டிப்பதனல் நான் நன்மையைப் பெறலாமென்று நீங்கள் நினைக்கின்றீர்களோ, அந்த எதாவதொன்றையே (அதாவது) உங்களுடைய கருத்தை (இன்னதுதான் என்று) தீர்ந்த முடிவாக எனக்குச் சொல்லவேண்டும்; (அவை இரண்டனையும்) ஒரே புருஷன் ஒரேகாலத்து அநுஷ்டிக்கக் கூடாமையினுலென்க. (௧)

துறவைக்காட்டிலும் கர்மயோகமே அஜ்ஞானிக்கு ஏற்றது.

(அஜ்ஞானிக்கு எது தகுந்ததென்பதை) நிச்சயித்தற்பொருட்டுத் தமது கருத்தைக் கூறுகின்ற ஸ்ரீபகவான் அருளிச்செய்யலானுர்:

ஸ்ரீபகவான் சொல்லலுற்ருர்:

௨. துறவும் கர்மயோகமுமாகியஇரண்டும் உறுதியானநன்மையைச் செய்பவை. ஆனுல் அவற்றுள் கர்மயோகமானது கர்மஸந்யாஸத்திலும் மேலாகின்றது.

கர்மங்களைத் துறந்திடுதலும் அவற்றை அநுஷ்டித்தலுமாகிய இரண்டுமே, ஞானமுண்டாதற்குக் காரணமாதலால், முக்தியைத் தருகின்றன. இரண்டும் முக்தியைத் தருபவை என்றாலும், முக்திக்குக் காரணமான அவற்றுள்ளும் கர்மயோகமானது வெறுங்கர்மஸந்யாஸத்திலும் மேலாகின்றது எனக் கர்மயோகத்தைப் புகழ்கின்ருர். (வெறும் கர்மஸந்யாஸம் - ஞானமில்லாத கர்மஸந்யாஸம்.) (௨)

(கர்மயோகம் உறுதியான நன்மையைச் செய்வதானது) எதனுல் என்பது?— கூறுகிறுர்:

௩. எவன் பகைப்பதில்லையோ, விரும்புவதில்லையோ, அவனை என்றும் ஸந்யாஸியாக அறியவேண்டும்; ஏனெனில், உயர்தோள! த்வந்தங்களைக் கடந்தவன் (கர்மமாகிய) கட்டினின்றும் எளிதே விடுபடுகிறுன்.

எவன் எதனையும் பகைப்பதில்லையோ, (அதாவது,) துன்பத்தையும், அதனைக் கொடுக்கும் பொருள்களையும் பகைப்பதில்லையோ, (அவ்வாறே) இன்பத்தையும்,

काङ्क्षति वर्तमानोऽपि स नित्यसंन्यासी इति ज्ञातव्यः इत्यर्थः । निर्द्वन्द्वः द्वन्द्ववर्जितः हि यस्मात् महाबाहो सुखं बन्धात् अनायासेन प्रमुच्यते ॥ ३ ॥

संन्यासकर्मयोगयोः भिन्नपुरुषानुष्ठेययोः विरुद्धयोः फलेऽपि विरोधो युक्तः, न तु उभयोः निःश्रेयसकरत्वमेव इति प्राप्ते, इदम् उच्यते—

४. साङ्ख्ययोगौ पृथग्बालाः प्रवदन्ति न पण्डिताः ।
एकमप्यास्थितः सम्यगुभयोर्विन्दते फलम् ॥

साङ्ख्ययोगौ पृथक् विरुद्धभिन्नफलौ बालाः प्रवदन्ति न पण्डिताः । पण्डितास्तु ज्ञानिनः एकम् फलम् अविरुद्धम् इच्छन्ति । कथम्? एकमपि साङ्ख्ययोगयोः सम्यक् आस्थितः सम्यगनुष्ठितवान् इत्यर्थः, उभयोः विन्दते फलम् । उभयोः तदेव हि निःश्रेयसं फलम्; अतः न फले विरोधः अस्ति ॥

---

அதனைக் கொடுக்கும் பொருள்களையும் விரும்புவதில்லையோ, அந்தக் கர்மயோகியான வன் எப்பொழுதும் ஸந்யாஸி என்று அறிந்துகொள்க. கர்மத்திலிருப்பவனு யினும், எவன் இப்படிப்பட்டவனாக இருக்கின்றானே அவன் எப்பொழுதும் துறவி என்று உணர்க என்பது பொருள். ஏனெனில், உயர்தோள! (விருப்பு வெறுப்பு முதலிய) த்வந்தங்களற்றவன் (கர்மமாகிய) கட்டினின்றும் ஆயாஸமில்லாது எளிதே விடுபடுகிறான். (௩)

கர்மஸந்யாஸமும், கர்மயோகமும் ஒரேபயனைத் தருகின்றன.

வெவ்வேறு புருஷர்களால் அநுஷ்டிக்கத்தக்கவையாய்(ஒன்றற்கொன்று)மாறு பட்ட கர்மஸந்யாஸமும் கர்மயோகமுமாகிய இரண்டும் (தம்தம்) பயனிலும் மாறு படுதல் ஏற்குமேயன்றி, இரண்டும் உறுதியான நன்மையைச் செய்பவைதான் என் பது இல்லை என்னும் (ஆக்ஷேபம்) வர, அப்பொழுது இதனைக் கூறுவோம் :

௪. சிறுவர்கள் ஸாங்க்யத்தையும் யோகத்தையும் வேறாகக் கூறுகிறார்கள் ; ஞானிகள் (அவ்வாறு கூறுவது) இல்லை. ஒன்றையாவது நன்றாக மேற்கொண்டவன் இரண்டினுடைய பயனைப் பெறுகிறான். (ஸாங்க்யம் - கர்மஸந்யாஸம். யோகம் - கர்மயோகம்.)

சிறுவர்கள்[.நற்பொருளை ஆராயாதவர்கள்] ஸாங்க்யமும் யோகமும் (ஒன் றற்கொன்று) மாறுபட்ட வெவ்வேறான பயன்களையுடையவை யெனக் கூறுகிறார்கள்; பண்டிதர்கள் (அங்ஙனம் கூறுவது) இல்லை. விவேகிகளான ஞானிகளோ, மாறுபா டில்லாத ஒரே பயனைக் கொள்கிறார்கள்.—எப்படி ?—ஸாங்க்யயோகங்களில் ஒன்றை யாவது நன்கு மேற்கொண்டவன், அதாவது செவ்வையாக அநுஷ்டித்தவன் இரண் டினுடைய பயனை அடைகிறான். முக்தியாகிய அதேபயனன்றோ இரண்டற்கும் உள் ளது. ஆதலால், பயனில் வேறுபாடு இல்லை என்க.

𑌨𑌨𑍁 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌶𑌬𑍍𑌦𑍇𑌨 𑌪𑍍𑌰𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌯 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌯𑍋𑌗𑌯𑍋𑌃 𑌫𑌲𑍈𑌕𑌤𑍍𑌵𑌂 𑌕𑌥𑌮𑌿𑌹 𑌅𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌂 𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑌿? 𑌨 𑌏𑌷 𑌦𑍋𑌷𑌃—𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑍇𑌨 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌕𑍇𑌵𑌲𑌮𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃 𑌕𑍃𑌤𑌃, 𑌭𑌗𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑍁 𑌤𑌦𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑍇𑌨𑍈𑌵 𑌸𑍍𑌵𑌾𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑌂 𑌚 𑌵𑌿𑌶𑍇𑌷𑌂 𑌸𑌂𑌯𑍋𑌜𑍍𑌯 𑌶𑌬𑍍𑌦𑌾𑌨𑍍𑌤𑌰𑌵𑌾𑌚𑍍𑌯𑌤𑌯𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌚𑌨𑌂 𑌦𑌦𑍌 '𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌯𑍋𑌗𑍌' 𑌇𑌤𑌿 । 𑌤𑍌 𑌏𑌵 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍌 𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑌦𑍁𑌪𑌾𑌯𑌸𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑍌 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌯𑍋𑌗𑌶𑌬𑍍𑌦𑌵𑌾𑌚𑍍𑌯𑍌 𑌇𑌤𑌿 𑌭𑌗𑌵𑌤𑍋 𑌮𑌤𑌮𑍍 । 𑌅𑌤𑌃 𑌨 𑌅𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌪𑍍𑌰𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 𑌇𑌤𑌿 ॥ ௪ ॥

𑌏𑌕𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌸𑌮𑍍𑌯𑌗𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌤𑍍 𑌕𑌥𑌮𑍍 𑌉𑌭𑌯𑍋𑌃 𑌫𑌲𑌂 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑍇 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௫. 𑌯𑌤𑍍𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍈𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌤𑌦𑍍𑌯𑍋𑌗𑍈𑌰𑌪𑌿 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 ।
𑌏𑌕𑌂 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌂 𑌚 𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ॥

𑌯𑌤𑍍 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍈𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑍈𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌭𑌿𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌖𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍 𑌯𑍋𑌗𑍈𑌰𑌪𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌈𑌶𑍍𑌵𑌰𑍇 𑌸𑌮𑌰𑍍𑌪𑍍𑌯-

---

(ஆக்ஷேபம்):—அப்படியானால், (பகவான்) ஸந்யாஸம் கர்மயோகம் என்னும் சொற்களால் பிரகிருதத்தைப் பேசிப், பின்பு, ஸாங்க்யத்திற்கும் யோகத்திற்கும் பயன் ஒன்று என இங்குப் பிரகிருதமல்லாததை எப்படிக் கூறுகிறார் என்பது ?

(ஸமாதாநம்) :—இது குற்றமன்று. அர்ஜுனன் வெறுங்கர்மஸந்யாஸத்தையும் வெறுங்கர்மயோகத்தையும் (மனத்திற்)கொண்டு கேள்விகேட்டான் என்றாலும், (அவையிரண்டும்) ஸாங்க்யம் யோகம் என்னும் வேறுசொற்களால் கூறத்தக்கனவாதலால் பகவான் அவற்றை விடாமலே, தாம் கருதியுள்ள விசேஷத்தையும் சேர்த்து மறுமொழியைத் தந்தருளினர். ஞானம் அதன்ஸாதநமான ஸமபுத்தி முதலானவற்றோடு கூடிய அந்தக் கர்மஸந்யாஸமும் அந்தக்கர்மயோகமுந்தான் ஸாங்க்யம் யோகம் என்னும் சொற்களால் கூறற்குஉரியன என்பது பகவான் கருத்து. ஆகவே, (ஸாங்க்யத்திற்கும் யோகத்திற்கும் பயன் ஒன்று என்பது) பிரகிருதமல்லாதவிஷயமன்றென்க. [ஒருவிசேஷமாயினும் உடன்சேரப்பெறாத வெறுங்கர்மஸந்யாஸத்தையும் வெறுங்கர்மயோகத்தையும்பற்றி அர்ஜுனன் பகவானைக்கேட்க, அவர் அதற்கு மறுமொழிகூறும் வாக்கியத்திலே "ஞானமாகியவிசேஷத்தோடுகூடிய கர்மஸந்யாஸமும், ஸமத்துவபுத்தியாகிய விசேஷத்தோடு (௨-௪௮)கூடிய கர்மயோகமுந் தான் சிறந்தவை" என்னும் தமது கருத்தை அவனுக்குத் தெரிவித்தற்பொருட்டு "ஸாங்க்யம்" "யோகம்" என்னும்சொற்களை வழங்கலாயினர் என ஆராய்ந்துணர்க.] (௪)

(ஒருவன்) ஒன்றைமாத்திரம் நேராகஅநுஷ்டித்தலால் இரண்டனுடைய பயனையும் பெறுகிறான் என்பது எப்படி ?—கூறுவோம் :

௫. ஸாங்க்யர்களால் எந்த நிலையானது அடையப்படுகின்றதோ, அது யோகிகளாலும் அடையப்படுகின்றது. எவன் ஸாங்க்யத்தையும் யோகத்தையும் ஒன்றாகக் காண்கிறானோ, அவன் (நேராகக்) காண்கிறான்.

ஞானத்திலே நிலைத்துநிற்கும் ஸந்யாஸிகளாலே, எந்த நிலையானது அடையப்படுகின்றதோ, அது யோகிகளாலும் (அடையப்படுகின்றது). எவர்கள் ஞானமடைதற்கு ஸாதநமாகக் கர்மங்களை ஈச்வரனிடத்து அர்ப்பித்து, தமக்குப் பயனை எதிர்

𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌫𑌲𑌮𑍍 𑌅𑌨𑌭𑌿𑌸𑌂𑌧𑌾𑌯 𑌅𑌨𑍁𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌿 𑌯𑍇 𑌤𑍇 𑌯𑍋𑌗𑌾𑌃 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 𑌤𑍈𑌰𑌪𑌿 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑌃 । 𑌅𑌤𑌃 𑌏𑌕𑌂 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌂 𑌚 𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌫𑌲𑍈𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 𑌪𑌶𑍍𑌯𑌤𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௫ ॥

𑌏𑌵𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌯𑍋𑌗𑌾𑌤𑍍 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸 𑌏𑌵 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 ; 𑌕𑌥𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌇𑌦𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑌂 '𑌤𑌯𑍋𑌸𑍍𑌤𑍁 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍋 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇' 𑌇𑌤𑌿 ? 𑌶𑍃𑌣𑍁 𑌤𑌤𑍍𑌰 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍—𑌤𑍍𑌵𑌯𑌾 𑌪𑍃𑌷𑍍𑌟𑌂 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 𑌤𑌯𑍋𑌃 𑌅𑌨𑍍𑌯𑌤𑌰𑌃 𑌕𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍 (𑌇𑌤𑌿) । 𑌤𑌦𑌨𑍁𑌰𑍂𑌪𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌚𑌨𑌂 𑌮𑌯𑌾 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌃 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 𑌅𑌨𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 । 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌸𑍍𑌤𑍁 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌮𑌯𑌾 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑌃 । 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌯𑍋𑌗𑌶𑍍𑌚 𑌸 𑌏𑌵 । 𑌯𑌸𑍍𑌤𑍁 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌃 𑌵𑍈𑌦𑌿𑌕𑌃 𑌸 𑌤𑌾𑌦𑌰𑍍𑌥𑍍𑌯𑌾𑌤𑍍 𑌯𑍋𑌗𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸 𑌇𑌤𑌿 𑌚 𑌉𑌪𑌚𑌰𑍍𑌯𑌤𑍇 ॥

𑌕𑌥𑌂 𑌤𑌾𑌦𑌰𑍍𑌥𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 ? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௬. 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌤𑍁 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌦𑍁𑌃𑌖𑌮𑌾𑌪𑍍𑌤𑍁𑌮𑌯𑍋𑌗𑌤𑌃 ।
𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌮𑍁𑌨𑌿𑌰𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨 𑌚𑌿𑌰𑍇𑌣𑌾𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

---

நோக்காது அநுஷ்டிக்கிறார்களோ, அவர்கள் யோகிகள். அந்த யோகிகளும் உண்மையான ஞானத்தையும், உண்மையான ஸந்யாஸத்தையும் பெற்று அவ்வழியாக (அதே நிலையைப்) பெறுகிறார்கள் என்பது கருத்து. ஆதலால், பயன் ஒன்றாயிருத்தலின் எவன் ஸாங்க்யத்தையும் யோகத்தையும் ஒன்றாகப் பார்க்கிறானோ, அவன் பார்க்கிறான், நேராகப் பார்க்கிறான் [சரியாக அறிகிறான் என்பது பொருள்.] (௫)

(வினா):—அப்பொழுது இவ்வாறாக, ஸந்யாஸந்தான் யோகத்தைக்காட்டிலும் மேலாகின்றது. 'அவ்விரண்டனுள், கர்மஸந்யாஸத்தினும் கர்மயோகம் மேலாகின்றது' (ரு - உ.) என்று கூறியுள்ள இது, அங்ஙனம் எவ்வாறு (பொருந்தும்)?

(விடை) :—அதிலே காரணத்தைக் கேள் : நீ வெறுங்கர்மஸந்யாஸத்தையும் வெறுங்கர்மயோகத்தையும் கருத்திற்கொண்டு, 'அவ்விரண்டனுள் எந்த எதாவதொன்று மேலானது?' (எனக்) கேட்டாய். நான் அதற்கேற்ற மறுமொழியை, ஞானத்தைக் குறியாது(அஃதில்லாத வெறுங்)கர்மஸந்யாஸத்தினும் கர்மயோகம் மேலாகின்றது எனக் கூறினேன். ஞானத்தைச் சார்ந்துநிற்கும் ஸந்யாஸமோ ஸாங்க்யமென்பது என் கருத்து. உண்மையான யோகமும் அதுதான். ஆனால், (யோகமென்னுஞ்சொல்லும், ஸந்யாஸமென்னும் சொல்லும் கர்மயோகமென்னும் பொருளில் வழங்கி வருகின்றனவே எனில்,—)வேதத்திற்கூறிய கர்மயோகம் எதுவோ, அது அதன்பொருட்டாதலால் [உண்மையான ஸந்யாஸத்திற்குப் பயன்படுதலால்] யோகமெனவும், ஸந்யாஸமெனவும் உபசாரவழக்கினால் கூறப்படுகின்றது.

உண்மையான ஸந்யாஸத்திற்குக் கர்மயோகம் வழி.

அதன்பொருட்டாத லென்பது எப்படி ?—கூறுவோம் :

௬. உயர்தோள ! மற்று, ஸந்யாஸத்தை யோகத்தாலல்லாமல், (வேறுவகையால்)பெறுவது அரிது (கர்ம)யோகத்தைக்கூடி(பகவானை இடைவிடாது) நினைக்கும் தன்மையன் தாமதமின்றி ப்ரஹ்மத்தை அடைகிறான்.

𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌤𑍁 𑌪𑌾𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌿𑌕𑌃 𑌹𑍇 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌦𑍁𑌃𑌖𑌮𑍍 𑌆𑌪𑍍𑌤𑍁𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍁𑌮𑍍 𑌅𑌯𑍋𑌗𑌤𑌃 𑌯𑍋𑌗𑍇𑌨 𑌵𑌿𑌨𑌾 । 𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌵𑍇𑌦𑍋𑌕𑍍𑌤𑍇𑌨 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌈𑌶𑍍𑌵𑌰𑌸𑌮𑌰𑍍𑌪𑌿𑌤𑌰𑍂𑌪𑍇𑌣 𑌫𑌲𑌨𑌿𑌰𑌪𑍇𑌕𑍍𑌷𑍇𑌣 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃, 𑌮𑌨𑌨𑌾𑌤𑍍 𑌈𑌶𑍍𑌵𑌰𑌰𑍂𑌪𑌸𑍍𑌯 𑌮𑍁𑌨𑌿𑌃, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮—𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇, '𑌨𑍍𑌯𑌾𑌸 𑌇𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌹𑌿 𑌪𑌰𑌃' 𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌃—𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑌾𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌿𑌕𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌪𑌾𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌿𑌕𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌨 𑌚𑌿𑌰𑍇𑌣 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌮𑍇𑌵 𑌅𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 । 𑌅𑌤𑌃 𑌮𑌯𑌾 𑌉𑌕𑍍𑌤𑌂 '𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍋 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇' 𑌇𑌤𑌿 ॥ ௬ ॥

𑌯𑌦𑌾 𑌪𑍁𑌨𑌃 𑌅𑌯𑌂 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑌕𑍇𑌨—

௭. 𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌜𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌜𑌿𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌤𑍍𑌮𑌭𑍂𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨𑌪𑌿 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 ॥

𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌃, 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌃, 𑌵𑌿𑌜𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌜𑌿𑌤𑌦𑍇𑌹𑌃, 𑌜𑌿𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌶𑍍𑌚, 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌤𑍍𑌮𑌭𑍂𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌸𑍍𑌤𑌮𑍍𑌬𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌆𑌤𑍍𑌮𑌭𑍂𑌤𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌚𑍇𑌤𑌨𑍋 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌤𑍍𑌮𑌭𑍂𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃, 𑌸 𑌤𑌦𑍈𑌵 𑌪𑌰𑌾𑌰𑍍𑌥𑌤𑌃 𑌲𑍋𑌕𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑌾𑌯 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨𑌪𑌿 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 𑌨 𑌕𑌰𑍍𑌮𑌭𑌿𑌃 𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௭ ॥

---

உயர்தோள ! உண்மையான ஸந்யாஸத்தையோ கர்மயோகத்தினாலல்லாமல் (வேறொன்றினால்)அடையமுடியாது. ஈச்வரனிடத்து அர்ப்பிக்கப்படுவதும், பயனை எதிர்நோக்காததும், வேதத்திற்கூறியதுமான கர்மயோகத்தைக் கூடி, ஈச்வரனுடைய வடிவத்தை இடைவிடாது நினைந்துகொண்டிருப்பவன் பரமார்த்தஞானநிஷ்டையென்னும் உண்மையான ஸந்யாஸத்தைச் சீக்கிரமாகவே அடைகிறான். ஆதலால் யான் கூறினேன் கர்மயோகம் மேலாகின்றதென்று.

பிரகிருதத்திற் கூறிய ஸந்யாஸமானது பரம்பொருளுடைய ஞானமாயிருத்தலால் 'ப்ரஹ்மம்' எனப்படுகின்றது ; "ந்யாஸமென்பது ப்ரஹ்மா, ப்ரஹ்மாவே மேலானவன்" (தை - ௪ - ௭௮)என்னும் சுருதியினாலென்க. (௬)

ஞானியின் தொழில் அவனைச் சார்வதில்லை.

ஆனால், எப்பொழுது இவன் மெய்யுணர்வைப் பெறுதற்கு ஸாதநமாக

௭. (கர்ம)யோகத்தைக் கூடி, மனந்தெளிந்து, தேகத்தையும் இந்திரியங்களையும் வென்று,(தனது)ஆத்மாவை ஸகலபூதங்களுடைய ஆத்மாவாகக்கொண்டு(உள்ளதை உள்ளபடி உணர்கின்றானோ, அப்பொழுது அவன் ஒன்றைச்)செய்பவனாயினும், பற்றப்படுகிறானில்லை.

(தனது )ஆத்மாவை ஸகலபூதங்களுடைய ஆத்மாவாகக் கொண்டவன் - (தன்னுடைய) உள்ளேயுள்ளே ஆத்மாவை, ஸகலபூதங்களுடைய ஆத்மாவாயிருக்கப் பெற்றவன் : உள்ளதை உள்ளபடி காண்பவன் என்பது (தேர்ந்த)பொருள். அவன் அதிவே[உள்ளதை உள்ளபடி காண்பதிலே]யே இருப்பவனாய், உலகத்தை நல்வழிப்படுத்தும்பொருட்டுக் கர்மத்தைச் செய்பவனாயினும், கர்மங்களால் பற்றப்படுகிறானில்லை : கட்டப்படுகிறானில்லை என்பது பொருள். (௭)

न च क्वचन परमार्थतः करोति, अतः—

௮. नैव किंचित्करोमीति युक्तो मन्येत तत्त्ववित् ।

नैव किंचित् करोमीति युक्तः समाहितः सन् मन्येत चिन्तयेत्, तत्त्ववित् तत्त्वस्य याथात्म्यं तत्त्वं वेत्तीति तत्त्ववित् परमार्थदर्शीत्यर्थः ॥

कदा कथं वा तत्त्वमवधारयन्मन्येत इति? उच्यते—

௮. पश्यञ्शृण्वन्स्पृशञ्जिघ्रन्नश्नन्गच्छन्स्वपञ्श्वसन् ॥
௯. प्रलपन्विसृजन्गृह्णन्नुन्मिषन्निमिषन्नपि ।
इन्द्रियाणीन्द्रियार्थेषु वर्तन्त इति धारयन् ॥

मन्येत इति पूर्वेण संबन्धः । यस्य एवं तत्त्वविदः सर्वकार्यकरणचेष्टासु कर्मसु अकर्मैव पश्यतः सम्यग्दर्शिनः तस्य सर्वकर्मसंन्यास एव अधिकारः, कर्मणः अभावदर्शनात् । न हि मृगतृष्णिकायामुदकबुद्ध्या पानाय प्रवृत्तः उदकाभावज्ञानेऽपि तत्रैव पानप्रयोजनाय प्रवर्तते ॥ ௮, ௯ ॥

---

### ஞானியின் செய்கைகள் உண்மை யல்ல.

இவன் உண்மையாகவே செய்வதில்லை யாதலால்,

௮. ஒருநிலைப்பட்டு உண்மையுணர்ந்தவன் ' நான் ஒன்றுஞ் செய்வதே இல்லை ' எனக்கொள்ளவேண்டும்.

உண்மையுணர்ந்தவன் ' நான் ஒன்றுஞ் செய்வதே இல்லை ' என ஒருநிலைப்பட்ட மனத்தினனாய்க் கொள்ளவேண்டும். உண்மையுணர்ந்தவன் - ஆத்மாவினுடைய உள்ளபடியான தன்மையை அறிந்தவன் : பரம்பொருளைக் காண்பவன் என்று பொருள். (௮)

(அவன்)உண்மையை நன்றாகத் தெளிந்தவனாய், எப்பொழுது எவ்வாறு (அப்படிக்)கொள்ளவேண்டும் என்பது ?—கூறுவோம் :

௮, ௯. (அவன்) பார்ப்பவனாயினும், கேட்பவனாயினும், தொடுபவனாயினும், முகர்பவனாயினும், உண்பவனாயினும், நடப்பவனாயினும், உறங்குபவனாயினும், மூச்சுவிடுபவனாயினும், பேசுபவனாயினும், (மலஜலங்களை) விடுபவனாயினும், எடுப்பவனாயினும், கண்களை விழிப்பவனாயினும், மூடுபவனாயினும், ' இந்திரியங்கள் இந்திரியவிஷயங்களுள் திரிகின்றன ' எனத் தெளிந்து(நான் ஒன்றுஞ் செய்வதே இல்லை எனக் கொள்ளவேண்டும்.)

கொள்ளவேண்டும் என முந்தின (வாக்கியத்)தோடு கூட்டுக. இவ்வாறாக உண்மையுணர்ந்து தேகேந்திரியங்களுடைய ஸகலச்செய்கைகளிலும் (அதாவது, ஸகல)கர்மங்களிலும் அகர்மத்தையே காண்பவனாய் உள்ளதை உள்ளபடி பார்க்கின்ற அவனுக்கு ஸகலகர்மங்களையும் துறத்தலிலேதான் அதிகாரம்; (அவன்) கர்மமில்லாமையைக் காண்கிறபடியாலென்க. கானலிலே ஜலம் (உள்ளதெனக்)கொண்டு நீர்குடித்தற்காகச் சென்றவன் (அங்கு) நீர் இல்லையென்றறிந்தபின்பும் நீர்குடித்தலென்னும் பயனுக்காக (மீண்டும்) அங்கேயே செல்லமாட்டானன்றோ. (௮, ௯)

𑌯𑌸𑍍𑌤𑍁 𑌪𑍁𑌨𑌃 𑌅𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌤𑍍 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌶𑍍𑌚 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇—

௧௦. 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌾𑌧𑌾𑌯 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌙𑍍𑌗𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌯𑌃 ।
𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 𑌨 𑌸 𑌪𑌾𑌪𑍇𑌨 𑌪𑌦𑍍𑌮𑌪𑌤𑍍𑌰𑌮𑌿𑌵𑌾𑌮𑍍𑌭𑌸𑌾 ॥

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌈𑌶𑍍𑌵𑌰𑍇 𑌆𑌧𑌾𑌯 𑌨𑌿𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌯 "𑌤𑌦𑌰𑍍𑌥𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍋𑌮𑌿" 𑌇𑌤𑌿 𑌭𑍃𑌤𑍍𑌯 𑌇𑌵 𑌸𑍍𑌵𑌾𑌮𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑍋𑌕𑍍𑌷𑍇𑌽𑌪𑌿 𑌫𑌲𑍇 𑌸𑌙𑍍𑌗𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌯𑌃, 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 𑌨 𑌸 𑌪𑌾𑌪𑍇𑌨 𑌨 𑌸𑌂𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 𑌪𑌦𑍍𑌮𑌪𑌤𑍍𑌰𑌮𑌿𑌵𑌾𑌮𑍍𑌭𑌸𑌾 𑌉𑌦𑌕𑍇𑌨 । 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑍇𑌵 𑌫𑌲𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 ॥ ௧௦ ॥

𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍—

௧௧. 𑌕𑌾𑌯𑍇𑌨 𑌮𑌨𑌸𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌕𑍇𑌵𑌲𑍈𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍈𑌰𑌪𑌿 ।
𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌸𑌙𑍍𑌗𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾𑌽𑌽𑌤𑍍𑌮𑌶𑍁𑌦𑍍𑌧𑌯𑍇 ॥

𑌕𑌾𑌯𑍇𑌨 𑌦𑍇𑌹𑍇𑌨 𑌮𑌨𑌸𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌚 𑌕𑍇𑌵𑌲𑍈𑌃 𑌮𑌮𑌤𑍍𑌵𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑍈𑌃 "𑌈𑌶𑍍𑌵𑌰𑌾𑌯𑍈𑌵 𑌕𑌰𑍋𑌮𑌿, 𑌨 𑌮𑌮 𑌫𑌲𑌾𑌯" 𑌇𑌤𑌿 𑌮𑌮𑌤𑍍𑌵𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌶𑍂𑌨𑍍𑌯𑍈𑌃 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍈𑌰𑌪𑌿—𑌕𑍇𑌵𑌲𑌶𑌬𑍍𑌦𑌃 𑌕𑌾𑌯𑌾𑌦𑌿𑌭𑌿𑌰𑌪𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍇𑌕𑌂 𑌸𑌂𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑍇𑌷𑍁 𑌮𑌮𑌤𑌾𑌵𑌰𑍍𑌜𑌨𑌾𑌯—𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 𑌕𑌰𑍍𑌮𑌿𑌣𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌸𑌙𑍍𑌗𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌫𑌲𑌵𑌿𑌷𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌶𑍁𑌦𑍍𑌧𑌯𑍇 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌶𑍁𑌦𑍍𑌧𑌯𑍇 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌤𑌤𑍍𑌰𑍈𑌵 𑌤𑌵 𑌅𑌧𑌿𑌕𑌾𑌰𑌃 𑌇𑌤𑌿 𑌕𑍁𑌰𑍁 𑌕𑌰𑍍𑌮𑍈𑌵 ॥ ௧௧ ॥

---

கர்மயோகியானவன் அவனுடைய கர்மங்களின் பயன்களால் பற்றப்படுவதில்லை.

ஆனால், எவன் உண்மையை அறியாதவனோ; அன்றியும், கர்மயோகத்தை மேற்கொண்டவனோ;

௧௦. எவன் ப்ரஹ்மத்தினிடத்துக் கர்மங்களை வைத்து, பற்றை விட்டுச் செய்கிறானோ; அவன் நீரினால் தாமரையிலைபோல பாவத்தால் ஒட்டப்படுவதில்லை.

வேலைக்காரன் யஜமானனுக்காக(ச் செய்வது)போல, "நான் அவனுக்காக [ஈச்வரனுக்காக]க் கர்மத்தைச் செய்கிறேன்" என்று ஸகலகர்மங்களையும் ஈச்வரனிடத்து வைத்து, முக்தியாகிய பயனிலும் பற்றைவிட்டு எவன் செய்கிறானோ, அவனிடத்தில் தாமரையிலையிலே ஜலம்போல, பாவம் ஒட்டுவதில்லை. கேவலம் மனம் பரிசுத்தப்படுதல்மாத்திரமே அவனுடைய கர்மத்திற்கு பயனாகும். (௧௦)

ஏனெனில்,

௧௧. (கர்ம)யோகிகள் பற்றைவிட்டு, சித்த சுத்திக்காக, சரீரத்தாலும் மனத்தாலும் புத்தியினாலும் வெறும் இந்திரியங்களாலும் கர்மத்தைச் செய்கிறார்கள்.

வெறும் - எனதென்பது இல்லாத, "ஈச்வரனுக்காகவே செய்கிறேன், என்னுடைய பயனுக்காக அன்று" என எனதென்னும் எண்ணமில்லாத. ஒவ்வொரு செய்கையிலும் எனதென்பது இல்லாதிருத்தற்பொருட்டு, வெறும் என்னும் சொல்லை சரீரம் முதலியவற்றோடும் தனித்தனி கூட்டுக. கர்மயோகிகள் பயனைப்பற்றிய பற்றை விட்டு, சித்தசுத்திக்காக, (வெறும்)தேகத்தாலும் (வெறும்)மனத்தாலும் (வெறும்)புத்தியினாலும் வெறும் இந்திரியங்களாலும் கர்மத்தைச் செய்கிறார்கள். ஆதலால், அதிலேயே உனக்கு அதிகாரமாதலின் நீ கர்மத்தையே செய்யக்கடவாய்.

𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 —

௧௨. 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨𑍈𑌷𑍍𑌠𑌿𑌕𑍀𑌮𑍍 ।
𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑍇𑌣 𑌫𑌲𑍇 𑌸𑌕𑍍𑌤𑍋 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ॥

𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 "𑌈𑌶𑍍𑌵𑌰𑌾𑌯 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌕𑌰𑍋𑌮𑌿, 𑌨 𑌮𑌮 𑌫𑌲𑌾𑌯" 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃 𑌸𑌨𑍍 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌖𑍍𑌯𑌾𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨𑍈𑌷𑍍𑌠𑌿𑌕𑍀𑌂 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌯𑌾𑌂 𑌭𑌵𑌾𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌕𑍍𑌰𑌮𑍇𑌣 𑌇𑌤𑌿 𑌵𑌾𑌕𑍍𑌯𑌶𑍇𑌷𑌃 । 𑌯𑌸𑍍𑌤𑍁 𑌪𑍁𑌨𑌃 𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌅𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑍇𑌣 𑌕𑌰𑌣𑌂 𑌕𑌾𑌰𑌃, 𑌕𑌾𑌮𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑌃 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑌃, 𑌤𑍇𑌨 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑍇𑌣 𑌕𑌾𑌮𑌪𑍍𑌰𑍇𑌰𑌿𑌤𑌤𑌯𑍇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃, "𑌮𑌮 𑌫𑌲𑌾𑌯 𑌇𑌦𑌂 𑌕𑌰𑍋𑌮𑌿 𑌕𑌰𑍍𑌮" 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌫𑌲𑍇 𑌸𑌕𑍍𑌤𑌃 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌤𑌃 𑌤𑍍𑌵𑌂 𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌭𑌵 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௧௨ ॥

𑌯𑌸𑍍𑌤𑍁 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌦𑌰𑍍𑌶𑍀 𑌸𑌃—

௧௩. 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍇 𑌸𑍁𑌖𑌂 𑌵𑌶𑍀 ।
𑌨𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇 𑌪𑍁𑌰𑍇 𑌦𑍇𑌹𑍀 𑌨𑍈𑌵 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨 𑌕𑌾𑌰𑌯𑌨𑍍 ॥

𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌨𑍈𑌮𑌿𑌤𑍍𑌤𑌿𑌕𑌂 𑌕𑌾𑌮𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌂 𑌚 𑌤𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌨𑌸𑌾 𑌵𑌿𑌵𑍇𑌕-

---

மற்றும், ஏனெனில்,

கஉ. (கர்மயோகத்தைக்)கூடியவன் கர்மத்தின் பயனைவிட்டு, நிஷ்டையினாலாகும் ஒழிவைப் பெறுகிறான். (கர்மயோகத்தைக்) கூடாது, காமத்தின் செய்கையினால் பயனிலே பற்றுவைத்தவன் கட்டப்படுகிறான்.

“ஈச்வரனுக்காகக் கர்மங்களைச் செய்கிறேன், என்னுடைய பயனுக்காக அன்று” என இவ்வாறாக ஒரு நிலைப்பட்ட மனத்தினனாய், கர்மத்தின் பயனை விட்டுக் கர்மத்தைச் செய்பவன், முதலில் மனம் பரிசுத்தமாதல், பின்பு ஞானமடைதல், பின்பு ஸகலகர்மங்களையும் துறந்திடுதல், பின்பு ஞானத்திலே நிலைத்துநிற்றல் என்னும் படிப்படியான முறையினால்) நிஷ்டையினாலாகும் மோக்ஷமென்னும் ஒழிவைப் பெறுகிறான். ‘மனம் பரிசுத்தமாதல், ஞானமடைதல், ஸகலகர்மங்களையும் துறந்திடுதல், ஞானத்திலே நிலைத்துநிற்றல் என்னும்முறையினால்’ என்பது வாக்கியத்திலே தொக்கிநிற்கின்றது. ஆனால், ஒருநிலையில்லா மனத்தினனாய், காமத்தின் செய்கையினாலே, அதாவது கர்மத்தால் தூண்டப்பட்டு “எனது பயனுக்காக இத்தொழிலைச் செய்கிறேன்” என இவ்வாறு பயனிலே பற்றுவைத்தவன் கட்டுண்டுகிடக்கிறான். ஆதலால், நீ (கர்மயோகத்தைக்)கூடினவனாய் இரு என்பது பொருள். (கஉ)

ஜீவன்முக்தன் உடம்பொடுநின்று பரம்பொருளைக்கண்டு வாழும் பேரானந்த வாழ்வு.

ஆனால், பரம்பொருளைக் காண்பவன் எவனோ, அவன் (எப்படி இருக்கின்றான் எனில்)—

கங. தன்னடக்கங்கொண்டு உடம்பொடுநிற்பவன் ஸகலகர்மங்களையும் மனத்தால் துறந்து, (ஒன்றுஞ்)செய்யவேசெய்யாதவனாய், செய்விக்காதவனாய் ஒன்பதுவாசலுள்ள பட்டணத்திலே ஸுகமாகத் தங்கியிருக்கின்றான்.

(பரம்பொருளைக் கண்டவன்)நித்யம், நைமித்திகம், காம்யம், பிரதிஷித்தம் என்னும் ஸகலகர்மங்களையும் விவேகஅறிவால் துறந்து, அதாவது கர்மம்முதலானவற்றிலே அகர்மத்தைக் கண்டு (கர்மங்களை)முற்றும் விட்டு ஸுகமாகத் தங்கியிருக்-

𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾, 𑌕𑌰𑍍𑌮𑌾𑌦𑍌 𑌅𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 𑌸𑌂𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃, 𑌆𑌸𑍍𑌤𑍇 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 𑌸𑍁𑌖𑌮𑍍। 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌵𑌾𑌙𑍍𑌮𑌨𑌃𑌕𑌾𑌯𑌚𑍇𑌷𑍍𑌟𑌃 𑌨𑌿𑌰𑌾𑌯𑌾𑌸𑌃 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌚𑌿𑌤𑍍𑌤𑌃 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑌬𑌾𑌹𑍍𑌯𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌃 𑌇𑌤𑌿 '𑌸𑍁𑌖𑌮𑍍 𑌆𑌸𑍍𑌤𑍇' 𑌇𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌯𑌤𑍇। 𑌵𑌶𑍀 𑌜𑌿𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃। 𑌕𑍍𑌵 𑌕𑌥𑌮𑍍 𑌆𑌸𑍍𑌤𑍇 𑌇𑌤𑌿? 𑌆𑌹 𑌨𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇 𑌪𑍁𑌰𑍇। 𑌸𑌪𑍍𑌤 𑌶𑍀𑌰𑍍𑌷𑌣𑍍𑌯𑌾𑌨𑌿 𑌆𑌤𑍍𑌮𑌨 𑌉𑌪𑌲𑌬𑍍𑌧𑌿𑌦𑍍𑌵𑌾𑌰𑌾𑌣𑌿, 𑌅𑌰𑍍𑌵𑌾𑌕𑍍 𑌚 𑌦𑍍𑌵𑍇 𑌮𑍂𑌤𑍍𑌰𑌪𑍁𑌰𑍀𑌷𑌵𑌿𑌸𑌰𑍍𑌗𑌾𑌰𑍍𑌥𑍇, 𑌤𑍈𑌃 𑌦𑍍𑌵𑌾𑌰𑍈𑌃 𑌨𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑌂 𑌪𑍁𑌰𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌶𑌰𑍀𑌰𑌂, 𑌪𑍁𑌰𑌮𑌿𑌵 𑌪𑍁𑌰𑌮𑍍, 𑌆𑌤𑍍𑌮𑍈𑌕𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌕𑌂, 𑌤𑌦𑌰𑍍𑌥𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑍈𑌶𑍍𑌚 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌵𑌿𑌷𑌯𑍈𑌃 𑌅𑌨𑍇𑌕𑌫𑌲𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌉𑌤𑍍𑌪𑌾𑌦𑌕𑍈𑌃 𑌪𑍌𑌰𑍈𑌰𑌿𑌵 𑌅𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌮𑍍। 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌨𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇 𑌪𑍁𑌰𑍇 𑌦𑍇𑌹𑍇 𑌦𑍇𑌹𑍀 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌆𑌸𑍍𑌤𑍇॥

𑌕𑌿𑌂 𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑍇𑌨? 𑌸𑌰𑍍𑌵𑍋 𑌹𑌿 𑌦𑍇𑌹𑍀 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌅𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌵𑌾 𑌦𑍇𑌹𑍇 𑌏𑌵 𑌆𑌸𑍍𑌤𑍇; 𑌤𑌤𑍍𑌰 𑌅𑌨𑌰𑍍𑌥𑌕𑌂 𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌮𑍍। 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—𑌯𑌸𑍍𑌤𑍁 𑌅𑌜𑍍𑌞𑌃 𑌦𑍇𑌹𑍀 𑌦𑍇𑌹𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑌂𑌘𑌾𑌤𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑍀 𑌸 𑌸𑌰𑍍𑌵𑍋𑌽𑌪𑌿 "𑌗𑍇𑌹𑍇 𑌭𑍂𑌮𑍌 𑌆𑌸𑌨𑍇 𑌵𑌾 𑌆𑌸𑍇" 𑌇𑌤𑌿 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇। 𑌨 𑌹𑌿 𑌦𑍇𑌹𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 𑌗𑍇𑌹𑍇

---

கிறான். (நைமித்திகம் - யாதாயினும் ஓர்நிமித்தத்தா லாவது. அது, கிரகணம் முதலானவற்றிலே ஸ்நாநம் செய்தல் முதலானது. பிரதிஷித்தம் - விலக்கப்பட்டது. அவன்) மனமொழிமெய்களின் செய்கைகளை விட்டவன், தொல்லை நீங்கியவன், மனந்தெளிந்தவன், ஆத்மாவைத்தவிர வெளிப்பிரயோஜனங்களெல்லாம் ஒழிந்தவன் என்பதனால், "ஸுகமாகத் தங்கியிருக்கிறான்" எனக் கூறப்படுகின்றது. தன்னடக்கங்கொண்டு (என்பதற்கு) - இந்திரியங்களை ஜயித்து என்பது பொருள்.—(அவன்) எங்கே எவ்வாறு தங்கியிருக்கிறான் என்பது? — கூறுகிறார் "ஒன்பதுவாசலுள்ள பட்டணத்தில்" (என்று). ஆத்மா (ஓசைமுதலியவற்றை) உணர்தற்கு வழிகளாய் தலையில் உள்ளவை (கண் 2, செவி 2, மூக்குத்துவாரங்கள் 2, வாய் 1, ஆக) ஏழு; மலஜலங்களை விடுதற்கான (வழிகள்) கீழே இரண்டு. அந்த வாசல்களால் தேகமானது ஒன்பதுவாசலுள்ள பட்டணம் எனப்படுகின்றது. (அது) பட்டணம் போன்று (ள்ளமையால்) பட்டணமாயிருப்பது: ஆத்மாவையே அரசனாகக்கொண்டது: அவன் பொருட்டு (தம் தம் செய்கைகளிற்) செல்லுபவையாய், பலபயன்களை விளைப்பவையாய், பட்டணத்துக் குடிகள்போன்றுநிற்கும் இந்திரியங்கள் மனம் புத்தி (அவற்றின்) விஷயங்கள் என்றவற்றால் குடியேறப்பெற்றது. ஒன்பதுவாசல்பட்டணமான அந்தத் தேகத்திலே உடம்பொடு நிற்பவன் ஸகல கர்மத்தையும்துறந்து தங்கியிருக்கிறான்.

(ஆக்ஷேபம்) :—("அவன் தேகத்திலே தங்கியிருக்கிறான்" என்னும்) விசேஷணத்தால் ஆவதென்ன? ஸந்யாஸியானாலும், ஸந்யாஸியல்லாதவனானாலும், ஒவ்வொரு ஜீவனும் தேகத்திலேதான் தங்கியிருக்கிறான். (ஆகவே,) அங்கு விசேஷணம் பயனில்லாததாம்.

(ஸமாதாநம்) :—கூறுவோம் : தேகம் இந்திரியங்கள் இவற்றின் சேர்க்கையையே ஆத்மாவாக அறியும் அஜ்ஞானியான ஜீவன் எவனோ, அந்த ஒவ்வொருவனும் "வீட்டிலோ, தரையிலோ, அல்லது (பலகை முதலான) ஆஸநத்திலோ நான் தங்கியிருக்கிறேன்" எனக் கொள்கிறான். தேகத்தையே ஆத்மாவாகக் காண்பவனுக்கு வீட்டில் (தங்கியிருக்கிறேன் என்னும்எண்ணம் உண்டாவது) போல, தேகத்தில்

𑌇𑌵 𑌦𑍇𑌹𑍇 𑌆𑌸𑍇 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌃 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿 । 𑌦𑍇𑌹𑌾𑌦𑌿𑌸𑌂𑌘𑌾𑌤𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌸𑍍𑌤𑍁 “𑌦𑍇𑌹𑍇 𑌆𑌸𑍇” 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯 𑌉𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌪𑌰𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌚 𑌪𑌰𑌤𑍍𑌰𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 𑌅𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑌿𑌤𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 𑌵𑌿𑌵𑍇𑌕𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸 𑌉𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌉𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌵𑌿𑌵𑍇𑌕𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑍋𑌽𑌪𑌿 𑌗𑍇𑌹𑍇 𑌇𑌵 𑌦𑍇𑌹𑍇 𑌏𑌵 𑌨𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇 𑌪𑍁𑌰𑍇 𑌆𑌸𑌨𑌂, 𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌫𑌲𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌶𑍇𑌷𑌾𑌨𑍁𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌾 𑌦𑍇𑌹𑍇 𑌏𑌵 𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 । 𑌦𑍇𑌹𑍇 𑌏𑌵 𑌆𑌸𑍍𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌅𑌸𑍍𑌤𑍍𑌯𑍇𑌵 𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌫𑌲𑌂, 𑌵𑌿𑌦𑍍𑌵𑌦𑌵𑌿𑌦𑍍𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌭𑍇𑌦𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 ॥

𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑌣𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌅𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑌿𑌤𑌾𑌨𑌿 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌉𑌕𑍍𑌤𑌂; 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌆𑌤𑍍𑌮𑌸𑌮𑌵𑌾𑌯𑌿 𑌤𑍁 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌕𑌾𑌰𑌯𑌿𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿 𑌆𑌶𑌙𑍍𑌕𑍍𑌯 𑌆𑌹—𑌨𑍈𑌵 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌸𑍍𑌵𑌯𑌂, 𑌨 𑌚 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑌣𑌾𑌨𑌿 𑌕𑌾𑌰𑌯𑌨𑍍 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌸𑍁 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌯𑌨𑍍 ॥

---

தங்கியிருக்கிறேன் என்னும் எண்ணம் உண்டாவதில்லையன்றோ. ஆனால்,தேகம்முதலானவற்றின் சேர்க்கைக்கு வேறாக ஆத்மாவை அறிபவனுக்கு “தேகத்திலே தங்கியிருக்கிறேன்” என்னும்எண்ணம் (நிகழக்)கூடுமென்க. ஒன்றனிடத்து (அதாவது) ஆத்மாவினிடத்து அறியாமையினால் ஏற்றப்பட்ட மற்றொன்றனுடைய [மனமொழிமெய்களுடைய] கர்மங்களை ஞானத்தினால், விவேகஅறிவினால்,மனத்தினால் துறந்திடுதல் கூடும்.(ஒருவன் ஆத்மாவைக் கண்டுணரும்)விவேகஅறிவு உண்டாகப்பெற்று,ஸகலகர்மங்களையும் துறந்திருப்பவனாயினும்,வீட்டில்(அவன் இருப்பது)போல, ஒன்பதுவாசல் பட்டணமாகிய தேகத்திலேயே இருத்தலென்பது(ஏற்கும்; இப்பொழுதுள்ள சரீரத்தைத் தமது)பயனாகத் தந்துநிற்கும் பிராரப்த கர்மங்களுடைய மிச்சத்திலிருந்து (தேகம்முதலானவற்றின்)வாஸனையானது தொடர்ந்துவருதலால், (தேகத்திலேயே (தங்கியிருத்தலென்னும்)சிறப்புணர்ச்சி உண்டாதலின். (இவ்வாறாக,) “தேகத்திலேயே தங்கியிருக்கிறான்” என்னும்விசேஷணத்திற்குப் பயன் இருக்கவேஇருக்கின்றது ; (அவ்விசேஷணம்)ஞானி அஞ்ஞானி இவர்களுடைய எண்ணங்களின்பேதத்தைக் குறித்துநிற்றலால் என்க. [சிறப்புணர்ச்சி - ஒன்றைக் குறித்துநிற்கும் உணர்வு.]

(சங்கை):—“அறியாமையினால் ஆத்மாவினிடத்து ஏற்றப்பட்ட (கர்மங்களை, அதாவது) தேகம் இந்திரியங்கள் என்றவற்றின் தொழில்களை(ஞானி)துறந்திடுகிறான், என்றாலும், (வெண்மை நிறமான தன்மையானது பாலோடு ஒற்றித்திருப்பதுபோல,) ஸமவாயத்தைச் செய்துகொண்டவனுக்கு, செய்பவனாயிருக்குந்தன்மையும் செய்விப்பவனாயிருக்குந்தன்மையும் ஆத்மாவோடு ஒற்றித்திருக்கலாம்” எனச் சங்கித்து,

(ஸமாதானம்):—(பகவான்).கூறுகிறார் : “(ஞானி ஒன்றையும்) தான் செய்யவே செய்யாதவனாய், தேகம் இந்திரியங்கள் என்றவற்றைச் செய்விக்காதவனாய் (அதாவது அவற்றைத் தம்தம்)தொழில்களிற் செல்லும்படிசெய்யாதவனாய்(த் தங்கியிருக்கிறான்).”

𑌕𑌿𑌂 𑌯𑌤𑍍 𑌤𑌤𑍍 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌕𑌾𑌰𑌯𑌿𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌦𑍇𑌹𑌿𑌨𑌃 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌸𑌮𑌵𑌾𑌯𑌿 𑌸𑌤𑍍 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍 𑌨 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿, 𑌯𑌥𑌾 𑌗𑌨𑍍𑌤𑍁𑌰𑍍 𑌗𑌤𑌿𑌃? 𑌕𑌿𑌂 𑌵𑌾 𑌸𑍍𑌵𑌤 𑌏𑌵 𑌆𑌤𑍍𑌮𑌨𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌇𑌤𑌿? 𑌅𑌤𑍍𑌰 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌸𑍍𑌵𑌤𑌃 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌕𑌾𑌰𑌯𑌿𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌵𑌾। 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌹𑌿 '𑌅𑌵𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇' '𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑍋𑌽𑌪𑌿 𑌨 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇' 𑌇𑌤𑌿। '𑌧𑍍𑌯𑌾𑌯𑌤𑍀𑌵 𑌲𑍇𑌲𑌾𑌯𑌤𑍀𑌵' 𑌇𑌤𑌿 𑌚 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌃॥ ௧௩॥

𑌕𑌿𑌞𑍍𑌚—

௧௪. 𑌨 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌨 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌲𑍋𑌕𑌸𑍍𑌯 𑌸𑍃𑌜𑌤𑌿 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃।
𑌨 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌸𑌂𑌯𑍋𑌗𑌂 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌸𑍍𑌤𑍁 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇॥

𑌨 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌕𑍁𑌰𑍁 𑌇𑌤𑌿 𑌨𑌾𑌪𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌰𑌥𑌘𑌟𑌪𑍍𑌰𑌾𑌸𑌾𑌦𑌾𑌦𑍀𑌨𑍀𑌪𑍍𑌸𑌿𑌤𑌤𑌮𑌾𑌨𑌿 𑌲𑍋𑌕𑌸𑍍𑌯 𑌸𑍃𑌜𑌤𑌿 𑌉𑌤𑍍𑌪𑌾𑌦𑌯𑌤𑌿 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾। 𑌨𑌾𑌪𑌿 𑌰𑌥𑌾𑌦𑌿 𑌕𑍃𑌤𑌵𑌤𑌃 𑌤𑌤𑍍𑌫𑌲𑍇𑌨 𑌸𑌂𑌯𑍋𑌗𑌂 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌸𑌂𑌯𑍋𑌗𑌮𑍍 𑌉𑌤𑍍𑌪𑌾𑌦𑌯𑌤𑌿॥

𑌯𑌦𑌿 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌪𑌿 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌨 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌨 𑌕𑌾𑌰𑌯𑌤𑌿 𑌚 𑌦𑍇𑌹𑍀, 𑌕𑌃 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌕𑌾𑌰𑌯𑌂𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌸𑍍𑌤𑍁 𑌸𑍍𑌵𑍋 𑌭𑌾𑌵𑌃 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌃

---

(ஆக்ஷேபம்) :—நடப்பவன் (நின்றுவிடுதலால் தன்னிடத்துள்ள நடத்தலென்னும்தொழிலை விட்டிடுகிறான்; விட்டிடவே, அப்பொழுது அவனுக்கு) நடத்தல்(உண்டாகாதவாறு)போல, செய்பவனாயிருத்தலும் செய்விப்பவனாயிருத்தலுமாகிய இரண்டும் உடம்பொடுநிற்பவனுக்குத் தன் ஆத்மாவொடு ஒற்றித்திருப்பனவாகி, துறவினால் உண்டாகின்றன இல்லையா? அல்லது, ஆத்மாவுக்குத் தாமாகவே (அவை) இல்லையா? என்பது.

(ஸமாதாநம்) :—இதில் கூறுவோம்: செய்பவனாயிருத்தலாவது செய்விப்பவனாயிருத்தலாவது ஆத்மாவுக்குத் தானாக இல்லை. ஏனெனில், "இது விகாரப்படாதது" (௨-௨௫), "சரீரத்தில் தங்கியிருந்தாலும் (இது ஒன்றையுஞ்) செய்வதில்லை, (எதனாலும்) பற்றப்படுவதில்லை" (௧௩-௩௧) என உரைக்கப்பட்டுள்ளது. "(அது) நினைப்பது போலவும், அசைவது போலவும் உள்ளது" (பி-௪-௩-௭) என்னும்சுருதியினாலும் (இதனை அறிக). (௧௩)

அதது தொழில்படுதற்கு ஸ்வபாவமென்பது மூலகாரணம்.

மேலும்,

௧௪. கர்த்தாவாதலையும் பொருள்களையும் பிரபு உலகத்திற்குப் படைப்பதில்லை; (ஒருவன் தான் செய்யும்) கர்மத்தின் பயனோடு கூடுதலை(யும், உண்டுபண்ணுவது) இல்லை. ஆனால், ஸ்வபாவமென்பது பிரவிருத்திக்கின்றது. [பிரபு - தேகம்முதலியவற்றிற்குப் பிரபுவான ஆத்மா.]

கர்த்தாவாதலை ஆத்மா உண்டாக்குவதில்லை, (அதாவது, "நீ இதனைச்) செய்" என்று தானாக(ஆத்மா ஒருவனைத் தூண்டுவது) இல்லை. (ஒருவன் தான்) அடையவிரும்பிய வண்டிகள் குடங்கள் மாளிகைகள் முதலியவற்றையும் ஆத்மா உலகத்திற்கு உண்டுபண்ணுவதில்லை. அன்றியும், வண்டிமுதலியவற்றைச் செய்தவன் அத்தொழிலின் பயனோடு கூடுதலையும் (ஆத்மா) உண்டாக்குவதில்லை.

(வினா) :—உடம்பொடுநிற்கும் (ஆத்மாவானது) தானாக ஒன்றையுஞ் செய்வதும் செய்விப்பதும் இல்லையானால், அப்பொழுது எது செய்வதாயும் செய்விப்பதாயும் தலைப்படுகின்றது என்பது?

𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌲𑌕𑍍𑌷𑌣𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃 𑌮𑌾𑌯𑌾 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 “𑌦𑍈𑌵𑍀 𑌹𑌿” 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑌾𑌣𑌾 ॥ ௧௪ ॥

𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌸𑍍𑌤𑍁—

௧௫. 𑌨𑌾𑌦𑌤𑍍𑌤𑍇 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 𑌪𑌾𑌪𑌂 𑌨 𑌚𑍈𑌵 𑌸𑍁𑌕𑍃𑌤𑌂 𑌵𑌿𑌭𑍁𑌃 ।
𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑌾𑌵𑍃𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑍇𑌨 𑌮𑍁𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌜𑌨𑍍𑌤𑌵𑌃 ॥

𑌨 𑌆𑌦𑌤𑍍𑌤𑍇 𑌨 𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿 𑌭𑌕𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 𑌪𑌾𑌪𑌮𑍍 । 𑌨 𑌚𑍈𑌵 𑌆𑌦𑌤𑍍𑌤𑍇 𑌸𑍁𑌕𑍃𑌤𑌂 𑌭𑌕𑍍𑌤𑍈𑌃 𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌵𑌿𑌭𑍁𑌃 ॥

𑌕𑌿𑌮𑌰𑍍𑌥𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌭𑌕𑍍𑌤𑍈𑌃 𑌪𑍂𑌜𑌾𑌦𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌯𑌾𑌗𑌦𑌾𑌨𑌹𑍋𑌮𑌾𑌦𑌿 𑌚 𑌸𑍁𑌕𑍃𑌤𑌂 𑌪𑍍𑌰𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿? 𑌆𑌹—𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌆𑌵𑍃𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌵𑍇𑌕𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂, 𑌤𑍇𑌨 𑌮𑍁𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 “𑌕𑌰𑍋𑌮𑌿, 𑌕𑌾𑌰𑌯𑌾𑌮𑌿, 𑌭𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑍇, 𑌭𑍋𑌜𑌯𑌾𑌮𑌿” 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌮𑍋𑌹𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌿𑌨𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌿𑌣𑍋 𑌜𑌨𑍍𑌤𑌵𑌃 ॥ ௧௫ ॥

௧௬. 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌤𑍁 𑌤𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌨𑌾𑌶𑌿𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌤𑍇𑌷𑌾𑌮𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌯𑌤𑌿 𑌤𑌤𑍍𑌪𑌰𑌮𑍍 ॥

𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌤𑍁 𑌯𑍇𑌨 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌆𑌵𑍃𑌤𑌾 𑌮𑍁𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌜𑌨𑍍𑌤𑌵𑌃 𑌤𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌜𑌨𑍍𑌤𑍂𑌨𑌾𑌂 𑌵𑌿𑌵𑍇𑌕𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌷𑌯𑍇𑌣 𑌨𑌾𑌶𑌿𑌤𑌮𑌾𑌤𑍍𑌮-

---

(விடை) :—கூறுவோம்: மற்று, ஸ்வபாவமென்பது, இயற்கையென்பது தன்மையென்பது, அறியாமையென்னும் பிரகிருதியானது, “(முக்)குணமயமான” (௭・௧௪)என்பதுமுதலாகக் கூறப்படும் மாயையானது தலைப்படுகின்றது,சேஷ்டிக்கின்றது. (௧௪)

அறிவும், அறியாமையும்.

உண்மையிலோ,

௧௫. எங்கும் நிறைந்த(பகவான்) ஒருவனுடைய தீவினையை வாங்கிக்கொள்வதில்லை; நல்வினையையும் (வாங்கிக்கொள்வது) இல்லை. அறிவு அறியாமையினால் மூடப்பட்டுள்ளது; அதனால் பிராணிகள் மயங்குகின்றன.

ஒருவன் பக்தனாயிருந்தாலும், அவனுடைய தீவினையை(யும்)பகவான் வாங்கிக்கொள்வதில்லை; பக்தர்களால் செய்யப்பட்ட நல்வினையையும் வாங்கிக்கொள்வதில்லை.

(வினா) :—அப்பொழுது பக்தர்களால் பூஜைமுதலாகிய நல்வினைகளும், யாகம் தானம் ஹோமம் முதலான நல்வினைகளும் எதற்காகச் செய்யப்படுகின்றன என்பது?

(விடை) :—(பகவான்)கூறுகிறார்: விவேகஅறிவு அஜ்ஞானத்தால் மூடுண்டு கிடக்கின்றது. ஆகவே, விவேகமில்லாத ஸம்ஸாரிகளான பிராணிகள் “நான் செய்கிறேன், செய்விக்கிறேன், அநுபவிக்கிறேன், அநுபவிக்கும்படிசெய்கிறேன்”என இவ்வாறாக மயக்கமுறுகின்றன. (௧௫)

௧௬. ஆனால், எவர்களுடைய அந்த அஜ்ஞானமானது ஆத்மாவைப்பற்றிய ஞானத்தால் நசிக்கப்பட்டதோ, அவர்களுக்கு ஞானம் சூரியன்போல அப் பரம்பொருளை விளங்கும்படி செய்கின்றது.

எந்த அஜ்ஞானத்தால் மூடுண்டு பிராணிகள் மயங்குகின்றனவோ, அந்த அஜ்ஞானமானது எப்பிராணிகட்கு ஆத்மாவைப்பற்றிய விவேகஅறிவினால் நசிக்கப்பட்

நஃ ஹவதி, தேஷாம் ஜ்ஞாநம் ஆதித்யவத் யதா ஆதித்ய: ஸமஸ்தம் ரூபஜாதம், அவபாஸயதி தத்வத் ஜ்ஞாநம் ஜ்ஞேயம் வஸ்து ஸர்வம் ப்ரகாஶயதி தத் பரம் பரமார்த்ததத்த்வம் ॥ ௧௬ ॥

யத் பரம் பரமார்த்ததத்த்வம் ஜ்ஞாநப்ரகாஶிதம்—

௧௭. தத்புத்தயஸ்ததாத்மாநஸ்தந்நிஷ்டாஸ்தத்பராயணா: ।
 கச்சந்த்யபுநராவ்ருத்திம் ஜ்ஞாநநிர்தூதகல்மஷா: ॥

தஸ்மிந் ப்ரஹ்மணி கதா புத்தி: யேஷாம் தே தத்புத்தய:, ததாத்மாந: தததேவ பரம் ப்ரஹ்ம ஆத்மா யேஷாம் தே ததாத்மாந:, தந்நிஷ்டா: நிஷ்டா அபிநிவேஶ: தாத்பர்யம் ஸர்வாணி கர்மாணி ஸம்ந்யஸ்ய தஸ்மிந் ப்ரஹ்மண்யேவ அவஸ்தாநம் யேஷாம் தே தந்நிஷ்டா:, தத்பராயணா: ச தததேவ பரம் அயநம் பரா கதி: யேஷாம் பவதி தே தத்பராயணா: கேவலாத்மரதா இத்யர்த: । யேஷாம் ஜ்ஞாநேந நாஶிதம் ஆத்மந: அஜ்ஞாநம் தே கச்சந்தி ஏவம்விதா: அபுநராவ்ருத்திம் அபுநர்தேஹஸம்பந்தம் ஜ்ஞாநநிர்தூதகல்மஷா: யதோக்தேந ஜ்ஞாநேந நிர்தூத: நாஶித: கல்மஷ: பாபாதிஸம்ஸாரகாரணதோஷ: யேஷாம் தே ஜ்ஞாநநிர்தூதகல்மஷா: யதய: இத்யர்த: ॥ ௧௭ ॥

---

டுள்ளதோ, அப்பிராணிகட்கு(அந்த)ஞானமானது,சூரியன்(உலகத்திலுள்ள)பொருள் களின் கூட்டத்தையெல்லாம் விளங்கத் தோற்றுவிக்கின்றதுபோல, அறியவேண்டிய பரமார்த்தஉண்மையாகிய அப்பரம்பொருள்முழுவதையும்விளங்கும்படிசெய்கின்றது.

ஆத்மஞானிக்கு மீண்டும் பிறவி இல்லை.

ஞானத்தால் பிரகாசிக்கப்பட்ட பரம்பொருளாகிய பரமார்த்தஉண்மை எதுவோ,

௧௭. அதிலே புத்தியையுடைவராய், அதையே ஆத்மாவாகக்கொண்டவராய், அதிலே நிலைத்து நிற்பவராய், அதையே சிறந்த அடைக்கலமாக அடைந்து,ஞானத்தால் பாவந்தேயப்பெற்றவர்கள் மீண்டும் (ஸம்ஸாரத்தின்கண்)வாராமையை அடைகிறார்கள்.

அதிலே புத்தியையுடையவராய் - ப்ரஹ்மத்தினிடத்து புத்தி சென்றவராய். அதையே - பரப்ரஹ்மத்தையே. நிஷ்டையாவது - உள்ளக்கிளர்ச்சி,ஊக்கம், கருத்துடைமை. அதிலே நிலைத்து நிற்பவராய் - ஸகலகர்மங்களையும் துறந்து ப்ரஹ்மத்தினிடத்தேயே (தமது)இருப்பைக்கொண்டவராய். அதுவே எவர்கட்குச் சிறந்த புகலிடமாக இருக்கின்றதோ,அவர்கள்அதனையே உயர்ந்த அடைக்கலமாகக் கொண்டவர்கள் : ஆத்மாவொன்றிலேயே மகிழ்ந்திருப்பவர்கள் என்பது பொருள். எவர்களுடைய அறியாமையானது ஆத்மாவைப்பற்றிய அறிவினால் நசிக்கப்பட்டதோ, அவர்கள் இத்தகையோராகி மீண்டும் (ஸம்ஸாரத்தின்கண்) வாராமையை= மீண்டும் உடலொடுகூடுதல் இல்லாமையைப் பெறுகிறார்கள். ஸம்ஸாரகாரணமாகிய தீவினைமுதலான தீங்கானது கீழ்க்கூறியஞானத்தால் எவர்கட்கு நசிக்கப்பட்டுள்ளதோ, அவர்கள் ஞானத்தால் பாவந்தேயப்பெற்றவர்கள் : யதிகள் என்பது பொருள். (௧௭)

𑌯𑍇𑌷𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌨𑌾𑌶𑌿𑌤𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑍇 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃 𑌕𑌥𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௧௮. 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌨𑌯𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑍇 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇 𑌗𑌵𑌿 𑌹𑌸𑍍𑌤𑌿𑌨𑌿 ।
𑌶𑍁𑌨𑌿 𑌚𑍈𑌵 𑌶𑍍𑌵𑌪𑌾𑌕𑍇 𑌚 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃 𑌸𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 ॥

𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌨𑌯𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑍇 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌚 𑌵𑌿𑌨𑌯𑌶𑍍𑌚 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌨𑌯𑍌, 𑌵𑌿𑌨𑌯𑌃 𑌉𑌪𑌶𑌮𑌃 𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑌃 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌵𑌿𑌨𑍀𑌤𑌶𑍍𑌚 𑌯𑍋 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇 𑌗𑌵𑌿 𑌹𑌸𑍍𑌤𑌿𑌨𑌿 𑌶𑍁𑌨𑌿 𑌚𑍈𑌵 𑌶𑍍𑌵𑌪𑌾𑌕𑍇 𑌚 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃 𑌸𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃—𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌨𑌯𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑍇 𑌉𑌤𑍍𑌤𑌮𑍇 𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌵𑌤𑌿 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑍇, 𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌯𑌾𑌂 𑌚 𑌰𑌾𑌜𑌸𑍍𑌯𑌾𑌂 𑌗𑌵𑌿 𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌹𑍀𑌨𑌾𑌯𑌾𑌮𑍍, 𑌅𑌧𑌮𑍇 𑌚 𑌕𑍇𑌵𑌲𑌤𑌾𑌮𑌸𑍇 𑌹𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑍌, 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑍈𑌃 𑌤𑌜𑍍𑌜𑍈𑌶𑍍𑌚 𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑍈𑌃 𑌤𑌥𑌾 𑌰𑌾𑌜𑌸𑍈𑌃 𑌤𑌥𑌾 𑌤𑌾𑌮𑌸𑍈𑌃 𑌚 𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑍈𑌃 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑍇𑌵 𑌅𑌸𑌂𑌸𑍍𑌪𑍃𑌷𑍍𑌟𑌂 𑌸𑌮𑌂 𑌏𑌕𑌂 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌂 𑌤𑌤𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂 𑌶𑍀𑌲𑌂 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃 𑌸𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 ॥ ௧௮ ॥

𑌨𑌨𑍁 𑌅𑌭𑍋𑌜𑍍𑌯𑌾𑌨𑍍𑌨𑌾𑌃 𑌤𑍇 𑌦𑍋𑌷𑌵𑌨𑍍𑌤𑌃, '𑌸𑌮𑌾𑌸𑌮𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌵𑌿𑌷𑌮𑌸𑌮𑍇 𑌪𑍂𑌜𑌾𑌤𑌃' 𑌇𑌤𑌿 𑌸𑍍𑌮𑍃𑌤𑍇𑌃 ॥ 𑌨 𑌤𑍇 𑌦𑍋𑌷𑌵𑌨𑍍𑌤𑌃 । 𑌕𑌥𑌮𑍍?—

---

**ஆத்மஞானி எந்தப் பொருளிலும் ஒன்றையே காண்கிறான்.**

எவர்களுடைய அறியாமையானது ஆத்மாவைப்பற்றிய அறிவினால் நசிக்கப்பட்டுள்ளதோ, அந்த ஞானிகள் எவ்வாறு உண்மையினைக் காண்கிறார்கள் என்பது? —கூறுவோம் :

**௧௮. கல்வியும் ஒழுக்கமுமுள்ள பிராமணனிடத்திலும், ஆவினிடத்திலும், யானையினிடத்திலும், நாயினிடத்திலும், நாயையுண்போனிடத்திலும் ஒன்றையே காண்பவர்கள் ஞானிகள்.**

கல்வியும் சாந்தமும் கூடி வித்வானும் அடங்கிய பிராமணன் எவனோ, அவனிடத்தும்(அதாவது ப்ரஹ்ம)வித்யையும் அடக்கமும் வைதிகஸம்ஸ்காரமும் ஸத்துவகுணமும் உடைய உத்தமனான பிராமணனிடத்தும், ரஜோகுணமுடையதாய் வைதிகஸம்ஸ்காரமில்லதாய் மத்யமமான ஆவினிடத்தும்,வெறுந்தாமஸமாகிய அதமமாயுள்ள யானை முதலானவற்றினிடத்தும்(ஒன்றையே காண்பவர்கள் ஞானிகள். வைதிகஸம்ஸ்காரம் - வேதவிதிப்படி உபநயநம்முதலியவற்றால் பரிசுத்தமாதல்.)ஸத்துவம்முதலிய குணங்களும், அதனால்[ஸத்துவகுணத்தால்]உண்டாகும் வாஸனைகளும், ராஜஸமான வாஸனைகளும்,தாமஸமான வாஸனைகளும் (ஆகிய இவற்றுள் எதுவும் தன்னைக்) கலத்தலில்லாததாய் ஸமமாய் ஏகமாய் நிர்விகாரியாயுள்ள அந்த ப்ரஹ்மத்தைக் காணும் தன்மையானது எவர்கட்கு உள்ளதோ, அவர்கள் ஞானிகள்,ஸமதர்சிகள் என்க.(௧௮)

**இவ்வுலகத்திலிருந்தும்பொழுதேயே ப்ரஹ்மஞானி விடுபடுகிறான்.**

(ஆக்ஷேபம்) :—அப்படியானால் (ஸாத்விக ராஜஸ தாமஸங்களான பிராணிகளிடத்து ஸமதர்சிகளாயுள்ளவர்கள் பிறரால்)புஜிக்கக்கூடாத அன்னத்தையுடையவர்கள் ; அவர்கள் குற்றமுடையவர்கள் ; "ஸமமானவனுக்கு ஸமமில்லாமலும், ஸமமில்லாதவனுக்கு ஸமமாகவும் (செய்த) மரியாதையினால், (அப்படி மரியாதை செய்தவனுடைய அன்னத்தைப் புஜிக்கக்கூடாது)" (கௌ - ௧௭ - ௨௦) என்னும் ஸ்மிருதியினாலென்க.

(ஸமாதானம்) :—அவர்கள் குற்றமுடையோரல்லர்.—எப்படி ?—

௧௯. 𑌇𑌹𑍈𑌵 𑌤𑍈𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 𑌸𑌰𑍍𑌗𑍋 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌸𑌾𑌮𑍍𑌯𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌮𑌨𑌃 ।
𑌨𑌿𑌰𑍍𑌦𑍋𑌷𑌂 𑌹𑌿 𑌸𑌮𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌤𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 ॥

𑌇𑌹 𑌏𑌵 𑌜𑍀𑌵𑌦𑍍𑌭𑌿𑌰𑍇𑌵 𑌤𑍈𑌃 𑌸𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌭𑌿𑌃 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑍈𑌃 𑌜𑌿𑌤𑍋 𑌵𑌶𑍀𑌕𑍃𑌤𑌃 𑌸𑌰𑍍𑌗𑍋 𑌜𑌨𑍍𑌮, 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌸𑌾𑌮𑍍𑌯𑍇 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌸𑌮𑌭𑌾𑌵𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌨𑌿𑌶𑍍𑌚𑌲𑍀𑌭𑍂𑌤𑌂 𑌮𑌨𑌃 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌮𑍍 । 𑌨𑌿𑌰𑍍𑌦𑍋𑌷𑌮𑍍—𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌦𑍋𑌷𑌵𑌤𑍍𑌸𑍁 𑌶𑍍𑌵𑌪𑌾𑌕𑌾𑌦𑌿𑌷𑍁 𑌮𑍂𑌢𑍈𑌃 𑌤𑌦𑍍𑌦𑍋𑌷𑍈𑌃 𑌦𑍋𑌷𑌵𑌦𑌿𑌵 𑌵𑌿𑌭𑌾𑌵𑍍𑌯𑌤𑍇, 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌤𑌦𑍍𑌦𑍋𑌷𑍈𑌃 𑌅𑌸𑌂𑌸𑍍𑌪𑍃𑌷𑍍𑌟𑌮𑌿𑌤𑌿 𑌨𑌿𑌰𑍍𑌦𑍋𑌷𑌂 𑌦𑍋𑌷𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌂 𑌹𑌿 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 ; 𑌨𑌾𑌪𑌿 𑌸𑍍𑌵𑌗𑍁𑌣𑌭𑍇𑌦𑌭𑌿𑌨𑍍𑌨𑌂, 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 । 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿 𑌚 𑌭𑌗𑌵𑌾𑌨𑌿𑌚𑍍𑌛𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌧𑌰𑍍𑌮𑌤𑍍𑌵𑌮𑍍, '𑌅𑌨𑌾𑌦𑌿𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌤𑍍𑌵𑌾𑌤𑍍' 𑌇𑌤𑌿 𑌚 । 𑌨𑌾𑌪𑌿 𑌅𑌨𑍍𑌤𑍍𑌯𑌾 𑌵𑌿𑌶𑍇𑌷𑌾 𑌆𑌤𑍍𑌮𑌨𑍋 𑌭𑍇𑌦𑌕𑌾𑌃 𑌸𑌨𑍍𑌤𑌿, 𑌪𑍍𑌰𑌤𑌿𑌶𑌰𑍀𑌰𑌂 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍇 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 । 𑌅𑌤𑌃 𑌸𑌮𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌏𑌕𑌂 𑌚 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌏𑌵 𑌤𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌨 𑌦𑍋𑌷𑌗𑌨𑍍𑌧𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑌪𑌿 𑌤𑌾𑌨𑍍 𑌸𑍍𑌪𑍃𑌶𑌤𑌿, 𑌦𑍇𑌹𑌾𑌦𑌿𑌸𑌂𑌘𑌾𑌤𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌾𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 𑌤𑍇𑌷𑌾𑌮𑍍 । 𑌦𑍇𑌹𑌾𑌦𑌿𑌸𑌂𑌘𑌾𑌤𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌵𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑌂 𑌤𑍁 𑌤𑌤𑍍 𑌸𑍂𑌤𑍍𑌰𑌂 '𑌸𑌮𑌾𑌸𑌮𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌵𑌿𑌷𑌮𑌸𑌮𑍇 𑌪𑍂𑌜𑌾𑌤𑌃' 𑌇𑌤𑌿 ;

---

௧௯. எவர்களுடைய மனம் ஸமநிலையிலே அமர்ந்துநிற்கின்றதோ, அவர்களால் பிறப்பு இங்கேயே ஜயிக்கப்பட்டது. ஏனெனில், ப்ரஹ்மம் குற்றமில்லாதது, ஸமமாயுள்ளது. அதனால் அவர்கள் ப்ரஹ்மத்திலே நிலைத்தவர்கள்.

எவர்களுடைய மனம் ஸகலபூதங்களிடத்தும் ப்ரஹ்மத்தின் ஸமநிலையிலே அலையாது நிலைத்ததோ, அந்த ஸமதர்சிகளான ஞானிகள் இச்சரீரத்திலிருக்கும் பொழுதேயே பிறப்பை வசப்படுத்திக்கொண்டவர். (ப்ரஹ்மமானது) நாயையுண் போன்முதலான அசுத்தர்களிடத்து அவர்களுடைய அசுத்தங்களால் அசுத்தமுடையதுபோல மூடர்களால் கொள்ளப்படுவதாயினும், (அது)அவ்வசுத்தங்களோடு படுதலில்லையாதலின் அசுத்தமில்லாததென்க. அன்றியும், (அது) தன்னுடைய குணவேற்றுமையினால் வெவ்வேறாக இல்லை; அறிவுக்கு குணமில்லையாதலின். பகவானும், "ஆசைமுதலியன சரீரத்தின் குணங்கள்" (௧௩ - ௬) எனவும், "(அது) அநாதியாதலால், நிற்குணமாதலால்" (௧௩ - ௩௧) எனவும் கூறுவர். (அந்திய விசேஷமென்பது - ஒருநித்யப்பொருளை மற்றொரு நித்யப்பொருளினின்றும் வேறுபடுத்துவது. உதாரணமாக, நீரின் பரமாணுக்களை நெருப்பின் பரமாணுக்களினின்றும் வேறுபடுத்துவது எதுவோ, அது அந்திய விசேஷம். அந்தியவிசேஷமெனினும், கடைசியான விசேஷமெனினும் ஒக்கும். விசேஷம் - வேறுபடுத்தும் பொருள். இவ்வாறாக வைசேஷிகர் சொல்லுகிறபடி) ஆத்மாவை வெவ்வேறாக வேறுபடுத்தும் அந்திய விசேஷங்களும் இல்லை; ஒவ்வொரு சரீரத்திலும் அவை உள்ளன என்பதற்குப் பிரமாணம் அமையாதாதலின் என்க. [ஒவ்வொரு சரீரத்திலும் ஆத்மா வேறுவேறாக இருக்கின்றது என்பது அமைந்தால், அப்பொழுது அந்தியவிசேஷங்கள் ஆத்மாவினிடத்து உண்டு என அமையும். மேலும், அவை உண்டு என அமைந்தால்தான், ஆத்மா ஒவ்வொருசரீரத்திலும், வேறுவேறாயுள்ளது என்பது அமையும். ஆகவே, இவ்வாறாக ஒன்றையொன்று பற்றுதல் என்னும் குற்றம் வருதல் காண்க.—ஆ.] ஆகவே, ப்ரஹ்மம் ஸமமாயும் ஏகமாயும் இருப்பது. ஆதலால், ப்ரஹ்மத்திலேயே அவர்கள் நிலைத்தார்கள். ஆதலால், அசுத்தத்தின் நாற்றமாத்திரமுங்கூட அவர்களைத் தொடாது; தேகம் முதலியவற்றின் சேர்க்கையையே ஆத்மாவாக அறிதலும் நான்என்னும்எண்ணமும் அவர்கட்கு இல்லாமையால். "ஸமமாயிருப்பவனுக்கு" (கௌ - ௧௭ - ௨௦)

𑌪𑍂𑌜𑌾𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌾𑌤𑍍 । 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌹𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌤𑍍 𑌷𑌡𑌙𑍍𑌗𑌵𑌿𑌤𑍍 𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑍇𑌦𑌵𑌿𑌤𑍍 𑌇𑌤𑌿 𑌪𑍂𑌜𑌾𑌦𑌾𑌨𑌾𑌦𑍌 𑌗𑍁𑌣𑌵𑌿𑌶𑍇𑌷𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌃 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑌗𑍁𑌣𑌦𑍋𑌷𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍 𑌇𑌤𑍍𑌯𑌤𑌃 '𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌤𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃' 𑌇𑌤𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌷𑌯𑌂 𑌚 '𑌸𑌮𑌾𑌸𑌮𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 । 𑌇𑌦𑌂 𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌵𑌿𑌷𑌯𑌂 𑌪𑍍𑌰𑌸𑍍𑌤𑍁𑌤𑌂, '𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌨𑌸𑌾' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌰𑌭𑍍𑌯 𑌆 𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑌪𑌰𑌿𑌸𑌮𑌾𑌪𑍍𑌤𑍇𑌃 ॥ ௧௯ ॥

𑌯𑌸𑍍𑌮𑌾𑌨𑍍 𑌨𑌿𑌰𑍍𑌦𑍋𑌷𑌂 𑌸𑌮𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌆𑌤𑍍𑌮𑌾, 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍—

௨௦. 𑌨 𑌪𑍍𑌰𑌹𑍃𑌷𑍍𑌯𑍇𑌤𑍍𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌨𑍋𑌦𑍍𑌵𑌿𑌜𑍇𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌚𑌾𑌪𑍍𑌰𑌿𑌯𑌮𑍍 ।
𑌸𑍍𑌥𑌿𑌰𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌸𑌂𑌮𑍂𑌢𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ॥

𑌨 𑌪𑍍𑌰𑌹𑍃𑌷𑍍𑌯𑍇𑌤𑍍 𑌪𑍍𑌰𑌹𑌰𑍍𑌷𑌂 𑌨 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌿𑌯𑌮𑍍 𑌇𑌷𑍍𑌟𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 । 𑌨 𑌉𑌦𑍍𑌵𑌿𑌜𑍇𑌤𑍍 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌚 𑌅𑌪𑍍𑌰𑌿𑌯𑌮𑍍 𑌅𑌨𑌿𑌷𑍍𑌟𑌂 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 । 𑌦𑍇𑌹𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌾𑌂 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌪𑍍𑌰𑌿𑌯𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍀 𑌹𑌰𑍍𑌷𑌵𑌿𑌷𑌾𑌦𑍌 𑌕𑍁𑌰𑍍𑌵𑌾𑌤𑍇, 𑌨 𑌕𑍇𑌵𑌲𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃, 𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌪𑍍𑌰𑌿𑌯𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑌸𑌂𑌭𑌵𑌾𑌤𑍍 । 𑌕𑌿𑌞𑍍𑌚—"𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍍𑌵𑍇𑌕𑌃 𑌸𑌮𑌃 𑌨𑌿𑌰𑍍𑌦𑍋𑌷 𑌆𑌤𑍍𑌮𑌾" 𑌇𑌤𑌿 𑌸𑍍𑌥𑌿𑌰𑌾 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌚𑌿𑌕𑌿𑌤𑍍𑌸𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌃 𑌸𑍍𑌥𑌿𑌰𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌅𑌸𑌂𑌮𑍂𑌢𑌃 𑌸𑌂𑌮𑍋𑌹𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌶𑍍𑌚 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌤𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃, 𑌅𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௨௦ ॥

---

என்னும் அந்த ஸூத்ரமோ, தேகம் முதலியவற்றின் சேர்க்கையையே ஆத்மாவாக அறிதலும் நான்என்னும்எண்ணமும் உடையவனைப் பற்றியது ;(அது)மரியாதையைப் பெறுகிறவர்களுடைய தன்மையைக்குறித்துநிற்றலின். "(இவன்)ப்ரஹ்மத்தைஅறிந்தவன்" "(இவன்)ஆறுசாஸ்திரத்தையும்அறிந்தவன்" "(இவன்)நான்குவேதத்தையும்அறிந்தவன்" எனச் சிறப்புக்குணம் பொருந்தியிருத்தலானது மரியாதைதானம்முதலானவற்றிலே காரணமாகக் காணப்படுகின்றதன்றோ. ஆனல்,ப்ரஹ்மமானது எத்தகைய குணத்தோடும் எத்தகைய குற்றத்தோடும் ஸம்பந்தப்படாத தாதலால் "அவர்கள் ப்ரஹ்மத்தில் நிலைத்தவர்கள்" என்பது ஏற்கும். மற்றும், "ஸமமாயிருப்பவனுக்கு" (கௌ - ௧௭ - ௨௦) என்று தொடங்கும் (ஸூத்ரம்) கர்மத்தைப்பற்றியது. இந்தப் பிரகரணமோ, ஸகலகர்மங்களையும் துறந்திடுதலைப்பற்றியதாய் "தன்னடக்கங்கொண்டு" (௫ - ௧௩) என்பதுமுதல் அத்தியாய முடிவுவரையிலும் (கூறப்படுவது). (௧௯)

**ஆத்மஞானிக்கு மகிழ்ச்சியும் வருத்தமும் இல்லை.**

ஆத்மாவான ப்ரஹ்மமானது குற்றமில்லாததாயும், ஸமமாயுமிருத்தலால்

௨௦. உறுதியான புத்தியையுடையவனாய், மயங்காதவனாய், ப்ரஹ்மத்தை அறிந்தவனாய், ப்ரஹ்மத்தில் நிலைத்தவன் பிரியமானதை அடைந்து மகிழவும் முடியாது ; பிரியமல்லாததை அடைந்து வருந்தவும் முடியாது.

தேகத்தையே ஆத்மாவாக அறிபவர்களுக்கன்றோ இஷ்டமானபொருளும் இஷ்டமல்லாதபொருளும் மகிழ்ச்சிவருத்தங்களைச் செய்கின்றன ; தனிப்பொருளையே ஆத்மாவாக அறிபவனுக்கு அல்ல ; இஷ்டமானதையும் இஷ்டமில்லாததையும் அடைதலென்பது அவனுக்கு நிகழாமையின். மேலும், "ஸகலபூதங்களினிடத்தும் ஆத்மா ஏகமாய் ஸமமாய் குற்றமில்லாததாய்(இருக்கின்றது)" என ஸம்சயமில்லாத உறுதியான புத்தியானது எவனுக்கு இருக்கின்றதோ, அவன் மயக்கமற்றவன் ; கீழ்க்கூறிய ப்ரஹ்மத்தை அறிந்தவன் ; ப்ரஹ்மத்தில் நிலைத்தவன் : கர்மத்தைச் செய்யாதவன், ஸகலகர்மங்களையும் முற்றத்துறந்தவன் என்பது பொருள். (௨௦)

𑌕𑌿𑌞𑍍𑌚, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃—

௨௧. 𑌬𑌾𑌹𑍍𑌯𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑍇𑌷𑍍𑌵𑌸𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌯𑌤𑍍𑌸𑍁𑌖𑌮𑍍 ।
𑌸 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑍁𑌖𑌮𑌕𑍍𑌷𑌯𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 ॥

𑌬𑌾𑌹𑍍𑌯𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑍇𑌷𑍁 𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌶𑍍𑌚 𑌤𑍇 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌾𑌶𑍍𑌚 𑌬𑌾𑌹𑍍𑌯𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌾𑌃, 𑌸𑍍𑌪𑍃𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌾𑌃 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑌯𑍋 𑌵𑌿𑌷𑌯𑌾𑌃, 𑌤𑍇𑌷𑍁 𑌬𑌾𑌹𑍍𑌯𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑍇𑌷𑍁 𑌅𑌸𑌕𑍍𑌤𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌂 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌃 𑌅𑌯𑌮𑌸𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌷𑌯𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 𑌸𑌨𑍍 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 𑌲𑌭𑌤𑍇 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌯𑌤𑍍 𑌸𑍁𑌖𑌂 𑌤𑌤𑍍 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 । 𑌸 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌯𑍋𑌗𑌃 𑌸𑌮𑌾𑌧𑌿𑌃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌯𑍋𑌗𑌃, 𑌤𑍇𑌨 𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌵𑍍𑌯𑌾𑌪𑍃𑌤𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌂 𑌯𑌸𑍍𑌯 𑌸 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑍁𑌖𑌮𑌕𑍍𑌷𑌯𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌬𑌾𑌹𑍍𑌯𑌵𑌿𑌷𑌯𑌪𑍍𑌰𑍀𑌤𑍇𑌃 𑌕𑍍𑌷𑌣𑌿𑌕𑌾𑌯𑌾𑌃 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌯𑍇𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌅𑌕𑍍𑌷𑌯𑌸𑍁𑌖𑌾𑌰𑍍𑌥𑍀 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௨௧ ॥

𑌇𑌤𑌶𑍍𑌚 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌯𑍇𑌤𑍍—

௨௨. 𑌯𑍇 𑌹𑌿 𑌸𑌂𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌜𑌾 𑌭𑍋𑌗𑌾 𑌦𑍁𑌃𑌖𑌯𑍋𑌨𑌯 𑌏𑌵 𑌤𑍇 ।
𑌆𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌵𑌨𑍍𑌤𑌃 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌨 𑌤𑍇𑌷𑍁 𑌰𑌮𑌤𑍇 𑌬𑍁𑌧𑌃 ॥

𑌯𑍇 𑌹𑌿 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑌂𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌜𑌾𑌃 𑌵𑌿𑌷𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑌂𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑍇𑌭𑍍𑌯𑍋 𑌜𑌾𑌤𑌾𑌃 𑌭𑍋𑌗𑌾 𑌭𑍁𑌕𑍍𑌤𑌯𑌃 𑌦𑍁𑌃𑌖𑌯𑍋𑌨𑌯𑌃 𑌏𑌵 𑌤𑍇, 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌕𑍃𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌦𑍃𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌹𑌿 𑌆𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾𑌦𑍀𑌨𑌿 𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑌿 𑌤𑌨𑍍𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌾𑌨𑍍𑌯𑍇𑌵 । 𑌯𑌥𑌾 𑌇𑌹 𑌲𑍋𑌕𑍇 𑌤𑌥𑌾 𑌪𑌰𑌲𑍋𑌕𑍇𑌽𑌪𑌿 𑌇𑌤𑌿 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇, 𑌏𑌵𑌶𑌬𑍍𑌦𑌾𑌤𑍍 । 𑌨 𑌸𑌂𑌸𑌾𑌰𑍇 𑌸𑍁𑌖𑌸𑍍𑌯 𑌗𑌨𑍍𑌧𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑌪𑌿 𑌅𑌸𑍍𑌤𑌿

---

ஆத்மஞானிக்கு அளவிலா ஆநந்தம்.

அன்றியும், ப்ரஹ்மத்திலே நிலைத்தவன்

உக. வெளிவிஷயங்களிலே மனம்பற்றாதவனாய், ஆத்மாவிடத்து எந்த ஸுகம் (உள்ளதோ அதனை) அடைகிறான். அவன் ப்ரஹ்மத்திலே ஸமாதிகூடிய மனத்தினனாய்க் குறைவிலா இன்பத்தை அநுபவிக்கிறான்.

(இவன் இந்திரியங்களால்) கூட்டரவாக்கப்படும் ஓசைமுதலிய வெளிவிஷயங்களிலேபற்றில்லாதவனாய், ஆத்மாவினிடத்து எந்தஇன்பம் உள்ளதோஅதனைப்பெறுகிறான் என்பது.அவன் ப்ரஹ்மஸமாதியிலே மனமமைந்தவனாய் முடிவிலாஇன்பத்தை (முழுதும்)வியாபிக்கிறான் [ஆத்மஇன்பத்தின் அநுபவவடிவமாகவே இருக்கிறான்]. ஆதலால், ஆத்மாவிடத்துள்ள அழிவிலா இன்பத்தைத்தேடுபவன் கணப்பொழுதுநிற்கும் வெளிவிஷயஇன்பத்தினின்றும் இந்திரியங்களை விலக்கவேண்டும் என்பது பொருள். (உக)

இக்காரணத்தாலும், (இந்திரியங்களை விஷயங்களினின்றும்)விலக்கவேண்டும் :

உஉ. ஏனெனில், முதலும் முடிவும் உள்ளவையாய் கூட்டரவுகளாலுண்டாகும் போகங்கள் எவையோ, அவை துன்பத்தையுண்டாக்குவனவேயாம். கௌந்தேய ! ஞானி அவற்றுள் மகிழமாட்டான்.

இந்திரியங்கள் விஷயங்கள் இவற்றின் கூட்டரவுகளால் உண்டாகும் போகங்கள் எவையோ, அவை துன்பத்தையுண்டாக்குவனவேயாம்;அறியாமையினால் செய்யப்பட்டமையின். ஆத்யாத்மிகம் முதலிய (68 - ஆம் பக்கத்து I - ஆம் குறிப்பைப் பார்க்க) துன்பங்கள் அவற்றால் வருவனவாகவே காணப்படுகின்றனவன்றோ. (அவற்றால் துன்பம் வருவது) இம்மையில் எவ்வாறு, அவ்வாறே மறுமையிலும் என்பது,("உண்டாக்குவனவேயாம்" என்பதிலுள்ள) "ஏ" என்னும்சொல்லினால் தெரியவருகின்றது. ஸம்ஸாரத்திலே இன்பத்தின் நாற்றமாத்திரமுங்கூட இல்லையென்றுணர்

𑌇𑌤𑌿 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌵𑌿𑌷𑌯𑌮𑍃𑌗𑌤𑍃𑌷𑍍𑌣𑌿𑌕𑌾𑌯𑌾𑌃 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌯𑌤𑍍 । 𑌨 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌦𑍁𑌃𑌖𑌯𑍋𑌨𑌯𑌃, 𑌆𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌵𑌨𑍍𑌤𑌶𑍍𑌚, 𑌆𑌦𑌿𑌃 𑌵𑌿𑌷𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑌂𑌯𑍋𑌗𑍋 𑌭𑍋𑌗𑌾𑌨𑌾𑌂, 𑌅𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌤𑌦𑍍𑌵𑌿𑌯𑍋𑌗 𑌏𑌵; 𑌅𑌤𑌃 𑌆𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌵𑌨𑍍𑌤𑌃 𑌅𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌃, 𑌮𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑌣𑌭𑌾𑌵𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯, 𑌨 𑌤𑍇𑌷𑍁 𑌭𑍋𑌗𑍇𑌷𑍁 𑌰𑌮𑌤𑍇 𑌬𑍁𑌧𑌃 𑌵𑌿𑌵𑍇𑌕𑍀 𑌅𑌵𑌗𑌤𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌃; 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑍂𑌢𑌾𑌨𑌾𑌮𑍇𑌵 𑌹𑌿 𑌵𑌿𑌷𑌯𑍇𑌷𑍁 𑌰𑌤𑌿𑌃 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇, 𑌯𑌥𑌾 𑌪𑌶𑍁𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑍀𑌨𑌾𑌮𑍍 ॥ ௨௨ ॥

𑌅𑌯𑌂 𑌚 𑌶𑍍𑌰𑍇𑌯𑍋𑌮𑌾𑌰𑍍𑌗𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌕𑍍𑌷𑍀 𑌕𑌷𑍍𑌟𑌤𑌮𑍋 𑌦𑍋𑌷𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑌰𑍍𑌥𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌹𑍇𑌤𑍁𑌃 𑌦𑍁𑌷𑍍𑌨𑌿𑌵𑌾𑌰𑌶𑍍𑌚 𑌇𑌤𑌿 𑌤𑌤𑍍𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑍇 𑌯𑌤𑍍𑌨𑌾𑌧𑌿𑌕𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌆𑌹 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍—

௨௩. 𑌶𑌕𑍍𑌨𑍋𑌤𑍀𑌹𑍈𑌵 𑌯𑌃 𑌸𑍋𑌢𑍁𑌂 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍𑌶𑌰𑍀𑌰𑌵𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑌣𑌾𑌤𑍍 ।
𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 𑌵𑍇𑌗𑌂 𑌸 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸 𑌸𑍁𑌖𑍀 𑌨𑌰𑌃 ॥

𑌶𑌕𑍍𑌨𑍋𑌤𑌿 𑌉𑌤𑍍𑌸𑌹𑌤𑍇 𑌇𑌹𑍈𑌵 𑌜𑍀𑌵𑌨𑍍𑌨𑍇𑌵 𑌯𑌃 𑌸𑍋𑌢𑍁𑌂 𑌪𑍍𑌰𑌸𑌹𑌿𑌤𑍁𑌂 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌶𑌰𑍀𑌰𑌵𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑌣𑌾𑌤𑍍 𑌆 𑌮𑌰𑌣𑌾𑌤𑍍 । 𑌮𑌰𑌣𑌸𑍀𑌮𑌾𑌕𑌰𑌣𑌾𑌤𑍍 𑌜𑍀𑌵𑌤𑍋𑌽𑌵𑌶𑍍𑌯𑌂𑌭𑌾𑌵𑍀 𑌹𑌿 𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑍋𑌦𑍍𑌭𑌵𑍋 𑌵𑍇𑌗𑌃, 𑌅𑌨𑌨𑍍𑌤𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌵𑌾𑌨𑍍 𑌹𑌿 𑌸𑌃 𑌇𑌤𑌿; 𑌯𑌾𑌵𑌤𑍍 𑌮𑌰𑌣𑌂 𑌤𑌾𑌵𑌤𑍍 𑌨 𑌵𑌿𑌸𑍍𑌰𑌮𑍍𑌭𑌣𑍀𑌯 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌕𑌾𑌮𑌃 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍋𑌚𑌰𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇

---

ந்து 'விஷயங்களாகிய கானலினின்றும் இந்திரியங்களை விலக்கவேண்டும். (போகங்கள்) துன்பத்தையுண்டாக்குவனமாத்திரமல்ல, முதலும் முடிவும்உடையவையுமாம். போகங்கட்கு முதலென்பது - விஷயங்கள் இந்திரியங்கள் இவற்றின் சேர்க்கை ; முடிவென்பதும் - அவற்றின் பிரிவேதான். ஆதலால், முதலும் முடிவும்உடையவை - அநித்தியமானவை : (முதலுக்கும், முடிவுக்கும்)நடுவிலுள்ள கணப்பொழுதுமாத்திரம் உள்ளவை ஆதலால். (நிலையில்லாதவை) என்பது பொருள். கௌந்தேய ! பரம்பொருளின் உண்மையைக் கண்டு விவேகத்தோடிருப்பவன் அந்தப்போகங்களுள் மகிழமாட்டான். ஆடுமாடுகள் முதலியவைபோன்ற முழுமூடர்களுக்கேயன்றோ விஷயங்களில் ருசி காணப்படுகின்றது. (௨௨)

### பேரின்பம் பெறுதந்த வழி.

இனி, இக்குற்றம் [காமமும், கோபமும்] நல்வழிக்கு எதிரி, மிகப் பொல்லாதது, எல்லாத்தீங்குகளையும் வருவிப்பது, ஒழித்தற்கும் அரியது என, அதனை ஒழிக்கும்விஷயத்திலே மிகுந்த முயற்சியைக் கொள்ளவேண்டுமென்று பகவான் அருளிச்செய்கிறார் :

௨௩. சரீரம் நீங்கிப்போவதற்கு முந்தி எவன் இங்கேயே காமம் கோபம் என்றவற்றால் உண்டாகும் விசையைப் பொறுக்கக்கூடுமோ, அவன் யோகி, அந்த மனிதன் ஸுகி.

இங்கேயே - உயிர்வாழும்பொழுதேயே. சரீரம் நீங்கிப்போவதற்கு முந்தி - சாதல்வரையிலும். இறத்தலை எல்லைப்படுத்துவதனால், “உயிர்வாழ்பவனுக்குக் காமம் கோபம் என்றவற்றாலுண்டாகும் வேகமானது அவச்யம் உண்டாகுமன்றோ ; ஏனெனில், அதற்கு அளவில்லாக் காரணங்கள் உள்ளன” என (உணர்க). சாகின்ற (க்ஷணம்) வரையிலும் (காமத்தையும், கோபத்தையும்) நம்பக்கூடாது என்பது (தேர்

இஷ்டே விஷயே ஶ்ரூயமாணே ஸ்மர்யமாணே வாऽநுபூதே ஸுகஹேதுதயா மயிஷ்: த்ருஷ்ணா ஸ காம:; க்ரோதஶ்ச, ஶ்ருதேஷு ப்ரதிகூலேஷு து:கஹேதுஷு த்ருஶ்யமாநேஷு ஶ்ரூயமாணேஷு ஸ்மர்யமாணேஷு வா யோ த்வேஷ: ஸ: க்ரோத:; தௌ காமக்ரோதௌ உத்பவோ யஸ்ய வேகஸ்ய ஸ: காமக்ரோதோத்பவ: வேக: । ரோமாஞ்சஹ்ருஷ்டநேத்ரவதநாதிலிங்க: அந்த:கரணப்ரக்ஷோபரூப: காமோத்பவ: வேக:, காத்ரப்ரகம்பப்ரஸ்வேதஸந்தஷ்டோஷ்டபுடரக்தநேத்ராதி-லிங்க: க்ரோதோத்பவோ வேக: । தம் காமக்ரோதோத்பவம் வேகம் ய: ப்ரஸஹதே ஸோடும் ஸஹிதும், ஸ யுக்தோ யோகீ ஸுகீ ச இஹ லோகே நர: ॥ ௨௩ ॥

கதம்பூதஸ்து ப்ரஹ்மணி ஸ்தித: ப்ரஹ்ம ப்ராப்நோதி இதி? ஆஹ பகவாந்—

௨௪. யோऽந்த:ஸுகோऽந்தராராமஸ்ததாऽந்தர்ஜ்யோதிரேவ ய: ।
ஸ யோகீ ப்ரஹ்மநிர்வாணம் ப்ரஹ்மபூதோऽதிகச்சதி ॥

ய: அந்த: ஆத்மநி ஸுகம் யஸ்ய ஸ: அந்த:ஸுக:, ததா அந்தரேவ ஆத்மநி ஆராம: ஆரமணம் க்ரீடா யஸ்ய ஸ: அந்தராராம:, ததா ஏவ அந்த: ஏவ ஆத்மந்யேவ ஜ்யோதி: ப்ரகாஶ: யஸ்ய ஸ: அந்தர்ஜ்யோதிரேவ ய: தாத்ருஶ: ஸ யோகீ ப்ரஹ்மநிர்வாணம் ப்ரஹ்மணி நிவ்ருதிம் மோக்ஷம் இஹ ஜீவந்நேவ ப்ரஹ்மபூத: ஸந் அதிகச்சதி ப்ராப்நோதி ॥ ௨௪ ॥

---

ந்த)பொருள். இந்திரியங்களுடைய வழிக்கு வந்து [இந்திரியங்களால் உணரப்பெற்று], இன்பத்தைத் தருவதாய் அநுபவிக்கப்பட்ட பிரியமான பொருளொன்றைக்கேட்டவிடத்தாயினும் நினைந்தவிடத்தாயினும், எந்த அவா என்னும் ஆசை (அதன்மேல் செல்லுகின்றதோ), அது காமமென்பது. துன்பத்தை விளைப்பவையாய்த் தனக்குத் தீங்குக(ளான பொருள்க)ளைக் கண்ணுற்றவிடத்தாயினும், கேட்டவிடத்தாயினும் நினைந்தவிடத்தாயினும், எந்தப் பகையானது (அவற்றின்மேல் செல்லுகின்றதோ), அது கோபமென்பது. எந்த விசைக்கு அந்தக் காமமும் கோபமும் பிறப்பிடமோ, அது காமத்தையும் கோபத்தையும் பிறப்பிடமாகக்கொண்ட விசை. காமத்தைப் பிறப்பிடமாகக்கொண்ட விசையாவது - மயிர்சிலிர்த்தல், மகிழ்ந்த கண்கள், மகிழ்ந்த முகம் முதலானவற்றை அறிகுறியாகவுடைய மனக்கலக்கம். கோபத்தைப் பிறப்பிடமாகக்கொண்ட விசையாவது - உடம்பிற் பதைப்பும், வேர்வையும், உதட்டைக்கடித்தலும், சிவந்தகண்களும் முதலியவற்றை அறிகுறியாகவுடைய (மனக்கலக்கம்). காமம் கோபம் என்றவற்ருல் பிறக்கின்ற அந்த வேகத்தை எவன் பொறுக்கக் கூடுமோ, அந்த மனிதன் யோகியாம், இவ்வுலகத்திலே ஸுகியுமாம் என்க. (௨௩)

இனி, எப்படிப்பட்டவன் ப்ரஹ்மத்தில் நிலைத்து ப்ரஹ்மத்தை அடைகிருன் என்பது?—பகவான் கூறுகிருர் :

௨௪. எவன் உள்ளே இன்பத்தையும், உள்ளேவிளையாட்டையும் உடையவனே; அவ்வாறே எவன் உள்ளேயே ஒளியையும் உடையவனே; அந்த யோகி ப்ரஹ்மமாக ஆகி ப்ரஹ்மாநந்தத்தை அடைகிருன்.

உள்ளே - ஆத்மாவினிடத்து. அந்த யோகி இவ்வுலகத்தில் உயிர்வாழுமளவிலேயே ப்ரஹ்மமாகஆகி ப்ரஹ்மத்தினிடத்து ஆநந்தத்தை = மோக்ஷத்தைப் பெறுகிருன். (௨௪)

किञ्च—

உரு लभन्ते ब्रह्मनिर्वाणमृषयः क्षीणकल्मषाः ।
छिन्नद्वैधा यतात्मानः सर्वभूतहिते रताः ॥

लभन्ते ब्रह्मनिर्वाणं मोक्षमृषयः सम्यग्दर्शिनः संन्यासिनः क्षीणकल्मषाः क्षीणपापाः निर्दोषाः छिन्नद्वैधाः छिन्नसंशयाः यतात्मानः संयतेन्द्रियाः सर्वभूतहिते रताः सर्वेषां भूतानां हिते आनुकूल्ये रताः अहिंसका इत्यर्थः ॥ உரு ॥

किञ्च—

உசு. कामक्रोधवियुक्तानां यतीनां यतचेतसाम् ।
अभितो ब्रह्मनिर्वाणं वर्तते विदितात्मनाम् ॥

कामक्रोधवियुक्तानां कामश्च क्रोधश्च कामक्रोधौ ताभ्यां वियुक्तानां यतीनां संन्यासिनां यतचेतसां संयतान्तःकरणानाम् अभितः उभयतः जीवतां मृतानां च ब्रह्मनिर्वाणं मोक्षः वर्तते विदितात्मनां विदितः ज्ञातः आत्मा येषां ते विदितात्मानः तेषां सम्यग्दर्शिनाम् इत्यर्थः ॥ உசு ॥

सम्यग्दर्शननिष्ठानां संन्यासिनां सद्यः मुक्तिः उक्ता । कर्मयोगश्च ईश्वरार्पितसर्वभावेन ईश्वरे ब्रह्मणि आधाय क्रियमाणः सत्त्वशुद्धिज्ञानप्राप्तिसर्वकर्मसंन्यासक्रमेण मोक्षाय इति भगवान् पदे पदे अब्रवीत्, वक्ष्यति च । अथ इदानीं ध्यानयोगं सम्यग्दर्शनस्य अन्तरङ्गं

---

மேலும்,

உரு. பாவந்தேய்ந்து, ஸம்சயமற்று, இந்திரியங்களை அடக்கி, ஸகலப்பிராணிகளுடைய நன்மையிலே கருத்தையூன்றிய ரிஷிகள் ப்ரஹ்மாநந்தத்தைப் பெறுகிறார்கள்.

ப்ரஹ்மாநந்தத்தை - மோக்ஷத்தை. ரிஷிகள் - உள்ளதை உள்ளபடி காணும் துறவிகள். பாவந்தேய்ந்து - குற்றம் நீங்கி. ஸகலப்பிராணிகளுடைய நன்மையிலே கருத்தையூன்றிய (என்பதற்கு) - ஹிம்ஸை செய்யாத என்று பொருள். (உரு)

அன்றியும்,

உசு. காமமும் கோபமும் நீங்கி, மனத்தை அடக்கி, ஆத்மாவை அறிந்துள்ள யதிகட்கு ப்ரஹ்மாநந்தம் எங்குமுள்ளது.

உள்ளதை உள்ளபடியுணரும்துறவிகட்கு இருவகையிலும், (அதாவது) இருந்தாலும், இறந்தாலும் மோக்ஷமென்க. (உசு)

தியானயோகத்தால் பகவானைக் கண்டுதேவிதல்.

நல்லறிவிலே நிலைத்து நிற்கும் துறவிகளுக்கு உடனே மோக்ஷமானது கூறப்பட்டது. அன்றியும், ஈச்வரனிடத்து அர்ப்பிக்கப்பட்ட (தேகம், இந்திரியங்கள், மனம் என்ற) எல்லாவற்றின் செய்கையொடு,ஈச்வரனென ப்ரஹ்மத்தினிடத்து வைத்துச் செய்யப்படும் கர்மயோகமானது மனம்பரிசுத்தமாதல், ஞானமடைதல், ஸகல கர்மங்களையும் துறந்திடுதல் என்னும் முறைமைப்படி (படிப்படியாக) முக்தியிற் (சேர்க்கின்றது) என்பதைப் பகவான் அடிக்கடி கூறினர்; இன்னும், (அதனை மேலேயும்) கூறுவர். இனி இப்பொழுது, மெய்யறிவுக்கு அந்தரங்கஸாதநமான தியான

𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑍇𑌣 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌇𑌤𑌿 𑌤𑌸𑍍𑌯 𑌸𑍂𑌤𑍍𑌰𑌸𑍍𑌥𑌾𑌨𑍀𑌯𑌾𑌨𑍍 𑌶𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 𑌉𑌪𑌦𑌿𑌶𑌤𑌿 𑌸𑍍𑌮—

௨௭. 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌾𑌨𑍍𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌬𑌹𑌿𑌰𑍍𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌂𑌶𑍍𑌚𑌕𑍍𑌷𑍁𑌶𑍍𑌚𑍈𑌵𑌾𑌨𑍍𑌤𑌰𑍇 𑌭𑍍𑌰𑍁𑌵𑍋𑌃 ।
𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑍌 𑌸𑌮𑍌 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌨𑌾𑌸𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌚𑌾𑌰𑌿𑌣𑍌 ॥

௨௮. 𑌯𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌮𑍁𑌨𑌿𑌰𑍍𑌮𑍋𑌕𑍍𑌷𑌪𑌰𑌾𑌯𑌣𑌃 ।
𑌵𑌿𑌗𑌤𑍇𑌚𑍍𑌛𑌾𑌭𑌯𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 𑌯𑌸𑍍𑌸𑌦𑌾 𑌮𑍁𑌕𑍍𑌤 𑌏𑌵 𑌸𑌃 ॥

𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌾𑌨𑍍 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑍀𑌨𑍍 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌬𑌹𑌿𑌃 𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌨𑍍— 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 𑌅𑌨𑍍𑌤𑌃 𑌬𑍁𑌦𑍍𑌧𑍌 𑌪𑍍𑌰𑌵𑍇𑌶𑌿𑌤𑌾𑌃 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑌯𑌃 𑌵𑌿𑌷𑌯𑌾𑌃, 𑌤𑌾𑌨𑍍 𑌅𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌤𑌃 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑌯𑍋 𑌬𑌾𑌹𑍍𑌯𑌾 𑌬𑌹𑌿𑌰𑍇𑌵 𑌕𑍃𑌤𑌾𑌃 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿—𑌤𑌾𑌨𑍍 𑌏𑌵𑌂 𑌬𑌹𑌿𑌃 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌚𑌕𑍍𑌷𑍁𑌶𑍍𑌚𑍈𑌵 𑌅𑌨𑍍𑌤𑌰𑍇 𑌭𑍍𑌰𑍁𑌵𑍋𑌃 '𑌕𑍃𑌤𑍍𑌵𑌾' 𑌇𑌤𑌿 𑌅𑌨𑍁𑌷𑌜𑍍𑌯𑌤𑍇 । 𑌤𑌥𑌾 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑍌 𑌨𑌾𑌸𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌚𑌾𑌰𑌿𑌣𑍌 𑌸𑌮𑍌 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾, 𑌯𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌯𑌤𑌾𑌨𑌿 𑌸𑌂𑌯𑌤𑌾𑌨𑌿 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌮𑌨𑌃 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌶𑍍𑌚 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌃 𑌯𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃, 𑌮𑌨𑌨𑌾𑌤𑍍 𑌮𑍁𑌨𑌿𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀, 𑌮𑍋𑌕𑍍𑌷𑌪𑌰𑌾𑌯𑌣𑌃 𑌏𑌵𑌂 𑌦𑍇𑌹𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌤𑍍 𑌮𑍋𑌕𑍍𑌷𑌪𑌰𑌾𑌯𑌣𑌃 𑌮𑍋𑌕𑍍𑌷 𑌏𑌵 𑌪𑌰𑌮𑍍 𑌅𑌯𑌨𑌂 𑌪𑌰𑌾 𑌗𑌤𑌿𑌃 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌃 𑌅𑌯𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑌪𑌰𑌾𑌯𑌣𑍋 𑌮𑍁𑌨𑌿𑌃 𑌭𑌵𑍇𑌤𑍍 । 𑌵𑌿𑌗𑌤𑍇𑌚𑍍𑌛𑌾𑌭𑌯𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 𑌇𑌚𑍍𑌛𑌾 𑌚 𑌭𑌯𑌂 𑌚 𑌕𑍍𑌰𑍋𑌧𑌶𑍍𑌚 𑌇𑌚𑍍𑌛𑌾𑌭𑌯𑌕𑍍𑌰𑍋𑌧𑌾𑌃 𑌤𑍇 𑌵𑌿𑌗𑌤𑌾𑌃 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑌃 𑌵𑌿𑌗𑌤𑍇𑌚𑍍𑌛𑌾𑌭𑌯𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 𑌯𑌃 𑌏𑌵𑌂 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌸𑌦𑌾 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀, 𑌮𑍁𑌕𑍍𑌤 𑌏𑌵 𑌸𑌃 𑌨 𑌤𑌸𑍍𑌯 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯 𑌅𑌨𑍍𑌯𑌃 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 𑌅𑌸𑍍𑌤𑌿 ॥ ௨௭, ௨௮ ॥

𑌏𑌵𑌂 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑍇𑌨 𑌕𑌿𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑍍 𑌇𑌤𑌿 ? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

---

யோகத்தை விரிவாகக் கூறுவேன் எனக்கொண்டு, அதற்கு ஸூத்ரம்போன்றுள்ள சுலோகங்களை(ப் பகவான்) உரைப்பவராயினர் : (ஸூத்ரம் - பலவகைப்பட்டு அகன்றபொருள்களை நன்கு அடக்கிச் சுருங்கி நிற்கும் வாக்கியம்.)

௨௭, ௨௮. வெளியிலுள்ள விஷயங்களை வெளியே நிறுத்தி, இருபுருவத்திற்கு மிடையே கண்ணையும் (நிறுத்தி), மூக்கின் வழியாக உள்ளேயும் வெளியிலும் போகும் மூச்சுக்களை ஸமமாகச்செய்து, இந்திரியங்கள் மனம் புத்தி என்றவற்றை அடக்கி, ஆசையும் அச்சமும் கோபமும் நீங்கி, மோக்ஷத்தையே சிறந்த புகலிடமாகவுடையவனாய் எப்பொழுதும் (பகவானை) சிந்தித்துக்கொண்டிருப்பவன் எவனோ, அவன் விடுபட்டவனே.

ஓசைமுதலியவிஷயங்கள் செவிமுதலியவற்றின்வழியாக உள்ளே புத்தியிற் புகும்படி செய்யப்படுகின்றன. அவற்றை நினையாதவனுக்கு வெளியிலுள்ள ஓசை முதலியவை வெளியிலேயேநிறுத்தப்பட்டிருக்கின்றன. அவற்றை இவ்வாறு நிறுத்தி, கண்ணையும் இருபுருவத்திற்கு மிடையே (என்பதனோடு), 'நிறுத்தி' என்பதைக் கூட்டுக. இவ்வாறு (கீழ்க் கூறிய) நிலையிலே உடம்பை நிறுத்தியுள்ள துறவியானவன் மோக்ஷத்தையே உயர்ந்த அடைக்கலமாகக் கொண்டவனாய் (ப் பகவானை) நினைப்பவனாவன். எவன் இவ்வாறு எப்பொழுதும் துறவியாக இருக்கின்றானோ, அவன் விடுபட்டவன்தான் ; மோக்ஷத்திற்காக அவனால் செய்யவேண்டியது வேறொன்றுமில்லை. (௨௭, ௨௮)

இவ்வாறு ஒருநிலைப்பட்டு ஸமாதிகூடியமனத்தினன் எதனை அறியவேண்டும் என்பது ?—கூறுவோம் :

௨௯. 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾𑌰𑌂 𑌯𑌜𑍍𑌞𑌤𑌪𑌸𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ।
𑌸𑍁𑌹𑍃𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑌾𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑍃𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑍇 𑌶𑌤𑌸𑌾𑌹𑌸𑍍𑌰𑍍𑌯𑌾𑌂 𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌯𑌾𑌂 𑌵𑍈𑌯𑌾𑌸𑌿𑌕𑍍𑌯𑌾𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌪𑌰𑍍𑌵𑌣𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍁 𑌉𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌮 𑌪𑌞𑍍𑌚𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

𑌭𑍋𑌕𑍍𑌤𑌾𑌰𑌂 𑌯𑌜𑍍𑌞𑌤𑌪𑌸𑌾𑌂 𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌤𑌪𑌸𑌾𑌂 𑌚 𑌕𑌰𑍍𑌤𑍃𑌰𑍂𑌪𑍇𑌣 𑌦𑍇𑌵𑌤𑌾𑌰𑍂𑌪𑍇𑌣 𑌚, 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌂 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌂, 𑌸𑍁𑌹𑍃𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌪𑌕𑌾𑌰𑌨𑌿𑌰𑌪𑍇𑌕𑍍𑌷𑌤𑌯𑌾 𑌉𑌪𑌕𑌾𑌰𑌿𑌣𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌹𑍃𑌦𑌯𑍇𑌶𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑌂 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌣𑌂 𑌮𑌾𑌂 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌸𑌾𑌰𑍋𑌪𑌰𑌤𑌿𑌮𑍃𑌚𑍍𑌛𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 ॥ ௨௯ ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌭𑌾𑌷𑍍𑌯𑍇 𑌪𑌞𑍍𑌚𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

---

௨௯. யஜ்ஞம் தபஸ் என்றவற்றை அநுபவிப்பவனும், உலகங்களனைத்திற்கும் மேலானகடவுளும், பிராணிகட்கெல்லாம் தோழனுமான என்னை (அவன்) அறிந்து ஒழிபைப் பெறுகிறான்.

ஸ்ரீ மகாபாரதத்திலே, நூறாயிரக்கிரந்த ஸம்ஹிதையாய் வ்யாஸர் அருளிச்செய்ததிலே, பீஷ்மபர்வத்திலே ஸ்ரீமத் பகவத்கீதைகளாக, உபநிஷத்துக்களாக, ப்ரஹ்மவித்யையாக, யோகசாஸ்திரமாக இருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணார்ஜுநஸம்வாதத்திலே ஸந்யாஸயோகம் என்னும் ஐந்தாம் அத்தியாயம் முற்றும்.

“நாராயணனாகிய நான் யாகங்களையும் தவங்களையும், (அவற்றைச் செய்யும்) கர்த்தாவாகவும் (அவற்றால் ஆராதிக்கப்படும்) கடவுளாகவும் அநுபவிப்பவன்; உலகங்களெல்லாவற்றிற்கும் மேலான ஈச்வரன்; பதிலுபகாரத்தை வேண்டாது ஸகலப்பிராணிகட்கும் உதவிபுரியும் தோழன்; ஸகலபூதங்களுடைய ஹிருதயத்தினுள் தங்கியிருப்பவன்; ஸகலகர்மங்களுடைய பயன்களுக்கும் தலைவன்[அப்பயன்களை மேல் பார்த்துப் பகிர்ந்து கொடுப்பவன்]; எல்லா உணர்ச்சிகட்கும் ஸாக்ஷி” என்று என்னை (அவன்) அறிந்து, ஸம்ஸாரம் முழுதும் ஒழிந்திடுதலாகிய ஒழிபைப் பெறுகிறான். (௨௯)

ஸ்ரீமத் பகவத்கீதாபாஷ்யத்தில் ஐந்தாவது அத்தியாயம் முற்றும்.

அத

ஷஷ்டோऽத்யாய: த்யாநயோக: ॥

அதீதாநந்தராத்யாயாந்தே த்யாநயோகஸ்ய ஸம்யக்ஜ்ஞாநம் ப்ரதி அந்தரங்கஸ்ய ஸூத்ரபூதா: ஶ்லோகா: 'ஸ்பர்ஶாந் க்ருத்வா பஹி:' இத்யாதய: உபதிஷ்டா: । தேஷாம் வ்ருத்திஸ்தாநீய: அயம் ஷஷ்டோऽத்யாய: ஆரப்யதே । தத்ர த்யாநயோகஸ்ய பஹிரங்கம் கர்ம இதி, யாவத் த்யாநயோகாரோஹணஸமர்த: தாவத் க்ருஹஸ்தேந அதிக்ருதேந கர்தவ்யம் கர்ம இத்யத: தத் ஸ்தௌதி—அநாஶ்ரித இதி ॥

நநு கிமர்தம் த்யாநயோகாரோஹணஸமயாவதாரணம், யாவதா அநுஷ்டேயமேவ விஹிதம் கர்ம யாவஜ்ஜீவம்—ந, 'ஆருருக்ஷோர்முநேர்யோகம் கர்ம காரணமுச்யதே' இதி விஶேஷாத், ஆரூடஸ்ய ச ஶமஸ்யைவ ஸம்பந்தகரணாத் । ஆருருக்ஷோ: ஆரூடஸ்ய ச ஶம: கர்ம ச உபயம் கர்தவ்யமேவ அபிப்ரேதம் சேத் ஸ்யாத் ததா 'ஆருருக்ஷோ:' 'ஆரூடஸ்ய' ச இதி ஶமகர்மவிஷயபேதேந விஶேஷணம் விபாககரணம் ச அநர்தகம் ஸ்யாத் ॥

---

## ஆரும் அத்தியாயம் : தியானயோகம்.

### தியானயோகத்தோடு கர்மயோகம் ஒருங்குசேர முடியாது.

சென்ற அடுத்த அத்தியாயத்தின் முடிவிலே, மெய்யறிவின் அந்தரங்கஸாதநமான தியானயோகத்திற்கு ஸூத்ரம்போன்றுள்ள "வெளியிலுள்ள" (ரு-உஎ) என்பதுமுதலான சுலோகங்கள் உபதேசிக்கப்பட்டன. அவற்றைவிவரிக்கும் உரைபோன்றுள்ள இந்த ஆரும் அத்தியாயம் தொடங்கப்படுகின்றது. இனி, கர்மமானது தியானயோகத்திற்குப் பகிரங்கஸாதநமாதலால், (கர்மத்திற்கு)உரிய கிருகஸ்தன் தியானயோகத்தைக் கூடுதற்கு வல்லவனுகும்வரையில் கர்மத்தைச் செய்யவேண்டும் என்பது. ஆகவே, (பகவான்,) அதனை " எவன் "(சு - க) எனப் புகழ்கின்ருர் :

(ஆக்ஷேபம்) :—அப்படியானல், விதிக்கப்பட்ட கர்மத்தை உயிர்வாழ்க்கை முழுவதும் அநுஷ்டிக்கவேவேண்டு மாதலின், ("தியானயோகத்தைக் கூடுதற்கு வல்லவனுகும்வரையில்" என) தியானயோகம் கைகூடுதலை எல்லைப்படுத்துதல் எதற்காக ?

(ஸமாதாநம்) :—அப்படியன்று ; " யோகத்தைக் கூடுவதிலே கருத்துடைய முனிவனுக்குக் கர்மம் ஸாதநமெனப்படுகின்றது " (சு - ங) என்னும் சிறப்புத் திருவாக்கினுலும், யோகத்தைக்கூடியவனை ஒழிபையே கூடும்படிசெய்தலாலு மென்க. (யோகத்தைக்) கூடுவதிலே கருத்துடையவனும், (யோகத்தைக்) கூடியவனும் ஒழிபும் கர்மமுமாகிய இரண்டனையும் செய்யவேண்டுமென்பது கருத்தானல், அப்பொழுது கர்மத்தைப்பற்றியவனை '(யோகத்தைக்) கூடுவதிலே கருத்துடைய' எனவும், ஒழிபைப்பற்றியவனை "(யோகத்தைக்) கூடின" எனவும் தனித்தனி சிறப்பித்துக் கூறுதலும், (அவ்விருவரையும் இருவகுப்பினராகப்) பிரிவுசெய்தலும் வீணுகும்.

தத்ர ஆஶ்ரமிணாம் கஶ்சித் யோகமாருருக்ஷு: பவதி, ஆரூடஶ்ச கஶ்சித், அந்யே ந ஆருருக்ஷவ: ந ச ஆரூடா:; தாநபேக்ஷ்ய 'ஆருருக்ஷோ:' 'ஆரூடஸ்ய' ச இதி விஶேஷணம் விபாககரணம் ச உபபத்யத ஏவேதி சேத், ந, 'தஸ்யைவ' இதி வசநாத், புந: யோகக்ரஹணாச்ச 'யோகாரூடஸ்ய' இதி; ய ஆஸீத் பூர்வம் யோகமாருருக்ஷு: தஸ்யைவ ஆரூடஸ்ய ஶம ஏவ கர்தவ்ய: காரணம் யோகபலம் ப்ரதி உச்யத இதி । அதோ ந யாவஜ்ஜீவம் கர்தவ்யத்வப்ராப்தி: கஸ்யசித் அபி கர்மண: ॥

யோகவிப்ரஷ்டவசநாச்ச — க்ருஹஸ்தஸ்ய சேத் கர்மிணோ யோகோ விஹித: ஷஷ்டே அத்யாயே, ஸ: யோகவிப்ரஷ்ட: அபி கர்மகதிம் கர்மபலம் ப்ராப்நோதி இதி தஸ்ய நாஶாஶங்கா அநுபபந்நா ஸ்யாத் । அவஶ்யம் ஹி க்ருதம் கர்ம காம்யம் நித்யம் வா — மோக்ஷஸ்ய நித்யத்வாத் அநாரப்யத்வே — ஸ்வம் பலம் ஆரபத ஏவ । நித்யஸ்ய ச கர்மண: வேதப்ரமாணாவபுத்தத்வாத் பலேந பவிதவ்யம் இதி அவோசாம, அந்யதா வேதஸ்ய ஆநர்த்தக்யப்ரஸங்காத் இதி । ந ச கர்மணி ஸதி

---

(பிரதிவாதி) :—இனி, ஆச்ரமத்தாருள் [கிருகஸ்தர்களுள்] ஒருவன் யோகத்தைக்கூடுவதிலே கருத்துடையவன்; ஒருவன் (யோகத்தைக்) கூடினவன்; மற்றையோர்கள் (யோகத்தைக்) கூடுவதிலே கருத்துடையவரல்லர், (யோகத்தைக்) கூடினவருமல்லர்; (இவர்களுள், மூன்றும் வகுப்பினரான) அவர்களைக் குறித்து (மற்றையோரை "யோகத்தைக்)கூடுவதிலே கருத்துடைய" எனவும், "யோகத்தைகூடின" எனவும், சிறப்பித்துக் கூறுதலும், பிரிவுசெய்தலும் பொருந்தவே பொருந்துகின்றது எனில்,—

(வாதி) :—அப்படியன்று; "அவனுக்கே" (௬ - ௩) என்னும் திருவாக்கினுலும், "யோகத்தைக்கூடின" (௬ - ௩) என யோகமென்னும் சொல்லை மீண்டும் எடுத்துவழங்குதலாலுமென்க. எவன் முந்தி யோகத்தைக்கூடுவதிலே கருத்துடையவனாக இருந்தானே, அவனே (அதாவது யோகத்தைக்) கூடினவனே யோகத்தின் பயனுக்கு ஸாதனமான ஒழிவையே அநுஷ்டிக்கவேண்டும் என்று கூறப்படுகின்றது. ஆதலால், ஒருகர்மத்தையாயினும் உயிர்வாழ்க்கைமுழுதும் அநுஷ்டிக்கவேணுமென்பது அமையவில்லை.

யோகத்தினின்று தவறியவனைப்பற்றிய திருவாக்கினுலும் (இது அமையவில்லை. (௬ - ௩௭, ௩௮ - ஆம் சுலோகங்களைப் பார்க்க). ஆறும் அத்தியாயத்திலே யோகமானது கிருகஸ்தனுன கர்மிக்கு விதிக்கப்பட்டதானுல், அவன் யோகத்தினின்று தவறியவனுனுலும், கர்மத்தின் கதியை = கர்மத்தின்பயனைப் பெறுகிறுனுதலால், அவன் கெட்டுவிடுகிறுனென்று சங்கித்தலானது பொருந்தாததாகும். மோக்ஷமென்பது நித்தியமாயிருத்தலின் (ஒன்றினுல்) விளைக்கப்படாததாயிருக்க, செய்யப்பட்டகர்மமானது காம்யகர்மமாயினும் நித்தியகர்மமாயினும் தன்பயனை விளைக்கவேவிளைக்கின்றதன்றே. "நித்தியகர்மமும், நைமித்திககர்மமும் வேதமாகிய பிரமாணத்தால் உணர்த்தப்பட்டமையின் (இவற்றிற்குப்) பயன் இருக்கவே இருக்கின்றது; அல்லாவிட்டால், வேதம் வீணென்று அமையவேண்டுமாதலின்" எனக் கூறியுள்ளோம் (௨ - ௧௮.) அன்றியும், கர்மமுள்ளவிடத்து (ஞானம் கர்மம் என்ற) இரண்டினின்றும் தவறிய

𑌉𑌭𑌯𑌵𑌿𑌭𑍍𑌰𑌷𑍍𑌟𑌵𑌚𑌨𑌞𑍍𑌚 𑌅𑌨𑌰𑍍𑌥𑌕𑌮𑍍, 𑌕𑌰𑍍𑌮𑌣𑍋 𑌵𑌿𑌭𑍍𑌰𑌂𑌶𑌕𑌾𑌰𑌣𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 ॥

𑌕𑌰𑍍𑌮 𑌕𑍃𑌤𑌮𑍍 𑌈𑌶𑍍𑌵𑌰𑍇 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌇𑌤𑍍𑌯𑌤𑌃 𑌕𑌰𑍍𑌤𑍁𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌫𑌲𑌂 𑌨𑌾𑌰𑌭𑌤 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌨𑍍—𑌨, 𑌈𑌶𑍍𑌵𑌰𑍇 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌯 𑌅𑌧𑌿𑌕𑌤𑌰𑌫𑌲𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑍋𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 ॥

𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯𑍈𑌵 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍—𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌕𑍃𑌤𑌾𑌨𑌾𑌂 𑌈𑌶𑍍𑌵𑌰𑍇 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍋 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯𑍈𑌵 𑌨 𑌫𑌲𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌯 𑌯𑍋𑌗𑌸𑌹𑌿𑌤𑌃; 𑌯𑍋𑌗𑌾𑌚𑍍𑌚 𑌵𑌿𑌭𑍍𑌰𑌷𑍍𑌟𑌃, 𑌇𑌤𑍍𑌯𑌤𑌃 𑌤𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌨𑌾𑌶𑌾𑌶𑌂𑌕𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑍈𑌵 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌨𑍍—𑌨, '𑌏𑌕𑌾𑌕𑍀 𑌯𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌨𑌿𑌰𑌾𑌶𑍀𑌰𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑌃' '𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌾𑌰𑌿𑌵𑍍𑌰𑌤𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃' 𑌇𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌵𑌿𑌧𑌾𑌨𑌾𑌤𑍍। 𑌨 𑌚 𑌅𑌤𑍍𑌰 𑌧𑍍𑌯𑌾𑌨𑌕𑌾𑌲𑍇 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌸𑌹𑌾𑌯𑌤𑍍𑌵𑌾𑌶𑌂𑌕𑌾, 𑌯𑍇𑌨 𑌏𑌕𑌾𑌕𑌿𑌤𑍍𑌵𑌂 𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇। 𑌨 𑌚 𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌸𑍍𑌯 '𑌨𑌿𑌰𑌾𑌶𑍀𑌰𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑌃' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌵𑌚𑌨𑌮𑍍 𑌅𑌨𑍁𑌕𑍂𑌲𑌮𑍍। 𑌉𑌭𑌯𑌵𑌿𑌭𑍍𑌰𑌷𑍍𑌟𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌶𑍍𑌚 ॥

𑌅𑌨𑌾𑌶𑍍𑌰𑌿𑌤 𑌇𑌤𑍍𑌯𑌨𑍇𑌨 𑌕𑌰𑍍𑌮𑌿𑌣 𑌏𑌵 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌤𑍍𑌵𑌂 𑌯𑍋𑌗𑌿𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍, 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌂 𑌚 𑌨𑌿𑌰𑌗𑍍𑌨𑍇𑌃 𑌅𑌕𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌚 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌤𑍍𑌵𑌂 𑌯𑍋𑌗𑌿𑌤𑍍𑌵𑌂 𑌚𑍇𑌤𑌿 𑌚𑍇𑌨𑍍—𑌨,

---

வனைப்பற்றிக் கூறுதல் பயனில்லாததாம் [நேரன்றாம்] ; கர்மத்தினின்று தவறும் விஷயத்திலே காரணம் பொருந்தாமையின். (எவ்வகையினும், கர்மத்தின்பயன் இருக்கவே இருக்கின்றது. ஆதலால், கிருகஸ்தன் 'யோகப்ரஷ்டன் [யோகத்தினின்று தவறியவன்]' என்னும் சொல்லால் கூறற்கு உரியவனாகான் எனக் கண்டுகொள்க.)

(பிரதிவாதி):—(முக்திபெற விரும்புவோனாலே), கர்மமானது ஈச்வரனிடத்து அர்ப்பித்துச் செய்யப்பட்டுள்ளமையால், கர்மமானது செய்பவனுக்குப் பயனை விளைக்காது எனில்,—

(வாதி):—அப்படியன்று ; ஈச்வரனிடத்து அர்ப்பித்தல் மிக்க அதிகமான பயனைக் கொடுப்பதென்பது கூடுமாதலின்.

(பிரதிவாதி) :—(அப்படியானால், அது) மோக்ஷத்திற்குத்தான் எனில்,—(எப்படி ?)—தியானயோகத்தோடு கூடிச் செய்யப்பட்ட தனதுகர்மங்களை ஈச்வரனிடத்து அர்ப்பித்தல் மோக்ஷத்திற்கேயன்றி வேறுபயனுக்கு அன்று. ஆனால், (ஒருவன்) தியானயோகத்தினின்றும் தவறியவன் ; எனவே, அவன்விஷயத்திலே கேடு (உண்டென்று) சங்கித்தல் பொருந்தியதே எனில்,—

(வாதி) :—அப்படியன்று ; " தனிப்பட்டவன், மனத்தையும் உடம்பையும் அடக்கியவன், ஆசைநீங்கியவன், உடைமையில்லாதவன் " (௬ - ௧௦), " ப்ரஹ்மசாரி விரதத்தில் நிற்பவன் " (௬ - ௧௪) எனக் கர்மங்களைத் துறந்திடுதலை விதித்தலால். மேலும், தியானகாலத்திலே மனைவியின் உதவி (ஏதாவது வேண்டுமோ என்று) இங்கே சங்கித்தலும் தகாது. ஏனெனில், தனியாயிருத்தல் விதிக்கப்படுகின்றது. அன்றியும், கிருகஸ்தனுக்கு " ஆசையற்றவன், உடைமையில்லாதவன் " (௬ - ௧௦) என்று தொடங்கும் திருவாக்கானது நலமாக இல்லை. மற்றும், (ஞானம்கர்மம் என்ற) இரண்டினின்றும் தவறியவனைப்பற்றி வினவுதல் (௬-௩௮) பொருந்தாமையாலுமென்க.

(பிரதிவாதி) :—" எவன் " (௬ - ௧) என்றஇதனால், கர்மத்தையுடையவனே ஸந்யாஸி எனவும் யோகி யெனவும் கூறப்பட்டது ; இன்னும், (அதே சுலோகத்தினால்) அக்நியில்லாதவனையும் கர்மமில்லாதவனையு மிருப்பவன் ஸந்யாஸியாகவும் யோகியாகவு மிருப்பது மறுக்கப்பட்டது எனில்,—

ध्यानयोगं प्रति बहिरङ्गस्य सतः कर्मणः फलाकाङ्क्षासंन्यासस्तुति-परत्वात् । न केवलं निरग्निः अक्रियः एव संन्यासी योगी च, किं तर्हि?— कर्म्यपि, कर्मफलासङ्गं संन्यस्य कर्मयोगमनुतिष्ठन् सत्त्वशुद्ध्यर्थं, संन्यासी योगी च भवति इति स्तूयते । न च एकेन वाक्येन कर्मफला-सङ्गसंन्यासस्तुतिः चतुर्थाश्रमप्रतिषेधश्च उपपद्यते । न च प्रसि-द्धं निरग्नेः अक्रियस्य परमार्थसंन्यासिनः श्रुतिस्मृतिपुराणेतिहा-सयोगशास्त्रेषु विहितं संन्यासित्वं योगित्वं च प्रतिषेधति भग-वान् । स्ववचनविरोधाच्च — 'सर्वकर्माणि मनसा संन्यस्य ... नैव कुर्व-न्न कारयन्' 'मौनी सन्तुष्टो येन केनचित् । अनिकेतः स्थिरमतिः' 'विहाय कामान्यः सर्वान्पुमांश्चरति निःस्पृहः' 'सर्वारम्भपरित्यागी' इति च तत्र तत्र भगवता स्ववचनानि दर्शितानि; तैः विरुध्येत चतुर्थाश्रमप्रतिषेधः । तस्मात् मुनेः योगम् आरुरुक्षोः प्रति-पन्नगार्हस्थ्यस्य अग्निहोत्रादि कर्म फलनिरपेक्षम् अनुष्ठीयमानं ध्यान-योगारोहणसाधनत्वं सत्त्वशुद्धिद्वारेण प्रतिपद्यते इति 'स सं-न्यासी च योगी च' इति स्तूयते ॥

---

(வாதி) :—அப்படியன்று; தியானயோகத்திற்குப் பகிரங்கஸாதநமாயுள்ள கர்மத்தின் பயனிலே விருப்பத்தை விட்டிடுதலைப் புகழ்ந்துபேசும் கருத்துடைமையின், ஸந்யாஸியாகவும் யோகியாகவுமுள்ளவன் கேவலம் அக்நியும் கர்மமுமில்லாதவன்மாத்திரம் அல்லன்.—அப்பொழுதென்னவெனில்?—கர்மத்தையுடையவனுங்கூட கர்மத்தின்பயனிலே பற்றை விட்டுச் சித்தசுத்திக்காகக் கர்மயோகத்தை அநுஷ்டிப்பவனும், ஸந்யாஸியும் யோகியுமாகிருன் என்றும் கொண்டாடப்படுகின்றது; இனி, (க)கர்மத்தின்பயனிலே பற்றை விட்டிடுதலைப் புகழ்தலும், (உ) நான்காம் ஆச்ரமத்தை மறுத்தலும் ஒரேவாக்கியத்தினுல் அமையா. (வாக்கிய மென்பது - ஒருவிஷயத்தைக் கூறுவது. ஆதலால், அது இரண்டுவிஷயங்களைக் கூறமாட்டாதென்பது மீமாம்ஸகர் கொள்கை.)மேலும், அக்நியும் கர்மமுமில்லாத உண்மையான ஸந்யாஸிக்கு சுருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் புராணங்களிலும் இதிஹாஸங்களிலும் யோகநூல்களிலும் தெளிவாக விதிக்கப்பட்ட ஸந்யாஸித்வத்தையும் யோகித்வத்தையும் பகவான் மறுக்கமாட்டார். அன்றியும், தமது திருவாக்குக்களோடுமுரண்படுதலாலும்(மறுக்கமாட்டாரென்க). " ஸகலகர்மங்களையும் மனத்தால் துறந்து......(ஒன்றுஞ்)செய்யவே செய்யாதவனும், செய்விக்காதவனுந் தங்கியிருக்கிறுன் " (ரு - கங), " மௌநமுடையவன், எதனுலும் திருப்தியுள்ளவன், வீடில்லாதவன், புத்திநிலைத்தவன்" (கஉ - கக), "எந்தப் புருஷன் ஸகலகர்மங்களையும் விட்டு, ஆசையில்லாது திரிகின்றுனே " (உ - எக), "ஸகல கர்மங்களையும் விட்டிருப்பவன் " (கஉ - கசு) எனப் பகவானுல் ஆங்காங்கு தமது திருவாக்குக்கள் உணர்த்தப்பட்டன. நான்காம் ஆச்ரமத்தைமறுத்தல் அவற்ருேடு விரோதிக்கும். ஆகவே, கிருகஸ்தநிலையை அடைந்தவனும் யோகத்தைகூடுவதிலே கருத்துடைய முனிவனுக்கு, பயனை வேண்டாது அநுஷ்டிக்கப்படும் அக்நிஹோத்ரம் முதலிய கர்மமானது தியானயோகத்தைக் கூடுதற்கு ஸாதநமாதலை, சித்தசுத்திவழியாகப் பெறுகின்றது என்று " அவன் ஸந்யாஸியும் யோகியுமாம் " எனப்பாராட்டப்படுகின்றது :

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌉𑌵𑌾𑌚 ॥

௧. 𑌅𑌨𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌯𑌃 ।
𑌸 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌚 𑌯𑍋𑌗𑍀 𑌚 𑌨 𑌨𑌿𑌰𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌨 𑌚𑌾𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 ॥

𑌅𑌨𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 𑌨 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 𑌅𑌨𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃—𑌕𑌿𑌮𑍍?—𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌫𑌲𑌂 𑌯𑌤𑍍 𑌤𑌤𑍍 𑌅𑌨𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃, 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑌹𑌿𑌤 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌯𑍋 𑌹𑌿 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑍇 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾𑌵𑌾𑌨𑍍 𑌸𑌃 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 𑌭𑌵𑌤𑌿, 𑌅𑌯𑌂 𑌤𑍁 𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌃, 𑌅𑌤𑌃 𑌅𑌨𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌮𑍍 ॥

𑌏𑌵𑌂𑌭𑍂𑌤𑌃 𑌸𑌨𑍍 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌕𑌾𑌮𑍍𑌯𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌮𑍍 𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌕𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌨𑌿𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑌯𑌤𑌿 𑌯𑌃 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 । 𑌯𑌃 𑌈𑌦𑍃𑌶𑌃 𑌕𑌰𑍍𑌮𑍀 𑌸 𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑍇𑌭𑍍𑌯𑍋 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑌰𑍍𑌥𑌮𑌾𑌹—𑌸 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌚 𑌯𑍋𑌗𑍀 𑌚 𑌇𑌤𑌿 । 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌯𑌸𑍍𑌯 𑌅𑌸𑍍𑌤𑌿 𑌸 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌚 𑌯𑍋𑌗𑍀 𑌚—𑌯𑍋𑌗𑌃 𑌚𑌿𑌤𑍍𑌤𑌸𑌮𑌾𑌧𑌾𑌨𑌂 𑌯𑌸𑍍𑌯 𑌅𑌸𑍍𑌤𑌿 𑌸 𑌯𑍋𑌗𑍀 𑌚—𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌗𑍁𑌣𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑌃 𑌅𑌯𑌂 𑌮𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌃, 𑌨 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌨𑌿𑌰𑌗𑍍𑌨𑌿𑌃 𑌅𑌕𑍍𑌰𑌿𑌯 𑌏𑌵 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌯𑍋𑌗𑍀 𑌚 𑌇𑌤𑌿 𑌮𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 । 𑌨𑌿𑌰𑍍𑌗𑌤𑌾𑌃 𑌅𑌗𑍍𑌨𑌯𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌙𑍍𑌗𑌭𑍂𑌤𑌾𑌃 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸 𑌨𑌿𑌰𑌗𑍍𑌨𑌿𑌃, 𑌅𑌕𑍍𑌰𑌿𑌯𑌶𑍍𑌚 𑌅𑌨𑌗𑍍𑌨𑌿𑌸𑌾𑌧𑌨𑌾 𑌅𑌪𑌿 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌤𑌪𑍋𑌦𑌾𑌨𑌾𑌦𑌿𑌕𑌾𑌃 𑌯𑌸𑍍𑌯 𑌅𑌸𑍌 𑌅𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 ॥ ௧ ॥

---

கர்மத்திலே ஸந்யாஸம்.

ஸ்ரீபகவான் சொல்லுகின்றார் :

க. எவன் கர்மத்தின்பயனைச் சார்ந்திடாதவனாய்ச், செய்யவேண்டிய கர்மத்தைச் செய்கின்றானோ, அவன் ஸந்யாஸியும் யோகியும் (ஆகின்றான்) ; அக்நியில்லாதவனும் கர்மமில்லாதவனுமிருப்பவன் (ஸந்யாஸியாயும் யோகியும் ஆகிறான்) அல்லன்.

சார்ந்திடாதவன்—எதனை?—கர்மத்தின்பயனை. கர்மங்களின்பயன் எதுவோ, அதனைச் சார்ந்திடாதவன் (என்பதற்கு) - கர்மத்தின்பயனிலே ஆசையில்லாதவன் என்று பொருள். எவன் கர்மத்தின்பயனிலே ஆசையுடையவனோ, அவன் கர்மத்தின்பயனைச் சார்ந்து[வேண்டி]நிற்பவன் ஆகிறான். இவனோ அவனுக்கு மாறானவன் ; ஆதலால், கர்மத்தின்பயனை வேண்டாதவன்.

எவனொருவன் இவ்வாறிருப்பவனாய், காம்ய கர்மத்திற்கு மாறுயுள்ளதும் செய்யவேண்டியதுமான அக்நிஹோத்ரம் முதலிய நித்தியகர்மத்தைச் செய்துமுடிக்கின்றானோ, எவன் இப்படிப்பட்ட கர்மியோ, அவன் மற்றைய கர்மிகளைக்காட்டிலும் மேலானவனாய் இருக்கிறான். என்ற இவ்விஷயத்தை(க் காட்டும்பொருட்டு) "அவன் ஸந்யாஸியும் யோகியும் ஆகிறான்" என அருளிச்செய்கிறார். துறவு எவனுக்கு உள்ளதோ, அவன் ஸந்யாஸி ; மனம் ஒருநிலைப்பட்டு அமைதல் எவனுக்கு உள்ளதோ, அவன் யோகி. என இத்தகையகுணமுள்ளவன் இவன் எனக்கொள்ளவேண்டும். கேவலம் அக்நியில்லாதவனும் கர்மமில்லாதவனுமிருப்பவன்தான் ஸந்யாஸியும் யோகியும் ஆகிறான் என்று கொள்ளக்கூடாது. கர்மங்கட்குத் துணையாயுள்ள அக்நிகள் எவனிடத்தினின்றும் போய்விட்டனவோ, அவன் அக்நியில்லாதவன் , அக்நிகளை ஸாதநமாகவுடையவை அல்லவுமான தவம் தாநம் முதலிய கர்மங்கள் எவனுக்குஇல்லையோ, அவன் கர்மமில்லாதவன். (க)

𑌨𑌨𑍁 𑌚 𑌨𑌿𑌰𑌗𑍍𑌨𑍇𑌃 𑌅𑌕𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯𑍈𑌵 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌷𑍁 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌤𑍍𑌵𑌂 𑌯𑍋𑌗𑌿𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌮𑍍 । 𑌕𑌥𑌮𑍍 𑌇𑌹 𑌸𑌾𑌗𑍍𑌨𑍇𑌃 𑌸𑌕𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌚 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌤𑍍𑌵𑌂 𑌯𑍋𑌗𑌿𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌅𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿?—𑌨𑍈𑌷 𑌦𑍋𑌷𑌃, 𑌕𑌯𑌾𑌚𑌿𑌤𑍍 𑌗𑍁𑌣𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌾 𑌉𑌭𑌯𑌸𑍍𑌯 𑌸𑌂𑌪𑌿𑌪𑌾𑌦𑌯𑌿𑌷𑌿𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌤𑌤𑍍 𑌕𑌥𑌮𑍍? 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌤𑍍𑌵𑌮𑍍, 𑌯𑍋𑌗𑌾𑌙𑍍𑌗𑌤𑍍𑌵𑍇𑌨 𑌚 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌸𑍍𑌯 𑌚 𑌚𑌿𑌤𑍍𑌤𑌵𑌿𑌕𑍍𑌷𑍇𑌪𑌹𑍇𑌤𑍋𑌃 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑌾𑌤𑍍 𑌯𑍋𑌗𑌿𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌇𑌤𑌿 𑌗𑍌𑌣𑌮𑌭𑌯𑌂; 𑌨 𑌪𑍁𑌨𑌃 𑌮𑍁𑌖𑍍𑌯𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌤𑍍𑌵𑌂 𑌯𑍋𑌗𑌿𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌏𑌤𑌮𑌰𑍍𑌥𑌂 𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌤𑍁𑌮𑌾𑌹—

உ. 𑌯𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌮𑌿𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌰𑍍𑌯𑍋𑌗𑌂 𑌤𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵 ।
𑌨 𑌹𑍍𑌯𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑍋 𑌯𑍋𑌗𑍀 𑌭𑌵𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌨 ॥

𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌤𑌤𑍍𑌫𑌲𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌃 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌵𑌿𑌦𑌃, 𑌯𑍋𑌗𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌤𑌂 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌜𑌾𑌨𑍀𑌹𑌿 𑌹𑍇 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵 । 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌸𑍍𑌯 𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑍇𑌨 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑍇𑌨 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 𑌕𑍀𑌦𑍃𑌶𑌂

---

(ஆக்ஷேபம்) :— அப்படியானால், அக்நியில்லாதவனும் கர்மமில்லாதவனு மிருப்பவன்தான் ஸந்யாஸியும் யோகியுமாகிறான் என்பது சுருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் யோகநூல்களிலும் தெளிவாக உணர்த்தப்பட்டிருக்கின்றது. அக்நியையுடைவனும் கர்மத்தையுடையவனு மிருப்பவனுங்கூட ஸந்யாஸியும் யோகியுமாகிறான் என்று பிரஸித்தமில்லாத(வேறுபுதிய விஷயத்)தை (பகவான்) இங்கே உபதேசிப்பது எப்படி ?—

(ஸமாதானம்):—இது குற்றமன்று; ஒருவகை உபசாரவழக்கினால் இரண்டையும்[அக்நியையுடையவனும் கர்மத்தையுடையவனு மிருப்பவனிடத்து,ஸந்யாஸியாதலையும் யோகியாதலையும்]ஏற்றிக்கூறவேண்டுமென்னும் கருத்துடைமையாலென்க. அதெப்படியெனில்,—கர்மத்தின்பயனிலே நினைவை விட்டிடுதலால் (க) ஸந்யாஸியாதலென்பதும், தியானயோகத்திற்குஸாதநமாகக் கர்மங்களை அநுஷ்டித்தலாலும் மனம் அலைதற்குக் காரணமாய்க் கர்மத்தின்பயனிலேயுள்ள நினைவை ஒழித்தலாலும் (உ) யோகியாதலென்பதும் ஆகியஇரண்டும் உபசாரவழக்கு. மற்று, (கர்மயோகியானவன்) முதன்மையான ஸந்யாஸியும் முதன்மையான யோகியுமாகிறானென்பது கருத்தன்று. என்னும்இப்பொருளை உணர்த்தும்பொருட்டு, (பகவான்)அருளிச்செய்கிறார் :

**உ. பாண்டவ ! (சுருதிகள்)எதனை ஸந்யாஸமாகக் கூறுகின்றனவோ, அதனை யோகமாகத் தெரிந்துகொள். ஏனெனில், எண்ணங்களை விடாத எவனும் யோகியாக மாட்டானன்றோ.**

பாண்டவ ! சுருதிகளையும் ஸ்மிருதிகளையும் அறிந்தவர் எதனை இவ்வாறு (அதாவது) ஸகலகர்மங்களையும்,அவற்றின்பயன்களையும்விட்டிடுதலாகியஉண்மையான ஸந்யாஸமென்று கூறுகிறார்களோ அந்த உண்மையான ஸந்யாஸத்தை, கர்மங்களை அநுஷ்டித்தலாகிய யோகமென்று அறிந்துகொள்.

(வினா) :—(கர்மத்தில்)தலைப்படுதலாகிய கர்மயோகத்திற்கு, அதற்குமாறுதலையாய்(அக்கர்மத்தினின்றும்) ஒழிதலாகிய உண்மையானஸந்யாஸத்தோடு எத்தகைய

𑌸𑌾𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌮𑍍 𑌅𑌂𑌗𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 𑌤𑌦𑍍𑌭𑌾𑌵𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑌪𑍇𑌕𑍍𑌷𑌾𑌯𑌾𑌮𑍍 𑌆𑌹 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—𑌅𑌸𑍍𑌤𑌿 𑌹𑌿 𑌪𑌾𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌿𑌕𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 𑌸𑌾𑌦𑍃𑌶𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌤𑍃𑌦𑍍𑌵𑌾𑌰𑌕𑌂 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 । 𑌯𑍋 𑌹𑌿 𑌪𑌾𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌿𑌕𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌸 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌾𑌧𑌨𑌤𑌯𑌾 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌤𑌤𑍍𑌫𑌲𑌵𑌿𑌷𑌯𑌂 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌂 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌹𑍇𑌤𑍁𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑌣𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌤𑌿 । 𑌅𑌯𑌮𑌪𑌿 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍀 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵𑌾𑌣 𑌏𑌵 𑌫𑌲𑌵𑌿𑌷𑌯𑌂 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌮𑍍 𑌅𑌰𑍍𑌥𑌂 𑌉𑌪𑌪𑌾𑌦𑌯𑌿𑌷𑍍𑌯𑌨𑍍 𑌆𑌹—𑌨 𑌹𑌿 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌅𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌃 𑌅𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌃 𑌅𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌃 𑌫𑌲𑌵𑌿𑌷𑌯𑌃 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌃 𑌅𑌭𑌿𑌸𑌨𑍍𑌧𑌿𑌃 𑌯𑍇𑌨 𑌸𑌃 𑌅𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌃 𑌕𑌶𑍍𑌚𑌨 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑌪𑌿 𑌕𑌰𑍍𑌮𑍀 𑌯𑍋𑌗𑍀 𑌸𑌮𑌾𑌧𑌾𑌨𑌵𑌾𑌨𑍍 𑌭𑌵𑌤𑌿 𑌨 𑌸𑌂𑌭𑌵𑌤𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃, 𑌫𑌲𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌸𑍍𑌯 𑌚𑌿𑌤𑍍𑌤𑌵𑌿𑌕𑍍𑌷𑍇𑌪𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌯𑌃 𑌕𑌰𑍍𑌮𑍀 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌫𑌲𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌃 𑌭𑌵𑍇𑌤𑍍 𑌸 𑌯𑍋𑌗𑍀 𑌸𑌮𑌾𑌧𑌾𑌨𑌵𑌾𑌨𑍍 𑌅𑌵𑌿𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌃 𑌭𑌵𑍇𑌤𑍍, 𑌚𑌿𑌤𑍍𑌤𑌵𑌿𑌕𑍍𑌷𑍇𑌪𑌹𑍇𑌤𑍋𑌃 𑌫𑌲𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌸𑍍𑌯 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑌃 ॥ ௨ ॥

𑌏𑌵𑌂 𑌪𑌾𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌿𑌕𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌯𑍋𑌃 𑌕𑌰𑍍𑌤𑍃𑌦𑍍𑌵𑌾𑌰𑌕𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌸𑌾𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌮𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 '𑌯𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌮𑌿𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌃 𑌯𑍋𑌗𑌂 𑌤𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵' 𑌇𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌤𑍍𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌧𑍍𑌯𑌾𑌨𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌫𑌲𑌨𑌿𑌰𑌪𑍇𑌕𑍍𑌷𑌃 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍋 𑌬𑌹𑌿𑌰𑌂𑌗𑌸𑌾𑌧𑌨𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌤𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌤𑍍𑌵𑍇𑌨 𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌵𑌾 𑌅𑌧𑍁𑌨𑌾 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌧𑍍𑌯𑌾𑌨𑌯𑍋𑌗𑌸𑌾𑌧𑌨𑌤𑍍𑌵𑌮𑍁𑌪𑌪𑌾𑌦𑌯𑌤𑌿—

---

பொதுமையை ஒத்துக்கொண்டு, அதன்[ஸங்யாஸத்தின்]தன்மையானது கூறப்படுகின்றது? என நோக்குமிடத்து,

(விடை) :—இதனைக் கூறுவோம்: கர்மயோகத்திற்கு உண்மையான ஸங்யாஸத்தோடு ஒப்புமையானது செய்பவன்வழியாய் இருக்கின்றதன்றே. ஏனெனில், எவன் உண்மையான ஸங்யாஸியோ, அவன் ஸகலகர்மங்களையும்(அவற்றிற்கான)ஸாதநங்களையும் விட்டுள்ளமையால் ஸகலகர்மங்களையும் அவற்றின்பயன்களையும் பற்றிய நினைப்பை(அதாவது,கர்மத்தில்)தலைப்படுதற்குக் காரணமாயுள்ள ஆசைக்கு ஏதுவாயிருப்பதைத் துறந்துவிடுகிறான். இந்தக் கர்மயோகியுங்கூட கர்மத்தைச் செய்பவனாகவே பயனைப்பற்றிய நினைவைத் துறந்துவிடுகிறான். என்னும் இப்பொருளை எடுத்துக்காட்டும்பொருட்டு (பகவான்)அருளிச் செய்கிறார் :—பயனை நினைத்தலானது மனம் அலைதற்குக்காரணமாவதால், பயனைப்பற்றிய எண்ணத்தை விட்டிடாத எந்தக் கர்மியும் யோகியாக ஒருநிலைப்பட்டவனாக ஆகமாட்டான். ஆதலால், பயனைப்பற்றிய எண்ணத்தை விட்டவன் எந்தக் கர்மியானாலும் ஆகுக ; அவன்யோகியாக, ஒருநிலைப்பட்டவனாக, மனம் அலையா(து அமைந்)தவனாக ஆவன் ; மனம் அலைதற்குக்காரணமாயிருப்பதை (அதாவது) பயனை நினைத்தலைத் துறந்திட்டமையால் என்பது கருத்து. (உ)

கர்மமானது தியானயோகத்திற்கு முதல் படி.

இவ்வாறு உண்மையான ஸங்யாஸத்திற்கும் கர்மயோகத்திற்கும் (பயனை) விட்டிடுதலிலே செய்பவன் மூலமாயுள்ள ஒப்புமையை உத்தேசித்து, "பாண்டவ ! எதனை ஸங்யாஸமாகக் கூறுகிறார்களோ,அதனை யோகமாகத்தெரிந்துகொள் " (சூ-உ) என்று கர்மயோகத்தைக் கொண்டாடும்பொருட்டு, (அதனை)ஸங்யாஸமென்று கூறினர். பயனை வேண்டாத கர்மயோகமானது தியானயோகத்திற்குப் பகிரங்கமான ஸாதநமென்று அதனை ஸங்யாஸமாகப் புகழ்ந்து,இப்பொழுது,கர்மயோகம் தியானயோகத்திற்கு ஸாதநமாதலை உணர்த்துகிறார் :

௩. 𑌆𑌰𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍋𑌰𑍍𑌮𑍁𑌨𑍇𑌰𑍍𑌯𑍋𑌗𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌾𑌰𑌣𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌯𑍋𑌗𑌾𑌰𑍂𑌢𑌸𑍍𑌯 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌶𑌮𑌃 𑌕𑌾𑌰𑌣𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

𑌆𑌰𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍋𑌃 𑌆𑌰𑍋𑌢𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌤𑌃, 𑌅𑌨𑌾𑌰𑍂𑌢𑌸𑍍𑌯, 𑌧𑍍𑌯𑌾𑌨𑌯𑍋𑌗𑍇 𑌅𑌵𑌸𑍍𑌥𑌾𑌤𑍁𑌮𑍍 𑌅𑌸𑌮𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌕𑌸𑍍𑌯 𑌆𑌰𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍋𑌃? 𑌮𑍁𑌨𑍇𑌃, 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌕𑌿𑌮𑍍 𑌆𑌰𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍋𑌃? 𑌯𑍋𑌗𑌮𑍍 । 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌸𑌾𑌧𑌨𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌯𑍋𑌗𑌾𑌰𑍂𑌢𑌸𑍍𑌯 𑌪𑍁𑌨𑌃 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌶𑌮𑌃 𑌉𑌪𑌶𑌮𑌃 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌭𑍍𑌯𑌃 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 𑌕𑌾𑌰𑌣𑌂, 𑌯𑍋𑌗𑌾𑌰𑍂𑌢𑌸𑍍𑌯 𑌸𑌾𑌧𑌨𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌯𑌾𑌵𑌦𑍍𑌯𑌾𑌵𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌭𑍍𑌯𑌃 𑌉𑌪𑌰𑌮𑌤𑍇 𑌤𑌾𑌵𑌤𑍍𑌤𑌾𑌵𑌤𑍍 𑌨𑌿𑌰𑌾𑌯𑌾𑌸𑌸𑍍𑌯 𑌜𑌿𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌸𑌮𑌾𑌧𑍀𑌯𑌤𑍇 । 𑌤𑌥𑌾 𑌸𑌤𑌿 𑌸 𑌝𑌟𑌿𑌤𑌿 𑌯𑍋𑌗𑌾𑌰𑍂𑌢𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌚𑍋𑌕𑍍𑌤𑌮𑍍—

"𑌨𑍈𑌤𑌾𑌦𑍃𑌶𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌿 𑌵𑌿𑌤𑍍𑌤𑌂 𑌯𑌥𑍈𑌕𑌤𑌾 𑌸𑌮𑌤𑌾 𑌸𑌤𑍍𑌯𑌤𑌾 𑌚 । 𑌶𑍀𑌲𑌂 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌰𑍍𑌦𑌣𑍍𑌡𑌨𑌿𑌧𑌾𑌨𑌮𑌾𑌰𑍍𑌜𑌵𑌂 𑌤𑌤𑌸𑍍𑌤𑌤𑌶𑍍𑌚𑍋𑌪𑌰𑌮𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌭𑍍𑌯𑌃॥" 𑌇𑌤𑌿 ॥௩॥

𑌅𑌥 𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌕𑌦𑌾 𑌯𑍋𑌗𑌾𑌰𑍂𑌢𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

---

௩. யோகத்தைக்கூடுவதிலே கருத்துடைய முனிவனுக்குக் கர்மம் ஸாதநமெனப்படுகின்றது. யோகத்தைக்கூடிய அவனுக்கே (அப்பொழுது) ஒழிபு ஸாதநமெனப்படுகின்றது. [அப்பொழுது - யோகத்தைக்கூடியபொழுது.]

கூடுவதிலே கருத்துடைய – கூடாத : தியானயோகத்திலே நிற்றற்குமுடியாத என்பதுபொருள்.—கூடுவதிலே கருத்துடைய எவனுக்கு?—முனிவனுக்கு : கர்மங்களின் பயனை விடுபவனுக்கு என்றபடி. (இனிமேல் முனிவனாகப் போகிறவனாய் இப்பொழுது கர்மத்தின்பயனைத் துறந்திடும் கர்மயோகியை - முனிவன் என்பது உபசாரவழக்கு.)—எதனைக் கூடுவதிலே கருத்துடைய ?—தியான யோகத்தை. கர்மமானது(அவனுக்கு, முதலில் சித்தசுத்தியையும், பின்பு தியானயோகத்திலே விருப்பத்தையும், பின்பு அந்தத் தியானயோகத்திற்கு ஏற்றதகுதியையும் உண்டாக்குகின்ற) ஸாதநம் எனப்படுகின்றது. ஆனால், யோகத்தைக் கூடிவிட்ட(ால், அப்பொழுது) அவனுக்கு, ஸகலகர்மங்களினின்றும் ஒழிதலாகிய ஒழிபுதான் ஸாதநம் : அதாவது, யோகத்தைக்கூடிநிற்கும் நிலைக்கு (ஒழிபே) ஸாதநமென்க. (அவன்) எவ்வளவு எவ்வளவு கர்மங்களினின்றும்ஒழிகின்றானோ, அவ்வளவுஅவ்வளவுதொல்லையில்லாதவனாய் இந்திரியங்களை வென்ற(அ)வனுக்கு மனம் ஒருநிலைப்படுகின்றது. அவ்வாறுள்ளவளவிலே, அவன் சடக்கென்றுயோகத்தைக் கூடினவனாகிறான்.அவ்வண்ணமே, "(ப்ரஹ்மமானது எங்கும்)ஒன்றாயும் ஸமமாயும் உள்ளது(என்னும்அறிவும்), உண்மையுடைமையும், ஒழுக்கமும், (நல்வழியிலே) உறுதியும், அஹிம்ஸையும், நேர்மையும், அநேக கர்மங்களினின்றும் ஒழிபும் எப்படிப்பட்டனவோ, அப்படிப்பட்ட பொருள் பிராமணனுக்கு (வேறு) இல்லை" (ம - சா - மோ - ௧௭௫ - ௩௮) எனக் கூறப்பட்டிருக்கின்றது. (௩)

### தியானயோகி என்பவன் எவன் ?

இனி இப்பொழுது, (ஒருவன்)எப்பொழுது யோகத்தைக் கூடினவனாகிறான் ? என்பது—கூறுவோம் :

௪. 𑌯𑌦𑌾 𑌹𑌿 𑌨𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 𑌨 𑌕𑌰𑍍𑌮𑌸𑍍𑌵𑌨𑍁𑌷𑌜𑍍𑌜𑌤𑍇 ।
𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌯𑍋𑌗𑌾𑌰𑍂𑌢𑌸𑍍𑌤𑌦𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

𑌯𑌦𑌾 𑌸𑌮𑌾𑌧𑍀𑌯𑌮𑌾𑌨𑌚𑌿𑌤𑍍𑌤𑍋 𑌯𑍋𑌗𑍀 𑌹𑌿 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌮𑌰𑍍𑌥𑌾𑌃 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑌯𑌃 𑌤𑍇𑌷𑍁 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 𑌚 𑌨𑌿𑌤𑍍𑌯𑌨𑍈𑌮𑌿𑌤𑍍𑌤𑌿𑌕𑌕𑌾𑌮𑍍𑌯𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌾𑌭𑌾𑌵𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌨 𑌅𑌨𑍁𑌷𑌜𑍍𑌜𑌤𑍇 𑌅𑌨𑍁𑌷𑌙𑍍𑌗𑌂 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑌾𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌨 𑌕𑌰𑍋𑌤𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌾𑌨𑍍 𑌇𑌹𑌾𑌮𑍁𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌕𑌾𑌮𑌹𑍇𑌤𑍂𑌨𑍍 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑌿𑌤𑍁𑌂 𑌶𑍀𑌲𑌮𑌸𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌯𑍋𑌗𑌾𑌰𑍂𑌢𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌯𑍋𑌗 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍, 𑌤𑌦𑌾 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌕𑌾𑌲𑍇 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । '𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀' 𑌇𑌤𑌿 𑌵𑌚𑌨𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌾𑌂𑌶𑍍𑌚 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌚 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍇𑌤𑍍 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌮𑍂𑌲𑌾 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌕𑌾𑌮𑌾𑌃 ;

"𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌮𑍂𑌲𑌃 𑌕𑌾𑌮𑍋 𑌵𑍈 𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌸𑌂𑌭𑌵𑌾𑌃 ॥"
"𑌕𑌾𑌮 𑌜𑌾𑌨𑌾𑌮𑌿 𑌤𑍇 𑌮𑍂𑌲𑌂 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌾𑌤𑍍 𑌤𑍍𑌵𑌂 𑌹𑌿 𑌜𑌾𑌯𑌸𑍇 ।
𑌨 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌸𑌮𑍂𑌲𑍋 𑌨 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌸𑌿 ॥" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌸𑍍𑌮𑍃𑌤𑍇𑌃 ॥

𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌮𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑍇 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑍋 𑌭𑌵𑌤𑌿 '𑌸 𑌯𑌥𑌾𑌕𑌾𑌮𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌤𑌤𑍍𑌕𑍍𑌰𑌤𑍁𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌯𑌤𑍍𑌕𑍍𑌰𑌤𑍁𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌤𑌤𑍍𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌭𑍍𑌯𑌃 ।

---

௪. எண்ணங்கள் என்றவற்றை யெல்லாம் துறந்திடுந்தன்மையனாய்(எவன்) எப்பொழுதன்றோ விஷயங்களில் பற்றுக்கொள்வதில்லையோ, கர்மங்களில்(பற்றுக்கொள்வது) இல்லையோ, (அவன்)அப்பொழுது "யோகத்தைக் கூடினவன்" எனப் படுகிறான்.

யோகியானவன் மனத்தைஒருநிலைப்படுத்திக்கொண்டு,இந்திரியங்களின் விஷயங்களாகிய ஓசைமுதலானவற்றிலும்,நித்தியம் நைமித்திகம் காம்யம் பிரதிஷித்தம் என்னும் கர்மங்களிலும் எப்பொழுது (தனக்குப்)பயனின்மையை உணர்ந்து பற்றுக்கொள்வதில்லையோ, அதாவது (அவை தனக்கு)அவச்யம் வேண்டியவை என்னும்புத்தியைக் கொள்வதில்லையோ, (மற்றும், அவன் எப்பொழுது)இம்மைமறுமைப் பொருள்களை விரும்புதற்குக்காரணமான எண்ணங்கள் யாவற்றையும் துறந்திடுந்தன்மையனோ, அப்பொழுது(அவன்)யோகத்தைக் கூடினவன், அதாவது யோகத்தை அடைந்தவன் என்க. "எண்ணங்கள் என்றவற்றையெல்லாம் துறந்திடுந்தன்மையனாய்"என்னுந்திருவாக்கினால், "ஸகலஆசைகளையும் ஸகலகர்மங்களையும் துறந்திடவேண்டும்" என்பது பொருள். ஏனெனில், ஸகலஆசைகட்கும் எண்ணங்கள் காரணம்; "எண்ணமென்பது கர்மத்தின் வேர்; யஜ்ஞங்கட்கு எண்ணமே பிறப்பிடம்"(மநு - உ - உ) "ஏ! ஆசையே! உன்னுடைய வேர் எனக்குத் தெரியும்; நீ எண்ணத்தினின்றன்றோ பிறக்கின்றாய். நான் உன்னை நினைக்கமாட்டேன்; நீ வேரொடு இருக்கமாட்டாய் [அற்றுப் போவாய்]" (ம - சா - மோ - ளளஎ - உரு) என்பன முதலான ஸ்மிருதிகளாலென்க.

இனி, ஆசைகளனைத்தையும் விட்டவுடன் கர்மங்களனைத்தையும் விட்டிடுதல், (தானே) அமைவதாகின்றது; (என்பதை,) "அவன் எதனை விரும்புகிறவனாய் இருக்கின்றானோ, அதனைச் செய்யவேண்டியவனாகிறான்; எதனைச் செய்யவேண்டியவனாக இருக்கின்றானோ, அந்தக் கர்மத்தை(வெளியில்)செய்கிறான்" (பி - ச - ச-ரு)என்பது

"यद्यद्धि कुरुते जन्तुः तत्तत्कामस्य चेष्टितम्" इत्यादिस्मृतिभ्यश्च ॥
न्यायाच्च — न हि सर्वसंकल्पसंन्यासे कश्चित् स्पन्दितुमपि शक्तः । तस्मात् 'सर्वसंकल्पसंन्यासी' इति वचनात् सर्वान् कामान् सर्वाणि च कर्माणि त्याजयति भगवान् ॥ ४ ॥

यदा एवं योगारूढः तदा आत्मना आत्मा उद्धृतः भवति संसारात् अनर्थजातात् । अतः —

५. उद्धरेदात्मनात्मानं नात्मानमवसादयेत् ।
आत्मैव ह्यात्मनो बन्धुरात्मैव रिपुरात्मनः ॥

उद्धरेत् संसारसागरे निमग्नम् आत्मानं आत्मना ततः उत् ऊर्ध्वं हरेत्, योगारूढताम् आपादयेत् इत्यर्थः । न आत्मानम् अवसादयेत् न अधः नयेत् । आत्मैव हि यस्मात् आत्मनः बन्धुः । न हि अन्यः कश्चित् बन्धुः यः संसारमुक्तये भवति । बन्धुरपि तावत् मोक्षं प्रति प्रतिकूल एव, स्नेहादिबन्धनायतनत्वात् । तस्मात् युक्तम् अवधारणम् 'आत्मैव ह्यात्मनो बन्धुः' इति । आत्मैव रिपुः शत्रुः । यः अन्यः अपकारी बाह्यः शत्रुः सोऽपि आत्मप्रयुक्त एव इति युक्तमेव अवधारणम् 'आत்मैव रिपुरात्मनः' इति ॥ ५ ॥

---

முதலிய சுருதிகளாலும், "பிராணியானது எதெதைச் செய்கின்றதோ, அதது ஆசையின் செய்கை" (மநு - உ - ச)என்னும் ஸ்மிருதிகளாலும் (அறிக).

இன்னும், யுக்தியினாலும்(அவ்வாறே அறிந்துகொள்க.)ஏனெனில்,எண்ணங்களனைத்தையும் துறந்திடுமளவிலே ஒருவன் அசையவுங்கூட முடியாது. ஆகவே, "எண்ணங்கள்என்றவற்றையெல்லாம் துறந்திடுந்தன்மையனாய்" என்னும் திருவாக்கினால் பகவான், ஸகலஆசைகளையும் ஸகலகர்மங்களையும் விட்டொழியும்படி அருளிச்செய்கிறாரென்க. (ச)

இவ்வாறு யோகத்தைக் கூடினவளவிலே, ஸம்ஸார அநர்த்தக்கூட்டத்தினின்றும் தான் தன்னால் கரையேற்றப்பட்டவனாகிறான் ஆதலால்,

ரு. தன்னைத் தன்னால் கரையேற்றவேண்டும்; தன்னைக் கெடுத்துக்கொள்ளக்கூடாது. ஏனெனில், தானே தனக்கு நண்பன்; தானே தனக்குப் பகைவன்.

ஸம்ஸாரஸமுத்திரத்துள் மூழ்கிக்கிடக்கின்ற தன்னை, அதனினின்றும் தானே மேலேதூக்கிக் கரையேற்றிக்கொள்ளவேண்டும்: யோகத்தைக் கூடிநிற்றலை அடையச்செய்யவேண்டும் என்பது பொருள். தன்னை(அக்கடலுள்)கீழே மூழ்கிப் போம்படி செய்யக்கூடாது. ஏனெனில், தானே தனக்கு நண்பன். ஸம்ஸாரத்தினின்றும் விடுபடுதற்குப் பிரயோஜனப்படக்கூடிய நண்பன்(தன்னைக்காட்டிலும்) வேறொருவன் இல்லையன்றே. அம்மட்டோ! நண்பன்என்பவனுங்கூட மோக்ஷவிஷயத்திலே பகைவனேதான்; சிநேகம்முதலிய கட்டுக்கு இடமாவனாதலின். ஆகவே, "தானே தனக்கு நண்பன்" என்னும்தேற்றமானது நேரென்க. தானே தனக்குப் பகைவன். தீமைசெய்பவனாய், (தன்னைக்காட்டிலும்)வேறாய் வெளியிலுள்ள பகைவன் எவனோ, அவனையுங்கூடத் தானேதான்(ஒருவன் தனக்குப் பகைவனாகச்)செய்துகொள்ளுகிறான்; ஆதலால், "தானே தனக்குப் பகைவன்"என்னும்தேற்றமானது பொருந்தியதேதான் என்க. [தேற்றம் - மிக்கவுறுதியான நிர்ணயம்.] (ரு)

𑌆𑌤𑍍𑌮𑍈𑌵 𑌬𑌨𑍍𑌧𑍁𑌃 𑌆𑌤𑍍𑌮𑍈𑌵 𑌰𑌿𑌪𑍁𑌃 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌤𑌤𑍍𑌰 𑌕𑌿𑌂𑌲𑌕𑍍𑌷𑌣 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌆𑌤𑍍𑌮𑌨𑍋 𑌬𑌨𑍍𑌧𑍁𑌃? 𑌕𑌿𑌂𑌲𑌕𑍍𑌷𑌣𑍋 𑌵𑌾 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌆𑌤𑍍𑌮𑌨𑍋 𑌰𑌿𑌪𑍁𑌃 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௬. 𑌬𑌨𑍍𑌧𑍁𑌰𑌾𑌤𑍍𑌮𑌾𑌽𑌽𑌤𑍍𑌮𑌨𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌯𑍇𑌨𑌾𑌽𑌽𑌤𑍍𑌮𑍈𑌵𑌾𑌽𑌽𑌤𑍍𑌮𑌨𑌾 𑌜𑌿𑌤𑌃 ।
𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌸𑍍𑌤𑍁 𑌶𑌤𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑍇 𑌵𑌰𑍍𑌤𑍇𑌤𑌾𑌽𑌽𑌤𑍍𑌮𑍈𑌵 𑌶𑌤𑍍𑌰𑍁𑌵𑌤𑍍 ॥

𑌬𑌨𑍍𑌧𑍁𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌤𑌸𑍍𑌯, 𑌤𑌸𑍍𑌯 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌸 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌬𑌨𑍍𑌧𑍁𑌃 𑌯𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑌨𑌾 𑌆𑌤𑍍𑌮𑍈𑌵 𑌜𑌿𑌤𑌃, 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑌣𑌸𑌂𑌘𑌾𑌤𑍋 𑌯𑍇𑌨 𑌵𑌶𑍀𑌕𑍃𑌤𑌃, 𑌜𑌿𑌤𑍇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌤𑍁 𑌅𑌜𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌤𑍁 𑌶𑌤𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑍇 𑌶𑌤𑍍𑌰𑍁𑌭𑌾𑌵𑍇 𑌵𑌰𑍍𑌤𑍇𑌤 𑌆𑌤𑍍𑌮𑍈𑌵 𑌶𑌤𑍍𑌰𑍁𑌵𑌤𑍍, 𑌯𑌥𑌾 𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌾 𑌶𑌤𑍍𑌰𑍁𑌃 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌪𑌕𑌾𑌰𑍀 𑌤𑌥𑌾 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌪𑌕𑌾𑌰𑍇 𑌵𑌰𑍍𑌤𑌤 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௬ ॥

௭. 𑌜𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌯 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃 ।
𑌶𑍀𑌤𑍋𑌷𑍍𑌣𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑍇𑌷𑍁 𑌤𑌥𑌾 𑌮𑌾𑌨𑌾𑌪𑌮𑌾𑌨𑌯𑍋𑌃 ॥

𑌜𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑌣𑌸𑌂𑌘𑌾𑌤 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌜𑌿𑌤𑍋 𑌯𑍇𑌨 𑌸𑌃 𑌜𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌤𑌸𑍍𑌯 𑌜𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌾𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌸𑍍𑌯 𑌸𑌤𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌃 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌭𑌾𑌵𑍇𑌨 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌕𑌿𑌂𑌚— 𑌶𑍀𑌤𑍋𑌷𑍍𑌣𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑍇𑌷𑍁 𑌤𑌥𑌾 𑌮𑌾𑌨𑍇 𑌅𑌪𑌮𑌾𑌨𑍇 𑌚 𑌮𑌾𑌨𑌾𑌪𑌮𑌾𑌨𑌯𑍋𑌃 𑌪𑍂𑌜𑌾𑌪𑌰𑌿𑌭𑌵𑌯𑍋𑌃 ॥ ௭ ॥

---

"தானே தனக்கு நண்பன், தானே தனக்குப் பகைவன்" எனக் கூறப்பட்டது. அவ்விருவருள், தனக்கு நண்பனான தான் என்பவனுக்கு லக்ஷணம் என்ன? தனக்குப் பகைவனுமான தான் என்பவனுக்கு(ம்) லக்ஷணம் என்ன? என்பது—கூறுவோம்:

**௬. எவன் தன்னைத் தான் ஜயித்திருக்கின்றானோ, அவனுக்குத் தனக்குத் தான் நண்பன்; ஆனால், தன்னை ஜயியாதவனுக்குத் தானே பகைவன்போல பகைமையிலே இருக்கின்றான்.**

எவன் தேகம் இந்திரியங்கள் என்றவற்றின் சேர்க்கையை வசப்படுத்திக்கொண்டிருக்கின்றானோ, அதாவது இந்திரியங்களை வென்றிருக்கின்றானோ, அவனுக்குத் தனக்கு அவன் தான் நண்பன். மற்று, இந்திரியங்களை ஜயியாதவனுக்குத் தானே பகைவன்போலப் பகைமையிலே இருக்கின்றான்: தன்னைக்காட்டிலும் வேறாய்(வெளியிலுள்ள) பகைவன் தனக்கு எப்படித் தீமைசெய்பவனோ, அப்படித் தான் தனக்குத் தீமை செய்துகொள்வதிலே இருக்கிறான் என்பது (தேர்ந்த)பொருள். (௬)

**௭. தன்னடக்கங்கொண்டு சாந்தமாயிருப்பவனுடைய பரமாத்மஸ்வரூபமானது குளிர்வெப்பங்களிலும் இன்பதுன்பங்களிலும் அவ்வாறே மரியாதை அவமரியாதைகளிலும் (அவற்றால் தாக்கி அசைக்கப்படாததாய் அவனுடைய சித்தத்திலே எப்பொழுதும்) ஒருநிலைப்பட்டுநிற்கின்றது.**

(ஒருவன்) தேகம் இந்திரியங்கள் இவற்றை ஜயித்து மனந்தெளிந்திருக்கும் ஸந்யாஸியாயிருக்கும்பொழுது, பரமாத்மஸ்வரூபமானது ஒருநிலைப்பட்டுநிற்கின்றது: (அது அவனுடைய) உள்ளபடியான ஆத்மஸ்வரூபமாகவே இருக்கின்றது என்பது பொருள். (௭)

௮. ஜ்ஞாநவிஜ்ஞாநத்ருப்தாத்மா கூடஸ்தோ விஜிதேந்த்ரிய: ।
யுக்த இத்யுச்யதே யோகீ ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந: ॥

ஜ்ஞாநவிஜ்ஞாநத்ருப்தாத்மா ஜ்ஞாநம் ஶாஸ்த்ரோக்தபதார்தாநாம் பரிஜ்ஞாநம், விஜ்ஞாநம் து ஶாஸ்த்ரதோ ஜ்ஞாதாநாம் ததைவ ஸ்வாநுபவகரணம், தாப்யாம் ஜ்ஞாநவிஜ்ஞாநாப்யாம் த்ருப்த: ஸஞ்ஜாதாலம்ப்ரத்யய: ஆத்மா அந்த:கரணம் யஸ்ய ஸ: ஜ்ஞாநவிஜ்ஞாநத்ருப்தாத்மா கூடஸ்த: அப்ரகம்ப்ய:, பவதி இத்யர்த:, விஜிதேந்த்ரியஶ்ச । ய: ஈத்ருஶ:, யுக்த: ஸமாஹித: இதி ஸ உச்யதே கத்யதே । ஸ யோகீ ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந: லோஷ்டாஶ்மகாஞ்சநாநி ஸமாநி யஸ்ய ஸ: ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந: ॥ ௮ ॥

கிஞ்ச—

௯. ஸுஹ்ருந்மித்ரார்யுதாஸீநமத்யஸ்தத்வேஷ்யபந்துஷு ।
ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸமபுத்திர்விஶிஷ்யதே ॥

'ஸுஹ்ருத்' இத்யாதிஶ்லோகார்தம் ஏகம் பதம் । ஸுஹ்ருத் இதி ப்ரத்யுபகாரமநபேக்ஷ்ய உபகர்தா, மித்ரம் ஸ்நேஹவாந், அரி: ஶத்ரு:, உதாஸீந: ந கஸ்யசித் பக்ஷம் பஜதே, மத்யஸ்த: யோ விருத்தயோ: உபயோ: ஹிதைஷீ, த்வேஷ்ய: ஆத்மந: அப்ரிய:, பந்து: ஸம்பந்தீ இத்யேதேஷு ஸாதுஷு

---

௮. சாஸ்திர அறிவினாலும் அநுபவஅறிவினாலும் மனம் திருப்திபெற்று, (எதற்கும்) அசையாது, இந்திரியங்களை ஜயித்து, மண்ணாங்கட்டி கல் தங்கம் என்றவற்றை ஸமமாகக்கொண்ட யோகியானவன் "ஸமாதியைக் கூடினவன்" என்று சொல்லப்படுகிறான்.

ஞானமென்பது - சாஸ்திரத்திற்கூறியுள்ள பொருள்களை அறிதல். விஜ்ஞானமென்பதோ - சாஸ்திரத்தினின்றும் அறியப்பட்டவற்றை அவ்வாறே தன்னுடைய அநுபவத்திற் செய்தல். சாஸ்திர அறிவினாலும் அநுபவஅறிவினாலும் மனம் திருப்திபெற்று - அந்த ஞானவிஜ்ஞானங்கள் போதும் என்னும் எண்ணம்வந்த மனத்தினனாகி. (௮)

மேலும்,

௯. நல்ல ஹிருதயமுள்ளவன், நண்பன், பகைவன், உதாஸீனன், நடுவுநிலையிலே நிற்பவன், வெறுக்கத்தக்கவன், உறவினன் ஆகிய இவர்களிடத்தும், நல்லோரிடத்தும், தீயோரிடத்தும் ஸமமானபார்வையுள்ளவன் மேலாகின்றான்.

"ஸுஹிருத்"என்று தொடங்குகின்ற சுலோகத்தின்(முற்)பாதி ஒருபதம் [தொகுநிலைத்தொடர்]. நல்லஹிருதயமுள்ளவன் - பதிலுபகாரத்தைவேண்டாது உபகாரஞ் செய்பவன். நண்பன் - ஸ்நேகமுள்ளவன். பகைவன் - சத்துரு. உதாஸீநன் என்பவன் - ஒருவனுடைய பக்கத்தையும் சாரான். விரோதமுள்ள இருவர்க்கும் நலத்தைவிரும்புபவன் எவனோ, (அவன்) - நடுவுநிலையிலே நிற்பவன். வெறுக்கத்தக்கவன் - தனக்கு வேண்டாதவன். உறவினன் - ஸம்பந்தமுடையவன். என்ற இவர்களும், சாஸ்திரத்தைப் பின்பற்றியுள்ள நல்லோர்களும், விலக்கியதைச் செய்யுந் தீயோர்களுமாகிய

ஶாஸ்த்ராநுவர்திஷு அபி ச பாபேஷு ப்ரதிஷித்தகாரிஷு ஸர்வேஷு ஸமேஷு ஸமபுத்தி: "க: கிம்கர்மா" இதி அவ்யாப்ருதபுத்தி: இத்யர்த: । விஶிஷ்யதே — 'விமுச்யதே' இதி வா பாடாந்தரம் — யோகாரூடாநாம் ஸர்வேஷாம் அயம் உத்தம இத்யர்த: ॥ ௯ ॥

அத: ஏவம் உத்தமஃபலப்ராப்தயே —

௰. யோகீ யுஞ்ஜீத ஸததம் ஆத்மாநம் ரஹஸி ஸ்தித: ।
ஏகாகீ யதசித்தாத்மா நிராஶீரபரிக்ரஹ: ॥

யோகீ த்யாயீ யுஞ்ஜீத ஸமாதத்யாத் ஸததம் ஸர்வதா ஆத்மாநம் அந்த:கரணம் ரஹஸி ஏகாந்தே கிரிகுஹாதௌ ஸ்தித: ஸந் ஏகாகீ அஸஹாய: — 'ரஹஸி ஸ்தித:, ஏகாகீ' ச இதி விஶேஷணாத் ஸம்ந்யாஸம் க்ருத்வா இத்யர்த: — யதசித்தாத்மா சித்தம் அந்த:கரணம் ஆத்மா தேஹஶ்ச ஸம்யதௌ யஸ்ய ஸ: யதசித்தாத்மா நிராஶீ: வீதத்ருஷ்ண: அபரிக்ரஹ: பரிக்ரஹரஹிதஶ்ச । ஸம்ந்யாஸித்வேऽபி த்யக்தஸர்வபரிக்ரஹ: ஸந் யுஞ்ஜீத இத்யர்த: ॥ ௰ ॥

அத இதாநீம் யோகம் யுஞ்ஜாநஸ்ய ஆஸநாஹாரவிஹாராதீநாம் யோகஸாதநத்வேந நியமோ வக்தவ்ய:, ப்ராப்தயோகஸ்ய லக்ஷணம், தத்ஃபலாதி ச, இத்யத ஆரப்யதே । தத்ர ஆஸநமேவ தாவத் ப்ரதமம் உச்யதே —

---

இந்த எல்லாரிடத்தும் ஸமமான பார்வையுள்ளவன், அதாவது "(இவன்)யார், (இவனுடைய)தொழில் என்ன?" என்னும் ஆலோசனையை மேற்கொள்ளாதவன் மேலானவனுகிறன்; அல்லது, (ஸம்ஸாரத்தினின்றும்) விடுபடுகிறன் என்றுவேறுபாடம் உண்டு. யோகத்தைக் கூடியுள்ள அனைவரினும் இவன் உயர்ந்தவன் என்பது (தேர்ந்த) பொருள். (௯)

**யோகத்தை அப்யஸிக்கவேண்டிய ஒழுங்குகள்.**

ஆகவே, இவ்வாருக உயர்ந்த பயனை அடைவதற்காக

௰. தனிமையானஇடத்திலே தனியாய் இருந்து, மனத்தையும் தேகத்தையும் அடக்கியவனுய், ஆசையும் உடைமையுமில்லாத யோகியானவன் மனத்தை எப்பொழுதும் (ஸமாதியிற்)சேர்க்கவேண்டும்.

யோகி - தியானஞ் செய்பவன். தனிமையான இடத்திலே - மலையின் குகை முதலானவற்றிலே. தனியாய் - துணையில்லாதவனுய். "தனிமையானஇடத்திலே... இருந்து" என்னும்விசேஷணத்தினுலும், "தனியாய்" என்னும்விசேஷணத்தினுலும், "ஸந்யாஸம் செய்து(கொள்ளவேண்டும்)" என்பது பொருள். துறவியாயிருந்தாலும், உடைமைகள் எல்லாவற்றையும் விட்டொழிந்தவனுய் யோகத்தைக் கூடவேண்டும் [கௌபீநம்முதலியவற்றிலும் எனதென்னும்பற்றை வைக்கக்கூடாது] என்பது பொருள். (௰)

இனி இப்பொழுது, யோகத்தைக் கூடுகிறவனுக்கு(அவன் உட்காரத்தக்க) ஆஸநம், (அவன் உட்கொள்ளத்தக்க) உணவு, (அவனுடைய பொழுதுபோக்குக்கு உரிய) விநோதம்முதலானவற்றின் ஒழுங்கை யோகத்திற்கு ஸாதநமாகக் கூறவேண்டியதோடு, யோகத்தை அடைந்தவனுடைய லக்ஷணத்தையும், அ(ந்தயோகத்)தின் பயன் முதலானவற்றையும் கூறவேண்டுமாதலால், (அவையெல்லாவற்றையும்உபதேசிக்கத்) தொடங்கி, அவற்றுள் முதன்மையான ஆஸநத்தையே முதலில் கூறுகிறர் :

கக. 𑌶𑍁𑌚𑍌 𑌦𑍇𑌶𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌪𑍍𑌯 𑌸𑍍𑌥𑌿𑌰𑌮𑌾𑌸𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌨𑌾𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌛𑍍𑌰𑌿𑌤𑌂 𑌨𑌾𑌤𑌿𑌨𑍀𑌚𑌂 𑌚𑍈𑌲𑌾𑌜𑌿𑌨𑌕𑍁𑌶𑍋𑌤𑍍𑌤𑌰𑌮𑍍 ॥

𑌶𑍁𑌚𑍌 𑌶𑍁𑌦𑍍𑌧𑍇 𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑍇 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑌃 𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌤𑍋 𑌵𑌾 𑌦𑍇𑌶𑍇 𑌸𑍍𑌥𑌾𑌨𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌪𑍍𑌯 𑌸𑍍𑌥𑌿𑌰𑌮𑍍 𑌅𑌚𑌲𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌆𑌸𑌨𑌂 𑌨𑌾𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌛𑍍𑌰𑌿𑌤𑌂 𑌨𑌾𑌤𑍀𑌵 𑌉𑌚𑍍𑌛𑍍𑌰𑌿𑌤𑌂 𑌨 𑌚𑌾𑌪𑌿 𑌅𑌤𑌿𑌨𑍀𑌚𑌮𑍍, 𑌤𑌚𑍍𑌚 𑌚𑍈𑌲𑌾𑌜𑌿𑌨𑌕𑍁𑌶𑍋𑌤𑍍𑌤𑌰𑌂 𑌚𑍈𑌲𑌮𑍍 𑌅𑌜𑌿𑌨𑌂 𑌕𑍁𑌶𑌾𑌶𑍍𑌚 𑌉𑌤𑍍𑌤𑌰𑍇 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌆𑌸𑌨𑍇 𑌤𑌤𑍍 𑌆𑌸𑌨𑌂 𑌚𑍈𑌲𑌾𑌜𑌿𑌨𑌕𑍁𑌶𑍋𑌤𑍍𑌤𑌰𑌮𑍍 । 𑌪𑌾𑌠𑌕𑍍𑌰𑌮𑌾𑌤𑍍 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌃 𑌅𑌤𑍍𑌰 𑌕𑍍𑌰𑌮𑌃 𑌚𑍈𑌲𑌾𑌦𑍀𑌨𑌾𑌮𑍍 ॥ கக ॥

𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌪𑍍𑌯 𑌕𑌿𑌮𑍍?—

கஉ. 𑌤𑌤𑍍𑌰𑍈𑌕𑌾𑌗𑍍𑌰𑌂 𑌮𑌨𑌃 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌯𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌉𑌪𑌵𑌿𑌶𑍍𑌯𑌾𑌸𑌨𑍇 𑌯𑍁𑌞𑍍𑌜𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑍋𑌗𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌯𑍇 ॥

𑌤𑌤𑍍𑌰 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌆𑌸𑌨𑍇 𑌉𑌪𑌵𑌿𑌶𑍍𑌯 𑌯𑍋𑌗𑌂 𑌯𑍁𑌞𑍍𑌜𑍍𑌯𑌾𑌤𑍍—𑌕𑌥𑌮𑍍?—𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌷𑌯𑍇𑌭𑍍𑌯𑌃 𑌉𑌪𑌸𑌂𑌹𑍃𑌤𑍍𑌯 𑌏𑌕𑌾𑌗𑍍𑌰𑌂 𑌮𑌨𑌃 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌯𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌚 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌚 𑌚𑌿𑌤𑍍𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌸𑌂𑌯𑌤𑌾 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌃 𑌯𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 । 𑌸 𑌕𑌿𑌮𑌰𑍍𑌥𑌂 𑌯𑍋𑌗𑌂 𑌯𑍁𑌞𑍍𑌜𑍍𑌯𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿? 𑌆𑌹—𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌯𑍇 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌸𑍍𑌯 𑌶𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌰𑍍𑌥𑌮𑍍 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 ॥ கஉ ॥

𑌬𑌾𑌹𑍍𑌯𑌮𑍍 𑌆𑌸𑌨𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍; 𑌅𑌧𑍁𑌨𑌾 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌯 𑌧𑌾𑌰𑌣𑌂 𑌕𑌥𑌮𑍍 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

---

கக. மிகவும் உயரமாயில்லாததும், மிகவும் தாழ்வாயில்லாததும், வஸ்திரம் தோல் தர்ப்பை என்றவற்றை மேலேயுடையதும், அசையாததுமாகிய தனது ஆஸனத்தை சுத்தமான இடத்தில் அமைத்துக்கொண்டு,

சுத்தமான - இற்பகையினுலாயினும், மெழுகுதல் முதலியவற்றுலாயினும் பரிசுத்தமான. இடத்திலே - ஜனமில்லாத இடத்திலே இங்கே, வஸ்திரம்முதலியவற்றின் அடுக்கானது பாடத்தின்முறைப்படி (முதலில் வஸ்திரம், பின்பு தோல், பின்பு தருப்பை என) மாறியிருக்கின்றது [முதலில் தருப்பை, அதன்மேல் தோல், அதன் மேல் வஸ்திரம் என்பது கருத்து]. (கக)

அமைத்துக்கொண்டு என்ன (செய்யவேண்டும்) ?—

கஉ. மனத்தை ஒருநிலையாகச் செய்து, மனம் இந்திரியங்கள் இவற்றை அடக்கியவனும் அந்த ஆஸனத்தில் உட்கார்ந்து, சித்தசுத்திக்காக யோகத்தைக் கூட வேண்டும்.

அந்தஆஸனத்திலே உட்கார்ந்து யோகத்தைக் கூடவேண்டும்.—எப்படி ?—ஸகலவிஷயங்களினின்றும் மனத்தை இழுத்து, ஒருநிலைப்படுத்தி, மனம் இந்திரியங்கள் இவற்றை அடக்கியவனும்.—அவன் எதற்காக யோகத்தைக் கூடவேண்டும் என்பது ?—கூறுகிறர் "அந்தக்கரணத்தின் சுத்திக்காக" என்று. (கஉ.)

வெளியிலுள்ள ஆஸனமானது கூறப்பட்டது; இனி, சரீரமிருக்கவேண்டிய நிலை எவ்வாறு என்பது ?—கூறுவோம்:

க௩. ஸமம் காயஶிரோக்ரீவம் தாரயந்நசலம் ஸ்திர: ।
ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திஶஶ்சாநவலோகயந் ॥

ஸமம் காயஶிரோக்ரீவம் காயஶ்ச ஶிரஶ்ச க்ரீவா ச காயஶிரோக்ரீவம் தத் ஸமம் தாரயந் அசலம் ச । ஸமம் தாரயத: சலநம் ஸம்பவதி; அத: விஶிநஷ்டி— அசலம் இதி । ஸ்திர: ஸ்திரோ பூத்வா இத்யர்த:। ஸ்வம் நாஸிகாக்ரம் ஸம்ப்ரேக்ஷ்ய ஸம்யக் ப்ரேக்ஷணம் தர்ஶநம் க்ருத்வா இவ இதி; இவஶப்தோ லுப்தோ த்ரஷ்டவ்ய: । ந ஹி ஸ்வநாஸிகாக்ரஸம்ப்ரேக்ஷணம் இஹ விதித்ஸிதம் । கிம் தர்ஹி? சக்ஷுஷோ: த்ருஷ்டிஸந்நிபாத: । ஸ ச அந்த:கரணஸமாதாநாபேக்ஷோ விவக்ஷித: । ஸ்வநாஸிகாக்ரஸம்ப்ரேக்ஷணமேவ சேத் விவக்ஷிதம், மந: தத்ரைவ ஸமாதீயேத, நாத்மநி । ஆத்மநி ஹி மநஸ: ஸமாதாநம் வக்ஷ்யதி 'ஆத்மஸம்ஸ்தம் மந: க்ருத்வா' இதி । தஸ்மாத் இவஶப்தலோபேந அக்ஷ்ணோ: த்ருஷ்டிஸந்நிபாத ஏவ 'ஸம்ப்ரேக்ஷ்ய' இத்யுச்யதே । திஶஶ்ச அநவலோகயந் திஶாம் ச அவலோகநம் அந்தரா அகுர்வந் இத்யேதத் ॥

கிஞ்ச—

க௪. ப்ரஶாந்தாத்மா விகதபீர் ப்ரஹ்மசாரிவ்ரதே ஸ்தித: ।
மந: ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பர: ॥

---

க௩. (யோகியானவன்) உடம்பையும், தலையையும், கழுத்தையும் அசையாது நேரே வைத்துக்கொண்டு நிலைத்தவனாய், தனது மூக்கின் நுனியைப்பார்த்தும், சுற்றுப் புறங்களைப் பாராதும் (இருக்கவேண்டும்).

உடம்பு தலை கழுத்து இவற்றை(க் கோணாது) நேரேவைத்துக்கொள்பவனுக்கு அசைவு உண்டாகக்கூடுமாதலால், "அசையாது" என விசேஷிக்கிறார். நிலைத்தவனாய் - நிலையுள்ளவனாய் [தேகேந்திரியங்களுடையவிஷயங்கட்கு உட்படாதவனாய்] ஆகி என்பது பொருள். தனது மூக்கின் நுனியை நேரே பார்த்து(இருப்பவன்)போல என(க் கொள்ளவேண்டும்; ஆகவே, இங்கு) "போல" என்னுஞ்சொல் இருந்து கெட்டதாக[இல்லாமற்போனதாக]க் கண்டுகொள்க. ஏனெனில், இங்கே(பகவான்) விதிக்கக்கருதியது, தனது மூக்கின் நுனியைப் பார்த்தலென்பது அன்று. அப்பொழுது என்னவெனில்,—(வெளியிலுள்ள விஷயங்களைப் பாராதபடி உள்ளேயே)கண்களின் பார்வையை வீழ்த்துதல் என்க. மேலும்,அது அந்தக்கரணத்தினுடைய அமைதியான நிலையைத் தழுவிநிற்பது என்பது (பகவான்) உபதேசிக்கவிரும்பிய குறிப்பு. தனது மூக்கின் நுனியைப் பார்ப்பதே உபதேசிக்கக் கருதியதானல், மனம் அங்கேதான் ஒருநிலைப்பட்டுவிடுமேயன்றி ஆத்மாவினிடத்து அன்று. "மனத்தை ஆத்மாவிடத்து நன்குநிலைத்ததாகச் செய்து"(௬ - ௨௫)என, ஆத்மாவினிடத்தன்றோ மனம் ஒருநிலைப்படுதலை (பகவான்) கூறுவர். ஆகவே, "போல" என்னுஞ்சொல் இல்லாதிருத்தலால், கண்களின் பார்வையை உள்ளேவீழ்த்துதல்தான் "பார்த்து" எனக் கூறப்படுகின்றது. (க௩)

அன்றியும்,

க௪. மனம் அமைந்தவனும், பயம் நீங்கியவனும், ப்ரஹ்மசாரிவிரதத்தில் நிற்பவனும், மனத்தை அடக்கிச் சித்தத்தை என்னிடத்து வைத்தவனும், ஒருநிலைப்பட்டவனும், என்னை மேலாகக்கொண்டவனுமாக (அவன்)உட்காரவேண்டும்.

𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑍍𑌰𑌕𑌰𑍍𑌷𑍇𑌣 𑌶𑌾𑌨𑍍𑌤𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌂 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌃 𑌅𑌯𑌂 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌗𑌤𑌭𑍀𑌃 𑌵𑌿𑌗𑌤𑌭𑌯𑌃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌾𑌰𑌿𑌵𑍍𑌰𑌤𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌾𑌰𑌿𑌣𑍋 𑌵𑍍𑌰𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌾𑌰𑌿𑌵𑍍𑌰𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌂 𑌗𑍁𑌰𑍁𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌾𑌭𑌿𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌨𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃, 𑌤𑌦𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌤𑌾 𑌭𑌵𑍇𑌦𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌕𑌿𑌞𑍍𑌚 𑌮𑌨𑌃 𑌸𑌂𑌯𑌮𑍍𑌯 𑌮𑌨𑌸𑌃 𑌵𑍃𑌤𑍍𑌤𑍀𑌃 𑌉𑌪𑌸𑌂𑌹𑍃𑌤𑍍𑌯 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍, 𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌃 𑌮𑌯𑌿 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑍇 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌯𑌸𑍍𑌯 𑌸𑍋𑌽𑌯𑌂 𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑍋 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃 𑌸𑌨𑍍 𑌆𑌸𑍀𑌤 𑌉𑌪𑌵𑌿𑌶𑍇𑌤𑍍 𑌮𑌤𑍍𑌪𑌰𑌃, 𑌅𑌹𑌂 𑌪𑌰𑍋 𑌯𑌸𑍍𑌯 𑌸𑍋𑌽𑌯𑌂 𑌮𑌤𑍍𑌪𑌰𑌃 । 𑌭𑌵𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 𑌰𑌾𑌗𑍀 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌚𑌿𑌤𑍍𑌤𑌃, 𑌨 𑌤𑍁 𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌮𑍇𑌵 𑌪𑌰𑌤𑍍𑌵𑍇𑌨 𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿 ; 𑌕𑌿𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿? 𑌰𑌾𑌜𑌾𑌨𑌂, 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌂 𑌵𑌾 । 𑌅𑌯𑌂 𑌤𑍁 𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌃 𑌮𑌤𑍍𑌪𑌰𑌶𑍍𑌚 ॥ ௧௪ ॥

𑌅𑌥 𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌯𑍋𑌗𑌫𑌲𑌂 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௧௫. 𑌯𑍁𑌞𑍍𑌜𑌨𑍍𑌨𑍇𑌵𑌂 𑌸𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌯𑍋𑌗𑍀 𑌨𑌿𑌯𑌤𑌮𑌾𑌨𑌸𑌃 ।
𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌪𑌰𑌮𑌾𑌂 𑌮𑌤𑍍𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌮𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

𑌯𑍁𑌞𑍍𑌜𑌨𑍍 𑌸𑌮𑌾𑌧𑌾𑌨𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌏𑌵𑌂 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑍇𑌨 𑌵𑌿𑌧𑌾𑌨𑍇𑌨 𑌸𑌦𑌾 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 𑌯𑍋𑌗𑍀 𑌨𑌿𑌯𑌤𑌮𑌾𑌨𑌸𑌃 𑌨𑌿𑌯𑌤𑌂 𑌸𑌂𑌯𑌤𑌂 𑌮𑌾𑌨𑌸𑌂 𑌮𑌨𑍋 𑌯𑌸𑍍𑌯 𑌸𑍋𑌽𑌯𑌂 𑌨𑌿𑌯𑌤𑌮𑌾𑌨𑌸𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌉𑌪𑌰𑌤𑌿𑌂 𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌪𑌰𑌮𑌾𑌂 𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑌃 𑌤𑌤𑍍 𑌪𑌰𑌮𑌾 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌯𑌸𑍍𑌯𑌾𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑍇𑌃 𑌸𑌾 𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌪𑌰𑌮𑌾 𑌤𑌾𑌂 𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌪𑌰𑌮𑌾𑌂 𑌮𑌤𑍍𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌂 𑌮𑌦𑌧𑍀𑌨𑌾𑌂 𑌅𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 ॥ ௧௫ ॥

𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 𑌆𑌹𑌾𑌰𑌾𑌦𑌿𑌨𑌿𑌯𑌮𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

---

ப்ரஹ்மசாரிவிரதத்தில் நிற்பவன் - குருவிற்குப் பணிவிடைசெய்தல், பிச்சைச் சோற்றைப் புஜித்தல் முதலியவற்றிலே இருப்பவன். (அவன்) அவற்றை அநுஷ்டிப்பவனாக இருக்கவேண்டும் என்பது பொருள். மனத்தை அடக்கி - மனத்தின் விருத்திகளை[விகாரங்களை, போக்குக்களை]ஒடுக்கி என்றபடி. என்னிடத்து - பரமேச்வரனான என்னிடத்து. காமவிகாரமுடையவனொருவன் ஸ்திரியினிடத்துச் சித்தத்தை வைத்தவனாய்[அவளையேஎப்பொழுதும் நினைந்துகொண்டிருப்பவனாய்]இருக்கிறான் ; ஆனால் (அவன்) அவளையே (எல்லாரினும்)மேலானவளாகக் கொள்கிறானில்லை. அப்பொழுதென்னவெனில்,—அரசனையாவது, மஹாதேவனை[பெரியகடவுளை]யாவது (மேலாகக் கொள்கிறான்). இவனோ[யோகியோ]என்னிடத்தே சித்தத்தை வைத்தவனும், என்னையே மேலாகக்கொண்டவனுமாம் என்க. (௧௪)

இனி இப்பொழுது, யோகத்தின் பயனைக் கூறுகிறார் :

௧௫. இவ்வாறு மனத்தை எப்பொழுதும் ஒருநிலைப்படுத்துகிறவனாய் மனம் அடக்கப்பெற்ற யோகியானவன் மோக்ஷத்தில் முடிவதான என்னிடத்துள்ள சாந்தியை [ஒழிவை]ப் பெறுகிறான்.

இவ்வாறு - மேற்கூறிய விதிப்படி. என்னிடத்துள்ள - என்னைச் சார்ந்துள்ள [தானாகவேயுள்ள—ஆ.] (௧௫)

இப்பொழுது, யோகிக்கு உணவுமுதலானவற்றின் ஒழுங்கைக் கூறுகிறார் :

𑌯𑌤𑍇 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍁𑌨𑌃 𑌰𑌾𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌗𑌮𑍇 𑌅𑌹𑌃 𑌕𑍍𑌷𑌯𑍇 𑌅𑌵𑌶𑌃 𑌅𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰 𑌏𑌵, 𑌹𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥, 𑌪𑍍𑌰𑌭𑌵𑌤𑌿 𑌅𑌵𑌶 𑌏𑌵 𑌅𑌹𑌰𑌾𑌗𑌮𑍇 ॥ ௧௯ ॥

𑌯𑌦𑍁𑌪𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌂 𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑍋 𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑌃 ‘𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌕𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 । 𑌅𑌥 𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌅𑌕𑍍𑌷𑌰𑌸𑍍𑌯𑍈𑌵 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌦𑌿𑌕𑍍𑌷𑌯𑌾 𑌇𑌦𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇, 𑌅𑌨𑍇𑌨 𑌯𑍋𑌗𑌮𑌾𑌰𑍍𑌗𑍇𑌣 𑌇𑌦𑌂 𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 𑌇𑌤𑌿—

௨௰. 𑌪𑌰𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑍁 𑌭𑌾𑌵𑍋𑌽𑌨𑍍𑌯𑍋𑌽𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋𑌽𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌤𑍍 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ।
𑌯𑌸𑍍𑌸 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌨𑌶𑍍𑌯𑌤𑍍𑌸𑍁 𑌨 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿 ॥

𑌪𑌰𑌃 𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌃 𑌭𑌿𑌨𑍍𑌨𑌃—𑌕𑍁𑌤𑌃?—𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑌾𑌤𑍍 । ‘𑌤𑍁’ 𑌶𑌬𑍍𑌦𑌃 𑌅𑌕𑍍𑌷𑌰𑌸𑍍𑌯 𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑌿𑌤𑌸𑍍𑌯 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌤𑍍 𑌵𑍈𑌲𑌕𑍍𑌷𑌣𑍍𑌯𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌾𑌰𑍍𑌥𑌃 । 𑌭𑌾𑌵𑌃 𑌅𑌕𑍍𑌷𑌰𑌾𑌖𑍍𑌯𑌂 𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 । 𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌤𑍍𑌵𑍇 𑌸𑌤𑍍𑌯𑌪𑌿 𑌸𑌾𑌲𑌕𑍍𑌷𑌣𑍍𑌯𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑍋𑌽𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌤𑌨𑍍𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌮𑌾𑌹—𑌅𑌨𑍍𑌯𑌃 𑌇𑌤𑌿 । 𑌅𑌨𑍍𑌯𑌃 𑌵𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 । 𑌸 𑌚 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌃 𑌅𑌨𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍋𑌚𑌰𑌃 । ‘𑌪𑌰𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂; 𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑍁𑌨𑌃 𑌪𑌰𑌃? 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑌾𑌤𑍍 𑌭𑍂𑌤𑌗𑍍𑌰𑌾𑌮𑌬𑍀𑌜𑌭𑍂𑌤𑌾𑌤𑍍 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌤𑍍 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌤𑍍 । 𑌅𑌨𑍍𑌯𑌃 𑌵𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 𑌭𑌾𑌵𑌃

---

உள்ளதும்); இது வேறானதன்று. (அது - ப்ரஹ்மாவுக்குப்) பகல் வரும்பொழுது அவசமாகவே வெளிப்பட்டு, பகலினுடைய முடிவிலே மீண்டும் அவசமாகவே மறைகின்றது. (௧௯)

**யாவற்றினும் மேலான நிலையும், அதனை அடையும் வழியும்.**

எந்த அழியாப்பொருளானது(கீழே)விவரித்துச்சொல்லப்பட்டதோ, அதனை அடைதற்கு வழியானது “ ப்ரஹ்மமாகிய ”(அ - ௧௩) என்பதுமுதலியவற்றால் குறிப்பிட்டுக்காட்டி உணர்த்தப்பட்டது. இனி, இப்பொழுது, அழியாப்பொருளையே இன்னதென்று குறிப்பிட்டுக்காட்டி உணர்த்தவேண்டும் என்னும் கருத்தோடு, “ இந்த யோகமார்க்கத்தால் அடையவேண்டியது இ(ன்ன)து ” என்று, (பகவான்) இதனை அருளிச் செய்கிறார் :

**௨௰. ஆனால், எக்காலத்துமுள்ள மற்றைய அவ்யக்தமான எந்தப் பொருளானது அந்த அவ்யக்தத்தினும் வேறானதோ, அது - ஸகலபூதங்களும் அழியும்பொழுது(ம், தான்)அழிவதில்லை.**

(ப்ரஹ்மமானது) வேறானது.—எதனைக்காட்டிலும்?—முற்கூறிய அதனைக்காட்டிலும். “ ஆனால் ” என்னும்சொல் - (இங்கு)சொல்லக்கருதிய அழியாப்பொருளானது அவ்யக்தத்தினும் வேறானது என்னும் விசேஷணத்தைப் பொருளாகவுடையது[காட்டுவது]. பொருள் - அக்ஷரமென்னும் பெயருடைய பரப்ரஹ்மம். (அது அவ்யக்தத்தைக்காட்டிலும்)வேறாயிருந்தாலும், ஒரேதன்மையுடைமை அமையலாம் [அதற்கு அவ்யக்தத்தோடு ஒப்புமை இருக்கலாம்] என்னும் சங்கை உண்டாகுமென்று, அதனை நீக்குதற்பொருட்டு “ மற்றைய ” என்று கூறுகிறார். மற்றைய - அல்லாத. அப்பொருள், அவ்யக்தமானது = இந்திரியங்கட்கு எட்டாதது. “ அதனினும் வேறானது ” என்று கூறப்பட்டதே.—எதனினும் வேறானது ?—பூதவர்க்கத்திற்கு வித்தாயுள்ள மேற்கூறிய அவித்யையாகிய அவ்யக்தத்தினும், (ப்ரஹ்மமானது இதனினும்)முற்றும் வேறான பொருள்என்பது கருத்து. எது என்றைக்குமுள்ளதோ,

𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑌿𑌤𑍍𑌯𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑌃 । 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 𑌵𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 𑌯𑌃 𑌸𑌃 𑌭𑌾𑌵𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑌿𑌷𑍁 𑌨𑌶𑍍𑌯𑌤𑍍𑌸𑍁 𑌨 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿 ॥ ௨௦ ॥

௨௧. 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋𑌽𑌕𑍍𑌷𑌰 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌤𑌮𑌾𑌹𑍁𑌃 𑌪𑌰𑌮𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 ।
𑌯𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌨 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌤𑌦𑍍𑌧𑌾𑌮 𑌪𑌰𑌮𑌂 𑌮𑌮 ॥

𑌯𑍋𑌽𑌸𑍌 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌃 𑌅𑌕𑍍𑌷𑌰𑌃 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌤𑌮𑍇𑌵 𑌅𑌕𑍍𑌷𑌰𑌸𑌂𑌜𑍍𑌞𑌕𑌮𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌭𑌾𑌵𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤 𑌆𑌹𑍁𑌃 𑌪𑌰𑌮𑌾𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌷𑍍𑌟𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 । 𑌯𑌂 𑌭𑌾𑌵𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌪𑍁𑌨𑌃 𑌨 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌯 𑌤𑌦𑍍𑌧𑌾𑌮 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌷𑍍𑌟𑌂 𑌮𑌮, 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௨௧ ॥

𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇𑌃 𑌉𑌪𑌾𑌯𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௨௨. 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌸 𑌪𑌰𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌲𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑌨𑍍𑌯𑌯𑌾 ।
𑌯𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌃𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌯𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌤𑌮𑍍 ॥

𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑍁𑌰𑌿 𑌶𑌯𑌨𑌾𑌤𑍍 𑌪𑍂𑌰𑍍𑌣𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚, 𑌸 𑌪𑌰𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥, 𑌪𑌰𑌃 𑌨𑌿𑌰𑌤𑌿𑌶𑌯𑌃, 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌤𑍍 𑌨 𑌪𑌰𑌂 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍। 𑌸𑌃 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌲𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑍁 𑌜𑍍𑌞𑌾𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑌯𑌾 𑌅𑌨𑌨𑍍𑌯𑌯𑌾 𑌕𑍃𑌤𑌵𑌿𑌷𑌯𑌯𑌾। 𑌯𑌸𑍍𑌯 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌅𑌨𑍍𑌤𑌃𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌣𑌿

---

அது - ப்ரஹ்மாமுதலிய ஸகலபூதங்களும் அழியும்பொழுது(ம், தான்) அழிவதில்லை. (அவ்யக்தம் - வெளிப்படையாக இல்லாதது, புலப்படாதது. இச்சொல் - இங்கே, ப்ரஹ்மத்தின்மேலும், மாயையாகிய பிரகிருதியினின்று தோன்றிய ஹிரண்யகர்ப்பதத்துவத்தின்மேலும் நிற்பதைத் தெளிவாகத் தெரிந்துகொள்க.) (௨௦)

௨௧. "வெளிப்படையாகஇல்லாதது, அழியாதது" என்று (எது) கூறப்பட்டதோ, அதனை உயர்ந்த கதியாக(ச் சுருதிகள்) கூறுகின்றன. எதனை அடைந்த பின்பு, திரும்பிவருவதில்லையோ, அது என்னுடைய மேலான இடம்.

யாதொரு இந்த(ப்ரஹ்மமானது) வெளிப்படையாகஇல்லாதது எனவும், அழியாதது எனவும் கூறப்பட்டதோ, அந்த அக்ஷரமென்னும் பெயருடைய அவ்யக்தமான பொருளையே உயர்ந்த கதியாக[அடையவேண்டிய புருஷார்த்தமாக](ச் சுருதிகள்) கூறுகின்றன. எப்பொருளை அடைந்தபின் ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருவதில்லையோ, அஃது என்னுடைய மேலான இடம்: விஷ்ணுவினுடைய பரமபதம் என்பது பொருள். (௨௧)

அதனை அடைதற்கு வழி கூறப்படுகின்றது :

௨௨. பார்த்த! எவனுக்குள்ளே பொருள்கள்(எல்லாம்) இருக்கின்றனவோ, எவனால் இதெல்லாம் வியாபிக்கப்பட்டுள்ளதோ, அந்தப் பரமபுருஷன் வேறொன்றில்லாத [வேறுவிஷயத்திற் செல்லாத] பக்தியினால் அடையத்தக்கவன்தான்.

சரீரத்தில் தங்கியிருப்பதனாலாவது, (எங்கும்) நிறைந்துள்ளமையினாலாவது புருஷன் (என்று அவனுக்குப் பெயர்). பார்த்த! அவன் யாவற்றினும் மேம்பட்டவன்; ஏனெனில், புருஷனைக்காட்டிலும் மேலானது ஒன்றுமில்லை. அவன் ஆத்மாவைப் பற்றிய ஞானமாகிய பக்தியினால் அடையத்தக்கவன்தான். காரியமான [படைக்கப்

𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌕𑌾𑌰𑍍𑌯𑌭𑍂𑌤𑌾𑌨𑌿; 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌹𑌿 𑌕𑌾𑌰𑌣𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑌿 𑌭𑌵𑌤𑌿 । 𑌯𑍇𑌨 𑌪𑍁𑌰𑍁𑌷𑍇𑌣 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌜𑌗𑌤𑍍𑌤𑌤𑌂 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌮𑍍 ॥ ௨௨ ॥

𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌣𑌵𑌾𑌵𑍇𑌶𑌿𑌤𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑍀𑌨𑌾𑌂 𑌕𑌾𑌲𑌾𑌨𑍍𑌤𑌰𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌭𑌾𑌜𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑌯𑍇 𑌉𑌤𑍍𑌤𑌰𑍋 𑌮𑌾𑌰𑍍𑌗𑍋 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯 𑌇𑌤𑌿 '𑌯𑌤𑍍𑌰 𑌕𑌾𑌲𑍇' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌰𑍍𑌥𑌸𑌮𑌰𑍍𑌪𑌣𑌾𑌯 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—𑌆𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌮𑌾𑌰𑍍𑌗𑍋𑌪𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌇𑌤𑌰𑌮𑌾𑌰𑍍𑌗𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃—

௨௩. 𑌯𑌤𑍍𑌰 𑌕𑌾𑌲𑍇 𑌤𑍍𑌵𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚𑍈𑌵 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 ।
𑌪𑍍𑌰𑌯𑌾𑌤𑌾 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌤𑌂 𑌕𑌾𑌲𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌭𑌰𑌤𑌰𑍍𑌷𑌭 ॥

'𑌯𑌤𑍍𑌰 𑌕𑌾𑌲𑍇 𑌪𑍍𑌰𑌯𑌾𑌤𑌾𑌃' 𑌇𑌤𑌿 𑌵𑍍𑌯𑌵𑌹𑌿𑌤𑍇𑌨 𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌃 । 𑌯𑌤𑍍𑌰 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌕𑌾𑌲𑍇 𑌤𑍁 𑌅𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌮𑍍 𑌅𑌪𑍁𑌨𑌰𑍍𑌜𑌨𑍍𑌮 𑌆𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌾𑌂 𑌚𑍈𑌵 । '𑌯𑍋𑌗𑌿𑌨𑌃' 𑌇𑌤𑌿 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 𑌕𑌰𑍍𑌮𑌿𑌣𑌶𑍍𑌚 𑌉𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇, 𑌕𑌰𑍍𑌮𑌿𑌣𑌸𑍍𑌤𑍁 𑌗𑍁𑌣𑌤𑌃—'𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍍' 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌾𑌤𑍍—𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 । 𑌯𑌤𑍍𑌰 𑌕𑌾𑌲𑍇 𑌪𑍍𑌰𑌯𑌾𑌤𑌾𑌃 𑌮𑍃𑌤𑌾𑌃 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 𑌅𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿, 𑌤𑌂 𑌕𑌾𑌲𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌭𑌰𑌤𑌰𑍍𑌷𑌭 ॥ ௨௩ ॥

---

பட்ட] பொருள்கள் எல்லாம் அந்தப்புருஷனுக்குள்ளே இருக்கின்றன ; ஏனெனில், கார்யமானது காரணத்துள் இருப்பதாக ஆகின்றது. இந்த ஜகத்தெல்லாம் அந்தப் புருஷனல் வியாபிக்கப்பட்டுள்ளது. (௨௨)

**வெளிச்சமுள்ள வழியாகிய தேவயாநமார்க்கமும், இருளடைந்த வழியாகிய பிதிருயாண மார்க்கமும்.**

ப்ராணவத்திலே ப்ரஹ்மமென்னும்புத்தியை வைத்தவராய் [ஓங்காரத்தை ப்ரஹ்மமாகக்கொண்டவராய்],பிற்காலத்திலே(ப்ரஹ்மாவோடுகூட)மோக்ஷத்தைப்பெறுபவராய்ப் பிரகிருதத்தில் பேசப்பட்டுவரும் யோகிகட்கு உத்தரமார்க்கமானது[வடக்குவழியானது, தேவயாநமார்க்கமானது] உபதேசிக்கத்தக்கதுஎன்று, (தான்)சொல்லக்கருதிய விஷயத்தைத் தெளிவாக வைத்தற்பொருட்டு "எந்தக் காலத்தில்" (அ - ௨௩) என்பதுமுதலியவற்றை(ப் பகவான்) அருளிச்செய்கிறர் : திரும்பிவரும் மார்க்கத்தை எடுத்துக்கூறுதல் - மற்றைய மார்க்கத்தைப் புகழ்தற்காக என்க —

௨௩. பரதரிற் சிறந்தோனே! இனி, எந்தக் காலத்தில் (சரீரத்தை விட்டுப்) போன யோகிகள் திரும்பிவாராமையையும், திரும்பிவருதலையும் அடைகிறர்களோ அந்தக் காலத்தைக் கூறுவேன்.

"எந்தக் காலத்தில் போன" என, ("எந்தக்காலத்தில்" என்பதை,)தனியே விலக்கப்பட்டுநிற்(கும் "போன" என்)பதனேடு கூட்டுக. திரும்பிவாராமையை - மறுபடியும் பிறவாமையை. திரும்பிவருதலை - அதற்கு மறுதலையானதை [மறுபடியும் பிறப்பதை]. "யோகிகள்" என்பது - (இங்கே,) தியானயோகிகளையும், கர்மிகளையும் உணர்த்துகின்றது. கர்மிகளோ,— "கர்மயோகத்தால் யோகிகட்கு" (௩ - ௩)எனச் சிறப்பித்துக் கூறியுள்ளதனல், உபசாரவழக்கைக்கொண்டு யோகிகள் (எனப்படுகிறர்கள்). எக்காலத்திலே இறந்த யோகிகள் திரும்பிவாராமையைப் பெறுகிறர்களோ : மேலும்,எக்காலத்திலே இறந்தவர்கள் திரும்பிவருதலைப் பெறுகிறர்களோ அக்காலத்தைக்கூறுவேன். (தேவயாநமார்க்கத்திற் சென்று திரும்பிவாராதவர்கள் - தியானத்தையுடையவர்கள் என்றும், பிதிருயாணமார்க்கத்திற் சென்று திரும்பிவருகிறவர்கள் கர்மிகள் என்றும் வேறுபாடு காண்க.) (௨௩)

தம் காலமாஹ—

உச. அக்நிர்ஜ்யோதிரஹஶ்ஶுக்லஃ ஷண்மாஸா உத்தராயணம் ।
தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜநாஃ ॥

அக்நிஃ காலாபிமாநிநீ தேவதா । ததா—ஜ்யோதிஃ அபி தேவதைவ காலாபிமாநிநீ । அதவா—அக்நிஜ்யோதிஷீ யதாஶ்ருதே ஏவ தேவதே । பூயஸா து நிர்தேஶோ 'யத்ர காலே' 'தம் காலம்' இதி, ஆம்ரவணவத் । ததா அஹஃ தேவதா அஹரபிமாநிநீ; ஶுக்லஃ ஶுக்லபக்ஷதேவதா; ஷண்மாஸா உத்தராயணம், தத்ராபி தேவதைவ மார்கபூதா இதி ஸ்திதஃ அந்யத்ர அயம் ந்யாயஃ । தத்ர தஸ்மிந்மார்கே ப்ரயாதாஃ ம்ருதாஃ கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதஃ ப்ரஹ்மோபாஸநபரா ஜநாஃ । 'க்ரமேண' இதி வாக்யஶேஷஃ; ந ஹி ஸத்யோமுக்திபாஜாம் ஸம்யக்தர்ஶநநிஷ்டாநாம் கதிஃ ஆகதிர்வா க்வசித் அஸ்தி ॥ உச ॥

உரு. தூமோ ராத்ரிஸ்ததா க்ருஷ்ணஃ ஷண்மாஸா தக்ஷிணாயநம் ।
தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர்யோகீ ப்ராப்ய நிவர்ததே ॥

தூமோ ராத்ரிஃ தூமாபிமாநிநீ ராத்ர்யபிமாநிநீ ச தேவதா । ததா

---

அக்காலத்தைக் கூறுகிறார்:

உச. நெருப்பு, ஒளி, பகல், சுக்லபக்ஷம், உத்தராயணஆறுமாதங்கள்,—(ஆகிய)அவ்விடம் சென்ற ப்ரஹ்மவித்துக்களான ஜனங்கள் ப்ரஹ்மத்தை அடைகிறார்கள்.

நெருப்பென்பது—காலத்தை அபிமானிக்கும் தெய்வம். அவ்வாறே, ஒளியென்பதும் - காலத்தை அபிமானிக்கும் தேவதைதான்.—அல்லது, நெருப்பும் ஒளியும் அதேபெயரையுடைய [அக்நி என்னும், ஜ்யோதிஸ்என்னும்] தேவதைகள் (எனினும் அமையும்). ஆனல், "எக்காலத்திலே," "அக்காலத்தை" என (காலம்என்னும் சொல்லினல் வழியைக்)குறிப்பிட்டு உணர்த்துதல்-பெரும்பான்மையால் [காலத்தை அபிமானிக்கும் தேவதைகள் அதிகமாயுள்ளதனல்] என்க; (ஒருகாட்டிலே மாமரங்கள் அதிகமாயுள்ளதனல்அதனை) மாமரக்காடு என்பதுபோல.—அவ்வண்ணமே, பகலென்பது-பகலை அபிமானிக்கும் தேவதை. சுக்லபக்ஷமென்பது-சுக்லபக்ஷதேவதை. உத்தராயண ஆறுமாதங்களென்பது - அ[இ]ங்கும், (அவற்றை அபிமானித்து) வழியாகஆகிநிற்கும் தேவதைதான். என இந்தநியாயமானது [இவ்வாறு உரையிடுவது] வேறேரிடத்தில் (சாரீ - ச - ங - ச) நிலைபெற்றிருக்கின்றது [நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது]. ஸகுண ப்ரஹ்மத்தை உபாஸிப்பதிலே நன்ருக அமைந்துநின்று இறந்த ஜனங்கள் (காலக்கிரமத்தால்) அந்தவழியிலே [தேவயானமார்க்கத்தால்] ப்ரஹ்மத்தை அடைகிருர்கள். "காலக்கிரமத்தால்" என்பது வாக்கியத்தில் தொக்கிநிற்கின்றது; ஏனெனில்,மெய்யுணர்விலே நிலையாகநிற்பவராய் உடனேமுக்தியைப் பெறுபவர்களுக்குப் போதலாவது,வருதலாவது ஓரிடத்துமில்லை [அவர்கட்குப் போகுமிடமும், வருமிடமும் இல்லை]. (உச)

உரு. புகை, இரவு, அவ்வாறே கிருஷ்ணபக்ஷம், தக்ஷிணயந ஆறுமாதங்கள்,—(ஆகிய) அவற்ருல் சந்திரனுடைய ஒளியை அடைந்து யோகியானவன் திரும்பிவருகிருன்.

புகையென்பது - புகையை அபிமானிக்கும் தேவதை. இரவென்பது - இரவை அபிமானிக்கும் தேவதை. அவ்வண்ணமே, கிருஷ்ணபக்ஷமென்பது - கிருஷ்ணபக்ஷதே

𑌕𑍃𑌷𑍍𑌣𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑌪𑌕𑍍𑌷𑌦𑍇𑌵𑌤𑌾 । 𑌷𑌣𑍍𑌮𑌾𑌸𑌾 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌯𑌨𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌚 𑌪𑍂𑌰𑍍𑌵𑌵𑌤𑍍 𑌦𑍇𑌵𑌤𑍈𑌵 । 𑌤𑌤𑍍𑌰 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌿 𑌭𑌵𑌂 𑌚𑌾𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 𑌇𑌷𑍍𑌟𑌾𑌦𑌿𑌕𑌾𑌰𑍀 𑌯𑍋𑌗𑍀 𑌕𑌰𑍍𑌮𑍀 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌤𑌤𑍍𑌕𑍍𑌷𑌯𑌾𑌤𑍍 𑌇𑌹 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌪𑍁𑌨𑌃 ॥ ௨௫ ॥

௨௬. 𑌶𑍁𑌕𑍍𑌲𑌕𑍃𑌷𑍍𑌣𑍇 𑌗𑌤𑍀 𑌹𑍍𑌯𑍇𑌤𑍇 𑌜𑌗𑌤𑌃 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍇 𑌮𑌤𑍇 ।
𑌏𑌕𑌯𑌾 𑌯𑌾𑌤𑍍𑌯𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌮𑌨𑍍𑌯𑌯𑌾𑌽𑌽𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌪𑍁𑌨𑌃 ॥

𑌶𑍁𑌕𑍍𑌲𑌕𑍃𑌷𑍍𑌣𑍇 𑌶𑍁𑌕𑍍𑌲𑌾 𑌚 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾 𑌚 𑌶𑍁𑌕𑍍𑌲𑌕𑍃𑌷𑍍𑌣𑍇, 𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌶𑍁𑌕𑍍𑌲𑌾, 𑌤𑌦𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾, 𑌏𑌤𑍇 𑌶𑍁𑌕𑍍𑌲𑌕𑍃𑌷𑍍𑌣𑍇 𑌹𑌿 𑌗𑌤𑍀—𑌜𑌗𑌤𑌃 𑌇𑌤𑌿 𑌅𑌧𑌿𑌕𑍃𑌤𑌾𑌨𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌃, 𑌨 𑌜𑌗𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑍈𑌵 𑌏𑌤𑍇 𑌗𑌤𑍀 𑌸𑌮𑍍𑌭𑌵𑌤𑌃—𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍇 𑌨𑌿𑌤𑍍𑌯𑍇, 𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑍍𑌯 𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌮𑌤𑍇 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑍇 । 𑌤𑌤𑍍𑌰 𑌏𑌕𑌯𑌾 𑌶𑍁𑌕𑍍𑌲𑌯𑌾 𑌯𑌾𑌤𑌿 𑌅𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌮𑍍, 𑌅𑌨𑍍𑌯𑌯𑌾 𑌇𑌤𑌰𑌯𑌾 𑌆𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌪𑍁𑌨𑌃 𑌭𑍂𑌯𑌃 ॥

௨௭. 𑌨𑍈𑌤𑍇 𑌸𑍃𑌤𑍀 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌜𑌾𑌨𑌨𑍍𑌯𑍋𑌗𑍀 𑌮𑍁𑌹𑍍𑌯𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌨 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌕𑌾𑌲𑍇𑌷𑍁 𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌭𑌵𑌾𑌰𑍍𑌜𑍁𑌨 ॥

𑌨 𑌏𑌤𑍇 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑍇 𑌸𑍃𑌤𑍀 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌜𑌾𑌨𑌨𑍍 "𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌯 𑌏𑌕𑌾, 𑌅𑌨𑍍𑌯𑌾 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯" 𑌇𑌤𑌿, 𑌯𑍋𑌗𑍀 𑌨 𑌮𑍁𑌹𑍍𑌯𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌨 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑌪𑌿 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌕𑌾𑌲𑍇𑌷𑍁 𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑍋 𑌭𑌵 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 ॥ ௨௭ ॥

---

வதை. தக்ஷிணாயநஆறுமாதங்களென்பதும் - முன்போல,தேவதைதான். யஜ்ஞமுதலியவற்றைச் செய்யும் கர்மியானவன் அதிலே[பிதிருயாணமார்க்கத்திலே]சந்திரனிடத்துள்ள ஒளியை[ஸ்வர்க்கத்தை]ப் பயனாக அநுபவித்து, பின்பு அது கழிந்துபோதலால் மீண்டும் இங்கே [பூலோகத்திற்குத்]திரும்பிவருகிறான். (௨௫)

௨௬. வெளிச்சமானதும் இருட்டானதுமாகிய இப்பிரசித்த வழிகளிரண்டும் உலகத்திற்கு அநாதியாகக் கருதப்பட்டுள்ளன. (ஒருவன்) ஒன்றினால் திரும்பிவாராமையை அடைகிறான் ; மற்றொன்றினால் மறுபடியும் திரும்பிவருகிறான்.

(தேவயாநமார்க்கம்) வெளிச்சமானது ; அறிவை விளக்குவதாதலின். (பிதிருயாணமார்க்கம்) இருட்டானது ; அஃதில்லையாதலின். [முந்தினது - வெளிச்சமானது ; ஏனெனில், அது ஞானத்தை விளக்குவது : ஸகுணவித்யையினால் அடையத்தக்கது : அக்நிஜ்யோதிஸ் முதலிய பிரகாசமான பொருள்களையுடையது. பிந்தினதோ - இருட்டானது; ஏனெனில், அது அறிவை விளக்குவதில்லை : அவித்யையினால் அடையத்தக்கது : புகைமுதலிய இருண்ட பொருள்களையுடையது.—ஆ.] "உலகத்திற்கு" என்பதற்கு - ஸகுணவித்யைக்கும் கர்மத்திற்கும் உரியவர்கட்கு(எனப் பொருள் கொள்ளவேண்டும் ; அவர்கட்குத்தான் இவ்விரண்டுவழிகளும் உள்ளன). எல்லா ஜனங்களுக்குமே இவ்வழிகள் இல்லை. (அவை) அநாதியானவை ; ஸம்ஸாரம் அநாதியாதலின். அவற்றுள், வெளிச்சமான ஒன்றினால் (ஒருவன்)திரும்பிவாராமையை [கிரமமுக்தியை] அடைகிறான் ; மற்றொன்றினால் மீண்டும் திரும்பிவருகிறான். (௨௬)

௨௭. பார்த்த ! இவ்வழிகளை அறிகின்ற எந்த யோகியும் மயங்கமாட்டான். ஆதலால், அர்ஜுந ! நீ எக்காலத்தும் யோகத்தைக் கூடினவனாக இருக்கக்கடவாய்.

"ஒன்று ஸம்ஸாரத்திற்கும், மற்றொன்று (கிரம)முக்திக்கும் (ஆகின்றது)" என்று மேற்கூறிய வழிகளை அறிகின்ற ஒருயோகியும் மயங்கமாட்டான்[தியாநநிஷ்டனானவன் தெற்குவழியாகிய தூமாதிமார்க்கத்திற் செலுத்துகின்ற கர்மத்தைச் செய்யவேண்டியதாகக்கருதமாட்டான் —ஆ.] யோகத்தைக் கூடினவனாக - ஒருநிலைப்பட்டவனாக. (௨௭)

𑌶𑍃𑌣𑍁 𑌤𑌸𑍍𑌯 𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌮𑌾𑌹𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌮𑍍—

உஅ. 𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌯𑌜𑍍𑌞𑍇𑌷𑍁 𑌤𑌪𑌸𑍍𑌸𑍁 𑌚𑍈𑌵
𑌦𑌾𑌨𑍇𑌷𑍁 𑌯𑌤𑍍𑌪𑍁𑌣𑍍𑌯𑌫𑌲𑌂 𑌪𑍍𑌰𑌦𑌿𑌷𑍍𑌟𑌮𑍍 ।
𑌅𑌤𑍍𑌯𑍇𑌤𑌿 𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾
𑌯𑍋𑌗𑍀 𑌪𑌰𑌂 𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 𑌚𑌾𑌦𑍍𑌯𑌮𑍍 ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑍇 𑌶𑌤𑌸𑌾𑌹𑌸𑍍𑌰𑍍𑌯𑌾𑌂 𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌯𑌾𑌂 𑌵𑍈𑌯𑌾𑌸𑌿𑌕𑍍𑌯𑌾𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌪𑌰𑍍𑌵𑌣𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍁 𑌉𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇 𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌮 𑌅𑌷𑍍𑌟𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌸𑌮𑍍𑌯𑌗𑌧𑍀𑌤𑍇𑌷𑍁 𑌯𑌜𑍍𑌞𑍇𑌷𑍁 𑌚 𑌸𑌾𑌦𑍍𑌗𑍁𑌣𑍍𑌯𑍇𑌨 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌿𑌤𑍇𑌷𑍁 𑌤𑌪𑌸𑍍𑌸𑍁 𑌚 𑌸𑍁𑌤𑌪𑍍𑌤𑍇𑌷𑍁 𑌦𑌾𑌨𑍇𑌷𑍁 𑌚 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌤𑍍𑌤𑍇𑌷𑍁, 𑌏𑌤𑍇𑌷𑍁 𑌯𑌤𑍍 𑌪𑍁𑌣𑍍𑌯𑌫𑌲𑌂 𑌪𑍍𑌰𑌦𑌿𑌷𑍍𑌟𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌣, 𑌅𑌤𑍍𑌯𑍇𑌤𑌿 𑌅𑌤𑍀𑌤𑍍𑌯 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌤𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌫𑌲𑌜𑌾𑌤𑌮𑍍, 𑌇𑌦𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾 𑌸𑌪𑍍𑌤𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌨𑌿𑌰𑍍𑌣𑌯𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍 𑌅𑌰𑍍𑌥𑌂 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 𑌅𑌵𑌧𑌾𑌰𑍍𑌯 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌯 𑌯𑍋𑌗𑍀, 𑌪𑌰𑌮𑍍 𑌉𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌟𑌮𑍍 𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌂 𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑍍 𑌉𑌪𑍈𑌤𑌿 𑌚 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌆𑌦𑍍𑌯𑌮𑍍 𑌆𑌦𑍌 𑌭𑌵𑌂 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ உஅ ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌭𑌾𑌷𑍍𑌯𑍇 𑌅𑌷𑍍𑌟𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

---

**யோகத்தின் சிறப்பு.**

அந்தயோகத்தின் மஹிமையைக் கேள் :

உஅ. யோகியானவன் இதனை அறிந்து,—வேதங்களிலும், யஜ்ஞங்களிலும், தவங்களிலும், தானங்களிலும் எது புண்ணியத்தின் பயனாகக் கூறப்பட்டுள்ளதோ அதனையெல்லாம் கடந்துவிடுகிறான் ; அன்றியும், ஆதியிலுள்ள மேலான இடத்தைச் சேர்கிறான்.

ஸ்ரீமகாபாரதத்திலே, வ்யாஸரருளிச்செய்த நூறாயிரக்கிரந்த ஸம்ஹிதையிலே, பீஷ்மபர்வத்திலே, ஸ்ரீமத் பகவத்கிதைகளாக உபநிஷத்துக்களாக ப்ரஹ்மவித்யையாக யோகசாஸ்திரமாக இருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணார்ஜுந ஸம்வாதத்திலே அப்யாஸயோகம் என்னும் எட்டாம் அத்தியாயம் முற்றும்.

ஏழு வினாக்களை நிர்ணயித்தல் மூலமாக உபதேசிக்கப்பட்ட விஷயத்தைத் தெளிவாகத் தெரிந்து, அநுஷ்டித்து(வரும்) யோகியானவன்,—வேதங்களை நேராக ஓதியவிடத்தும், யஜ்ஞங்களை ஸாங்கோபாங்கமாக அநுஷ்டித்தவிடத்தும், தவங்களை நன்றாகப் புரிந்தவிடத்தும், தானங்களைச் செவ்வையாகக் கொடுத்தவிடத்தும் எதனை இவற்றினாலுண்டாகும் புண்ணியப்பயனாகச் சாஸ்திரம் கூறியுள்ளதோ, அந்தப் பயன்ஸமூகத்தையெல்லாம் கடந்து நிற்கிறான் ; மற்றும், ஈச்வரனுடைய உயர்ந்த நிலையைப் பெறுகிறான். ஆதியிலுள்ள - (முதல்)காரணமான : ப்ரஹ்மமாகிய என்றபடி. (உஅ)

ஸ்ரீமத் பகவத்கீதாபாஷ்யத்தில் எட்டாவது அத்தியாயம் முற்றும்.

## நவமோऽத்யாய: ராஜவித்யாராஜகுஹ்யயோக: ॥

அஷ்டமே நாடீத்வாரேண தாரணாயோக: ஸகுண: உக்த:। தஸ்ய ச ப²லம் அக்ந்யர்சிராதிக்ரமேண காலாந்தரே ப்ரஹ்மப்ராப்திலக்ஷணமேவ அநாவ்ருத்திரூபம் நிர்திஷ்டம்। தத்ர "அநேநைவ ப்ரகாரேண மோக்ஷப்ராப்தி: ப²லம் அதி⁴க³ம்யதே, ந அந்யதா²" இதி ததா³ஶங்காவ்யாவ்ருத்த்யர்தா² ஶ்ரீப⁴க³வாநுவாச—

ஶ்ரீப⁴க³வாநுவாச ॥

க. இத³ம் து தே கு³ஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே ।
ஜ்ஞாநம் விஜ்ஞாநஸஹிதம் யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽஶுபா⁴த் ॥

இத³ம் ப்³ரஹ்மஜ்ஞாநம், வக்ஷ்யமாணம், உக்தம் ச பூர்வேஷு அத்⁴யாயேஷு । தத் பு³த்³தௌ⁴ ஸந்நிதீ⁴க்ருத்ய 'இத³ம்' இத்யாஹ । 'து' ஶப்³தோ³ விஶேஷநிர்தா⁴ரணார்த²:—இத³மேவ ஸம்யக்³ஜ்ஞாநம் ஸாக்ஷாத் மோக்ஷப்ராப்திஸாத⁴நம், 'வாஸுதே³வ: ஸர்வமிதி,' 'ஆத்மைவேத³ம் ஸர்வம்,' 'ஏகமேவாத்³விதீயம்' இத்யாதி³ஶ்ருதி-

---

## ஒன்பதாம் அத்தியாயம்: ராஜவித்யாராஜகுஹ்யயோகம்.

### ப்ரஹ்மவித்யையே உயர்ந்த தருமம்.

(ஸுஷும்னை என்னும்) நாடியின்வழியாக (ஹிருதயம், கழுத்து, இருபுருவங்கட்கும் நடுவு முதலியவற்றிலே பிராணனை) நிறுத்துவதோடுகூடிய யோகமானது (வழிகளைஅடைத்தல் முதலிய (அ - கஉ, கங)ஒழுங்கான) முறையுடன் 8 - ஆம் அத்தியாயத்திற் கூறப்பட்டது. அன்றியும், அதன் பயனானது - நெருப்பு ஒளி முதலிய கிரமத்தால் [அவற்றை முறையே கடந்துசென்று]பிற்காலத்தில் ப்ரஹ்மத்தை அடைவதேயாகிய திரும்பிவாராமை என்பதாகக் குறிப்பிட்டுக் காட்டப்பட்டது. இனி, "முத்தியைப் பெறுவதாகிய பயனை இதேவகையினால்தான் அடையக்கூடும்; வேறு வகையினா லன்று" என்ற அச்சங்கையை நீக்கவேண்டுமென்னும் எண்ணத்தோடு பகவான் கூறலாயினர் :

ஸ்ரீபகவான் சொல்லலுற்றார் :

க. நீ எதனை அறிந்து, கெடுதியினின்றும் தப்பிவிடுவாயோ, (அதனை =) அநுபவஅறிவோடுஅமைந்த அறிவாய் அதிரஹஸ்யமாயுள்ள இதனை அஸூயையற்ற உனக்கு யான் இனிக் கூறுவேன்.

இதனை - முந்தின அத்தியாயங்களில் கூறப்பட்டதும், (வரும் அத்தியாயங்களில்) கூறப்படவேணுமான ப்ரஹ்மவித்யையை. அதனைப் புத்திக்கு எதிரேவைத்து "இதனை" என்று கூறுகிறார். "இனி" என்னும்சொல் - (தியானத்தைக்காட்டிலும் ஞானத்திற்கு) மேன்மையைப்பகுத்துக்காட்டுதலென்னும்பொருளின்மேல்நிற்பது. முக்திபெறுதற்கு இதேமெய்யறிவுதான் நேரான ஸாதனம் ; (என்பதை,) "எல்லாம் வாஸுதேவன் என்ற" (எ - கக), "இதெல்லாம் ஆத்மாதான்" (சா - எ - உரு - உ), "இரண்டாவதென்பதில்லாத ஒன்றுதான்" (சா - சு - உ - க) என்பனமுதலான சுருதிஸ்மிருதிகளால் (உணர்க). அன்றியும், வேறு (நேரான ஸாதனம்) இல்லை (என்பதை

𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌭𑍍𑌯𑌃 ; 𑌨𑌾𑌨𑍍𑌯𑌤𑍍, '𑌅𑌥 𑌯𑍇𑌽𑌨𑍍𑌯𑌥𑌾𑌤𑍋 𑌵𑌿𑌦𑍁𑌃 𑌅𑌨𑍍𑌯𑌰𑌾𑌜𑌾𑌨𑌃 𑌤𑍇 𑌕𑍍𑌷𑌯𑍍𑌯𑌲𑍋𑌕𑌾 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 । 𑌤𑍇 𑌤𑍁𑌭𑍍𑌯𑌂 𑌗𑍁𑌹𑍍𑌯𑌤𑌮𑌂 𑌗𑍋𑌪𑍍𑌯𑌤𑌮𑌂 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌕𑌥𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌅𑌨𑌸𑍂𑌯𑌵𑍇 𑌅𑌸𑍂𑌯𑌾𑌰𑌹𑌿𑌤𑌾𑌯 । 𑌕𑌿𑌂 𑌤𑌤𑍍? 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍—𑌕𑌿𑌂𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌮𑍍?—𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌹𑌿𑌤𑌮𑍍 𑌅𑌨𑍁𑌭𑌵𑌯𑍁𑌕𑍍𑌤𑌂, 𑌯𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 𑌅𑌶𑍁𑌭𑌾𑌤𑍍 𑌸𑌂𑌸𑌾𑌰𑌬𑌨𑍍𑌧𑌨𑌾𑌤𑍍 ॥ ௧ ॥

𑌤𑌚𑍍𑌚—

௨. 𑌰𑌾𑌜𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌰𑌾𑌜𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌮𑌿𑌦𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ।
𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾𑌵𑌗𑌮𑌂 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌸𑍁𑌸𑍁𑌖𑌂 𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥

𑌰𑌾𑌜𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌰𑌾𑌜𑌾, 𑌦𑍀𑌪𑍍𑌤𑍍𑌯𑌤𑌿𑌶𑌯𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍; 𑌦𑍀𑌪𑍍𑌯𑌤𑍇 𑌹𑌿 𑌇𑌯𑌮𑍍 𑌅𑌤𑌿𑌶𑌯𑍇𑌨 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 । 𑌰𑌾𑌜𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 𑌤𑌥𑌾 𑌗𑍁𑌹𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌰𑌾𑌜𑌾 । 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂 𑌪𑌾𑌵𑌨𑌮𑍍 𑌇𑌦𑌮𑍍 𑌉𑌤𑍍𑌤𑌮𑌂, 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌪𑌾𑌵𑌨𑌾𑌨𑌾𑌂 𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 𑌇𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 𑌉𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌟𑌤𑌮𑌮𑍍 । 𑌅𑌨𑍇𑌕𑌜𑌨𑍍𑌮𑌸𑌹𑌸𑍍𑌰𑌸𑌞𑍍𑌚𑌿𑌤𑌮𑌪𑌿 𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑌾𑌦𑌿 𑌸𑌮𑍂𑌲𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍍𑌷𑌣𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌤𑍍 𑌭𑌸𑍍𑌮𑍀𑌕𑌰𑍋𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑌤𑌃 𑌕𑌿𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌪𑌾𑌵𑌨𑌤𑍍𑌵𑌂 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 । 𑌕𑌿𑌞𑍍𑌚—𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾𑌵𑌗𑌮𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑍇𑌣 𑌸𑍁𑌖𑌾𑌦𑍇𑌰𑌿𑌵 𑌅𑌵𑌗𑌮𑍋 𑌯𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾𑌵𑌗𑌮𑌮𑍍 । 𑌅𑌨𑍇𑌕𑌗𑍁𑌣𑌵𑌤𑍋𑌽𑌪𑌿 𑌧𑌰𑍍𑌮𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌤𑍍𑌵𑌂

---

யும்,) "இனி, எந்த மற்றைய அரசர்கள் அ(த்வைதத்)தைக்காட்டிலும் வேறுவிதமாக அறிகிறார்களோ, அவர்கள், அழியும் லோகங்களையுடையவராக ஆகிறார்கள்" (சா - எ - உரு - உ) என்பதுமுதலான சுருதிகளால் (அறிக). அஸூயையில்லாத உனக்கு அதிரஹஸ்யமானதைக் கூறுவேன். (அஸூயை இன்னதென்பதை 109-ஆம் பக்கத்தில் காண்க.)—அது யாது?—ஞானமென்பது.—எப்படிப்பட்டது?—அநுபவத்தைக்கூடியது. நீ அந்த ஞானத்தை அடைந்து ஸம்ஸாரக்கட்டினின்றும் விடப்படுவாய். (க)

அன்றியும், அது

௨. வித்தைகளுக்கு வேந்தன், ரஹஸ்யங்களுக்கு அரசன்; இது மேன்மையாகப் பரிசுத்தப்படுத்துவது, பிரத்தியக்ஷமா யுணர்தலையுடையது [பிரத்தியக்ஷமாய் அறியத் தக்கது], தருமத்தின் நீங்காதது, செய்தற்கு மிக்க எளிதானது; அழிவற்றது.

(அது) வித்யைகளுக்கு ராஜா[சிறந்தது]; ஒளி மிகுதியையுடையதாதலின். வித்யைகளெல்லாவற்றினும் இந்த ப்ரஹ்மவித்யையானது சிறப்பாக ஒளிர்கின்றதன்றோ [மற்றை வித்யையையுடைவரைக்காட்டிலும் ப்ரஹ்மவித்யையையுடையவரிடத்து மிக்க வணக்கமான மதிப்பு இருக்கின்றது—ஆ.]. அவ்வாறே, (அது) ரஹஸ்யங்கட்கு ராஜா[சிறந்தது. அது பலகோடி பிறவிகளிற் செய்த நல்வினைகளால் ஸாதிக்கத்தக்கதாதலின், அனேகருக்குத் தெரியாது அதிரஹஸ்யமாயிருப்பதென்க]. இந்தப்ரஹ்மாநுபவஞானம் சுத்திகரமான பொருள்களெல்லாவற்றினும் மேலான சுத்திகரம். தருமம் அதருமம் முதலிய கர்மமானது பலஜந்மஆயிரங்களிலே சேர்க்கப்பெற்றதாயினும், (ப்ரஹ்மவித்யை) அதனை வேரோடு கணப்பொழுதுமாத்திரத்தில் நீறாக்கிவிடுகின்றது; எனவே, அதனுடைய பரிசுத்தப்படுத்துந்தன்மையைக்கூறவும் வேண்டுமோ? மேலும், இன்பம்முதலியவற்றின் உணர்ச்சிபோல, (அது) பிரத்தியக்ஷமாய் அறியத்தக்கது. பல நலங்களையுடைதற்கும் தருமத்தோடு மாறுப்பட்டதன்மையானது

𑌦𑍃𑌷𑍍𑌟𑌂, 𑌨 𑌤𑌥𑌾 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌧𑌰𑍍𑌮𑌵𑌿𑌰𑍋𑌧𑌿, 𑌕𑌿𑌂𑌤𑍁 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌧𑌰𑍍𑌮𑌾𑌦𑌨𑌪𑍇𑌤𑌮𑍍 ।
𑌏𑌵𑌮𑌪𑌿, 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌦𑍁𑌃𑌸𑌂𑌪𑌾𑌦𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑌿𑌤𑍍𑌯𑌤 𑌆𑌹— 𑌸𑍁𑌸𑍁𑌖𑌂 𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑍍, 𑌯𑌥𑌾
𑌰𑌤𑍍𑌨𑌵𑌿𑌵𑍇𑌕𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 । 𑌤𑌤𑍍𑌰 𑌅𑌲𑍍𑌪𑌾𑌯𑌾𑌸𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌸𑍁𑌖𑌸𑌂𑌪𑌾𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑍍
𑌅𑌲𑍍𑌪𑌫𑌲𑌤𑍍𑌵𑌂, 𑌦𑍁𑌷𑍍𑌕𑌰𑌾𑌣𑌾𑌂 𑌚 𑌮𑌹𑌾𑌫𑌲𑌤𑍍𑌵𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌮𑌿𑌤𑌿,𑌇𑌦𑌂 𑌤𑍁 𑌸𑍁𑌖𑌸𑌂𑌪𑌾𑌦𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍
𑌫𑌲𑌕𑍍𑌷𑌯𑌾𑌤𑍍 𑌵𑍍𑌯𑍇𑌤𑍀𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇 𑌆𑌹— 𑌅𑌵𑍍𑌯𑌯𑌮𑌿𑌤𑌿 । 𑌨𑌾𑌸𑍍𑌯 𑌫𑌲𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌵𑌤𑍍
𑌵𑍍𑌯𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑍀𑌤𑍍𑌯𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 । 𑌅𑌤𑌃 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑍇𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 ॥ ௨ ॥

𑌯𑍇 𑌪𑍁𑌨𑌃—

௩. 𑌅𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌾𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌯 𑌪𑌰𑌂𑌤𑌪 ।
𑌅𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑌰𑍍𑌤𑍍𑌮𑌨𑌿 ॥

𑌅𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌾𑌃 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌿𑌰𑌹𑌿𑌤𑌾𑌃 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌅𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇 𑌤𑌤𑍍𑌫𑌲𑍇 𑌚 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌕𑌾𑌃 𑌪𑌾𑌪𑌕𑌾𑌰𑌿𑌣𑌃, 𑌅𑌸𑍁𑌰𑌾𑌣𑌾𑌮𑍁𑌪𑌨𑌿𑌷𑌦𑌂 𑌦𑍇𑌹𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍇𑌵 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌨𑍍𑌨𑌾𑌃, 𑌅𑌸𑍁𑌤𑍃𑌪𑌃 𑌪𑌾𑌪𑌾𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌃 𑌪𑌰𑌂𑌤𑌪 𑌅𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌮𑌾𑌂 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍—𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍌 𑌨𑍈𑌵 𑌆𑌶𑌙𑍍𑌕𑌾 𑌇𑌤𑌿 𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌮𑌾𑌰𑍍𑌗𑌭𑍇𑌦𑌭𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑌪𑍍𑌯𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃—𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌨

---

காணப்படுகின்றது. (ஆனால்,) ஆத்மஅறிவு அவ்வாறு தருமத்தோடு மாறுபடுவதில்லை; மற்று, தருமத்தின் நீங்காதது[நிஷ்காம கர்மத்தின் பயனாய் நிற்பது.] (அது) இவ்வாறிருந்தாலும், கஷ்டத்தால் ஸம்பாதிக்கத்தக்கதாக இருக்கலாம்; ஆதலால் கூறுகிறார் "ரத்நங்களைப் பகுத்தறியும் அநுபவஅறிவுபோல, எளிதாய்த் தேடிக் கொள்ளத்தக்கது" (என்று). இனி, சொற்பப் பிரயாஸமுள்ளவையாய் எளிதே செய்யப்படும் கர்மங்கட்குப் பயன் சிறிதென்றும், கஷ்டத்தால் செய்யப்படும்(கர்மங்கட்குப்) பயன் பெரிதென்றும் காணப்படுகின்றன. ஆகவே, "இது எளிதேஸம்பாதிக்கத்தக்கதாதலால், பயன் (அநுபவித்து) கழிந்துபோகுமளவிலே (தானும்)அழிந்து போகின்றது" என்றமைத்தவிடத்து "அழிவற்றது" எனக் கூறுகிறார். கர்மத்திற்குப்போல, இதற்குப் பயனால் அழிவில்லை; எனவே, அழிவற்றதென்க. ஆதலால், ஆத்மஞானத்தை நாடவேண்டும். (உ)

ஆனால், எவர்கள்

௩. பகைவரைத் தவிக்கச் செய்வோனே! இந்தத் தருமத்தை நம்பாத மனிதர்களோ, (அவர்கள்) என்னை அடையாது, சாதலோடமைந்த ஸம்ஸாரவழியிலே நிலைத்திருக்கிறார்கள்.

இந்த ஆத்மஞானமென்னும் தருமத்தின் ஸ்வரூபத்திலும் [அதனது உண்மையிலும்], அதனுடைய பயனிலும் நம்பிக்கையில்லாத நாஸ்திகராய்த், தீயன செய்பவராய், அஸுரரது கொள்கையை, (அதாவது) "தேகமே ஆத்மா" என்னும் உணர்ச்சியைக்கொண்டவராய்ப் பேராசையுள்ள பாபஜனங்கள் பரமேச்வரனை என்னை அடையாது உறுதியாக நிற்கிறார்கள்.—எதிலே?—சாதலோடமைந்த ஸம்ஸாரத்தின் வழியிலே. அதன் வழியாவது - நரகத்தையும், விலங்குமுதலான (பிறவிகளையும்) அடைதற்கான மார்க்கம். (அவர்கள்) அதிலேயே இருக்கிறார்கள் என்பதுபொருள். "என்னை

வர்த்தந்தே—க்வ?—ம்ருத்யுஸம்ஸாரவர்த்மநி ம்ருத்யுயுக்த: ஸம்ஸார: ம்ருத்யுஸம்ஸார:, தஸ்ய வர்த்ம நரகதிர்யகாதிப்ராப்திமார்க:, தஸ்மிந்நேவ வர்த்தந்தே இத்யர்த: ॥ ௩ ॥

ஸ்துத்வா அர்ஜுநம் அபிமுகீகரணாய ஆஹ—

௪. மயா ததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்தமூர்த்திநா ।
மத்ஸ்தாநி ஸர்வபூதாநி ந சாஹம் தேஷ்வவஸ்தித: ॥

மயா மம ய: பரோ பாவ: தேந ததம் வ்யாப்தம் ஸர்வம் இதம் ஜகத் அவ்யக்தமூர்த்திநா ந வ்யக்தா மூர்த்தி: ஸ்வரூபம் யஸ்ய மம ஸ: அஹம் அவ்யக்தமூர்த்தி: தேந மயா அவ்யக்தமூர்த்திநா, கரணாகோசரஸ்வரூபேண இத்யர்த:। தஸ்மிந் மயி அவ்யக்தமூர்த்தௌ ஸ்திதாநி மத்ஸ்தாநி ஸர்வபூதாநி ப்ரஹ்மாதீநி ஸ்தம்பபர்யந்தாநி । ந ஹி நிராத்மகம் கிஞ்சித் பூதம் வ்யவஹாராய அவகல்பதே । அத: மத்ஸ்தாநி மயா ஆத்மநா ஆத்மவத்த்வேந ஸ்திதாநி, அத: மயி ஸ்திதாநி இதி உச்யந்தே । தேஷாம் பூதாநாம் அஹமேவ ஆத்மா இத்யத: தேஷு ஸ்தித: இதி மூடபுத்தீநாம் அவபாஸதே, அத: ப்ரவீமி—ந ச அஹம் தேஷு பூதேஷு

---

அடையாது" (என்பதற்கு) - "என்னை அடையும்விஷயத்திலே சங்கை இல்லையே இல்லை. [பகவானை அடையவேண்டும் என்னும் எண்ணமே அவர்கட்கு இல்லாமையின், பகவானை அடையமாட்டார்களென்பது நிச்சயம்] ஆதலால், என்னை அடைதற்கான வழிக்கு ஒருவகையான ஸாதநமாகிய கேவல பக்தியையுங்கூட அடையாமல்" எனப் பொருள் (கொள்க). (௩)

பொருள்களெல்லாம் பகவானிடத்துத் தங்குகின்றன.

(ஞானத்தைப்)புகழ்வதனால் அர்ஜுனனை எதிர்முகமாக்கி [அதனைக் கேட்பதிலே அவனுக்கு மனவூக்கத்தைப் பிறப்பித்து], (பகவான்) கூறுகிறார் :

௪. உருவம் வெளிப்படையாக இல்லாத என்னால் இந்த ஜகத்தெல்லாம் வியாபிக்கப்பட்டுளது. எல்லாப்பொருள்களும் என்னிடத்து நிலைகொள்ளுகின்றன ; மற்றும், யான் அவற்றினிடத்து நிலைகொள்ளுகிறேன் இல்லை.

எனது மேலான நிலை எதுவோ அதனால், இந்திரியங்கட்குப் புலப்படாத உருவமுள்ள என்னால் [ஸச்சிதாநந்த ப்ரஹ்மவடிவத்தினால்] இந்த ஜகத்தெல்லாம் வியாபிக்கப்பட்டுளது. ப்ரஹ்மா முதலாகப் புல்வரையிலுமுள்ள எல்லாப்பொருள்களும், (அவ்வடிவம்) வெளிப்படையாகஇல்லாத அந்த என்னிடத்து நிலைபெறுகின்றன : ஆத்மாஇல்லாத எப்பொருளையும் வியவகரிக்கமுடியாதன்றோ. ஆதலால்,(அவை) என்னிடத்து நிலைபெறுகின்றன : ஆத்மாவாகிய என்னால் ஆத்மாவையுடையனவாக நிலைப்படுகின்றன[எல்லாவற்றினுள்ளும் உள்ளேயுள்ள உண்மையாகிய ஆத்மாவான என்னால் அந்தந்தப் பொருள்கள் அந்தந்தப் பொருள்களாகத் தோற்றுகின்றன]. ஆகவே, பூதங்கள் என்னிடத்து நிலைபெறுகின்றவையாகக் கூறப்படுகின்றன. அப்பொருள்கட்கு நானேதான் ஆத்மா ; எனவே, புத்திமயங்கியவர்கட்கு "(நான்) அவற்றுள் நிலைபெறுகின்றேன்" எனத்தோன்றுகின்றது. ஆதலால் கூறுகிறேன் : உருவமுடையபொருளுக்கு (வேறொன்றோடு சேர்க்கையிருப்பது)போல, (எனக்கு எத

𑌅𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃, 𑌮𑍂𑌰𑍍𑌤𑌵𑌤𑍍 𑌸𑌂𑌶𑍍𑌲𑍇𑌷𑌾𑌭𑌾𑌵𑍇𑌨; 𑌆𑌕𑌾𑌶𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌅𑌨𑍍𑌤𑌰𑌤𑌮𑍋 𑌹𑌿 𑌅𑌹𑌮𑍍 । 𑌨 𑌹𑌿 𑌅𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌿 𑌵𑌸𑍍𑌤𑍁 𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍 𑌆𑌧𑍇𑌯𑌭𑌾𑌵𑍇𑌨 𑌅𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌭𑌵𑌤𑌿 ॥ ௪ ॥

𑌅𑌤 𑌏𑌵 𑌅𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌮𑌮 —

௫. 𑌨 𑌚 𑌮𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌯𑍋𑌗𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ।
𑌭𑍂𑌤𑌭𑍃𑌨𑍍𑌨 𑌚 𑌭𑍂𑌤𑌸𑍍𑌥𑍋 𑌮𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌭𑍂𑌤𑌭𑌾𑌵𑌨𑌃 ॥

𑌨 𑌚 𑌮𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑍀𑌨𑌿 । 𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌯𑍋𑌗𑌂 𑌯𑍁𑌕𑍍𑌤𑌿𑌂 𑌘𑌟𑌨𑌂 𑌮𑍇 𑌐𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 𑌈𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌇𑌮𑌮𑍍 𑌐𑌶𑍍𑌵𑌰𑌂 𑌯𑍋𑌗𑌮𑍍, 𑌆𑌤𑍍𑌮𑌨𑍋 𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌮𑍍 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌤𑌥𑌾 𑌚 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌃 𑌅𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌸𑌙𑍍𑌗𑌤𑌾𑌂 𑌦𑌰𑍍𑌶𑌯𑌤𑌿 — '𑌅𑌸𑌙𑍍𑌗𑍋 𑌨 𑌹𑌿 𑌸𑌜𑍍𑌜𑌤𑍇' ॥

𑌇𑌦𑌂 𑌚 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌂 𑌪𑌶𑍍𑌯 — 𑌭𑍂𑌤𑌭𑍃𑌤𑍍, 𑌅𑌸𑌙𑍍𑌗𑍋𑌽𑌪𑌿 𑌸𑌨𑍍 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑌿; 𑌨 𑌚 𑌭𑍂𑌤𑌸𑍍𑌥𑌃, 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑍇𑌨 𑌨𑍍𑌯𑌾𑌯𑍇𑌨 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌭𑍂𑌤𑌸𑍍𑌥𑌤𑍍𑌵𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 । 𑌕𑌥𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 "𑌅𑌸𑍌 𑌮𑌮 𑌆𑌤𑍍𑌮𑌾" 𑌇𑌤𑌿? 𑌵𑌿𑌭𑌜𑍍𑌯 𑌦𑍇𑌹𑌾𑌦𑌿𑌸𑌂𑌘𑌾𑌤𑌂, 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌮𑍍 𑌅𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑍍𑌯, 𑌲𑍋𑌕𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑍍 𑌅𑌨𑍁𑌸𑌰𑌨𑍍 𑌵𑍍𑌯𑌪𑌦𑌿𑌶𑌤𑌿 '𑌮𑌮 𑌆𑌤𑍍𑌮𑌾' 𑌇𑌤𑌿, 𑌨 𑌪𑍁𑌨𑌃 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌅𑌨𑍍𑌯𑌃 𑌇𑌤𑌿 𑌲𑍋𑌕𑌵𑌤𑍍 𑌅𑌜𑌾𑌨𑌨𑍍 । 𑌤𑌥𑌾 𑌭𑍂𑌤𑌭𑌾𑌵𑌨𑌃 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌭𑌾𑌵𑌯𑌤𑌿 𑌉𑌦𑍍𑌭𑌾𑌵𑌯𑌤𑌿 𑌵𑌰𑍍𑌧𑌯𑌤𑌿 𑌇𑌤𑌿 𑌵𑌾 𑌭𑍂𑌤𑌭𑌾𑌵𑌨𑌃 ॥ ௫ ॥

---

ளோடும்) சேர்க்கையின்மையால், யான் அப்பொருள்களிடத்து நிலைபெறுகிறேனில்லை. நிச்சயமாக நான் ஆகாசத்திற்கும் உள்ளே உள்ளவன். (ஒருபொருளோடும்) கலத்தலில்லாத பொருள் ஓரிடத்தும் ஆதேயமாக [ஒன்றிலே இருப்பதாக] நிலைகொள்ளமாட்டாதன்றோ. (௪)

ஆகவே, நான் (ஒருபொருளோடும்) கலத்தலின்மையால்,

௫. பொருள்கள் என்னிடத்து நிலைகொள்ளவேஇல்லை, ஈச்வரனுக்குரியதாகிய எனது யோகத்தைப் பார். என்னுடைய ஆத்மா பொருள்களைத் தாங்குவது : பொருள்களை உண்டாக்குவது : ஆனால், பொருள்களிடத்து நிலைபெறுவதில்லை.

ப்ரஹ்மாமுதலான பொருள்கள் என்னிடத்து நிலைபெறுவதில்லை, என்னுடைய திவ்யமான யோகத்தை = அமைப்பை, அதாவது, ஆத்மாவினுடைய உள்ளபடியான தன்மையைப் பார். அவ்வாறே, சுருதியானது, (ஆத்மாவுக்கு ஒருபொருளோடும்) கலத்தலில்லாமையினால் பற்றுதலில்லாமையைக் காட்டுகின்றது :— "பற்றுதலில்லாத (ஆத்மா ஒருபொருளிலும்) பற்றுக்கொள்வதில்லை" (பி - ௩ - ௯ - ௨௬).

இன்னும், இந்த வேறொரு ஆச்சரியத்தைப் பார் : (என்னுடைய ஆத்மாவானது ஒருபொருளோடும்) கலத்தலில்லாததாயினும், பொருள்களைத் தாங்குகின்றது. ஆனால், பொருள்களிடத்து நிலைப்படுவதில்லை ; பொருள்களிடத்து நிலைப்படுதல் பொருந்தாதென்று மேற்கூறிய நியாயத்தினால் எடுத்துக்காட்டப்பட்டமையின்.— மற்று, "இது என்னுடைய ஆத்மா" எனக் கூறுவது எப்படி ?—(விடை கூறுவோம் : உண்மையான ஆத்மாவினின்றும்) தேகம்முதலியவற்றின் சேர்க்கையைப் பிரித்து, அதிலே "நான்" என்பதை வைத்து, (இவ்வாறு) ஜனங்களுடைய நினைப்பைப் பின்பற்றி, (பகவான்) "என்னுடைய ஆத்மா" எனச் சொல்லிக்கொள்கிறாரேயன்றி "ஆத்மா தன்னைக்காட்டிலும் வேறு" என்று ஜனங்கள் (அறிவது)போல, அறிகிறவரல்லர். அன்றியும், பொருள்களை வளரச்செய்வதும், உண்டாக்குவதும் (எனது ஆத்மாதான் என்க). (௫)

𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑍇𑌨 𑌶𑍍𑌲𑍋𑌕𑌦𑍍𑌵𑌯𑍇𑌨 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍 𑌅𑌰𑍍𑌥𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌤𑍇𑌨 𑌉𑌪𑌪𑌾𑌦𑌯𑌨𑍍𑌨𑌾𑌹—

சு. 𑌯𑌥𑌾𑌽𑌽𑌕𑌾𑌶𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑌾𑌯𑍁𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑌗𑍋 𑌮𑌹𑌾𑌨𑍍 ।
𑌤𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌮𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑍀𑌤𑍍𑌯𑍁𑌪𑌧𑌾𑌰𑌯 ॥

𑌯𑌥𑌾 𑌲𑍋𑌕𑍇 𑌆𑌕𑌾𑌶𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 𑌆𑌕𑌾𑌶𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌸𑌦𑌾 𑌵𑌾𑌯𑍁𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌗𑌚𑍍𑌛𑌤𑍀𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑌗𑌃 𑌮𑌹𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌮𑌾𑌣𑌤𑌃, 𑌤𑌥𑌾 𑌆𑌕𑌾𑌶𑌵𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑍇 𑌮𑌯𑌿 𑌅𑌸𑌂𑌶𑍍𑌲𑍇𑌷𑍇𑌣𑍈𑌵 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑌿 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑍍 𑌉𑌪𑌧𑌾𑌰𑌯 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌹𑌿 ॥சு॥

𑌏𑌵𑌂, 𑌵𑌾𑌯𑍁𑌃 𑌆𑌕𑌾𑌶𑍇 𑌇𑌵, 𑌮𑌯𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌕𑌾𑌲𑍇; 𑌤𑌾𑌨𑌿—

எ. 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌮𑌿𑌕𑌾𑌮𑍍 ।
𑌕𑌲𑍍𑌪𑌕𑍍𑌷𑌯𑍇 𑌪𑍁𑌨𑌸𑍍𑌤𑌾𑌨𑌿 𑌕𑌲𑍍𑌪𑌾𑌦𑍌 𑌵𑌿𑌸𑍃𑌜𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥

𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌤𑍍𑌰𑌿𑌗𑍁𑌣𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾𑌂 𑌅𑌪𑌰𑌾𑌂 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌮𑌿𑌕𑌾𑌂 𑌮𑌦𑍀𑌯𑌾𑌂 𑌕𑌲𑍍𑌪𑌕𑍍𑌷𑌯𑍇 𑌪𑍍𑌰𑌲𑌯𑌕𑌾𑌲𑍇 । 𑌪𑍁𑌨𑌃 𑌭𑍂𑌯𑌃 𑌤𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌉𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌕𑌾𑌲𑍇 𑌕𑌲𑍍𑌪𑌾𑌦𑍌 𑌵𑌿𑌸𑍃𑌜𑌾𑌮𑌿 𑌉𑌤𑍍𑌪𑌾𑌦𑌯𑌾𑌮𑌿 𑌅𑌹𑌮𑍍 ॥ எ ॥

𑌏𑌵𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌮𑍍—

அ. 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌾𑌮𑌵𑌷𑍍𑌟𑌭𑍍𑌯 𑌵𑌿𑌸𑍃𑌜𑌾𑌮𑌿 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍁𑌨𑌃 ।
𑌭𑍂𑌤𑌗𑍍𑌰𑌾𑌮𑌮𑌿𑌮𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌮𑌵𑌶𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌰𑍍𑌵𑌶𑌾𑌤𑍍 ॥

---

கீழ்க்கூறிய இரண்டு சுலோகங்களால் உபதேசிக்கப்பட்ட விஷயத்தை திருஷ்டாந்தத்தால் உதாகரித்துக் கூறுகிறுர் :

சு. எங்கும் செல்லுகின்ற பெரிய காற்ருனது எப்பொழுதும் ஆகாசத்தில் எப்படித் தங்கியிருக்கின்றதோ, அப்படி எல்லாப்பொருள்களும் என்னிடத்தில் தங்கியிருக்கின்றன என்று அறிந்துகொள்.

எங்கும் செல்வதாயும் அளவினுல் பெரியதாயுமுள்ள காற்ருனது எப்பொழுதும் ஆகாசத்தில் தங்கியுள்ளது (என்பதை நாம்) உலகத்தில் காண்கிருேம். அப்படியே, ஸகலப்பொருள்களும் ஆகாசம்போல எங்குமுள்ள என்னிடத்தில், கலத்தலில்லாமலே தங்கியுள்ளன என இவ்வாருகத் தெரிந்துகொள்வாய். (சு)

பகவான் ஸகலப்பொருள்கட்கும் முதலும், முடிவுமாய் உள்ளவர்.

இவ்வாறு, காற்று ஆகாசத்தில்போல, பொருள்களனைத்தும், (பிரபஞ்சம்) உள்ளகாலத்தில் என்னிடத்துத் தங்கியுள்ளன. அந்தப்

எ. பொருள்களெல்லாம், கௌந்தேய ! கல்பத்தின் முடிவிலே எனது பிரகிருதியை அடைகின்றன. (அடுத்த) கல்பத்தின் தொடக்கத்தில் அவற்றை நான் மறுபடியும் படைக்கின்றேன்.

பிரகிருதியை - முக்குணவடிவமான தாழ்ந்த பிரகிருதியை. கல்பத்தின் முடிவிலே - பிரளய காலத்திலே [எல்லாம் ஒடுங்கும்காலத்திலே]. கல்பத்தின் தொடக்கத்தில் - உத்பத்திகாலத்தில் [எல்லாம் வெளிப்படும்காலத்தில்]. படைக்கின்றேன் - உண்டாக்குகிறேன் [வேறுவேருக வெளிப்படுத்துகிறேன்]. (எ)

இவ்வாறு, அவித்யையாகிய

அ. பிரகிருதியைச் சார்ந்து(கொண்ட நான்) பிரகிருதியின் வலிமையினுல் அவசமாயுள்ள இப்பொருள்வர்க்கத்தையெல்லாம் மீண்டும்மீண்டும் சிருஷ்டிக்கின்றேன்,

प्रकृतिं स्वामवष्टभ्य वशीकृत्य विसृजामि पुनः पुनः प्रकृतितो जातं भूतग्राममिमं वर्तमानं कृत्स्नं समस्तमवशमस्वतन्त्रम् अविद्यादिदोषैः परवशीकृतम्, प्रकृतेः वशात् स्वभाववशात् ॥ ८ ॥

तर्हि तस्य ते परमेश्वरस्य भूतग्राममिमं विषमं विदधतः तन्निमित्ताभ्यां धर्माधर्माभ्यां सम्बन्धः स्यादिति? इदमाह भगवान्—

௯. न च मां तानि कर्माणि निबध्नन्ति धनञ्जय ।
उदासीनवदासीनमसक्तं तेषु कर्मसु ॥

न च मामीश्वरं तानि भूतग्रामस्य विषमसृष्टिनिमित्तानि कर्माणि निबध्नन्ति धनञ्जय । तत्र कर्मणामसम्बन्धित्वे कारणमाह—उदासीनवदासीनं, यथा उदासीनः उपेक्षकः कश्चित् तद्वत् आसीनम्, आत्मनोऽविक्रियत्वात्, असक्तं फलासङ्गरहितम्, अभिमानवर्जितम् "अहं करोमि" इति तेषु कर्मसु । अतः अन्यस्यापि कर्तृत्वाभिमानाभावः फलासङ्गाभावश्च असम्बन्धकारणम्, अन्यथा कर्मभिर्बध्यते मूढः कोशकारवत् इत्यभिप्रायः ॥ ௯ ॥

---

பிரகிருதியினின்றும் பிறந்து, ஸ்வபாவவசத்தால் சுதந்திரமற்று, அவித்யை முதலிய குற்றங்களால் பரவசப்பட்டு, (நமக்கு எதிரே) உள்ள இப்பொருள்வர்க்கத்தையெல்லாம், யான் எனது மாயையைக்கொண்டு மீண்டும்மீண்டும் படைக்கின்றேன்.

பகவான் தமது கர்மங்களால் கட்டப்படுவதில்லை.

அப்பொழுது இப்பொருள்வர்க்கத்தை ஏற்றத்தாழ்ச்சியாகச் சிருஷ்டிக்கின்ற அந்தப் பரமேச்வரனான உங்களுக்கு அதனால் [ஏற்றத்தாழ்ச்சியான சிருஷ்டியினால்] வரும் தர்மம் அதருமம் என்றவற்றோடு ஸம்பந்தமுண்டாகும் [அவற்றிற்கு உட்படுவீர்] ?—என்னும் (சங்கைக்குப்) பகவான் இதனை அருளிச்செய்கிறார் :

௯. **தநஞ்ஜய! இனி அந்தக் கர்மங்கள்,—உதாஸீநன்போல இருப்பவனாய் அக்கர்மங்களின்மேல் பற்றில்லாத என்னைக் கட்டுப்படுத்தமாட்டா.**

பொருள்வர்க்கத்தை ஏற்றத்தாழ்ச்சியாகப் படைப்பதனால் உண்டாகின்ற அக்கர்மங்கள் ஈச்வரனான என்னைக் கட்டுப்படுத்துவதில்லை.—அவரைக் கர்மங்கள் தொடாா என்பதற்குக் காரணம் கூறுகிறார் :—உதாஸீநனான [ஒன்றிலும் ஸம்பந்தப்படாத] ஒருவன் உபேக்ஷையுள்ளவனாய் இருப்பதுபோல, இருக்கின்றேன் ; ஆத்மா நிர்விகாரியாதலின் : பயனிலே பற்றில்லாதவனாகவும், (அதாவது, சிருஷ்டி முதலான) அக்கர்மங்களிலே "யான் செய்கிறேன்" என்னும் அபிமானமில்லாதவனாகவும் (இருக்கின்றேன்). ஆகவே, கர்த்தா [நான் செய்பவன்] என்னும் எண்ணமில்லாமையும், பயனிலே பற்றுதலில்லாமையும் - வேறொருவனையுங்கூட(க் கர்மங்கள்) தொடாரத தற்குக் காரணமாம் என்க. இல்லாவிடில், பட்டுப்பூச்சி(யானது பட்டுநூல்களால் பிணித்துக் கட்டப்படுவதுபோல, மயங்கியவன் கர்மங்களால் பிணித்துக் கட்டப் படுகிறான் என்பது கருத்து. (௯)

தத்ர 'ஹ-ுதகுஜாஆ உஃம் விஸ்ரஜாமி' 'உதாஸீநவஜ் சூஸீநு' இதி வ விரு-ஸ்ழ உவ்யதெ; உதி தத்பரிஹாராய்யூ சூஹ—

கௐ. ஙயாடயூகெஷண ஷ்கூகூதிஃ ஸூயதெ ஸவராவரழ ।
ஹெத-நாட்நெந கௗ்ஜெய ஜமதிவரிவத-ஷெ ॥

ஙயா சுயூகெஷண ஸவயூதெர தூகூடீ ஆதூவுரு-ுவெண சுவிகூயாதூநா சுயூகெஷண ஙயா, ஊஊ ஊயா திூந-ணாதூிகா சுவிதூஊாகூணா ஷ்கூகூதிஃ ஸூயதெ உதூாடயதி ஸவராவரம் ஜமக் । தயா வ ஃாதூ வண்பூ:—

"வஎகொ செவஸ்ஸவயூஹ-ுதெஷ- ம-ுவஃ
ஸவயூவ்யாவீ ஸவயூஹ-ுதாணராதூநா ।
கூமூயயூகூஸவயூஹ-ுதாயிவாஸஃ
ஸாக்ஷீ வெதா கெவமெர நிமயூ-ணஷ ॥" ஐதி ॥

ஸாக்ஷிஊாதெூண ஹெத-நா நிமித்தேந சுநெந சுயூகெகூந கௗ்ஜெய ஜமக் ஸவராவரம் வ்யக்தாவ்யக்தாதூகம் விவரிவத-ஷெ ஸவயூா-வஸ்ரஸ- । தூஸிகூஷுகுாவதீநிமித்தா ஹி ஜமதஃ ஸவயூா ஷ்வயூதீஃ 'சுஹமிடம் ஹொக்ஷெூ,' 'வஸ்யாமி உடழ,' 'ஸ்ரணொமி உடழ,' 'ஸ-வஙே-ஹவாமி,' 'ட-ஃவ- ஊநே-ஹவாமி,' 'தடயூமிடம் கூரிஷெூ,' 'உடம் ஜூாஸ்யாமி' உத்யாடூா சுவமதி-

---

அங்கே [முந்தினசுலோகங்களில்] "இப்பொருள் வர்க்கத்தைப் படைக்கின்றேன்" (௯-எ) எனவும், "உதாஸீநன்போல இருப்பவனாய்" (௯-௯) எனவும் மாறுகக் கூறப்படுகின்றது என்று, அதனை நீக்கும்பொருட்டு அருளிச்செய்கிறார்:

௧௦. பிரகிருதியானது கண்காணியான என்னால் ஜங்கமத்தையும் ஸ்தாவரத்தையும் பிறப்பிக்கின்றது. கௌந்தேய! இக்காரணத்தால் உலகம் மாறிமாறி வருகின்றது.

முக்குணவடிவமான அஜ்ஞானமாகிய என்மாயையானது,—எவ்விடத்தும் பார்வைமாத்திர வடிவமாய், அவிகாரியான ஆத்மாவாய், கண்காணியாயுள்ள [மேல்பார்வையுடைய] என்னால் ஜகத்தை ஸ்தாவரஜங்கமத்தோடு உண்டாக்குகின்றது. அவ்வாறே, "(உண்மைப்பொருள்) ஒன்று: (ஒளியினால்) பிரகாசிப்பது: எல்லாப்பொருள்களுள்ளும் மறைந்துள்ளது: எங்கும் வியாபித்திருப்பது: எல்லாப்பொருள்கட்கும் உள்ளேயுள்ள ஆத்மா: கர்மங்கட்குக் கண்காணி: பொருள்களனைத்திற்கும் வாழுமிடம்: (ஸகலத்திற்கும்) ஸாக்ஷி: அறிவாயுள்ளது: தனியானது: நிர்க்குணமுமானது" (ச்வே-௬-௧௧) என்று மந்திரவர்ணம் (கூறுகின்றது).

வெளிப்பட்டதும் வெளிப்படாததுமாகிய [ஸ்தூலமும், ஸூக்ஷ்மமுமான] பிரபஞ்சமானது, "(நான்) ஸாக்ஷிமாத்திரமான கண்காணியாயிருக்கின்றேன்" என்ற இக்காரணத்தால் (படைத்தல், காத்தல் முதலிய) எல்லாநிலைமைகளிலும் ஜங்கமஸ்தாவரத்தோடு மாறிமாறி வருகின்றது. "நான் இதனை அநுபவிப்பேன்," "இதனைக் காண்கிறேன்," "இதனைக் கேட்கிறேன்" "இன்பத்தை அநுபவிக்கிறேன்," "துன்பத்தை அநுபவிக்கிறேன்," "அதற்காக இதனைச் செய்யப்போகிறேன்," "இதனைத் தெரிந்துகொள்வேன்" என்பன முதலான முயற்சியெல்லாம், பார்வை

𑌶𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇𑌣𑍈𑌵। '𑌯𑍋𑌽𑌸𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑌃 𑌪𑌰𑌮𑍇 𑌵𑍍𑌯𑍋𑌮𑌨𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌯𑌶𑍍𑌚 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌃 𑌏𑌤𑌮𑌰𑍍𑌥𑌂 𑌦𑌰𑍍𑌶𑌯𑌨𑍍𑌤𑌿 । 𑌤𑌤𑌶𑍍𑌚 𑌏𑌕𑌸𑍍𑌯 𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑌭𑍂𑌤𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌮𑌾𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍋𑌗𑌾𑌨𑌭𑌿𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑌃 𑌅𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌚𑍇𑌤𑌨𑌾𑌨𑍍𑌤𑌰𑌸𑍍𑌯 𑌅𑌭𑌾𑌵𑍇 𑌭𑍋𑌕𑍍𑌤𑍁𑌃 𑌅𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌅𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 𑌕𑌿𑌂𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌾 𑌇𑌯𑌂 𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 𑌇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌚𑌨𑍇 𑌅𑌨𑍁𑌪𑌪𑌨𑍍𑌨𑍇, '𑌕𑍋 𑌅𑌦𑍍𑌧𑌾 𑌵𑍇𑌦 𑌕 𑌇𑌹 𑌪𑍍𑌰𑌵𑍋𑌚𑌤𑍍। 𑌕𑍁𑌤 𑌆𑌜𑌾𑌤𑌾 𑌕𑍁𑌤 𑌇𑌯𑌂 𑌵𑌿𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌃' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌵𑌰𑍍𑌣𑍇𑌭𑍍𑌯𑌃 । 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌂 𑌚 𑌭𑌗𑌵𑌤𑌾—'𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑌾𑌵𑍃𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑍇𑌨 𑌮𑍁𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌜𑌨𑍍𑌤𑌵𑌃' 𑌇𑌤𑌿 ॥ ௧௦ ॥

𑌏𑌵𑌂 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑍁𑌦𑍍𑌧𑌬𑍁𑌦𑍍𑌧𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌂 𑌸𑌰𑍍𑌵𑌜𑌨𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌭𑍂𑌤𑌮𑌪𑌿 𑌸𑌨𑍍𑌤𑌮𑍍—

---

க்கு [அறிவிற்கு] விஷயமாக ஆவதனுலன்றே ஜகத்திற்கு உண்டாகின்றன [அறிவின் பார்வையினுல் வியாபிக்கப்படாவிட்டால், ஜடத்திற்கு அசையவும் முடியாது]; (அம் முயற்சி) அறிவிலே நிற்பது, அறிவிலேயே முடிவது. "எது இ(ந்தஜகத்)திற்கு ஸாக்ஷியாய் மேலான (ஹிருதய)ஆகாசத்திலுள்ளதோ" (தை - ப்ரா - உ - அ - கூ) என்பது முதலான மந்திரங்களும் இக்கருத்தைக் காட்டுகின்றன. ஆகவே, (பகவானைக்காட்டிலும்) வேறு சேதநப்பொருள் இல்லாமையின் (போகங்களை) அநுபவிப்பவன் வேருெருவன் இல்லையாதலால், "ஒன்ருய் ஒளியாய் ஸகலத்திற்கும் கண்காணியான அறிவுமாத்திரமாய் எத்தகைய போகங்களோடும் உண்மையாகவே ஒட்டுதலில்லாத (ஆத்மாவாகிய ஈச்வரனுடைய) இச்சிருஷ்டிக்குக் காரணமென்ன?" என்ற விஷயத்திலே வினுவும் விடையும் பொருந்தா. [சிருஷ்டியின் பயனென்ன?" என்று வினவுதலும், அல்லது அதற்கு விடைகூறுதலும் நேரல்ல. சிருஷ்டியானது பரம்பொருளினுடைய போகாநுபவத்திற்காக என்று சொல்ல முடியாது; ஏனெனில், உண்மையாக அது ஒன்றையும் அநுபவிப்பதில்லை. அது கேவல அறிவுமாத்திரமாய் ஸாக்ஷியாயுள்ளது. இனி, போகங்களை அநுபவிப்பவன் வேருெருவனும் இல்லை; ஏனெனில், அறிவான பொருள் வேருென்று இல்லை. ஈச்வரன் ஒருவன்தான் அறிவான பொருள். அன்றியும், அறிவல்லாத பொருள் ஒன்றை அநுபவிக்கமுடியாது. மற்றும், சிருஷ்டியானது சிருஷ்டிப்பவனுடைய மோக்ஷத்திற்காக என்பது மில்லை; ஏனெனில், அது மோக்ஷத்திற்கு மாருனதாம். வினுவும் விடையும் நிகழ்வதற்கு இவ்வாருக இடமே இல்லை; ஏனெனில், சிருஷ்டியானது பரம்பொருளினுடைய மாயையினுல் ஆவதென்க.—ஆ.] (இதனை,) "எவன் (அதனை) நேரே அறியமுடியும்?— 'எதிலிருந்து பிறந்தது? ஏன் இந்தப் பலவகைச் சிருஷ்டி?'— (இவற்றை)எவன் இங்கே சொல்லக்கூடும்? [எனவே, பரம்பொருளை அறிதல் அரிதென்க]" (தை - ப்ரா - உ - அ - கூ) என்பதுமுதலிய மந்திரவர்ணங்களால் (அறிக). "அறிவு அஜ்ஞானத்தால் மூடுண்டுகிடக்கின்றது. அதனுல் பிராணிகள் மயங்குகின்றன" (ரு - கரு) என்று பகவானும் உணர்த்தியுள்ளார். (இதனுல் - சிருஷ்டி அஜ்ஞானத்தினுலாவதென்பதைக் கண்டுகொள்க.) (௧௦)

**பகவானைப் பழிப்பவரின் வாழ்க்கை.**

யான் இவ்வாருக, இயல்பாகவே நித்யனுய் சுத்தனுய் புத்தனுய் முக்தனுய், முற்றும் உணர்ந்தவனுய், பிராணிகளெல்லாவற்றினுடைய ஆத்மாவாயிருந்தாலும்,

௧௧. 𑌅𑌵𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌮𑍂𑌢𑌾 𑌮𑌾𑌨𑍁𑌷𑍀𑌂 𑌤𑌨𑍁𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌮𑍍 ।
𑌪𑌰𑌂 𑌭𑌾𑌵𑌮𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑍋 𑌮𑌮 𑌭𑍂𑌤𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ॥

𑌅𑌵𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿 𑌅𑌵𑌜𑍍𑌞𑌾𑌂 𑌪𑌰𑌿𑌭𑌵𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌮𑍂𑌢𑌾𑌃 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌿𑌨𑌃 𑌮𑌾𑌨𑍁𑌷𑍀𑌂 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑍀𑌂 𑌤𑌨𑍁𑌂 𑌦𑍇𑌹𑌮𑍍 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌮𑍍, 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌦𑍇𑌹𑍇𑌨 𑌵𑍍𑌯𑌵𑌹𑌰𑌨𑍍𑌤𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍, 𑌪𑌰𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌷𑍍𑌟𑌂 𑌭𑌾𑌵𑌂 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍍 𑌆𑌕𑌾𑌶𑌕𑌲𑍍𑌪𑌮𑍍 𑌆𑌕𑌾𑌶𑌾𑌦𑌪𑌿 𑌅𑌨𑍍𑌤𑌰𑌤𑌮𑌮𑍍 𑌅𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑍋 𑌮𑌮 𑌭𑍂𑌤𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌮𑍍 𑌈𑌶𑍍𑌵𑌰𑌂 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍍 । 𑌤𑌤𑌶𑍍𑌚 𑌤𑌸𑍍𑌯 𑌮𑌮 𑌅𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌭𑌾𑌵𑌨𑍇𑌨 𑌆𑌹𑌤𑌾𑌃 𑌤𑍇 𑌵𑌰𑌾𑌕𑌾𑌃 ॥ ௧௧ ॥

𑌕𑌥𑌮𑍍?—

௧௨. 𑌮𑍋𑌘𑌾𑌶𑌾 𑌮𑍋𑌘𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑍋 𑌮𑍋𑌘𑌜𑍍𑌞𑌾𑌨𑌾 𑌵𑌿𑌚𑍇𑌤𑌸𑌃 ।
𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍀𑌮𑌾𑌸𑍁𑌰𑍀𑌂 𑌚𑍈𑌵 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌮𑍋𑌹𑌿𑌨𑍀𑌂 𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ॥

𑌮𑍋𑌘𑌾𑌶𑌾𑌃 𑌵𑍃𑌥𑌾 𑌆𑌶𑌾𑌃 𑌆𑌶𑌿𑌷𑍋 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌮𑍋𑌘𑌾𑌶𑌾𑌃, 𑌤𑌥𑌾 𑌮𑍋𑌘𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌃 𑌯𑌾𑌨𑌿 𑌚 𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑍀𑌨𑌿 𑌤𑍈𑌃 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍀𑌯𑌮𑌾𑌨𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌤𑌾𑌨𑌿 𑌚, 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌭𑌗𑌵𑌤𑍍𑌪𑌰𑌿𑌭𑌵𑌾𑌤𑍍, 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌭𑍂𑌤𑌸𑍍𑌯 𑌅𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍, 𑌮𑍋𑌘𑌾𑌨𑍍𑌯𑍇𑌵 𑌨𑌿𑌷𑍍𑌫𑌲𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌭𑌵𑌨𑍍𑌤𑍀𑌤𑌿 𑌮𑍋𑌘𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌃 । 𑌤𑌥𑌾 𑌮𑍋𑌘𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌃 𑌮𑍋𑌘𑌂 𑌨𑌿𑌷𑍍𑌫𑌲𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌮𑍋𑌘𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌪𑌿 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌨𑌿𑌷𑍍𑌫𑌲𑌮𑍇𑌵 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌵𑌿𑌚𑍇𑌤𑌸𑌃 𑌵𑌿𑌗𑌤𑌵𑌿𑌵𑍇𑌕𑌾𑌶𑍍𑌚 𑌤𑍇 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑌃 । 𑌕𑌿𑌂𑌚—

---

௧௧. எனது மேலான நிலையை, பொருள்கட்கு(எல்லாம்) பெரிய கடவுளாக [‘நான் ஸகலப்பொருள்கட்கும் பரமேச்வரன்’ என்ற என் இயல்பை] அறியாத மூடர்கள் மனிதசரீரத்தைக்கொண்ட என்னை அவமதிக்கிறார்கள்.

பகுத்தறிவில்லா மூடர்கள் எனது மேலான நிலையை, (அதாவது) “நான் பரமாத்மஉண்மை : ஆகாசம்போல இருப்பவன் : ஆகாசத்தைக்காட்டிலும் உள்ளேயுள்ளவன் : ஸகலப்பொருள்கட்கும் தம்தம் ஆத்மாவாகிய பரமேச்வரன்” என்பதை அறியாது, (அவர்களிடையே) மநுஷ்யசரீரத்தோடு வியவஹரிக்கின்ற என்னை ஏளனம் செய்கிறார்கள். ஆகவே, அந்த என்னை அடிக்கடி அலட்சியம்பண்ணுவதனால் அப்பேதையர்கள் கெட்டழிந்துபோகிறார்கள். (௧௧)

(அவர்களுடைய நிலைமை மிகப்பரிதாபப்படத்தக்கதென்பது) எப்படி ?—

௧௨. வீணான ஆசையையுடையவர் : வீணான செய்கையையுடையவர் : வீணான அறிவையுடையவர் : விவேகமில்லாதவர் : மயக்குவதான ராக்ஷஸஅஸுர ஸ்வபாவத்தைமாத்திரம் கொண்டவர்.

(அவர்கள்) வீண் ஆசைகளையுடையவர்கள் [பகவானை அவமதித்தலால் அவர்களுடைய எந்த ஆசையும் பயனுடையதாகாதென்க]. அக்நிஹோத்திரம் முதலிய எந்தக்கர்மங்கள் அவர்களால் அநுஷ்டிக்கப்படுகின்றனவோ, அவை பயனற்றவையாகவே ஆகின்றன ; அவர்கள் பகவானைப் பழித்தலால், தமது ஆத்மாவாயுள்ளதை அலட்சியம் செய்வதால். அவ்வண்ணமே, அவர்களுடைய அறிவும் பயனில்லாததாகவே ஆகும். அவர்கள், பகுத்தறிவு இல்லாதவராகவும் இருக்கிறார்கள் என்பதுகருத்து.

𑌤𑍇 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍀𑌂 𑌰𑌕𑍍𑌷𑌸𑌾𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌮𑍍 𑌆𑌸𑍁𑌰𑍀𑌂 𑌅𑌸𑍁𑌰𑌾𑌣𑌾𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌮𑍋𑌹𑌿𑌨𑍀𑌂 𑌮𑍋𑌹𑌕𑌰𑍀𑌂 𑌦𑍇𑌹𑌾𑌤𑍍𑌮𑌵𑌾𑌦𑌿𑌨𑍀𑌂 𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 "𑌛𑌿𑌨𑍍𑌧𑌿, 𑌭𑌿𑌨𑍍𑌧𑌿, 𑌪𑌿𑌬, 𑌖𑌾𑌦, 𑌪𑌰𑌸𑍍𑌵𑌮𑌪𑌹𑌰" 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂𑌵𑌦𑌨𑌶𑍀𑌲𑌾𑌃 𑌕𑍍𑌰𑍂𑌰𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑍋 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௧௨ ॥

𑌯𑍇 𑌪𑍁𑌨𑌃 𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌾𑌃 𑌭𑌗𑌵𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑍇 𑌮𑍋𑌕𑍍𑌷𑌮𑌾𑌰𑍍𑌗𑍇 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌃—

௧௩. 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑍁 𑌮𑌾𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌦𑍈𑌵𑍀𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ।
𑌭𑌜𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑌨𑍍𑌯𑌮𑌨𑌸𑍋 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌭𑍂𑌤𑌾𑌦𑌿𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥

𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑍁 𑌅𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌃 𑌮𑌾𑌮𑍍 𑌈𑌶𑍍𑌵𑌰𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌦𑍈𑌵𑍀𑌂 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌶𑌮𑌦𑌮𑌦𑌯𑌾𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌦𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌮𑍍 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 𑌸𑌨𑍍𑌤𑌃 𑌭𑌜𑌨𑍍𑌤𑌿 𑌸𑍇𑌵𑌨𑍍𑌤𑍇 𑌅𑌨𑌨𑍍𑌯𑌮𑌨𑌸𑌃 𑌅𑌨𑌨𑍍𑌯𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌃 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌭𑍂𑌤𑌾𑌦𑌿𑌂 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑍍 𑌵𑌿𑌯𑌦𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌚 𑌆𑌦𑌿𑌂 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 𑌅𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥ ௧௩ ॥

𑌕𑌥𑌮𑍍?—

௧௪. 𑌸𑌤𑌤𑌂 𑌕𑍀𑌰𑍍𑌤𑌯𑌨𑍍𑌤𑍋 𑌮𑌾𑌂 𑌯𑌤𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌦𑍃𑌢𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 ।
𑌨𑌮𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌮𑌾𑌂 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇 ॥

---

அன்றியும், அவர்கள், மயக்கத்தை [பொய்யுணர்வை]ச் செய்வதாய், தேகமே ஆத்மாவென்று கூறுவதான ராக்ஷஸஸ்வபாவத்தையும் அஸுரஸ்வபாவத்தையும் அடைந்தவர்களாக ஆகிறார்கள்: "வெட்டு, குத்து, குடி, விழுங்கு, பிறர்பொருளைப் பிடுங்கு" என இவ்வாறான ஒழுக்கமுடையவராய், கொடிய செயல்களுள்ளவராய் இருக்கிறார்கள் என்பது பொருள் [இறந்தபின்பு, அவர்கள் ராக்ஷஸர்களாகவும் அஸுரர்களாகவும் பிறக்கிறார்கள். "வெட்டு, குத்து, குடி, விழுங்கு" என்றஇவைபோன்றது - ராக்ஷஸரது இயல்பு. "(தானத்தைக்) கொடாதே, ஹோமத்தைச் செய்யாதே, பிறர்பொருளைப் பிடுங்கு" என்ற இவைபோன்றது - அஸுரரது இயல்பு]. (௧௨)

**பக்தர்கள் செல்லும் வழிகள்.**

மற்று, எவர்கள் நம்பிக்கையுள்ளவராய் பகவத்பக்தி என்னும் மோக்ஷவழியிலே சென்றிருக்கிறார்களோ, (அந்த)

௧௩. மஹாத்மாக்கள்தான் பார்த்த ! தேவர்களுடைய இயல்பைக் கொண்டவராய், வேறொன்றிலே மனமில்லாதவராய், என்னைப் பொருள்கட்குமுதலாகவும் அழிவற்றவனாகவும் அறிந்து தொழுகிறார்கள்.

மஹாத்மாக்கள் - ஈன புத்தியில்லாதவர்கள் [யஜ்ஞம் முதலியவற்றால் சித்தம் பரிசுத்தமானவர்கள்—ஆ.]. என்னை - ஈச்வரனை. தேவர்களுடைய இயல்பை - (மனமொழிமெய்களின்)அடக்கமும், (இந்திரியங்களின்) அடக்கமும், தயையும், நம்பிக்கையும் முதலாகியதை. பொருள்கட்கு - ஆகாசம்முதலியவற்றிற்கும்,(உயிருள்ள)பிராணிகட்கும். முதலாகவும் - காரணமாகவும். (௧௩)

எப்படி(த் தொழுகிறார்கள்) ?—

௧௪. எப்பொழுதும் என்னைப் பேசுபவராய், முயலுபவராய், உறுதியான விரதமுள்ளவராய், வணங்குபவராய், என்றும் ஒருசிலைப்பட்டவராய் (அவர்கள்) என்னைத் தொழுகிறார்கள்.

ஸததம் ஸவ௳தா ஹ௱வணும் ஸ்ஹஹஸ்ஸ௱௳வம் ௭௱ம் கீ௲யஹஃ யதஙுஸ்ஷ உ௰ிஜ௺யொவஸஹாஸ௨௵௵யா௳ஹிம்ஸாதியவெ௭ஃ ஜுயதஙுஸ்ஷ ஜுஜவஷதாஃ, ஜுஜம் ஷிஙழ கவாஸூம் வஷதம்யெஷாம் தெஜுஜவஷதாஃ நஃஸஹஃஸ்ஷ ௭௱ம் ஹூதயெ-ஸயழ் ஆத்தாநம் ஹக்குா நிதூய௲க்தாஃ ஸதஃ உவாஸதெ லெவதெ ॥ ௧௪ ॥

தெ கெந கெந ஜுகாரெண உவாஸதெ உதி? உஜூதெ—

௧௫. ஜ்ஞாநயஜ்ஞேந சாவூநெஂ யஜதொ ௭௱௲வாஸதெ ।
ஏகத்வேந ஜுயக்த்வேந ஹஹுயா விஸ்வதொ௭௲வழ ॥

ஜ்ஞாநமேவ ஹ௱வத்விஷயம் யஜ்ஞஃ, தேந ஜ்ஞாநயஜ்ஞேந யஜதஃ வ௲ஜயதஃ ௭ாழ ௱ஸ்ஸ௱ம் ச ௲வி ௲ந்ெஂ ௲நூாழ உவாஸநாம் வஷிதூஜூ உவாஸதெ। தச்ச ஜ்ஞாநழ—ஏகத்வேந “ஏகமேவ வரம் ஜுஹ” உதி வரமாத௳ஸநெந யஜதஃ உவாஸதெ । கெவிச்ச ஜுயக்த்வேந “ஆதிதூஂசஂாதிஹெெந ஸ ஏவ ஹ௱வாநு விஷ்ணுஃ ஆதிதூாதிரு௳வெண கவஷிதஃ” உதி உவாஸதெ । கெவிசு “ஹஹுயா கவஷிதஃ ஸ ஏவ ஹ௱வாநு ஸவ௳தொ௭௲வஃ விஸ்வ௳வஃ” உதி தம் விஸ்வ௳வம் ஸவ௳தொ௭௲வம் ஹஹுயா ஹஹுஜுகாரெண உவாஸதெ ॥

யதி ஹஹுஹிஃ ஜுகாரெஃ உவாஸதெ, கயம் ௲ாமேவ உவாஸதெ உதி? அத ஆஹ—

---

(அவர்கள்) ப்ரஹ்மஸ்வரூபமாகிய பகவானுன என்னை எப்பொழுதும் பேசுகிருர்கள். இந்திரியவடக்கம், சாந்தம், அடக்கம், தயை, அஹிம்ஸைமுதலிய நல்லொழுக்கங்களால் முயலுகிருர்கள். அசைக்கப்படாத விரதத்தைக் கொண்டவராய், எப்பொழுதும் ஒருநிலைப்பட்டவராய், ஹிருதயத்தில் தங்கியுள்ள ஆத்மாவான என்னை பக்தியொடு வணங்கித் தொழுகிருர்கள். (௧௪)

அவர்கள் எந்தெந்தவிதமாய்த் தொழுகிருர்கள் என்பது ?—கூறுவோம் :

௧௫. ஞானமாகிய யஜ்ஞத்தினுலேயே வழிபடுகின்ற மற்றையோர்கள் பலவிதமாய் எங்கும்முகமுள்ள [எங்கும் ஆத்மவடிவமாயுள்ள] என்னையே ஒன்ருக வேருகத் தொழுகிருர்கள்.

பகவானைப்பற்றிய ஞானமே யஜ்ஞந்தான். மற்றையோர்கள் [ப்ரஹ்மநிஷ்டர்கள்] அந்தஞானமென்னும் யஜ்ஞத்தால்ஈச்வரனுகிய என்னையே பூஜிப்பவராய், வேறு (தேவதையை) உபாஸித்தலைத் தள்ளிவிட்டு(என்னையே) தொழுகிருர்கள். இனி அந்த ஞானம் (அனேகவிதமாயுள்ளது :—சிலர்) “ஒன்றுதான் பரப்ரஹ்மம்” என்னும் மெய்யறிவோடு தொழுகிருர்கள். சிலர் “விஷ்ணுவாகிய அந்த பகவானே ஸூர்யன் சந்திரன்முதலிய பேதத்தோடு ஸூர்யன்முதலான வடிவமாக இருக்கிருர்” என்னும் (ஞானத்தோடு)தொழுகிருர்கள். சிலர், பலவகையாய் [அக்நி ஸூர்யன் முதலான வடிவத்தால்] ஸகலரூபியாகவும், ஸகல ஆத்மாவாகவும் உள்ள அவரை “பலவகையாயுள்ள அந்த பகவான்தான் எங்கும் முகமுள்ளவராயும் ஸகலரூபியாயும் இருக்கிருர்” என்னும் (ஞானத்தோடு) தொழுகிருர்கள். (௧௫)

எல்லா உபாஸனையும் பகவானைச் சேர்கின்றன.

(அவர்கள்) பலவாருக உபாஸித்தால், உங்களையே உபாஸிக்கிருர்களென்பது எப்படி ?— (என்னும் சங்கை உண்டாகும்) ஆதலால், (பகவான் இதனை) அருளிச் செய்கிருர் :

கசு. சுஹ‌ம் கு-து-ஈஹ‌ம் யஜஃ ஹூயாZஹ‌ஹ‌ளஷயழ் ।
உஜெ்ராZஹ‌ஹ‌ஹெவாஜூழ் சுஹ‌உஜீஈஹ‌ம் ஹ‌-ுதழ் ॥

சுஹ‌ம் கு-து-ஃ, ஶ்ரௌதகஃமெஹெட்ஃ சுஹ‌ஹெவ । சுஹ‌ம் யஜஃ ஹூாதஃ । ஹூயா சுநூழ் சுஹ‌ம், விதுஹெ்யா யஜ் தீயதெ । சுஹ‌ழ் ஔளஷயம், ஸவஃ-ஸ்ராணிஹிஃ யஜ் சுஜூதெ தஜ் ஔளஷயஶஜூஶஜிதம் வீஹியவாழ் ஸாயாஈணழ் । சுயவா—'ஹூயா' உதி ஸாயாஈணழ் சுநூழ், 'ஔளஷயழ்' உதி வூாயூ-ுவஶஃ-நாயஃம் ஹெஷஜழ் । ஜெஃ சுஹ‌ம், யெ-ந விதுஹெ்யா ஜெவதாஹூஶ்ர ஹ‌விஃ தீயதெ। சுஹ‌ஹெவ ஆஜூம் ஹ‌விஸ்ர । சுஹ‌ம் சுஜீஃ, யஹூிஞ ஹ‌-ுயதெ ஹ‌விஃ ஸஃ சுஜீஃ சுஹ‌ழ் । சுஹ‌ம் ஹ‌-ுதழ் ஹவநகஃமெ ச ॥ கசு ॥

கிஞ—

கஎ. விதாZஹ‌ஸ்ய ஜமதஃ ஊதா யாதா விதாஉஹ‌ஃ ।
வெஜூம் வவிதுஜொங்காஈஃ ஜக்ஸாஉ யஜ-ுஜெவ ச ॥

விதா ஜநயிதா சுஹ‌ம் சுஸ்ய ஜமதஃ, ஊதா ஜநயித்ரீ, யாதா கஃமெ-ஸைஸ்ய ஸ்ராணிஹெ்யா வியாதா, விதாஉஹ‌ஃ விதுஃ விதா, வெஜூம் வெஜிதவ்யம், வவிதும் வாவநழ், ஓங்காஈஃ, ஜக் ஸாஉ யஜ-ுஃ ஸவ ச ॥ கஎ ॥

கிஞ—

---

கசு. நானே க்ரது: நானே யஜ்ஞம்: நானே ஸ்வதா: நானே ஔஷதம்: நானே மந்திரம்: நானே ஹவிஸ்: நானே அக்நி: நானே ஹவிஸை அர்ப்பித்தல்.

க்ரது என்பது - வேதத்தில் விதித்த கர்மங்களுள் ஓர்வகுப்பு. யஜ்ஞம் என்பது - ஸ்மிருதியில் விதித்த (வைச்வதேவம் முதலிய) யஜ்ஞம். ஸ்வதா என்பது - பிதிருக்களுக்குக் கொடுக்கப்படும் அந்நம். ஔஷதம் - எல்லாப்பிராணிகளாலும் புசிக்கப்படுகின்றவையாய், ஒஷதிஎன்னும்சொல்லால் கூறப்பட்ட ஸாதாரணமான நெல் வாற்கோதுமை முதலியன.—அல்லது, ஸ்வதா என்பது - ஸாமான்னியமான உணவு. ஔஷதம் என்பது - வியாதியைத் தணித்து ஆற்றுதற்கான மருந்து.— எதனால் பிதிருக்களுக்கும் தேவதைகளுக்கும் ஹவிஸானது கொடுக்கப்படுகின்றதோ, (அந்த)மந்திரம் நானே. ஹவிஸும் நானேதான். எதிலே ஹவிஸானது ஹோமஞ் செய்யப்படுகின்றதோ, அந்த அக்நி நானே. ஹவிஸை அர்ப்பித்தலென்னும்தொழிலும் நானே என்க. (கசு)

மேலும்,

கஎ. இந்த ஜகத்திற்குத் தகப்பனும், தாயும், பகிர்ந்து கொடுப்பவனும், பாட்டனும், அறியவேண்டியபொருளும், பரிசுத்தமாக்கும் பொருளும், ஓங்காரமும், ருக்கும், ஸாமமும், யஜுஸும் நானேதான்.

பகிர்ந்து கொடுப்பவன் - பிராணிகளுக்குக் கர்மங்களின்பயனைப் பகுத்துக் கொடுப்பவன். (கஎ)

அன்றியும்,

௧௮. 𑌗𑌤𑌿𑌰𑍍𑌭𑌰𑍍𑌤𑌾 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 𑌸𑌾𑌕𑍍𑌷𑍀 𑌨𑌿𑌵𑌾𑌸𑌃 𑌶𑌰𑌣𑌂 𑌸𑍁𑌹𑍃𑌤𑍍 ।
𑌪𑍍𑌰𑌭𑌵𑌃 𑌪𑍍𑌰𑌲𑌯𑌃 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌨𑌿𑌧𑌾𑌨𑌂 𑌬𑍀𑌜𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥

𑌗𑌤𑌿𑌃 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌮𑍍 । 𑌭𑌰𑍍𑌤𑌾 𑌪𑍋𑌷𑍍𑌟𑌾 । 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 𑌸𑍍𑌵𑌾𑌮𑍀 । 𑌸𑌾𑌕𑍍𑌷𑍀 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌕𑍃𑌤𑌾𑌕𑍃𑌤𑌸𑍍𑌯 । 𑌨𑌿𑌵𑌾𑌸𑌃 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑍋 𑌨𑌿𑌵𑌸𑌨𑍍𑌤𑌿 । 𑌶𑌰𑌣𑌮𑌾𑌰𑍍𑌤𑌾𑌨𑌾𑌂, 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾𑌨𑌾𑌮𑌾𑌰𑍍𑌤𑌿𑌹𑌰𑌃 । 𑌸𑍁𑌹𑍃𑌤𑍍 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌪𑌕𑌾𑌰𑌾𑌨𑌪𑍇𑌕𑍍𑌷𑌃 𑌸𑌨𑍍 𑌉𑌪𑌕𑌾𑌰𑍀 । 𑌪𑍍𑌰𑌭𑌵𑌃 𑌉𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 𑌜𑌗𑌤𑌃 । 𑌪𑍍𑌰𑌲𑌯𑌃 𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌤𑍇 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌇𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌇𑌤𑌿 । 𑌨𑌿𑌧𑌾𑌨𑌂 𑌨𑌿𑌕𑍍𑌷𑍇𑌪𑌃 𑌕𑌾𑌲𑌾𑌨𑍍𑌤𑌰𑍋𑌪𑌭𑍋𑌗𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌮𑍍 । 𑌬𑍀𑌜𑌂 𑌪𑍍𑌰𑌰𑍋𑌹𑌕𑌾𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌰𑍋𑌹𑌧𑌰𑍍𑌮𑌿𑌣𑌾𑌮𑍍 ; 𑌅𑌵𑍍𑌯𑌯𑌂, 𑌯𑌾𑌵𑌤𑍍𑌸𑌂𑌸𑌾𑌰𑌭𑌾𑌵𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 । 𑌨 𑌹𑌿 𑌅𑌬𑍀𑌜𑌂 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌪𑍍𑌰𑌰𑍋𑌹𑌤𑌿 ; 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌰𑍋𑌹𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 𑌬𑍀𑌜𑌸𑌨𑍍𑌤𑌤𑌿𑌃 𑌨 𑌵𑍍𑌯𑍇𑌤𑌿 𑌇𑌤𑌿 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 ॥ ௧௮ ॥

𑌕𑌿𑌞𑍍𑌚—

௧௯. 𑌤𑌪𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑌹𑌂 𑌵𑌰𑍍𑌷𑌂 𑌨𑌿𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌮𑍍𑌯𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑌾𑌮𑌿 𑌚 ।
𑌅𑌮𑍃𑌤𑌂 𑌚𑍈𑌵 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌶𑍍𑌚 𑌸𑌦𑌸𑌚𑍍𑌚𑌾𑌹𑌮𑌰𑍍𑌜𑍁𑌨 ॥

𑌤𑌪𑌾𑌮𑌿 𑌅𑌹𑌮𑍍 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌕𑌾𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 𑌰𑌶𑍍𑌮𑌿𑌭𑌿𑌃 𑌉𑌲𑍍𑌬𑌣𑍈𑌃 । 𑌅𑌹𑌂 𑌵𑌰𑍍𑌷𑌂 𑌕𑌾𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 𑌰𑌶𑍍𑌮𑌿𑌭𑌿𑌃 𑌉𑌤𑍍𑌸𑍃𑌜𑌾𑌮𑌿 ; 𑌉𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌪𑍁𑌨𑌃 𑌨𑌿𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌮𑌿 𑌕𑌾𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 𑌰𑌶𑍍𑌮𑌿𑌭𑌿𑌃 𑌅𑌷𑍍𑌟𑌭𑌿𑌃 𑌮𑌾𑌸𑍈𑌃 ; 𑌪𑍁𑌨𑌃 𑌉𑌤𑍍𑌸𑍃𑌜𑌾𑌮𑌿 𑌪𑍍𑌰𑌾𑌵𑍃𑌷𑌿 । 𑌅𑌮𑍃𑌤𑌂

---

௧௮. கதியும், வளர்ப்பவனும், பிரபுவும், ஸாக்ஷியும், வாழுமிடமும், புகலிடமும், ஸுஹிருத்தும், உத்பத்தியும், அழிவும், நிலையும், களஞ்சியமும்; அழிவிலா விதையும் (நானே).

கதி - கர்மங்களுடைய பயன்.........பிரபு - உரியவன், சொந்தக்காரன். ஸாக்ஷி - பிராணிகள் செய்தவற்றையும், செய்யாதவற்றையும் (பார்ப்பவன்). வாழுமிடம் - பிராணிகள் வஸிக்குமிடம். இடருற்றவர்களுக்குப் புகலிடம் - என்னை வந்தடைந்தவர்களுடைய இடரைத் தீர்ப்பவன். ஸுஹிருத்து - பதிலுபகாரத்தை வேண்டாதவனாய் உதவிபுரிவோன். உத்பத்தி - உலகம் உண்டாகுமிடம். அழிவு - அழியுமிடம். அவ்வண்ணமே, நிலை - நிலைகொள்ளுமிடம். களஞ்சியம் - பிராணிகளால் பிற்காலத்தில் அநுபவிக்கப்படும் (பொருள்களை) வைக்குமிடம். விதை - முளைக்குந்தன்மையுள்ள (பொருள்கள்) முளைத்தற்குக் காரணம். அழிவிலா - (அவ்விதையானது) ஸம்ஸாரமுள்ளவரையுலும் உள்ளதனால், அழிவில்லாத. விதையில்லாத ஒன்றும் முளையாதன்றோ. எப்பொழுதும் முளையைக் காண்பதனால், விதையின் தொடர்ச்சியானது அற்றுப்போகவில்லை என்று தெரிகின்றது. (௧௮)

மற்றும்,

௧௯. யான் வெப்பத்தைக்கொடுக்கின்றேன் : யான் மழையை உண்டாக்குகின்றேன், அன்றியும், நிறுத்துகின்றேன் : அர்ஜுந ! சாகாமையும் சாவும், உள்ளதும் இல்லதும் நானே.

யான் ஸூர்யனாகஆகி கடுமையான சிலகிரணங்களால் வெப்பத்தைத் தருகிறேன் ; சிலகிரணங்களால் மழையை உண்டாக்குகிறேன் ; உண்டாக்கினபின்பு, சிலகிரணங்களால்(மழையை) எட்டுமாதம் நிறுத்துகின்றேன் ; மறுபடியும், (அதனை, மற்றைய

𑌏𑌵 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂, 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌶𑍍𑌚 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 । 𑌸𑌚𑍍𑌚 𑌯𑌸𑍍𑌯 𑌯𑌤𑍍 𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌿𑌤𑌯𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌂 𑌤𑌤𑍍, 𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌮𑍍 𑌅𑌸𑌚𑍍𑌚 𑌏𑌵 𑌅𑌹𑌮𑌰𑍍𑌜𑍁𑌨 । 𑌨 𑌪𑍁𑌨𑌃 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑍇𑌵 𑌅𑌸𑌤𑍍 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍, 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑍇 𑌵𑌾 𑌸𑌦𑌸𑌤𑍀 ॥ ௧௯ ॥

𑌯𑍇 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑍈𑌃 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍈𑌃 𑌏𑌕𑌤𑍍𑌵𑌪𑍃𑌥𑌕𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍈𑌃 𑌯𑌜𑍍𑌞𑍈𑌃 𑌮𑌾𑌂 𑌪𑍂𑌜𑌯𑌨𑍍𑌤𑌃 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌦𑌃, 𑌤𑍇 𑌯𑌥𑌾𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌮𑌾𑌮𑍇𑌵 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌯𑍇 𑌪𑍁𑌨𑌃 𑌅𑌜𑍍𑌞𑌾𑌃 𑌕𑌾𑌮𑌕𑌾𑌮𑌾𑌃—

௨௦. 𑌤𑍍𑌰𑍈𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌮𑌾𑌂 𑌸𑍋𑌮𑌪𑌾𑌃 𑌪𑍂𑌤𑌪𑌾𑌪𑌾𑌃
𑌯𑌜𑍍𑌞𑍈𑌰𑌿𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌤𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌯𑌨𑍍𑌤𑍇 ।
𑌤𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑌮𑌾𑌸𑌾𑌦𑍍𑌯 𑌸𑍁𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌲𑍋𑌕𑌮𑍍
𑌅𑌶𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑍍𑌦𑌿𑌵𑌿 𑌦𑍇𑌵𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 ॥

௨௧. 𑌤𑍇 𑌤𑌂 𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌲𑍋𑌕𑌂 𑌵𑌿𑌶𑌾𑌲𑌂
𑌕𑍍𑌷𑍀𑌣𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑍇 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌲𑍋𑌕𑌂 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 ।
𑌏𑌵𑌂 𑌤𑍍𑌰𑌯𑍀𑌧𑌰𑍍𑌮𑌮𑌨𑍁𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾𑌃
𑌗𑌤𑌾𑌗𑌤𑌂 𑌕𑌾𑌮𑌕𑌾𑌮𑌾 𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 ॥

---

நான்குமாதமான) மாரிகாலத்தில் உண்டாக்குகின்றேன். நான் தேவர்களுடைய சாகாமையாகவும், மனிதர்களுடைய சாவாகவும் இருக்கின்றேன். எ(ந்தக் காரியமான)து எ(ந்தக் காரணத்)தோடு கூடி உள்ளதாக ஆகின்றதோ [வெளிப்படுகின்றதோ], அது உள்ளது என்பது. அதற்கு மாறானது - இல்லது என்பது. அர்ஜுந ! யான் உள்ளதாக இருக்கின்றேன் ; இல்லதாகவுமே இருக்கின்றேன்.—ஆனால், பகவான் முற்றுமே இல்லாப்பொருளாக ஆகார். அல்லது, கர்ரியமும் காரணமும் (முறையே) உண்மைப்பொருளும் இன்மைப்பொருளுமாக ஆகா. (இங்கே, கார்யமென்றது - வெளிப்பட்ட நாமரூபங்களை [பெயரையும், உருவத்தையும்]; காரணமென்றது - வெளிப்படாத நாமரூபங்களை. ஆதாரமாகிய பரம்பொருள் இல்லாவிட்டால், காரியகாரணமென்னும் கற்பனையே நிலையாது—(ஆ.); ஆதாரமாகிய கயிறு இல்லாவிட்டால், பாம்பென்னும் கற்பனை நிகழாதவாறுபோல.) (௧௯)

**வேதத்திற்கூறிய ஸகாம கர்மங்களின் பயன்.**

ஞானத்தை உணர்ந்த எந்த (நிஷ்காமர்கள்,—ஒன்று என்னும்ஞானமும், வேறு என்னும் ஞானமுமாகிய இவைபோன்ற கீழ்க்கூறிய நிவிருத்திவகையான ஞானயஜ்ஞங்களால் என்னைப் பூஜிப்பவராய்த் தொழுகிறார்களோ, அவர்கள் (தம்தம்) அநுபவ அறிவிற்கேற்ப என்னையே அடைகிறார்கள். ஆனால், எவர்கள் அஜ்ஞானிகளாய் ஆசாவிஷயங்களை விரும்புகிறவர்களோ,

௨௦. அந்த (ஸகாமர்கள்) மூன்றுவேதங்களையும் அறிந்தவராய், ஸோமபானஞ் செய்பவராய், பாவத்தினின்றும் பரிசுத்தமாகி யாகங்களால் என்னைப் பூஜித்து ஸ்வர்க்கமாகிய கதியை வேண்டுகிறார்கள் ; புண்யமான தேவேந்திரஉலகை அடைந்து, ஸ்வர்க்கத்திலே தேவர்களுடைய திவ்வியமான போகங்களை அநுபவிக்கிறார்கள்.

௨௧. அவர்கள் அந்த விசாலமான ஸ்வர்க்கலோகத்தை அநுபவித்துப் புண்ணியம் கழிந்தபோனவுடன் மநுஷ்யலோகத்தைப் புகுகிறார்கள் ; இவ்வாறு மூன்று வேதங்களுடைய தருமத்தைப் பின்பற்றியவராய், விஷயங்களை விரும்புபவராய், போவதையும் வருவதையும் அடைகிறார்கள்.

𑌤𑍍𑌰𑍈𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌃 𑌋𑌗𑍍𑌯𑌜𑍁𑌃𑌸𑌾𑌮𑌵𑌿𑌦𑌃 𑌮𑌾𑌂 𑌵𑌸𑍍𑌵𑌾𑌦𑌿𑌦𑍇𑌵𑌰𑍂𑌪𑌿𑌣𑌂 𑌸𑍋𑌮𑌪𑌾𑌃 𑌸𑍋𑌮𑌂 𑌪𑌿𑌬𑌨𑍍𑌤𑍀𑌤𑌿 𑌸𑍋𑌮𑌪𑌾𑌃, 𑌤𑍇𑌨𑍈𑌵 𑌸𑍋𑌮𑌪𑌾𑌨𑍇𑌨 𑌪𑍂𑌤𑌪𑌾𑌪𑌾𑌃 𑌶𑍁𑌦𑍍𑌧𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑌾𑌃, 𑌯𑌜𑍍𑌞𑍈𑌃 𑌅𑌗𑍍𑌨𑌿𑌷𑍍𑌟𑍋𑌮𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌇𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌪𑍂𑌜𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌗𑌮𑌨𑌂, 𑌸𑍍𑌵𑌰𑍇𑌵 𑌗𑌤𑌿𑌃 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌤𑌿𑌃 𑌤𑌾𑌂, 𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌯𑌨𑍍𑌤𑍇। 𑌤𑍇 𑌚 𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌫𑌲𑌂 𑌆𑌸𑌾𑌦𑍍𑌯 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌸𑍁𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌲𑍋𑌕𑌂 𑌶𑌤𑌕𑍍𑌰𑌤𑍋𑌃 𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑍍 𑌅𑌶𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌭𑍁𑌞𑍍𑌜𑌤𑍇 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑍍 𑌦𑌿𑌵𑌿 𑌭𑌵𑌾𑌨𑍍 𑌅𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌾𑌨𑍍 𑌦𑍇𑌵𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 ॥ ௨௦ ॥

𑌤𑍇 𑌤𑌂 𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌲𑍋𑌕𑌂 𑌵𑌿𑌶𑌾𑌲𑌂 𑌵𑌿𑌸𑍍𑌤𑍀𑌰𑍍𑌣𑌂 𑌕𑍍𑌷𑍀𑌣𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑍇 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌲𑍋𑌕𑌂 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 𑌆𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 । 𑌏𑌵𑌂 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑍇𑌨 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍇𑌣 𑌤𑍍𑌰𑌯𑍀𑌧𑌰𑍍𑌮𑌂 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌵𑍈𑌦𑌿𑌕𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌅𑌨𑍁𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾𑌃 𑌗𑌤𑌾𑌗𑌤𑌂 𑌗𑌤𑌂 𑌚 𑌆𑌗𑌤𑌂 𑌚 𑌗𑌤𑌾𑌗𑌤𑌂 𑌗𑌮𑌨𑌾𑌗𑌮𑌨𑌂 𑌕𑌾𑌮𑌕𑌾𑌮𑌾𑌃 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 𑌕𑌾𑌮𑌯𑌨𑍍𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌕𑌾𑌮𑌕𑌾𑌮𑌾𑌃 𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 𑌗𑌤𑌾𑌗𑌤𑌮𑍇𑌵, 𑌨 𑌤𑍁 𑌸𑍍𑌵𑌾𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌂 𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍 𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௨௧ ॥

𑌯𑍇 𑌪𑍁𑌨𑌃 𑌨𑌿𑌷𑍍𑌕𑌾𑌮𑌾𑌃 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃—

௨௨. 𑌅𑌨𑌨𑍍𑌯𑌾𑌶𑍍𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌨𑍍𑌤𑍋 𑌮𑌾𑌂 𑌯𑍇 𑌜𑌨𑌾𑌃 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 ।
𑌤𑍇𑌷𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌭𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑍋𑌗𑌕𑍍𑌷𑍇𑌮𑌂 𑌵𑌹𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥

𑌅𑌨𑌨𑍍𑌯𑌾𑌃 𑌅𑌪𑍃𑌥𑌗𑍍𑌭𑍂𑌤𑌾𑌃 𑌪𑌰𑌂 𑌦𑍇𑌵𑌂 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌤𑍍𑌵𑍇𑌨 𑌗𑌤𑌾𑌃 𑌸𑌨𑍍𑌤𑌃 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌨𑍍𑌤𑌃 𑌮𑌾𑌂 𑌯𑍇 𑌜𑌨𑌾𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌃 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇, 𑌤𑍇𑌷𑌾𑌂

---

(ஸோமம் - யாகத்தில் உபயோகிக்கின்ற ஓர்வகைக்கொடியின் சாறு.) ருக் யஜுஸ் ஸாமங்களை அறிந்தவர்கள் ஸோமபானஞ் செய்பவராய், அந்த ஸோமபானத்தினாலேயே பாவத்தினின்றும் பரிசுத்தமானவராய், வஸுக்கள்முதலிய தேவர்களது வடிவத்தையுடைய என்னை அக்நிஷ்டோமம் முதலிய யாகங்களால் பூஜித்து, ஸ்வர்க்கமாகிய கதியை விரும்புகிறார்கள். அவர்கள், நூறுயாகமுடைய இந்திரனது உலகை (த் தாம் செய்த) புண்ணியத்தின்பயனாக அடைந்து, மனிதர்கட்குக் கிடையாத தேவபோகங்களை அநுபவிக்கிறார்கள். (௨௦)

இவ்வாறு - கீழ்க்கூறியபடி.மூன்று வேதங்களுடைய தருமத்தை - வேதங்களில் விதிக்கப்பட்ட வெறுங்கர்மத்தை. அவர்கள் ..............போவதையும், வருவதையுந்தான் அடைகிறார்கள் : ஆனால், ஸ்வதந்திரமான நிலையை ஓரிடத்தும் பெறுவதில்லை என்பது பொருள். (௨௧)

ப்ரஹ்மவித்யையிலே நிலைத்தவனுடைய யோக க்ஷேமத்தை பகவான் நடத்துதல்.

இனி, எவர்கள் ஆசைநீங்கியவராய், உள்ளதை உள்ளபடி காண்கிறார்களோ,

௨௨. எந்த ஜனங்கள் அன்னியரல்லாதவராய் என்னைத் தியானிப்பவராய் எங்கும் உபாஸிக்கிறார்களோ, அந்த எப்பொழுதும் (தியானத்திலே) உறுதியாகச் சென்றவரது யோகக்ஷேமத்தை யான் வகிக்கின்றேன்.

எந்த ஸந்யாஸிகளான ஜனங்கள் வேறானவரல்லராய் = உயர்ந்த கடவுளான நாராயணனை ஆத்மாவாகக்கொண்டவராய், (அந்த ஆத்மாவையே) தியானிப்பவராய் என்னை எங்கும் (உள்ள பொருளாகக்) காண்கிறார்களோ, அவர்கட்கு = (தியான

परमार्थदर्शिनां नित्याभियुक्तानां सतताभियोगिनां योगक्षेमं, योगः अप्राप्तस्य प्रापणम्, क्षेमः तद्रक्षणम्, तदुभयं वहामि प्रापयामि अहम्; 'ज्ञानी त्वात्मैव मे मतम्' 'स च मम प्रियः' यस्मात्, तस्मात् ते मम आत्मभूताः प्रियाश्च इति॥

ननु अन्येषामपि भक्तानां योगक्षेमं वहत्येव भगवान्। सत्यं, वहत्येव; किन्तु अयं विशेषः—अन्ये ये भक्ताः ते आत्मार्थं स्वयमपि योगक्षेमम् ईहन्ते; अनन्यदर्शिनस्तु न आत्मार्थं योगक्षेमम् ईहन्ते; न हि ते जीविते मरणे वा आत्मनः गृद्धिं कुर्वन्ति; केवलमेव भगवच्छरणाः ते; अतः भगवानेव तेषां योगक्षेमं वहतीति॥ २२॥

ननु, अन्या अपि देवताः त्वमेव चेत्, तद्भक्ताश्च त्वामेव यजन्ते। सत्यमेवम्—

२३. येऽप्यन्यदेवताभक्ता यजन्ते श्रद्धयान्विताः।
तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम्॥

---

த்திலே) விடாமுயற்சியுள்ளவராய் உண்மையக் காண்பவர்க்கு யோகமும், க்ஷேமமுமாகிய அவ்விரண்டனையும் யான் நடத்துகிறேன். யோகம் - அடையாததை அடைதல்; க்ஷேமம் - அதனைக் காப்பாற்றுதல். "ஞானியோ ஆத்மாதான் (என்பது) - எனது கொள்கை," "அவனும் எனக்குப்பிரியமானவன்" (எ - கஅ, கஎ) ஆதலால், அவர்கள் என்னுடைய ஆத்மாவாகவும், எனக்குப் பிரியர்களாகவும் இருக்கிறார்களென்க.

(ஆக்ஷேபம்) :—அப்படியானால், மற்றைய பக்தர்களுக்குந்தான் பகவான் யோகக்ஷேமத்தை நடத்தவே நடத்துகின்றார்.

(ஸமாதானம்) :—உண்மை ; நடத்தவே நடத்துகின்றார். ஆனால், இது விசேஷம் [வித்தியாசம்] :—மற்றைய பக்தர்கள் எவர்களோ, அவர்கள் தங்களுக்காக யோகக்ஷேமத்தைத் தாங்களும் முயற்சிக்கிறார்கள். ஆனால், (தங்களைக்காட்டிலும்) வேறானதைக் காணாதவர்கள் தமக்காக யோகக்ஷேமத்தை முயற்சிப்பதில்லை. அவர்கள் [ஆத்மஞானிகள்], வாழ்விலாயினும், சாவிலாயினும் தமக்கு ஆசையைக் கொள்வதில்லையன்றோ. அவர்கள், பகவானைமாத்திரமே அடைக்கலமாகக் கொண்டவர்கள். ஆகவே, பகவானேதான் அவர்களது யோகக்ஷேமத்தை நடத்துகிறாரென்பது. (உஉ)

மற்றைய பக்தர்கள் பரம்பொருளை அறியாது பூஜிக்கிறார்கள்.

(ஆக்ஷேபம்):—அங்ஙனம், வேறு தேவதைகளும் நீங்களேயானால், அவர்களுடைய பக்தர்களும் உங்களையேதான் பூஜிக்கிறார்கள்.

(ஸமாதானம்) :—இவ்வாறு உண்மை :

உ௩. எவர்களும் வேறுதெய்வ பக்தர்களாய் நம்பிக்கையோடுகூடி (அத்தெய்வங்களை)ப் பூஜிக்கிறார்களோ, அவர்களும் கௌந்தேய! அறியாமையோடு என்னையே பூஜிக்கிறார்கள்.

न वेदयज्ञाध्ययनैः चतुर्णामपि वेदानामध्ययनैः यथावद्यज्ञाध्ययनैश्च—वेदाध्ययनेनैव यज्ञाध्ययनस्य सिद्धत्वात् पृथग्यज्ञाध्ययनग्रहणं यज्ञविज्ञानोपलक्षणार्थम्—तथा न दानैः तुलापुरुषादिभिः, न च क्रियाभिः अग्निहोत्रादिभिः श्रौतादिभिः, न अपि तपोभिः उग्रैः चान्द्रायणादिभिः घोरैः, एवंरूपः यथा दर्शितं विश्वरूपं यस्य सः अहं एवंरूपः न शक्यः अहं नृलोके द्रष्टुं त्वदन्येन त्वत्तः अन्येन कुरुप्रवीर ॥ சஅ ॥

சகூ. मा ते व्यथा मा च विमूढभावो
दृष्ट्वा रूपं घोरमीदृङ्ममेदम् ।
व्यपेतभीः प्रीतमनाः पुनस्त्वं
तदेव मे रूपमिदं प्रपश्य ॥

मा ते व्यथा मा भूत् ते भयम्, मा च विमूढभावः विमूढचित्तता, दृष्ट्वा उपलभ्य रूपं घोरं ईदृक् यथादर्शितं मम इदम् । व्यपेतभीः विगतभयः, प्रीतमनाः च सन् पुनः त्वं तदेव चतुर्भुजं रूपं शङ्खचक्रगदाधरं तव इष्टं रूपं इदं प्रपश्य ॥

सञ्जय उवाच ॥

ரு௦. इत्यर्जुनं वासुदेवस्तथोक्त्वा
स्वकं रूपं दर्शयामास भूयः ।

---

வேதங்கள் - நான்கு. படித்தல் - நியமமாக ஓதுதல்.—வேதங்களைப் படிப்பதனுலேயே யஜ்ஞங்களைப் படிப்பது(ம் தானே) அமைந்ததாதலின், யஜ்ஞங்களைப் படித்தல் என வேருக எடுத்துக்கூறுதல் - யஜ்ஞங்களுடைய அறிவை உணர்த்துதற்காக என்க. ("வேதத்தைப் படித்தலென்பது - அர்த்தஞானமின்றி அதனை வாய்ப்பாடமாகச் சொல்லுதல்" என்பது - சிலர்கொள்கை. ஆகவே, அர்த்தஞானம் அவச்யமென்று விதித்தற்காக அவ்வாறு கூறவேண்டிய தாயிற்று.—ஆ.). தானங்களால் - துலாதானம் [ஒருவன் தனது நிறைக்குச் சரியான தங்கத்தைப் பிராமணனுக்குத் தானங்கொடுத்தல்] முதலியவற்ருல். கர்மங்களால் - சுருதிமுதலியவற்றில் விதித்த அக்நிஹோத்ரம் முதலியவற்ருல். தவங்களால் - சாந்திராயணம் முதலியவற்ருல். இத்தகைய வடிவத்தை - மேற்காட்டிய விச்வரூபத்தை. (சஅ)

சகூ. என்னுடைய இத்தகைய இக்கோரவடிவத்தைப் பார்த்து, உனக்குப் பயம் உண்டாகாமலிருக்கட்டும்; மயங்கிய தன்மையும் உண்டாகாமலிருக்கட்டும். நீ பயம் நீங்கியவனுய், மனம்மகிழ்ந்தவனுய் மீண்டும் என்னுடைய இந்த அதேவடிவத்தை நன்ருகப் பார்.

இத்தகைய - மேற்காட்டிய. அதே வடிவத்தை - நான்கு கைகளையுடையதாய், சங்கு சக்கிரம் கதை இவற்றை ஏந்தியதாய், உனக்குப் பிரியமாயுள்ள வடிவை. (சகூ)

ஸஞ்ஜயன் சொல்லலுற்ருன் :

ரு௦. வாஸுதேவன் இவ்வாறு அர்ஜுனனுக்கு அத்தகைய (வார்த்தையைக்) கூறி, மீண்டும் தனது வடிவைக் காண்பித்தார். அன்றியும், மஹாத்மாவானவர், நடுங்கி

𑌆𑌶𑍍𑌵𑌾𑌸𑌯𑌾𑌮𑌾𑌸 𑌚 𑌭𑍀𑌤𑌮𑍇𑌨𑌂
𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌪𑍁𑌨𑌃 𑌸𑍌𑌮𑍍𑌯𑌵𑌪𑍁𑌰𑍍𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾 ॥

𑌇𑌤𑌿 𑌏𑌵𑌂 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌂 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌃 𑌤𑌥𑌾𑌵𑌿𑌧𑌂 𑌵𑌚𑌨𑌂 𑌉𑌕𑍍𑌤𑍍𑌵𑌾, 𑌸𑍍𑌵𑌕𑌂 𑌵𑌸𑍁𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌗𑍃𑌹𑍇 𑌜𑌾𑌤𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌦𑌰𑍍𑌶𑌯𑌾𑌮𑌾𑌸 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌵𑌾𑌨𑍍 𑌭𑍂𑌯𑌃 𑌪𑍁𑌨𑌃 । 𑌆𑌶𑍍𑌵𑌾𑌸𑌯𑌾𑌮𑌾𑌸 𑌚 𑌆𑌶𑍍𑌵𑌾𑌸𑌿𑌤𑌵𑌾𑌨𑍍 𑌭𑍀𑌤𑌮𑍇𑌨𑌂, 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌪𑍁𑌨𑌃 𑌸𑍌𑌮𑍍𑌯𑌵𑌪𑍁𑌃 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌦𑍇𑌹𑌃 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾 ॥ ௫௦ ॥

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 ॥

௫௧. 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑍇𑌦𑌂 𑌮𑌾𑌨𑍁𑌷𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌤𑌵 𑌸𑍌𑌮𑍍𑌯𑌂 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 ।
𑌇𑌦𑌾𑌨𑍀𑌮𑌸𑍍𑌮𑌿 𑌸𑌂𑌵𑍃𑌤𑍍𑌤𑌃 𑌸𑌚𑍇𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌗𑌤𑌃 ॥

𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌇𑌦𑌂 𑌮𑌾𑌨𑍁𑌷𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌮𑌤𑍍𑌸𑌮𑌂 𑌤𑌵 𑌸𑍌𑌮𑍍𑌯𑌂 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 𑌇𑌦𑌾𑌨𑍀𑌮𑌧𑍁𑌨𑌾 𑌅𑌸𑍍𑌮𑌿 𑌸𑌂𑌵𑍃𑌤𑍍𑌤𑌃 𑌸𑌂𑌜𑌾𑌤𑌃—𑌕𑌿𑌮𑍍?—𑌸𑌚𑍇𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌚𑌿𑌤𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌂 𑌗𑌤𑌃 𑌚 𑌅𑌸𑍍𑌮𑌿 ॥ ௫௧ ॥

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 ॥

௫௨. 𑌸𑍁𑌦𑍁𑌰𑍍𑌦𑌰𑍍𑌶𑌮𑌿𑌦𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌵𑌾𑌨𑌸𑌿 𑌯𑌨𑍍𑌮𑌮 ।
𑌦𑍇𑌵𑌾 𑌅𑌪𑍍𑌯𑌸𑍍𑌯 𑌰𑍂𑌪𑌸𑍍𑌯 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌦𑌰𑍍𑌶𑌨𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌣𑌃 ॥

𑌸𑍁𑌦𑍁𑌰𑍍𑌦𑌰𑍍𑌶𑌂 𑌸𑌰𑍍𑌵𑌥𑌾 𑌦𑍁𑌃𑌖𑍇𑌨 𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑌸𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌸𑍁𑌦𑍁𑌰𑍍𑌦𑌰𑍍𑌶𑌮𑌿𑌦𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌵𑌾𑌨𑌸𑌿 𑌯𑌤𑍍 𑌮𑌮, 𑌦𑍇𑌵𑌾𑌃 𑌅𑌪𑌿 𑌅𑌸𑍍𑌯 𑌮𑌮 𑌰𑍂𑌪𑌸𑍍𑌯 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 𑌦𑌰𑍍𑌶𑌨𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌣𑌃 ; 𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌚𑍍𑌛𑌵𑍋(𑌅)𑌪𑌿 𑌨 𑌅𑌪𑍍𑌯𑍇𑌵 𑌦𑍃𑌷𑍍𑌟𑌵𑌨𑍍𑌤𑌃, 𑌨 𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌚 𑌇𑌤𑌿 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑌃 ॥ ௫௨ ॥

---

நிற்கின்ற இவனை, மறுபடியும் சாந்தவடிவினராகித் தேற்றினர்.

தனது வடிவை - வஸுதேவரது வீட்டிலே தோன்றிய வடிவத்தை. (௫௦)

அர்ஜுனன் சொல்லலுற்றான் :

௫௧. ஜநார்த்தந! உம்முடைய இந்த சாந்தமான மநுஷ்யவடிவத்தைப் பார்த்து, இப்பொழுது மனந்தெளிந்தவனாகவும், ஸ்வபாவத்தை [தனது இயற்கைநிலையை] அடைந்தவனாகவும் ஆகியுள்ளேன்.

மநுஷ்யவடிவத்தை - எனது தோழனாகவுள்ள இனிய வடிவத்தை. (௫௧)

விச்வரூபக்காட்சியைப் பெறுதற்கு பக்திதான் கருவி.

ஸ்ரீபகவான் சொல்லலுற்றார் :

௫௨. என்னுடைய எந்தவடிவத்தைப் பார்த்திருக்கின்றாயோ, (அந்த) இவ்வடிவமானது - பார்ப்பதற்கு மிகவும் அரிது. தேவர்களுங்கூட இவ்வடிவத்தைப் பார்ப்பதிலே என்றும் ஆவலுள்ளவர்.

(தேவர்கள் இவ்வடிவத்தைப்) பார்க்க விரும்புபவராயினும், நீ (பார்த்திருப்பது)போல, பார்த்ததே இல்லை ; பார்க்கப்போவதும் இல்லை என்பது கருத்து. (௫௨)

𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 ?—

௫௩. 𑌨𑌾𑌹𑌂 𑌵𑍇𑌦𑍈𑌰𑍍𑌨 𑌤𑌪𑌸𑌾 𑌨 𑌦𑌾𑌨𑍇𑌨 𑌨 𑌚𑍇𑌜𑍍𑌯𑌯𑌾 ।
𑌶𑌕𑍍𑌯 𑌏𑌵𑌂𑌵𑌿𑌧𑍋 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌵𑌾𑌨𑌸𑌿 𑌮𑌾𑌂 𑌯𑌥𑌾 ॥

𑌨 𑌅𑌹𑌂 𑌵𑍇𑌦𑍈𑌃 𑌨 𑌤𑌪𑌸𑌾 𑌨 𑌦𑌾𑌨𑍇𑌨 𑌨 𑌚 𑌇𑌜𑍍𑌯𑌯𑌾 𑌶𑌕𑍍𑌯𑌃 𑌏𑌵𑌂𑌵𑌿𑌧𑌃 𑌯𑌥𑌾𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌃 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂, 𑌦𑍃𑌷𑍍𑌟𑌵𑌾𑌨𑍍 𑌅𑌸𑌿 𑌮𑌾𑌂 𑌯𑌥𑌾 ॥ ௫௩ ॥

𑌕𑌥𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌶𑌕𑍍𑌯𑌃 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௫௪. 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌤𑍍𑌵𑌨𑌨𑍍𑌯𑌯𑌾 𑌶𑌕𑍍𑌯 𑌅𑌹𑌮𑍇𑌵𑌂𑌵𑌿𑌧𑍋𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌂 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂 𑌚 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌨 𑌪𑍍𑌰𑌵𑍇𑌷𑍍𑌟𑍁𑌂 𑌚 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 ॥

𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌤𑍁 —𑌕𑌿𑌂𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌯𑌾 𑌇𑌤𑌿? 𑌆𑌹—𑌅𑌨𑌨𑍍𑌯𑌯𑌾 𑌅𑌪𑍃𑌥𑌗𑍍𑌭𑍂𑌤𑌯𑌾—𑌭𑌗𑌵𑌤𑌃 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌪𑍃𑌥𑌕𑍍 𑌨 𑌕𑌦𑌾𑌚𑌿𑌦𑌪𑌿 𑌯𑌾 𑌭𑌵𑌤𑌿 𑌸𑌾 𑌅𑌨𑌨𑍍𑌯𑌾 𑌭𑌕𑍍𑌤𑌿𑌃 । 𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑌪𑌿 𑌕𑌰𑌣𑍈𑌃 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌾𑌦𑌨𑍍𑌯𑌤𑍍 𑌨 𑌉𑌪𑌲𑌭𑍍𑌯𑌤𑍇 𑌯𑌯𑌾, 𑌸𑌾 𑌅𑌨𑌨𑍍𑌯𑌾 𑌭𑌕𑍍𑌤𑌿𑌃, 𑌤𑌯𑌾 𑌅𑌨𑌨𑍍𑌯𑌯𑌾 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌶𑌕𑍍𑌯𑌃 𑌅𑌹𑌮𑍍 𑌏𑌵𑌂𑌵𑌿𑌧𑌃 𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌃 𑌹𑍇 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌤𑌃—𑌨 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌤𑌃— 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂 𑌚 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌨 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃, 𑌪𑍍𑌰𑌵𑍇𑌷𑍍𑌟𑍁𑌂 𑌚 𑌮𑍋𑌕𑍍𑌷𑌂 𑌚 𑌗𑌨𑍍𑌤𑍁𑌂, 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 ॥ ௫௪ ॥

𑌅𑌧𑍁𑌨𑌾 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌗𑍀𑌤𑌾𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌸𑌾𑌰𑌭𑍂𑌤𑌃 𑌅𑌰𑍍𑌥𑌃 𑌨𑌿𑌃𑌶𑍍𑌰𑍇𑌯-

---

எதனால் ?—

௫௩. (நீ) என்னை எப்படிப் பார்த்திருக்கிறாயோ, (அப்படி ஒருவராலும்) இத்தகைய நான் வேதங்களால் காணக்கூடியவன் அல்லேன் : தவத்தினால் அல்லேன் : தானத்தினால் அல்லேன் : யஜ்ஞத்தினால் அல்லேன்.

இத்தகைய - கீழ்க்கூறிய விதமாயுள்ள. (௫௩)

மற்று, எவ்வாறு (நீங்கள் காணத்) தக்கவர் என்பது ?—கூறுவோம் :

௫௪. ஆனால், பகைவரைத் தவிக்கச்செய்யும் அர்ஜுந! அன்னியமாகாத பக்தியினால், இத்தகைய என்னை (ஒருவன்) அறியவும், உண்மையில் பார்க்கவும், நுழையவும் கூடும்.

ஆனால், பக்தியினால் (ஒருவன் என்னைக் காணக்கூடும்).—எத்தகைய (பக்தியினால்) என்பது ?—கூறுகிறார் : வேறாகாத (பக்தியினால்). எது பகவானைத்தவிர வேறிடத்து ஒருபொழுதும் இல்லையோ, அதுவே வேறாகாத பக்தி. எல்லா இந்திரியங்களாலும் வாஸுதேவனைக்காட்டிலும் வேறானது எதனால் உணரப்படவில்லையோ, அது வேறாகாத பக்தி. அந்த வேறாகாத [வேறொன்றில் செல்லாது, பகவான் ஒருவரிடத்திலேயே உறுதியாக ஒருநிலைப்பட்ட] பக்தியினால், விச்வரூபவிதமாயுள்ள என்னை (ஒருவன்) சாஸ்திரங்களால் அறியக்கூடும். (அவன் என்னை) சாஸ்திரங்களால் அறிதற்கு மாத்திரம் அல்லன். (என்னை) உள்ளபடி நேரேகாணவும், மோக்ஷத்தை அடையவும் கூடும். (௫௪)

கீதை உபதேசிக்கின்ற உபதேசங்களின் ஸாரத்திரட்டு.

கீதாசாஸ்திரம் முழுதற்கும் ஸாரமாய், முக்தியைக் கொடுக்கும் உபதேசமா

सारार्थः अनुष्ठेयत्वेन संक्षिप्य उच्यते —

५५. मत्कर्मकृन्मत्परमो मद्भक्तः सङ्गवर्जितः ।
निर्वैरः सर्वभूतेषु यः स मामेति पाण्डव ॥

इति श्रीमहाभारते शतसाहस्र्यां संहितायां वैयासिक्यां भीष्मपर्वणि श्रीमद्भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे विश्वरूपदर्शनयोगो नाम एकादशोऽध्यायः ॥

मत्कर्मकृत् मदीयं कर्म मत्कर्म, तत् करोतीति मत्कर्मकृत् । मत्परमः — करोति हि भृत्यः स्वामिकर्म, न तु स्वात्मनः परमां प्राप्यां मत्वा गतिरिति स्वामिनं प्रतिपद्यते; अयं तु मत्कर्मकृत् मामेव परमां गतिं प्रतिपद्यते इति मत्परमः, अहं परः परा गतिः यस्य सः अयं मत्परमः । तथा मद्भक्तः मामेव सर्वप्रकारैः सर्वात्मना सर्वात्मभावेन च भजते इति मद्भक्तः । सङ्गवर्जितः यन्मत्तोऽन्यत् पुत्रकलत्रबान्धवभोगेषु सङ्गवर्जितः प्रीतिसङ्गवर्जितः । निर्वैरः निरस्तवैरः सर्वभूतेषु शत्रुसापराधितः कृतः कृत्स्नापकारप्रवृत्तेष्वपि । यः एवंभूतः सः मामेति, अहमेव तस्य परा गतिः, न अन्या गतिः काचित् भवति । अयं तव उपदेशः मया उपदिष्टः हे पाण்डव इति ॥ ५५ ॥

इति श्रीभगवद्गीताभाष्ये एकादशोऽध्यायः ॥

---

னது - (ஸம்ஸாரத்தினின்றும் விடுபட விரும்புவோர்களால்) அநுஷ்டிக்கப்படவேண்டுமென்று, இப்பொழுது ஒருங்கேதிரட்டி அருளிச்செய்யப்படுகின்றது :

௫௫. எனக்காகக் கர்மத்தைச் செய்பவனும், என்னையே மேலாகக் கொண்டவனும், என்னுடைய பக்தனும், பற்றில்லாதவனும், ஸகலப்பிராணிகளிடத்தும் வைரம் நீங்கியவனும் எவன் இருக்கின்றானே, பாண்டவ ! அவன் என்னை வந்தடைகிறான்.

ஸ்ரீமகாபாரதத்திலே, வ்யாஸரருளிச்செய்த நூறாயிரக்கிரந்த ஸம்ஹிதையிலே பீஷ்மபர்வத்திலே, ஸ்ரீமத் பகவத்கீதைகளாக உபநிஷத்துக்களாக ப்ரஹ்மவித்யையாக யோகசாஸ்திரமாக இருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணார்ஜுந ஸம்வாதத்திலே, விச்வரூபதர்சந யோகம் என்னும் பதினோராம் அத்தியாயம் முற்றும்.

வேலைக்காரன் யஜமானனுக்காகத் தொழிலைச் செய்கிறான் ; மற்று, தான் இறந்தபுன்பு அடையவேண்டிய மேலான கதி (அவனே) என்று யஜமானனை அடைவதில்லை. இவனோ, எனக்காகவே தொழிலைச் செய்பவனாய், என்னையே மேலான கதியாக அடைகிறானென்க. அவ்வாறே,(இவன்) எல்லாவிதத்தாலும் முழுமனத்தோடும் முழுமுயற்சியோடும் என்னையே தொழுகிறான் ஆதலால், எனது பக்தனென்க. பற்றில்லாதவன் - திரவியம், மக்கள், சிநேகிதர், மனைவி, உறவினர், போகங்கள் இவர்களின்மீது பிரியமும் ஆசையும் இல்லாதவன். ஸகலப்பிராணிகளிடத்தும் வைரம்நீங்கியவன் - தனக்கு முற்றும் கெடுதியைச் செய்துவருபவரிடத்துங்கூடப் பகைமையில்லாதவன். எவன் இப்படிப்பட்டவனோ, அவன் என்னை வந்தடைகிறான். நானே அவனுக்கு மேலான கதி ; (என்னைத்தவிர) வேறொருகதியும் இல்லை. பாண்டவ ! நான் உனக்கு உபதேசித்த உபதேசம் இதுவாம். (௫௫)

ஸ்ரீமத் பகவத்கீதாபாஷ்யத்தில் பதினோராவது அத்தியாயம் முற்றிற்று.

𑌅𑌥

## 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍋𑌗𑌃॥

𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌿𑌷𑍁 𑌵𑌿𑌭𑍂𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑍇𑌷𑍁 𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌷𑍁 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 𑌅𑌕𑍍𑌷𑌰𑌸𑍍𑌯 𑌵𑌿𑌧𑍍𑌵𑌸𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌾𑌧𑌿𑌵𑌿𑌶𑍇𑌷𑌸𑍍𑌯 𑌉𑌪𑌾𑌸𑌨𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍; 𑌸𑌰𑍍𑌵𑌯𑍋𑌗𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑌤𑍍𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍋𑌪𑌾𑌧𑍇𑌃 𑌈𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌤𑌵 𑌚 𑌉𑌪𑌾𑌸𑌨𑌂 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌰 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍। 𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍇 𑌤𑍁 𑌐𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 𑌆𑌦𑍍𑌯𑌂 𑌸𑌮𑌸𑍍𑌤𑌜𑌗𑌦𑌾𑌤𑍍𑌮𑌰𑍂𑌪𑌂 𑌤𑍍𑌵𑌦𑍀𑌯𑌂 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌮𑍍 𑌉𑌪𑌾𑌸𑌨𑌾𑌯𑍈𑌵 𑌤𑍍𑌵𑌯𑌾। 𑌤𑌚𑍍𑌚 𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌉𑌕𑍍𑌤𑌵𑌾𑌨𑌸𑌿 ‘𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿। 𑌅𑌤𑌃 𑌅𑌹𑌮𑍍 𑌅𑌨𑌯𑍋𑌃 𑌉𑌭𑌯𑍋𑌃 𑌪𑌕𑍍𑌷𑌯𑍋𑌃 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌤𑌰𑌬𑍁𑌭𑍁𑌤𑍍𑌸𑌯𑌾 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌪𑍃𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌇𑌤𑌿 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚—

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚॥

க. 𑌏𑌵𑌂 𑌸𑌤𑌤𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 𑌯𑍇 𑌭𑌕𑍍𑌤𑌾𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌂 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇।
𑌯𑍇 𑌚𑌾𑌪𑍍𑌯𑌕𑍍𑌷𑌰𑌮𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍍 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌕𑍇 𑌯𑍋𑌗𑌵𑌿𑌤𑍍𑌤𑌮𑌾𑌃॥

‘𑌏𑌵𑌮𑍍’ 𑌇𑌤𑌿 𑌅𑌤𑍀𑌤𑌾𑌨𑌨𑍍𑌤𑌰𑌶𑍍𑌲𑍋𑌕𑍇𑌨 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍 𑌅𑌰𑍍𑌥𑌂 𑌪𑌰𑌾𑌮𑍃𑌶𑌤𑌿 ‘𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾। 𑌏𑌵𑌂 𑌸𑌤𑌤𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌨𑍈𑌰𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑍇𑌣 𑌭𑌗𑌵𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌾𑌦𑍌

---

## பன்னிரண்டாம் அத்தியாயம்: பக்தியோகம்.

**ஈச்வரனைத் தொழுபவர் உயர்ந்தவரா? அக்ஷரத்தைத் தொழுபவர் உயர்ந்தவரா?**

இரண்டாம் அத்தியாயம்முதல் விபூதி(அத்தியாயம்)வரையிலுமுள்ள அத்தியாயங்களுள், பலவகையான எந்த உபாதிகளும் ஒழிந்ததாய், அழியாப்ரஹ்மமாயுள்ள பரமாத்மாவை உபாஸித்தல் உபதேசிக்கப்பட்டது. ஸகலத்தையும் அமைப்பதிலே வல்லமையும், ஸகலத்தையும் அறிவதிலே ஸாமர்த்தியமும் உள்ளவராய், ஸத்துவகுணத்தை உபாதியாகப் பெற்றவராய், பிரபஞ்சத்தை ஆளுகின்ற உம்மையும் உபாஸித்தலானது ஆங்காங்கு உபதேசிக்கப்பட்டது. ஆனால், விச்வரூபஅத்தியாயத்தினுள், ஸகலஜகத்தின் வடிவமாய், முதலிலுள்ளதான உம்முடைய ஈச்வரவடிவானது, உபாஸித்தற்காகவே உம்மால் காட்டப்பட்டது. அன்றியும், அதனைக் காட்டியபின்பு, "எனக்காகக் கர்மத்தைச் செய்பவனாய்" (கக - ருரு) என்று தொடங்கும்(திருவாக்கை) அருளிச்செய்திருக்கிறீர்கள். ஆகவே, நான் இவ்விரண்டுவகைகளுள் மேலானதைத் தெரிந்துகொள்ளவேண்டும் என்னும் கருத்தோடு உம்மை வினவுகின்றேன் என அர்ஜுனன் கூறலாயினன் :

அர்ஜுனன் சொல்லலுற்றான் :

க. எவர்கள் இவ்வாறு எப்பொழுதும் ஒருமிலைப்பட்ட பக்தராய் உம்மைத் தொழுகிறார்களோ ; மற்றும், எவர்கள் வெளிப்படையாகஇல்லாதஅழியாப்பொருளைத் (தொழுகிறார்களோ) ; அவர்களுள், யோகத்தை விசேஷமாக அடைந்தவர்கள் யார்?

"இவ்வாறு" என்பது - "எனக்காகக் கர்மத்தைச் செய்பவனாய்" (கக - ருரு) என்று தொடங்குகின்ற முந்தின அடுத்தசுலோகத்தினால் கூறப்பட்ட விஷயத்

𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌾𑌃 𑌸𑌨𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌾 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌯𑍇 𑌭𑌕𑍍𑌤𑌾𑌃 𑌅𑌨𑌨𑍍𑌯𑌶𑌰𑌣𑌾𑌃 𑌸𑌨𑍍𑌤𑌃 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌯𑌥𑌾𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍𑌤𑌿 ; 𑌯𑍇 𑌚 𑌅𑌨𑍍𑌯𑍇 𑌅𑌪𑌿 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑍈𑌷𑌣𑌾𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌃 𑌯𑌥𑌾𑌵𑌿𑌶𑍇𑌷𑌿𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌅𑌕𑍍𑌷𑌰𑌂, 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌾𑌧𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍍 𑌅𑌕𑌰𑌣𑌗𑍋𑌚𑌰𑌮𑍍— 𑌯𑌦𑍍 𑌹𑌿 𑌕𑌰𑌣𑌗𑍋𑌚𑌰𑌂 𑌤𑌦𑍍 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇, 𑌅𑌞𑍍𑌜𑍇𑌃 𑌧𑌾𑌤𑍋𑌃 𑌤𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 ; 𑌇𑌦𑌂 𑌤𑍁 𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌂 𑌶𑌿𑌷𑍍𑌟𑍈𑌶𑍍𑌚 𑌉𑌕𑍍𑌤𑍈𑌃 𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑍈𑌃 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌂, 𑌤𑌦𑍍 𑌯𑍇 𑌚𑌾𑌪𑌿 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇—𑌤𑍇𑌷𑌾𑌮𑍍 𑌉𑌭𑌯𑍇𑌷𑌾𑌂 𑌮𑌧𑍍𑌯𑍇 𑌕𑍇 𑌯𑍋𑌗𑌵𑌿𑌤𑍍𑌤𑌮𑌾𑌃, 𑌕𑍇 𑌅𑌤𑌿𑌶𑌯𑍇𑌨 𑌯𑍋𑌗𑌵𑌿𑌦𑌃 ? 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௧ ॥

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌉𑌵𑌾𑌚 । 𑌯𑍇 𑌤𑍁 𑌅𑌕𑍍𑌷𑌰𑍋𑌪𑌾𑌸𑌕𑌾𑌃 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑍋 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍈𑌷𑌣𑌾𑌃, 𑌤𑍇 𑌤𑌾𑌵𑌤𑍍 𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑍁 ; 𑌤𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌯𑌦𑍍 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌤𑌦𑍍 𑌉𑌪𑌰𑌿𑌷𑍍𑌟𑌾𑌦𑍍 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌃 । 𑌯𑍇 𑌤𑍁 𑌇𑌤𑌰𑍇—

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌉𑌵𑌾𑌚 ॥

௨. 𑌮𑌯𑍍𑌯𑌾𑌵𑍇𑌶𑍍𑌯 𑌮𑌨𑍋 𑌯𑍇 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇 ।
𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌪𑌰𑌯𑍋𑌪𑍇𑌤𑌾𑌃 𑌤𑍇 𑌮𑍇 𑌯𑍁𑌕𑍍𑌤𑌤𑌮𑌾 𑌮𑌤𑌾𑌃 ॥

---

தைக் குறிக்கின்றது. இவ்வாறு எப்பொழுதும் ஒருநிலைப்பட்ட - பகவானுக்காகக் கர்மம்(செய்தல்)முதலான கீழ்க்கூறிய விஷயத்திலே ஒருநிலைப்பட்டவராய் இடைவிடாது தலைப்பட்டுள்ள என்றபடி. எந்தப் பக்தர்கள் (தமக்கு) வேறு அடைக்கலமில்லாதவராய், மேலேகாட்டிய விச்வரூபத்தை(க்கொண்ட) உம்மைத் தியானிக்கிறார்களோ; மற்றும்,எல்லா உபாதிகளும் ஒழிந்துள்ளமையால் இந்திரியங்களுக்கு எட்டாததாய், மேலே (௧௨ - ௩) சிறப்பித்துக்கூறிய அழியாப்பொருளான ப்ரஹ்மத்தை வேறு எவர்கள் எல்லாஆசைகளையும் விட்டு, எல்லாக்கர்மங்களையும் துறந்து (தியானிக்கிறார்களோ; அவர்கள் அவ்வாறு இருதிறத்தாரென்க). —எது இந்திரியங்கட்கு எட்டுவதோ, அது வெளிப்படை எனப்படுகின்றது; (வி என்னும் உபஸர்க்கத்தையுடைய) அஞ்ஜ் என்னும் வினைப்பகுதிக்கு அது[வெளிப்படுத்தப்பட்டபொருள்]செயப்படுபொருளாதலின். இந்த அழியாப் பொருளோ, அதற்கு மாறானது [புலப்படாதது].—(தனக்கென்று) சிறப்பாயமைந்து, (இனி ௧௨ - ௩ல்) கூறப்படுகின்ற விசேஷணங்களையுடைய அந்த (நிர்க்குண ப்ரஹ்மத்தை) எவர்கள் தியானிக்கிறார்களோ ; (இன்னும், எவர்கள் ஸகுணப்ரஹ்மத்தைத் தியானிக்கிறார்களோ ; அவ்விருவகுப்பினருள், யோகத்தை [ஸமாதியை] விசேஷமாக அடைந்தவர்கள் யார் ? (௧)

ஸகுண ப்ரஹ்மத்தைத் தொழுபவர்கள்.

ஸ்ரீபகவான் கூறலாயினர் : எவர்கள் மெய்யறிவுகூடி, ஆசைகள் நீங்கி, அழியாப்பொருளைத் தொழுகிறார்களோ,அவர்கள் இப்பொழுது இருக்கட்டும். அவர்களைப் பற்றிச் சொல்லவேண்டியது எதுவோ, அதனை மேலே சொல்லுவோம். மற்று, மற்றையவர்கள் எவர்களோ, (அவர்களைப்பற்றி இங்கே கூறுவோம்) :

ஸ்ரீபகவான் சொல்லலுற்றார் :

௨. எவர்கள் என்னிடத்து மனத்தைச் செலுத்தி, உயர்ந்த நம்பிக்கையோடு கூடி, எப்பொழுதும் ஒருநிலைப்பட்டவராய் என்னைத் தொழுகிறார்களோ, அவர்கள் எனது அபிப்பிராயத்தில் மேலான யோகிகள் [யோகத்தை விசேஷமாக அடைந்தவர்கள்].

मयि विश्वरूपे परमेश्वरे आवेश्य समाधाय मनः ये भक्ताः सन्तः मां सर्वयोगेश्वराणाम् अधीश्वरं सर्वज्ञं विमुक्तरागादिक्लेशतिमिरदृष्टिं नित्ययुक्ताः अतीतानन्तराध्यायान्ते उक्तश्लोकन्यायेन सततयुक्ताः सन्तः उपासते श्रद्धया परया प्रकृष्टया उपेताः ते मे मम मताः अभिमताः युक्ततमाः इति । नैरन्तर्येण हि ते मत्सेवया अहोरात्राणि अतिवाहयन्ति, अहोरात्रम् अविरतं मां ध्यायन्ति । अतः युक्तं तान् प्रति युक्ततमाः इति वक्तुम् ॥ २ ॥

किम् इतरे युक्ततमाः न भवन्ति ? न ; किन्तु तान् प्रति यत् वक्तव्यं तत् शृणु —

௩. ये त्वक्षरमनिर्देश्यमव्यक्तं पर्युपासते ।
सर्वत्रगमचिन्त्यं च कूटस्थमचलं ध्रुवम् ॥

௪. संनियम्येन्द्रियग्रामं सर्वत्र समबुद्धयः ।
ते प्राप्नुवन्ति मामेव सर्वभूतहिते रताः ॥

ये तु अक्षरम् अनिर्देश्यम् अव्यक्तम्, अव्यक्तत्वात् अशब्दगोचरम् इति न निर्देष्टुं शक्यते, अतः अनिर्देश्यम् अव्यक्तं न केनापि प्रमाणेन

---

எவர்கள் விச்வரூபத்தைக்கொண்ட பரமேச்வரனான என்னிடத்து மனத்தை வைத்து, பக்தர்களாகி, முந்தின அடுத்த அத்தியாயமுடிவிலுள்ள சுலோகத்தில் உபதேசிக்கப்பட்ட உபதேசத்தை ஒழுங்காக அநுஷ்டிப்பதனால் எப்பொழுதும் ஒருநிலைப் பட்டவராகி, யோகத்தை ஆளுபவர்க்கெல்லாம் தலைமைஈச்வரனும் முற்றும்உணர்ந்தவனும் ஆசைமுதலிய தீங்குகளுக்கு(க் காரணமான அறியாமை என்னும்) இருட்டினாலாகும் பொய்யறிவு நீங்கிய என்னை உயர்ந்த நம்பிக்கையோடு கூடித் தொழுகிறார்களோ, அவர்கள் மேலான யோகிகள் என்று நான் எண்ணுகின்றேன். நிச்சயமாக, அவர்கள் என்னை இடைவிடாது சிந்தித்தலால் பகல் இரவுகளை கழிக்கிறார்கள் ; பகலிலும் இரவிலும் என்னை அதிகமாகத் தியானிக்கிறார்கள். ஆதலால், அவர்களைப்பற்றி மேலான யோகிகள் என்று கூறுவது பொருந்துமென்க. (௨)

நிர்க்குண ப்ரஹ்மத்தைத் தொழுபவர்கள்.

மற்றையோர்கள் மேலான யோகிகள் அல்லரோ ? — நிற்க. — ஆனால், அவர்களைப்பற்றிச் சொல்லவேண்டியது எதுவோ, அதனைக் கேட்பாயாக :

௩, ௪. மற்று, எவர்கள் இந்திரியக்கூட்டத்தைச் செவ்வையாய் அடக்கி, எப்பொழுதும் ஸமபுத்தியுள்ளவராய், ஸகலப்பிராணிகளுடைய நன்மையிலே கருத்துடையவராய், குறிப்பிட்டுக்காட்டிஉணர்த்தமுடியாததும், வெளிப்படையாக இல்லாததும், எங்குமுள்ளதும், நினைக்கவொண்ணாததும், கூடஸ்தமும், அசையாததுமுமான அழியாத நித்யப்பொருளை எங்கும் தொழுகிறார்களோ, அவர்கள் என்னையே வந்தடைகிறார்கள்.

அழியாப்பொருளானது வெளிப்படையாக இல்லாமையினால், சொல்லுக்கு எட்டாதது ; எனவே, ஒருவராலும் அதனை குறிப்பிட்டுக்காட்டி உணர்த்தமுடியாது. (அது) அறிதற்குக் கருவியாயுள்ள எதற்கும் புலப்படாதது; ஆகவே, (இன்னதென்று)

𑌵𑍍𑌯𑌜𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 𑌪𑌰𑌿 𑌸𑌮𑌨𑍍𑌤𑌾𑌤𑍍 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇। 𑌉𑌪𑌾-𑌸𑌨𑌂 𑌨𑌾𑌮 𑌯𑌥𑌾𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑍍 𑌉𑌪𑌾𑌸𑍍𑌯𑌸𑍍𑌯 𑌅𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌵𑌿𑌷𑌯𑍀𑌕𑌰𑌣𑍇𑌨 𑌸𑌾𑌮𑍀𑌪𑍍𑌯𑌮𑍍 𑌉𑌪-𑌗𑌮𑍍𑌯 𑌤𑍈𑌲𑌧𑌾𑌰𑌾𑌵𑌤𑍍 𑌸𑌮𑌾𑌨𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌪𑍍𑌰𑌵𑌾𑌹𑍇𑌣 𑌦𑍀𑌰𑍍𑌘𑌕𑌾𑌲𑌂 𑌯𑌤𑍍 𑌆𑌸𑌨𑌂 𑌤𑌤𑍍 𑌉𑌪𑌾𑌸𑌨𑌮𑍍 𑌆𑌚𑌕𑍍𑌷𑌤𑍇। 𑌅𑌕𑍍𑌷𑌰𑌸𑍍𑌯 𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌮𑍍 𑌆𑌹 — 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰-𑌗𑌂 𑌵𑍍𑌯𑍋𑌮𑌵𑌤𑍍 𑌵𑍍𑌯𑌾𑌪𑌿 𑌅𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌂 𑌚 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌮𑍍 — 𑌯𑌤𑍍 𑌹𑌿 𑌕𑌰𑌣𑌗𑍋𑌚𑌰𑌂 𑌤𑌤𑍍 𑌮𑌨𑌸𑌾𑌪𑌿 𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌂, 𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌮𑍍 𑌅𑌕𑍍𑌷𑌰𑌮𑍍 — 𑌕𑍂𑌟𑌸𑍍𑌥𑌂, 𑌦𑍃𑌶𑍍𑌯-𑌮𑌾𑌨𑌗𑍁𑌣𑌮𑍍 𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌦𑍋𑌷𑌂 𑌵𑌸𑍍𑌤𑍁 𑌕𑍂𑌟𑌮𑍍। '𑌕𑍂𑌟𑌰𑍂𑌪𑌮𑍍' '𑌕𑍂𑌟𑌸𑌾𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍌 𑌕𑍂𑌟𑌶𑌬𑍍𑌦𑌃 𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑍋 𑌲𑍋𑌕𑍇। 𑌤𑌥𑌾 𑌚 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌨𑍇𑌕𑌸𑌂𑌸𑌾𑌰-𑌬𑍀𑌜𑌮𑍍 𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌦𑍋𑌷𑌵𑌤𑍍 𑌮𑌾𑌯𑌾𑌵𑍍𑌯𑌾𑌕𑍃𑌤𑌾𑌦𑌿𑌶𑌬𑍍𑌦𑌵𑌾𑌚𑍍𑌯𑌤𑌯𑌾 '𑌮𑌾𑌯𑌾𑌂 𑌤𑍁 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 𑌮𑌾𑌯𑌿𑌨𑌂 𑌤𑍁 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍' '𑌮𑌮 𑌮𑌾𑌯𑌾 𑌦𑍁𑌰𑌤𑍍𑌯𑌯𑌾' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍌 𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌂 𑌯𑌤𑍍 𑌤𑌤𑍍 𑌕𑍂𑌟𑌮𑍍, 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌕𑍂𑌟𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌕𑍂𑌟𑌸𑍍𑌥𑌂 𑌤𑌦𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑌤𑌯𑌾। 𑌅𑌥 𑌵𑌾-𑌰𑌾𑌶𑌿𑌰𑌿𑌵 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌕𑍂𑌟𑌸𑍍𑌥𑌮𑍍। 𑌅𑌤 𑌏𑌵 𑌅𑌚𑌲𑌮𑍍। 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌅𑌚𑌲𑌂, 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌧𑍍𑌰𑍁𑌵𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௩ ॥

𑌸𑌂𑌨𑌿𑌯𑌮𑍍𑌯 𑌸𑌂𑌯𑌮𑍍𑌯 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍍𑌰𑌾𑌮𑌮𑍍 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑌮𑍁-𑌦𑌾𑌯𑌮𑍍, 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌕𑌾𑌲𑍇 𑌸𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌃 𑌸𑌮𑌾 𑌤𑍁𑌲𑍍𑌯𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌯𑍇𑌷𑌾𑌮𑍍

---

குறிக்கமுடியாதது. (ஆசைநீங்கி மெய்யறிவு கூடியவர்கள் அதனை) எங்கும் உபாஸிக்கிறார்கள்.—சாஸ்திரப்படி உபாஸிக்கவேண்டிய பொருளை (தியானத்திற்கு) விஷயமாகும்படி செய்துகொள்வதனால் (அதனுடைய) ஸமீபத்தை அடுத்து, எண்ணெயின் தாரைபோல (இடையறாத் தொடர்ச்சியான) ஒரே எண்ணத்தின் ஓட்டத்தோடு நீண்ட காலம் இருத்தல் எதுவோ, அதனை - உபாஸநம் [உபாஸித்தல், தொழுதல்] என்கிறார்கள். உபாஸிக்கவேண்டிய அழியாப்பொருளின் சிறப்பை அருளிச்செய்கிறார் :—(அழியாப்பொருள்) எங்குமுள்ளது, ஆகாசம்போல வியாபித்திருப்பது. வெளிப்படையாக இல்லாமையினால், நினைக்கவொண்ணாதது. எது இந்திரியங்கட்கு எட்டுவதோ, அது மனத்தாலும் நினைக்கக்கூடியது. அழியாப்பொருளோ, அதற்கு மாறாயுள்ளதனால் நினைக்கமுடியாதது. கூடஸ்தமானது. கூடமென்பது - (வெளிப்)பார்வைக்குக்குணமும், உள்ளே குற்றமும் உடையபொருள். "கூடரூபம் [கள்ளவடிவம், பொய்வடிவம், போலிவடிவம்]," "கூடஸாக்ஷ்யம் [பொய்ஸாக்ஷி]" என்பன முதலியவற்றிலே, கூடமென்னும் சொல் உலகத்தினுள் வழங்குகின்றது. அவ்வண்ணமே, பல ஸம்ஸாரத்திற்கு விதையாய், உள்ளே குற்றமுடையதாய், மாயை அவ்யாக்ருதம் முதலிய சொற்களால் கூறப்பட்டு "பிரகிருதியை மாயையாகவும், மாயையுடையவனை மஹேச்வரனாகவும் அறியவேண்டும்" (ச்வே - ௪ - ௧௦), "என்னுடைய மாயை கடத்தற்கு அரிது" (௭ - ௧௪) என்பன முதலியவற்றுள் வழங்கியுள்ள அவித்யை முதலானது எதுவோ, அது - (இங்கே) கூடமாம். அந்தக்கூடத்தினுள் அதற்குத் தலைமையான கண்காணியாய் நிற்பதனால், கூடஸ்தமென்க.—அல்லது, குவியல்போல நிற்பது - கூடஸ்தமென்க. (கூடம் - குவியல்.) ஆகவே, (அழியாப்பொருள்) அசையாதது. அசையாதது ஆதலால், நித்யமானது என்றபடி. (௩)

எவர்கள் இந்திரியக்கூட்டத்தை நன்றாக ஒடுக்கி, வேண்டியன வந்தபொழுதும் வேண்டாதன வந்தபொழுதும் எக்காலத்தும் ஒப்பநிற்கும் புத்தியையுடையவராய்,

𑌉𑌪𑌾𑌸𑌤𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌹𑌿𑌤𑍇 𑌰𑌤𑌾𑌃 । 𑌤𑍇 𑌯 𑌏𑌵𑌂𑌵𑌿𑌧𑌾𑌃 𑌤𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌮𑍇𑌵 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌹𑌿𑌤𑍇 𑌰𑌤𑌾𑌃 । 𑌕𑌿𑌂𑌤𑍁 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 "𑌮𑌾𑌂 𑌤𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍𑌤𑌿" 𑌇𑌤𑌿; '𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑍈𑌵 𑌮𑍇 𑌮𑌤𑌮𑍍' 𑌇𑌤𑌿 𑌹𑌿 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌨 𑌹𑌿 𑌭𑌗𑌵𑌤𑍍𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌣𑌾𑌂 𑌸𑌤𑌾𑌂 𑌯𑍁𑌕𑍍𑌤𑌤𑌮𑌤𑍍𑌵𑌮𑍍 𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌤𑌮𑌤𑍍𑌵𑌂 𑌵𑌾 𑌵𑌾𑌚𑍍𑌯𑌮𑍍 ॥ ௪ ॥

𑌕𑌿𑌂𑌚—

௫. 𑌕𑍍𑌲𑍇𑌶𑍋𑌽𑌧𑌿𑌕𑌤𑌰𑌸𑍍𑌤𑍇𑌷𑌾𑌮𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌸𑌕𑍍𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌮𑍍 ।
𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾 𑌹𑌿 𑌗𑌤𑌿𑌰𑍍𑌦𑍁𑌃𑌖𑌂 𑌦𑍇𑌹𑌵𑌦𑍍𑌭𑌿𑌰𑌵𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 ॥

𑌕𑍍𑌲𑍇𑌶𑌃 𑌅𑌧𑌿𑌕𑌤𑌰𑌃—𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌾𑌦𑌿𑌪𑌰𑌾𑌣𑌾𑌂 𑌅𑌧𑌿𑌕𑌃 𑌏𑌵 𑌕𑍍𑌲𑍇𑌶𑌃, 𑌅𑌧𑌿𑌕𑌤𑌰𑌸𑍍𑌤𑍁 𑌅𑌕𑍍𑌷𑌰𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌂 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌾𑌂 𑌦𑍇𑌹𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌃— 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌸𑌕𑍍𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌮𑍍 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍇 𑌆𑌸𑌕𑍍𑌤𑌂 𑌚𑍇𑌤𑌃 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌸𑌕𑍍𑌤𑌚𑍇𑌤𑌸𑌃 𑌤𑍇𑌷𑌾𑌮𑍍 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌸𑌕𑍍𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌮𑍍 । 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾 𑌹𑌿 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌗𑌤𑌿𑌃 𑌅𑌕𑍍𑌷𑌰𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌦𑍇𑌹𑌵𑌦𑍍𑌭𑌿𑌃 𑌦𑍇𑌹𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌵𑌦𑍍𑌭𑌿𑌃 𑌅𑌵𑌾𑌪𑍍𑌯𑌤𑍇, 𑌅𑌤𑌃 𑌕𑍍𑌲𑍇𑌶𑌃 𑌅𑌧𑌿𑌕𑌤𑌰𑌃 ॥ ௫ ॥

𑌅𑌕𑍍𑌷𑌰𑍋𑌪𑌾𑌸𑌕𑌾𑌨𑌾𑌂 𑌯𑌤𑍍 𑌵𑌰𑍍𑌤𑌨𑌂 𑌤𑌤𑍍 𑌉𑌪𑌰𑌿𑌷𑍍𑌟𑌾𑌤𑍍 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌃—

---

ஸகலப்பிராணிகளுடைய நன்மையிலே கருத்துள்ளவராய் இத்தகையோராக இருக்கின்றார்களோ, அவர்கள் என்னையே வந்தடைகிறார்கள். "அவர்கள் என்னை வந்தடைகிறார்கள்" என்று அவர்களைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? ஏனெனில், "ஞானியோ, எனது ஆத்மாதான் (என்பது என்)கருத்து" (எ - கஅ) என்று கூறப்பட்டுள்ளது. பகவானுடைய வடிவமாகவே உள்ளவர்களை, மேலான யோகிகள் என்றாவது, மேலான யோகிகள் அல்லர் என்றாவது கூறவேண்டியதில்லையன்றோ. (௪)

ஆனால்,

௫. *அவ்யக்தத்தினிடத்தில் மனம்பற்றிய அவர்கட்குப் பிரயாசம் மிக்க அதிகமானது. ஏனெனில், அவ்யக்தமான கதியானது தேகாபிமானமுடையவர்களால் அரிதாக அடையப்படுகின்றது.*

எனக்காகக் கர்மம் (செய்தல்) முதலியவற்றின்மேல் கருத்துடையவர்களுக்குப் பிரயாசம் அதிகமேயாயினும், ஆனால்,வெளிப்படையாக இல்லாத (நிர்க்குணப்ரஹ்மத்)தினிடத்தில் மனம்படிந்தவராய், அழியாப்பொருள்வடிவினராய்ப் பரம்பொருளைக் காண்பவர்க்கு தேகாபிமானத்தை விடவேண்டியதனாலாகும் பிரயாசம் மிகவும் அதிகமென்க. ஏனெனில், நிர்க்குணப்ரஹ்மமான அழியாப்பொருளாகிய கதியானது தேகாபிமானமுடையவர்களால் அடைதற்கு அரிது. ஆகவே [தேகாபிமானத்தை விடவேண்டியதனால்], பிரயாசம் மிகவும் அதிகமாம். (௫)

**ஈச்வரனைத் தொழுதலால் முக்திபெறுதல்.**

அழியாப்பொருளைத் தொழுபவர்களுடைய வாழ்க்கையின் நடக்கை எதுவோ, அதனை மேலே [கங - கஅமுதலானவற்றிலே] கூறுவோம். (இப்பொழுது ஸகுண ப்ரஹ்மஉபாஸகர்களைப்பற்றிக் கூறுவோம்:)

௬. 𑌯𑍇 𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌯𑌿 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌃 ।
𑌅𑌨𑌨𑍍𑌯𑍇𑌨𑍈𑌵 𑌯𑍋𑌗𑍇𑌨 𑌮𑌾𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍𑌤 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇 ॥

𑌤𑍇𑌷𑌾𑌂 𑌕𑌿𑌮𑍍?—

௭. 𑌤𑍇𑌷𑌾𑌮𑌹𑌂 𑌸𑌮𑍁𑌦𑍍𑌧𑌰𑍍𑌤𑌾 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑌾𑌗𑌰𑌾𑌤𑍍 ।
𑌭𑌵𑌾𑌮𑌿 𑌨 𑌚𑌿𑌰𑌾𑌤𑍍𑌪𑌾𑌰𑍍𑌥 𑌮𑌯𑍍𑌯𑌾𑌵𑍇𑌶𑌿𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌮𑍍 ॥

𑌯𑍇 𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌯𑌿 𑌈𑌶𑍍𑌵𑌰𑍇 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌃 𑌅𑌹𑌂 𑌪𑌰𑌃 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌃 𑌸𑌨𑍍𑌤𑌃 𑌅𑌨𑌨𑍍𑌯𑍇𑌨𑍈𑌵 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌮𑍍 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 𑌆𑌲𑌮𑍍𑌬𑌨𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌦𑍇𑌵𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌃 𑌅𑌨𑌨𑍍𑌯𑌃 𑌤𑍇𑌨 𑌅𑌨𑌨𑍍𑌯𑍇𑌨𑍈𑌵—𑌕𑍇𑌨?—𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌮𑌾𑌧𑌿𑌨𑌾 𑌮𑌾𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍𑌤𑌃 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇 ॥ ௬ ॥

𑌤𑍇𑌷𑌾𑌮𑍍 𑌉𑌪𑌾𑌸𑌨𑍈𑌕𑌪𑌰𑌾𑌣𑌾𑌮𑍍 𑌅𑌹𑌮𑍍 𑌈𑌶𑍍𑌵𑌰𑌃 𑌸𑌮𑍁𑌦𑍍𑌧𑌰𑍍𑌤𑌾—𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿? 𑌆𑌹—𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑌾𑌗𑌰𑌾𑌤𑍍 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌃 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌸𑌂𑌸𑌾𑌰𑌃, 𑌸 𑌏𑌵 𑌸𑌾𑌗𑌰 𑌇𑌵 𑌸𑌾𑌗𑌰𑌃, 𑌦𑍁𑌸𑍍𑌤𑌰𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑌾𑌗𑌰𑌾𑌤𑍍 𑌅𑌹𑌂 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑌮𑍁𑌦𑍍𑌧𑌰𑍍𑌤𑌾 𑌭𑌵𑌾𑌮𑌿 𑌨 𑌚𑌿𑌰𑌾𑌤𑍍—𑌕𑌿𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿? —𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌮𑍇𑌵 𑌹𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌮𑌯𑌿 𑌆𑌵𑍇𑌶𑌿𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌂 𑌮𑌯𑌿 𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑍇 𑌆𑌵𑍇𑌶𑌿𑌤𑌂 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌂 𑌚𑍇𑌤𑌃 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌮𑌯𑍍𑌯𑌾𑌵𑍇𑌶𑌿𑌤𑌚𑍇𑌤𑌸𑌃 𑌤𑍇𑌷𑌾𑌮𑍍 ॥ ௭ ॥

𑌯𑌤𑌃 𑌏𑌵𑌂 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍—

௮. 𑌮𑌯𑍍𑌯𑍇𑌵 𑌮𑌨 𑌆𑌧𑌤𑍍𑌸𑍍𑌵 𑌮𑌯𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌨𑌿𑌵𑍇𑌶𑌯 ।
𑌨𑌿𑌵𑌸𑌿𑌷𑍍𑌯𑌸𑌿 𑌮𑌯𑍍𑌯𑍇𑌵 𑌅𑌤 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃 ॥

---

௬. மற்று, எவர்கள் எல்லாக் கர்மங்களையும் என்னிடத்துஅர்ப்பித்து, என்னையே மேலாகக்கொண்டவராய் வேறே (ஓர்பிடிப்பும்) இல்லாத யோகத்தினால் என்னைத் தியானிக்கின்றவர்களாய்த் தொழுகிறார்களோ,

அவர்கட்கு என்ன?

௭. பார்த்த! என்னிடத்து மனத்தைச் செலுத்திய அவர்களை யான், சாவோடு கூடிய ஸம்ஸாரக்கடலினின்றும் தாமதமின்றிக் கரையேற்றுகிறவனாயிருக்கின்றேன்.

என்னிடத்து - ஈச்வரனிடத்து. வேறே இல்லாத - விச்வரூபத்தைக்கொண்ட கடவுளாகிய என்னைத்தவிர வேறொன்றையுமே பிடிப்பாக [உபாஸித்தற்கு விஷயமாக]க் கொள்ளாத.—(அத்தகைய) எதனால்?—ஸமாதியினால். (௬)

என்னைத் தொழுவதிலேயே முற்றும் கருத்தூன்றிய அவர்களை ஈச்வரனாகிய நான் கரையேற்றுகின்றவன்.—எதனினின்றும் என்பது?—கூறுகிறார்: சாவோடு கூடிய ஸம்ஸாரக்கடலினின்றும். அது - கடல் போல, கடப்பதற்கு அரிதாயுள்ளமையினால், கடலென்க. சாவோடு கூடிய அந்த ஸம்ஸாரக்கடலினின்றும் நான் அவர்களை வெகுகாலமாகாமலே மேலே தூக்கி எடுக்கின்றேன்.—அப்பொழுது என்ன?—சீக்கிரமாகவே (என்றபடி). என்னிடத்து மனத்தைச் செலுத்திய - விச்வரூபத்தைக் கொண்ட என்னிடத்து மனம் ஒருநிலைப்பட்ட. (௭)

இவ்வாறிருத்தலால்,

௮. என்னிடத்தேயே மனத்தை நிறுத்து; என்னிடத்துப் புத்தியைச் செலுத்து. இதற்குமேல் என்னிடத்தேயே வாழ்வாய்; ஸம்சயம் இல்லை.

𑌮𑌯𑌿 𑌏𑌵 𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑍇 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑍇 𑌮𑌨𑌃 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑍍 𑌆𑌧𑌤𑍍𑌸𑍍𑌵 𑌸𑍍𑌥𑌾𑌪𑌯 । 𑌮𑌯𑌿 𑌅𑌧𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌤𑍀𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌚 𑌆𑌧𑌤𑍍𑌸𑍍𑌵 𑌨𑌿𑌵𑍇𑌶𑌯 । 𑌤𑌤𑌃 𑌤𑍇 𑌕𑌿𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿 ? 𑌶𑍃𑌣𑍁 — 𑌨𑌿𑌵𑌸𑌿𑌷𑍍𑌯𑌸𑌿 𑌨𑌿𑌵𑌤𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑍇𑌨 𑌮𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌮𑌯𑌿 𑌵𑌾𑌸𑌂 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌸𑌿 𑌏𑌵 𑌅𑌤𑌃 𑌶𑌰𑍀𑌰𑌪𑌾𑌤𑌾𑌤𑍍 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 । 𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃, 𑌸𑌂𑌶𑌯𑌃 𑌅𑌤𑍍𑌰 𑌨 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 ॥ ௮ ॥

௯. 𑌅𑌥 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌸𑌮𑌾𑌧𑌾𑌤𑍁𑌂 𑌨 𑌶𑌕𑍍𑌨𑍋𑌷𑌿 𑌮𑌯𑌿 𑌸𑍍𑌥𑌿𑌰𑌮𑍍 ।
𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑍇𑌨 𑌤𑌤𑍋 𑌮𑌾𑌮𑌿𑌚𑍍𑌛𑌾𑌪𑍍𑌤𑍁𑌂 𑌧𑌨𑌂𑌜𑌯 ॥

𑌅𑌥 𑌏𑌵𑌂 𑌯𑌥𑌾 𑌅𑌵𑍋𑌚𑌂 𑌤𑌥𑌾 𑌮𑌯𑌿 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌸𑌮𑌾𑌧𑌾𑌤𑍁𑌂 𑌸𑍍𑌥𑌾𑌪𑌯𑌿𑌤𑍁𑌂 𑌸𑍍𑌥𑌿𑌰𑌮𑍍 𑌅𑌚𑌲𑌂 𑌨 𑌶𑌕𑍍𑌨𑍋𑌷𑌿 𑌚𑍇𑌤𑍍, 𑌤𑌤𑌃 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍 𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑍇𑌨, 𑌚𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌏𑌕𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌆𑌲𑌂𑌬𑌨𑍇 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃 𑌸𑌮𑌾𑌹𑍃𑌤𑍍𑌯 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍁𑌨𑌃 𑌸𑍍𑌥𑌾𑌪𑌨𑌮𑍍 𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑌃, 𑌤𑌤𑍍𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑍇𑌣 𑌸𑌮𑌾𑌧𑌾𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑍇𑌨 𑌯𑍋𑌗𑍇𑌨 𑌮𑌾𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑍍 𑌇𑌚𑍍𑌛 𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌯𑌸𑍍𑌵 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍁𑌂 𑌹𑍇 𑌧𑌨𑌂𑌜𑌯 ॥ ௯ ॥

௧௦. 𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌽𑌪𑍍𑌯𑌸𑌮𑌰𑍍𑌥𑍋𑌽𑌸𑌿 𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌪𑌰𑌮𑍋 𑌭𑌵 ।
𑌮𑌦𑌰𑍍𑌥𑌮𑌪𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 ॥

𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑍇 𑌅𑌪𑌿 𑌅𑌸𑌮𑌰𑍍𑌥𑌃 𑌅𑌸𑌿 𑌯𑌦𑌿, 𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌪𑌰𑌮𑌃 𑌭𑌵, 𑌮𑌦𑌰𑍍𑌥𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌮, 𑌤𑌤𑍍𑌪𑌰𑌮𑌃 𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌪𑌰𑌮𑌃, 𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌃 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌅𑌭𑍍𑌯𑌾-

---

மனத்தை = (உனது) நோக்கங்களாயும், எண்ணங்களாயுமுள்ளவற்றை, விச்வரூபத்தைக்கொண்ட ஈச்வரனான என்னிடத்திலேயே வைத்துவிடு. நிர்ணயத்தைச் செய்கின்ற புத்தியையும் என்னிடத்து வைத்துவிடு.—அவற்றால் உனக்கு ஆவதென்ன என்பது? —கேள்: இச்சரீரம் மாய்ந்தபின்பு, நீ நானாக என்னிடத்து நிச்சயமாய் வாழ்தலைச் செய்யவேசெய்வாய் [நானாகவே இருப்பாய்]. இதில் ஸம்சயம் கொள்ளாதே. (௮)

அப்யாஸயோகம்.

௯. சித்தத்தை என்னிடத்து உறுதியாக நிலைப்படுத்த முடியாவிட்டால், அப்பொழுது தனஞ்ஜய! அப்யாஸயோகத்தினால் என்னை அடைய நாடவேண்டும்.

யான் கூறியபடி, நீ என்னிடத்து மனத்தை அசையாது நிறுத்த வல்லவனல்லனாயின், பின்பு, விச்வரூபத்தைக்கொண்ட என்னை அப்யாஸயோகத்தினால் நாடவேண்டும். அப்யாஸமென்பது - எல்லாப்புறங்களினின்றும் சித்தத்தை இழுத்து, அடிக்கடி ஒரே (பிரதிமைமுதலிய) பிடிப்பிலே நிறுத்துதல். அதனால் வரும் யோகம் - அப்யாஸயோகம். (இது - மனம்) ஒருநிலைப்படுதல் என்னும் யோகமாம். (௯)

பகவானுக்குத் தொண்டுசெய்தல்.

௧௦. அப்யாஸ(யோக)த்திலும் ஸாமர்த்தியமில்லாதவனாய் இருக்கிறாய் (என்றால்), எனக்காகக் கர்மங்களை(ச் செய்தலை)யே முக்கியமாகக்கொண்டிரு. எனக்காகக் கர்மங்களைச் செய்கிறவனாயினும், ஸித்தியைப் பெறுவாய்.

நீ அப்யாஸமில்லாமலே [அப்யாஸயோகத்தைப் பயிற்சிசெய்யாமலே] கர்மங்களைமாத்திரம் என்பொருட்டுச் செய்கிறவனாயினும், மனம் திருந்துதல், ஒருநிலைப்படு

𑌸𑍇𑌨 𑌵𑌿𑌨𑌾 𑌮𑌦𑌰𑍍𑌥𑌮𑌪𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌸𑌤𑍍𑌵𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 𑌅𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 ॥ ௧௦ ॥

௧௧. 𑌅𑌥𑍈𑌤𑌦𑌪𑍍𑌯𑌶𑌕𑍍𑌤𑍋𑌽𑌸𑌿 𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 𑌮𑌦𑍍𑌯𑍋𑌗𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌂 𑌤𑌤𑌃 𑌕𑍁𑌰𑍁 𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌵𑌾𑌨𑍍 ॥

𑌅𑌥 𑌪𑍁𑌨𑌃 𑌏𑌤𑌦𑌪𑌿 𑌯𑌤𑍍 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌪𑌰𑌮𑌤𑍍𑌵𑌂 𑌤𑌤𑍍 𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 𑌅𑌶𑌕𑍍𑌤𑌃 𑌅𑌸𑌿 𑌮𑌦𑍍𑌯𑍋𑌗𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃, 𑌮𑌯𑌿 𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌯𑌤𑍍 𑌕𑌰𑌣𑌂 𑌤𑍇𑌷𑌾𑌮𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌂 𑌸𑌃 𑌮𑌦𑍍𑌯𑍋𑌗𑌃, 𑌤𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 𑌸𑌨𑍍—𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌫𑌲𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌂 𑌤𑌤𑌃 𑌅𑌨𑌨𑍍𑌤𑌰𑌂 𑌕𑍁𑌰𑍁 𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌵𑌾𑌨𑍍 𑌸𑌂𑌯𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌃 𑌸𑌨𑍍 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௧௧ ॥

𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌂 𑌸𑍍𑌤𑍌𑌤𑌿—

௧௨. 𑌶𑍍𑌰𑍇𑌯𑍋 𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌭𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑍍𑌧𑍍𑌯𑌾𑌨𑌂 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 ।
𑌧𑍍𑌯𑌾𑌨𑌾𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌗𑌾𑌚𑍍𑌛𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌨𑌨𑍍𑌤𑌰𑌮𑍍 ॥

𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌯𑌤𑌰𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍—𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍? — 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌾𑌤𑍍 𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌪𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌂 𑌧𑍍𑌯𑌾𑌨𑌂 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 । 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌤𑍋 𑌧𑍍𑌯𑌾𑌨𑌾𑌤𑍍 𑌅𑌪𑌿 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌃, ‘𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇’ 𑌇𑌤𑌿 𑌅𑌨𑍁𑌷-

---

தல், (உண்மை) கண்டுணர்தல் என்பவற்றை முறையே அடைந்து, பின்பு ஸித்தியை [ப்ரஹ்மத்தின் நிலையை]ப் பெறுவாய். (௧௦)

### கர்மத்தின் பயனை எதிர்நோக்காமை.

௧௧. இதனையும் செய்யச் சக்தியற்றனையாயின் அப்பொழுது என்விஷயமான யோகத்தை அடைக்கலமாகக்கொண்டு, மனத்தை அடக்கியவனாய் எல்லாக் கர்மங்களுடைய பயனை விட்டிடுதலைச் செய்யக்கடவாய்.

இதனையும் - என்பொருட்டுக் கர்மங்களை(ச் செய்வதை) முக்கியமாகக் கொள்ளுதலாகிய (கீழ்க்) கூறிய (உபதேசம்) எதுவோ, அதனையும். செய்யப்படுகின்ற கர்மங்களை என்னிடத்து அர்ப்பித்து, அவற்றை அநுஷ்டித்தல் எதுவோ, அது-என்விஷயமான யோகம். விட்டிடுதலை - துறந்திடுதலை. அப்பொழுது - பின்பு. (௧௧)

எல்லாக் கர்மங்களுடைய பயனை விட்டிடுதலைப் புகழ்கின்றார் :

௧௨. அறிவு அப்யாஸத்தினும் சிறந்ததன்றோ ; தியானம் அறிவினும் மேலாகின்றது ; கர்மத்தின் பயனை விட்டிடுதல் தியானித்தினும் (மேலாகின்றது). விட்டிடுதலினின்றும் ஒழிபு உடனே (வருகின்றது.)

அறிவு சிறந்ததன்றோ.—எதனைக்காட்டிலும் ?—அறியாமையொடு கூடிய அப்யாஸத்தைக்காட்டிலும். (அறிவென்பது - சாஸ்திரத்தினாலும், யுக்தியினாலும் ஆத்மாவை நிச்சயித்தல். அப்யாஸமென்பது - (௧)அறிவைப் புகட்டுகின்ற நூற்பொருளை அடிக்கடி கேட்டு ஆராய்ச்சிசெய்தல் ; அல்லது, (௨) உறுதியோடு கூடி தியானத்தை அப்யஸித்தல்.—ஆ.) அந்த அறிவைக்காட்டிலும் அறிவோடமைந்த தியானம் மேலாகின்றது. அறிவுள்ளவனுடைய தியானத்தைக்காட்டிலும் கர்மத்தின்பயனை விட்டிடுதல் "மேலாகின்றது" என ஒட்டுக. (௧௨ - ௧௧ல் உள்ள "மனத்தை அடக்கியவ

𑌜𑌾𑌯𑌤𑍇 । 𑌏𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌾𑌤𑍍 𑌪𑍂𑌰𑍍𑌵𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌵𑌤𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌉𑌪𑌶𑌮𑌃 𑌸𑌹𑍇𑌤𑍁𑌕𑌸𑍍𑌯 𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑍍𑌯 𑌅𑌨𑌨𑍍𑌤𑌰𑌮𑍍 𑌏𑌵 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌨 𑌤𑍁 𑌕𑌾𑌲𑌾𑌨𑍍𑌤𑌰𑌮𑍍 𑌅𑌪𑍇𑌕𑍍𑌷𑌤𑍇 ।

𑌅𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑍋𑌪𑌾𑌯𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌶𑌕𑍍𑌤𑍌 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃𑌸𑌾𑌧𑌨𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌉𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑌂, 𑌨 𑌪𑍍𑌰𑌥𑌮𑌮𑍇𑌵 । 𑌅𑌤𑌶𑍍𑌚 ‘𑌶𑍍𑌰𑍇𑌯𑍋 𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌭𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑍁𑌤𑍍𑌤𑌰𑍋𑌤𑍍𑌤𑌰𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌤𑍍𑌵𑍋𑌪𑌦𑍇𑌶𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌸𑍍𑌤𑍂𑌯𑌤𑍇, 𑌸𑌮𑍍𑌪𑌨𑍍𑌨𑌸𑌾𑌧𑌨𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌶𑌕𑍍𑌤𑍌 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌶𑍍𑌰𑍁𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 ॥

𑌕𑍇𑌨 𑌸𑌾𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑍇𑌣 𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌤𑍍𑌵𑌮𑍍 ? ‘𑌯𑌦𑌾 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇’ 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌮𑌪𑍍𑌰𑌹𑌾𑌣𑌾𑌤𑍍 𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑌂 ; 𑌤𑌚𑍍𑌚 𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌂 𑌚 । 𑌕𑌾𑌮𑌾𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌶𑍍𑌰𑍌𑌤𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌫𑌲𑌾𑌨𑌿 । 𑌤𑌤𑍍𑌤𑍍𑌯𑌾𑌗𑍇𑌨 𑌚 𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌧𑍍𑌯𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌸𑍍𑌯 𑌅𑌨𑌨𑍍𑌤𑌰𑍈𑌵 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 । 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌮𑌤𑍍𑌯𑌾𑌗𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌂 𑌅𑌜𑍍𑌞𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌸𑍍𑌯 𑌅𑌸𑍍𑌤𑌿 𑌇𑌤𑌿 𑌤𑌤𑍍𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌃 𑌇𑌯𑌂 𑌪𑍍𑌰𑌰𑍋𑌚𑌨𑌾𑌰𑍍𑌥𑌾 ।

---

னுப்" என்னும்) முற்கூறிய விசேஷணத்தோடு கூடி, இவ்வாறு கர்மத்தின்பயனை விட்டிடுவதிலிருந்து, காரண(மாகிய அஜ்ஞான)த்தோடு ஸம்ஸாரம் ஒழிந்திடுதல் உடனேயே உண்டாகும்; காலாந்தரத்தை வேண்டுவதில்லை [காலதாமதம் இல்லை].

கர்மத்தை மேற்கொண்டுள்ள அஜ்ஞானிக்கு முன்னர் உபதேசிக்கப்பட்ட ஸாதனங்களை அநுஷ்டிக்கத் திறமையில்லாவளவிலே ஸகலகர்மங்களுடைய பயனை விட்டிடுதலானது மோக்ஷத்திற்கு வழி என்று உபதேசிக்கப்பட்டது; (ஆனால்) முதலிலே அன்று[முந்தினதை அநுஷ்டிக்கச்சக்தியுள்ளவளவிலே பிந்தினதை அநுஷ்டிக்கவேண்டும் என்று கூறப்படவில்லை]. ஆகவே, "அறிவு அப்யாஸத்திலும் சிறந்ததன்றோ" என்பது முதலாகப் பிந்தினது பிந்தினது மேலானது என உபதேசிப்பதனால் ஸகல கர்மங்களுடைய பயனை விட்டிடுதலானது புகழப்படுகின்றது; (முக்திக்கு) அமைந்த (நிர்க்குண ப்ரஹ்மஉபாஸநம் முதலான)ஸாதநங்களை அநுஷ்டிக்கச் சக்தியில்லாவளவிலே (ஸகலகர்மங்களுடைய பயனை விட்டிடுதலை) அநுஷ்டிக்கவேண்டும் என்று உபதேசிக்கப்பட்டமையாலென்க.

(வினா) :—(விட்டிடுதல் மேலானது என்னும் திருவாக்கானது) எத்தன்மையினால் புகழ்ச்சியாகின்றது?

(விடை) :—"(கர்மங்கள்) எல்லாம் எப்பொழுது விடப்படுகின்றனவோ, (அப்பொழுது மனிதன் சாகாதவனாகிறான்)" (கட - ௬ - ௧௪) என ஆசாவிஷயங்களனைத்தையும் விட்டொழிவதனால், சாகாமை கூறப்பட்டது; அன்றியும், அது (பிரு - ௪ - ௪ - ௬ முதலானவற்றில்) பிரஸித்தமாயுள்ளது. இனி, ஆசாவிஷயங்களெல்லாம் - சுருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் கூறப்பட்ட ஸகலகர்மங்களுடைய பயன்களாயுள்ளவை. தியானத்திலே நிலைத்த ஞானிக்கு, அவற்றை விடுவதனால் ஒழிபு உடனேயே வருகின்றது. எனவே, ஆசாவிஷயங்களனைத்தையும் விட்டிடுதலாகிய பொதுத்தன்மையானது அஜ்ஞானி கர்மங்களுடைய பயனை விட்டிடுவதற்கும் உள்ளது என்று அப்பொதுத்தன்மையினால், ஸகலகர்மங்களுடைய பயனை விட்டிடுதலைப் புகழ்வதாம். இ(ப்பு

𑌯𑌥𑌾 𑌅𑌗𑌸𑍍𑌤𑍍𑌯𑍇𑌨 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇𑌨 𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑌃 𑌪𑍀𑌤𑌃 𑌇𑌤𑌿 𑌇𑌦𑌾𑌨𑍀𑌂𑌤𑌨𑌾𑌃 𑌅𑌪𑌿
𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌃 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌤𑍍𑌵𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌾𑌤𑍍 𑌸𑍍𑌤𑍂𑌯𑌨𑍍𑌤𑍇 ॥

𑌏𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃𑌸𑌾𑌧𑌨𑌤𑍍𑌵𑌮𑍍 𑌅𑌭𑌿𑌹𑌿𑌤𑌮𑍍 ॥

𑌅𑌤𑍍𑌰 𑌚 𑌆𑌤𑍍𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌭𑍇𑌦𑌮𑍍 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑍇 𑌈𑌶𑍍𑌵𑌰𑍇 𑌚𑍇𑌤𑌸𑍍𑌸𑌮𑌾-
𑌧𑌾𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 𑌯𑍋𑌗𑌃 𑌉𑌕𑍍𑌤𑌃, 𑌈𑌶𑍍𑌵𑌰𑌾𑌰𑍍𑌥𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌦𑌿 𑌚 । '𑌅𑌥𑍈𑌤𑌦𑌪𑍍𑌯-
𑌶𑌕𑍍𑌤𑍋𑌽𑌸𑌿' 𑌇𑌤𑌿 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌾𑌰𑍍𑌯𑌸𑍂𑌚𑌨𑌾𑌤𑍍 𑌨 𑌅𑌭𑍇𑌦𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 𑌅𑌕𑍍𑌷𑌰𑍋𑌪𑌾𑌸-
𑌕𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌃 𑌉𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌦𑌰𑍍𑌶𑌯𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 𑌅𑌕𑍍𑌷𑌰𑍋𑌪𑌾-
𑌸𑌨𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑌿𑌂 𑌦𑌰𑍍𑌶𑌯𑌤𑌿 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 । '𑌤𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌮𑍇𑌵' 𑌇𑌤𑌿
𑌅𑌕𑍍𑌷𑌰𑍋𑌪𑌾𑌸𑌕𑌾𑌨𑌾𑌂 𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍌 𑌸𑍍𑌵𑌾𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑍍𑌵𑌾, 𑌇𑌤𑌰𑍇𑌷𑌾𑌂
𑌪𑌾𑌰𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 𑌈𑌶𑍍𑌵𑌰𑌾𑌧𑍀𑌨𑌤𑌾𑌂 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌵𑌾𑌨𑍍 '𑌤𑍇𑌷𑌾𑌮𑌹𑌂 𑌸𑌮𑍁𑌦𑍍𑌧𑌰𑍍𑌤𑌾'
𑌇𑌤𑌿 । 𑌯𑌦𑌿 𑌹𑌿 𑌈𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌆𑌤𑍍𑌮𑌭𑍂𑌤𑌾𑌃 𑌤𑍇 𑌮𑌤𑌾𑌃, 𑌅𑌭𑍇𑌦𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌕𑍍𑌷𑌰𑌸𑍍𑌵-

---

கழ்ச்சியான)து - (கேட்போருக்கு) ருசியை உண்டாக்கி (அவர்கள் கர்மங்களுடைய பயனை விட்டிடுதலைப்) பின்பற்றும்படி செய்வதற்கு ஆவதென்க. உதாரணமாக, அகஸ்தியனென்னும் பிராமணனால் கடலானது குடிக்கப்பட்டது என்று இப்பொழுதுள்ள பிராமணர்களும், பிராமணரென்னும் பொதுத்தன்மையினால் புகழப்படுகிறார்கள்.

இவ்வாறாக, கர்மயோகமானது - கர்மத்தின்பயனை விட்டிடுவதனால் முக்திக்கு ஸாதநமாம் என்று உபதேசிக்கப்பட்டது. (கர்மங்களின் பயன்கள் = காமங்கள் = ஆசாவிஷயங்கள். கர்மங்களின்பயன்களைத் துறக்கின்ற அஜ்ஞானிக்கும், ஆசாவிஷயங்களைத் துறக்கின்ற ஞானிக்கும் உள்ள பொதுத்தன்மையை இவ்வாறு கண்டு கொள்க.) (கஉ)

**நிர்க்குண ப்ரஹ்மத்தைத் தொழுபவரது வாழ்க்கையின் நடக்கை.**

இங்கே, ஆத்மாவுக்கும் ஈச்வரனுக்கும் பேதத்தை வைத்துக்கொண்டு, விச்வரூபத்திலே ஈச்வரனிடத்து மனம் ஒருநிலைப்படுதலாகிய யோகமும், ஈச்வரன்பொருட்டுக் கர்மத்தை அநுஷ்டித்தல் முதலானவையும் உபதேசிக்கப்பட்டன. (கர்மயோகத்தை) "இதனையும் செய்யச் சக்தியில்லாதவனாயின்" (கஉ - கக) என அஜ்ஞானத்தின்செய்கையாகக் குறிப்பிப்பதனால், (ஆத்மாவுக்கும் ஈச்வரனுக்கும்) பேதத்தைக் காணாதவனாய் அழியாப்பொருளைத் தொழுபவனுக்குக் கர்மயோகமானது பொருந்தாது என்று காட்டுகிறார். அவ்வாறே, பகவான், அழியாப்பொருளை உபாஸித்தல் கர்மயோகிக்குப் பொருந்தாமையைக் காட்டுகிறார். அழியாப்பொருளைத் தொழுபவர்க்குக்கைவல்யம் கைகூடுவதிலே, "அவர்கள் என்னையே அடைகிறார்கள்" (கஉ-ச) என சுதந்திரத்தைக் கூறிப், பின்பு, மற்றையோர்க்கு, "நான் அவர்களைக் கரையேற்றுகிறவன்" (கஉ - எ) எனப் பரதந்திரத்தை = ஈச்வரனைச் சார்ந்துநிற்றலை உணர்த்தியுள்ளார். அவர்கள் ஈச்வரனுடைய ஆத்மாவாகவே இருக்கின்றார் எனக் கொண்டவழி, அவர்கள் (ஆத்மாவுக்கும் ஈச்வரனுக்கும்) பேதமின்மையைக் கண்டிருந்தவ ராதலால் அழியாப்பொருள் வடிவினராகவே உள்ளா ரென்பதாம்.

𑌰𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌏𑌵 𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌸𑌮𑍁𑌦𑍍𑌧𑌰𑌣𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌷𑌯𑌵𑌚𑌨𑌂 𑌤𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌅𑌪𑍇𑌶𑌲𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌯𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌚 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑍍𑌯 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑍇𑌵 𑌹𑌿𑌤𑍈𑌷𑍀 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌤𑌸𑍍𑌯 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌨𑌨𑍍𑌵𑌿𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌂 𑌭𑍇𑌦𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌮𑌨𑍍𑌤𑌮𑍇𑌵 𑌉𑌪𑌦𑌿𑌶𑌤𑌿 । 𑌨 𑌚 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍍 𑌈𑌶𑍍𑌵𑌰𑌂 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌤𑌃 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 𑌗𑍁𑌣𑌭𑌾𑌵𑌂 𑌜𑌿𑌗𑌮𑌿𑌷𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍, 𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌤𑍍 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌅𑌕𑍍𑌷𑌰𑍋𑌪𑌾𑌸𑌕𑌾𑌨𑌾𑌂 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌾𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑍈𑌷𑌣𑌾𑌨𑌾𑌮𑍍 ‘𑌅𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌾 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌧𑌰𑍍𑌮𑌪𑍂𑌗𑌂 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌕𑌾𑌰𑌣𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑍀𑌤𑌿 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇—

௧௩. 𑌅𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌾 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌮𑍈𑌤𑍍𑌰𑌃 𑌕𑌰𑍁𑌣 𑌏𑌵 𑌚 ।
𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑍋 𑌨𑌿𑌰𑌹𑌂𑌕𑌾𑌰𑌃 𑌸𑌮𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑌃 𑌕𑍍𑌷𑌮𑍀 ॥

௧௪. 𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑌃 𑌸𑌤𑌤𑌂 𑌯𑍋𑌗𑍀 𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌦𑍃𑌢𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃 ।
𑌮𑌯𑍍𑌯𑌰𑍍𑌪𑌿𑌤𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌯𑍋 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃 𑌸 𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 ॥

𑌅𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌾 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌾, 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌦𑍁𑌃𑌖𑌹𑍇𑌤𑍁𑌮𑌪𑌿 𑌨 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑍍 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿, 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌆𑌤𑍍𑌮𑌤𑍍𑌵𑍇𑌨

---

ஆகவே, (அத்தகையோரைக்) கரையேற்றுதலென்னும் தொழிலுக்கு விஷயமாக [கரையேற்றப்படுபவராக]க் கூறுதல் அவர் விஷயத்திலே பொருந்தியதாகாது. மற்றும் [இனி வரும் காரணத்தாலும்], அர்ஜுனனுக்கு மிகுதியும் நலத்தைவிரும்புகின்ற பகவான் மெய்யறிவோடுகூடாததும் பேதப்பார்வையையேயுடையதுமான [ஆத்மா வேறு, ஈச்வரன் வேறு என்னும் வேற்றுமையான எண்ணமேஉள்ளதுமான] கர்மயோகத்தை அவனுக்கு உபதேசிக்கிறார் (௪ - ௧௫). அன்றியும், பிரமாணங்களால் ஆத்மாவை ஈச்வரனாக அறிந்தபின்பு, ஒருவன் (வேறு) ஒருவனுக்குக் கீழ்ப்படிதலை அடைய விரும்பமாட்டான்; விரோதத்தால் [ஆளப்படுந்தன்மையும், ஆளுந்தன்மையும் ஒருவனிடத்து ஒருங்கே இருக்கமுடியாவாதலால்.—ஆ. ஆளப்பட்டவன் - கீழ்ப்பட்டவன். ஆளுபவன் - ஈச்வரன்.] ஆதலால், (பின்வரும் விசேஷணங்களனைத்தையும் அஞ்ஞானியான கர்மயோகியானவன் பின்பற்றமுடியாதவனாதலால்), மெய்யறிவிலே நிலைத்த துறவிகளாய் ஆசைகளனைத்தையும் விட்டவராய் அழியாப்பொருளைத் தொழுபவர்க்கு, சாகாமைக்கு நேரே ஸாதநமாய் "எந்தப் பிராணியையும் பகையாதவனும்" (௧௨ - ௧௩) என்பதுமுதலாயுள்ள விசேஷணத்தொகுதியைக் கூறுவேன் என்று (பகவான்) மேற்கொள்ளுகிறார்:

௧௩. எந்தப் பிராணியையும் பகையாதவனும், நண்பனுயிருப்பவனும், தயையுள்ளவனும், மமகாரம் நீங்கியவனும், அஹங்காரம் ஒழிந்தவனும், துன்பஇன்பங்களை ஸமமாகக்கொண்டவனும், பொறுமையுடையவனும்,

௧௪. எப்பொழுதும் திருப்தியுள்ளவனும், அடங்கிய ஸ்வபாவத்தையும் உறுதியான நிச்சயத்தையும் உடையவனுமான யோகியாய் என்னிடத்து மனம் புத்தி இவற்றைச் செலுத்திய என்பக்தன் எவனோ, அவன் எனக்குப் பிரியமானவன்.

(அவன்) ஒன்றையும், தனக்கு வருத்தத்தைச் செய்வதையுங்கூடப் பகைப்பதில்லை; எல்லாப் பொருள்களையும் தானாகவே பார்க்கிறான். (அவன் எல்லார்க்கும்)

𑌵𑌶𑍍𑌯𑌤𑌿 । 𑌮𑍈𑌤𑍍𑌰𑌂 𑌮𑌿𑌤𑍍𑌰𑌭𑌾𑌵𑌃, 𑌮𑍈𑌤𑍍𑌰𑌃 𑌮𑌿𑌤𑍍𑌰𑌤𑌯𑌾 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌸𑌃 𑌮𑍈𑌤𑍍𑌰𑌃 । 𑌕𑌰𑍁𑌣𑌃 𑌏𑌵 𑌚, 𑌕𑌰𑍁𑌣𑌾 𑌕𑍃𑌪𑌾 𑌦𑍁𑌃𑌖𑌿𑌤𑍇𑌷𑍁 𑌦𑌯𑌾, 𑌤𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌕𑌰𑍁𑌣𑌃, 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌭𑌯𑌪𑍍𑌰𑌦𑌃, 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑌃 𑌮𑌮𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 । 𑌨𑌿𑌰𑌹𑌂𑌕𑌾𑌰𑌃 𑌨𑌿𑌰𑍍𑌗𑌤𑌾𑌹𑌂𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌃 । 𑌸𑌮𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑌃, 𑌸𑌮𑍇 𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑍇 𑌦𑍍𑌵𑍇𑌷𑌰𑌾𑌗𑌯𑍋𑌃 𑌅𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌕𑍇 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌃 𑌸𑌮𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑌃 । 𑌕𑍍𑌷𑌮𑍀 𑌕𑍍𑌷𑌮𑌾𑌵𑌾𑌨𑍍, 𑌆𑌕𑍍𑌰𑍁𑌷𑍍𑌟𑌃 𑌅𑌭𑌿𑌹𑌤𑍋 𑌵𑌾 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 𑌏𑌵 𑌆𑌸𑍍𑌤𑍇 ॥ ௧௩ ॥

𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑌃 𑌸𑌤𑌤𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂, 𑌦𑍇𑌹𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌕𑌾𑌰𑌣𑌸𑍍𑌯 𑌲𑌾𑌭𑍇 𑌅𑌲𑌾𑌭𑍇 𑌚 𑌉𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌾𑌲𑌂𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌃 । 𑌤𑌥𑌾 𑌗𑍁𑌣𑌵𑌲𑍍𑌲𑌾𑌭𑍇 𑌵𑌿𑌪𑌰𑍍𑌯𑌯𑍇 𑌚 𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑌃 𑌸𑌤𑌤𑌂 𑌯𑍋𑌗𑍀 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌃 । 𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌂𑌯𑌤𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌃 । 𑌦𑍃𑌢𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃, 𑌦𑍃𑌢𑌃 𑌸𑍍𑌥𑌿𑌰𑌃 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃 𑌅𑌧𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌃 𑌯𑌸𑍍𑌯 𑌆𑌤𑍍𑌮𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌷𑌯𑍇 𑌸𑌃 𑌦𑍃𑌢𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃 । 𑌮𑌯𑍍𑌯𑌰𑍍𑌪𑌿𑌤𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌮𑌨𑌃, 𑌅𑌧𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌲𑌕𑍍𑌷𑌣𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃, 𑌤𑍇 𑌮𑌯𑍍𑌯𑍇𑌵 𑌅𑌰𑍍𑌪𑌿𑌤𑍇 𑌸𑍍𑌥𑌾𑌪𑌿𑌤𑍇 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌃 𑌸𑌃 𑌮𑌯𑍍𑌯𑌰𑍍𑌪𑌿𑌤𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 । 𑌯𑌃 𑌈𑌦𑍃𑌶𑌃 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃 𑌸𑌃 𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 । '𑌪𑍍𑌰𑌿𑌯𑍋 𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑍋𑌽𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌮𑌹𑌂 𑌸 𑌚 𑌮𑌮 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃' 𑌇𑌤𑌿 𑌸𑌪𑍍𑌤𑌮𑍇 𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑍇 𑌸𑍂𑌚𑌿𑌤𑌂, 𑌤𑌤𑍍 𑌇𑌹 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ ௧௪ ॥

௧௫. 𑌯𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑍋𑌦𑍍𑌵𑌿𑌜𑌤𑍇 𑌲𑍋𑌕𑍋 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌨𑍋𑌦𑍍𑌵𑌿𑌜𑌤𑍇 𑌚 𑌯𑌃 ।
𑌹𑌰𑍍𑌷𑌾𑌮𑌰𑍍𑌷𑌭𑌯𑍋𑌦𑍍𑌵𑍇𑌗𑍈𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌯𑌸𑍍𑌸 𑌚 𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 ॥

---

நண்பனுயிருக்கிறான். (அவன்) துயருற்றவரிடத்துத் தயையுள்ளவன், எல்லாப் பிராணிகட்கும் அபயமளித்தவன், ஸந்யாஸி என்றபடி. மமகாரம் நீங்கியவன் - "(இது) எனது" என்னுமெண்ணமில்லாதவன். அஹங்காரம் ஒழிந்தவன் - "நான்" என்னும் எண்ணம் நீங்கியவன். அவன் - வெறுப்புவிருப்புக்களைச் செய்கின்ற துன்பஇன்பங்களைச் சமமாகக்கொண்டவன். பொறுமையுள்ளவன்; வைதாலும், அடித்தாலும் மாறுபாடில்லாமலே [கோபம் முதலியவற்றை அடையாமலே] நிற்கின்றானென்க. (௧௩)

எப்பொழுதும் திருப்தியுள்ளவன், சரீரம் நிலைத்தற்கு இடம்பாடு கிடைப்பதிலும், கிடையாமையிலும், போதுமென்னும் எண்ணம் உண்டாகப்பெற்றவன். அவ்வாறே, நல்லது கிடைப்பதிலும், (அதற்கு) மாறானதிலும் [கிடையாமையிலும்] திருப்தியடைந்தவன். ("எப்பொழுதும்" என்பதை ஒவ்வொரு விசேஷணத்தோடும் கூட்டுக, — ஆ.) எப்பொழுதும் யோகி, சித்தம் ஒருநிலைப்பட்டவன். ஸ்வபாவத்தை [தேகத்தையும், இந்திரியங்களையும்] அடக்கியவன். ஆத்மஉண்மையின் விஷயத்திலே நிச்சயம் நிலைத்தவன். அந்த ஸந்யாஸியானவன் - நோக்கங்களும் எண்ணங்களுமாகிய மனத்தையும், நிர்ணயிக்குந்தன்மையதான புத்தியையும் என்னிடத்தேயே நிறுத்தியவன். எவன் என்னுடைய இத்தகைய பக்தனே, அவன் எனக்குப் பிரியமானவன். "நான் ஞானிக்கு மிகவும் பிரியமானவன்; அவனும் எனக்குப் பிரியமானவன்" (எ - ௧௭) என ஏழாம் அத்தியாயத்துள் குறிப்பிக்கப்பட்டது. அது இங்கு விரித்துரைக்கப்படுகின்றது. (௧௪)

௧௫. உலகம் எவனிடத்தினின்றும் வருந்துவதில்லையோ; அன்றியும், எவன் உலகத்தினின்றும் வருந்துவதில்லையோ; எவன் மகிழ்வு, பொறாமை, அச்சம், கலக்கம் என்பவை நீங்கியவனே; அவன்தான் எனக்குப் பிரியமானவன்.

यस्मात् संत्रासितः न उद्विजते न उद्वेगं गच्छति न संतप्यते न संक्षुभ्यति लोकः, तथा लोकात् न उद्विजते च यः, हर्षामर्षभयोद्वेगैः, हर्षश्च अमर्षश्च भयं च उद्वेगश्च तैः हर्षामर्षभयोद्वेगैः मुक्तः—हर्षः प्रियलाभे अन्तःकरणस्य उत्कर्षः रोमाञ्चनाश्रुपातादिलिङ्गः, अमर्षः असहिष्णुता, भयं त्रासः, उद्विग्नता, तैः मुक्तः यः स च मे प्रियः ॥ ௧௫ ॥

௧௬. अनपेक्षः शुचिर्दक्ष उदासीनो गतव्यथः ।
सर्वारम्भपरित्यागी यो मद्भक्तः स मे प्रियः ॥

अनपेक्षः देहेन्द्रियविषयसंबन्धादिषु अपेक्षा यस्य नास्ति सः अनपेक्षः निःस्पृहः । शुचिः, बाह्येन आभ्यन्तरेण च शौचेन संपन्नः । दक्षः, प्रत्युत्पन्नेषु कार्येषु सद्यः यथावत् प्रतिपत्तुं समर्थः । उदासीनः न कस्यचित् मित्रादेः पक्षं भजते यः सः उदासीनः । गतव्यथः गतभयः । सर्वारम्भपरित्यागी, आरभ्यन्त इति आरम्भा इहामुत्रफलभोगार्थानि कामहेतूनि कर्माणि सर्वारम्भाः, तान् परित्यक्तुं शीलम् अस्य इति सर्वारम्भपरित्यागी यः मद्भक्तः सः मे प्रियः ॥ ௧௬ ॥

किंच—

௧௭. यो न हृष्यति न द्वेष्टि न शोचति न काङ्क्षति ।
शुभाशुभपरित्यागी भक्तिमान्यः स मे प्रियः ॥

---

எவனிடத்தினின்றும் - எந்த ஸம்ஸாரியினிடத்தினின்றும். மகிழ்வு - விரும்பிய பொருள் கிடைத்தவளவிலே மனம் [அகக்கரணம்] பூரித்தல்; (அது) - மயிர்சிலிர்த்தல், கண்ணீர்சொரிதல் முதலியவற்ருல் குறிப்பிக்கப்படுவது. (௧௫)

௧௬. அபேக்ஷையில்லாதவனும், பரிசுத்தமானவனும், ஸாமர்த்தியமுடையவனும், உதாஸீனனும், அச்சமற்றவனும், எல்லாமுயற்சிகளையும் விட்டொழிபவனுமான என் பக்தன் எவனே, அவன் எனக்குப் பிரியன்.

அபேக்ஷையில்லாதவன் - தேகம், இந்திரியங்கள், விஷயங்கள், (இவற்றின்) கூட்டுறவுமுதலியவற்றின்மேல் அவாவில்லாதவன். பரிசுத்தமானவன் - வெளிப்பரிசுத்தமும், உள்பரிசுத்தமும் உடையவன். ஸாமர்த்தியமுடையவன் - கார்யங்கள் நடக்கின்றபோது நேர்ந்தவழி, (அவற்றை) உடனே நேராக அறிய(வும், செய்யவும்) வல்லவன். நண்பன் முதலான ஒருவனுடைய பக்கத்தையும் எவன் சார்வதில்லையோ, அவன் - உதாஸீனன். எல்லாமுயற்சிகளையும் விட்டொழிபவன் - விரும்பியவற்றைத் தருபவையாய், இம்மைமறுமைக்கான செய்கைகளை முற்றத் துறந்திடுந்தன்மையன். (௧௬)

மேலும்,

௧௭. எவன் மகிழ்வதில்லையோ, வெறுப்பதில்லையோ, வருந்துவதில்லையோ, விரும்புவதில்லையோ; எவன் நல்லனவற்றையும், தீயனவற்றையும் விட்டொழிபவனே, பக்தியுள்ளவனே; அவன் எனக்குப் பிரியன்.

𑌯𑌃 𑌨 𑌹𑍃𑌷𑍍𑌯𑌤𑌿 𑌇𑌷𑍍𑌟𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍌, 𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 𑌅𑌨𑌿𑌷𑍍𑌟𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍌, 𑌨 𑌶𑍋𑌚𑌤𑌿 𑌪𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌯𑍋𑌗𑍇, 𑌨 𑌅𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌂 𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌤𑌿, 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑍀 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍁𑌂 𑌶𑍀𑌲𑌮𑌸𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 𑌭𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌨𑍍 𑌯𑌃 𑌸 𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 ॥ ௧௭ ॥

௧௮. 𑌸𑌮𑌃 𑌶𑌤𑍍𑌰𑍌 𑌚 𑌮𑌿𑌤𑍍𑌰𑍇 𑌚 𑌤𑌥𑌾 𑌮𑌾𑌨𑌾𑌪𑌮𑌾𑌨𑌯𑍋𑌃 ।
𑌶𑍀𑌤𑍋𑌷𑍍𑌣𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑍇𑌷𑍁 𑌸𑌮𑌃 𑌸𑌙𑍍𑌗𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 ॥

𑌸𑌮𑌃 𑌶𑌤𑍍𑌰𑍌 𑌚 𑌮𑌿𑌤𑍍𑌰𑍇 𑌚, 𑌤𑌥𑌾 𑌮𑌾𑌨𑌾𑌪𑌮𑌾𑌨𑌯𑍋𑌃 𑌪𑍂𑌜𑌾𑌪𑌰𑌿𑌭𑌵𑌯𑍋𑌃, 𑌶𑍀𑌤𑍋𑌷𑍍𑌣𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑍇𑌷𑍁 𑌸𑌮𑌃, 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌙𑍍𑌗𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌶𑍍𑌚 ॥ ௧௮ ॥

𑌕𑌿𑌞𑍍𑌚—

௧௯. 𑌤𑍁𑌲𑍍𑌯𑌨𑌿𑌨𑍍𑌦𑌾𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌰𑍍𑌮𑍌𑌨𑍀 𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑍋 𑌯𑍇𑌨 𑌕𑍇𑌨𑌚𑌿𑌤𑍍 ।
𑌅𑌨𑌿𑌕𑍇𑌤𑌃 𑌸𑍍𑌥𑌿𑌰𑌮𑌤𑌿𑌰𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌨𑍍𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑍋 𑌨𑌰𑌃 ॥

𑌤𑍁𑌲𑍍𑌯𑌨𑌿𑌨𑍍𑌦𑌾𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌃 𑌨𑌿𑌨𑍍𑌦𑌾 𑌚 𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌶𑍍𑌚 𑌨𑌿𑌨𑍍𑌦𑌾𑌸𑍍𑌤𑍁𑌤𑍀 𑌤𑍁𑌲𑍍𑌯𑍇 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌃 𑌤𑍁𑌲𑍍𑌯𑌨𑌿𑌨𑍍𑌦𑌾𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌃 । 𑌮𑍌𑌨𑍀 𑌮𑍌𑌨𑌵𑌾𑌨𑍍 𑌸𑌂𑌯𑌤𑌵𑌾𑌕𑍍 । 𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑌃 𑌯𑍇𑌨 𑌕𑍇𑌨𑌚𑌿𑌤𑍍 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌹𑍇𑌤𑍁𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣 ; 𑌤𑌥𑌾 𑌚 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍—

"𑌯𑍇𑌨 𑌕𑍇𑌨𑌚𑌿𑌦𑌾𑌚𑍍𑌛𑌨𑍍𑌨𑍋 𑌯𑍇𑌨 𑌕𑍇𑌨𑌚𑌿𑌦𑌾𑌶𑌿𑌤𑌃 ।
𑌯𑌤𑍍𑌰𑌕𑍍𑌵𑌚𑌨𑌶𑌾𑌯𑍀 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌤𑌂 𑌦𑍇𑌵𑌾 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌂 𑌵𑌿𑌦𑍁𑌃 ॥"

𑌇𑌤𑌿 । 𑌕𑌿𑌞𑍍𑌚—𑌅𑌨𑌿𑌕𑍇𑌤𑌃 𑌨𑌿𑌕𑍇𑌤𑌃 𑌆𑌶𑍍𑌰𑌯𑌃 𑌨𑌿𑌵𑌾𑌸𑌃 𑌨𑌿𑌯𑌤𑌃 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌃 𑌅𑌨𑌿𑌕𑍇𑌤𑌃, '𑌨𑌾𑌗𑌾𑌰𑍇' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍 । 𑌸𑍍𑌥𑌿𑌰𑌾 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌵𑌿𑌷𑌯𑌾 𑌯𑌸𑍍𑌯 𑌮𑌤𑌿𑌃 𑌸𑌃 𑌸𑍍𑌥𑌿𑌰𑌮𑌤𑌿𑌃 । 𑌭𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌨𑍍𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 𑌨𑌰𑌃 ॥ ௧௯ ॥

---

எவன் வேண்டியவை வந்தவழி மகிழ்வதில்லேயோ, வேண்டாதன வந்தவழி வெறுப்பதில்லேயோ, பிரியமானதை இழக்குங்கால் வருந்துவதில்லேயோ, கிடையாததை விரும்புவதில்லேயோ, நல்வினைகளையும் தீவினைகளையும் முற்றத்துறக்கும்இயல்பினனுய் பக்தியையுடையவனே, அவன் எனக்குப் பிரியன். (௧௭)

௧௮. (இவன்) பகைவனிடத்தும், நண்பனிடத்தும் ஒப்பநிற்பவன்; அவ்வாறே, மானத்திலும் அவமானத்திலும், குளிரிலும் வெப்பத்திலும், இன்பத்திலும் துன்பத்திலும் ஒப்பநிற்பவன் ; (எங்கும்) பற்றில்லாதவன்.

அன்றியும்,

௧௯. இகழ்ச்சி புகழ்ச்சிகளை ஸமமாகக்கொண்டவனும், மௌனமுடையவனும், எதனுலாயினும் திருப்திவந்தவனும், வீடில்லாதவனும், மனம்நிலைத்தவனும், பக்தியுள்ளவனுமான மனிதன் எனக்குப் பிரியன்.

மௌனமுடையவன் - வாயை அடக்கினவன். எதனுலாயினும் திருப்திவந்தவன் - சரீரம் நிலைத்தற்குக்காரணமான (தவிர்க்கமுடியாத உணவுமுதலிய) வற்றினுல்மாத்திரம் திருப்தியுள்ளவன் ; அவ்வாறே, "எதனையாயினும் உடுப்பவன், எதனையாயினும் உண்பவன், எங்கேயாயினும் படுப்பவன் ; (எவன் இவ்வாறு) இருக்கின்ருனே, அவனைத் தேவர்கள் ப்ராஹ்மணன் என்கிருர்கள்" (மகா - சா - மோ - ௨௪௫ - ௧௨) என்று கூறப்பட்டுள்ளது. வீடில்லாதவன் - (தனக்கென்று) அமைந்த தங்குமிடமில்லாதவன் ; "வீட்டின்மேல் (பற்று) இல்லை" என்பதுமுதலான வேருெரு ஸ்மிருதியினுலென்க. மனம் நிலைத்தவன் - பரம்பொருளைப்பற்றிய கருத்து நிலைத்தவன். (௧௯)

‘𑌅𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌾 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 𑌅𑌕𑍍𑌷𑌰𑍋𑌪𑌾𑌸𑌕𑌾𑌨𑌾𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌾𑌂 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌂 𑌧𑌰𑍍𑌮𑌜𑌾𑌤𑌂 𑌪𑍍𑌰𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌮𑍍 𑌉𑌪𑌸𑌂𑌹𑍍𑌰𑌿𑌯𑌤𑍇—

௨௰. 𑌯𑍇 𑌤𑍁 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌮𑌿𑌦𑌂 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌂 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 ।
𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌾 𑌮𑌤𑍍𑌪𑌰𑌮𑌾 𑌭𑌕𑍍𑌤𑌾𑌸𑍍𑌤𑍇𑌽𑌤𑍀𑌵 𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑍇 𑌶𑌤𑌸𑌾𑌹𑌸𑍍𑌰𑍍𑌯𑌾𑌂 𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌯𑌾𑌂 𑌵𑍈𑌯𑌾𑌸𑌿𑌕𑍍𑌯𑌾𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌪𑌰𑍍𑌵𑌣𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍁 𑌉𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇 𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌮 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

𑌯𑍇 𑌤𑍁 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌃 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌂 𑌧𑌰𑍍𑌮𑌾𑌦𑌨𑌪𑍇𑌤𑌂 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌚 𑌤𑌤𑍍 𑌅𑌮𑍃𑌤𑌂 𑌚 𑌤𑌤𑍍, 𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌇𑌦𑌂 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌮𑍍 ‘𑌅𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌾 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 𑌅𑌨𑍁𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌿 𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌾𑌃 𑌸𑌨𑍍𑌤𑌃 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌃 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌃 𑌅𑌕𑍍𑌷𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑌰𑌃 𑌨𑌿𑌰𑌤𑌿𑌶𑌯𑌾 𑌗𑌤𑌿𑌃 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌃 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌾𑌶𑍍𑌚 𑌉𑌤𑍍𑌤𑌮𑌾𑌂 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌜𑍍𑌞𑌾𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌮𑍍 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 𑌤𑍇 𑌅𑌤𑍀𑌵 𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 । ‘𑌪𑍍𑌰𑌿𑌯𑍋 𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑍋𑌽𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌮𑍍’ 𑌇𑌤𑌿 𑌯𑌤𑍍 𑌸𑍂𑌚𑌿𑌤𑌂 𑌤𑌤𑍍 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌯 𑌇𑌹 𑌉𑌪𑌸𑌂𑌹𑍃𑌤𑌂 ‘𑌭𑌕𑍍𑌤𑌾𑌸𑍍𑌤𑍇𑌽𑌤𑍀𑌵 𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌃’ 𑌇𑌤𑌿 । 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌮𑍍

---

உண்மைஅறிவிலே உறுதியாகநிற்பவராய் அழியாப்பொருளைத் தொழுகின்ற வர்கட்கு "எந்தப் பிராணியையும் பகையாதவன்" (௧௨ - ௧௩) எனத் தொடங்கிய ஒழுக்கமனைத்தையும் முடிக்கிறார் :

௨௰. எவர்கள் நம்பிக்கையுள்ளவராய், என்னையே மேலாகக்கொண்ட பக்தர்களாய், தருமத்தின் நீங்காத கீழ்க்கூறிய இந்த அமிருதத்தை உண்மையாகவே அநுஷ்டிக்கிறார்களோ, அவர்கள் எனக்கு மிகவும் பிரியர்கள்.

ஸ்ரீமகாபாரதத்திலே, வ்யாஸ ரருளிச்செய்த நூறுயிரக்கிரந்த ஸம்ஹிதையிலே, பீஷ்மபர்வத்திலே, ஸ்ரீமத் பகவத்கிதைகளாக உபநிஷத்துக்களாக ப்ரஹ்மவித்யையாக யோகசாஸ்திரமாக இருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணார்ஜுந ஸம்வாதத்திலே பக்தியோகம் என்னும் பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றும்.

எவர்கள் - ஸந்யாஸிகள். தருமத்தின் நீங்காத - ஒழுக்கத்தின் நீங்காத [நல்லொழுக்கம் நிரம்பிய]. சாகாமைக்கு ஸாதநமாதலால், (பகையின்மை, அவாவின்மை, பொறுமை முதலியவற்றை) அமிருதமென்க. (அமிருதம் - சாகாமை, முக்தி என்றபடி. இவ்வாறாக, " அமிருதத்தை " என்பதற்கு - பகையின்மைமுதலிய மோக்ஷஸாதநங்களை எனப் பொருள்கொள்க.) கீழ்க்கூறிய - " எந்தப்பிராணியையும் பகையாதவன் " (௧௨ - ௧௩) என்பதுமுதலாகக் கூறப்பட்ட. என்னையே மேலாகக்கொண்ட - கீழ்க்கூறிய அழியாப்பொருளாகிய என்னையே யாவற்றினும்மேலான கதியாகக்கொண்ட. பக்தர்களாய் - உண்மையறிவென்னும் உயர்ந்த பக்தியிற் சென்றவராய். "நான் ஞானிக்கு மிகவும் பிரியமானவன் " (௭ - ௧௭) என்று எது குறிப்பிக்கப்பட்டதோ, அது விரித்துரைத்து, " அவர்கள் எனக்கு மிகவும் பிரியர்கள் " (௧௨ - ௨௰) என இங்கே முடிக்கப்பெற்றது. நல்லொழுக்கம்நிரம்பிய கீழ்க்கூறிய இந்த மோக்ஷஸாதநங்களை அநுஷ்டிப்பவன் எங்குமுள்ள பரமேச்வரனாகிய பகவானுக்கு மிகவும் பிரியனாகிறான்

𑌇𑌦𑌂 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌮𑌨𑍁𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍 𑌭𑌗𑌵𑌤𑌃 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌅𑌤𑍀𑌵 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 𑌭𑌵𑌤𑌿 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌇𑌦𑌂 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌂 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍁𑌣𑌾 𑌯𑌤𑍍𑌨𑌤𑌃 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌮𑍍, 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 𑌪𑌰𑌂 𑌪𑌦𑌂 𑌜𑌿𑌗𑌮𑌿𑌷𑍁𑌣𑌾 ; 𑌇𑌤𑌿 𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌃 ॥ ௨௦ ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌭𑌾𑌷𑍍𑌯𑍇 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

---

ஆதலால், (ஸம்ஸாரத்தினின்றும்) விடுபட விரும்பியவனாய் விஷ்ணுவிற்குப் பிரியமான உயர்ந்த நிலையை அடையக் கருதுபவன் நல்லொழுக்கம்நிரம்பிய இம்மோக்ஷஸாதநங்களை முயற்சியொடு அநுஷ்டிக்கவேண்டும்; என்பது - (இப்)பிரகரணத்தின் பொருளென்க. (௨௦)

ஸ்ரீமத் பகவத்கீதாபாஷ்யத்தில் பன்னிரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

𑌅𑌥

# 𑌤𑍍𑌰𑌯𑍋𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌵𑌿𑌭𑌾𑌗𑌯𑍋𑌗𑌃 ॥

𑌸𑌪𑍍𑌤𑌮𑍇𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑍇 𑌚 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍀 𑌸𑍂𑌚𑌿𑌤𑍇 𑌈𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯, 𑌤𑍍𑌰𑌿𑌗𑍁𑌣𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾 𑌅𑌷𑍍𑌟𑌧𑌾 𑌭𑌿𑌨𑍍𑌨𑌾 𑌅𑌪𑌰𑌾 𑌸𑌂𑌸𑌾𑌰𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌪𑌰𑌾 𑌚 𑌅𑌨𑍍𑌯𑌾 𑌜𑍀𑌵𑌭𑍂𑌤𑌾 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌲𑌕𑍍𑌷𑌣𑌾 𑌈𑌶𑍍𑌵𑌰𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾; 𑌯𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌭𑍍𑌯𑌾𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌃 𑌜𑌗𑌦𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌲𑌯𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌤𑌤𑍍𑌰 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌲𑌕𑍍𑌷𑌣𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌦𑍍𑌵𑌯𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 𑌤𑌦𑍍𑌵𑌤𑌃 𑌈𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌨𑌿𑌰𑍍𑌧𑌾𑌰𑌣𑌾𑌯 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 𑌆𑌰𑌭𑍍𑌯𑌤𑍇 ॥

𑌅𑌤𑍀𑌤𑌾𑌨𑌨𑍍𑌤𑌰𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍇 𑌚 ‘𑌅𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌾 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 𑌯𑌾𑌵𑌦𑌧𑍍𑌯𑌾𑌯𑌪𑌰𑌿𑌸𑌮𑌾𑌪𑍍𑌤𑌿𑌃 𑌤𑌾𑌵𑌤𑍍 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌾𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌾𑌂 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌯𑌥𑌾 𑌤𑍇 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌦𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌕𑍇𑌨 𑌪𑍁𑌨𑌃 𑌤𑍇 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌧𑌰𑍍𑌮𑌾𑌚𑌰𑌣𑌾𑌤𑍍 𑌭𑌗𑌵𑌤𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾 𑌭𑌵𑌨𑍍𑌤𑍀𑌤𑌿? 𑌏𑌵𑌮𑌰𑍍𑌥𑍋𑌽𑌯𑌮𑌧𑍍𑌯𑌾𑌯 𑌆𑌰𑌭𑍍𑌯𑌤𑍇 ॥

---

# பதின்மூன்ரும் அத்தியாயம்: க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞவிபாகயோகம்.

### இவ்வத்தியாயத்திற் கூறப்படுகின்ற முக்கிய விஷயம்.

ஏழாம் அத்தியாயத்தினுள், பரமேச்வரனுக்கு இரண்டு பிரகிருதிகள் குறிப்பிக்கப்பட்டன; (அவற்றுள், ஒன்று) முக்குணவடிவமாய் எட்டுவகையாகவேறுபட்டது, ஸம்ஸாரத்திற்குக் காரணமாதலால் தாழ்ந்தது; மற்றையதோ உயர்ந்தது, உயிராயிருப்பது, க்ஷேத்ரத்தை [ஜடப்பொருளை] அறிவதாகி ஈச்வரவடிவமாயுள்ளது. பிரபஞ்சம் தோன்றுதற்கும் நிலைத்தற்கும் மறைதற்கும் காரணமாதலை ஈச்வரன் இப்பிரகிருதிகளால் அடைகிறான் [உலகம் உண்டாதல் முதலியவற்றிற்கு ஈச்வரன் இந்த இரண்டு பிரகிருதிகளாலும் காரண மாகிறான்]. இனி, க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞன் [க்ஷேத்ரத்தை அறிவது] என்னும் இரண்டு பிரகிருதிகளை உணர்த்தும்வழியாக அவற்றையுடைய ஈச்வரனது உண்மையை நிச்சயமாக நிர்ணயிக்கும்பொருட்டு, க்ஷேத்ரத்தைப்பற்றிய அத்தியாயம் தொடங்கப்படுகின்றது.

சென்ற அடுத்த அத்தியாயத்தினுள் "எந்தப்பிராணியையும் பகையாதவன்" (௧௨ - ௧௩) என்பது முதல் (அந்த) அத்தியாய முடிவுவரை, மெய்யறிவுள்ள துறவிகட்கு நிஷ்டையானது, அவர்கள் ஒழுகும்விதமானது கூறப்பட்டது.

(வினு) :— ஆனால், அவர்கள் எத்தகைய மெய்யறிவைக் கூடியவர்களாய்க் கீழ்க்கூறிய ஒழுக்கங்களை அனுஷ்டிப்பதனால் பகவானுக்குப் பிரியமானவராக ஆகிறார்கள் என்பது?

(விடை) :—இத்தகைய விஷயத்தையும் உடையதாய் இவ்வத்தியாயம் தொடங்கப்படுகின்றது. (ஆகவே, விடையை இவ்வத்தியாயத்தினுள் காண்க.)

𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑍍𑌤𑍁 𑌤𑍍𑌰𑌿𑌗𑍁𑌣𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾 𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌵𑌿𑌷𑌯𑌾𑌕𑌾𑌰𑍇𑌣 𑌪𑌰𑌿𑌣𑌤𑌾 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌭𑍋𑌗𑌾𑌪𑌵𑌰𑍍𑌗𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑌯𑌾 𑌦𑍇𑌹𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍇𑌣 𑌸𑌂𑌹𑌨𑍍𑌯𑌤𑍇 । 𑌸𑍋𑌽𑌯𑌂 𑌸𑌂𑌘𑌾𑌤𑌃 𑌇𑌦𑌂 𑌶𑌰𑍀𑌰𑌮𑍍 । 𑌤𑌦𑍇𑌤𑌤𑍍 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌉𑌵𑌾𑌚—

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁 𑌉𑌵𑌾𑌚 ॥

௧. 𑌇𑌦𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌮𑌿𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ।
𑌏𑌤𑌦𑍍𑌯𑍋 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌤𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞 𑌇𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑌃 ॥

'𑌇𑌦𑌮𑍍' 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌨𑌾𑌮𑍍𑌨𑌾 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌵𑌿𑌶𑌿𑌨𑌷𑍍𑌟𑌿 '𑌶𑌰𑍀𑌰𑌮𑍍' 𑌇𑌤𑌿 । 𑌹𑍇 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌕𑍍𑌷𑌤𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌤𑍍, 𑌕𑍍𑌷𑌯𑌾𑌤𑍍, 𑌕𑍍𑌷𑌰𑌣𑌾𑌤𑍍, 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌵𑌤𑍍 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌨𑌿𑌷𑍍𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌮𑍍 𑌇𑌤𑌿—'𑌇𑌤𑌿' 𑌶𑌬𑍍𑌦𑌃 𑌶𑌬𑍍𑌦𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌕𑌃—𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌮𑍍 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑍍 𑌅𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 𑌕𑌥𑍍𑌯𑌤𑍇 । 𑌏𑌤𑌤𑍍 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌯𑌃 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌵𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿, 𑌆𑌪𑌾𑌦𑌤𑌲𑌮𑌸𑍍𑌤𑌕𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌵𑌿𑌷𑌯𑍀𑌕𑌰𑍋𑌤𑌿, 𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌿𑌕𑍇𑌨 𑌔𑌪𑌦𑍇𑌶𑌿𑌕𑍇𑌨 𑌵𑌾 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌵𑌿𑌷𑌯𑍀𑌕𑌰𑍋𑌤𑌿 𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌃, 𑌤𑌂 𑌵𑍇𑌦𑌿𑌤𑌾𑌰𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌃 𑌕𑌥𑌯𑌨𑍍𑌤𑌿 '𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌃' 𑌇𑌤𑌿—'𑌇𑌤𑌿' 𑌶𑌬𑍍𑌦𑌃 𑌶𑌬𑍍𑌦𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌕𑌃 𑌏𑌵 𑌪𑍂𑌰𑍍𑌵𑌵𑌤𑍍—𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌃 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑍍 । 𑌕𑍇 ? 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑌃 𑌯𑍇 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑍌 𑌵𑌿𑌦𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑌃 ॥

---

## உடலும், ஆத்மாவும்:

இனி, முக்குணவடிவமான பிரகிருதியானது-சரீரங்கள், இந்திரியங்கள், இந்திரியவிஷயங்கள் என்ற எல்லாவற்றினுடைய உருவமாகப் பரிணமித்து, போகம் மோக்ஷம் என்னும் பயன்களைப் புருஷன் செய்துகொள்ளவேண்டியதனால் தேகம் இந்திரியம் முதலியவடிவமாக ஒருங்குசேர்க்கப்படுகின்றது. அத்தகைய இச்சேர்க்கைதான், இச்சரீரம். ஆகவே, பகவான் இதனைக் கூறலாயினர் :

பகவான் சொல்லலுற்றார் :

க. கௌந்தேய ! இது (அதாவது) சரீரம் "க்ஷேத்ரம்" என்று வழங்கப்படுகின்றது. இதனை எவன் அறிகின்றானோ, அவனை "க்ஷேத்ரஜ்ஞன்" என்று அவற்றையுணர்ந்தவர்கள் கூறுகிறார்கள்.

"இது" என்னும் ஸர்வநாமத்தால் கூறப்பட்டதை "சரீரம்" என விசேஷிக்கிறார். (இடைச்சொல்லால் வரும் அது, இது முதலான பெயர்களை 'ஸர்வநாமம்' என்பர் வடநூலார்.) கௌந்தேய! (இது)-கெடுதியினின்றும் பாதுகாக்கப்படுவதனாலும், அழிவதனாலும், தேய்வதனாலும், வயலில் (நெல்) போல, இதில் கர்மத்தின்பயன் விளைவதனாலும் க்ஷேத்ரம் என்று கூறப்படுகின்றது.—" என்று " என்னும்சொல் - (க்ஷேத்ரம் என்னும்)சொல்லையே அர்த்தமாகக்கொண்டது.—இச்சரீரமாகிய க்ஷேத்ரத்தைஎவன் அறிகின்றானோ, உள்ளங்கால் முதல் உச்சந்தலைவரை அறிவினால் எட்டுகின்றானோ, இயற்கையுணர்வினாலாவது, உபதேசஉணர்வினாலாவது (தன்னினும்) வேறாக விஷயப்படுத்திஉணர்கின்றானோ, அந்த உணர்பவனை க்ஷேத்ரஜ்ஞன் எனக் கூறுகிறார்கள்.—யார்?—அந்த க்ஷேத்ரத்தையும்,க்ஷேத்ரஜ்ஞனையும் அறிந்தவர்கள்.—"என்று"என்னும் சொல் - முன்போல, (க்ஷேத்ரஜ்ஞன் என்னும்)சொல்லையே அர்த்தமாகக்கொண்டது.

एवं क्षेत्रक्षेत्रज्ञौ उक्तौ । किं एतावन्मात्रेण ज्ञानेन ज्ञातव्यौ इति ? नेत्युच्यते —

२. क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत ।
क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं यत्तज्ज्ञानं मतं मम ॥

क्षेत्रज्ञं यथोक्तलक्षणं चापि मां परमेश्वरम् असंसारिणं विद्धि जानीहि । सर्वक्षेत्रेषु यः क्षेत्रज्ञः ब्रह्मादिस्तम्बपर्यन्तानेकक्षेत्रोपाधिप्रविभक्तः, तं निरस्तसर्वोपाधिभेदं सदसदादिशब्दप्रत्ययागोचरं विद्धि इति अभिप्रायः । हे भारत यस्मात् क्षेत्रक्षेत्रज्ञेश्वरयाथात्म्यव्यतिरेकेण न ज्ञानगोचरम् अन्यत् अवशिष्टम् अस्ति, तस्मात् क्षेत्रक्षेत्रज्ञयोः ज्ञेयभूतयोः यत् ज्ञानं, क्षेत्रक्षेत्रज्ञौ येन ज्ञानेन विषयीक्रियेते, तत् ज्ञानं सम्यग्ज्ञानम् इति मतम् अभिप्रायः मम ईश्वरस्य विष्णोः ॥

ननु सर्वक्षेत्रेष्वेक एव ईश्वरः, न अन्यः तद्व्यतिरिक्तः भोक्ता विद्यते चेत्, ततः ईश्वरस्य संसारित्वं प्राप्तम्; ईश्वरत्वि-

---

**ஆத்மாவும், பகவானும் உண்மைநிலையிலே ஒன்று.**

இவ்வாறு க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞரிருவரும் விவரிக்கப்பெற்றார்கள். (அவர்கள்) இவ்வளவுமாத்திரமான அறிவைக்கொண்டே அறியத்தக்கவரா என்பது ?—அல்லர் எனக் கூறப்படுகின்றது [உடம்பை அறிபவனான ஆத்மா அந்தஉடம்பினின்றும் வேறு என்ற இவ்வளவு அறிவுமாத்திரம் போதுமோ ? எனின், போதாது. மற்றென்னவெனின், கூறுவோம்] :

உ. பாரத ! எல்லாக்ஷேத்ரங்களிலும் (உள்ள) க்ஷேத்ரஜ்ஞனை நானாகவும் அறி. க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களுடைய அறிவு எதுவோ, அது(தான்) என்னால் அறிவாகக் கருதப்பட்டுள்ளது.

மேற்கூறிய க்ஷேத்ரஜ்ஞனை - (பிறந்து இறந்து உழலும்) உலகப்பிராணியல்லாத பரமேச்வரனாகிய நான் என்றும் அறிந்துகொள் : எவன் எல்லாக்ஷேத்ரங்களிலும் க்ஷேத்ரஜ்ஞனாய், ப்ரஹ்மாமுதல் புல்வரையிலுமுள்ள க்ஷேத்ரங்களாகிய பல உபாதிகளால் பலவாறு வேறுபட்டிருக்கின்றானோ, அவனை - உபாதிகளுடைய எத்தகைய வேற்றுமையும் அற்றவனாகவும், 'உள்ளது', 'இல்லது' முதலிய சொற்களுக்கும் நினைப்பிற்கும் எட்டாதவனாகவும் தெரிந்துகொள் என்பது கருத்து. ஏ ! பாரத ! க்ஷேத்ரம், க்ஷேத்ரஜ்ஞன், ஈச்வரன் இவர்களுடைய உள்ளபடியான தன்மையைத்தவிர அறியவேண்டியது வேறொன்றும் மிஞ்சிநிற்பதில்லை ஆதலின், அறியப்படும் பொருள்களாகிய க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்கள் எந்த அறிவினால் அறியப்படுகிறார்களோ, அந்த அறிவு - மெய்யறிவு என்பது, எங்குமுள்ள பொருளாகிய ஈச்வரனான என்னுடைய கருத்து.

**ஸம்ஸாரமும், ஸம்ஸாரியும் அறியாமையினாலுள்ளவை.**

(ஸம்ஸாரம் - பிறந்து இறந்து உழலுதல். இதனையுடையவன் - ஸம்ஸாரி.)

(ஆக்ஷேபம்) :—அப்படியானால், எல்லாக்ஷேத்ரங்களிலும் ஈச்வரன் ஒருவன்தான் இருக்கிறானேயன்றி, அவனிலும் வேறான போக்தா [அநுபவிப்பவன்] மற்றொருவன் இல்லை எனின்,—அப்பொழுது ஈச்வரன் ஸம்ஸாரி என்று ஆகும் ; அல்லது, ஈச்

रेकेण वा संसारिणः अन्यस्य अभावाच्च संसाराभावप्रसङ्गः। तच्च उभयमनिष्टं, बन्धमोक्षतद्धेतुशास्त्रानर्थक्यप्रसङ्गात्, प्रत्यक्षादिप्रमाणविरोधाच्च — प्रत्यक्षेण तावत् सुखदुःखतद्धेतुलक्षणः संसारः उपलभ्यते; जगद्वैचित्र्याच्च पुण्यपापरूपनिमित्तः संसारः अनुमीयते। सर्वमेतत् अनुपपन्नम् आत्मेश्वरैकत्वे॥

न; ज्ञानाज्ञानयोः अन्यत्वेन उपपत्तेः — 'दूरमेते विपरीते विषूची अविद्या या च विद्येति ज्ञाता'। तथा तयोः विद्याविद्ययोः फलभेदः विरुद्धः निर्दिष्टः 'श्रेयश्च प्रेयश्च' इति — विद्याविषयं श्रेयः, प्रेयस्तु अविद्याकार्यमिति। तथा च व्यासः — 'द्वाविमावथ पन्थानौ' इत्यादि, 'इमौ द्वावेव पन्थानौ' इत्यादि च। इह च द्वे निष्ठे उक्ते। अविद्या च कार्येण सह हातव्या इति श्रुतिस्मृतिन्यायेभ्यः अवगम्यते। श्रुतयः तावत् — 'इह चेदवेदीदथ सत्यमस्ति न चेदिहावेदीन्महती विनष्टिः' 'तमेवं विद्वानमृत इह भवति। नान्यः पन्था विद्यतेऽयनाय' 'विद्वा-

---

வரனைத்தவிர வேறு ஸம்ஸாரி இல்லாமையினால், ஸம்ஸாரம் இல்லையாதல் வேண்டும். அவைஇரண்டும் ஏற்கர்தவை ; ஏனெனில், (அப்பொழுதும்) பந்தத்தையும், மோக்ஷத்தையும்,அவற்றின் காரணங்களையும் பற்றிய நூல்கள் வீணாதல் வேண்டும் ; அன்றியும், (ஸம்ஸாரமில்லையென்பது) பிரத்தியக்ஷம்முதலிய பிரமாணங்கட்கு விரோதமாகும். மேலும், பிரபஞ்சத்திலே வெவ்வேறான வேற்றுமையைக் காண்பதனால், புண்யபாவங்களாலாகும் ஸம்ஸாரமானது அநுமாநிக்கப்படுகிறது. ஆத்மாவும், ஈச்வரனும் ஒன்றுதான் என்றவழி, இதெல்லாம் பொருந்தாது.

(ஸமாதாநம்) :—அப்படியன்று ; அறிவிற்கும், அறியாமைக்குமுள்ள வேற்றுமையினால் (அதெல்லாம்) பொருந்துமாதலின். "அறியாமை எனவும், அறிவு எனவும் அறியப்பட்டவை எவையோ, (அந்த) இவையிரண்டும் (தம்முள்) மிகவும் மாறுபட்டவை, வெவ்வேறு பயனைத் தருபவை" (கட - உ - ச). அவ்வாறே, அந்த அறிவு அறியாமைகட்கு "நலமும், இனிமையும்" (கட - உ - உ) எனப் பயனிலே வேற்றுமையானது மாறுபட்டதாகக் குறிப்பிட்டுக்காட்டப்பட்டுள்ளது. அறிவைப்பற்றியது-நலம் ; இனிமையோ, அறியாமையின் தொழில் என்க. அவ்வண்ணமே, "இனி, இந்த இரண்டுவழிகள் உள்ளன" (மோ - உச - கூ) என்பது முதலியவற்றையும், "இவ்வழிகள் இரண்டேதான்" என்பது முதலியவற்றையும் வ்யாஸர்(அருளிச்செய்துள்ளார்). இங்கு [கீதையிலு]ம்,இரண்டுவழிகள் கூறப்பட்டுள்ளன. இனி,அறியாமையை(அதன்) செய்கையுடன்கூட அகற்றவேண்டும் என்பது - சுருதியினாலும், ஸ்மிருதியினாலும், யுக்தியினாலும் தெரியவருகின்றது. முதலில், சுருதிகள் (வருமாறு) :— "(எவன், 'நான் ப்ரஹ்மம்' என்று) இவ்வுலகிலே அறிந்தானோ, (அவனுக்கு) உடனே உண்மையான கைவல்யம் உண்டு. (எவன் அவ்வாறு) இவ்வுலகிலே அறியவில்லையோ, (அவனுக்குப்) பெரிய கெடுதியாம்" (கே - உ - ரு). "அதனை [ஆத்மாவை] இவ்வாறு அறிந்தவன் இங்கே சாகாதவனாகிறான் ; சேரவேண்டிய இடத்திற்கு வேறு வழி இல்லை"

𑌨 𑌬𑌿𑌭𑍇𑌤𑌿 𑌕𑍁𑌤𑌶𑍍𑌚𑌨' । 𑌅𑌵𑌿𑌦𑍍𑌵𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑍇—' 𑌅𑌥 𑌤𑌸𑍍𑌯 𑌭𑌯𑌂 𑌭𑌵𑌤𑌿' ' 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌮𑌨𑍍𑌤𑌰𑍇 𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑌾𑌃' '𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑍇𑌦 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌭𑌵𑌤𑌿' '𑌅𑌨𑍍𑌯𑍋𑌽𑌸𑌾𑌵𑌨𑍍𑌯𑍋𑌽𑌹𑌮𑌸𑍍𑌮𑍀𑌤𑌿 𑌨 𑌸 𑌵𑍇𑌦 𑌯𑌥𑌾 𑌪𑌶𑍁𑌰𑍇𑌵𑌂 𑌸 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌮𑍍' । 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌚𑍍𑌚 𑌯𑌃 '𑌸 𑌇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌭𑌵𑌤𑌿'; '𑌯𑌦𑌾 𑌚𑌰𑍍𑌮𑌵𑌤𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌃 𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌃 । 𑌸𑍍𑌮𑍃𑌤𑌯𑌶𑍍𑌚—'𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑌾𑌵𑍃𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑍇𑌨 𑌮𑍁𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌜𑌨𑍍𑌤𑌵𑌃' '𑌇𑌹𑍈𑌵 𑌤𑍈𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 𑌸𑌰𑍍𑌗𑍋 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌸𑌾𑌮𑍍𑌯𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌮𑌨𑌃' '𑌸𑌮𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌃 । 𑌨𑍍𑌯𑌾𑌯𑌤𑌶𑍍𑌚—"𑌸𑌰𑍍𑌪𑌾𑌨𑍍𑌕𑍁𑌶𑌾𑌗𑍍𑌰𑌾𑌣𑌿 𑌤𑌥𑍋𑌦𑌪𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌃 𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌜𑌯𑌨𑍍𑌤𑌿 । 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑌸𑍍𑌤𑌤𑍍𑌰 𑌪𑌤𑌨𑍍𑌤𑌿 𑌕𑍇𑌚𑌿𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌫𑌲𑌂 𑌪𑌶𑍍𑌯 𑌯𑌥𑌾 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌮𑍍॥" 𑌤𑌥𑌾 𑌚 𑌦𑍇𑌹𑌾𑌦𑌿𑌷𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑌾𑌦𑌿𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌕𑍃𑌤𑍍 '𑌜𑌾𑌯𑌤𑍇 𑌮𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌚' 𑌇𑌤𑌿 𑌅𑌵𑌗𑌮𑍍𑌯𑌤𑍇; 𑌦𑍇𑌹𑌾𑌦𑌿𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑌾𑌦𑌿𑌪𑍍𑌰𑌹𑌾𑌣𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌶-

---

(பு - ரு). "அறிந்தவன் எதிலிருந்தும் பயப்படுவதில்லை" (தை - உப - ௨ - ௪). அஜ்ஞானியைப்பற்றியோ, (பின்வரும் சுருதிகளைக் காண்க) :—"ஆனல், அவனுக்குப் பயம் உண்டு" (தை - உப - ௨ - ௭). "அஜ்ஞானத்தில் இருப்பவர்கள் (பிறந்து இறந்து உழலுகிருர்கள்)" (கட - ௨ - ௫). "ப்ரஹ்மத்தை (எவன்) அறிகிருனே, (அவன்) ப்ரஹ்மமாகவே இருக்கிருன்" (மு - ௩ - ௨ - ௯). "இவன் வேறு, நான் வேறு என்று (எவன் வேறு தேவதையை உபாஸிக்கிருனே), அவன் அறியவில்லை; (மனிதர்கட்கு) ஆடுமாடுகள் எப்படியோ, அப்படி அவன் தேவர்கட்கு" (பிரு - ௧ - ௪ - ௧௦). ஆத்மாவை அறிந்தவன் எவனே, "அவன் இதெல்லாமாக இருக்கிருன்" (பிரு - ௧ - ௪ - ௧௦). "எப்பொழுது தோல்போல (ஒருவன் ஆகாசத்தைச் சுருட்டக் கூடுமோ, அப்பொழுதும் அவனுக்கு ஆத்மாவை அறியாமல் துன்பம் நீங்காது) [ஆகாசத்தைத் தோல்போலச் சுருட்டமுடியாது; அதுபோல,பரம்பொருளைத் தனது உள்ளேயுள்ள ஆத்மாவாக அநுபவியாது ஸம்ஸாரத்தினின்றும் நீங்கமுடியாது]" (ச்வே - ௬ - ௨௦) என்பனமுதலிய (சுருதிகள்) ஆயிரக்கணக்காக உள்ளன. இனி, ஸ்மிருதிகள் வருமாறு :—"அறிவு அறியாமையினல் மூடுண்டுகிடக்கின்றது; அதனல் பிராணிகள் மயங்குகின்றன" (௫ - ௧௫). "எவர்களுடைய மனம் ஸமநிலையிலே நிலைத்ததோ, அவர்களால் பிறப்பு இங்கேயே ஜயிக்கப்பட்டது" (௫ - ௧௯). "எங்கும் ஸமமாகப் பார்ப்பவன்(மேலான கதியை அடைகிருன்)" (௧௩ - ௨௮) என்பனமுதலியவை. (அறிவின்பயன் - அனர்த்தம் நீங்குதல்; அறியாமையின் பயன் - அனர்த்தத்தை அடைதல்; என்பது -) இன்னும், யுக்தியினலும் (அமைகின்றது) :—"மனிதர்கள் பாம்புகளையும், முட்களையும், கிணற்றையும் அறிந்து விலக்குகிருர்கள் [விலகிச் செல்லுகிருர்கள்]; சிலர் அறியாமையினல் அவற்றுள் வீழ்கிருர்கள். அறிவிலே பயன் சிறந்திருக்கும்விதத்தைத் தெரிந்துகொள்" (ம - சா - மோ - ௨௦௧ - ௧௬). அவ்வண்ணமே, தேகம் முதலியவற்றில் ஆத்மபுத்தியுள்ள [தேகம் முதலியவையே ஆத்மா என்னும் புத்தியையுடைய] அஜ்ஞானியானவன் விருப்பு வெறுப்பு முதலியவற்றல் தூண்டப்பட்டு நல்வினை தீவினைகளைச் செய்பவனய்ப் பிறக்கிருன், இறக்கிருன் எனத் தெரிகின்றது; தேகம் முதலியவற்றிற்கு வேருக ஆத்மாவைக் காண்பவர்கள் விருப்பு வெறுப்பு முதலியவற்றை விட்டுவிட, அவற்றைச்சார்ந்துள்ள நல்வினை தீவினைகளில் தலைப்படுதல் ஒழிந்திடு

சாநுபபந்நம்; இதி ந கேவலம் த்³ருʼஷ்டாந்தாநுபபத்திர்வக்தும் ஶக்யம் ந்யாயத꞉ । தத்ரைவம் ஸதி, க்ஷேத்ரஜ்ஞஸ்ய ஈஶ்வரஸ்யைவ ஸத꞉ அவித்³யாக்ருʼதோபாதி⁴பே⁴தத꞉ ஸம்ஸாரித்வமிவ ப⁴வதி, யதா² தே³ஹாத்³யாத்மத்வமாத்மந꞉ । ஸர்வஜந்தூநாம் ஹி ப்ரஸித்³த⁴꞉ தே³ஹாதி³ஷ்வநாத்மஸு ஆத்மபா⁴வ꞉ நிஶ்சித꞉ அவித்³யாக்ருʼத꞉, யதா² ஸ்தா²ணௌ புருஷநிஶ்சய꞉ । ந சைதாவதா புருஷத⁴ர்ம꞉ ஸ்தா²ணோ꞉ ப⁴வதி, ஸ்தா²ணுத⁴ர்மோ வா புருஷஸ்ய । ததா² ந சைதந்யத⁴ர்மோ தே³ஹஸ்ய, தே³ஹத⁴ர்மோ வா சேதநஸ்ய ஸுக²து³꞉க²மோஹாத்மகத்வாதி³꞉ ஆத்மந꞉ ந யுக்த꞉; அவித்³யாக்ருʼதத்வாவிஶேஷாத், ஜராம்ருʼத்யுவத் ॥

ந, அதுல்யத்வாத்; இதி சேத் — ஸ்தா²ணுபுருஷௌ ஜ்ஞேயாவேவ ஸந்தௌ ஜ்ஞாத்ரா ஹி அந்யோந்யஸ்மிந் அத்⁴யஸ்தௌ அவித்³யயா; தே³ஹாத்மநோஸ்து ஜ்ஞேயஜ்ஞாத்ரோரேவ இதரேதராத்⁴யாஸ꞉, இதி ந ஸமோ த்³ருʼஷ்டாந்த꞉ । அத꞉ தே³ஹத⁴ர்ம꞉ ஜ்ஞேயோ(அ)பி ஜ்ஞாதுராத்மநோ ப⁴வதீதி சேத் —

---

தலின் (ஸம்ஸாரத்தினின்றும்) விடப்படுகிறார்கள் ; என்பது - ஒருவனாலும் யுக்தியினால் மறுக்கமுடியாதது. அது இவ்வாறானவளவிலே [அறிவும்,அறியாமையும் தம்தம் இயல்பிலும், பயனிலும் முற்றவேறுபட்டுநிற்குமளவிலே] க்ஷேத்ரஜ்ஞன் ஈச்வரனாகவே இருப்பவனாய் அவித்யையினாலானஉபாதிகளின்வேற்றுமையினால் ஸம்ஸாரிபோல ஆகிறான்; ஆத்மா-தேகம்முதலியவடிவமாக(வெள்ளறிவுஉடையவனுக்குக்காணப்படுவது)போல. [தேகம் ஆத்மா அன்று ; ஆயினும், அறியாமையினால், அது ஆத்மாபோலத் தோன்றுகின்றது. அவ்வாறே, க்ஷேத்ரஜ்ஞன் ஸம்ஸாரி அல்லன் ; ஆயினும், அறியாமையினால், அவன் ஸம்ஸாரிபோலத் தோன்றுகின்றான்; என,திருஷ்டாந்த தார்ஷ்டாந்திகங்களைப் பகுத்துக்காண்க.] தேகம்முதலிய அநாத்மாக்களிலே, ஆத்மா அல்லாதவற்றிலே ஆத்மபுத்தியானது [உடம்புமுதலியவையே ஆத்மா என்னும் எண்ணமானது] எல்லாப்பிராணிகட்கும் ஸாதாரணமாயுள்ளது ; அவித்யையினாலானது ; தூணிலே மனிதன்என்னும் நிச்சயம்போல, நிச்சயமாயுள்ளது. இனி, இதனாலே, மனிதனுடைய இயல்பு தூணுக்கு வாராது; தூணின் இயல்பும் மனிதனுக்கு வாராது. அவ்வாறே, உடம்பிற்கு உணர்ச்சி இல்லை ; இன்பம், துன்பம், மயக்கம்முதலாகிய உடம்புத்தன்மையும் உணர்ச்சியான ஆத்மாவுக்குப் பொருந்தாது ; மூப்பு இறப்புக்கள்போல, அவித்யையினாலானதைத்தவிர வேறு இல்லையாதலின்.

க்ஷேத்ரஜ்ஞன் ஸம்ஸாரத்தினால் உண்மையாகவே தாக்கப்படுவதில்லை.

(ஆக்ஷேபம்) :—அப்படியன்று ; (திருஷ்டாந்தம்) நேரன்றுஆதலின் எனின்,—அறியப்படும்பொருள்களாகவேயுள்ள தூண்மனிதர்களுள், அறியும்பொருளன்றோ ஒன்றில் மற்றொன்றை அறியாமையினால் ஏற்றுகின்றது ; ஆனால், அறியப்படும்பொருளாகிய உடம்பும், அறியும்பொருளாகிய ஆத்மாவுமான இவற்றிலன்றோ ஒன்றில் மற்றொன்றைத் தடுமாற்றமாக ஏற்றுதல் இருக்கின்றது ; எனவே, திருஷ்டாந்தம் சரியன்று. ஆதலால், உடம்பின்தன்மையானது அறியப்படும்பொருளாயிருந்தாலும், அறியும்பொருளாகிய ஆத்மாவுக்கு வருகின்றது எனில்,—

न, अचेतनत्वाद्युपपत्तेः। यदि हि ज्ञेयस्य देहादेः क्षेत्रस्य धर्माः सुखदुःखमोहेच्छादयः ज्ञातुः भवन्ति; तर्हि "ज्ञेयस्य क्षेत्रस्य धर्माः केचित् ज्ञातुः भवन्ति अविद्याध्यारोपिताः जरामरणादयस्तु न भवन्ति" इति विशेषहेतुः वक्तव्यः। "न भवन्ति" इति अस्ति अनुमानम्—अविद्याध्यारोपितत्वात् जरामरणादिवत् इति, हेयत्वात्, उपादेयत्वाच्च इत्यादि। तत्र एवं सति, कर्तृत्वभोक्तृत्वलक्षणः संसारः ज्ञेयस्थः ज्ञातरि अविद्यया अध्यारोपितः इति, न तेन ज्ञातुः किंचित् दुष्यति, यथा बालैः अध्यारोपितेन आकाशस्य तलमलिनत्वादिना॥

एवं च सति, सर्वक्षेत्रेष्वपि सतः भगवतः क्षेत्रज्ञस्य ईश्वरस्य संसारित्वगन्धमात्रमपि नाशङ्क्यम्। न हि क्वचिदपि लोके अविद्याध्यस्तेन धर्मेण कस्यचित् उपकारः अपकारो वा दृष्टः॥

यत्तु उक्तम् "न समः दृष्टान्तः" इति, तत् असत्। कथम्?—

---

(ஸமாதாநம்) :—வாராது; (ஆத்மாவுக்கு) உணர்ச்சியின்மையும், மற்றுமித் தன்மையதும் வரவேண்டுமாதலின். அறியப்படும்பொருளாகிய உடம்புமுதலான க்ஷேத்ரத்தின் இன்பதுன்பங்கள், விருப்புவெறுப்புக்கள் முதலிய தன்மைகள், அறியும் பொருளான ஆத்மாவுக்கு உண்டு என்றால், அப்பொழுது, "அறியப்படும்பொருளான க்ஷேத்ரத்தினுடைய சில தன்மைகள் தான் அவித்யையினால் ஏற்றப்பட்டு ஆத்மாவுக்கு இருக்கின்றனவேயன்றி மூப்பு இறப்பு முதலியவை இல்லை" என்னும்வித்தியாஸத்திற்குக் காரணம் கூறவேண்டும். (ஆனால், க்ஷேத்ரத்தின் தன்மைகள் ஆத்மாவுக்கு) "இல்லை" என்பதற்கு அநுமானப்பிரமாணம் இருக்கின்றது :—"(க்ஷேத்ரத்தின் தன்மைகள் ஆத்மாவுக்கு இல்லை;) அவித்யையினால் ஏற்றப்பட்டமையின், மூப்பு இறப்பு முதலியவைபோல" என்பது - (அநுமானம்)." (மற்றுமவ்வாறே, அவை ஆத்மாவுக்கு இல்லை;) தள்ளவேண்டியவையும், கைப்பற்றவேண்டியவையும், இன்னுமினவைபோன்றவையுமாய் இருத்தலின் "(என்பது - மற்றோர் அநுமானம்). அவை இவ்வாறுள்ளவளவிலே, செய்வதும் அநுபவிப்பதுமாகிய ஸம்ஸாரமானது அறியப்படும்பொருளான (க்ஷேத்ரத்தினிடத்து) நிற்பதாகி, அறியும்பொருளான (ஆத்மாவினிடத்து) அறியாமையினால் ஏற்றப்பட்டுள்ளது என்பதாம், இதனால், அறியும்பொருளுக்குக் கேடு ஒன்றும் இல்லை; சிறுவர்களால் அறியாமையினால் ஏற்றப்பட்ட உள்கவிவு, அழுக்குடைமை முதலியவற்றால் ஆகாசத்திற்கு(க் கேடு ஒன்றும்இல்லை) போல.

இவ்வாறுள்ளவளவிலே, பகவான் எல்லாக்ஷேத்ரங்களிலும் இருந்தாலும், க்ஷேத்ரஜ்ஞனை (அந்த) ஈச்வரனுக்கு ஸம்ஸாரித்தன்மையின் நாற்றமாத்திரமுங்கூட ஸந்தேகிக்கத்தக்கதில்லை. அறியாமையினால் ஏற்றப்பட்ட தன்மையினால் ஒன்றுக்கு நலமாயினும், கேடதியாயினும் உலகத்து ஓரிடத்தும் கண்டதில்லையன்றோ.

இனி, திருஷ்டாந்தம் நேரன்று என்று சொன்னது எதுவோ, அது சரியன்று. —எப்படி? —

𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑌣𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌹𑌿 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌤𑌦𑌾𑌰𑍍𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑌯𑍋𑌃 𑌸𑌾𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑌿𑌤𑌮𑍍। 𑌤𑌨𑍍𑌨 𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌰𑌤𑌿। 𑌯𑌤𑍍𑌤𑍁 "𑌜𑍍𑌞𑌾𑌤𑌰𑌿 𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌰𑌤𑌿" 𑌇𑌤𑌿 𑌮𑌨𑍍𑌯𑌸𑍇, 𑌤𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌅𑌨𑍈𑌕𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑌤𑍍𑌵𑌂 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌂 𑌜𑌰𑌾𑌦𑌿𑌭𑌿𑌃॥

𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌸𑌂𑌸𑌾𑌰𑌿𑌤𑍍𑌵𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍—

𑌨; 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌃 𑌤𑌾𑌮𑌸𑌤𑍍𑌵𑌾𑌤𑍍। 𑌤𑌾𑌮𑌸𑍋 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌃—𑌆𑌵𑌰𑌣𑌾𑌤𑍍𑌮𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍—𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌗𑍍𑌰𑌾𑌹𑌕𑌃, 𑌸𑌂𑌶𑌯𑍋𑌪𑌸𑍍𑌥𑌾𑌪𑌕𑌃, 𑌅𑌗𑍍𑌰𑌹𑌣𑌾𑌤𑍍𑌮𑌕𑍋 𑌵𑌾; 𑌵𑌿𑌵𑍇𑌕𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌭𑌾𑌵𑍇 𑌤𑌦𑌭𑌾𑌵𑌾𑌤𑍍, 𑌤𑌾𑌮𑌸𑍇 𑌚 𑌆𑌵𑌰𑌣𑌾𑌤𑍍𑌮𑌕𑍇 𑌤𑌿𑌮𑌿𑌰𑌾𑌦𑌿𑌦𑍋𑌷𑍇 𑌸𑌤𑌿 𑌅𑌗𑍍𑌰𑌹𑌣𑌾𑌦𑍇𑌃 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌰𑌯𑌸𑍍𑌯 𑌉𑌪𑌲𑌬𑍍𑌧𑍇𑌃॥

---

அறியாமையினால் ஏற்றுதல் மாத்திரமன்றோ திருஷ்டாந்த தார்ஷ்டாந்திகங்களின் பொதுத்தன்மையாகச் சொல்லக்கருதியது. அது பிறழ்வதில்லை [அப்பொதுத்தன்மை இரண்டிற்கும் ஒப்பநிற்கின்றது]. ஆனால்,(ஏற்றுதலானது) அறியும்பொருளினிடத்துப் பிறழ்கின்றது என்று எதனை எண்ணுகின்றாயோ, அதுவும் பிறழ்வதென மூப்பு முதலியவற்றால் காட்டப்பட்டுள்ளது. [திருஷ்டாந்தத்தில் அறியப்படும்பொருளாகிய தூணினிடத்து, அறியப்படும்பொருளாகிய மனிதன் ஏற்றப்படுகிறான் ; தார்ஷ்டாந்திகத்திலோ, அப்படியன்று ; மற்றென்னவெனில், அறியப்படும்பொருளாகிய உடம்பினிடத்து,அறியும்பொருளாகிய ஆத்மா ஏற்றப்படுகின்றது எனில்,—இரண்டும் அறியப்படும்பொருள்களாகவே இருக்கவேண்டும் என்னும் நியமம் இல்லை. அறியாமையினால் ஆத்மாவினிடத்து மூப்பு இறப்பு முதலியவை ஏற்றப்படுகின்றன.—அறியும் பொருளாகிய ஆத்மாவினிடத்து, அறியப்படும்பொருள்களாகிய மூப்பு இறப்பு முதலியவை ஏற்றப்படுகின்றன என்பதை வாதிப்ரதிவாதிகளிருவரும் ஒத்துக்கொண்டிருக்கிறார்கள் என - 357 ஆம் பக்கத்தில் 14-29 வரிகளால் நுட்பமாக ஊகித்து அறிந்து கொள்க].

அவித்யைக்குத் தங்குமிடம் இந்திரியமேயன்றி ஆத்மா அன்று.

(ஆக்ஷேபம்) :— க்ஷேத்ரஜ்ஞன் அவித்யையையுடைமையினால் ஸம்ஸாரியாய் இருக்கிறான் எனில்,—

(ஸமாதானம்) :— அப்படியன்று ; அவித்யை தாமஸமாதலின். (தாமஸம் - தமோகுணத்தில் பிறந்தது. அறியாமை என்னும்) அவித்யையானது - மறைக்குந் தன்மையது ஆதலால்,மாறாக [ஒன்றை வேறொன்றாக]உணர்வதாகவாயினும், ஸந்தேகத்தை விளைப்பதாகவாயினும், உணராது நிற்பதாகவாயினுமுள்ள தாமஸமேயான எண்ணம் ; ஏனெனில், பகுத்தறிவு விளங்கி நிற்கையில் அது இல்லாமற் போகின்றது ; அன்றியும், மறைக்குந்தன்மைத்தாய்த் தாமஸமான திமிரம்முதலிய குற்றமுள்ளவழி, உணர்வின்மை முதலிய மூன்று அவித்யையும் காணப்படுகின்றன. [திமிரம்-ஓர்வகைக் கண்நோய். கண்ணில் காசம்படர்தல் முதலிய குற்றமுள்ளவழி, விபரீத உணர்வுமுதலியவை உள்ளன ; அக்குற்றமில்லாவழி, அவை இல்லை. எனவே, அவித்யை குற்றத்தைச் சார்ந்துள்ளதாதலின், இதனாலும் அது ஆத்மாவைச்சார்ந்தது அன்று என்க

𑌤𑌤𑍍𑌰 𑌕𑌿𑌮𑍍—𑌏𑌵𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌤𑍃𑌧𑌰𑍍𑌮𑍋𑌽𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 ॥

𑌨; 𑌕𑌰𑌣𑍇 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌿 𑌤𑍈𑌮𑌿𑌰𑌿𑌕𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌦𑍋𑌷𑍋𑌪𑌲𑌬𑍍𑌧𑍇𑌃 । 𑌯𑌤𑍍𑌤𑍁 𑌮𑌨𑍍𑌯𑌸𑍇—"𑌜𑍍𑌞𑌾𑌤𑍃𑌧𑌰𑍍𑌮𑍋𑌽𑌵𑌿𑌦𑍍𑌯𑌾, 𑌤𑌦𑍇𑌵 𑌚 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌸𑌂𑌸𑌾𑌰𑌿𑌤𑍍𑌵𑌂; 𑌤𑌤𑍍𑌰 𑌯𑌦𑍁𑌕𑍍𑌤𑌂 '𑌈𑌶𑍍𑌵𑌰 𑌏𑌵 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌃, 𑌨 𑌸𑌂𑌸𑌾𑌰𑍀' 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌦𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑌿𑌤𑌿"—

𑌤𑌨𑍍𑌨; 𑌕𑌰𑌣𑍇 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌿 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌗𑍍𑌰𑌹𑌣𑌾𑌦𑌿𑌦𑍋𑌷𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 । 𑌨 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌾𑌦𑌿𑌗𑍍𑌰𑌹𑌣𑌂 𑌤𑌨𑍍𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑍋 𑌵𑌾 𑌤𑍈𑌮𑌿𑌰𑌿𑌕𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌦𑍋𑌷𑌃 𑌗𑍍𑌰𑌹𑍀𑌤𑍁𑌃, 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌃 𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑍇𑌣 𑌤𑌿𑌮𑌿𑌰𑍇𑌽𑌪𑌨𑍀𑌤𑍇 𑌗𑍍𑌰𑌹𑍀𑌤𑍁𑌃 𑌅𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 𑌨 𑌗𑍍𑌰𑌹𑍀𑌤𑍃𑌧𑌰𑍍𑌮𑍋 𑌯𑌥𑌾; 𑌤𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑍈𑌵 𑌅𑌗𑍍𑌰𑌹𑌣𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌸𑌂𑌶𑌯𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌾𑌃 𑌤𑌨𑍍𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌾𑌃 𑌕𑌰𑌣𑌸𑍍𑌯𑍈𑌵 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 𑌭𑌵𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌨𑍍𑌤𑌿, 𑌨 𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 । 𑌸𑌂𑌵𑍇𑌦𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌪𑍍𑌰𑌦𑍀𑌪𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌵𑌤𑍍 𑌨 𑌜𑍍𑌞𑌾𑌤𑍃𑌧𑌰𑍍𑌮𑌤𑍍𑌵𑌮𑍍—𑌸𑌂𑌵𑍇𑌦𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌦𑍇𑌵 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌸𑌂𑌵𑍇𑌦𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑍍; 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑌣𑌵𑌿𑌯𑍋𑌗𑍇 𑌚 𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑍇 𑌸𑌰𑍍𑌵𑌵𑌾𑌦𑌿𑌭𑌿𑌃

---

(ஆக்ஷேபம்) :—இனி, (பிரதிவாதி) கூறுகிறான் :—அப்பொழுது, இவ்வாறாக, அறியும்பொருளினுடைய தன்மையாம் அவித்யை. (இவ்வாக்ஷேபத்தின் விவரத்தை மேலே காண்க.)

(ஸமாதானம்) :— அப்படியன்று ; திமிரமுடைமைமுதலிய குற்றங்களை இந்திரியமாகிய கண்ணில் காண்பதனால் என்க.

(ஆக்ஷேபத்தின் விவரம்) :—"அறியும்பொருளினுடைய தன்மை அவித்யை; அவித்யைத்தன்மையுடைமையாகிய அதுவே [அவித்யைத்தன்மையையுடைமையே] க்ஷேத்ரஜ்ஞன் ஸம்ஸாரியாயிருத்தல் ; 'ஈச்வரன்தான் க்ஷேத்ரஜ்ஞன், ஸம்ஸாரி அல்லன்' என்றுசொன்னது எதுவோ (அந்த) இது சரியன்று"—என எதனை நீ [பிரதிவாதி] எண்ணுகின்றாயோ—

(ஸமாதானத்தின் விவரம்) :—அது நேரன்று ; விபரீதமாயுணர்தல் முதலிய குற்றத்தை இந்திரியமாகிய கண்ணினிடத்துக் காண்பதனால். விபரீதஉணர்ச்சி முதலியவையாயினும், அவற்றாலுண்டாகும் திமிரமுடைமைமுதலியகுற்றமாயினும் உணரும் பொருளுக்கு இல்லை. (மை முதலிய மருந்தினால்) கண்ணைச் செவ்வையாக்க, அதனால் திமிரம் நீங்கினவளவிலே, உணரும்பொருளுக்கு (விபரீதஉணர்வு முதலியன) காணப்படாமையால், (அவை) உணரும்பொருளின் தன்மையாகாதவாறுபோல, உணராமையும் விபரீதஉணர்வும் ஸம்சயமும், அவற்றின்காரணங்களும் (எதாவது) ஒருஇந்திரியத்திற்கு இருக்கவேண்டுமேயன்றி, அறியும்பொருளாகிய க்ஷேத்ரஜ்ஞனுக்கு இல்லை. அன்றியும், அவை அறியப்படும் பொருள்களாதலால், விளக்கினுடைய ஒளிபோல அறியும்பொருளினுடைய தன்மையாகா ; அறியப்படும்பொருள்கள் என்பதனாலேயே தம்மைத் தவிர வேறொன்றினால் அறியப்படும்பொருள்கள் என்பதாம். [பிரகாசிப்பிக்கும் பொருளாகிய விளக்கினால் அதன் ஒளியானது பிரகாசிப்பிக்கப்படுவதில்லை என்றும், உணரும்பொருளாகிய ஆத்மாவினால் விபரீதஉணர்வுமுதலியன உணரப்படுகின்றன என்றும் வேற்றுமை கண்டுகொள்க.] மேலும், எல்லாஇந்திரியங்களும் இல்லாமற்போன கைவல்யநிலையிலே அவித்யைமுதலிய குற்றங்களையுடைத்தாயிருத்தலென்பதை எந்த வாதிகளும் [தமது கொள்கையை நிறுத்திப்பேசுவோரும்] ஏற்றுக்

𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦𑌿𑌦𑍋𑌷𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 । 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌯𑌦𑌿 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌅𑌗𑍍𑌨𑍍𑌯𑍌𑌷𑍍𑌣𑍍𑌯𑌵𑌤𑍍 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 𑌸𑍍𑌯𑍁𑌃, 𑌤𑌤𑌃 𑌨 𑌕𑌦𑌾𑌚𑌿𑌦𑌪𑌿 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌵𑌿𑌯𑍋𑌗𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌚 𑌵𑍍𑌯𑍋𑌮𑌵𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌸𑍍𑌯 𑌅𑌮𑍂𑌰𑍍𑌤𑌸𑍍𑌯 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌕𑍇𑌨𑌚𑌿𑌤𑍍 𑌸𑌂𑌯𑍋𑌗𑌵𑌿𑌯𑍋𑌗𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃, 𑌸𑌿𑌦𑍍𑌧𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍇𑌵 𑌈𑌶𑍍𑌵𑌰𑌤𑍍𑌵𑌮𑍍 ; '𑌅𑌨𑌾𑌦𑌿𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌤𑍍𑌵𑌾𑌤𑍍' 𑌇𑌤𑌿 𑌈𑌶𑍍𑌵𑌰𑌵𑌚𑌨𑌾𑌚𑍍𑌚 ॥

𑌨𑌨𑍁 𑌏𑌵𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑌂𑌸𑌾𑌰𑌿𑌤𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑍇 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌨𑌰𑍍𑌥𑌕𑍍𑌯𑌾𑌦𑌿𑌦𑍋𑌷𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍—

𑌨 ; 𑌸𑌰𑍍𑌵𑍈𑌃 𑌅𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌸𑌰𑍍𑌵𑍈𑌃 𑌹𑌿 𑌆𑌤𑍍𑌮𑌵𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌅𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌤𑌃 𑌦𑍋𑌷𑌃 𑌨 𑌏𑌕𑍇𑌨 𑌪𑌰𑌿𑌹𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 𑌭𑌵𑌤𑌿 । 𑌕𑌥𑌮𑍍 𑌅𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌤𑌃 𑌇𑌤𑌿 ? — 𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑌂𑌸𑌾𑌰𑌿𑌤𑍍𑌵𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌾𑌭𑌾𑌵𑌃 𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑍇𑌵 𑌆𑌤𑍍𑌮𑌵𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌅𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 । 𑌨 𑌚 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌨𑌰𑍍𑌥𑌕𑍍𑌯𑌾𑌦𑌿𑌦𑍋𑌷𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌃 𑌅𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌤𑌾 । 𑌤𑌥𑌾 𑌨𑌃, 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌈𑌶𑍍𑌵𑌰𑍈𑌕𑌤𑍍𑌵𑍇 𑌸𑌤𑌿, 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌨𑌰𑍍𑌥𑌕𑍍𑌯𑌂 𑌭𑌵𑌤𑍁 ; 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌷𑌯𑍇 𑌚 𑌅𑌰𑍍𑌥𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍍—𑌯𑌥𑌾 𑌦𑍍𑌵𑍈𑌤𑌿𑌨𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌬𑌨𑍍𑌧𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌯𑌾𑌮𑍇𑌵 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌦𑍍𑌯𑌰𑍍𑌥𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌂, 𑌨 𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌯𑌾𑌮𑍍, 𑌏𑌵𑌮𑍍 ॥

---

கொள்ளவில்லை ஆதலால், (அவை ஆத்மாவின் தன்மையாகா). (அவை) தீயின் சூடு போல, க்ஷேத்ரஜ்ஞனை ஆத்மாவினுடைய சொந்தமான [இயற்கையான] தன்மையாயின், அப்பொழுது அவை ஒருகாலும் பிரிந்துபோவதில்லை. மற்றும், மாறுபாடில்லதாய் ஆகாசம்போல எங்குமுள்ளதாய் உருவமில்லாததான ஆத்மாவிற்கு ஒன்றோடு கூடுதலும், பிரிதலும் பொருந்தா. ஆகவே, க்ஷேத்ரஜ்ஞன் எப்பொழுதுமே ஈச்வரன் என அமைந்தது. "அநாதியாதலால், நிர்க்குணமாதலால்" (௧௩ - ௩௧) என்னும் ஈச்வரனுடைய திருவாக்கினாலும் (ஆத்மா நிர்க்குணமென்று அறிக).

சாஸ்திரத்திற்கூறிய விதிவிலக்குகள் அஜ்ஞானநிலைக்கே அமைந்தவை.

(ஆக்ஷேபம்) :—அப்படியானால், இவ்வாறு ஸம்ஸாரமும் ஸம்ஸாரத்தையுடையவனும் இல்லாவளவிலே, சாஸ்திரம் வீண் என்பது முதலானகுற்றம் வரும் எனின்,-

(ஸமாதாநம்) :—அப்படியன்று ; எல்லாராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டமையின். ஆத்மவாதிகள் [ஆத்மா உண்டென்னும் கொள்கையை நிறுத்துவோர்] அனைவரும் ஏற்றுக்கொண்ட குற்றமானது (அவரில்) ஒருவனால் நீக்கவேண்டியதாகாது.—எவ்வாறு (அனைவராலும்) ஏற்றுக்கொள்ளப்பட்டது என்பது ?—விடுபட்ட ஆத்மாக்களுக்கு ஸம்ஸாரமும், ஸம்ஸாரித்தன்மையுமாகிய வியவஹாரமானது இல்லை என ஆத்மவாதிகளெல்லாராலுமே ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. ஆயினும், அவர்கட்கு (முக்தர்கள்விஷயத்திலே) சாஸ்திரம்வீணாதல்முதலிய குற்றம் வருதலானது ஏற்றுக்கொள்ளப்பட்டதன்று. அவ்வாறே, க்ஷேத்ரஜ்ஞர்கள் ஈச்வரனோடு ஒன்றாயுள்ளவிடத்து சாஸ்திரம்வீணாதல் எங்களுக்கு இருக்கட்டும் ; அவித்யாவிஷயத்திலோ (சாஸ்திரம்) பயனுடையதாம் என்க. எப்படி எல்லா த்வைதிகட்கும் சாஸ்திரம்முதலியன பயன்படுதல் பந்தநிலையிலேயேயன்றி முக்தநிலையிலில்லையோ, அப்படியே (எமக்கும் என்றபடி).

𑌨𑌨𑍁 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌬𑌨𑍍𑌧𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌵𑌸𑍍𑌥𑍇 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤 𑌏𑌵 𑌵𑌸𑍍𑌤𑍁𑌭𑍂𑌤𑍇 𑌦𑍍𑌵𑍈𑌤𑌿𑌨𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌮𑍍 । 𑌅𑌤𑌃 𑌹𑍇𑌯𑍋𑌪𑌾𑌦𑍇𑌯𑌤𑌤𑍍𑌸𑌾𑌧𑌨𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑍇 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌦𑍍𑌯𑌰𑍍𑌥𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌅𑌦𑍍𑌵𑍈𑌤𑌿𑌨𑌾𑌂 𑌪𑍁𑌨𑌃, 𑌦𑍍𑌵𑍈𑌤𑌸𑍍𑌯 𑌅𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌕𑍃𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌬𑌨𑍍𑌧𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌯𑌾𑌶𑍍𑌚 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑍍𑌵𑍇 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌦𑍍𑌯𑌾𑌨𑌰𑍍𑌥𑌕𑍍𑌯𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍—

𑌨; 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌵𑌸𑍍𑌥𑌾𑌭𑍇𑌦𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 । 𑌯𑌦𑌿 𑌤𑌾𑌵𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌬𑌨𑍍𑌧𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌵𑌸𑍍𑌥𑍇, 𑌯𑍁𑌗𑌪𑌤𑍍 𑌸𑍍𑌯𑌾𑌤𑌾𑌂, 𑌕𑍍𑌰𑌮𑍇𑌣 𑌵𑌾 । 𑌯𑍁𑌗𑌪𑌤𑍍 𑌤𑌾𑌵𑌤𑍍 𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌤𑍍 𑌨 𑌸𑌂𑌭𑌵𑌤𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌗𑌤𑍀 𑌇𑌵 𑌏𑌕𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 । 𑌕𑍍𑌰𑌮𑌭𑌾𑌵𑌿𑌤𑍍𑌵𑍇 𑌚, 𑌨𑌿𑌰𑍍𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌤𑍍𑌵𑌂, 𑌸𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌤𑍍𑌵𑌂 𑌵𑌾 । 𑌨𑌿𑌰𑍍𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌤𑍍𑌵𑍇 𑌅𑌨𑌿𑌰𑍍𑌮𑍋𑌕𑍍𑌷𑌪𑍍𑌰𑌸𑌂𑌗𑌃 । 𑌸𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌤𑍍𑌵𑍇 𑌚, 𑌸𑍍𑌵𑌤𑌃 𑌅𑌭𑌾𑌵𑌾𑌤𑍍, 𑌅𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌸𑌂𑌗𑌃 । 𑌤𑌥𑌾 𑌚 𑌸𑌤𑌿 𑌅𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌮𑌹𑌾𑌨𑌿𑌃 । 𑌕𑌿𑌞𑍍𑌚— 𑌬𑌨𑍍𑌧𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌵𑌸𑍍𑌥𑌯𑍋𑌃 𑌪𑍌𑌰𑍍𑌵𑌾𑌪𑌰𑍍𑌯𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑌾𑌯𑌾𑌂 𑌬𑌨𑍍𑌧𑌾𑌵𑌸𑍍𑌥𑌾 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌕𑌲𑍍𑌪𑍍𑌯𑌾, 𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌤𑍀 𑌅𑌨𑍍𑌤𑌵𑌤𑍀 𑌚; 𑌤𑌚𑍍𑌚 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌮𑍍 । 𑌤𑌥𑌾 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌵𑌸𑍍𑌥𑌾 𑌆𑌦𑌿𑌮𑌤𑍀

---

### பந்தமும், மோக்ஷமும் ஆத்மாவுக்கு உண்மைநிலையல்ல.

(ஆக்ஷேபம்) :—அப்படியானால், ஆத்மாவுக்குப் பந்தநிலைமையும், முக்தநிலைமையும் உண்மையாகவே மெய்ப்பொருள் என்பது - எல்லா த்வைதிகளுடைய கொள்கை ஆதலால், தவிர்வனவும் கொள்வனவும் அவற்றின் கருவிகளும் உள்ளவழி, சாஸ்திரம் முதலியன பயன்படுதலாகும் [அந்நிலையிரண்டும் வாஸ்தவமாதலால், விலக்கவேண்டிய விஷயங்களையும், கைக்கொள்ளவேண்டிய விஷயங்களையும், அவற்றின் ஸாதனங்களையும் சாஸ்திரத்தினால் தெரிந்துகொள்ளலாகும்]. அத்வைதிகட்கோ, த்வைதம் உண்மையன்று: அன்றியும், ஆத்மாவுக்கு பந்தநிலைமை அவித்யையினாலானமையின் உண்மையன்று ; எனவே, (சாஸ்திரம் முதலியன செல்லுதற்கு) இடமில்லை: ஆகவே, சாஸ்திரம் முதலியவை வீணாகின்றன எனின்,—

(ஸமாதானம்) :—அப்படியன்று ; ஆத்மாவுக்குப் பலநிலைமைபொருந்தாவாதலின். இனி, ஆத்மாவுக்கு பந்தநிலைமையும், முக்தநிலைமையும் உள்ளனவாயின், (அவை) ஒருங்கேயாயினும், முறையேயாயினும் இருக்கவேண்டும். ஒரே பொருளினிடத்து நிற்றலும் நடத்தலும்போல, முதலில் (அவை, தம்முள்) விரோதத்தினால் ஒருங்கே நிகழமாட்டா. முறையே [முன்பின்னாக] நிகழுமானாலும், (அவை) காரணமின்றியாவது, காரணத்தோடாவது இருக்கவேண்டும். காரணமின்றி உள்ளவையாயின், மோக்ஷமில்லை என்றாகும். காரணத்தோடு உள்ளவையானாலும், (அவை) தாமாக இல்லாமையினால் உண்மையல்ல என்றாகும். அவ்வாறானவளவிலே, மேற்கொண்டதற்கு [பந்தநிலைமையும், முக்தநிலைமையும் உண்மையானவை என்பதற்கு] விரோதமாகின்றது. மேலும், பந்த முக்த நிலைமைகளுடைய முன்பின்தன்மையை ஆராயுங்கால், பந்தநிலையை முதலில்கொள்ளவேண்டும்; (கொள்ளவே, அது) முதலில்லதும், முடிவுள்ளதுமாக ஆகும். அதுவே பிரமாணத்திற்கு விரோதமாம். அவ்வண்ணமே, மோக்ஷநிலைமையானது முதலுள்ளதும் முடிவில்லதுமாய், பிரமாணத்திற்கு மாறானதாகவே

𑌅𑌨𑌨𑍍𑌤𑌾 𑌚 𑌪𑍍𑌰𑌾𑌮𑌾𑌣𑌿𑌕𑍈𑌶𑍍𑌚𑍈𑌵 𑌅𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 । 𑌨 𑌚 𑌅𑌵𑌸𑍍𑌥𑌾𑌵𑌤𑌃 𑌅𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑍍𑌤𑌰𑌂 𑌗𑌤𑌃 𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑍍 𑌉𑌪𑌪𑌾𑌦𑌯𑌿𑌤𑍁𑌂 𑌶𑌕𑍍𑌯𑌮𑍍 ॥

𑌅𑌥 𑌅𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌦𑍋𑌷𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑌾𑌯 𑌬𑌨𑍍𑌧𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌭𑍇𑌦𑌃 𑌨 𑌪𑌰𑌿𑌕𑌲𑍍𑌪𑍍𑌯𑌤𑍇, 𑌅𑌤𑌃 𑌦𑍍𑌵𑍈𑌤𑌿𑌨𑌾𑌪𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌨𑌰𑍍𑌥𑌕𑍍𑌯𑌾𑌦𑌿𑌦𑍋𑌷𑌃 𑌅𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑍍𑌯 𑌏𑌵; 𑌇𑌤𑌿 𑌸𑌮𑌾𑌨𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌨 𑌅𑌦𑍍𑌵𑍈𑌤𑌵𑌾𑌦𑌿𑌨𑌾 𑌪𑌰𑌿𑌹𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 𑌦𑍋𑌷𑌃 ॥

𑌨 𑌚 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌨𑌰𑍍𑌥𑌕𑍍𑌯𑌂, 𑌯𑌥𑌾𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌵𑌿𑌦𑍍𑌵𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 । 𑌅𑌵𑌿𑌦𑍁𑌷𑌾𑌂 𑌹𑌿 𑌫𑌲𑌹𑍇𑌤𑍍𑌵𑍋𑌃 𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑍋𑌃 𑌆𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 ; 𑌨 𑌵𑌿𑌦𑍁𑌷𑌾𑌂, 𑌫𑌲𑌹𑍇𑌤𑍁𑌭𑍍𑌯𑌾𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌨𑍇 𑌸𑌤𑌿 𑌤𑌯𑍋𑌃 𑌅𑌹𑌮𑌿𑌤𑌿 𑌆𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 । 𑌨 𑌹𑌿 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑍂𑌢𑌃 𑌉𑌨𑍍𑌮𑌤𑍍𑌤𑌾𑌦𑌿𑌰𑌪𑌿 𑌜𑌲𑌾𑌗𑍍𑌨𑍍𑌯𑍋𑌃 𑌛𑌾𑌯𑌾𑌤𑌪𑌯𑍋𑌰𑍍𑌵𑌾 𑌐𑌕𑍍𑌯𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ; 𑌕𑌿𑌮𑍁𑌤 𑌵𑌿𑌵𑍇𑌕𑍀 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌨 𑌵𑌿𑌧𑌿𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌤𑌾𑌵𑌤𑍍 𑌫𑌲𑌹𑍇𑌤𑍁𑌭𑍍𑌯𑌾𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 𑌭𑌵𑌤𑌿 । 𑌨 𑌹𑌿 “𑌦𑍇𑌵𑌦𑌤𑍍𑌤 ! 𑌤𑍍𑌵𑌮𑍍 𑌇𑌦𑌂 𑌕𑍁𑌰𑍁” 𑌇𑌤𑌿 𑌕𑌸𑍍𑌮𑌿𑌂𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌨𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑍇, 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌮𑌿𑌤𑍍𑌰𑌃 “𑌅𑌹𑌂

---

ஏற்றுக்கொள்ளப்படவேண்டும். ("ஆதியில்லாப்பொருளுக்கு அழிவு இல்லை; ஆதியுள்ளபொருளுக்கு அழிவு உண்டு" என்பது பிரமாணம்.) மற்றும், ஒருநிலையிலுள்ளதாய் மற்றோர் நிலையைச் செல்லுகின்ற பொருளை நித்யப்பொருளென்று நிரூபிக்க முடியாது.

இனி, அநித்யமென்னும் குற்றத்தை நீக்கும்பொருட்டு பந்தம் மோக்ஷம் என்னும் நிலைமைகளின் வேறுபாட்டைக் கொள்ளாவிட்டால், அங்ஙனம் சாஸ்திரம் வீணாதல்முதலிய குற்றமானது த்வைதிகட்குங்கூட நீக்கமுடியாததுதான். ஆகவே, குற்றமானது ஒப்பநிற்றலால், அத்வைதவாதியினால்(மாத்திரம்) நீக்கவேண்டியதாகாது.

சாஸ்திரத்திற்கூறிய விதிவிலக்குக்கள் அஜ்ஞானியைப்பற்றியவை.

இனி, சாஸ்திரம்வீணாதலென்பது (அத்வைதத்தில்) இல்லை ; ஏனெனில், சாஸ்திரமானது அமைந்தபடியுள்ள[பொருள்கள் மேல்நோக்கிற்கு எவ்வாறு தோற்றுகின்றனவோ, அவ்வாறேஅவற்றை நோக்குகின்ற] அஜ்ஞானிஜனங்களைப்பற்றியது. அஜ்ஞானிகட்கன்றோ, பயனும் காரணமுமாகிய அநாத்மாக்களிலே, ஆத்மாஅல்லாதவற்றிலே ஆத்மாவை நோக்குதல் இருக்கின்றது ; ஞானிகட்குஇல்லை: (அவர்கள்) ஆத்மாவை, பயன் காரணம் இவற்றின்வேறாகக் காண்பதனால், அவற்றினிடத்து "நான்" என ஆத்மாவைக் காணுதல் ஏலாது. (பயன் - போக்தாவின்தன்மை ; காரணம்-கர்த்தாவின்தன்மை. அல்லது, காரணம் - அதிருஷ்டம், கர்மம் ; பயன் - கர்மத்தின் பயனாகிய ஏதோஒரு சரீரம். அஜ்ஞானியானவன் "நான் அநுபவிப்பவன், நான் செய்பவன், நான் மநுஷ்யன்" என ஆத்மாஅல்லாதவற்றிலே ஆத்மாவைக் கொள்கிறான். ஞானியோ, ஆத்மாவை அவற்றினும் வேறாகக் காண்கிறான்.—ஆ.) அளவுகடந்து மயங்கியுள்ள பித்தன்முதலாயினோருங்கூட நீர்நெருப்புக்களையாவது, இருட்டுவெளிச்சங்களையாவது (இரண்டும்) ஒன்றுதான் எனக் கொள்வதில்லை ; பகுத்தறிவுள்ளவனைப் பற்றிக் கூறவும்வேண்டுமோ ? ஆகவே, விதிவிலக்குக்களான சாஸ்திரமானது - பயன் காரணம் என்றவற்றைக்காட்டிலும் ஆத்மாவை வேறாகக் காண்பவனுக்கு இல்லையென்க. "தேவதத்த ! நீ இதனைச் செய்" என்று ஒருவனை ஒருதொழிலில் கட்டளையிட,

𑌨𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌃” 𑌇𑌤𑌿 𑌤𑌤𑍍𑌸𑍍𑌥𑌃 𑌨𑌿𑌯𑍋𑌗𑌂 𑌶𑍃𑌣𑍍𑌵𑌨𑍍𑌨𑌪𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌨𑌿𑌯𑍋𑌗𑌵𑌿𑌷𑌯𑌵𑌿𑌵𑍇𑌕𑌾𑌗𑍍𑌰𑌹𑌣𑌾𑌤𑍍 𑌤𑍁 𑌉𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 । 𑌤𑌥𑌾 𑌫𑌲𑌹𑍇𑌤𑍍𑌵𑍋𑌰𑌪𑌿 ॥

𑌨𑌨𑍁 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌯𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑍈𑌵 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌵𑌿𑌷𑌯𑌾 — 𑌫𑌲𑌹𑍇𑌤𑍁𑌭𑍍𑌯𑌾𑌮𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑍍𑌵𑍇𑌽𑌪𑌿 𑌸𑌤𑌿 — 𑌇𑌷𑍍𑌟𑌫𑌲𑌹𑍇𑌤𑍌 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌃 𑌅𑌸𑍍𑌮𑌿, 𑌅𑌨𑌿𑌷𑍍𑌟𑌫𑌲𑌹𑍇𑌤𑍋𑌶𑍍𑌚 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌃 𑌅𑌸𑍍𑌮𑍀𑌤𑌿 ; 𑌯𑌥𑌾 𑌪𑌿𑌤𑍃𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌦𑍀𑌨𑌾𑌮𑌿𑌤𑌰𑍇𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍍𑌯𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌨𑍇 𑌸𑌤𑍍𑌯𑌪𑌿 𑌅𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌨𑌿𑌯𑍋𑌗𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑌾𑌰𑍍𑌥𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 ॥

𑌨 ; 𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 𑌪𑍍𑌰𑌾𑌗𑍇𑌵 𑌫𑌲𑌹𑍇𑌤𑍍𑌵𑍋𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌸𑍍𑌯 𑌸𑌿𑌦𑍍𑌧𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌨𑍍𑌨𑌨𑌿𑌯𑍋𑌗𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑌾𑌰𑍍𑌥𑍋 𑌹𑌿 𑌫𑌲𑌹𑍇𑌤𑍁𑌭𑍍𑌯𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇, 𑌨 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍍 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌵𑌿𑌧𑌿𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑍍 𑌅𑌵𑌿𑌦𑍍𑌵𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌸𑌿𑌦𑍍𑌧𑌮𑍍 ॥

𑌨𑌨𑍁 ‘𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌕𑌾𑌮𑍋 𑌯𑌜𑍇𑌤’ ‘𑌨 𑌕𑌲𑌞𑍍𑌜𑌂 𑌭𑌕𑍍𑌷𑌯𑍇𑌤𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍌 𑌆𑌤𑍍𑌮-

---

விஶ்வாமித்ரனென்பான் அங்குநின்று (அக்)கட்டளையைக் கேட்டுக்கொண்டிருந்தாலும், "நான் கட்டளையிடப்பெற்றேன்" எனக்கொள்வதில்லை. ஆனால், கட்டளைக்கு விஷயமானவனை (கட்டளையிடப்பட்டவனை, தன்னினும்) வேறாகப் பகுத்துணராமையினால் (அவ்வாறு) கொள்ளுதல் கூடும். அவ்வண்ணமே, பயன் காரணம் என்றவற்றினும் (கண்டுகொள்க).

(ஆக்ஷேபம்) :—அப்படியானால், (ஞானிக்கு) "பயன் காரணம் என்றவற்றைக் காட்டினும் ஆத்மா வேறு" என்னும்அறிவு இருந்தாலும், (தேகம்முதலியவற்றிற்கும் ஆத்மாவுக்கும்) அவித்யையினாலான தொடர்பை நோக்க, "வேண்டிய பயனுக்கான தொழிலில் விதிக்கப்பட்டுள்ளேன், வேண்டாத பயனுக்கான தொழிலினின்றும்விலக்கப்பட்டுள்ளேன்" எனச் சாஸ்திரத்தின் விதிவிலக்குக்களைப்பற்றிய கொள்கையானது (ஞானிக்கும்) அமையவே அமையும்; தகப்பன், மகன் முதலானோர்களுள் ஒவ்வொருவனுக்கும் தான் தான் வேறு என்னும்அறிவுஇருந்தாலும், ஒருவனுடைய விதிவிலக்குவிஷயங்களை மற்றொருவன் கொள்வதுபோல. [பிணிமுதலியவற்றால் தகப்பன் ஸந்தியாவந்தனத்தைச் செய்யமுடியாமலிருக்க, மகன் அதனைச் செய்யவேண்டுமென்று கொள்வதுபோல. பி - ௧ - ௫ - ௧௭ ஐப் பார்க்க.]

(ஸமாதானம்) :—அப்படியன்று; பயன் காரணம் என்றவற்றினும் ஆத்மா வேறு என்னும் அறிவு வருதற்கு முன்னரேதான் (அவற்றை) ஆத்மாவாகக்கொள்ளுதல் அமைந்தமையின். ஏனெனில், விதிவிலக்குவிஷயங்களை அநுஷ்டித்தவனன்றே 'ஆத்மா - பயன் காரணம் என்றவற்றைக்காட்டிலும் வேறு' என உணர்கின்றான்; (அவற்றை அநுஷ்டித்தற்கு) முன்னரே அறிவதில்லை (வே - ௩ - ௪ - ௨௧, ௨௭). ஆகவே, விதிவிலக்கான சாஸ்திரம் அஞ்ஞானியைப்பற்றியது என்பதாயிற்று.

(ஆக்ஷேபம்) :—ஆத்மாவை (தேகம்முதலியவற்றினும்) வேறாகக் காண்பவர்கள், "ஸ்வர்க்கத்தை விரும்புவோன் யாகஞ்செய்க" "கலஞ்ஜத்தைத் தின்னக்கூடாது

𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌾𑌮𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍌, 𑌕𑍇𑌵𑌲𑌦𑍇𑌹𑌾𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌦𑍃𑌷𑍍𑌟𑍀𑌨𑌾𑌂 𑌚, 𑌅𑌤𑌃 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌤𑍁𑌃 𑌅𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌨𑌰𑍍𑌥𑌕𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍—

𑌨; 𑌯𑌥𑌾𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌤 𑌏𑌵 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 । 𑌈𑌶𑍍𑌵𑌰𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑍈𑌕𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑍀 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌤𑍍 𑌤𑌾𑌵𑌤𑍍 𑌨 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 । 𑌤𑌥𑌾 𑌨𑍈𑌰𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌵𑌾𑌦𑍍𑌯𑌪𑌿 "𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌪𑌰𑌲𑍋𑌕𑌃" 𑌇𑌤𑌿 𑌨 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 । 𑌯𑌥𑌾𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑍍𑌤𑍁 𑌵𑌿𑌧𑌿𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌶𑍍𑌰𑌵𑌣𑌾𑌨𑍍𑌯𑌥𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍍𑌯𑌾 𑌅𑌨𑍁𑌮𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌸𑍍𑌤𑌿𑌤𑍍𑌵𑌃 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌨𑌭𑌿𑌜𑍍𑌞𑌃 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌸𑌂𑌜𑌾𑌤𑌤𑍃𑌷𑍍𑌣𑌃 𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌤𑌯𑌾 𑌚 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌨𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌮𑍍 । 𑌅𑌤𑌃 𑌨 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌨𑌰𑍍𑌥𑌕𑍍𑌯𑌮𑍍 ॥

𑌵𑌿𑌵𑍇𑌕𑌿𑌨𑌾𑌮𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 𑌤𑌦𑌨𑍁𑌗𑌾𑌮𑌿𑌨𑌾𑌮𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍌 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌨𑌰𑍍𑌥𑌕𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍—

𑌨; 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌦𑍇𑌵 𑌵𑌿𑌵𑍇𑌕𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 । 𑌅𑌨𑍇𑌕𑍇𑌷𑍁 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌷𑍁 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑍇𑌵 𑌵𑌿𑌵𑍇𑌕𑍀 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌯𑌥𑍇𑌦𑌾𑌨𑍀𑌮𑍍 । 𑌨 𑌚 𑌵𑌿𑌵𑍇𑌕𑌿𑌨𑌮𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌮𑍂𑌢𑌾𑌃, 𑌰𑌾𑌗𑌾𑌦𑌿𑌦𑍋𑌷𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌃, 𑌅𑌭𑌿𑌚𑌰𑌣𑌾𑌦𑍌 𑌚 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿-

---

என்பனமுதலியவற்றில் செல்லுதலில்லையாயின், கேவலஉடம்புமுதலியவற்றையே ஆத்மாவாகக் காண்பவருந்தான் (அந்தவிதிவிலக்குக்களிலே செல்வதில்லை). ஆகவே, (அவற்றை) அநுஷ்டிப்பவன் இல்லாமையினல், சாஸ்திரம் வீணுகின்றது எனின்,—

(ஸமாதாநம்):—வீணுவதில்லை ; (ஆத்மா உடம்புமுதலியவற்றினும் வேறு என்பதை நேராகக்காணுது அநுமாநத்தால் அறிபவன்) சாஸ்திரத்திற்குஇணங்கவே விதிகளை செய்தலும், விலக்குக்களினின்று ஒழிதலும் அமையுமாதலின்.—ஈச்வரனும் க்ஷேத்ரஜ்ஞனும் ஒன்று எனக்கண்டு ப்ரஹ்மத்தை அறிந்தவன் (விதிவிலக்குக்களில்) தலைப்படமாட்டான். அவ்வாறே, ஆத்மா இல்லை என்று கூறுவோனும் "மறுமை இல்லை" என்று (அவற்றில்) தலைப்படமாட்டான். ஆனல், சாஸ்திரத்தை அநுஸரிப்பவன் - விதிவிலக்கான சாஸ்திரத்தின் உபதேசமானது வேறுவகையாகப் பொருந்தாமையினல், "ஆத்மா உண்டு" என்பதை அநுமாநித்துக்கொண்டவனய், ஆத்மாவின் சிறப்பியல்பை நேரேகாணுதவனகி, கர்மத்தின் பயனிலே ஆசைஉண்டாகப்பெற்று (விதிகளில்) நம்பிக்கையோடு தலைப்படுகிறுன் ; மேலும், (விலக்குக்களினின்றும் ஒழிகிறுன் ;) என்பது நமக்கெல்லாம் பிரத்தியக்ஷமாயுள்ளது. ஆகவே, சாஸ்திரம் வீணுதவில்லை.

(ஆக்ஷேபம்) :—மெய்யறிவுடையவர்கள் (விதிவிலக்குக்களில்) செல்லாமையைப் பார்த்து, அவரைப் பின்பற்றுகிறவர் (அவற்றை) மேற்கொள்ளாதிருக்க, அங்ஙனம் சாஸ்திரம் வீணுகின்றது எனின்,—

(ஸமாதாநம்) :—அப்படியன்று ; ஒருவனுக்கே மெய்யறிவு அமையுமாதலின், (நாம்) இப்பொழுது (காண்பது)போலவே, அநேகப் பிராணிகளில் உண்மையாக ஒருவனேதான் மெய்யறிவுள்ளவனய் இருப்பான். அன்றியும், மூடர்கள் மெய்யறிவுள்ளவனைப் பின்பற்றமாட்டார்கள் ; ஏனெனில், செய்கையானது ஆசைமுதலிய தீங்கு

𑌦𑍇𑌶𑌕𑌾𑌲𑌾𑌦𑌿, 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌾 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃—'𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌸𑍍𑌤𑍁 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇' 𑌇𑌤𑌿 𑌹𑌿 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍 ॥

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌃 𑌯𑌥𑌾𑌦𑍃𑌷𑍍𑌟𑌵𑌿𑌷𑌯 𑌏𑌵 । 𑌨 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌕𑍇𑌵𑌲𑌸𑍍𑌯 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌤𑌤𑍍𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌚 । 𑌨 𑌚 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌵𑌸𑍍𑌤𑍁 𑌦𑍂𑌷𑌯𑌿𑌤𑍁𑌂 𑌸𑌮𑌰𑍍𑌥𑌮𑍍 । 𑌨 𑌹𑌿 𑌊𑌷𑌰𑌦𑍇𑌶𑌂 𑌸𑍍𑌨𑍇𑌹𑍇𑌨 𑌪𑌙𑍍𑌕𑍀𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 𑌶𑌕𑍍𑌨𑍋𑌤𑌿 𑌮𑌰𑍀𑌚𑍍𑌯𑍁𑌦𑌕𑌮𑍍 । 𑌤𑌥𑌾 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌨 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍 𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 𑌶𑌕𑍍𑌨𑍋𑌤𑌿 । 𑌅𑌤𑌃 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍 𑌇𑌦𑌂 '𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌂 𑌚𑌾𑌪𑌿 𑌮𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿' '𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑌾𑌵𑍃𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍' 𑌇𑌤𑌿 𑌚 ॥

𑌅𑌥 𑌕𑌿𑌮𑍍 𑌇𑌦𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌿𑌣𑌾𑌮𑌿𑌵 "𑌅𑌹𑌮𑍇𑌵𑌮𑍍" "𑌮𑌮𑍈𑌵 𑌇𑌦𑌮𑍍" 𑌇𑌤𑌿 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌨𑌾𑌮𑌪𑌿 ?

𑌶𑍃𑌣𑍁; 𑌇𑌦𑌂 𑌤𑌤𑍍 𑌪𑌾𑌣𑍍𑌡𑌿𑌤𑍍𑌯𑌂, 𑌯𑌤𑍍 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇 𑌏𑌵 𑌆𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 । 𑌯𑌦𑌿 𑌪𑍁𑌨𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌮𑍍 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌂 𑌪𑌶𑍍𑌯𑍇𑌯𑍁𑌃, 𑌤𑌤𑌃 𑌨 𑌭𑍋𑌗𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌵𑌾 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑍇𑌯𑍁𑌃 "𑌮𑌮 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍" 𑌇𑌤𑌿 । 𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑍈𑌵 𑌹𑌿 𑌭𑍋𑌗𑌕𑌰𑍍𑌮𑌣𑍀 ॥

---

களைச் சார்ந்துள்ளது: மற்றும், சூனியம்முதலியவற்றில் (மெய்யறிவுள்ளவன் தலைப் படாவிட்டாலும், அவர்கள்) தலைப்படுதலைக் காண்கிறோம்: இன்னும், செய்கையானது - "ஸ்வபாவமே தலைப்படுகின்றது" (ரு - கச) என்று கூறியுள்ளபடி, இயற்கையினாலாவது.

ஆகவே, வெறும்அவித்யையாகிய ஸம்ஸாரமானது - கண்டதை அநுஸரிக்கின்றவனை [மேல்நோக்கிற்கு உலகம் எப்படித் தோற்றுகின்றதோ, அப்படியே அதனைக் கொண்டு ஒழுகும் அஜ்ஞானியை]ப்பற்றியதேதான். அவித்யையும், அதன்செய்கையும் க்ஷேத்ரஜ்ஞனான தனிப்பொருளுக்கு இல்லை. அன்றியும், பொய்யறிவு உண்மைப் பொருளைத் தாக்கமுடியாது. (உதாரணமாக,) கானல்ஜலமானது பாலைநிலத்தை ஈரத்தால் நனைத்துச் சேறுக்கமுடியாதன்றோ. அவ்வாறே, அவித்யை க்ஷேத்ரஜ்ஞனை ஒன்றும் செய்யமுடியாது. ஆதலால், இவற்றை = "க்ஷேத்ரஜ்ஞனை நானாகவும் அறி" (கங - உ) என்பதையும், "அறிவு அறியாமையினால் மூடுண்டுகிடக்கின்றது" (ரு - கரு) என்பதையும் அருளிச்செய்தனர்.

கற்றறிந்த மூடர்கள்.

(ஆக்ஷேபம்):—இனி, "நான் இப்படிப்பட்டவன், இது என்னுடையதே தான்" என ஸம்ஸாரிகட்குப்போல, பண்டிதர்கட்கும் (ஸம்ஸாரித்தன்மையானது சித்தத்திற் காண்கின்றதே). இஃதென்ன? —("இப்படிப்பட்டவன்" என்பது - உடற்குலம், கல்வியுடைமை முதலியவற்றையும், "இது" என்பது - மனைவி, மக்கள் வீடுமுதலியவற்றையும் குறிக்கின்றது.—ஆ.)

(ஸமாதானம்):—கேள்: உடம்பையே ஆத்மாவாகக் காணுதல் எதுவோ, அந்தக்கல்வியுடைமைதான் இது. (அவ்வாறு காணுதல் மயக்கத்தினலான போலித் தோற்றம். உண்மையிலே, ஆத்மா ஸம்ஸாரத்தினல் தாக்கப்படுவதில்லை.)

ஆனால், (அவர்கள்) நிர்விகாரியான க்ஷேத்ரஜ்ஞனைக் கண்டால், பின்பு போகத்தையாவது, கர்மத்தையாவது "(அது) எனக்கு இருக்கட்டும்" என்று விரும்பமாட்டார்கள். ஏனெனில், விகாரமன்றோ போகமும் கர்மமும். [விகாரம் - நிலைமைவேறுபாடு.]

𑌅𑌤 𑌏𑌵𑌂 𑌸𑌤𑌿, 𑌫𑌲𑌾𑌰𑍍𑌥𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 । 𑌵𑌿𑌦𑍁𑌷𑌃 𑌪𑍁𑌨𑌃 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 𑌫𑌲𑌾𑌰𑍍𑌥𑌿𑌤𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍌 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑌣𑌸𑌂𑌘𑌾𑌤𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑍋𑌪𑌰𑌮𑍇 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 𑌉𑌪𑌚𑌰𑍍𑌯𑌤𑍇 ॥

𑌇𑌦𑌂 𑌚 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 𑌪𑌾𑌣𑍍𑌡𑌿𑌤𑍍𑌯𑌂 𑌕𑍇𑌷𑌾𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌅𑌸𑍍𑌤𑍁—𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌃 𑌈𑌶𑍍𑌵𑌰 𑌏𑌵 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌚 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯𑍈𑌵 𑌵𑌿𑌷𑌯𑌃 । 𑌅𑌹𑌂 𑌤𑍁 𑌸𑌂𑌸𑌾𑌰𑍀 𑌸𑍁𑌖𑍀 𑌦𑍁𑌃𑌖𑍀 । 𑌸𑌂𑌸𑌾𑌰𑍋𑌪𑌰𑌮𑌶𑍍𑌚 𑌮𑌮 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨, 𑌧𑍍𑌯𑌾𑌨𑍇𑌨 𑌚 𑌈𑌶𑍍𑌵𑌰𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌂 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑍇𑌨 𑌇𑌤𑌿 𑌯𑌶𑍍𑌚 𑌏𑌵𑌂 𑌬𑍁𑌧𑍍𑌯𑌤𑍇, 𑌯𑌶𑍍𑌚 𑌬𑍋𑌧𑌯𑌤𑌿, 𑌨𑌾𑌸𑍌 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌃 𑌇𑌤𑌿 ॥

𑌏𑌵𑌂 𑌮𑌨𑍍𑌵𑌾𑌨𑌃 𑌯𑌃 𑌸𑌃 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌪𑌸𑌦𑌃, 𑌸𑌂𑌸𑌾𑌰𑌮𑍋𑌕𑍍𑌷𑌯𑍋𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌚 𑌅𑌰𑍍𑌥𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌕𑌰𑍋𑌮𑍀𑌤𑌿; 𑌆𑌤𑍍𑌮𑌹𑌾 𑌚; 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌮𑍂𑌢𑌃 𑌅𑌨𑍍𑌯𑌾𑌂𑌶𑍍𑌚 𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌯𑌤𑌿

---

இனி, இவ்வாறுள்ளவளவிலே, அஜ்ஞானி பயனை வேண்டுகிறவனாதலால் (அவற்றில்) தலைப்படுகிறான். நிர்விகாரியான ஆத்மாவைக் காணும் ஞானியோ, பயனை வேண்டுகிறவனில்லையாதலால் (அவற்றில்) தலைப்படுவது அமையாது; அமையாதாகவே, தேகம் இந்திரியங்கள் இவற்றின் சேர்க்கையின் தொழிலானது ஒய்ந்துவிட, ஒழிபு [அவன் கர்மத்தினின்றும் ஒழிந்துவிட்டான் என்பது] உபசாரவழக்கினால் கூறப்படுகின்றது.

இனி, இது வேறுபாண்டித்யமாக [கல்வித்திறமையாக] சிலர்க்கு இருக்கட்டும் (எனின், அதுவருமாறு) :—"க்ஷேத்ரஜ்ஞன் ஈச்வரன்தான். க்ஷேத்ரமோ வேறானது, க்ஷேத்ரஜ்ஞனுக்கே விஷயமாயுள்ளது [அவனால் உணரப்படுவது]. ஆனால், நான் பிறந்து இறந்து உழல்பவனாய் இன்பத்தையும் துன்பத்தையும் உடையவனாய் இருக்கின்றேன். க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களை அறிவதனாலும், தியானத்தினாலும் ஈச்வரனாகிய க்ஷேத்ரஜ்ஞனை நேரேகண்டு, பின்பு, அவன்வடிவமாகநிற்பதனால் எனக்கு ஸம்ஸாரம் ஒழிதலைச்செய்யவேண்டும் என்று எவன் இவ்வாறு உணர்த்தப்படுகின்றானோ, இன்னும் எவன் (இவ்வாறு பிறர்க்கு) உணர்த்துகின்றானோ, அவன் [அந்தசிஷ்யனும், குருவும்] க்ஷேத்ரஜ்ஞன் அல்லன்" என்பது. (ஸம்ஸாரம் உண்மையாயுள்ளது. ஆத்மா அதனையுடையது. இந்த ஆத்மாவைக்காட்டிலும் ஈச்வரன் வேறானவன், ஸம்ஸாரமில்லாதவன். உண்மையான ஸம்ஸாரியாகிய ஆத்மா ஈச்வரனைத் தியானிக்க, அதனைச் சார்ந்துவரும் ஞானத்தினால் தன்னை ஈச்வரனாகச் செய்யவேண்டும் என்னும் அறிவே பாண்டித்யம் என்பது - சிலர் கொள்கை. இதனைப் பாஷ்யகாரர் பின்வருமாறு மறுக்கிறார்.—ஆ.)

இவ்வாறு எவன், ஸம்ஸாரமும் மோக்ஷமும் சாஸ்திரமும் பயன்படுதலைச் செய்கின்றேன் என்று நினைக்கின்றவனோ, அவன் பண்டிதர்களுள் கடைப்பட்டவன்; அன்றியும், ஆத்மாவைக் கொல்பவன். (அவன்) நூற்பொருளின் ஸம்பிரதாயம் [பெரியோர்வழிவரும் முறை]இல்லாதவனாதலால், சொன்னதற்கு இல்லாமையையும், சொல்லாததற்குக் கற்பனையும் செய்துகொண்டு [சாஸ்திரத்தினுள், "நீ அதுவாயிருக்

शास्त्रार्थसंप्रदायरहितत्वात्, श्रुतहानिमश्रुतकल्पनां च कुर्वन्।
तस्मात्, असंप्रदायवित् सर्वशास्त्रविदपि मूर्खवदेव उपेक्षणीयः ॥

यत्तु उक्तम् "ईश्वरस्य क्षेत्रज्ञैकत्वे संसारित्वं प्राप्नोति; क्षेत्रज्ञानां च ईश्वरैकत्वे संसारिणः अभावात् संसाराभावप्रसङ्गः" इति—एतौ दोषौ प्रत्युक्तौ "विद्याविद्ययोः वैलक्षण्याभ्युपगमात्" इति। कथम्?—अविद्यापरिकल्पितदोषेण तद्विषयं वस्तु पारमार्थिकं न दुष्यतीति। तथा च दृष्टान्तः दर्शितः—मरीच्यम्भसा ऊषरदेशः न पङ्कीक्रियते इति। संसारिणः अभावात् संसाराभावप्रसङ्गदोषोऽपि संसारसंसारिणोः अविद्याकल्पितत्वोपपत्त्या प्रत्युक्तः ॥

नन्वविद्यावत्त्वमेव क्षेत्रज्ञस्य संसारित्वदोषः। तत्कृतं च सुखित्वदुःखित्वादि प्रत्यक्षमुपलभ्यते इति चेत्—

---

றேய்" என்பது முதலியவற்றால் ஜீவனும் ஈச்வரனும் ஒன்றுஎன்று சொன்னதைவிட்டு, "ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் வாஸ்தவமாகவே பேதமுண்டு" என்று நூலினுள் சொல்லாததைக் கற்பனைசெய்துகொண்டு] தானே மயங்கியவனாய்ப் பிறரையும் மயக்குகிறான். ஆகவே, ஸம்பிரதாயந்தெரியாதவன் ஸகலசாஸ்திரங்களையும் அறிந்தவனாயினும், மூர்க்கனைப்போலவே (அவனை) அசட்டைசெய்து ஒழிக.

ஆத்மாவுக்கு ஸம்ஸாரத்தோடு தொடர்பு உண்டென்பது வெறும் மயக்கம்.

இனி, "ஈச்வரனும் க்ஷேத்ரஜ்ஞனும் ஒன்றாயிருக்குமளவிலே, க. (ஈச்வரன்) ஸம்ஸாரி என்றாகின்றது. அன்றியும், உ. க்ஷேத்ரஜ்ஞர்களும் ஈச்வரனும் ஒன்றாயிருக்குமளவிலே, ஸம்ஸாரி இல்லாமையினால் ஸம்ஸாரம் இல்லையாதல் வேண்டும்" எனஎவை கூறப்பட்டனவோ, (அந்த) இவ்விரண்டு குற்றங்களும் "அறிவிற்கும் அறியாமைக்கும் வேற்றுமையை (யாவரும்) ஒத்துக்கொள்வதனால்" என மறுமொழி கூறப்பெற்றன.—எப்படி?—அறியாமையினால் கற்பனைசெய்யப்பட்ட குற்றத்தினால், அதற்கு [அக்கற்பனைக்கு] ஆதாரமாயுள்ள உண்மைப்பொருள் கெடமாட்டாதென்று (மறுமொழிகூறப்பட்டது). அவ்வண்ணமே, கானல்ஜலத்தினால் பாலைநிலம் சேறாகாதென்று திருஷ்டாந்தமும் காட்டப்பட்டது. ஸம்ஸாரி இல்லாமையினால் ஸம்ஸாரம் இல்லையாதல் வேண்டும் என்னும் குற்றமும் - "ஸம்ஸாரமும், ஸம்ஸாரியும் அவித்யையினால் கற்பிக்கப்பட்டவை" என்னும் நியாயத்தினால் மறுமொழிகூறப்பெற்றது.

(ஆக்ஷேபம்) :—அப்படியானால், அவித்யையுடையவனாயிருத்தலே க்ஷேத்ரஜ்ஞன் ஸம்ஸாரியாதலென்னும் குற்றமாம் [க்ஷேத்ரஜ்ஞன் அவித்யையையுடையவனாயின், அவன் ஸம்ஸாரியாம்]; அன்றியும், அதனாலாகும் [அவித்யையினாலாகும்] இன்பமுடைமையும், துன்பமுடைமையும், மற்றும் இவைபோன்றவையும் பிரத்தியக்ஷமாகக் காணப்படுகின்றன எனின்,—

𑌨; 𑌜𑍍𑌞𑍇𑌯𑌸𑍍𑌯 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌧𑌰𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌤𑌦𑍍𑌦𑍋𑌷𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃। 𑌯𑌾𑌵𑌤𑍍 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌦𑍋𑌷𑌜𑌾𑌤𑌮𑍍 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌮𑍍 𑌆𑌸𑌞𑍍𑌜𑌯𑌸𑌿, 𑌤𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑍇𑌯𑌤𑍍𑌵𑍋𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌧𑌰𑍍𑌮𑌤𑍍𑌵𑌮𑍇𑌵, 𑌨 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌧𑌰𑍍𑌮𑌤𑍍𑌵𑌮𑍍। 𑌨 𑌚 𑌤𑍇𑌨 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌃 𑌦𑍁𑌷𑍍𑌯𑌤𑌿, 𑌜𑍍𑌞𑍇𑌯𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌃 𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃। 𑌯𑌦𑌿 𑌹𑌿 𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌜𑍍𑌞𑍇𑌯𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌨𑍋𑌪𑌪𑌦𑍍𑌯𑍇𑌤। 𑌯𑌦𑌿 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌧𑌰𑍍𑌮𑌃 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑍁𑌃𑌖𑌿𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌃, 𑌕𑌥𑌂 𑌭𑍋𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌮𑍍 𑌉𑌪𑌲𑌭𑍍𑌯𑍇𑌤, 𑌕𑌥𑌂 𑌵𑌾 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌧𑌰𑍍𑌮𑌃। "𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌚 𑌯𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂, 𑌜𑍍𑌞𑌾𑌤𑍈𑌵 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌃" 𑌇𑌤𑌿 𑌅𑌵𑌧𑌾𑌰𑌿𑌤𑍇, "𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦𑍁𑌃𑌖𑌿𑌤𑍍𑌵𑌾𑌦𑍇𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌤𑍍𑌵𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌧𑌰𑍍𑌮𑌤𑍍𑌵𑌂, 𑌤𑌸𑍍𑌯 𑌚 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑍋𑌪𑌲𑌭𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑍍" 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌵𑌷𑍍𑌟𑌮𑍍𑌭𑌾𑌤𑍍 𑌕𑍇𑌵𑌲𑌮𑍍॥

𑌅𑌤𑍍𑌰 𑌆𑌹—𑌸𑌾 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌕𑌸𑍍𑌯? 𑌇𑌤𑌿।

---

(ஸமாதாநம்) :—அப்படியன்று ; அறியப்படும்பொருளானது க்ஷேத்ரத்தின் தன்மையாதலின், அறியும்பொருளாகிய க்ஷேத்ரஜ்ஞனுக்கு அதனால் [அறியப்படும் பொருளினால்] ஆன குற்றம் அமையாமையின். க்ஷேத்ரஜ்ஞனுக்கு இல்லாத எந்தக் குற்றத்தையெல்லாம் நீ எவ்வளவு ஒட்டினாலும், அது [அக்குற்றம்] அறியப்படும்பொருளாய் அமைவதனால் க்ஷேத்ரத்தின் தன்மையாகுமேயன்றி, க்ஷேத்ரஜ்ஞனுடைய தன்மையாகாது. அன்றியும், அதனால் க்ஷேத்ரஜ்ஞன் கெடமாட்டான் ; அறியப்படும் பொருளோடு அறியும்பொருளுக்குத் தொடர்பு ஏலாமையின். தொடர்பு இருக்குமாயின், (அங்ஙனம் குற்றமானது) அறியப்படும்பொருளாகவே அமையாது. (1) அவித்யையுடைமை, துன்பமுடைமை முதலியன ஆத்மாவின் தன்மையாயின், ஆ ! (அவை அப்பொழுது) எவ்வாறு பிரத்தியக்ஷமாக உணரப்படும் ? (2) அல்லது, எவ்வாறுக்ஷேத்ரஜ்ஞனுடைய தன்மையாகும் ? (1) ஆத்மா தன் தன்மையை அறியுமாயின், அது தன்னையும் அறியக்கூடும். அது பொருந்தாது ; ஏனெனில், ஒரேபொருள் ஒருசெய்கைக்குக் கர்த்தாவாகவும், செயப்படுபொருளாகவும் இருக்கமுடியாது. (2) உணரப்படும் பொருளானது உணரும்பொருளின் தன்மையாயிருக்கமுடியாது ; நிறமும், உருவமும் போல. ஆகவே, க்ஷேத்ரமானது க்ஷேத்ரஜ்ஞனது தன்மையாகாது. "அறியப்படும் பொருளாகிய அதெல்லாம் க்ஷேத்ரம்(கங - ரு, சு) ; அறியும்பொருளே க்ஷேத்ரஜ்ஞன்" (கங - க) என நிச்சயமாய் நிர்ணயிக்கப்பட்டிருக்குமளவிலே, "அவித்யை, துன்பமுடைமை முதலியன க்ஷேத்ரஜ்ஞனுடைய விசேஷணங்கள், க்ஷேத்ரஜ்ஞனுடைய தன்மைகள் : அன்றியும், அவை பிரத்தியக்ஷமாய் உணரப்படுகின்றவை" என, கேவலம் அவித்யையைமாத்திரம் கைபிடித்து விரோதமாகக் கூறப்படுகின்றது.

ஆத்மாவிற்கும், அவித்யை முதலியவற்றிற்கும் தொடர்பு இருக்கின்றது என்னும் உணர்ச்சி மயக்கஅறிவினலாகின்றது.

இனி(ப் பிரதிவாதி)கூறுகிறான் :— அந்த அவித்யை யாருக்கு என்பது ? (கூடாததையும் கூட்டுவிக்கும் சக்தியுடைய அவித்யைக்குச் சுதந்திரமில்லையாதலால், சுதந்திரமானபொருளொன்று அதற்குச் சார்பிடமாயிருக்கவேண்டும். சித்தானது வித்யாஸ்வபாவமாதலால்[இயல்பாகவே அறிவாயிருப்பதனால்]அவித்யைக்குச் சார்பிடமாகாது. ஆனால், சித்தைக்காட்டிலும் வேறு சுதந்திரப்பொருள் இல்லை. ஆகவே, பிரதிவாதி அவித்யையின் சார்பிடத்தை அறிய விரும்புகிறான்.—ஆ.)

𑌯𑌸𑍍𑌯 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 ।
𑌕𑌸𑍍𑌯 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 ?

𑌅𑌤𑍍𑌰 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—“𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌕𑌸𑍍𑌯 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇?” 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃 𑌨𑌿𑌰𑌰𑍍𑌥𑌕𑌃। 𑌕𑌥𑌮𑍍?—𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇𑌚𑍇𑌦𑌵𑌿𑌦𑍍𑌯𑌾, 𑌤𑌦𑍍𑌵𑌨𑍍𑌤𑌮𑌪𑌿 𑌪𑌶𑍍𑌯𑌸𑌿। 𑌨 𑌚 𑌤𑌦𑍍𑌵𑌤𑌿 𑌉𑌪𑌲𑌭𑍍𑌯𑌮𑌾𑌨𑍇 “𑌸𑌾 𑌕𑌸𑍍𑌯 ?” 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑍋 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 । 𑌨 𑌹𑌿 𑌗𑍋𑌮𑌤𑌿 𑌉𑌪𑌲𑌭𑍍𑌯𑌮𑌾𑌨𑍇 “𑌗𑌾𑌵𑌃 𑌕𑌸𑍍𑌯 ?” 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃 𑌅𑌰𑍍𑌥𑌵𑌾𑌨𑍍 𑌭𑌵𑌤𑌿 ॥

𑌨𑌨𑍁 𑌵𑌿𑌷𑌮𑍋 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌤𑌃—𑌗𑌵𑌾𑌂 𑌤𑌦𑍍𑌵𑌤𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌤𑌤𑍍𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑍋𑌽𑌪𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑍋 𑌨𑌿𑌰𑌰𑍍𑌥𑌕𑌃 । 𑌨 𑌤𑌥𑌾 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌤𑌦𑍍𑌵𑌾𑌂𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑍌, 𑌯𑌤𑌃 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃 𑌨𑌿𑌰𑌰𑍍𑌥𑌕𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 ॥

𑌅𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑍇𑌣𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌤𑌾𑌽𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑍇 𑌜𑍍𑌞𑌾𑌤𑍇, 𑌕𑌿𑌂 𑌤𑌵 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍?
𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌃 𑌅𑌨𑌰𑍍𑌥𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌪𑌰𑌿𑌹𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌾 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 ॥

---

(மறுமொழி) :—எவனுக்குக் காணப்படுகின்றதோ, அவனுக்கே (அவித்யை உள்ளது). (அது காணப்படாததாயின், அது உள்ளதென்பதே அமையாது. காணப்படுவதாயின், அது சுதந்திரமானபொருளன்று; ஆதலால், தானே இருக்கமுடியாது, ஒன்றைச் சார்ந்தே இருக்கவேண்டுமாதலின், “அது எவனுக்குக் காணப்படுகின்றதோ, அவனுக்கே உள்ளது” என மறுமொழிகூற லாயிற்று.—ஆ.)

(வினா) :—(அது) யாருக்குக் காணப்படுகின்றது ? என்பது—[அதற்குச் சிறப்பான சார்பிடம் இன்னது எனக் கூறுக.—ஆ.]

(விடை) :—இதில் கூறுவோம் : “அவித்யை யாருக்குக் காணப்படுகின்றது ?” என்னும் வினாவானது அர்த்தமில்லாதது [இவ்வினாவிற்கு இடமில்லை].—எப்படி ?—அவித்யை காணப்படுகின்றதானால், அதனை யுடையவனையும் நீ காண்கிறாய். அதனை யுடையவன் காணப்படும்பொழுது, “அது யாருக்கு” என வினவுதல் நேரன்று. பசுக்களுடையவன் காணப்படும்பொழுது, “பசுக்கள் யாருக்கு [எவனுடையவை]?” என வினவுதல் அர்த்தமுள்ள தாகாதன்றோ. [அவித்யை அறியப்படும் பொருளாதலாலும், அதற்குச் சிறப்பான சார்பிடமாகிய ஆத்மா தன் அநுபவத்திலேயே அமைந்திருப்பதனாலும் இவ்வினாவிற்கு இடமில்லை.—ஆ.]

(ஆக்ஷேபம்) :—அப்படியானால், திருஷ்டாந்தம் சரியன்று. பசுக்களும், அவற்றை யுடையவனும் பிரத்தியக்ஷமா யிருப்பதனால், அவர்களுடைய ஸம்பந்தமும் பிரத்தியக்ஷமா யுள்ளது; ஆகவே, வினா அர்த்தமில்லாதது. (ஆனால்,) அவித்யையும், அதனை யுடையவனும் அவ்வாறு பிரத்தியக்ஷமாயில்லை. அப்படி யிருந்தாலன்றோ வினா அர்த்தமில்லாத தாகும்.

(ஸமாதானம்) :—பிரத்தியக்ஷமா யில்லாதவனாகிய அவித்யையுள்ளவனோடு அவித்யையின் தொடர்பு அறியப்பட்டவழி, உனக்கு ஆவதென்ன? [அவித்யையை யுடையவன் பிரத்தியக்ஷமாயிராவிட்டாலும், அவன் இன்னான் என்று நீ அறிகிறாய். ஆகவே, உனது வினாவிற்கு இடமில்லை.]

(பிரதிவாதி இச்சமாதானத்தின்கருத்தை அறியாது மீண்டும் கூறுகிறான்.—ஆ.)

(பிரதிவாதி) :—அவித்யை அனர்த்தங்கட்குக் காரணமாதலால், நீக்கவேண்டியது (ஆதலால், “எவனுக்கு அவித்யை” என்று அறிய வினவுகின்றேன்.)

யஸ்ய அவித்யா, ஸ: தாம் பரிஹரிஷ்யதி ॥
நநு அஹமேவ அவித்யா ॥
ஜாநாஸி தர்ஹி அவித்யாம் தத்வந்தம் ச ஆத்மாநம் ॥
ஜாநாமி, ந து ப்ரத்யக்ஷேண ॥

அநுமாநேந சேத் ஜாநாஸி, கதம் ஸம்பந்தக்ரஹணம்? ந ஹி தவ ஜ்ஞாது: ஜ்ஞேயபூதயா அவித்யயா தத்காலே ஸம்பந்த: க்ரஹீதும் ஶக்யதே, அவித்யாவிஷயத்வேநைவ ஜ்ஞாது: உபயுக்தத்வாத் । ந ச ஜ்ஞாது: அவித்யாயாஶ்ச ஸம்பந்தஸ்ய ய: க்ரஹீதா, ஜ்ஞாநம் வா அந்யத் தத்விஷயம் ஸம்பவதி; அநவஸ்தா-ப்ராப்தே: । யதி ஜ்ஞாத்ராऽபி ஜ்ஞேயஸம்பந்தோ ஜ்ஞாயேத, அந்ய: ஜ்ஞாதா கல்ப்யேத, தஸ்யாபி அந்ய:, தஸ்யாபி அந்ய: இதி அநவஸ்தா அபரிஹார்யா । யதி புந: அவித்யா ஜ்ஞேயா, அந்யத்வா ஜ்ஞேயம், ஜ்ஞேயமேவ । ததா ஜ்ஞாதாऽபி ஜ்ஞாதைவ, ந

---

(மறுமொழி) :—எவனுக்கு அவித்யையோ, அவன் அதனை நீக்குவான். (அதனை நீக்கவேண்டியவன் அதனையுடையவனேயன்றி வேறொருவ னல்லன்.)

(பிரதிவாதி) :—ஏன்! எனக்கேதான் அவித்யை. (நானேதான் அதனை நீக்க முயலவேண்டும்.—ஆ.)

(மறுமொழி) :—அப்பொழுது நீ அவித்யையையும், அதனையுடைய ஆத்மாவையும் அறிகிறாய். (அங்ஙனம் உனது வினாவிற்கு அர்த்தமில்லை என்றபடி.—ஆ.)

(பிரதிவாதி) :—அறிகிறேன்; ஆனால், பிரத்தியக்ஷமாய் (அறிகிறேன்) இல்லை. (ஆதலால், எனது வினா என்க.)

(மறுமொழி) :—("நான் அவித்யையுள்ளவன்; ஏனெனில், அவித்யையின் காரியமாகிய துன்பம் முதலியவை எனக்கு இருக்கின்றன; எனக்கு அவித்யை இல்லையானால், துன்பம் முதலியன இல்லை; உதாரணமாக, அவித்யையில்லாத விடுபட்ட ஆத்மாக்களுக்கு அவை இல்லை" என்னும்) அநுமானத்தினால் (அவித்யையையும், அதனையுடைய ஆத்மாவையும்) அறிகின்றனையாயின், (அவ்விரண்டிற்குமுள்ள) ஸம்பந்தத்தை உணர்தல் எவ்வாறு கூடும்? அறியப்படும்பொருளாகிய அவித்யையோடு அக்காலத்திலே [ஆத்மா அவித்யையை அறியுங்காலத்திலே] அறியும்பொருளுக்குள்ள ஸம்பந்தத்தை நீ அறியமுடியாதன்றோ; ஏனெனில், அறியும்பொருள் [ஆத்மா] அவித்யையை அறிவதாகவே (அப்பொழுது) அமர்ந்துள்ளது. (ஒருபொருள் அறியும்பொருளாகவும், அறியப்படும்பொருளாகவும் ஒரேகாலத்து இருக்கமாட்டாது.—ஆ.) அறியும்பொருளுக்கும்[ஆத்மாவிற்கும்] அவித்யைக்கும் உள்ள ஸம்பந்தத்தை (வேறு) எது அறிவதோ,(அதுவும்), அ(ச்சம்பந்தத்)தைப்பற்றிய வேறு அறிவும் நிகழமாட்டா; ஏனெனில், வரம்பின்மையாகும். அறியும்பொருளோடு[ஆத்மாவோடு]ம் அறியப்படும் பொருளுக்குச் சம்பந்தம் அறியப்படுமாயின், வேறோர் அறியும்பொருளைக் கொள்ளவேண்டும்; பின்பு, அந்த அறியும் பொருளுக்கும் வேறோர் அறியும் பொருள்; மறித்தும், அந்த அறியும்பொருளுக்கும் வேறோர் அறியும்பொருள்; என வரம்பின்மை நீக்கமுடியாததாம். இனி, அவித்யை அறியப்படும்பொருளாகுக; அல்லது, வேறெதுவும் அறியப்படும்பொருளாகுக; அறியப்படும்பொருள் அறியப்படும்பொருளேதான். அவ்வண்ணமே, அறியும்பொருளும் அறியும்பொருளேதான்; (அது) அறியப்படும்பொருளாகமாட்டாது. இவ்வாறுள்ளவளவிலே, அறியும்பொருளான

ज्ञेयः भवति । यथा च भावस्य, अविद्यादिभिः विकारदोषैः न ज्ञातुः क्षेत्रज्ञस्य किंचित् दुष्यति ॥

ननु अयमेव दोषः, यत् दोषवत्क्षेत्रविज्ञातृत्वम् ; इति चेत्—

न, विज्ञानस्वरूपस्य अविक्रियस्यैव विज्ञातृत्वोपचारात् ; यथा उष्णतामात्रेण अग्नेः तप्तिक्रियोपचारः तद्वत् । यथा च अत्र भगवता क्रियाकारकफलात्मत्वाभावः आत्मनि स्वत एव दर्शितः—अविद्याध्यारोपितः एव क्रियाकारकादिः आत्मनि उपचर्यते ; तथा तत्र तत्र 'य एनं वेत्ति हन्तारम्' 'प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः' 'नादत्ते कस्यचित्पापम्' इत्यादिप्रकरणेषु भगवता दर्शितम्—तथैव च व्याख्यातम् अस्माभिः । उत्तरेषु च प्रकरणेषु दर्शयिष्यामः ॥

हन्त ! तर्हि आत्मनि क्रियाकारकफलात्मतायाः स्वतः अभावे, अविद्यया च अध्यारोपितत्वे, "कर्माणि अविद्वत्कर्तव्यान्येव, न विदुषाम्" इति प्राप्तम् ॥

---

க்ஷேத்ரஜ்ஞனுக்கு அவித்யை, துன்பமுடைமை முதலியவற்ருல் ஒன்றும் கேடு இல்லை. (ஆத்மா அறியப்படும்பொருள் என்பது ஏலாதாதலின், அதனிடத்து அவித்யாஸம் பந்தத்திற்குப் பிரமாணமில்லை ; அன்றியும், ஆத்மா தன்னைத் தான் எப்பொழுதும் எல்லார்க்கும் காட்டிக்கொண்டிருக்கின்றது.—ஆ. எனவே, கயிற்றிற்கும் பாம்பிற்கும் எப்படி ஸம்பந்தமில்லையோ, அப்படிக் கண்டுகொள்க.)

(ஆக்ஷேபம்):—அப்படியாயின், (ஆத்மாவினிடத்து) இதுவேதான் இழுக்கு : அதாவது - கேடுகளையுடைய க்ஷேத்ரத்தை அறிவதென்பது ; எனில்,—

(ஸமாதாநம்) :—அப்படியன்று; ஏனெனில், அறிவுவடிவமாய் நிர்விகாரியாக வேயுள்ள (ஆத்மாவை) அறியும்பொருளென்பது - உபசாரவழக்கு. நெருப்பிற்கு சூடு மாத்திரத்தினுல் எரித்தலென்னும்வினை எப்படி உபசாரவழக்கோ, அதுபோல. அவித்யையினுல் ஏற்றப்பட்டவையேயான வினை காரகம் முதலியன ஆத்மாவினிடத்து உபசாரவழக்கினுல் கூறப்படுகின்றன. அவ்வாறே, பகவான் ஆங்காங்கு "எவன் இதனைக் கொல்வதாக அறிகின்ருனே" (உ - கக), "பிரகிருதியின் குணங்களால் செய்யப்படுகின்ற" (௩ - உஎ), "ஒருவனுடைய பாவத்தை" (ரு-கரு) என்பனமுதலிய பிரகரணங்களுள் (தமது கருத்தைக்) காட்டியுள்ளார். வினை, காரகம், பயன் என்றஇவற்றின்வடிவமாய் இருத்தலென்பது ஆத்மாவினிடத்துத் தானுகவே இல்லை எனப் பகவானுலே எப்படி இங்கே [கீதையினுள்] உணர்த்தப்பட்டிருக்கின்றதோ, அப்படித்தான் நாமும் உரைசெய்திருக்கின்ருேம். (இவ்வாறே, பகவானுடைய கருத்தென்பதை)மேல் வரும் பிரகரணங்களிலும் காட்டுவோம்.

(ஆக்ஷேபம்) :—நல்லது; அப்பொழுது வினை, காரகம், பயன் என்றஇவற்றின் வடிவமாய் இருத்தல் ஆத்மாவினிடத்துத் தானுக இல்லாக்கால், (ஆத்மாவினிடத்து) அவித்யையினுல் ஏற்றப்பட்டவையாயின், "கர்மங்கள் அஜ்ஞானிகட்குச் செய்ய வேண்டியவையேயன்றி ஞானிகட்கு அல்ல" என்பதாயிற்று. (ஆகவே, "அறிவோடு கர்மத்தைச் செய்யவேண்டும்" என்னும் சாஸ்திரநியாயத்திற்கு முரணும்.)

𑌸𑌤𑍍𑌯𑌮𑍍 𑌏𑌵𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌮𑍍, 𑌅𑌤𑌏𑌵 '𑌨 𑌹𑌿 𑌦𑍇𑌹𑌭𑍃𑌤𑌾 𑌶𑌕𑍍𑌯𑌮𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰 𑌉𑌪𑌪𑌾𑌦𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌃 । 𑌸𑌰𑍍𑌵𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑍋𑌪𑌸𑌂𑌹𑌾𑌰𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑍇 𑌚 '𑌸𑌮𑌾𑌸𑍇𑌨𑍈𑌵 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌯𑌾 𑌪𑌰𑌾' 𑌇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰 𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑌃 𑌉𑌪𑌪𑌾𑌦𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌃 । 𑌅𑌤𑍍𑌰 𑌇𑌹 𑌬𑌹𑍁𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌨, 𑌇𑌤𑌿 𑌉𑌪𑌸𑌂𑌹𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 ॥ ௨ ॥

'𑌇𑌦𑌂 𑌶𑌰𑍀𑌰𑌮𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍍𑌲𑍋𑌕𑍋𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑌸𑍍𑌯 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑌶𑍍𑌲𑍋𑌕𑌃 𑌅𑌯𑌮𑍍 𑌉𑌪𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌤𑍇 '𑌤𑌤𑍍𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌯𑌚𑍍𑌚' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿, 𑌵𑍍𑌯𑌾𑌚𑌿𑌖𑍍𑌯𑌾𑌸𑌿𑌤𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌅𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑍋𑌪𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌨𑍍𑌯𑌾𑌯𑍍𑌯𑌃 𑌇𑌤𑌿—

௩. 𑌤𑌤𑍍𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌯𑌚𑍍𑌚 𑌯𑌾𑌦𑍃𑌕𑍍𑌚 𑌯𑌦𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑌿 𑌯𑌤𑌶𑍍𑌚 𑌯𑌤𑍍 ।
𑌸 𑌚 𑌯𑍋 𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑌶𑍍𑌚 𑌤𑌤𑍍𑌸𑌮𑌾𑌸𑍇𑌨 𑌮𑍇 𑌶𑍃𑌣𑍁 ॥

𑌯𑌤𑍍 𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑌮𑍍 '𑌇𑌦𑌂 𑌶𑌰𑍀𑌰𑌮𑍍' 𑌇𑌤𑌿 𑌤𑌤𑍍 𑌤𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑍇𑌨 𑌪𑌰𑌾𑌮𑍃𑌶𑌤𑌿 । 𑌯𑌚𑍍𑌚 𑌇𑌦𑌂 𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂, 𑌤𑌤𑍍 𑌯𑌾𑌦𑍃𑌕𑍍 𑌯𑌾𑌦𑍃𑌶𑌂 𑌸𑍍𑌵𑌕𑍀𑌯𑍈𑌃 𑌧𑌰𑍍𑌮𑍈𑌃 । '𑌚'-𑌶𑌬𑍍𑌦𑌃 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑌾𑌰𑍍𑌥𑌃 । 𑌯𑌦𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑌿 𑌯𑌃 𑌵𑌿𑌕𑌾𑌰𑌃 𑌯𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍 𑌯𑌦𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑌿, 𑌯𑌤𑌃 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍

---

(ஸமாதாநம்) :—உண்மை; இவ்வாறே ஆயிற்று. ("ஆத்மா உடம்பினும் வேருயுள்ளது" என்னும் அறிவுமாத்திரமே கர்மிகட்கு வேண்டுமேயன்றி, "ஆத்மா பசிமுதலிய தன்மையற்றது" என்னும்அறிவு வேண்டியதில்லை; என்பது-சாஸ்திரத்தின் கருத்து.—ஆ.) "உடம்பையுடையவனுல்" (கஅ-கக) என்றவிடத்து இதனையே எடுத்துக் காட்டுவோம்; அன்றியும், சாஸ்திரம்முழுதும் உபதேசித்த உபதேசத்தை முடிக்கும் பிரகரணத்தினுள் "கௌந்தேய ! சுருக்கமாகவே" (கஅ - ரு0) என்றவிடத்து விசேஷமாகக் காட்டுவோம். இங்கே மிக்கவிரிப்பதனுல் போதும் [விஷயத்தை இங்கு மிகவும் விரிவாக உரைக்கவேண்டாம்] என (இவ்வளவோடு இங்ஙனம் உரையை) முடிக்கின்ரேம். (உ)

இவ்வத்தியாயத்தின் விஷயத்தைச் சுருக்கமாய்க் கூறுதல்.

"இது" (கங - க, உ) என்பது முதலான சுலோகங்களால் உபதேசிக்கப்பட்டதை, (அதாவது) க்ஷேத்ரத்தைப்பற்றிய (இந்த) அத்தியாயத்தின் விஷயத்தைச் சுருக்கிச் சொல்லுகின்ற இச்சுலோகமானது "அந்த க்ஷேத்ரம்" (கங - ங) என்பது முதலாக விவரிக்கப்படுகின்றது; ஏனெனில், விவரிக்கப்புகுந்த விஷயத்தைச் சுருக்கமாய் விளக்குதல் சரியென்க:

௩. அந்த க்ஷேத்ரம் எதுவுமாய், எத்தகையதுமாய், எந்த வேறுபாட்டையுடையதுமாய் உள்ளதோ; எதனின்றும் எது (உண்டாகின்றதோ); அவன் எவனுமாய், எந்த வல்லமையை யுடையவனுமாய் இருக்கின்ருனே; அதைச் சுருக்கமாய் என்னிடமிருந்து கேள்.

"இது, (அதாவது) சரீரம்" (கங - க) என எது குறிப்பிட்டுக்காட்டப்பட்டதோ, அதனை - "அந்த" என்னும் சொல்லினுல் குறிக்கிருர்.—குறிப்பிட்டுணர்த்தப்பட்ட இந்த க்ஷேத்ரமானது எந்த வடிவத்தையுடையது என்பதையும், எப்படிப்பட்ட தன்தன்மைகளையுடையது என்பதையும், எந்த மாறுபாட்டையுடையது என்

च यत् 'कार्यं च उत्पद्यते' इति वाक्यशेषः । स च, यः क्षेत्रज्ञः निर्दिष्टः सः यत्प्रभावः ये प्रभावाः उपाधिकृताः शक्तयः यस्य सः यत्प्रभावश्च । तत् क्षेत्रज्ञयाथात्म्यं यथाविशेषितं समासेन संक्षेपेण मे मम वाक्यतः शृणु, श्रुत्वा अवधारय इत्यर्थः ॥ ३ ॥

तत् क्षेत्रक्षेत्रज्ञयाथात्म्यं विवक्षितं स्तौति श्रोतृबुद्धिप्ररोचनार्थम्—

४. ऋषिभिर्बहुधा गीतं छन्दोभिर्विविधैः पृथक् ।
ब्रह्मसूत्रपदैश्चैव हेतुमद्भिर्विनिश्चितैः ॥

ऋषिभिः वसिष्ठादिभिः बहुधा बहुप्रकारं गीतं कथितम् । छन्दोभिः छन्दांसि ऋगादीनि तैः छन्दोभिः विविधैः नानाप्रकारैः पृथक् विवेकतः गीतम् । किञ्च—ब्रह्मसूत्रपदैश्च एव, ब्रह्मणः सूचकानि वाक्यानि ब्रह्मसूत्राणि, तैः पद्यते ज्ञायते ब्रह्म इति तानि पदानि उच्यन्ते, तैरेव च क्षेत्रक्षेत्रज्ञयाथात्म्यं 'गीतम्' इति अनुवर्तते । 'आत्मेत्येवोपासीत' इत्येवमादिभिः ब्रह्मसूत्रपदैः

---

பதையும் (அறிந்துகொள்). எந்தக்காரணத்தினின்றும் எந்த(க் காரியம் உண்டாகின்றது என்பதையும் தெரிந்துகொள்). "கார்யம் உண்டாகின்றது" என வாக்கியத்தில் தொக்கிநிற்கின்றது.—க்ஷேத்ரஜ்ஞனுகக் குறிப்பிட்டு உணர்த்தப்பெற்றவன் யார் என்பதையும், உபாதிகளாலான எந்த சக்திகளையுடையவன் என்பதையும் (தெரிந்துகொள். இவ்வாறு) கீழே விசேஷிக்கப்பட்டதான க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞருடைய உள்ளபடியான தன்மையை [அவர்களுடைய கீழ்க்கூறிய ஒவ்வொருவகையையும்பற்றிய உண்மையை]ச் சுருக்கமாக என்வார்த்தையினல் கேள்: அதனைக் கேட்டு நிர்ணயித்துக்கொள் என்றபடி.—"வ" என்னும் சொல் (ஐந்தும்) - உம்மைப்பொருளுடையன [க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களை, கீழ்க்கூறிய எல்லாவிதத்தாலும் அறியவேண்டும் என உணர்த்துகின்றன]. (௩)

க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞருடைய தன்மையைப் புகழ்தல்.

அறியவிரும்பியதாகிய க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களுடைய அந்த உள்ளபடியான தன்மையைக் கேட்பவனுக்கு மனஎழுச்சி பிறக்கும்பொருட்டுப் புகழ்கின்றார்:

௪. (க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களுடைய உள்ளபடியான தன்மையானது) ரிஷிகளால் பலவகையாகவும், பல சந்தஸ்களால் தனித்தனியாகவும் பாடப்பெற்றது; காரணமும் நிச்சயமும் பொருந்தி ப்ரஹ்மத்தைக் குறிக்கும் சொற்களாலும் (பாடப்பெற்றது).

ரிஷிகளால் - வஸிஷ்டர் முதலானேர்களால். பாடப்பெற்றது - சொல்லப்பட்டது, சந்தஸ்கள் - ரிக் முதலியன. பல - பலவிதமான. தனித்தனியாக - பிரித்துப்பிரித்து. எவற்றைக்கொண்டு ப்ரஹ்மம் அறியப்படுகின்றதோ, அவை - பதங்கள் எனப்படுகின்றன. ப்ரஹ்மத்தைக் குறிப்பிடும் வார்த்தைகளாகிய அப்பதங்களால் க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களுடைய உள்ளபடியான தன்மையானது "பாடப்பெற்றது" எனத் தொடரும்.—"ஆத்மா என்றே தொழவேண்டும்" (பி - க - ௪ - எ) என்பதுமுதலான ப்ரஹ்மஸூத்ர பதங்களால் [ப்ரஹ்மத்தைக் குறிப்பிடும் சொற்களால்] ஆத்மா அறியப்படு

𑌜𑍍𑌞𑌾𑌯𑌤𑍇, 𑌹𑍇𑌤𑍁𑌮𑌦𑍍𑌭𑌿𑌃 𑌯𑍁𑌕𑍍𑌤𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑍈𑌃 𑌵𑌿𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑍈𑌃 𑌨𑌿𑌸𑍍𑌸𑌂𑌶𑌯𑌰𑍂𑌪𑍈𑌃 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑍋𑌤𑍍𑌪𑌾𑌦𑌕𑍈𑌃 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௪ ॥

𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌯𑌾 𑌅𑌭𑌿𑌮𑍁𑌖𑍀𑌭𑍂𑌤𑌾𑌯 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌾𑌯 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑌾𑌹—

௫. 𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌹𑌂𑌕𑌾𑌰𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍇𑌵 𑌚 ।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌦𑌶𑍈𑌕𑌂 𑌚 𑌪𑌞𑍍𑌚 𑌚𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍋𑌚𑌰𑌾𑌃 ॥

𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌿 𑌚 𑌤𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿, 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌕𑌾𑌰𑌵𑍍𑌯𑌾𑌪𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌚 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌣𑌿, 𑌨 𑌸𑍍𑌥𑍂𑌲𑌾𑌨𑌿 । 𑌸𑍍𑌥𑍂𑌲𑌾𑌨𑌿 𑌤𑍁 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍋𑌚𑌰𑌶𑌬𑍍𑌦𑍇𑌨 𑌅𑌭𑌿𑌧𑌾𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌃 𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑌕𑌾𑌰𑌣𑌂 𑌭𑍂𑌤𑌾𑌦𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 । 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌕𑌾𑌰𑌣𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌅𑌧𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌲𑌕𑍍𑌷𑌣𑌾 । 𑌤𑌤𑍍𑌕𑌾𑌰𑌣𑌂 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍇𑌵 𑌚, 𑌨 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌅𑌵𑍍𑌯𑌾𑌕𑍃𑌤𑌂 𑌤𑍍𑌰𑌿𑌗𑍁𑌣𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 ‘𑌮𑌮 𑌮𑌾𑌯𑌾 𑌦𑍁𑌰𑌤𑍍𑌯𑌯𑌾’ 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌏𑌵𑌶𑌬𑍍𑌦𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍍𑌯𑌵𑌧𑌾𑌰𑌣𑌾𑌰𑍍𑌥𑌃— 𑌏𑌤𑌾𑌵𑌤𑍍𑌯𑍇𑌵 𑌅𑌷𑍍𑌟𑌧𑌾 𑌭𑌿𑌨𑍍𑌨𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃 । ‘𑌚’𑌶𑌬𑍍𑌦𑌃 𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑌾𑌰𑍍𑌥𑌃 । 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌦𑌶—𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑍀𑌨𑌿 𑌪𑌞𑍍𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌪𑌾𑌦𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿, 𑌵𑌾𑌗𑌾𑌦𑍀𑌨𑌿 𑌪𑌞𑍍𑌚 𑌕𑌰𑍍𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿, 𑌤𑌾𑌨𑌿 𑌦𑌶—𑌏𑌕𑌂 𑌚—𑌕𑌿𑌂 𑌤𑌤𑍍?—𑌮𑌨𑌃

---

கின்றது. காரணம் பொருந்தி - யுக்தியோடுகூடி. நிச்சயம் பொருந்தி - ஸம்சயமற்றவை யாகி : நிச்சயபுத்தியை உண்டாக்குவனவாகி என்பது பொருள். (௪)

க்ஷேத்ரமும், அதனுடைய எல்லா வடிவங்களும்.

புகழ்ச்சியினால் எதிர்முகமாகிய [ஆவலோடு கூடிய] அர்ஜுனனுக்குப் பகவான் அருளிச்செய்கிறார் :

௫. மஹாபூதங்களும், அகங்காரமும், புத்தியும், அவ்யக்தமும், இந்திரியங்கள் பத்தும், மற்று ஒன்றும், இந்திரியவிஷயங்கள் ஐந்தும் (க்ஷேத்ரமாம்.)

(நிலம், நீர் முதலியன) எல்லா விகாரங்களையும், வேறுபாடுகளெல்லாவற்றையும் வியாபித்திருப்பதனால் மஹாபூதங்கள் என்க. (இங்குக் குறிக்கப்பட்ட) பூதங்கள் ஸூக்ஷ்மங்கள், ஸ்தூலங்களல்ல. ஸ்தூலங்களோ, "இந்திரிய விஷயங்கள்" என்னும் சொல்லினால் (பின்னர்க்) கூறப்படும். அகங்காரமென்பது - "நான்" என்னும் எண்ணமாயிருப்பது ; மஹாபூதங்கட்குக் காரணமானது. புத்தி என்பது - நிச்சய வடிவமாயுள்ளது ; அஹங்காரத்திற்குக் காரணமானது. அவ்யக்தம் என்பது - அதற்கு [புத்திக்கு]க் காரணமானது; வெளிப்படையாக இல்லாதது ; விகாரத்தை, வேறுபாட்டை அடையாதிருப்பது ; "என்னுடைய மாயை கடத்தற்கு அரிது" (எ - கச) என ஈச்வரசக்தியாகக் கூறப்பெற்றது. "ஏவ" என்னும்சொல் - பிரகிருதியைத் தெளிவாகக் கூறும் பொருளது [பிரகிருதி எட்டுவிதம் என்பதற்குச் சந்தேகமில்லை என்னும் தெளிவுபொருளைத் தருவது]. இத்துணையாகவேதான் பிரகிருதி எட்டு வகையாகப் பிரிந்துளது. "ச" என்னும் சொல் - தன்மாத்திரம் முதலிய பிரிவுபாடுகளை ஒருங்குசேர்க்கும் பொருளது. செவிமுதலிய ஐந்தும் அறிவைத் தோற்றுவிக்கின்றனவாதலால், ஞானேந்திரியங்களாம்; வாய், கை முதலிய ஐந்தும் தொழிலைச் செய்துமுடிப்பனவாதலால், கர்மேந்திரியங்களாம். (ஆக,) அவை பத்து. இன்னும், ஒன்று உளது.—அது யாது? நினைப்புமுதலியவடிவமாயுள்ள மனம். (இது) பதினொன்

𑌏𑌕𑌾𑌦𑌶𑌂 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌾𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑍍 | 𑌪𑌞𑍍𑌚 𑌚 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍋𑌚𑌰𑌾𑌃 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑌯𑍋 𑌵𑌿𑌷𑌯𑌾𑌃 | 𑌤𑌾𑌨𑌿 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌾𑌃 𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌂𑌶𑌤𑌿𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌿 𑌆𑌚𑌕𑍍𑌷𑌤𑍇 || ௫ ||

𑌅𑌥 𑌇𑌦𑌾𑌨𑍀𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌗𑍁𑌣𑌾𑌃 𑌇𑌤𑌿 𑌯𑌾𑌨𑍍 𑌆𑌚𑌕𑍍𑌷𑌤𑍇 𑌵𑍈𑌶𑍇𑌷𑌿𑌕𑌾𑌃, 𑌤𑍇 𑌅𑌪𑌿 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 𑌏𑌵, 𑌨 𑌤𑍁 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌆𑌹 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍—

𑌮𑍂. 𑌇𑌚𑍍𑌛𑌾 𑌦𑍍𑌵𑍇𑌷𑌸𑍍𑌸𑍁𑌖𑌂 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌸𑌂𑌘𑌾𑌤𑌶𑍍𑌚𑍇𑌤𑌨𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃 |
𑌏𑌤𑌤𑍍𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌸𑌮𑌾𑌸𑍇𑌨 𑌸𑌵𑌿𑌕𑌾𑌰𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍 ||

𑌇𑌚𑍍𑌛𑌾—𑌯𑌜𑍍𑌜𑌾𑌤𑍀𑌯𑌂 𑌸𑍁𑌖𑌹𑍇𑌤𑍁𑌮𑍍 𑌅𑌰𑍍𑌥𑌮𑍍 𑌉𑌪𑌲𑌬𑍍𑌧𑌵𑌾𑌨𑍍 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂, 𑌪𑍁𑌨𑌃 𑌤𑌜𑍍𑌜𑌾𑌤𑍀𑌯𑌂 𑌸𑌮𑍁𑌪𑌲𑌭𑌮𑌾𑌨𑌃 𑌤𑌮𑌰𑍍𑌥𑌮𑍍 𑌆𑌦𑌾𑌤𑍁𑌮𑍍 𑌇𑌚𑍍𑌛𑌤𑌿 𑌸𑍁𑌖𑌹𑍇𑌤𑍁𑌰𑌿𑌤𑌿; 𑌸𑌾 𑌇𑌯𑌮𑍍 𑌇𑌚𑍍𑌛𑌾 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌸𑍍𑌯 𑌧𑌰𑍍𑌮𑌃, 𑌜𑍍𑌞𑍇𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌮𑍍 | 𑌤𑌥𑌾 𑌦𑍍𑌵𑍇𑌷𑌃—𑌯𑌜𑍍𑌜𑌾𑌤𑍀𑌯𑌮𑍍 𑌅𑌰𑍍𑌥𑌂 𑌦𑍁𑌃𑌖𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑍇𑌨 𑌅𑌨𑍁𑌭𑍂𑌤𑌵𑌾𑌨𑍍, 𑌪𑍁𑌨𑌃 𑌤𑌜𑍍𑌜𑌾𑌤𑍀𑌯𑌮𑍍 𑌅𑌰𑍍𑌥𑌮𑍍 𑌉𑌪𑌲𑌭𑌮𑌾𑌨𑌃 𑌤𑌂 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿; 𑌸𑍋𑌽𑌯𑌂 𑌦𑍍𑌵𑍇𑌷𑌃 𑌜𑍍𑌞𑍇𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌮𑍇𑌵 | 𑌤𑌥𑌾 𑌸𑍁𑌖𑌮𑍍 𑌅𑌨𑍁𑌕𑍂𑌲𑌂 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌕𑌂, 𑌜𑍍𑌞𑍇𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌮𑍇𑌵 | 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌕𑍂𑌲𑌾𑌤𑍍𑌮𑌕𑌂; 𑌜𑍍𑌞𑍇𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌤𑌦𑌪𑌿 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌮𑍍 | 𑌸𑌂𑌘𑌾𑌤𑌃 𑌦𑍇𑌹𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌸𑌂𑌹𑌤𑌿𑌃 | 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌅𑌭𑌿𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃, 𑌤𑌪𑍍𑌤𑍇 𑌲𑍋𑌹-

ருவது. ஓசைமுதலியன இந்திரிய விஷயங்கள். அந்த இவற்றை ஸாங்க்யநூலார் இருபத்துநாலு தத்துவங்கள் என்பர். (௫)

இனி, இப்பொழுது, வைசேஷிகர் எவற்றை ஆத்மாவினுடைய தன்மைக ளென்று கூறுகிறார்களோ, அவைகளும் க்ஷேத்ரத்தினுடைய தன்மைகளேயன்றி க்ஷேத்ரஜ்ஞ(ரான ஆத்மாவி)னுடைய (தன்மைகள்) அல்ல எனப் பகவான் அருளிச் செய்கிறார் :

மூ. விருப்பு, வெறுப்பு, இன்பம், துன்பம், சேர்க்கை, உணர்ச்சி, திண்மை (என்ற) இந்த க்ஷேத்ரம் (எல்லாம் அவற்றின்) விகாரங்களோடு சுருக்கமாய் எடுத்துக் கூறப்பட்டன.

(ஒருவன்) எவ்வகுப்பைச் சார்ந்தபொருளை இன்பந்தருவதாகக் கண்டானோ, அவ்வகுப்பைச் சார்ந்தபொருளை மீண்டும் காணும்பொழுது, இன்பந்தருவதென்று அப்பொருளைக் கைப்பற்ற அவாவுகின்றான்; ஆகவே, இந்த விருப்பானது அகக்கரணத்தின் தன்மையாம்; அறியப்படும்பொருளாதலால், க்ஷேத்ரமாம். அவ்வண்ணமே, வெறுப்பு(ம் எங்ஙனம் ஒருவன்) எந்த இனத்தைச் சேர்ந்தபொருளைத் துன்பந் தருவதாக அநுபவித்தானோ, அவ்வினத்தைச் சேர்ந்த பொருளைக் காணும்போது, அதனை வெறுக்கின்றான். ஆகவே, இந்த வெறுப்பு அறியப்படும்பொருளாதலால் க்ஷேத்ரமேதான். இன்பமென்பது - நலமாகி, அமைதி பொருந்தி, ஸத்துவகுண வடிவமாய் நிற்பது; அறியப்படும்பொருளாதலால், அவ்வாறு க்ஷேத்ரமேதான், துன்பமென்பது - நிக்குவடிவாயுள்ளது. அறியப்படும் பொருளாதலால், அதுவும் க்ஷேத்ரமாம். சேர்க்கையென்பது - உடம்பு, இந்திரியங்கள் என்றவற்றின் சேர்க்கை. உணர்ச்சியென்பது-ஆத்ம அறிவினுடைய [ஸ்வரூபஞானத்தினுடைய] போலித் தோற்றத் தளதளப்பினால் இடையே வியாபிக்கப்பெற்றதாய், பழுக்கக் காய்ந்த ஓர் உலோ

பிண்டே அக்நிரிவ, ஜ்ஞாநைகாகாரஸ்யாத்மநோऽபிவ்யஞ்ஜிகா சேதநா; ஸா ச க்ஷேத்ரம் ஜ்ஞேயத்வாத் । த்ருதி: யயா அவஸாதம் ப்ராப்தாநி தேஹேந்த்ரியாணி த்ரியந்தே; ஸா ச ஜ்ஞேயத்வாத் க்ஷேத்ரம் । ஸர்வாந்த:கரணதர்மோபலக்ஷணார்த்தம் இச்சாதிக்ரஹணம் । யத: உக்தம் தத் உபஸம்ஹரதி — ஏதத் க்ஷேத்ரம் ஸவிகாரம் ஸஹ விகாரேண மஹதாதிநா உதாஹ்ருதம் உக்தம் ॥ ௬ ॥

யஸ்ய க்ஷேத்ரபேதஜாதஸ்ய ஸம்ஹதி: 'இதம் ஶரீரம் க்ஷேத்ரம்' இதி உக்தம், தத் க்ஷேத்ரம் வ்யாப்தம் மஹாபூதாதிபேதபிந்நம் ப்ருதக்க்ருதம்; க்ஷேத்ரஜ்ஞ: வக்ஷ்யமாணவிஶேஷண: — யஸ்ய ஸ்வபாவஸ்ய க்ஷேத்ரஜ்ஞஸ்ய பரிஜ்ஞாநாத் அம்ருதத்வம் பவதி, தம் 'ஜ்ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி' இத்யாதிநா ஸவிஶேஷணம் ஸ்வயமேவ வக்ஷ்யதி பகவாந் । அதேதாநீம் தஜ்ஜ்ஞாநஸாதநம் குணம் அமாநித்வாதிலக்ஷணம் — யஸ்மிந் ஸதி ஜ்ஞேயவிஜ்ஞாநயோக்ய: அதிக்ருத: பவதி, யத்ரஹித: ஸம்ந்யாஸீ ஜ்ஞாநநிஷ்ட:

---

ஹக்கட்டியிலே நெருப்பு [வெளிப்படுவது] போல, அதில் [தேகேந்திரியச் சேர்க்கையில்] வெளிப்பட்ட அகக்கரணப்போக்கு: [பழுக்கக்காய்ந்த ஓர் உலோஹக்கட்டியிலே நெருப்பு வெளிப்படுவதுபோல, தேகேந்திரியச் சேர்க்கையிலே புத்திவிருத்தி வெளிப்படுகின்றது. நெருப்பு அதிலே வெளிப்பட்டதாய், அவ்வுலோஹக்கட்டியையே நெருப்பென்று கொள்ளும்படிசெய்கின்றது. அவ்வண்ணமே, ஆத்மஅறிவானது, ஸ்வரூபஞானமானது, புத்திவிருத்தியில் வெளிப்பட்டதாய், அப்புத்திவிருத்தியையே ஆத்மாவாக உணர்த்துகின்றது. ஆகவே, ஸ்வரூபஅறிவினுடைய போலித் தோற்றத்தினுல் வியாபிக்கப்பெற்ற அப்புத்திவிருத்திதான் உணர்ச்சியென்பது.—ஆ. இங்கே, "கொள்ளும்படி செய்கின்றது" என்பதும், "உணர்த்துகின்றது" என்பதும் - உபசாரவழக்கு.] அறியப்படும்பொருளாதலால் அதுவும் [அவ்வுணர்ச்சியும்] க்ஷேத்ரமாம். அகக்கரணத்தன்மையனைத்திற்கும் உபலக்ஷணத்திற்காக விருப்பு முதலியவற்றைக் கொள்க; ஏனெனில், கூறப்பட்டுள்ள அதனை முடிக்கிருர் [பகவான் இங்குக் கூறிவந்த க்ஷேத்ரத்தை முடிக்கின்ருராதலின், விருப்பு முதலிய சொற்கள் தமது இனமாகிய நினைப்பு முதலிய அகக்கரணத்தன்மையனைத்தையும் உணர்த்துவதற்காகக் கூறப்பட்டன என்க.—ஆ.] இந்த க்ஷேத்ரமானது மஹத் [புத்தி] முதலான விகாரத்தோடு கூறப்பட்டது. (௬)

ஆத்மஞானத்தைக் கொடுக்கும் ஒழுக்கங்கள்.

எந்த க்ஷேத்ரவேறுபாடுகளெல்லாவற்றினுடைய சேர்க்கையானது இச்சரீரமாகிய க்ஷேத்ரம் (௧௩ - ௧) எனக் கூறப்பட்டதோ, அந்த க்ஷேத்ரமானது மஹாபூதங்கள் முதலிய பிரிவுகளாக வேறுபட்டதாய்த் திண்மைவரை விரித்துரைக்கப்பட்டது (௧௩ - ௫, ௬). க்ஷேத்ரஜ்ஞனுடைய சிறப்பியல்புகள் இனிக் கூறப்படும். வல்லமைபொருந்திய எந்த க்ஷேத்ரஜ்ஞனைப்பற்றிய அறிவினுல் சாகாமை கிடைக்கின்றதோ, அவனைப் பகவான் "அறியவேண்டியது எதுவோ, அதனைக் கூறுவேன்" (௧௩ - ௧௨) என்பதுமுதலாகத் தாமே விசேஷமாய் அருளிச்செய்வர். ஆனுல், இப்பொழுது, அறிவிற்கு ஸாதகமான பணிவுமுதலாகிய ஒழுக்கத்தை (அருளிச்செய்கிருர்). எது இருந்தால் (ஒருவன்) அறியவேண்டியதை அறிதற்குத் தக்கோனுகவும், உரிமையுள்ளவனுகவும் ஆகிருனே; எதனுள் கருத்தூன்றிய துறவியானவன் ஞானநிஷ்டன்

𑌉𑌪𑌦𑌿𑌶𑍍𑌯𑌤𑍇, 𑌤𑌦𑌮𑌾𑌨𑌿𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌂, 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌾𑌧𑌨𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌶𑌬𑍍𑌦𑌵𑌾𑌚𑍍𑌯𑌂, 𑌵𑌿𑌦𑌧𑌾𑌤𑌿 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍—

௭. 𑌅𑌮𑌾𑌨𑌿𑌤𑍍𑌵𑌮𑌦𑌮𑍍𑌭𑌿𑌤𑍍𑌵𑌮𑌹𑌿𑌂𑌸𑌾 𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌾𑌰𑍍𑌜𑌵𑌮𑍍 ।
𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑍋𑌪𑌾𑌸𑌨𑌂 𑌶𑍌𑌚𑌂 𑌸𑍍𑌥𑍈𑌰𑍍𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ॥

𑌅𑌮𑌾𑌨𑌿𑌤𑍍𑌵𑌮𑍍—𑌮𑌾𑌨𑌿𑌨𑌃 𑌭𑌾𑌵𑌃 𑌮𑌾𑌨𑌿𑌤𑍍𑌵𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌶𑍍𑌲𑌾𑌘𑌨𑌂, 𑌤𑌦𑌭𑌾𑌵𑌃 𑌅𑌮𑌾𑌨𑌿𑌤𑍍𑌵𑌮𑍍 । 𑌅𑌦𑌮𑍍𑌭𑌿𑌤𑍍𑌵𑌮𑍍—𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌪𑍍𑌰𑌕𑌟𑍀𑌕𑌰𑌣𑌂 𑌦𑌮𑍍𑌭𑌿𑌤𑍍𑌵𑌂, 𑌤𑌦𑌭𑌾𑌵𑌃 𑌅𑌦𑌮𑍍𑌭𑌿𑌤𑍍𑌵𑌮𑍍 । 𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 𑌅𑌹𑌿𑌂𑌸𑌨𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌮𑍍 𑌅𑌪𑍀𑌡𑌨𑌮𑍍 । 𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌪𑌰𑌾𑌪𑌰𑌾𑌧𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍌 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 । 𑌆𑌰𑍍𑌜𑌵𑌮𑍍 𑌋𑌜𑍁𑌭𑌾𑌵𑌃 𑌅𑌵𑌕𑍍𑌰𑌤𑍍𑌵𑌮𑍍 । 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑍋𑌪𑌾𑌸𑌨𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑌸𑌾𑌧𑌨𑍋𑌪𑌦𑍇𑌷𑍍𑌟𑍁𑌃 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌾𑌦𑌿𑌪𑍍𑌰𑌯𑍋𑌗𑍇𑌣 𑌸𑍇𑌵𑌨𑌮𑍍 । 𑌶𑍌𑌚𑌂 𑌕𑌾𑌯𑌮𑌲𑌾𑌨𑌾𑌂 𑌮𑍃𑌜𑍍𑌜𑌲𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌕𑍍𑌷𑌾𑌲𑌨𑌮𑍍 ; 𑌅𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌮𑌨𑌸𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌕𑍍𑌷𑌭𑌾𑌵𑌨𑌯𑌾 𑌰𑌾𑌗𑌾𑌦𑌿𑌮𑌲𑌾𑌨𑌾𑌮𑌪𑌨𑌯𑌨𑌂 𑌶𑍌𑌚𑌮𑍍 । 𑌸𑍍𑌥𑍈𑌰𑍍𑌯𑌂 𑌸𑍍𑌥𑌿𑌰𑌭𑌾𑌵𑌃, 𑌮𑍋𑌕𑍍𑌷𑌮𑌾𑌰𑍍𑌗𑍇 𑌏𑌵 𑌕𑍃𑌤𑌾𑌧𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌤𑍍𑌵𑌮𑍍 । 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌉𑌪𑌕𑌾𑌰𑌕𑌤𑌯𑌾 𑌆𑌤𑍍𑌮𑌶𑌬𑍍𑌦𑌵𑌾𑌚𑍍𑌯𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑌣𑌸𑌂𑌘𑌾𑌤𑌸𑍍𑌯 𑌵𑌿𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌸𑌨𑍍𑌮𑌾𑌰𑍍𑌗𑍇 𑌏𑌵 𑌨𑌿𑌰𑍋𑌧𑌃 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ॥ ௭ ॥

---

[ஞானவழியிலே நிலைத்தவன்] எனப்படுகின்றானே ; அந்தப் பணிவு முதலான ஒழுக்கத்தைப் பகவான் அருளிச்செய்கிறார் : (அவ்வொழுக்கம்) ஞானத்திற்குக் கருவியாதலால், ஞானம் என்னும்சொல்லால் கூறப்படுவது [அவ்வொழுக்கத்திற்கே ஞானம் என்று பெயர்].

௭. பணிவு, ஒடுக்கவணக்கம், தீங்கின்மை, பொறுமை, நேர்மை, ஆசார்யனைத்தொழுதல், பரிசுத்தம், உறுதியான தன்மை, தன்னடக்கம் (இவை - கைக்கொள்ளவேண்டிய ஒழுக்கங்களாம்).

(மானமென்பது - மறைந்த கர்வம். அதனையுடையவன் - மானி.) மானியின் தன்மை - தற்புகழ்ச்சி. அஃதின்மை - பணிவு. தனது ஒழுக்கத்தை(ப் பெருமைமுதலியவற்றிற்காக)ப் பிரவித்தப்படுத்துதல் - டம்பமுடையவனது இயல்பு. அஃதின்மை - டம்பமில்லாமை = ஒடுக்கவணக்கம். தீங்கின்மை - பிராணிகளை ஹிம்ஸியாமை. பொறுமை - பிறர்பிசகு நேர்ந்தவழி (பிறர் தீங்கு செய்தவழி மனம்) மாறுபடாமை. நேர்மை - நேரான தன்மை, கோணலின்மை [மனத்திலுள்ளபடி வியவகரித்தல், பிறரை வஞ்சித்தலின்மை]. ஆசார்யனைத் தொழுதல் - மோக்ஷத்திற்கு உபாயங்களை உபதேசித்தருளும் ஆசார்யனை, பணிவிடை முதலியன செய்து தொழுதல். பரிசுத்தமென்பது - (வெளிப்பரிசுத்தம், உள்பரிசுத்தம் என இருவகைத்து. அவற்றுள், வெளிப்பரிசுத்தமென்பது) - உடம்புஅழுக்குக்களை மண்ணினாலும், நீரினாலும் கழுவுதல் ; உள்பரிசுத்தமோ - பிரதிகூலத்தைப் பாவிப்பதனால் [உருவம்முதலிய விஷயங்களிலுள்ள தீங்குகளை உற்றுநோக்கும் நோக்கையே பயிற்சி செய்வதனால்] ஆசைமுதலிய மனஅழுக்குக்களைப் போக்குதல். உறுதியான தன்மை - மோக்ஷவழியிலேயே உறுதிசெய்துநிற்றல். தன்னடக்கம் என்பது - தனக்கு [தான் ஈடேறுதற்கு] உதவி செய்வதனால் தான் என்னும் சொல்லால் கூறப்படும் தேகேந்திரியச்சேர்க்கையை அடக்குதல் : இயற்கையாகவே எல்லாவழியிலும் செல்லுகின்ற (தேகேந்திரியங்களை) நல்வழியிலேயே தடுத்து நிறுத்துதல். (ஒருவன் தன்னை ஈடேற்றிக்கொள்ளுதற்குச் சரீரமே முதல்கருவி ; எப்படியெனில்,— சரீரத்தினால் நித்யகர்மங்களை அநுஷ்டிக்க, அதனால் புண்ய முண்டாக, அதனால் பாவம் தேய, அதனால் புத்தி திருந்த, அதனால் ஞானம் பிறக்க, அதனால் முக்திபெறுதலாம் என நோக்கிக்கொள்க). (௭)

𑌕𑌿𑌞𑍍𑌚—

அ. 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌮𑌨𑌹𑌂𑌕𑌾𑌰 𑌏𑌵 𑌚 ।
𑌜𑌨𑍍𑌮𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌜𑌰𑌾𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌦𑍁𑌃𑌖𑌦𑍋𑌷𑌾𑌨𑍁𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 ॥

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑌿𑌷𑍁 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌦𑍃𑌷𑍍𑌟𑍇𑌷𑍁 𑌭𑍋𑌗𑍇𑌷𑍁 𑌵𑌿𑌰𑌾𑌗𑌭𑌾𑌵𑍋 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌮𑍍 । 𑌅𑌨𑌹𑌂𑌕𑌾𑌰𑌃 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌾𑌭𑌾𑌵𑌃 𑌏𑌵 𑌚 । 𑌜𑌨𑍍𑌮𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌜𑌰𑌾𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌦𑍁𑌃𑌖𑌦𑍋𑌷𑌾𑌨𑍁𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍—𑌜𑌨𑍍𑌮 𑌚 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌶𑍍𑌚 𑌜𑌰𑌾 𑌚 𑌵𑍍𑌯𑌾𑌧𑌯𑌶𑍍𑌚 𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑌿 𑌚 𑌤𑍇𑌷𑍁 𑌜𑌨𑍍𑌮𑌾𑌦𑌿𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑍍𑌤𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍇𑌕𑌂 𑌦𑍋𑌷𑌾𑌨𑍁𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 । 𑌜𑌨𑍍𑌮𑌨𑌿 𑌗𑌰𑍍𑌭𑌵𑌾𑌸𑌯𑍋𑌨𑌿𑌦𑍍𑌵𑌾𑌰𑌨𑌿𑌃𑌸𑌰𑌣𑌂 𑌦𑍋𑌷𑌃 । 𑌤𑌸𑍍𑌯 𑌅𑌨𑍁𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑌾𑌲𑍋𑌚𑌨𑌮𑍍 । 𑌤𑌥𑌾 𑌮𑍃𑌤𑍍𑌯𑍌 𑌦𑍋𑌷𑌾𑌨𑍁𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 । 𑌤𑌥𑌾 𑌜𑌰𑌾𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌶𑌕𑍍𑌤𑌿𑌤𑍇𑌜𑍋𑌨𑌿𑌰𑍋𑌧𑌦𑍋𑌷𑌾𑌨𑍁𑌦𑌰𑍍𑌶𑌨𑌂, 𑌪𑌰𑌿𑌭𑍂𑌤𑌤𑌾 𑌚𑍇𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌷𑍁 𑌶𑌿𑌰𑍋𑌰𑍋𑌗𑌾𑌦𑌿𑌷𑍁 𑌦𑍋𑌷𑌾𑌨𑍁𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 । 𑌤𑌥𑌾 𑌦𑍁𑌃𑌖𑍇𑌷𑍁 𑌆𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾𑌧𑌿𑌭𑍌𑌤𑌿𑌕𑌾𑌧𑌿𑌦𑍈𑌵𑌿𑌕𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑍇𑌷𑍁 ॥

𑌅𑌥 𑌵𑌾— 𑌦𑍁𑌃𑌖𑌮𑍇𑌵 𑌦𑍋𑌷𑌃 𑌦𑍁𑌃𑌖𑌦𑍋𑌷𑌃 𑌤𑌸𑍍𑌯 𑌜𑌨𑍍𑌮𑌾𑌦𑌿𑌷𑍁 𑌪𑍂𑌰𑍍𑌵𑌵𑌤𑍍 𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍—𑌦𑍁𑌃𑌖𑌂 𑌜𑌨𑍍𑌮, 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃, 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌜𑌰𑌾, 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌵𑍍𑌯𑌾𑌧𑌯𑌃 । 𑌦𑍁𑌃𑌖𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌜𑌨𑍍𑌮𑌾𑌦𑌯𑌃 𑌦𑍁𑌃𑌖𑌮𑍍, 𑌨 𑌪𑍁𑌨𑌃 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇𑌣𑍈𑌵 𑌦𑍁𑌃𑌖𑌮𑌿𑌤𑌿 ॥

---

மேலும்,

அ. இந்திரிய விஷயங்களின்மேல் அவாவின்மையும், அஹங்காரமின்மையும், பிறப்பு, இறப்பு, மூப்பு, பிணி, துன்பம் என்பனவற்றிலே தீமையை உணர்தலும் (ஞானத்திற்கு அந்தரங்கமான வழிகளாம்.)

இந்திரியவிஷயங்களின்மேல் அவாவின்மை - ஓசைமுதலிய இம்மைமறுமைப் போகங்களிலே ஆசையின்மை. (தற்புகழ்ச்சி இல்லையாயினும், "நான் மேலானவன்" என்று மனத்திலுதிக்கும் செருக்கு - அஹங்காரமென்பது. அஃதின்மை) - அஹங்காரமின்மை. பிறப்பு......உணர்தல் - பிறப்புமுதலாகத் துன்பம் ஈறாகவுள்ளவற்றில் ஒவ்வொன்றிலும் தீங்கைக் காணுதல். கருப்பையினுள் வாழ்தலும், யோநியின்வழியாக வெளிவருதலும் பிறப்பிலே தீங்கு ; அதனைக் காணுதல் - அதனை ஆலோசித்தல். அவ்வாறே, இறப்பில் (எல்லா மர்மஸ்தாநங்களையும் அறுத்தலாகிய) தீங்கை ஆலோசித்தல். அவ்வாறே, மூப்பில் அறிவு தடுமாறலும், வலிமை குன்றுதலும், ஒளிமழுங்குதலுமாகிய தீங்கை ஆலோசித்தல் ; அலக்ஷ்யமாக ஏளனஞ்செய்யப்பெறுதலும் (மூப்பிலே தீங்கு) என்க. அவ்வண்ணமே, தலைவலிமுதலிய நோய்களிலே தீங்கை ஆலோசித்தல். அவ்வாறே, தன்னைப்பற்றியும், பிறவுயிர்களைப்பற்றியும், தெய்வத்தைப்பற்றியும் வரும் துன்பங்களிலே (தீங்கை ஆலோசித்தல்).

அல்லது, (வேறுவிதமாக உரைகொள்ளலாம்):—துன்பங்களே தீங்கு ; அதனைப் பிறப்பு முதலியவற்றில் முன்போல ஆலோசித்தல் ; பிறப்பு - துன்பமாம் : இறப்பு - துன்பமாம் : மூப்பு - துன்பமாம் : நோய்கள் - துன்பமாம். பிறப்பு முதலியன துன்பத்திற்குக் காரணமாதலால் துன்பங்களேயன்றி தமது வடிவமாகவே துன்பங்களல்ல [அவற்றின்வடிவமே துன்பவடிவமன்று] என்க.

ஏவம் ஜந்மாதிஷு து:கதோஷாநுதர்சநாத் தேஹேந்த்ரியவிஷய-போகேஷு வைராக்யம் உபஜாயதே । தத: ப்ரத்யகாத்மநி ப்ரவ்ருத்தி: கரணா-நாம் ஆத்மதர்சநாய । ஏவம் ஜ்ஞாநஹேதுத்வாத் ஜ்ஞாநம் உச்யதே ஜந்மாதிது:க-தோஷாநுதர்சநம் ॥ ௮ ॥

கிஞ்ச—

௯. அஸக்திரநபிஷ்வங்க: புத்ரதாரக்ருஹாதிஷு ।
நித்யம் ச ஸமசித்தத்வம் இஷ்டாநிஷ்டோபபத்திஷு ॥

அஸக்தி:—ஸக்தி: ஸங்கநிமித்தேஷு விஷயேஷு ப்ரீதிமாத்ரம், ததபாவ: அஸக்தி: । அநபிஷ்வங்க: அபிஷ்வங்காபாவ: । அபிஷ்வங்கோ நாம ஸக்திவிசேஷ ஏவ அநந்யாத்மபாவநாலக்ஷண: ; யதா அந்யஸ்மிந் ஸுகிநி து:கிநி வா "அஹமேவ ஸுகீ து:கீ ச," ஜீவதி ம்ருதே வா "அஹமேவ ஜீவாமி மரிஷ்யாமி ச" இதி । க்வ இதி? ஆஹ—புத்ரதாரக்ருஹாதிஷு புத்ரேஷு தாரேஷு க்ருஹேஷு—ஆதிக்ரஹணாத் அந்யேஷ்வபி அத்யந்தேஷ்டேஷு தாஸவர்காதிஷு । தச்ச உப-யம் ஜ்ஞாநார்த்தத்வாத் ஜ்ஞாநம் உச்யதே । நித்யம் ச ஸமசித்தத்வம் துல்யசித்ததா—

---

இவ்வாருக, பிறப்புமுதலியவற்றிலே துன்பமென்னும்தீங்கை உணர்வதனுல் தேகம், இந்திரியங்கள், விஷயங்கள் இவற்றினுடைய போகங்களின்மேல் அவாவின்மை பிறக்கின்றது. அதனுல் இந்திரியங்கள் ஆத்மாவைக் காணும்பொருட்டு உள்ளேயுள்ள ஆத்மாவை நோக்கிச் செல்லுதல் (கூடும்). இவ்வாருக, பிறப்புமுதலியவற்றில் துன்பமென்னும்தீங்கை உணர்தல் ஞானத்தைத்தருவதாதலால் ஞானம் எனப்படுகின்றது. (௮)

அன்றியும்,

௯. மக்கள் மனைவி வீடு முதலானவர்மீது பற்றின்மையும், அபிமானமின்மையும், வேண்டியனவும் வேண்டாதனவும் வருவதிலே எப்பொழுதும் ஒரேமனமுள்ள தன்மையும் (ஞானத்திற்கு அந்தரங்கமான கருவிகளாம்).

பற்று என்பது - பற்றுக்குக் காரணமான பொருள்களிலே பிரியம்மாத்திரம். அஃதின்மை - பற்றின்மை. அபிமானமென்பது - வேருகாத தன்னைப் பாவித்தலாகிய [பற்றுவைக்கப்பட்டபொருளும் தானும் ஒன்றெனப்பாவித்தலாகிய] மிகுதியான ஓர் வகைப் பற்றேதான். உதாரணமாக, வேருெருவன் இன்பத்தையேனும் துன்பத்தையேனும் உடையவனுயிருக்குமளவிலே, "நானே இன்பத்தையுடையவன், நானே துன்பத்தையுடையவன்" (என்பதையும், வேருெருவன்) வாழுமளவிலாயினும், சாகுமளவிலாயினும், "நானே வாழ்கின்றேன், நானே சாகின்றேன்" என்பதை(யும் காண்க, இத்தகைய பற்றின்மை - அபிமானமின்மை).—எங்கே என்பது? —கூறுகிருர்: —மக்கள், மனைவி, வீடு முதலானேர்மீது. "முதலானவர்" என்றதனுல் - மிகவும் பிரியமான மற்றைய வேலைக்காரஜனம் முதலானேரிடத்தும் என்க. அவையிரண்டும் [பற்றின்மையும், அபிமானமின்மையும்] ஞானத்திற்குப் பயன்படுதலால் ஞானம் எனப்படுகின்றன. எப்பொழுதும் ஒரேமனமுள்ளதன்மை எதிலே என்பது? —வேண்டியனவும் வேண்

𑌕𑍍𑌵 ?—𑌇𑌷𑍍𑌟𑌾𑌨𑌿𑌷𑍍𑌟𑍋𑌪𑌪𑌤𑍍𑌤𑌿𑌷𑍁 𑌇𑌷𑍍𑌟𑌾𑌨𑌾𑌂 𑌅𑌨𑌿𑌷𑍍𑌟𑌾𑌨𑌾𑌂 𑌚 𑌉𑌪𑌪𑌤𑍍𑌤𑌯𑌃 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌯𑌃 𑌤𑌾𑌸𑍁 𑌇𑌷𑍍𑌟𑌾𑌨𑌿𑌷𑍍𑌟𑍋𑌪𑌪𑌤𑍍𑌤𑌿𑌷𑍁 𑌇𑌷𑍍𑌟𑍋𑌪𑌪𑌤𑍍𑌤𑌿𑌷𑍁 𑌨 𑌹𑍃𑌷𑍍𑌯𑌤𑌿, 𑌨 𑌕𑍁𑌪𑍍𑌯𑌤𑌿 𑌚 𑌅𑌨𑌿𑌷𑍍𑌟𑍋𑌪𑌪𑌤𑍍𑌤𑌿𑌷𑍁 । 𑌤𑌚𑍍𑌚 𑌏𑌤𑌤𑍍 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌸𑌮𑌚𑌿𑌤𑍍𑌤𑌤𑍍𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 ॥௯॥

𑌕𑌿𑌞𑍍𑌚—

௧௦. 𑌮𑌯𑌿 𑌚𑌾𑌨𑌨𑍍𑌯𑌯𑍋𑌗𑍇𑌨 𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍀 ।
𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌦𑍇𑌶𑌸𑍇𑌵𑌿𑌤𑍍𑌵𑌮𑌰𑌤𑌿𑌰𑍍𑌜𑌨𑌸𑌂𑌸𑌦𑌿 ॥

𑌮𑌯𑌿 𑌚 𑌈𑌶𑍍𑌵𑌰𑍇 𑌅𑌨𑌨𑍍𑌯𑌯𑍋𑌗𑍇𑌨—𑌅𑌪𑍃𑌥𑌕𑍍𑌸𑌮𑌾𑌧𑌿𑌨𑌾 “𑌨 𑌅𑌨𑍍𑌯𑍋 𑌭𑌗𑌵𑌤𑍋 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌾𑌤𑍍 𑌪𑌰𑌃 𑌅𑌸𑍍𑌤𑌿, 𑌅𑌤𑌃 𑌸 𑌏𑌵 𑌨𑌃 𑌗𑌤𑌿𑌃” 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌾 𑌅𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍀 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌅𑌨𑌨𑍍𑌯𑌯𑍋𑌗𑌃, 𑌤𑍇𑌨 𑌭𑌜𑌨𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌃 𑌨 𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌰𑌣𑌶𑍀𑌲𑌾 𑌅𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍀, 𑌸𑌾 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 । 𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌦𑍇𑌶𑌸𑍇𑌵𑌿𑌤𑍍𑌵𑌂, 𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌃 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑌃 𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑍇𑌣 𑌵𑌾 𑌅𑌶𑍁𑌚𑍍𑌯𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌸𑌰𑍍𑌪𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰𑌾𑌦𑌿𑌭𑌿𑌶𑍍𑌚 𑌰𑌹𑌿𑌤𑌃 𑌅𑌰𑌣𑍍𑌯𑌨𑌦𑍀𑌪𑍁𑌲𑌿𑌨𑌦𑍇𑌵𑌗𑍃𑌹𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑍋 𑌦𑍇𑌶𑌃, 𑌤𑌂 𑌸𑍇𑌵𑌿𑌤𑍁𑌂 𑌶𑍀𑌲𑌮𑌸𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌦𑍇𑌶𑌸𑍇𑌵𑍀, 𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌵𑌃 𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌦𑍇𑌶𑌸𑍇𑌵𑌿𑌤𑍍𑌵𑌮𑍍 ‘𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑍇 𑌹𑌿 𑌦𑍇𑌶𑍇 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌪𑍍𑌰𑌸𑍀𑌦𑌤𑌿’ । 𑌅𑌤𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾𑌦𑌿𑌭𑌾𑌵𑌨𑌾 𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑍇 𑌸𑌞𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 । 𑌅𑌤𑌃 𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌦𑍇𑌶𑌸𑍇𑌵𑌿𑌤𑍍𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌰𑌤𑌿𑌃 𑌅𑌰𑌮𑌣𑌂 𑌜𑌨𑌸𑌂𑌸𑌦𑌿, 𑌜𑌨𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌾𑌨𑌾𑌂 𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌶𑍂𑌨𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑌵𑌿𑌨𑍀𑌤𑌾𑌨𑌾𑌂 𑌸𑌂𑌸𑌤𑍍 𑌸𑌮𑌵𑌾𑌯𑌃 𑌜𑌨𑌸𑌂-

---

டாதனவும் வருவதிலே. வேண்டியவை வருவதிலே மகிழ்வதில்லை; வேண்டாதவை வருவதிலேயும் மனங்கொதிப்பதில்லை. ஆதலால், எப்பொழுதும் இந்த ஒரேமனமுள்ள தன்மை ஞான(ஸாதந)மாம். (௯)

இன்னும்,

௧௦. அநந்யயோகத்தினால் என்னிடத்துப் பிறழாதபக்தியும், தனிமையான இடத்தைச் சார்பவனாதலும், ஜனக்கூட்டத்தில் அருவருப்பும் (ஞானத்திற்கு ஸாதநங்களாம்).

என்னிடத்து - ஈச்வரனிடத்து. அநந்ய யோகமென்பது - வேறுநினைப்பில்லாமை, ஒரேஸமாதி : (அதாவது,) “ பகவான் வாஸுதேவனைக்காட்டிலும் வேறொருவன் இல்லை ; ஆதலால், அவனேதான் நமக்கு அடைக்கலம் ” என இவ்வாறு நிச்சயமாயுள்ள பிறழாதபுத்தி. அதனால் (பகவானைத்) தொழுதல் - பிறழாத பக்தி. அதுவும் ஞான (ஸாதந)மாம். இயற்கையினாலாயினும், (மெழுகிப்பெருக்கிச்) சுத்திசெய்வதனாலாயினும் அசுத்தம்முதலியன இல்லாததும், பாம்பு திருடன் புலி இவர்களினின்றும் பயம்முதலியன இல்லாததுமான வநம்,ஆற்றுமணல், தேவாலயம் முதலியது - தனிமையான இடம். அதனைச் சார்பவனாதல் - அதனைச் சாருந்தன்மையனாதல். தனிமையான இடத்திலன்றோ மனம் தெளிகின்றது ; ஆகவே, ஆத்மாமுதலியதைத் தியானித்தல் தனிமையிலே நன்கு உண்டாகின்றது. ஆதலால், தனிஇடத்தைச் சார்பவனாதல் ஞானம் எனப்படுகின்றது. ஜனக்கூட்டமென்பது - (இங்கே,) சீர்திருந்திய அறிவில்லாதவராய்ச் சிறியோரான [ஒழுங்கில்லாத] ஸாமான்னிய ஜனங்களின் கூட்டம் ; சீர்திருந்

सत् ; न संस्कारवतां विनीतानां संसत्, तस्याः ज्ञानोपकारकत्वात् । अतः प्राकृतजनसंसदि अरतिः ज्ञानार्थत्वात् ज्ञानम् ॥ ௧௦ ॥

किञ्च—

௧௧. अध्यात्मज्ञाननित्यत्वं तत्त्वज्ञानार्थदर्शनम् ।
एतज्ज्ञानमिति प्रोक्तमज्ञानं यदतोऽन्यथा ॥

अध्यात्मज्ञाननित्यत्वम् आत्मादिविषयं ज्ञानम् अध्यात्मज्ञानं, तस्मिन् नित्यभावः नित्यत्वम् । अमानित्वादीनां ज्ञानसाधनानां भावनापरिपाकनिमित्तं तत्त्वज्ञानं, तस्य अर्थः मोक्षः संसारोपरमः; तस्य आलोचनं तत्त्वज्ञानार्थदर्शनम् ; तत्त्वज्ञानफलालोचने हि तत्साधनानुष्ठाने प्रवृत्तिः स्यादिति । एतत् अमानित्वादि तत्त्वज्ञानार्थदर्शनान्तम् उक्तं ज्ञानम् इति प्रोक्तं, ज्ञानार्थत्वात् । अज्ञानं यत् अतः अस्मात् यथोक्तात् अन्यथा विपर्ययेण—मानित्वं दम्भित्वं हिंसा अक्षान्तिः अनार्जवम् इत्यादि अज्ञानं विज्ञेयं परिहरणाय, संसारस्य प्रवृत्तिकारणत्वात् इति ॥ ௧௧ ॥

यथोक्तेन ज्ञानेन ज्ञातव्यं किम् ? इत्याकाङ्क्षायामाह—'ज्ञेयं यत्तत्' इत्यादिना—

---

திய அறிவுடையவராய் ஒழுக்குள்ளவரது கூட்டமன்று ; ஏனெனில், (அது) ஞானத்திற்கு உதவிசெய்யுமென்க. ஆகவே, ஸாமான்னிய ஜனக்கூட்டத்தில் அருவருப்பானது ஞானத்திற்குப் பயன்படுதலால் ஞான(ஸாதந)மாம். (௧௦)

மற்றும்,

௧௧. ஆத்மாவைப்பற்றிய அறிவிலே எப்பொழுதும் நிற்றலும், உண்மையறிவின் பயனை நோக்குதலும் (ஞானத்திற்கு ஸாதநமாம்). இது ஞானமென்று கூறப்பட்டது. இதனினும் வேறாக எது உள்ளதோ, (அது) அஜ்ஞானமாம்.

ஆத்மாவைப்பற்றிய அறிவிலே எப்பொழுதும் நிற்றல் - ஆத்மாமுதலியவற்றைப் பற்றிய அறிவிலே எப்பொழுதும் நிலைத்துநிற்றல். உண்மையறிவானது, பணிவு (௧௩-௭) முதலான ஞானஸாதநங்களுடைய பயிற்சியின் பரிபக்குவத்தினால் வருவது. அதனுடைய பயன் - மோக்ஷம், ஸம்ஸாரம் ஒழிதல் ; அதனை ஆலோசித்தல் - உண்மையறிவின் பயனை நோக்குதல் என்பது. உண்மையறிவின் பயனை ஆலோசிக்குமளவிலன்றோ அதன் ஸாதநங்களை அநுஷ்டிப்பதில் தலைப்படுதல் கூடும் ; ஆகவே, (உண்மையறிவின் பயனை ஆலோசித்தல் பயனுடைத்தென்க). "பணிவு" முதலாக "உண்மையறிவின்பயனைநோக்குதல்" ஈறாகக் கூறப்பெற்ற இது ஞானத்திற்குப் பயன்படுதலால் ஞானம் எனப்பட்டது. கீழ்க்கூறிய இதற்கு மாறான செருக்குடைமை, டம்பமுடைமை, ஹிம்ஸை, பொறுமையின்மை, நேர்மையின்மை முதலியன ஸம்ஸாரம் உண்டாதற்குக் காரணமாதலால், (அவற்றை) நீக்கவேண்டி (அவை) அஜ்ஞானமென்று அறிக என்பதாம். (௧௧)

அறியவேண்டியபொருள் ப்ரஹ்மம்.

மேற்கூறிய ஞானத்தினால் [அறிவினால்] அறியவேண்டியபொருள் யாது?— என வேண்டிநிற்குமிடத்து "அறியவேண்டியபொருள்" (௧௩-௧௨) என்பது முதலாக (அதனைக்) கூறுகிறார் :

𑌨𑌨𑍁 𑌯𑌮𑌾𑌃 𑌨𑌿𑌯𑌮𑌾𑌶𑍍𑌚 𑌅𑌮𑌾𑌨𑌿𑌤𑍍𑌵𑌾𑌦𑌯𑌃 । 𑌨 𑌤𑍈𑌃 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌯𑌤𑍇 । 𑌨 𑌹𑌿 𑌅𑌮𑌾𑌨𑌿𑌤𑍍𑌵𑌾𑌦𑌿 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌃 𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑌕𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌮𑍍 । 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑍈𑌵 𑌚, 𑌯𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂, 𑌤𑌦𑍇𑌵 𑌤𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑍇𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑌕𑌂 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 । 𑌨 𑌹𑌿 𑌅𑌨𑍍𑌯𑌵𑌿𑌷𑌯𑍇𑌣 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 𑌉𑌪𑌲𑌭𑍍𑌯𑌤𑍇, 𑌯𑌥𑌾 𑌘𑌟𑌵𑌿𑌷𑌯𑍇𑌣 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌅𑌗𑍍𑌨𑌿𑌃 ॥

𑌨𑍈𑌷 𑌦𑍋𑌷𑌃, 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌹𑌿 𑌅𑌵𑍋𑌚𑌾𑌮 ; 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌹𑌕𑌾𑌰𑌿𑌕𑌾𑌰𑌣𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 ॥

௧௨. 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌯𑌤𑍍𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾𑌽𑌮𑍃𑌤𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 ।
𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌤𑍍𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨 𑌸𑌤𑍍𑌤𑌨𑍍𑌨𑌾𑌸𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑌵𑍍𑌯𑌂 𑌯𑌤𑍍 𑌤𑌤𑍍 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌪𑍍𑌰𑌕𑌰𑍍𑌷𑍇𑌣 𑌯𑌥𑌾𑌵𑌤𑍍 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 । 𑌕𑌿𑌂𑌫𑌲𑌂 𑌤𑌤𑍍 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌰𑍋𑌚𑌨𑍇𑌨 𑌶𑍍𑌰𑍋𑌤𑍁𑌃 𑌅𑌭𑌿𑌮𑍁𑌖𑍀𑌕𑌰𑌣𑌾𑌯 𑌆𑌹—𑌯𑌤𑍍 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌅𑌮𑍃𑌤𑌮𑍍 𑌅𑌶𑍍𑌨𑍁𑌤𑍇, 𑌨 𑌪𑍁𑌨𑌃 𑌮𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌤𑍍 𑌆𑌦𑌿𑌃 𑌅𑌸𑍍𑌯 𑌅𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌆𑌦𑌿𑌮𑌤𑍍, 𑌨 𑌆𑌦𑌿𑌮𑌤𑍍 𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌤𑍍—𑌕𑌿𑌂 𑌤𑌤𑍍?—𑌪𑌰𑌂 𑌨𑌿𑌰𑌤𑌿𑌶𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮, ‘𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑍍’ 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌮𑍍 ॥

𑌅𑌤𑍍𑌰 𑌕𑍇𑌚𑌿𑌤𑍍 ‘𑌅𑌨𑌾𑌦𑌿 𑌮𑌤𑍍𑌪𑌰𑌮𑍍’ 𑌇𑌤𑌿 𑌪𑌦𑌂 𑌛𑌿𑌨𑌦𑌨𑍍𑌤𑌿, 𑌬𑌹𑍁𑌵𑍍𑌰𑍀𑌹𑌿𑌣𑌾 𑌉𑌕𑍍𑌤𑍇 𑌅𑌰𑍍𑌥𑍇 𑌮𑌤𑍁𑌪𑌃 𑌆𑌨𑌰𑍍𑌥𑌕𑍍𑌯𑌮𑍍 𑌅𑌨𑌿𑌷𑍍𑌟𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿 । 𑌅𑌰𑍍𑌥𑌵𑌿𑌶𑍇𑌷𑌂 𑌚 𑌦𑌰𑍍𑌶𑌯𑌨𑍍𑌤𑌿—𑌅𑌹𑌂 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌾𑌖𑍍𑌯𑌾 𑌪𑌰𑌾 𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌯𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍 𑌮𑌤𑍍𑌪𑌰𑌮𑍍 𑌇𑌤𑌿 ॥

---

(ஆக்ஷேபம்) :—ஆயின், பணிவுமுதலியன யம நியமங்களாம் [ஓர்வகையான தன்னடக்கமாம்]. அவற்றால் அறியவேண்டியபொருள் அறியப்படுவதில்லை. பணிவு முதலியன ஒருபொருளை நிர்ணயிப்பதாக [அறிவதாக]க் காணப்படவில்லை. அன்றியும், எந்தவிடத்திலும், அறிவு எதனைப்பற்றியதோ, அந்த அறியவேண்டியபொருளை அதுதான் [அந்த அறிவுதான்] அறிவதாகக் காணப்படுகின்றது. ஒன்றைப்பற்றிய அறிவினால் வேறொன்று அறியப்படமாட்டாது; உதாரணமாக, குடத்தைப்பற்றிய அறிவினால் தீ(அறியப்படமாட்டாது).

(ஸமாதானம்) :—இது குற்றமன்று; ஏனெனில், (பணிவுமுதலாயின) ஞானத்தைத் தருவனவாதலால், ஞானம் எனப்படுகின்றன எனக் கூறியுள்ளோம்: (அவை) ஞானத்திற்குத் துணைக்காரணமாதலாலும் (ஞானம் என்க):

௧௨. அறியவேண்டியபொருள் எதுவோ, (ஒருவன்) எதனை அறிந்து சாகாமையை அடைகின்றானோ, அதனை விரித்துரைப்பேன். பரப்ரஹ்மமானது ஆதியில்லாதது; அது ஸத் [உள்ளது] எனப்படுவதில்லை, அஸத் [இல்லது] எனப்படுவதில்லை.

அறியவேண்டியபொருள் எதுவோ, அதனை உள்ளபடி தெளிவாக உரைப்பேன்.—கேட்பவனுக்கு ருசியை உண்டாக்கி, ஆவலோடு கேட்கும்படி செய்தற்பொருட்டு அதற்குப் பயன் இன்னதென்று அருளிச்செய்கிறார் :—அறியவேண்டிய பொருளை அறிந்து (ஒருவன்) சாகாமையைப் பெறுகிறான்: மீளவும் இறப்பதில்லை என்பது பொருள். ஆதியில்லாதது.—அது யாது?—யாவற்றினும் மேம்பட்ட ப்ரஹ்மம், “ அறியவேண்டியபொருள் ” என்று பிரகிருதத்தில் பேசப்படுவது.

அர்த்தத்தை அன்மொழித்தொகை உணர்த்த, 𑌮𑌤𑍁𑌪𑍍 என்னும்விகுதி அர்த்தமின்றி நிற்றலாகிய குற்றம் வரும் என்று, இதில் சிலர் “𑌅𑌨𑌾𑌦𑌿,” “𑌮𑌤𑍍𑌪𑌰𑌮𑍍” எனப் பதம் பிரிக்கிறார்கள். “(ப்ரஹ்மம்) முதலில்லாதது; நான் அதனுடைய வாஸுதேவனென்னும் பராசக்தி ” என அர்த்தவேறுபாட்டையும் காட்டுகிறார்கள்.

𑌸𑌤𑍍𑌯𑌮𑍍 𑌏𑌵𑌂 𑌨 𑌅𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌤𑌰𑌤𑍍𑌵𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌯𑌥𑌾𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌃 𑌚𑍇𑌤𑍍 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿 । 𑌨 𑌤𑍁 𑌯𑌥𑌾𑌶𑍍𑌰𑍁𑌤𑌿 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌶𑍇𑌷𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑍇𑌨𑍈𑌵 𑌵𑌿𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌪𑌯𑌿𑌷𑌿𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 ‘𑌨 𑌸𑌤𑍍𑌤𑌨𑍍𑌨𑌾𑌸𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇’ 𑌇𑌤𑌿 । 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑌤𑍍𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌨𑌂, 𑌵𑌿𑌶𑍇𑌷𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑌶𑍍𑌚 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌮𑍍 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌮𑌤𑍁𑌪𑌾 𑌬𑌹𑍁𑌵𑍍𑌰𑍀𑌹𑌿𑌣𑌾 𑌸𑌮𑌾𑌨𑌾𑌰𑍍𑌥𑌤𑍍𑌵𑍇𑌽𑌪𑌿 𑌪𑍍𑌰𑌯𑍋𑌗𑌃 𑌶𑍍𑌲𑍋𑌕𑌪𑍂𑌰𑌣𑌾𑌰𑍍𑌥𑌃 ॥

𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌫𑌲𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌰𑍋𑌚𑌨𑍇𑌨 𑌅𑌭𑌿𑌮𑍁𑌖𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 𑌆𑌹— 𑌨 𑌸𑌤𑍍 𑌤𑌤𑍍 𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇, 𑌨 𑌅𑌪𑌿 𑌅𑌸𑌤𑍍 𑌤𑌤𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

𑌨𑌨𑍁 𑌮𑌹𑌤𑌾 𑌪𑌰𑌿𑌕𑌰𑍇𑌣 𑌉𑌦𑍍𑌘𑍁𑌷𑍍𑌯 ‘𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿’ 𑌇𑌤𑌿, 𑌅𑌨𑌨𑍁𑌰𑍂𑌪𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑌂 ‘𑌨 𑌸𑌤𑍍𑌤𑌨𑍍𑌨𑌾𑌸𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇’ 𑌇𑌤𑌿 ॥

𑌨, 𑌅𑌨𑍁𑌰𑍂𑌪𑌮𑍇𑌵 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌕𑌥𑌮𑍍?—𑌸𑌰𑍍𑌵𑌾𑌸𑍁 𑌹𑌿 𑌉𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 ‘𑌨𑍇𑌤𑌿 𑌨𑍇𑌤𑌿’ ‘𑌅𑌸𑍍𑌥𑍂𑌲𑌮𑌨𑌣𑍁’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌵𑌿𑌶𑍇𑌷𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑍇𑌨𑍈𑌵 𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌶𑍍𑌯𑌤𑍇 “𑌨 𑌇𑌦𑌂 𑌤𑌤𑍍” 𑌇𑌤𑌿, 𑌵𑌾𑌚𑌃 𑌅𑌗𑍋𑌚𑌰𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 ॥

---

(ஆனால், நாம் கூறுவோம்): —உண்மை; அர்த்தம் கூடுமாயின், கூறினது கூறல் இவ்வாறாக ஆகாது. மற்று, அர்த்தம் அமையாது; “அது ஸத் எனப்படுவ தில்லை, அஸத் எனப்படுவதில்லை” என எல்லாச் சிறப்பியல்புகளையும் மறுத்தே ப்ரஹ்மத்தை விவரமாயுணர்த்தப்புகுந்தமையின் என்க. (தனக்கென்றுரிய ஓர்வகைச்) சிறப்புச்சக்தியையுடையதாக ப்ரஹ்மத்தை உணர்த்துதலும், சிறப்பியல்புகளை மறுத்தலும் என்பவை (தம்முள்)விரோதமாம். ஆகவே, அன்மொழித்தொகையொடு 𑌮𑌤𑍁𑌪𑍍 என்னும்விகுதிக்கு அர்த்தம் ஸமமாகஇருந்தாலும், (அவ்விகுதியை) வழங்கினது-சுலோகத்தை நிரப்புதற்கானதாம் என்க.

ப்ரஹ்மம் சொல்லிற்கும், நினைப்பிற்கும் எட்டாதது.

சாகாமை என்னும் பயனையுடைய அறியவேண்டியபொருளை யான் கூறுகின்றேன் என்று (கேட்பவனுக்கு) ருசியை உண்டாக்கி, ஆவலோடு கேட்கும்படிசெய்து சொல்லுகிறார்:—அந்த அறியவேண்டியபொருள் ஸத் எனப்படுவதில்லை, அது அஸத் எனப்படுவதும் இல்லை.

(ஆக்ஷேபம்):—அப்படியானால், “அறியவேண்டியபொருளைத் தெளிவாகக் கூறுவேன்” எனத் தொண்டையினின்றும் பெரிய சத்தமாக உரத்துக் கத்தி, பின்பு, “அது ஸத் எனப்படுவதில்லை, அஸத் எனப்படுவதில்லை” எனக்கூறுவது ஏற்கத்தக்கதன்று.

(ஸமாதானம்):—அப்படியன்று; ஏற்கத்தக்கதேதான் கூறப்பட்டது.—எப்படி? —அறியவேண்டியபொருளாகிய ப்ரஹ்மமானது எல்லா உபநிஷத்துக்களிலும் “இப்படியன்று, இப்படியன்று” (பி-உ-ங-சு), “ஸ்தூலமன்று, அணு அன்று” (பி-ங-அ-அ)என இவைபோன்ற சிறப்பியல்புகளை மறுத்தே,“அது இது அன்று” எனக்குறிப்பிட்டுக்காட்டி உணர்த்தப்படுகின்றது; சொல்லுக்கு எட்டாததலின்.

𑌨𑌨𑍁 𑌤𑌤𑍍 𑌸𑌤𑍍, 𑌯𑌤𑍍 𑌵𑌸𑍍𑌤𑍁 ‘𑌅𑌸𑍍𑌤𑌿’𑌶𑌬𑍍𑌦𑍇𑌨 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌥 𑌅𑌸𑍍𑌤𑌿𑌶𑌬𑍍𑌦𑍇𑌨 𑌨𑍋𑌚𑍍𑌯𑌤𑍇, 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌤𑌤𑍍 𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑍍 । 𑌵𑌿𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌂 𑌚—“𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌤𑌤𑍍” “𑌅𑌸𑍍𑌤𑌿𑌶𑌬𑍍𑌦𑍇𑌨 𑌨𑍋𑌚𑍍𑌯𑌤𑍇” 𑌇𑌤𑌿 𑌚 ॥

𑌨 𑌤𑌾𑌵𑌤𑍍 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿, 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 ॥

𑌨𑌨𑍁 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌃 𑌅𑌸𑍍𑌤𑌿𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌨𑍁𑌗𑌤𑌾𑌃 𑌏𑌵 । 𑌤𑌤𑍍𑌰 𑌏𑌵𑌂 𑌸𑌤𑌿 𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑌪𑌿 𑌅𑌸𑍍𑌤𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌨𑍁𑌗𑌤𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌵𑌿𑌷𑌯𑌂 𑌵𑌾 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌨𑍁𑌗𑌤𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌵𑌿𑌷𑌯𑌂 𑌵𑌾 ॥

𑌨, 𑌅𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌉𑌭𑌯𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌨𑍁𑌗𑌤𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌾𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌯𑌦𑍍𑌧𑌿 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑌮𑍍𑌯𑌂 𑌵𑌸𑍍𑌤𑍁 𑌘𑌟𑌾𑌦𑌿𑌕𑌂, 𑌤𑌤𑍍 𑌅𑌸𑍍𑌤𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌨𑍁𑌗𑌤𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌵𑌿𑌷𑌯𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌨𑍁𑌗𑌤𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌵𑌿𑌷𑌯𑌂 𑌵𑌾 । 𑌇𑌦𑌂 𑌤𑍁 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌅𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌶𑌬𑍍𑌦𑍈𑌕𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌗𑌮𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌨 𑌘𑌟𑌾𑌦𑌿𑌵𑌤𑍍 𑌉𑌭𑌯𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌨𑍁𑌗𑌤𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌵𑌿𑌷𑌯𑌮𑍍, 𑌇𑌤𑍍𑌯𑌤𑌃 ‘𑌨 𑌸𑌤𑍍𑌤𑌨𑍍𑌨𑌾𑌸𑌤𑍍’ 𑌇𑌤𑌿 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

𑌯𑌤𑍍𑌤𑍁 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍—𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇, ‘𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌤𑌤𑍍’ ‘𑌨 𑌸𑌤𑍍𑌤𑌨𑍍𑌨𑌾𑌸𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇’ 𑌇𑌤𑌿—𑌨 𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌮𑍍, ‘𑌅𑌨𑍍𑌯𑌦𑍇𑌵 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑌿𑌤𑌾𑌦𑌥𑍋 𑌅𑌵𑌿𑌦𑌿𑌤𑌾𑌦𑌧𑌿’ 𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌃 ॥

---

(ஆக்ஷேபம்):—ஆயின், எப்பொருள் ‘உள்ளது’ என்னும்சொல்லால் சொல்லப்படுகின்றதோ, அது உள்ளது; அறியவேண்டியபொருளை ‘உள்ளது’ என்னும் சொல்லால் சொல்லமுடியாதாயின், அது இல்லை. அன்றியும், “அது அறியவேண்டியபொருள்” என்பதும், “(அதனை) உள்ளது என்னும்சொல்லால் சொல்லமுடியாது” என்பதும் (தம்முள்) விரோதமாம்.

(ஸமாதானம்) :—இல்லைஎன்பதில்லை; இல்லைஎன்னும்உணர்வினால் குறிக்கப்படாமையின்.

(ஆக்ஷேபம்) :—ஆயின், எல்லா உணர்ச்சிகளும் “உள்ளது” “இல்லை” என்னும் உணர்ச்சிகளைச் சார்ந்தவையேதான். அவை இவ்வாறுள்ளவளவிலே, அறியவேண்டியபொருளும் - உள்ளதென்னும் உணர்வைத் தழுவிய உணர்வினால் குறிக்கப்படுவதாதல், இல்லையென்னும் உணர்வைத் தழுவிய உணர்வினால் குறிக்கப்படுவதாதல் கூடும்.

(ஸமாதானம்):—அப்படியன்று; (ப்ரஹ்மமானது) இந்திரியங்கட்கு எட்டாமையினால், (உள்ளது, இல்லையென்னும்) இரண்டுஉணர்வுகளையும் தழுவிய உணர்வினால் குறிக்கப்படாமையின். இந்திரியங்களால் உணரக்கூடிய குடம்முதலிய பொருள் எதுவோ, அதுவன்றோ உள்ளதென்னும் உணர்வைத் தழுவிய உணர்வினால் குறிக்கப்படுவதாதல், இல்லையென்னும்உணர்வைத் தழுவிய உணர்வினால் குறிக்கப்படுவதாதல் கூடும். அறியவேண்டியபொருளாகிய இதுவோ இந்திரியங்கட்கு எட்டாமையினால் சப்த[சுருதி]ப்பிரமாணமொன்றினாலேயே அறியத்தக்கதாம்; ஆகவே, குடம்முதலியனபோல, (உள்ளது, இல்லைஎன்னும்) இரண்டுஉணர்வுகளையும்தழுவிய உணர்வினால்குறிக்கப்படுவதில்லை; எனவே, “அது உள்ளது அன்று, இல்லது அன்று” எனக் கூறப்படுகின்றது.

இனி, “அது அறியவேண்டிய பொருள்” எனவும், “அது உள்ளது அன்று இல்லது அன்று” எனவும் விரோதமாகக் கூறப்படுகின்றது (எனப்பிரதிவாதி) கூறியதற்கு (மறுமொழி வருமாறு):—விரோதமில்லை; ஏனெனில், “அது - அறியப்பட்டபொருளினும் வேறுதான்; அன்றியும், அறியப்படாத பொருளுக்கும் அப்பால் உள்ளது” (கே - உ - ௩) எனச் சுருதி (கூறுகின்றது).

ஶ்ருதிரபி விருத்தார்த்தா இதி சேத்—யதா யஜ்ஞாய ஶாலாம் க்ருத்வா 'யத்யமுஷ்மிந் லோகேऽஸ்தி வா ந வேதி' இத்யேவமாதி சேத்—

ந; விதிதாவிதிதாப்யாமந்யச்ச்ருதேரவஶ்யவிஜ்ஞேயார்த்தப்ரதிபாதநபர-த்வாத் । 'யத்யமுஷ்மிந்' இத்யாதி து விதிஶேஷ: அர்த்தவாத: ॥

உபபத்தேஶ்ச ஸதாதிஶப்தை: ப்ரஹ்ம நோச்யத இதி । ஸர்வோ ஹி ஶப்த: அர்த்தப்ரகாஶநாய ப்ரயுக்த:, ஶ்ரூயமாணஶ்ச ஶ்ரோத்ருபி:, ஜாதிக்ரியா-குணஸம்பந்தத்வாரேண ஸங்கேதக்ரஹணஸவ்யபேக்ஷ: அர்த்தம் ப்ரத்யாயயதி; ந அந்யதா, அத்ருஷ்டத்வாத் । தத் யதா—'கௌ:' 'அஶ்வ:' இதி வா ஜாதித:, 'பாசக:' 'பாடக:' இதி வா க்ரியாத:, 'ஶுக்ல:' 'க்ருஷ்ண:' இதி வா குணத:, 'தநீ' 'கோமாந்' இதி வா ஸம்பந்தத: । ந து ப்ரஹ்ம ஜாதிமத், அத: ந ஸதாதிஶப்த-வாச்யம் । நாபி குணவத்—யேந குணஶப்தேந உச்யேத—நிர்குணத்வாத் ।

---

(ஆக்ஷேபம்):—சுருதியும் விரோதமான அர்த்தமுடையதாம் எனில்,—உதாரணமாக, யாகத்திற்கு மண்டபத்தை அமைத்தபின்பு, "மறுமையிலே (நன்மை) உண்டோ இல்லையோ என்பதை (எவன் அறிகின்றான் ?)" (தை - ஸம் - சு - க - க) என(ச் சந்தேகிக்கும் சுருதியை)ப்போல எனின்,—(ஒத்துக்கொண்ட பிரமாணத்திற்கு விரோதமான சுருதியை ஏற்றுக்கொள்ளக்கூடாது எனின்,—)

(ஸமாதாநம்) :—அப்படியன்று; "(ப்ரஹ்மம்) - அறியப்பட்டதினும், அறியப்படாததினும் வேறு" என்னும்சுருதியானது, அவச்யம் அறியவேண்டிய பொருளை அறிவிக்கநிற்கின்றமையின். ("ப்ரஹ்மமானது உள்ளேயுள்ள ஆத்மாதான்" என்னும் உண்மையை அந்தச்சுருதி உணர்த்துவதனால் பிரமாணமாம்; ஆகவே, அதனை ஏற்றுக் கொள்ளவேண்டும்.—ஆ.) ஆனால், "மறுமையிலே" (தை - ஸம் - சு - க - க) என்று தொடங்கும் (சுருதியானது) விதியின் சேஷமான அர்த்தவாதமாம். (ஆகவே, இதனை உதாஹரித்தல் சரியன்று; அர்த்தவாதமாதலால்.—ஆ. சேஷம், அர்த்தவாதம் என்றவற்றின் விவரங்களை 21, 59 - ஆம் பக்கங்களில் காண்க.)

மேலும், ப்ரஹ்மமானது 'உள்ளது' முதலான சொற்களால் கூறப்படுவதில்லை என்பது யுக்தியினாலும்(தெரியவருகின்றது). ஒவ்வொருசொல்லும் ஒருபொருளைக் காட்டுவதற்காக வழங்கப்பெற்று, கேட்பவர்களால் கேட்கப்படும்பொழுது, ஜாதி தொழில் குணம் ஸம்பந்தம் என்றவற்றின் வழியாகத் தொடர்பின் பற்றை வேண்டிநிற்பதாய் [ஜாதி, தொழில் முதலியவற்றைத் தழுவியதாய்] ஒருபொருளைக் காட்டுகின்றது. (அது அப்பொருளைக் காட்டுவது) வேறுவிதமாக அன்று; காணப்படாமையின். அது வருமாறு:—'ஆ' 'குதிரை' என்பவை - ஜாதியினாலும், 'சமைப்பவன்' 'படிப்பவன்' என்பவை - தொழிலினாலும், 'வெண்மை' 'கருமை' என்பவை - குணத்தினாலும், 'பணமுள்ளவன்' 'பசுக்களுள்ளவன்' என்பவை - (பணம், பசுக்கள் என்றவற்றின்)ஸம்பந்தத்தினாலும்(அமைந்தசொற்களாம். ஆகவே, குதிரை முதலியன'குதிரை உள்ளது' 'குதிரை இல்லை' என 'உள்ளது' முதலான சொற்களால் ஜாதிமுதலியவற்றைக்கொண்டு குறிக்கப்படுகின்றன.) ஆனால், ப்ரஹ்மத்திற்கு ஜாதி இல்லை ; ஆதலால்,

𑌨𑌾𑌪𑌿 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌶𑌬𑍍𑌦𑌵𑌾𑌚𑍍𑌯𑌂, 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 '𑌨𑌿𑌷𑍍𑌕𑌲𑌂 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌮𑍍' 𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌃 𑌨 𑌚 𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑍀, 𑌏𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌅𑌦𑍍𑌵𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 𑌨 𑌕𑍇𑌨𑌚𑌿𑌚𑍍 𑌶𑌬𑍍𑌦𑍇𑌨 𑌉𑌚𑍍𑌯𑌤 𑌇𑌤𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 ; '𑌯𑌤𑍋 𑌵𑌾𑌚𑍋 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌭𑌿𑌶𑍍𑌚 ॥ ௧௨ ॥

𑌸𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌾𑌵𑌿𑌷𑌯𑌤𑍍𑌵𑌾𑌦𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌶𑌙𑍍𑌕𑌾𑌯𑌾𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌕𑌰𑌣𑍋𑌪𑌾𑌧𑌿𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 𑌤𑌦𑌸𑍍𑌤𑌿𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌯𑌨𑍍 𑌤𑌦𑌾𑌶𑌙𑍍𑌕𑌾𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌮𑌾𑌹—

௧௩. 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑌂 𑌤𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌤𑍋𑌽𑌕𑍍𑌷𑌿𑌶𑌿𑌰𑍋𑌮𑍁𑌖𑌮𑍍 ।

---

'உள்ளது' முதலிய சொற்களால் கூறத்தக்கதில்லை : குணசப்தத்தினுல் [பண்புச்சொல்லினுல்] கூறப்படும்படியான குணமும் இல்லை ; நிர்க்குணமாதலின் : தொழிலைப்பற்றிய சொல்லினுலும் குறிப்பிக்கப்படுவதில்லை ; தொழிலில்லாததாதலின் ; "உறுப்பில்லாதது, வினையில்லாதது, சாந்தமானது" (ச்வே - சூ - கக)என்னும் சுருதியினுலென்க. அன்றியும், (ப்ரஹ்மத்திற்கு எதனேடும்) தொடர்பு இல்லை ; ஏனெனில், (அது) ஒன்ருயுள்ளது : இரண்டாவதில்லாதது : (இந்திரியங்கட்கு) எட்டாதது : ஆத்மாவாயிருப்பது[தான் எனப்படுவது]. (ஆகவே, அது) ஒருசொல்லினுலும் கூறப்படுவதில்லையென்பது நேரென்க. "எதனின்றும் [எதனை அணுகமுடியாது] சொற்கள் திரும்புகின்றனவோ" (தை-உப-உ-௪-க)என்பது முதலிய சுருதிகளாலும் (அது உணர்த்தப்படுகின்றது). (கஉ)

எல்லா முயற்சிக்கும் ப்ரஹ்மம் மூலகாரணம்.

அறியவேண்டியபொருளான(ப்ரஹ்மமான)து உள்ளதென்னும் சொல்லுக்காவது எண்ணத்திற்காவது எட்டாமையினுல் இல்லையென்னும் சங்கை வர, எல்லாப் பிராணிகளுடைய இந்திரியங்களாகிய உபாதிகளைக்கொண்டு அது [ப்ரஹ்மம்] உள்ளதென்பதை நிருபிப்பவராய் அச்சங்கையை நீக்கும்பொருட்டுக் கூறுகிருர் : [ஒருவிதமான தன்மையும் இல்லாததாய் சொல்லிற்கும் மனத்திற்கும் எட்டாததோர் பொருளைக்காணவில்லை ; மற்று, இதற்குமாருனதை, எதாவதொரு தன்மையைப்பெற்றதாய் சொல்லிற்கும் மனத்திற்கும் எட்டுகின்ற பொருளை, த்வைதத்தைக் காண்கிருேம். ஆகவே, ப்ரஹ்மமானது வெறும் பாழாம் என்னும் சங்கை வர, ஸமாதாநம் வருமாறு :—அது பாழன்று ; ஏனெனில், அது - (1) உள்ளேயுள்ள ஆத்மாவாயுள்ளது : (2) இந்திரியங்களுடைய முயற்சிக்கும் பிறவற்றிற்கும் காரணமானது : (3) கற்பிக்கப்பட்ட த்வைதம் விளங்குதற்கு அடிஆதாரமாயுள்ளது : (4) பிரபஞ்சத்தை ஆளுவது ; ஆகவே, அது உள்ளதென்க. இனி "வண்டிமுதலியன தாமே செல்லமாட்டா ; அவைபோல, ஜடப்பொருளான உடம்பு முதலியவற்றுள் உணர்வு இல்லாவிட்டால், அவை தாமாகவே செல்லமாட்டா, முயலமாட்டா, ஒருதொழிலைச்செய்யமாட்டா ; ஆகவே, அவற்றுள் சேதநப் பொருள் இருக்கவேண்டும்" என்னும் அநுமாநத்தால் (1) "ப்ரஹ்மம் உள்ளேயுள்ள ஆத்மாவாயுள்ளது" என்பதை முதலில் அருளிச்செய்கிருர் :—ஆ.]

கங. அது எங்கும் கை கால்களையுடையது : எங்கும் கண்களையும், தலைகளை

𑌸𑌰𑍍𑌵𑌤𑌃𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌮𑌲𑍍𑌲𑍋𑌕𑍇 𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌯 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 ॥

𑌸𑌰𑍍𑌵𑌤𑌃 𑌪𑌾𑌣𑌯𑌃 𑌪𑌾𑌦𑌾𑌶𑍍𑌚 𑌅𑌸𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑌂 𑌤𑌤𑍍 𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑍍 । 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌕𑌰𑌣𑍋𑌪𑌾𑌧𑌿𑌭𑌿𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌅𑌸𑍍𑌤𑌿𑌤𑍍𑌵𑌂 𑌵𑌿𑌭𑌾𑌵𑍍𑌯𑌤𑍇 । 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌶𑍍𑌚 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍋𑌪𑌾𑌧𑌿𑌤𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌚 𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌅𑌨𑍇𑌕𑌧𑌾 𑌭𑌿𑌨𑍍𑌨𑌮𑍍 । 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍋𑌪𑌾𑌧𑌿𑌭𑍇𑌦𑌕𑍃𑌤𑌂 𑌚 𑌵𑌿𑌶𑍇𑌷𑌜𑌾𑌤𑌂 𑌮𑌿𑌥𑍍𑌯𑍈𑌵 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯, 𑌇𑌤𑌿 𑌤𑌦𑌪𑌨𑌯𑌨𑍇𑌨 𑌜𑍍𑌞𑍇𑌯𑌤𑍍𑌵𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑌂 '𑌨 𑌸𑌤𑍍𑌤𑌨𑍍𑌨𑌾𑌸𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇' 𑌇𑌤𑌿 𑌉𑌪𑌾𑌧𑌿𑌕𑍃𑌤𑌂 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌰𑍂𑌪𑌮𑌪𑌿 𑌅𑌸𑍍𑌤𑌿𑌤𑍍𑌵𑌾𑌧𑌿𑌗𑌮𑌾𑌯 𑌜𑍍𑌞𑍇𑌯𑌧𑌰𑍍𑌮𑌵𑌤𑍍𑌪𑌰𑌿𑌕𑌲𑍍𑌪𑍍𑌯 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 '𑌸𑌰𑍍𑌵𑌤𑌃𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑌮𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 । 𑌤𑌥𑌾 𑌹𑌿 𑌸𑌂𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑌵𑌿𑌦𑌾𑌂 𑌵𑌚𑌨𑌮𑍍— '𑌅𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑌾𑌪𑌵𑌾𑌦𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌿𑌷𑍍𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌂 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑍍𑌯𑌤𑍇 ।' 𑌇𑌤𑌿 । 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌾𑌵𑌯𑌵𑌤𑍍𑌵𑍇𑌨 𑌗𑌮𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌃 𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑌾𑌦𑌯𑌃 𑌜𑍍𑌞𑍇𑌯𑌶𑌕𑍍𑌤𑌿𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌵𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌃 𑌇𑌤𑌿 𑌜𑍍𑌞𑍇𑌯𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌨𑌿 "𑌜𑍍𑌞𑍇𑌯𑌸𑍍𑌯" 𑌇𑌤𑌿 𑌉𑌪𑌚𑌾𑌰𑌤𑌃 𑌉𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 ।

---

*யும், முகங்களையும் உடையது : எங்கும் செவிகளையுடையது : உலகத்தில் ஸகலத்தையும் வியாபித்து நிற்கின்றது.*

அறியவேண்டியபொருளுக்குக் கைகளும் கால்களும் எவ்விடத்தும் உள்ளன. க்ஷேத்ரஜ்ஞன் இருக்கிறானென்பது - எல்லாபிராணிகளுடைய இந்திரியங்களாகிய உபாதிகளால் மெய்ப்பிக்கப்படுகின்றது. (ஏனெனில், ஜடப்பொருளான இந்திரியங்கள் சேதநத்தை முன்னிடப்பெறாது முனைக்கமுடியா.) அன்றியும், (உள்ளேயுள்ள சேதநமானது) க்ஷேத்ரமாகிய உபாதியினால் க்ஷேத்ரஜ்ஞனாகக் கூறப்படுகின்றது. க்ஷேத்ரமோ கை கால் முதலியவற்றால் பலவாறு வேறுபட்டிருப்பது. க்ஷேத்ரமாகிய உபாதியின் பேதத்தினாலான வேற்றுமையெல்லாம் க்ஷேத்ரஜ்ஞனுக்குப்பொய்ம்மையேதான்; எனவே, அவற்றை நீக்கி (ப்ரஹ்மத்தை) அறியவேண்டுமென்பது - "அது உள்ளது எனப்படுவதில்லை, இல்லது எனப்படுவதில்லை" (௧௩ - ௧௨) எனக் கூறப்பட்டது. உபாதிகளாலானது பொய்வடிவமுள்ளதாயினும், (ப்ரஹ்மத்தின்) இருப்பைத்தெரிவிப்பதற்காக, அறியவேண்டியபொருளான (அதன்) தன்மைபோலக் கற்பனைசெய்து "எங்கும் கை கால்களையுடையது" என்பது முதலானது கூறப்படுகின்றது. அவ்வண்ணமே, ஸம்பிரதாயத்தை அறிந்தவருடைய—"அத்வைத(மான தனி)ப்பொருளானது அத்யாரோபத்தினாலும் அபவாதத்தினாலும், ஏற்றுதலாலும் விலக்குதலாலும் விவரிக்கப்படுகின்றது" என்னும்திருவாக்கு உள்ளதாம் (அத்யாரோபம் என்பது-பாம்பல்லாத கயிற்றிலே பாம்பை ஏற்றுதல்போல, உண்மைப்பொருளிலே உண்மையல்லாப்பொருளை ஏற்றுதல். அபவாதமென்பது -கயிற்றின்பொய்த்தோற்றமாகிய பாம்பு கயிறுமாத்திரமாக நிற்பதுபோல, உண்மைப்பொருளின் பொய்த்தோற்றமாகிய பிரபஞ்சம் உண்மைப்பொருள்மாத்திரமாகநிற்றல்.) எவ்விடத்தும் எல்லாஉடம்புகளது உறுப்புக்களாகத் தெரிகின்ற கைகால்கள் முதலியவை, அறியவேண்டியபொருளான (ப்ரஹ்மத்தின்) சக்தி இருப்பதனால் [அதனுடைய வெறும் சந்நிதிமாத்திரத்தினால்] நமக்கு முயற்சியுண்டாகப் பெறுகின்றன ; எனவே, அறியவேண்டியபொருள் இருத்தற்கு (அவை) அடையாளங்களாம் ; (ஆகவே, அவை) " அறியவேண்டியபொருளுக்குச் சொந்தமானவை" என்று உபசாரவழக்கினால் கூறப்படுகின்றன.—அவ்வாறே மற்

𑌤𑌥𑌾 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 । 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑌂 𑌤𑌤𑍍 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌤𑍋𑌽𑌕𑍍𑌷𑌿𑌶𑌿𑌰𑍋𑌮𑍁𑌖𑌮𑍍, 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃 𑌅𑌕𑍍𑌷𑍀𑌣𑌿 𑌶𑌿𑌰𑌾𑌂𑌸𑌿 𑌮𑍁𑌖𑌾𑌨𑌿 𑌚 𑌯𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌤𑍋𑌽𑌕𑍍𑌷𑌿𑌶𑌿𑌰𑍋𑌮𑍁𑌖𑌮𑍍; 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌮𑌤𑍍 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌃 𑌶𑍍𑌰𑌵𑌣𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌂, 𑌤𑌤𑍍 𑌯𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌮𑌤𑍍 𑌲𑍋𑌕𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌿𑌕𑌾𑌯𑍇; 𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌯 𑌸𑌂𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌂 𑌲𑌭𑌤𑍇, 𑌨 𑌚𑌲𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௧௩ ॥

𑌉𑌪𑌾𑌧𑌿𑌭𑍂𑌤𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑌾𑌦𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑌣𑌾𑌤𑍍 𑌜𑍍𑌞𑍇𑌯𑌸𑍍𑌯 𑌤𑌦𑍍𑌵𑌤𑍍𑌤𑌾𑌽𑌽𑌶𑌙𑍍𑌕𑌾 𑌮𑌾 𑌭𑍂𑌦𑌿𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑌰𑍍𑌥𑌃 𑌶𑍍𑌲𑍋𑌕𑌾𑌰𑌮𑍍𑌭𑌃—

௧௪. 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍁𑌣𑌾𑌭𑌾𑌸𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍 ।
𑌅𑌸𑌕𑍍𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍃𑌚𑍍𑌚𑍈𑌵 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌂 𑌗𑍁𑌣𑌭𑍋𑌕𑍍𑌤𑍃 𑌚 ॥

𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍁𑌣𑌾𑌭𑌾𑌸𑌂 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌚 𑌤𑌾𑌨𑌿 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑍀𑌨𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌕𑌰𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌨𑌿, 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑍇 𑌚 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌨𑌸𑍀—𑌜𑍍𑌞𑍇𑌯𑍋𑌪𑌾𑌧𑌿𑌤𑍍𑌵𑌸𑍍𑌯 𑌤𑍁𑌲𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍—𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍍𑌰𑌹𑌣𑍇𑌨 𑌗𑍃𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑍇। 𑌅𑌪𑌿 𑌚, 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑍋𑌪𑌾𑌧𑌿𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣𑍈𑌵 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑍀𑌨𑌾𑌮𑌪𑌿 𑌉𑌪𑌾𑌧𑌿𑌤𑍍𑌵𑌮𑌿𑌤𑍍𑌯𑌤𑌃 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌬𑌹𑌿𑌷𑍍𑌕𑌰𑌣𑍋𑌪𑌾𑌧𑌿𑌭𑍂𑌤𑍈𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍁𑌣𑍈𑌃 𑌅𑌧𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌶𑍍𑌰𑌵𑌣𑌵𑌚𑌨𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌅𑌵𑌭𑌾𑌸𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍁𑌣𑌾𑌭𑌾𑌸𑌂, 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑍈𑌃 𑌵𑍍𑌯𑌾𑌪𑍃𑌤𑌮𑌿𑌵 𑌤𑌤𑍍 𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃; '𑌧𑍍𑌯𑌾𑌯𑌤𑍀𑌵 𑌲𑍇𑌲𑌾𑌯𑌤𑍀𑌵'

---

றையதை உரைத்துக்கொள்க.—(ப்ரஹ்மமானது)உலகத்திலே, ப்ராணிவர்க்கத்திலே எல்லாவற்றையும் வியாபித்துநிற்கின்றது, நிலைபெறுகின்றது, அசைவதில்லை என்றபடி. (௧௩)

### ப்ரஹ்மத்திற்கு எத்தகைய தன்மையும் இல்லை.

உபாதிகளான கைகால்முதலிய இந்திரியங்களை ஏற்றுவதனால் "அறியவேண்டியபொருளுக்கு அவை (உண்மையாகவே) உண்டு" என்னும்சங்கை வரக்கூடாதென்பதற்காக (இச்)சுலோகம் தொடங்கப்படுகின்றது :

௧௪. எல்லா இந்திரியங்களுடைய செய்கைகளினால் விளங்குவது ; (ஆனால்) எல்லா இந்திரியங்களும் இல்லாதது : (ஒன்றையும்) பற்றாதது ; ஆனால், எல்லாவற்றையும் தாங்குவது : குணங்களில்லாதது ; ஆனால், குணங்களை அநுபவிப்பது.

எல்லா இந்திரியங்கள் - ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள்என்னும்பெயருடைய செவிமுதலிய இந்திரியங்கள். "எல்லா இந்திரியங்கள்" என்றதனால் - புத்தி, மனம் என்ற அகக்கரணங்களையும் கொள்க ; அறியவேண்டியபொருளுக்கு உபாதியாய்நிற்றலானது (செவிமுதலியவற்றோடு) ஸமமாயிருத்தலின். மேலும், அகக்கரண உபாதியின் வழியாகவேதான் செவிமுதலியவைவையும் உபாதியாகின்றன ; ஆகவே, (அறியவேண்டியபொருளானது) - அகக்கரணம், புறக்கரணம் என்னும்உபாதிகளாய் எல்லாஇந்திரியங்களது செய்கைகளான நிச்சயித்தல், நினைத்தல், கேட்டல், மொழிதல் முதலியவற்றால் வெளிப்படுகின்றது : அந்த அறியவேண்டிய பொருளானது எல்லா இந்திரியங்களது செய்கைகளால் தொழிற்பட்டிருப்பதுபோலும் என்றபடி. ; "தியானிப்பதுபோலும், அசைவதுபோலும்" (பி - ௪ - ௩ - ௭)என்னும் சுருதியினாலென்க.

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌃 । 𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑍁𑌨𑌃 𑌕𑌾𑌰𑌣𑌾𑌤𑍍 𑌨 𑌵𑍍𑌯𑌾𑌪𑍃𑌤𑌮𑍇𑌵𑍇𑌤𑌿 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿? 𑌅𑌤𑌃 𑌆𑌹—𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑌣𑌰𑌹𑌿𑌤𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌅𑌤𑌃 𑌨 𑌕𑌰𑌣𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑍈𑌰𑍍𑌵𑍍𑌯𑌾𑌪𑍃𑌤𑌂 𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑍍 । 𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌯𑌂 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌃—'𑌅𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑍋 𑌜𑌵𑌨𑍋 𑌗𑍍𑌰𑌹𑍀𑌤𑌾 𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌸 𑌶𑍃𑌣𑍋𑌤𑍍𑌯𑌕𑌰𑍍𑌣𑌃' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌃 𑌸𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍋𑌪𑌾𑌧𑌿𑌗𑍁𑌣𑌾𑌨𑍁𑌗𑍁𑌣𑍍𑌯𑌭𑌜𑌨𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑌤𑍍 𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌵𑌂𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌰𑍍𑌥𑌃, 𑌨 𑌤𑍁 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌦𑍇𑌵 𑌜𑌵𑌨𑌾𑌦𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌰𑍍𑌥𑌃 । '𑌅𑌨𑍍𑌧𑍋 𑌮𑌣𑌿𑌮𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌵𑌤𑍍 𑌤𑌸𑍍𑌯 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌅𑌰𑍍𑌥𑌃 ॥

𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑌣𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌂 𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌅𑌸𑌕𑍍𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌶𑍍𑌲𑍇𑌷𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍 । 𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌏𑌵𑌂, 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌸𑌰𑍍𑌵𑌭𑍃𑌚𑍍𑌚𑍈𑌵 । 𑌸𑌦𑌾𑌸𑍍𑌪𑌦𑌂 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂, 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌨𑍁𑌗𑌮𑌾𑌤𑍍 । 𑌨 𑌹𑌿 𑌮𑍃𑌗𑌤𑍃𑌷𑍍𑌣𑌿𑌕𑌾𑌦𑌯𑍋𑌽𑌪𑌿 𑌨𑌿𑌰𑌾𑌸𑍍𑌪𑌦𑌾𑌃 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌅𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍃𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑌿 𑌇𑌤𑌿 ॥

---

—மற்று, எக்காரணத்திஞல், "(ப்ரஹ்மம் வாஸ்தவமாகத்) தொழிற்படுவதே இல்லை" எனக் கொள்ளப்படுகின்றது ? என்பது.—இதில் கூறுகிறார் : எல்லாஇந்திரியங்களும் இல்லாதது, எந்தகைய கருவியும் இல்லாதது என்பது பொருள். ஆகவே, அந்த அறிய வேண்டியபொருள் இந்திரியங்களுடைய தொழில்களால் தொழிற்படுவதில்லை[இந்திரியங்கள் தொழிற்படும்பொழுது, அது, தான் வாஸ்தவமாகவே தொழிற்படுவதில்லை]. ஆனால், "அது கைகால்களில்லாததாய் விரைந்துசெல்வது, பற்றிப்பிடிப்பது ; கண்ணில்லாததாய்ப் பார்க்கின்றது ; செவியில்லாததாய்க் கேட்கின்றது" (ச்வே - ௩ - ௧௯) என்றுதொடங்குகின்ற இம்மந்திரம் எதுவோ, அது - "அந்த அறியவேண்டியபொருள்எல்லாஇந்திரியங்களாகிய உபாதிகளின் செய்கைகளுக்கு அனுகூலத்தைஅடைவதிலே[அநுகூலமாய் நடக்கும்]வலிமையுள்ளது" என இவ்வாருன அர்த்தத்தைக்காட்டுவதேயன்றி, "(ப்ரஹ்மத்திற்கு)வாஸ்தவமாகவே விரைந்துசெல்லுதல் முதலியதொழில்கள் உண்டு" என்னும்பொருளை எடுத்துக்காட்டுவதன்று. "குருடன் ரத்நத்தைக் கண்ணுற்ருன்"(தை-ஆ-க - ௧௧)என்பது முதலான மந்திரத்தின் அர்த்தம்போல, அந்த மந்திரத்திற்கும் அர்த்தமாம். (அர்த்தவாதத்திற்குச் சொல்அர்த்தத்தைக் கொள்ளாது, பிரகிருதத்திற்குஇணங்கப் பொருள் கொள்ளவேண்டும்.—ஆ.)

ப்ரஹ்மம், பொய்ம்மையான தோற்றத்திற்கு ஆதாரமான உண்மை.

அந்த அறியவேண்டியபொருள் எல்லா இந்திரியங்களும் இல்லாதது ஆதலால், எதனோடும் ஒட்டுதலில்லாதது ; இவ்வாறிருந்தாலும், ஸகலத்தையும் தாங்குவதே தான். எல்லாவற்றிற்கும் ஸத்தன்றே ஆதாரமானது ; ஸத்என்னும் எண்ணமானது எங்கும் தொடர்ச்சியாயிருத்தலின். கானல்நீர்முதலியனவும்கூட ஆதாரமில்லாதவையாய் இல்லை.(ஸத்-உள்ளது,உண்மை. கற்பிக்கப்பட்ட குடம்,மரம் முதலியவை"குடம் உள்ளது," "மரம் உள்ளது" என உள்ளதென்னும் உணர்வினுல் அறியப்படுகின்றன. அவ்வாறே, "கானல்ஜலம் உள்ளது" என உள்ளதென்னும்புத்தியினுல் கானல்ஜலமும் அறியப்படுகின்றது. கற்பிக்கப்பட்ட ஒவ்வொருபொருளும் இவ்வாருக "உள்ளது" என்பதைத் தழுவிய அறிவினுல் அறியப்படுகின்றது. ஆதலால், ஸத்என்னும் புத்தியானது எவ்விடத்தும் தொடர்ச்சியா யிருக்கின்றதெனக் காண்க.) ஆகவே, ப்ரஹ்மம் எல்லாவற்றையும் தாங்குகின்றது என்பதாம்.

𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌇𑌦𑌂 𑌚 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 𑌜𑍍𑌞𑍇𑌯𑌸𑍍𑌯 𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑌾𑌧𑌿𑌗𑌮𑌦𑍍𑌵𑌾𑌰𑌮𑍍—𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑌾𑌂𑌸𑌿 𑌗𑍁𑌣𑌾𑌃 𑌤𑍈𑌃 𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑌪𑌿 𑌤𑌤𑍍 𑌗𑍁𑌣𑌭𑍋𑌕𑍍𑌤𑍃 𑌚 𑌗𑍁𑌣𑌾𑌨𑌾𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑌸𑌾𑌂 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑌿𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌮𑍋𑌹𑌾𑌕𑌾𑌰𑌪𑌰𑌿𑌣𑌤𑌾𑌨𑌾𑌂 𑌭𑍋𑌕𑍍𑌤𑍃 𑌚 𑌉𑌪𑌲𑌬𑍍𑌧𑍃 𑌤𑌤𑍍 𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑍍 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௧௪ ॥

𑌕𑌿𑌞𑍍𑌚—

௧௫. 𑌬𑌹𑌿𑌰𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑌚𑌰𑌂 𑌚𑌰𑌮𑍇𑌵 𑌚 ।
𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌤𑌦𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌦𑍂𑌰𑌸𑍍𑌥𑌂 𑌚𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑍇 𑌚 𑌤𑌤𑍍 ॥

𑌬𑌹𑌿𑌃 𑌤𑍍𑌵𑌕𑍍𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌦𑍇𑌹𑌂 𑌆𑌤𑍍𑌮𑌤𑍍𑌵𑍇𑌨 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌂 𑌅𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌤𑌮𑍇𑌵 𑌅𑌵𑌧𑌿𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌬𑌹𑌿𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌤𑌥𑌾 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌗𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌅𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌦𑍇𑌹𑌮𑍇𑌵 𑌅𑌵𑌧𑌿𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌅𑌨𑍍𑌤𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । '𑌬𑌹𑌿𑌰𑌨𑍍𑌤𑌶𑍍𑌚' 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍇 𑌮𑌧𑍍𑌯𑍇 𑌅𑌭𑌾𑌵𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇 𑌇𑌦𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—𑌅𑌚𑌰𑌂 𑌚𑌰𑌮𑍇𑌵 𑌚, 𑌯𑌤𑍍 𑌚𑌰𑌾𑌚𑌰𑌂 𑌦𑍇𑌹𑌾𑌭𑌾𑌸𑌮𑌪𑌿, 𑌤𑌦𑍇𑌵 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂, 𑌯𑌥𑌾—𑌰𑌜𑍍𑌜𑍁𑌸𑌰𑍍𑌪𑌾𑌭𑌾𑌸𑌃 ॥

---

### குணங்களை அறிவது ப்ரஹ்மம்.

"அறியவேண்டியபொருள் உள்ளது" என்று தெரிதற்கு இதுவும் ஒருவேறு வழியாம் : (ப்ரஹ்மம்), ஸத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் குணங்களில்லாததாயினும், ஓசைமுதலான வழியினால் [ஓசை, உருவம், ருசிமுதலான இந்திரியவிஷயங்களால்] இன்பவடிவமாகவும் துன்பவடிவமாகவும் மயக்கவடிவமாகவும் மாறிய ஸத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் குணங்களை அநுபவிப்பது ; அந்த அறியவேண்டியபொருள்(அவற்றை) உணர்வது என்பது பொருள். (௧௪)

### எல்லாம் ப்ரஹ்மம்.

௧௫. பூதங்கட்கு வெளியானது, உள்ளுமானது : ஸ்தாவரமானது, ஜங்கமமுமானது : அது நுண்மையானதாதலால் அறிதற்கு அரியது : அது தூரத்திலுள்ளது, ஸமீபத்திலும் (உள்ளது) .

அறியாமையினால் ஆத்மாவாகக் கொள்ளப்பட்டதாய்,தோல்வரையுள்ளதான உடம்பை உத்தேசித்து, அதனையே எல்லையாகக்கொண்டு வெளி எனப்படுகின்றது. அவ்வாறே, உள்ளேயுள்ள ஆத்மாவை உத்தேசித்து உடம்பையே எல்லையாகக் கொண்டு உள் எனப்படுகின்றது. (பூதங்கட்கு வெளியிலுள்ள பொருள்களும் ப்ரஹ்மந்தான், உள்ளேயுள்ளபொருளும் ப்ரஹ்மந்தான் என்றபடி.) "வெளியானது, உள்ளுமானது" என்றமையினால், இடையிலே (ஒன்றும்) இல்லாமையாகவே, இதனைக் கூறுகின்றார் :— "ஸ்தாவரமானது, ஜங்கமமுமானது." ஜங்கம ஸ்தாவரமான உடம்புத்தோற்றமும் எதுவோ, அது(வும்)தான் அறியவேண்டிய பொருள் [ப்ரஹ்மம்] ; கயிற்றிலே பாம்புத்தோற்றம்போல. (வெளியிலுள்ள பொருள்கட்கும் உள்ளேயுள்ள ஆத்மாவிற்கும் நடுவிலே பூதவடிவமாய்ப் பலபலவித உடம்புகளாகத் தோற்றுகின்றதும்ப்ரஹ்மம்தான். கயிற்றிலே பாம்புத்தோற்றம் அடங்கிநிற்பதுபோல,ப்ரஹ்மத்திலே உடம்புத்தோற்றம் அடங்கிநிற்கின்றது. ஆகவே, நடுவும் ப்ரஹ்மமாம் எனக் கண்டுகொள்க.—ஆ.)

𑌯𑌦𑌿 𑌚𑌰𑌾𑌚𑌰𑌂 𑌤𑌦𑍇𑌵 𑌚 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌵𑌿𑌷𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂, 𑌕𑌿𑌮𑌰𑍍𑌥𑌂 '𑌇𑌦𑌂' 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑍈𑌃 𑌨 𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑌿𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—𑌸𑌤𑍍𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌾𑌭𑌾𑌸𑌂 𑌤𑌤𑍍; 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌵𑍍𑌯𑍋𑌮𑌵𑌤𑍍 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌮𑍍। 𑌅𑌤𑌃 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌸𑍍𑌵𑍇𑌨 𑌰𑍂𑌪𑍇𑌣 𑌤𑌤𑍍 𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑌪𑌿 𑌅𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑌵𑌿𑌦𑍁𑌷𑌾𑌮𑍍। 𑌵𑌿𑌦𑍁𑌷𑌾𑌂 𑌤𑍁—'𑌆𑌤𑍍𑌮𑍈𑌵𑍇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍' '𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑍇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌤𑌃 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌮𑍍। 𑌅𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌤𑌯𑌾 𑌦𑍂𑌰𑌸𑍍𑌥𑌂, 𑌵𑌰𑍍𑌷𑌸𑌹𑌸𑍍𑌰𑌕𑍋𑌟𑍍𑌯𑌾𑌪𑌿 𑌅𑌵𑌿𑌦𑍁𑌷𑌾𑌮𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍। 𑌅𑌨𑍍𑌤𑌿𑌕𑍇 𑌚 𑌤𑌤𑍍, 𑌆𑌤𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌵𑌿𑌦𑍁𑌷𑌾𑌮𑍍 ॥ ௧௫ ॥

𑌕𑌿𑌞𑍍𑌚—

௧௬. 𑌅𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌂 𑌚 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌮𑌿𑌵 𑌚 𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 ।
𑌭𑍂𑌤𑌭𑌰𑍍𑌤𑍃 𑌚 𑌤𑌜𑍍 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌗𑍍𑌰𑌸𑌿𑌷𑍍𑌣𑍁 𑌪𑍍𑌰𑌭𑌵𑌿𑌷𑍍𑌣𑍁 𑌚 ॥

𑌅𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌤𑌿𑌦𑍇𑌹𑌂 𑌵𑍍𑌯𑍋𑌮𑌵𑌤𑍍 𑌤𑌤𑍍 𑌏𑌕𑌮𑍍। 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌷𑍁 𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌮𑌿𑌵 𑌚 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂, 𑌦𑍇𑌹𑍇𑌷𑍍𑌵𑍇𑌵 𑌵𑌿𑌭𑌾𑌵𑍍𑌯𑌮𑌾𑌨𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 ॥

𑌭𑍂𑌤𑌭𑌰𑍍𑌤𑍃 𑌚 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑍀𑌤𑌿 𑌤𑌜𑍍 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌭𑍂𑌤𑌭𑌰𑍍𑌤𑍃 𑌚 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌕𑌾𑌲𑍇। 𑌪𑍍𑌰𑌲𑌯𑌕𑌾𑌲𑍇 𑌚 𑌗𑍍𑌰𑌸𑌿𑌷𑍍𑌣𑍁 𑌗𑍍𑌰𑌸𑌨𑌶𑍀𑌲𑌮𑍍। 𑌉𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌕𑌾𑌲𑍇 𑌪𑍍𑌰𑌭𑌵𑌿𑌷𑍍𑌣𑍁 𑌚 𑌪𑍍𑌰𑌭𑌵𑌨𑌶𑍀𑌲𑌂, 𑌯𑌥𑌾—𑌰𑌜𑍍𑌜𑍍𑌵𑌾𑌦𑌿𑌃 𑌸𑌰𑍍𑌪𑌾𑌦𑍇𑌃 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌸𑍍𑌯 ॥ ௧௬ ॥

---

**ப்ரஹ்மத்தை அறிகிறவர்கள் ஞானிகளேதான்.**

(வினா):—ஸ்தாவரமும் ஜங்கமுமேயானவியவகாரப்பொருள்களெல்லாம் அறியவேண்டியபொருளா(ன ப்ரஹ்மமா)யின், ஏன் (அது) "இது" என(ச் சுட்டி)எல்லாராலும் அநுபவித்தறியப்படவில்லை? என்பது.

(விடை):—கூறுவோம்: உண்மை, அது எல்லாத்தோற்றமாயுள்ளது; ஆயினும், ஆகாசம்போல, நுண்மையானது [இந்திரியங்கட்குப் புலப்படாதது]. ஆகவே, அது தன்வடிவத்தால் அறியத்தக்கதாயினும், நுண்மையாயிருப்பதனால் அஜ்ஞானிகட்கு அறியப்படாததாம். மற்று, ஞானிகட்கோ "இதெல்லாம் ஆத்மாதான்" (பி - ௨ - ௪ - ௬), "இதெல்லாம் ப்ரஹ்மம்தான்" (பி - ௨ - ௫ - ௧) என்பனமுதலியப் பிரமாணங்களால் எப்பொழுதும் அறியப்பட்டது. அறியப்படாமையினால் அது தூரத்திலுள்ளது; ஆயிரங்கோடி வருஷங்களாலும் அஜ்ஞானிகட்கு அடையமுடியாததாதலின். அது ஸமீபத்திலுள்ளது; ஞானிகட்கு(த் தமது சொந்த) ஆத்மாவாயிருத்தலின்,

**ப்ரஹ்மம் எல்லாவற்றிலுமுள்ள ஒரேஆத்மாதான்.**

அன்றியும்,

௧௬. அந்த அறியவேண்டியபொருள் வேறாகவகுக்கப்படாதது; ஆயினும், பூதங்களிடத்து வேறாகவகுக்கப்பட்டதுபோலும் உள்ளது: மற்றும், பூதங்களைத் தாங்குவது; விழுங்குவது: மேலும், உண்டாக்குவது.

அது உடம்புதோறும் வெவ்வேறானதன்று; ஆகாசம்போல ஒன்றாயுள்ளது. ஒவ்வொரு பிராணியினிடத்தும் வெவ்வேறாயுள்ளதுபோல(த் தோற்றுகின்றது); உடம்புகளிலேயே தெரியப்படுகின்றமையின் [சரீரங்களிலேதான் வெளிப்படையாகப் புலப்படுகின்றமையின்].

**ப்ரஹ்மம் ப்ரபஞ்சத்திற்குக் காரணம்.**

அந்த அறியவேண்டியபொருள் - (ப்ரபஞ்சம்) இருக்கும்பொழுது பூதங்களைத் தாங்குவதாம்; மறையும்பொழுதும், (அவற்றை) விழுங்குந்தன்மையதாம்; உண்டாகும்பொழுது, (அவற்றை) உண்டாக்கும் இயல்பினதுமாம்; பொய்யாகக் கற்பிக்கப்பெற்ற பாம்புமுதலியவற்றை கயிறுமுதலானவை (உண்டாகுவது) போல. (௧௬)

கிஞ்ச — ஸர்வத்ர வித்யமானமபி ஸத் ந உபலப்யதே சேத், ஜ்ஞேயம் தம꞉ தர்ஹி? ந। கிம் தர்ஹி? —

கள. ஜ்யோதிஷாமபி தஜ்ஜ்யோதிஸ்தமஸ꞉ பரமுச்யதே।
ஜ்ஞானம் ஜ்ஞேயம் ஜ்ஞானகம்யம் ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம்॥

ஜ்யோதிஷாம் ஆதித்யாதீனாம் அபி தத் ஜ்ஞேயம் ஜ்யோதி꞉ ஆத்மசைதன்யஜ்யோதிஷா இத்தானி ஹி ஆதித்யாதீனி ஜ்யோதீம்ஷி தீப்யந்தே, 'யேன ஸூர்யஸ்தபதி தேஜஸேத்த꞉' 'தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி' இத்யாதிஶ்ருதிப்ய꞉; ஸ்ம்ருதேஶ்ச இஹைவ — 'யதாதித்யகதம் தேஜ꞉' இத்யாதே꞉। தமஸ꞉ அஜ்ஞானாத் பரம் அஸ்ப்ருஷ்டம் உச்யதே॥

ஜ்ஞானாதே꞉ து꞉ஸம்பாதனபுத்த்யா ப்ராப்தாவஸாதஸ்ய உத்தம்பனார்தம் ஆஹ — ஜ்ஞானம் அமானித்வாதி; ஜ்ஞேயம் 'ஜ்ஞேயம் யத் தத் ப்ரவக்ஷ்யாமி' இத்யாதினா உக்தம்; ஜ்ஞானகம்யம், ஜ்ஞேயமேவ ஜ்ஞாதம் ஸத் ஜ்ஞானபலமிதி ஜ்ஞானகம்யம் உச்யதே; ஜ்ஞாயமானம் து தத் ஜ்ஞேயம்। தத் ஏதத் த்ரயமபி ஹ்ருதி புத்தௌ,

---

ப்ரஹ்மம் எல்லாவற்றையும் பிரகாசிக்கச்செய்வது.

(ஆக்ஷேபம்) :—அறியவேண்டியபொருள் எங்கும் உள்ளதாயிருந்தும், உணரப்படவில்லையானால், அங்ஙனம் (அது) இருளேதான்?

(ஸமாதானம்) :—அப்படியன்று; மற்றென்னவெனின்,—

இன்னும்,

கள. அது ஒளிகட்கும் ஒளியாய் இருட்டிற்கு அப்பால்உள்ளது எனப்படுகின்றது. அறிவு, அறியவேண்டியபொருள், அறிவினால் அடையப்படுவது (என்ற இம்மூன்றும்) எல்லாருடைய ஹ்ருதயத்திலுள்ளும் விசேஷமாயுள்ளன.

அந்த அறியவேண்டியபொருள் ஸூர்யன் முதலிய ஒளிகட்கும் ஒளியாம். (வெளியிலுள்ள ஸூர்யன்முதலியனவும், உள்ளேயுள்ள புத்திமுதலியனவுமான ஜடப்பொருள்களைப் பிரகாசிக்கச் செய்வதனாலும் ப்ரஹ்மம் உள்ளதென்க.—ஆ.) ஆத்மஅறிவுஒளியினால் பிரகாசிப்பிக்கப்பெற்றன்றோ ஸூர்யன்முதலான ஒளிகள் ஒளிர்கின்றன; "ஸூர்யன் எந்த ஒளியினால் ஒளிசெய்விக்கப்பெற்று ஒளிவீசுகின்றானோ" (தை - ப்ரா - ௩ - ௧௨ - ௯), "இதெல்லாம் அதனுடைய ஒளியினால் விளங்குகின்றது" (ச்வே - ௬ - ௧௪)என்பனமுதலியன மந்திரங்களாலும், இங்கேயே "ஸூர்யனைச் சேர்ந்த ஒளி எதுவோ" (௧௫ - ௧௨) என்பதுமுதலிய ஸ்மிருதியினாலும் என்க. (ப்ரஹ்மம்) இருட்டிற்கு அப்பால் உள்ளது, அஜ்ஞானத்தால் பற்றப்படாதது எனப்படுகின்றது. அறியவேண்டியபொருளும், கருவியும், பயனும் ஒவ்வொருவனுடைய ஹ்ருதயத்திலும் உள்ளன.

ஞானம் முதலியவற்றைச் சம்பாதித்தல் மிகக்கஷ்டமென்று நினைத்து மனத்தளர்ச்சியுற்ற(அர்ஜுனனை) உற்சாகப்படுத்த [மனத்திட்பமுண்டாக]க் கூறுகிறார் :—ஞானம் என்பது - பணிவுமுதலானது (௧௩ - ௭, ௮, ௯, ௧௦, ௧௧). அறியவேண்டியபொருள் என்பது - "எது" என்பதுமுதலாக(௧௩ - ௧௨, ௧௩, ௧௪, ௧௫, ௧௬, ௧௭)கூறப்பெற்றது. (அறியவேண்டியதை) அறிந்தவிடத்து, (அதுவே, அந்த) அறியவேண்டியபொருளே அறிவின்பயனும்; ஆதலின், அறிவினால் அடையத்தக்கது எனப்படுகின்

𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌵𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌮𑍍 𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌣 𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 । 𑌤𑌤𑍍𑌰𑍈𑌵 𑌹𑌿 𑌏𑌤𑌤𑍍 𑌤𑍍𑌰𑌯𑌂 𑌉𑌪𑌲𑌭𑍍𑌯𑌤𑍇 ॥ கஎ ॥

𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌾𑌰𑍍𑌥𑍋𑌪𑌸𑌂𑌹𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑌃 𑌅𑌯𑌂 𑌶𑍍𑌲𑍋𑌕𑌃 𑌆𑌰𑌭𑍍𑌯𑌤𑍇—

கஅ. 𑌇𑌤𑌿 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌤𑌥𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌚𑍋𑌕𑍍𑌤𑌂 𑌸𑌮𑌾𑌸𑌤𑌃 ।
𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤 𑌏𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌯 𑌮𑌦𑍍𑌭𑌾𑌵𑌾𑌯𑍋𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

𑌇𑌤𑌿 𑌏𑌵𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌮𑍍 𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑌾𑌦𑌿 𑌧𑍃𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌂, 𑌤𑌥𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 𑌅𑌮𑌾𑌨𑌿𑌤𑍍𑌵𑌾𑌦𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌰𑍍𑌥𑌦𑌰𑍍𑌶𑌨𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑍍, 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌚 ‘𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌯𑌤𑍍 𑌤𑌤𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 ‘𑌤𑌮𑌸𑌃 𑌪𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇’ 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑌨𑍍𑌤𑌮𑍍, 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌸𑌮𑌾𑌸𑌤𑌃 𑌸𑌂𑌕𑍍𑌷𑍇𑌪𑌤𑌃 । 𑌏𑌤𑌾𑌵𑌾𑌨𑍍 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌃 𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌃 𑌗𑍀𑌤𑌾𑌰𑍍𑌥𑌶𑍍𑌚 𑌉𑌪𑌸𑌂𑌹𑍃𑌤𑍍𑌯 𑌉𑌕𑍍𑌤𑌃 ॥

𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑍇 𑌕𑌃 𑌅𑌧𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇— 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃 𑌮𑌯𑌿 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑍇 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑍇 𑌪𑌰𑌮𑌗𑍁𑌰𑍌 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑍇 𑌸𑌮𑌰𑍍𑌪𑌿𑌤𑌸𑌰𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌭𑌾𑌵𑌃 𑌯𑌤𑍍 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌶𑍃𑌣𑍋𑌤𑌿 𑌸𑍍𑌪𑍃𑌶𑌤𑌿 𑌵𑌾 “𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌵 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌃” 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂𑌗𑍍𑌰𑌹𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃 𑌸𑌃 𑌏𑌤𑌤𑍍 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌂 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌂

---

றது ; மற்று, அது அறியப்படுகின்றபொருளாகவுள்ளவளவிலே அறியவேண்டிய பொருளாம் [ப்ரஹ்மத்தை அறியவேண்டியதில்லைமையிலே, அது அறியப்படுகின்ற பொருள் ; அப்பொழுது அது அறியவேண்டிய பொருளாம் என்க]. அந்த இம்மூன்றும் எல்லாப்பிராணிகளுடைய ஹிருதயத்தில், புத்தியில் விசேஷமாய் உள்ளன ; அதனுள்ளேயன்றோ இம்மூன்றும் புலப்படுகின்றன. (ஆகவே, அவை தேசாந்தரத்தில் வெகுதூரத்தில் இல்லையெனத் தெளிக.) (கஎ)

பக்தியோடு மெய்யறிவைத் தேடவேண்டும்.

மேற்கூறிய விஷயங்களை முடிக்கும்பொருட்டாய் இச்சுலோகம் தொடங்கப்படுகின்றது :

கஅ. இவ்வாறுக்ஷேத்ரமும், ஞானமும், அறியவேண்டியபொருளும் சுருக்கமாகக் கூறப்பட்டன. என்பக்தன் இதனை அறிந்து எனது நிலைக்குத் தக்கோனாகிறான்.

க்ஷேத்ரமானது-மஹாபூதம்முதலாக(கங-ரு)உறுதியானதன்மை ஈறாக(கங-சு) சுருக்கமாய்க் கூறப்பட்டது. அவ்வாறே, ஞானமானது - பணிவுமுதலாக(கங - எ)உண்மையறிவை நோக்குதல் ஈறாக(கங - கக)சுருக்கமாய்க் கூறப்பட்டது. மேலும், அறியவேண்டியபொருளானது - "எது" (கங - கஉ) என்பதுமுதலாக "அப்பால்உள்ளது எனப்படுகின்றது" (கங - கஎ) என்பதுஈறாகச் சுருக்கமாய்க் கூறப்பட்டது. வேதப்பொருளெல்லாம் இவ்வளவுதான் ; கீதாப்பொருளெல்லாமும் இவ்வளவுதான் ; (அது இவ்வாறு சுருக்கி)முடித்துக்கூறப்பட்டது.

(வினா) :—எவன் இந்தமெய்யறிவிலே உரிமையுள்ளவனாகிறான் ? என்பது.

(விடை):—கூறுவோம் :—என்னுடைய பக்தன் : முற்றும்உணர்ந்த பரமேச்வரனை பரமாசார்யனாகிய வாஸுதேவனை என்னிடத்து எல்லாஆத்மஎண்ணத்தையும் வைத்தவன் [பகவானை எல்லாவற்றினுடைய ஆத்மாவாகக்கொண்டவன்] : எதனைக் காண்கின்றானோ, கேட்கின்றானோ, அல்லது தொடுகின்றானோ, "(அது)எல்லாமே பகவான் வாஸுதேவன்" என இத்தகைய கொள்கை புகுந்துகிடக்கும்புத்தியை

விஜ்ஞாய, மத்பாவாய மம பாவ: மத்பாவ: தஸ்மை மத்பாவாய உபபத்யதே மோக்ஷம் கச்சதி ॥ ௧௮ ॥

அத ஸப்தமே அத்யாயே ஈஶ்வரஸ்ய த்வே ப்ரக்ருதீ உபதிஷ்டே பராவரே க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞலக்ஷணே; 'ஏதத்யோனீனி பூதானி' இதி ச உக்தம். க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞப்ரக்ருதித்வயயோனித்வம் கதம் பூதானாம் இதி? அத அத: அனந்தரம் உச்யதே—

௧௯. ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்த்யநாதீ உபாவபி ।
விகாராம்ஶ்ச குணாம்ஶ்சைவ வித்தி ப்ரக்ருதிஸம்பவான் ॥

ப்ரக்ருதிம் புருஷம் சைவ ஈஶ்வரஸ்ய ப்ரக்ருதீ, தௌ ப்ரக்ருதிபுருஷௌ உபாவபி அநாதீ வித்தி, ந வித்யதே ஆதி: யயோ: தௌ அநாதீ। நித்யஸ்ய ஈஶ்வரஸ்ய தச்சக்த்யோரபி யுக்தம் நித்யத்வேன பவிதும்। ப்ரக்ருதி-த்வயவத்த்வமேவ ஹி ஈஶ்வரஸ்ய ஈஶ்வரத்வம் । யாப்யாம் ப்ரக்ருதிப்யாம் ஈஶ்வர: ஜக-துத்பத்திஸ்திதிப்ரலயஹேது: தே அநாதீ ஸத்யௌ ஸம்ஸாரஸ்ய காரணம் ॥

"ந ஆதீ அநாதீ" இதி தத்புருஷஸமாஸம் கேசித் வர்ணயந்தி। தேன ஹி ஈஶ்வரஸ்ய காரணத்வம் ஸித்யதி। யதி புன: ப்ரக்ருதிபுருஷாவேவ நித்யௌ ஸ்யாதாம், தத்க்ருதமேவ ஜகத், ந ஈஶ்வரஸ்ய ஜகத: கர்த்ருத்வம் இதி ॥

---

யுடையவன். அந்த என்பக்தன் மேற்கூறிய மெய்யறிவைப் பெற்று எனதுநிலைக்கு உரியவனாகிறான்; மோக்ஷத்தை அடைகிறான். (௧௮)

பிரகிருதியும், புருஷனும் நித்தியமானவை.

இனி, ஏழாம் அத்தியாயத்தினுள் தாழ்ந்ததும் உயர்ந்ததுமான "க்ஷேத்ரம்" "க்ஷேத்ரஜ்ஞன்" என்னும் இரண்டுப்பிரகிருதிகள் ஈச்வரனுக்கு விவரிக்கப்பட்டன; அன்றியும், "பூதங்கட்கு இவை பிறப்பிடம்" (எ - ௬) எனவும் கூறப்பட்டது. க்ஷேத்ரம், க்ஷேத்ரஜ்ஞன் என்னும் இரண்டுப்பிரகிருதிகளும் பூதங்கட்குப் பிறப்பிடமாதல் எப்படி? —என்னும் (வினவைச் சங்கித்து) இவ்விஷயத்திற்கு இங்ஙனம் விடைகூறப் படுகின்றது:

௧௯. பிரகிருதி, புருஷன் இரண்டனையும் அநாதியாக அறிந்துகொள். விகாரங்களையும் குணங்களையும் பிரகிருதியினின்றும் பிறந்தவையாகத் தெரிந்துகொள்.

பிரகிருதியும் புருஷனும் ஈச்வரனுடைய பிரகிருதிகள். அந்தப்பிரகிருதி புருஷன் என்றஇரண்டிற்கும் ஆதி இல்லை, முதல் இல்லை (என்று நீ) அறியக்கடவாய். ஈச்வரன் நித்தியமானவன் ஆதலால், அவனது பிரகிருதிகளும் நித்தியமாயிருத்தல் நேர். இரண்டுப் பிரகிருதிகளையும் உடையவனாதலேயன்றோ ஈச்வரன் ஈச்வரனாயிருத்தலென்பது. பிரபஞ்சம் உண்டாதற்கும், நிலைத்தற்கும், அழிதற்கும் ஈச்வரன் எந்த இரண்டுபிரகிருதிகளால் காரணமாகின்றானோ, அந்த இரண்டும் அநாதியாய் ஸம்ஸாரத்திற்குக் காரணமாம்.

சிலர் "(அப்பிரகிருதிகள்) ஆதியானவையல்ல" என, தத்புருஷஸமாஸத்தைச் சொல்லுகிறார்கள். அதனால், ஈச்வரன் காரணமாதல் அமைகின்றதாம். மற்று, பிரகிருதி புருஷன் இரண்டுமே நித்தியமானவையாயின், பிரபஞ்சம் அவற்றாலேயே படைக்கப்பட்டது; ஈச்வரன் பிரபஞ்சத்திற்குக் கர்த்தாவாகமாட்டான் என்று (ஆகும்).

தத் அஸத்; ப்ராக் ப்ரக்ருதிபுருஷயோ: உத்பத்தே: ஈஶிதவ்யாபாவாத் ஈஶ்வரஸ்ய அநீஶ்வரத்வப்ரஸங்காத், ஸம்ஸாரஸ்ய நிர்நிமித்தத்வே அநிர்மோக்ஷப்ரஸங்காத் ஶாஸ்த்ராநர்தக்யப்ரஸங்காத், பந்தமோக்ஷாபாவப்ரஸங்காச்ச ।

நித்யத்வே புந: ஈஶ்வரஸ்ய ப்ரக்ருத்யோ: ஸர்வம் ஏதத் உபபந்நம் பவேத் । கதம் ?— விகாராம்ஶ்ச புத்த்யாதிதேஹாந்தாந் குணாம்ஶ்ச ஸுகது:கமோஹப்ரத்யயாகாரபரிணதாந் வக்ஷ்யமாணாந் வித்தி ஜாநீஹி ப்ரக்ருதிஸம்பவாந், ப்ரக்ருதி: ஈஶ்வரஸ்ய விகாரகாரணஶக்தி: த்ரிகுணாத்மிகா மாயா, ஸா ஸம்பவோ யேஷாம் விகாராணாம் குணாநாம் ச தாந் விகாராந் குணாந் ச வித்தி ஜாநீஹி ப்ரக்ருதிஸம்பவாந் ப்ரக்ருதிபரிணாமாந் ॥ ௧௯ ॥

கே புந: தே விகாரா: குணாஶ்ச ப்ரக்ருதிஸம்பவா: இதி? உச்யதே—

௨௦. கார்யகாரணகர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே ।
புருஷ: ஸுகது:காநாம் போக்த்ருத்வே ஹேதுருச்யதே ॥

---

அது சரியன்று; ஏனெனில், பிரகிருதியும் புருஷனும் உண்டாவதற்குமுன் ஆளப்படும்பொருளொன்றும் இல்லாமையினுல் ஈச்வரன்[ஆளுபவன்]ஈச்வரனில்லை என்ருகும்: அன்றியும், மோக்ஷமில்லை என்ருகும்: சாஸ்திரம் வீண் என்ருகும்: பந்தமும், மோக்ஷமும் இல்லையென்ருகும்: (பிரகிருதி, புருஷன் என்றவற்றின் சார்பு இல்லாமலே ஈச்வரன் ஸம்ஸாரத்திற்குக் காரணமாயின், முக்தர்களும் மீண்டும் ஸம்ஸாரத்தில் வந்து உழலுதலைத்தடுத்தற்கு ஒன்றுமில்லை. ஆகவே,மோக்ஷத்தைக்கூறும்நூல் வீணும். மற்றும், எப்பொழுதாவது பந்தமும்,மோக்ஷமும் இல்லையாயின், பின்பு அவை உண்டாதற்குக் காரணமும் இல்லை.—ஆ.)

பிரகிருதியும், புருஷனும் ஸம்ஸாரத்திற்குக் காரணமாம்.

மற்று, ஈச்வரனுடைய பிரகிருதிகள் நித்தியமானவையாயின், இதெல்லாம் பொருந்தியதாகும்.—எப்படி ?—வேறுபாட்டிற்குக் காரணமான ஈச்வரசக்தியாய், முக்குணவடிவமான மாயையானது- புத்திமுதலாக உடம்புஈருகவுள்ளவையாய் மேலே கூறப்படும் விகாரங்கட்கும், இன்ப துன்ப மயக்கவுணர்ச்சிகளின் வடிவங்களாய் மாறியுள்ளவையாய் மேலே கூறப்படும் குணங்கட்கும் பிறப்பிடம் என்று அறிந்துகொள் : (அவை) பிரகிருதியின்வேறுபாடு எனத்தெரிந்துகொள். (பிரகிருதிக்கு ஆதியில்லாவளவிலே, விகாரங்களும் குணங்களும் அப்பிரகிருதியின் கார்யமாதலால், ஆத்மா நிர்விகாரி எனவும், நிர்க்குணம் எனவும் பெறப்படுகின்றன.—ஆ.) (௧௯)

ஆனுல், பிரகிருதியைப் பிறப்பிடமாகவுடைய அந்த விகாரங்களும், குணங்களும் யாவை ? என்பது.—கூறுகிறுர் :

௨௦. கார்யத்தையும், கருவிகளையும் உண்டாக்குவதிலே பிரகிருதி - காரணம் எனப்படுகின்றது. இன்பதுன்பங்களை அநுபவிப்பதிலே புருஷன் – காரணம் எனப்படுகிறுன்.

𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑌣𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇—𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂, 𑌕𑌰𑌣𑌾𑌨𑌿 𑌤𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌤𑍍𑌰𑌯𑍋𑌦𑌶। 𑌦𑍇𑌹𑌾𑌰𑌮𑍍𑌭𑌕𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌪𑌞𑍍𑌚 𑌵𑌿𑌷𑌯𑌾𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑌮𑍍𑌭𑌵𑌾𑌃 𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑌾𑌃 𑌇𑌹 𑌕𑌾𑌰𑍍𑌯𑌗𑍍𑌰𑌹𑌣𑍇𑌨 𑌗𑍃𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌗𑍁𑌣𑌾𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑌮𑍍𑌭𑌵𑌾𑌃 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌮𑍋𑌹𑌾𑌤𑍍𑌮𑌕𑌾𑌃 𑌕𑌰𑌣𑌾𑌶𑍍𑌰𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌕𑌰𑌣𑌗𑍍𑌰𑌹𑌣𑍇𑌨 𑌗𑍃𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑌣𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌮𑍍 𑌉𑌤𑍍𑌪𑌾𑌦𑌕𑌤𑍍𑌵𑌂 𑌯𑌤𑍍 𑌤𑌤𑍍 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑌣𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂, 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑌣𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇 𑌹𑍇𑌤𑍁𑌃 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 𑌆𑌰𑌮𑍍𑌭𑌕𑌤𑍍𑌵𑍇𑌨, 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌏𑌵𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑌣𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇𑌨 𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃॥

'𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇' 𑌇𑌤𑍍𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌪𑌿 𑌪𑌾𑌠𑍇—𑌕𑌾𑌰𑍍𑌯𑌂, 𑌯𑌤𑍍 𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌃 𑌤𑌤𑍍 𑌤𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌵𑌿𑌕𑌾𑌰𑌃, 𑌵𑌿𑌕𑌾𑌰𑌿 𑌕𑌾𑌰𑌣𑌂, 𑌤𑌯𑍋𑌃 𑌵𑌿𑌕𑌾𑌰𑌵𑌿𑌕𑌾𑌰𑌿𑌣𑍋𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌯𑍋𑌃 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇—𑌇𑌤𑌿 𑌤𑌾𑌨𑍍𑌯𑍇𑌵 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌾𑌨𑌿 𑌉𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌅𑌥𑌵𑌾—𑌷𑍋𑌡𑌶 𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂, 𑌸𑌪𑍍𑌤 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌵𑌿𑌕𑍃𑌤𑌯𑌃 𑌕𑌾𑌰𑌣𑌂, 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇 𑌹𑍇𑌤𑍁𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇, 𑌆𑌰𑌮𑍍𑌭𑌕𑌤𑍍𑌵𑍇𑌨𑍈𑌵 ॥

𑌪𑍁𑌰𑍁𑌷𑌶𑍍𑌚 𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌯𑌥𑌾 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌤𑌤𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—𑌪𑍁𑌰𑍁𑌷𑌃-

---

கார்யமென்பது - சரீரம். கருவிகள் என்பன - (ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்துகர்மேந்திரியங்கள், மனம், புத்தி, அஹங்காரம் எனப்)பதின்மூன்று. "கார்யம்" என்றதனால் - (வீடுகட்டுவதுபோல) சரீரத்தைக் கட்டுகின்ற ஐந்து பூதங்களும், பிரகிருதியைப் பிறப்பிடமாகவுடைய கீழ்க்கூறிய விகாரங்களான ஐந்து இந்திரிய விஷயங்களும் இங்குக் கொள்ளப்படுகின்றன. "கருவிகள்" என்றமையினால் - பிரகிருதியைப் பிறப்பிடமாகவுடைய இன்ப துன்ப மயக்கவடிவுள்ள குணங்களும் கொள்ளப்படுகின்றன ; கருவிகள் (அவற்றிற்குத்) தங்குமிடமாதலின். அந்தக் கார்யத்தையும் கருவிகளையும் [சரீரம்முதலியவற்றையும், இன்பதுன்பம் முதலியவத்றையும்] உண்டாக்கும் விஷயத்திலே பிரகிருதியானது காரணம் எனப்படுகின்றது ; (அவற்றை) உண்டாக்குவதாதலின். இவ்வாறாக, பிரகிருதியானது கார்யத்தையும் கருவிகளையும் செய்வதாதலால் ஸம்ஸாரத்திற்குக் காரணமாம் என்க.

"கார்யத்தையும், காரணத்தையும் உண்டாக்குவதிலே" என்ற இப்பாடத்திலும் (இவ்வாறு பொருள்கொள்க) :—எது எதனுடைய வேறுபாடோ, அது அதனுடைய கார்யம், விகாரம். விகாரத்தையுடையது - விகாரி : காரணம் என்க. அந்த விகாரவிகாரியான கார்யகாரணத்தை உண்டாக்கும்விஷயத்திலே (பிரகிருதி காரணமாம்) என அவையே [கீழே உரைத்துள்ள கார்யமும், கருவிகளுமே] கார்யகாரணங்கள் எனப்படுகின்றன. அல்லது, (வேறுவிதமாக உரையிடலாம் :—இந்திரியங்கள் பத்து, மனம் ஒன்று, இந்திரியவிஷயங்கள் ஐந்து ஆகப்) பதினாறு விகாரங்களும் கார்யமாம். (மஹத், அஹங்காரம், ஐந்து தன்மாத்ரங்கள் என மூலப்) பிரகிருதியின் விகாரங்கள் ஏழும் காரணமாம். அவற்றை உண்டாக்கும் விஷயத்திலே பிரகிருதி காரணம் எனப்படுகின்றது ; (அவற்றையெல்லாம்) உண்டாக்குவதேயாதலின்.

இனி, புருஷன் ஸம்ஸாரத்திற்கு எவ்வாறு காரணமாகிறானோ, அது கூறப்படுகின்றது : புருஷன், ஜீவன், க்ஷேத்ரஜ்ஞன், போக்தா என்பன - ஒருபொருளுள்ள

𑌷𑌃 𑌜𑍀𑌵𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌃 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌇𑌤𑌿 𑌪𑌰𑍍𑌯𑌾𑌯𑌃, 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑌾𑌂 𑌭𑍋𑌗𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇 𑌉𑌪𑌲𑌬𑍍𑌧𑍃𑌤𑍍𑌵𑍇 𑌹𑍇𑌤𑍁𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

𑌕𑌥𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌅𑌨𑍇𑌨 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇𑌨 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇𑌨 𑌚 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌪𑍁𑌰𑍁𑌷𑌯𑍋𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌕𑌾𑌰𑌣𑌤𑍍𑌵𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 ?

𑌅𑌤𑍍𑌰 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇𑌣 𑌹𑍇𑌤𑍁𑌫𑌲𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃 𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌾𑌭𑌾𑌵𑍇, 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌚 𑌚𑍇𑌤𑌨𑌸𑍍𑌯 𑌅𑌸𑌤𑌿 𑌤𑌦𑍍𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇, 𑌕𑍁𑌤𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍? 𑌯𑌦𑌾 𑌪𑍁𑌨𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇𑌣 𑌹𑍇𑌤𑍁𑌫𑌲𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌪𑌰𑌿𑌣𑌤𑌯𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍍𑌯𑌾 𑌭𑍋𑌗𑍍𑌯𑌯𑌾 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌸𑍍𑌯 𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇𑌨 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌰𑍂𑌪𑌃 𑌸𑌂𑌯𑍋𑌗𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌤𑌦𑌾 𑌸𑌂𑌸𑌾𑌰𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿 । 𑌅𑌤𑌃 𑌯𑌤𑍍 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌪𑍁𑌰𑍁𑌷𑌯𑍋𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇𑌨 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇𑌨 𑌚 𑌸𑌂𑌸𑌾𑌰𑌕𑌾𑌰𑌣𑌤𑍍𑌵𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍, 𑌤𑌤𑍍 𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 ॥

𑌕𑌃 𑌪𑍁𑌨𑌃 𑌅𑌯𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑍋 𑌨𑌾𑌮 ?

𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌸𑌂𑌭𑍋𑌗𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌃 । 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑌾𑌂 𑌸𑌂𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌿𑌤𑍍𑌵𑌮𑍍 𑌇𑌤𑌿 ॥ ௨௦ ॥

---

சொற்கள். அநுபவிக்கப்படும் இன்பதுன்பங்களை உணரும்விஷயத்திலே புருஷன் காரணமாகக் கூறப்படுகிறான். (இங்குக் கூறப்பட்ட ஜீவன் - ஸோபாதிக ஜீவன், உபாதியுள்ளஜீவன். அவன் வாஸ்தவத்திலே நிருபாதிகன், உபாதியில்லாதவன், ப்ரஹ்மாயிருப்பவன் என்பதையும் நோக்கிக்கொள்க.)

(ஆக்ஷேபம்) :—ஆனல், கார்யகாரணங்களை உண்டாக்குவதும், இன்பதுன்பங்களை அநுபவிப்பதுமாகிய இவற்றினல் பிரகிருதியும் புருஷனும் ஸம்ஸாரத்திற்குக் காரணமாதல் எப்படிச் சொல்லப்படுகின்றது? என்பது.

(ஸமாதாநம்) :—இதில்கூறுவோம் : தேகேந்திரியங்களாக, இன்பதுன்பங்களாக காரணகாரியங்களாகப் பிரகிருதிக்கு வேறுபாடு இல்லாவளவிலே, உணர்வுப்பொருளான புருஷனுக்கு அவற்றை உணர்தலென்பதும் இல்லாவளவிலே, ஸம்ஸாரம் எங்கிருந்துவரும்? (வாராது. ஏனெனில், என்றும் விடுபட்ட ஆத்மாவிற்கு ஸம்ஸாரம் தானகவே இல்லையென்பதாம்.—ஆ.) ஆனல், தேகேந்திரியங்களாக, இன்ப துன்பங்களாக, காரணகார்யங்களாக வேறுபட்டு அநுபவிக்கப்படும் பிரகிருதியோடு அதற்கு மாறான புருஷனுக்கு அநுபவிக்குந்தன்மையினல் அவித்யாவடிவமாகிய ஸம்பந்தம் எப்பொழுது இருக்குமோ, அப்பொழுது ஸம்ஸாரம் இருக்குமென்க. ஆகவே, பிரகிருதியும் புருஷனும் (முறையே) தேகேந்திரியங்களை உண்டாக்குவதனும், இன்பதுன்பங்களை அநுபவிப்பதனுலும் ஸம்ஸாரத்திற்குக் காரணமாம் என்று எது கூறப்பட்டதோ, அது நேர்.

(ஆக்ஷேபம்) :—ஆனல், இந்த ஸம்ஸாரமென்பது யாது? (அவிகாரியான ஆத்மாவிற்கு ஸம்ஸாரம் தகாது.—ஆ.)

(ஸமாதாநம்) :—ஸம்ஸாரமென்பது - இன்பதுன்பங்களை அநுபவித்தல். ஸம்ஸாரியாயிருத்தலென்பது - புருஷன் இன்பதுன்பங்களை அநுபவிப்பதாம். (இன்பத்தையேனும், துன்பத்தையேனும் நேரே உணர்தல் - போகம் என்பது. நிர்விகாரமாகவே, பார்த்தபடியே பார்த்துநிற்கும்பொருளுக்கு அப்போகந்தான் ஸம்ஸாரமாம். அத்தகையபோகமுடைமை - இது ஸம்ஸாரியாயிருத்தலென்பது.—ஆ.) (௨௦)

𑌯𑌤𑍍 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑌾𑌂 𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌿𑌤𑍍𑌵𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌉𑌕𑍍𑌤𑌂, 𑌤𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍 𑌕𑌿𑌂𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌮𑍍 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௨௧. 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑍍𑌥𑍋 𑌹𑌿 𑌭𑍁𑌂𑌕𑍍𑌤𑍇 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑌾𑌨𑍍 𑌗𑍁𑌣𑌾𑌨𑍍 ।
𑌕𑌾𑌰𑌣𑌂 𑌗𑍁𑌣𑌸𑌂𑌗𑍋𑌽𑌸𑍍𑌯 𑌸𑌦𑌸𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌜𑌨𑍍𑌮𑌸𑍁 ॥

𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑍍𑌥𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍌 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌯𑌾𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌰𑍂𑌪𑍇𑌣 𑌪𑌰𑌿𑌣𑌤𑌾𑌯𑌾𑌂 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑍍𑌥𑌃—𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌮𑌾𑌤𑍍𑌮𑌤𑍍𑌵𑍇𑌨𑍋𑌪𑌗𑌤𑌃 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍—𑌹𑌿 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍, 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌭𑍁𑌂𑌕𑍍𑌤𑍇—𑌉𑌪𑌭𑍁𑌂𑌕𑍍𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃—𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌤𑌃 𑌜𑌾𑌤𑌾𑌨𑍍 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌮𑍋𑌹𑌾𑌕𑌾𑌰𑌾𑌭𑌿𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌨𑍍 𑌗𑍁𑌣𑌾𑌨𑍍 "𑌸𑍁𑌖𑍀, 𑌦𑍁𑌃𑌖𑍀, 𑌮𑍂𑌢𑌃, 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌃, 𑌅𑌹𑌮𑍍" 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑍍 । 𑌸𑌤𑍍𑌯𑌾𑌮𑌪𑌿 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌮𑍋𑌹𑍇𑌷𑍁 𑌗𑍁𑌣𑍇𑌷𑍁 𑌭𑍁𑌜𑍍𑌯𑌮𑌾𑌨𑍇𑌷𑍁 𑌯𑌃 𑌸𑌂𑌗𑌃 𑌆𑌤𑍍𑌮𑌭𑌾𑌵𑌃 𑌸𑌃 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌂 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 𑌅𑌸𑍍𑌯 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌜𑌨𑍍𑌮𑌨𑌃, '𑌸 𑌯𑌥𑌾𑌕𑌾𑌮𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌤𑌤𑍍𑌕𑍍𑌰𑌤𑍁𑌰𑍍𑌭𑌵𑌤𑌿' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌃 । 𑌤𑌦𑍇𑌤𑌤𑍍 𑌆𑌹—𑌕𑌾𑌰𑌣𑌂 𑌹𑍇𑌤𑍁𑌃 𑌗𑍁𑌣𑌸𑌂𑌗𑌃 𑌗𑍁𑌣𑍇𑌷𑍁 𑌸𑌂𑌗𑌃 𑌅𑌸𑍍𑌯 𑌭𑍋𑌕𑍍𑌤𑍁𑌃 𑌸𑌦𑌸𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌜𑌨𑍍𑌮𑌸𑍁, 𑌸𑌚𑍍𑌚 𑌅𑌸𑌚𑍍𑌚 𑌸𑌦𑌸𑌤𑍀, 𑌤𑌯𑍋𑌃 𑌯𑍋𑌨𑌯𑌃 𑌸𑌦𑌸𑌦𑍍𑌯𑍋𑌨𑌯𑌃, 𑌤𑌾𑌸𑍁 𑌸𑌦𑌸𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 𑌜𑌨𑍍𑌮𑌾𑌨𑌿 𑌸𑌦𑌸𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌜𑌨𑍍𑌮𑌾𑌨𑌿, 𑌤𑍇𑌷𑍁 𑌸𑌦𑌸𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌜𑌨𑍍𑌮𑌸𑍁 𑌵𑌿𑌷𑌯𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌂 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 𑌗𑍁𑌣𑌸𑌂𑌗𑌃 ॥

---

அறியாமையும், அபிமாநமும் ஸம்ஸாரியாயிருத்தற்குக் காரணம்.

ஸம்ஸாரியாயிருத்தலென்பது - புருஷன் இன்பதுன்பங்களை அநுபவிப்பவனுதல் என எது கூறப்பட்டதோ, அது [அவற்றை அநுபவித்தலானது] அவனுக்கு எதனாலாவது? என்பது. கூறுவோம் :

௨௧. பிரகிருதியில் தங்கிய புருஷன் பிரகிருதியினின்றும் தோன்றிய குணங்களை அநுபவிக்கிறுன். இவனுக்குக் குணங்களிலேயுள்ள பற்றுனது நல்லனவும் தீயனவுமான பிறவிகளிலே பிறத்தற்குக் காரணம்.

அநுபவிக்கின்ற புருஷன், தேகேந்திரியவடிவமாக வேறுபட்ட அவித்யையென்னும் பிரகிருதியில் தங்கிநிற்பவன் : பிரகிருதியை [உடம்பு இந்திரியங்களின் சேர்க்கையை] ஆத்மாவாகக்கொண்டவன் என்பது ; ஆதலால், இன்பவடிவாகவும், துன்பவடிவாகவும், மயக்கவடிவாகவும் பிரகிருதியினின்றும் தோன்றியகுணங்களை "நான் இன்பமுடையவன், துன்பமுடையவன், மயங்கியவன், அறிவுள்ளவன்" என இவ்வாறு அநுபவிக்கிறுன் : உணர்கிறுன் என்பது பொருள். அவித்யை (பிறப்பிற்குக் காரணமாய்) இருந்தாலும், அநுபவிக்கப்படுகின்ற இன்பம்துன்பம் மயக்கம் என்ற குணங்களின்மீது பற்றுனது, தான்என்னும் எண்ணமானது [அக்குணங்களே ஆத்மா என்னும் நினைப்பு] எதுவோ, அது - இப்புருஷனது பிறப்பிற்குமுக்கியகாரணமாம்; "அவன் எதனை விரும்புகிறவனுய் இருக்கின்றுனே, அதனை [அதற்கான உபாயத்தைத் தேடவேண்டுமென்று] கொள்கிறவனுகிறுன்" (பி - ச - ச - ரு) என்னும்சுருதியினுலென்க. அந்த இதனை அருளிச்செய்கிறுர் :—அநுபவிப்பவனுக்குக் குணங்களின்மீதுள்ள அபிமானமானது - நல்லபிறவிகளிலும், தீயபிறவிகளிலும் பிறக்கும்விஷயத்திலே காரணம்.

௪. 𑌸𑌰𑍍𑌵𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌮𑍂𑌰𑍍𑌤𑌯𑌃 𑌸𑌂𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌯𑌾𑌃 ।
𑌤𑌾𑌸𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌮𑌹𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌃 𑌅𑌹𑌂 𑌬𑍀𑌜𑌪𑍍𑌰𑌦𑌃 𑌪𑌿𑌤𑌾 ॥

𑌦𑍇𑌵𑌪𑌿𑌤𑍃𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌪𑌶𑍁𑌮𑍃𑌗𑌾𑌦𑌿𑌸𑌰𑍍𑌵𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 𑌸𑌰𑍍𑌵𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌮𑍂𑌰𑍍𑌤𑌯𑌃 𑌦𑍇𑌹𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌃 𑌮𑍂𑌰𑍍𑌛𑌿𑌤𑌾𑌙𑍍𑌗𑌾𑌵𑌯𑌵𑌾𑌃 𑌮𑍂𑌰𑍍𑌤𑌯𑌃 𑌸𑌂𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌯𑌾𑌃. 𑌤𑌾𑌸𑌾𑌂 𑌮𑍂𑌰𑍍𑌤𑍀𑌨𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌮𑌹𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌾𑌵𑌸𑍍𑌥𑌂 𑌯𑍋𑌨𑌿𑌃 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 𑌅𑌹𑌮𑍍 𑌈𑌶𑍍𑌵𑌰𑌃 𑌬𑍀𑌜𑌪𑍍𑌰𑌦𑌃 𑌗𑌰𑍍𑌭𑌾𑌧𑌾𑌨𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 ॥ ௪ ॥

𑌕𑍇 𑌗𑍁𑌣𑌾𑌃? 𑌕𑌥𑌂 𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑍀𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௫. 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌰𑌜𑌸𑍍𑌤𑌮 𑌇𑌤𑌿 𑌗𑍁𑌣𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑌂𑌭𑌵𑌾𑌃 ।
𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌦𑍇𑌹𑍇 𑌦𑍇𑌹𑌿𑌨𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥

𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌰𑌜𑌃 𑌤𑌮𑌃 𑌇𑌤𑌿 𑌏𑌵𑌂𑌨𑌾𑌮𑌾𑌨𑌃 । ‘𑌗𑍁𑌣𑌾𑌃’ 𑌇𑌤𑌿 𑌪𑌾𑌰𑌿𑌭𑌾𑌷𑌿𑌕𑌃 𑌶𑌬𑍍𑌦𑌃, 𑌨 𑌰𑍂𑌪𑌾𑌦𑌿𑌵𑌤𑍍 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 𑌗𑍁𑌣𑌾𑌃 । 𑌨 𑌗𑍁𑌣𑌗𑍁𑌣𑌿𑌨𑍋𑌃 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑍍 𑌅𑌤𑍍𑌰 𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑌿𑌤𑌮𑍍 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌗𑍁𑌣𑌾 𑌇𑌵 𑌨𑌿𑌤𑍍𑌯𑌪𑌰𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿, 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍; 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌂 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑍀𑌵 । 𑌤𑌮𑍍 𑌆𑌸𑍍𑌪𑌦𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 𑌇𑌤𑌿 ‘𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑌿’ 𑌇𑌤𑌿 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌤𑍇 𑌚 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑌂𑌭𑌵𑌾𑌃 𑌭𑌗𑌵-

---

பவிக்கவேண்டிய உடம்பொடு கூட்டுவித்தற்பொருட்டுப் பிரகிருதியினுள் சிதாபாஸ வென்னும் ரேதஸை விடுதல்மூலமாக மாயாவிருத்தியாகிய கர்ப்பத்தை நான் வைக்கிறேன். அங்ஙனம் ஆகாசம், காற்று, ஒளிமுதலியவை தோன்றுதலென்னும் நிலைமைகள் உண்டாக, அந்தக் கர்ப்பாதாநத்தினின்றும் ஹிரண்யகர்ப்பன்முதலிய பொருள்கள் பிறக்கின்றன.—ம.) (௩)

௪. கௌந்தேய! எல்லாக் கருப்பைகளிலும் எந்த உருவங்கள் உண்டாகின்றனவோ, அவற்றிற்குப் பெரிய ப்ரஹ்மம் கருப்பை. நான் விதைகொடுக்கும் தந்தை.

எல்லாக் கருப்பைகளிலும் - தேவர், பிதிருக்கள், மனிதர், ஆடுமாடுகள், விலங்குகள் முதலியவற்றிலும். உருவங்கள் - பெரியசிறிய உறுப்புக்கள் ஒருங்கே அமைந்துள்ள உடம்புவடிவமான உருவங்கள். அவ்வுருவங்கட்கு எல்லாநிலைமைகளுமுள்ள பெரிய ப்ரஹ்மம்[பிரகிருதி]காரணம். ஈச்வரனாகிய நான் விதையைக் கொடுக்கும் தந்தை, கர்ப்பாதாநத்தைச் செய்பவன். (௪)

குணங்கள், அபிமானமுள்ள ஜீவனைக் கட்டுறுத்துகின்றன.

குணங்கள் யாவை? எவ்வாறு கட்டுறுத்துகின்றன? என்பது.—கூறுவோம்:

௫. ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் குணங்கள் பிரகிருதியைப் பிறப்பிடமாக வுடையவை; மஹாபாஹோ! அழிவில்லாததேஹியை தேகத்தில் இறுக்கிக்கட்டுகின்றன.

(குணங்கள்) ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் பெயருடையவை. ‘‘குணங்கள்’’ என்பது - பரிபாஷையினால் வந்த சொல். (அவை) நிறம்முதலியனபோல, திரவியத்தை [ஒருபொருளை]ச் சார்ந்துள்ள பண்புகளல்ல. (குணங்களென்பன - பிரகிருதியின் வடிவமேயாதலால், எல்லாவற்றிற்கும் ஆதாரமாயுள்ளவை; ஆகவே, திரவியத்தைச் சார்ந்திரா.—ஆ.) இங்குச் சொல்லக் கருதியது - குண குணிகளின் வேற்றுமையன்று [குணம் வேறாயுள்ளது, குணத்தையுடைய குணி வேறாயுள்ளது என்பது அன்று]. ஆதலால், பண்புகள் (திரவியங்கட்கு அதீனமாயிருப்பது) போல, (குணங்கள்) அவித்யா வடிவுள்ளவையாதலால் க்ஷேத்ரஜ்ஞனுக்கு எப்பொழுதும் அதீனமானவை (என்றுகுணங்கள் எனப்படுகின்றன. அவை) க்ஷேத்ரஜ்ஞனைக் கட்டுறுத்துகின்றனபோலும்; அவனை

𑌨𑍍𑌮𑌾𑌯𑌾𑌸𑌂𑌭𑌵𑌾𑌃 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌇𑌵 𑌹𑍇 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋, 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑍌 𑌸𑌮𑌰𑍍𑌥𑌤𑌰𑍌 𑌆𑌜𑌾𑌨𑍁𑌪𑍍𑌰𑌲𑌮𑍍𑌬𑍌 𑌬𑌾𑌹𑍂 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌃 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍁𑌃, 𑌹𑍇 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌦𑍇𑌹𑍇 𑌶𑌰𑍀𑌰𑍇 𑌦𑍇𑌹𑌿𑌨𑌂 𑌦𑍇𑌹𑌵𑌨𑍍𑌤𑌮𑍍 𑌅𑌵𑍍𑌯𑌯𑌮𑍍—𑌅𑌵𑍍𑌯𑌯𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍 '𑌅𑌨𑌾𑌦𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍍𑌲𑍋𑌕𑍇𑌨 ॥

𑌨𑌨𑍁 "𑌦𑍇𑌹𑍀 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇" 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌤𑌤𑍍, 𑌕𑌥𑌮𑍍 𑌇𑌹, '𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑌿' 𑌇𑌤𑌿 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇?

𑌪𑌰𑌿𑌹𑍃𑌤𑌮𑍍 𑌅𑌸𑍍𑌮𑌾𑌭𑌿𑌃 𑌇𑌵𑌶𑌬𑍍𑌦𑍇𑌨 '𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌇𑌵' 𑌇𑌤𑌿 ॥ ௫ ॥

𑌤𑌤𑍍𑌰 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌯𑍈𑌵 𑌤𑌾𑌵𑌤𑍍 𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

𑌸𑍂. 𑌤𑌤𑍍𑌰 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌮𑌨𑌾𑌮𑌯𑌮𑍍 ।
𑌸𑍁𑌖𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌚𑌾𑌨𑌘 ॥

𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌸𑍍𑌫𑌟𑌿𑌕𑌮𑌣𑌿𑌃 𑌇𑌵 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌮𑍍 𑌅𑌨𑌾𑌮𑌯𑌂 𑌨𑌿𑌰𑍁𑌪𑌦𑍍𑌰𑌵𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 । 𑌕𑌥𑌮𑍍? —𑌸𑍁𑌖𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 "𑌸𑍁𑌖𑍀 𑌅𑌹𑌮𑍍" 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌷𑌯𑌭𑍂-

---

ஆதாரமாகக்கொண்டு தம்மைநிலைப்படுத்திக்கொள்கின்றன ; ஆகவே, "கட்டுறுத்துகின்றன" எனக் கூறப்படுகின்றது. அவை அழிவில்லாத தேகியை, தேகத்தையுடையவனை [உடம்பையே ஆத்மாவாகக் கொண்டவனை—ஆ.] தேகத்தில் இறுக்கிக்கட்டுகின்றனபோலும். (ஒருபாத்திரத்திலுள்ள நீரானது தனக்கு உண்டாகும் அசைவென்னும் விகாரத்தை, பிரதிபிம்பமயக்கத்தால் ஆகாசத்திலுள்ள ஸூர்யனுக்கு நிகழ்வது போலக் காட்டுகின்றது ; அதாவது, அசையும் ஜலமானது ஸூர்யனை அசைவது போலத் தோற்றுவிக்கின்றது. அதுபோல, குணங்கள் தமக்கு உண்டாகும் விகாரங்களை ஆத்மாவிற்கு நிகழ்வனபோலக் காட்டுகின்றன.—ம.) மஹாபாஹு - முழந்தாளளவு நீண்ட வலிய பெரிய கைகளுடையவன். (ஆத்மாவிற்கு) அழிவின்மையானது "அநாதியாதலால்" (௧௩ - ௩௧) என்று தொடங்கும் சுலோகத்தினால் கூறப்பட்டது.

(ஆக்ஷேபம்) :—ஆயின், "தேகியானவன் கறைப்படுத்தப்படுவதில்லை" (௧௩ - ௩௧) எனக் கூறப்பட்டது. அது இங்கே 'கட்டுறுத்துகின்றன' என எவ்வாறு வேறுவிதமாகக் கூறப்படுகின்றது ?

(ஸமாதாநம்) :—"கட்டுறுத்துகின்றனபோலும்" எனப் போலும் என்னும் சொல்லினால் (அதனை) யாம் பரிகரித்துள்ளோம். (௫)

குணங்களது இயல்பும், செய்கைகளும்.

இனி, ஸத்துவம்முதலியவற்றுள் ஸத்துவகுணத்திற்கே முதலில் லக்ஷணம் கூறுகிறார் :

ஸூ. அவற்றுள், ஸத்துவகுணம் மாசற்றதாதலால் துலக்கமானது, தொந்தரையில்லாதது ; பாவமற்றோனே ! இன்பப்பற்றினால் (ஒருவனைக்) கட்டுகின்றது ; அறிவுப்பற்றினாலும் (அவனைக்) கட்டுகின்றது.

ஸத்துவகுணமானது பளிங்குக்கற்போல ஸ்வச்சமாயுள்ளதனால் துலக்கமாயுள்ளது, தொந்தரையில்லாதது (ஸத்துவம் ஸ்வச்சமானது, மறைப்பனவற்றை விலக்கவல்லது. ஆதலால், துலக்கமானது-அறிவுப்பொருளைத் தோற்றுவிப்பது. தொந்தரையில்லாதது-ஸ்வச்சமாய் நின்று இன்பத்தை வெளிப்படுத்துவது. அது ஆத்மாவைக்) கட்டுகின்றது.—எவ்விதத்தால் ?—"யான் இன்பமுடையவன்" என்னும் ஸுகப்பற்

𑌤𑌸𑍍𑌯 𑌸𑍁𑌖𑌸𑍍𑌯 𑌵𑌿𑌷𑌯𑌿𑌣𑌿 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑍇 𑌸𑌂𑌶𑍍𑌲𑍇𑌷𑌾𑌪𑌾𑌦𑌨𑌮𑍇𑌵 । "𑌇𑌦𑌮𑍇𑌵 𑌸𑍁𑌖𑌂 𑌜𑌾𑌤𑌮𑍍" 𑌇𑌤𑌿 𑌮𑍃𑌷𑍈𑌵 𑌸𑍁𑌖𑍇𑌨 𑌸𑌞𑍍𑌜𑌨𑌮𑍍 । 𑌸𑍈𑌷𑌾 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 । 𑌨 𑌹𑌿 𑌵𑌿𑌷𑌯𑌧𑌰𑍍𑌮𑌃 𑌵𑌿𑌷𑌯𑌿𑌣𑌃 𑌭𑌵𑌤𑌿 । 𑌇𑌚𑍍𑌛𑌾𑌦𑌿 𑌚 𑌧𑍃𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌸𑍍𑌯𑍈𑌵 𑌵𑌿𑌷𑌯𑌸𑍍𑌯 𑌧𑌰𑍍𑌮𑌃 𑌇𑌤𑌿 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌭𑌗𑌵𑌤𑌾 । 𑌅𑌤𑌃 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑍈𑌵 𑌸𑍍𑌵𑌕𑍀𑌯𑌧𑌰𑍍𑌮𑌭𑍂𑌤𑌯𑌾 𑌵𑌿𑌷𑌯𑌵𑌿𑌷𑌯𑍍𑌯𑌵𑌿𑌵𑍇𑌕𑌲𑌕𑍍𑌷𑌣𑌯𑌾 𑌅𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌭𑍂𑌤𑍇 𑌸𑍁𑌖𑍇 𑌸𑌞𑍍𑌜𑌯𑌤𑌿 𑌇𑌵, 𑌅𑌸𑌕𑍍𑌤𑌂 𑌸𑌕𑍍𑌤𑌮𑌿𑌵 𑌕𑌰𑍋𑌤𑌿, 𑌅𑌸𑍁𑌖𑌿𑌨𑌂 𑌸𑍁𑌖𑌿𑌨𑌮𑌿𑌵 । 𑌤𑌥𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌚, — 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌿𑌤𑌿 𑌸𑍁𑌖𑌸𑌾𑌹𑌚𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌸𑍍𑌯𑍈𑌵 𑌵𑌿𑌷𑌯𑌸𑍍𑌯 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌸𑍍𑌯 𑌧𑌰𑍍𑌮𑌃, 𑌨 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃; 𑌆𑌤𑍍𑌮𑌧𑌰𑍍𑌮𑌤𑍍𑌵𑍇 𑌸𑌙𑍍𑌗𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 𑌬𑌨𑍍𑌧𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌶𑍍𑌚 । 𑌸𑍁𑌖𑍇 𑌇𑌵 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑍌 𑌸𑌙𑍍𑌗𑌃 𑌮𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 । 𑌅𑌨𑌘 𑌅𑌪𑌾𑌪 ॥ ௬ ॥

௭. 𑌰𑌜𑍋 𑌰𑌾𑌗𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾𑌽𑌽𑌸𑌙𑍍𑌗𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 ।
𑌤𑌨𑍍𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌦𑍇𑌹𑌿𑌨𑌮𑍍 ॥

𑌰𑌜𑌃 𑌰𑌾𑌗𑌾𑌤𑍍𑌮𑌕𑌂—𑌰𑌞𑍍𑌜𑌨𑌾𑌤𑍍 𑌰𑌾𑌗𑌃 𑌗𑍈𑌰𑌿𑌕𑌾𑌦𑌿𑌵𑌤𑍍—𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌜𑌾𑌨𑍀𑌹𑌿 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾𑌽𑌽𑌸𑌙𑍍𑌗𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌂 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾 𑌅𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌾𑌭𑌿𑌲𑌾𑌷𑌃, 𑌆𑌸𑌙𑍍𑌗𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇 𑌵𑌿𑌷𑌯𑍇 𑌮𑌨𑌸𑌃 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 𑌸𑌂𑌶𑍍𑌲𑍇𑌷𑌃, 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾𑌽𑌽𑌸𑌙𑍍𑌗𑌯𑍋𑌃 𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌂 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾𑌽𑌽𑌸𑌙𑍍𑌗-

---

றினால், விஷயமான இன்பத்தை விஷயியான ஆத்மாவினிடத்து ஒட்டுமாறுசெய்வதனால்தான் என்க. "எனக்கே ஸுகம் பிறந்துள்ளது" என இன்பத்தால் பற்றுக்கொள்ளுதல் மயக்கந்தான். ஆதலால், இது அவித்யையாம். விஷயத்தின் தன்மையானது விஷயிக்குவாராதன்றோ. அன்றியும், ஆசைமுதலாக உறுதியான தன்மை ஈறாகவுள்ளதெல்லாம்) க்ஷேத்ரமேயான விஷயத்தின் தன்மை எனப் பகவான் அருளிச்செய்துள்ளார். ஆகவே, (ஸத்வகுணமானது ஆத்மாவை), தனது[ஆத்மாவினது]தன்மைபோன்றதாய், விஷயவிஷயிகளைப் பகுத்தறியாமையென்னும் அவித்யையினாலேயே, தானல்லாத[ஆத்மா அல்லாத]இன்பத்திலே பற்றச்செய்கின்றதுபோலும்: பற்றில்லாததைப்பற்றுக்கொண்டதுபோலச் செய்கின்றது: இன்பமில்லாததை இன்பமுடையதுபோலச்செய்கின்றது. அவ்வண்ணமே, அறிவுப்பற்றினாலும்(ஆத்மாவை ஸத்துவகுணம் கட்டுகின்றது). அறிவென்பது-(இங்கே)இன்பத்தோடுஉடன்கூறப்பெற்றமையினால், க்ஷேத்ரமேயான விஷயமாகிய அகக்கரணத்தினது தன்மைதான்; ஆத்மாவினது தன்மையன்று; ஆத்மாவினது தன்மையாயின், பற்றும் பந்தமும் அமையாவாதலின். இன்பத்திற்போல, அறிவுமுதலியவற்றில் பற்றை ஆலோசித்துக்கொள்க. (இன்பத்தில் பற்று உண்டாவதுபோலவே, அறிவு செல்வம் முதலியவற்றிலும் பற்று உண்டாதலை நோக்கிக்கொள்க. இங்குக்கூறப்பட்ட இன்பமும், அறிவும் - விருத்தி ஸுகமும், விருத்திஞானமுமேயன்றி,ஸ்வரூபாநந்தமும், ஸ்வரூபஞானமு மல்ல எனக் காண்க.) (௬)

௭. ரஜோகுணத்தை ராகவடிவுள்ளதாக [காமவடிவுள்ளதாக] ஆசைக்கும் பற்றுக்கும் பிறப்பிடமாகத் தெரிந்துகொள்; கௌந்தேய! அது கர்மப்பற்றினால் தேகியைக் கட்டுகின்றது.

ரஜோகுணமானது ராகமென்னும் வடிவுடையது. காவிக்கல் (ஆடைக்கு நிறங்கொடுப்பது)போல, ரஜஸானது ஆத்மாவிற்கு நிறங்கொடுப்பதனால், (அநாத்ம விஷயங்களை அவாவச்செய்வதனால், அதனை) ராகம் என்க, (ராகம் - காமம்.) ஆசையென்பது - கிடையாத பொருளின்மேல் அவா. பற்று என்பது - கிடைத்தபொருளின் மேல் மனத்திற்குப் பிரியம் என்னும் ஒட்டு. கர்மப்பற்று - இம்மைமறுமைக்கான கர்

𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 । 𑌤𑌤𑍍 𑌰𑌜𑌃 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗𑍇𑌨, 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 𑌸𑌂𑌜𑌨𑌂 𑌤𑌤𑍍𑌪𑌰𑌤𑌾 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗𑌃, 𑌤𑍇𑌨 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌰𑌜𑌃 𑌦𑍇𑌹𑌿𑌨𑌮𑍍 ॥ ௭ ॥

௮. 𑌤𑌮𑌸𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑍋𑌹𑌨𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌮𑍍 ।
𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌲𑌸𑍍𑌯𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌭𑌿𑌃 𑌤𑌨𑍍𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ॥

𑌤𑌮𑌃 𑌤𑍃𑌤𑍀𑌯𑌃 𑌗𑍁𑌣𑌃 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑌮𑍍 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 𑌜𑌾𑌤𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿, 𑌮𑍋𑌹𑌨𑌂 𑌮𑍋𑌹𑌕𑌰𑌮𑍍 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌕𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌦𑍇𑌹𑌵𑌤𑌾𑌮𑍍 । 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌲𑌸𑍍𑌯𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌭𑌿𑌃 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌶𑍍𑌚 𑌆𑌲𑌸𑍍𑌯𑌂 𑌚 𑌨𑌿𑌦𑍍𑌰𑌾 𑌚 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌲𑌸𑍍𑌯𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌃 𑌤𑌾𑌭𑌿𑌃 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌲𑌸𑍍𑌯𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌭𑌿𑌃 𑌤𑌤𑍍 𑌤𑌮𑌃 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ॥ ௮ ॥

𑌪𑍁𑌨𑌃 𑌗𑍁𑌣𑌾𑌨𑌾𑌂 𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑌃 𑌸𑌂𑌕𑍍𑌷𑍇𑌪𑌤𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௯. 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌸𑍁𑌖𑍇 𑌸𑌂𑌜𑌯𑌤𑌿 𑌰𑌜𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌭𑌾𑌰𑌤 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌯 𑌤𑍁 𑌤𑌮𑌃 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑍇 𑌸𑌂𑌜𑌯𑌤𑍍𑌯𑍁𑌤 ॥

𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌸𑍁𑌖𑍇 𑌸𑌂𑌜𑌯𑌤𑌿 𑌸𑌂𑌶𑍍𑌲𑍇𑌷𑌯𑌤𑌿, 𑌰𑌜𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌹𑍇 𑌭𑌾𑌰𑌤 '𑌸𑌂𑌜𑌯𑌤𑌿' 𑌇𑌤𑌿 𑌅𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 । 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌕𑍃𑌤𑌂 𑌵𑌿𑌵𑍇𑌕𑌮𑍍 𑌆𑌵𑍃𑌤𑍍𑌯 𑌆𑌚𑍍𑌛𑌾𑌦𑍍𑌯 𑌤𑍁 𑌤𑌮𑌃 𑌸𑍍𑌵𑍇𑌨 𑌆𑌵𑌰𑌣𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑍇 𑌸𑌂𑌜𑌯𑌤𑌿 𑌉𑌤— 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌾𑌕𑌰𑌣𑌮𑍍 ॥ ௯ ॥

---

மங்களில் பற்றுக்கொள்ளுதல், அவற்றில் அழுந்திக்கிடத்தல். அதனால் ரஜோகுணமானது தேகியை, உடம்பொடுநிற்கும் ஆத்மாவைக் கட்டுகின்றது. [அகர்த்தாவாகவே, தொழிற்படாதவனாகவே உள்ள ஆத்மாவை - "நான் செய்கிறேன்" என்னும் அபிமாநத்தால் செலுத்துகின்றது.—ஆ.] (எ)

அ. தமோகுணமோ, அஜ்ஞானத்தினின்றும் பிறப்பதாக, எல்லாத்தேகிகளையும் மயக்குவதாகத் தெரிந்துகொள்; பாரத! அது அஜாக்கிரதை, சோம்பல், உறக்கம் என்றவற்றால் (தேகியைக்) கட்டுகின்றது.

மூன்றாவதான தமோகுணமானது (ஆவரணசக்தியாகிய) அஜ்ஞானத்தினின்றும் பிறந்து எல்லாத் தேகிகளையும் மயக்குவது, மயக்கத்தைச் செய்வது, பகுத்தறிவின்மையை உண்டாக்குவது. (அ)

மீண்டும், குணங்களது செய்கையைச் சுருக்கிக் கூறுகிறார்:

கூ. பாரத! ஸத்துவம் இன்பத்திலும், ரஜஸ் தொழிலிலும் பற்றச்செய்கின்றன; தமஸோ, (இவற்றிற்கு) எதிராக, அறிவை மறைத்து அஜாக்கிரதையில் பற்றச்செய்கின்றது.

ரஜஸ் தொழிலில் "பற்றச்செய்கின்றது" எனத் தொடரும். தமோகுணமானது தனது ஆவரணவடிவத்தால், மறைக்குந்தன்மையினால் - ஸத்துவகுணத்தாலான பகுத்தறிவை மறைத்து அஜாக்கிரதையில் பற்றச்செய்கின்றது. அஜாக்கிரதை - செய்யவேண்டியன வந்தவழி, (அவற்றைச்) செய்யாமை. (கூ)

உக்தம் கார்யம் கதா கம் குர்வந்தி குணா இதி? உச்யதே—

க௦. ரஜஸ்தமஶ்சாபிபூய ஸத்த்வம் பவதி பாரத ।
ரஜஸ்ஸத்த்வம் தமஶ்சைவ தமஸ்ஸத்த்வம் ரஜஸ்ததா ॥

ரஜ: தமஶ்ச உபாவபி அபிபூய ஸத்த்வம் பவதி உத்பவதி வர்த்ததே யதா, ததா லப்தாத்மகம் ஸத்த்வம் ஸ்வகார்யம் ஜ்ஞானஸுகாதி ஆரபதே ஹே பாரத । ரஜோ குண: ஸத்த்வம் தமஶ்ச ஏவ உபாவபி அபிபூய வர்த்ததே யதா, ததா கர்ம த்ருஷ்ணாதி ஸ்வகார்யம் ஆரபதே । தமஆக்யோ குண: ஸத்த்வம் ரஜஶ்ச உபாவபி அபிபூய வர்த்ததே யதா, ததா ஜ்ஞானாவரணாதி ஸ்வகார்யம் ஆரபதே ॥

யதா யோ குண: உத்பூத: பவதி, ததா தஸ்ய கிம் லிங்கம் இதி? உச்யதே—

கக. ஸர்வத்வாரேஷு தேஹே஽ஸ்மின் ப்ரகாஶ உபஜாயதே ।
ஜ்ஞானம் யதா ததா வித்யாத் விவ்ருத்தம் ஸத்த்வமித்யுத ॥

ஸர்வத்வாரேஷு— ஆத்மன: உபலப்தித்வாராணி ஶ்ரோத்ராதீநி, ஸர்வாணி கரணாநி, தேஷு ஸர்வேஷு த்வாரேஷு அந்த:கரணஸ்ய புத்தே: வ்ருத்தி:

---

குணங்கள் (மேற்) கூறிய செய்கைகளை எப்பொழுது செய்கின்றன? என்பது.- கூறுவோம்: (வினு:—அவை தம்தம் செய்கைகளை ஒரேகாலத்து ஒருங்கே செய்கின்றனவா? அல்லது, வெவ்வேறு காலத்து மாறிமாறிச் செய்கின்றனவா? ஒரேகாலத்தாயின், ஒன்றற்கொன்று விரோதமாகச் செய்கின்றனவா? அல்லது, ஒத்துச்செய்கின்றனவா?—விடை:—அவை தம்தம்செய்கைகளை வெவ்வேறுகாலத்து மாறிமாறிச் செய்கின்றன.—ஆ.)

க௦. பாரத! ஸத்துவம் ரஜஸையும், தமஸையும் கீழ்ப்படுத்தி எழுகின்றது; ரஜஸ் ஸத்துவத்தையும், தமஸையும் (கீழ்ப்படுத்தி எழுகின்றது); அவ்வாறே, தமஸ் ஸத்துவத்தையும், ரஜஸையும் (கீழ்ப்படுத்தி எழுகின்றது).

எப்பொழுது ஸத்துவகுணமானது ரஜோகுணம் தமோகுணம் இரண்டனையும் கீழ்ப்படுத்தி ஓங்கி வளர்கின்றதோ, அப்பொழுது, தான் மேலிட்டு அறிவு, இன்பம் முதலிய தன்செய்கையைச் செய்கின்றது. அவ்வாறே, எப்பொழுது ரஜோகுணமானது ஸத்துவகுணம் தமோகுணம் இரண்டனையும் கீழ்ப்படுத்தி ஓங்கிவளர்கின்றதோ, அப்பொழுது,தன்கார்யமான வேளாண்மைமுதலிய செய்கையைச்செய்கின்றது. அவ்வண்ணமே, எப்பொழுது தமஸ்என்னுங்குணமானது ஸத்துவகுணம் ரஜோகுணம் இரண்டனையும் கீழ்ப்படுத்தி ஓங்கிஎழுகின்றதோ, அப்பொழுது, அறிவை மறைத்தல் முதலிய தன்செய்கையைச் செய்கின்றது. (க௦)

ஒப்பொழுது ஒன்றுணம் ஓங்கியுள்ளது என்பதை அறியும்விதம்.

எப்பொழுது எக்குணம் மேலிட்டுள்ளதோ, அப்பொழுது அதற்கு என்ன அடையாளம்? என்பது.—கூறுவோம்:

கக. எப்பொழுது இச்சரீரத்தில் எல்லாவாயில்களிலும் அறிவென்னும்பிரகாசம் உண்டாகின்றதோ, அப்பொழுது ஸத்துவம் ஓங்கியுள்ளது என அறியலாம்.

செவிமுதலிய இந்திரியங்களெல்லாம் ஆத்மாவிற்கு அறியும்வழிகளாம். அந்த எல்லாவழிகளுள்ளும் அகக்கரணம் நிரம்பச்செல்லுதலானது, புத்திவிருத்தி வியாபித்தலானது - பிரகாசமென்பது, விளக்கமென்பது, துலக்கமென்பது. அதுவே

प्रकाशः देहे अस्मिन् सर्वेषु उपजायते। तदेव ज्ञानम्। यदा एवं प्रकाशो ज्ञानाख्य उपजायते, तदा ज्ञानप्रकाशेन लिङ्गेन विद्यात् विवृद्धं उत्कटं सत्त्वम् इति उत अपि ॥ ௧௧ ॥

रजसः उत्कटस्य इदं लिङ्गम्—

௧௨. लोभः प्रवृत्तिरारम्भः कर्मणामशमः स्पृहा ।
रजस्येतानि जायन्ते विवृद्धे भरतर्षभ ॥

लोभः परद्रव्यादित्सा, प्रवृत्तिः प्रवर्तनं सामान्यचेष्टा, आरम्भः—कस्य?—कर्मणाम्, अशमः अनुपशमः, हर्षरागादिप्रवृत्तिः, स्पृहा सर्वसामान्यवस्तुविषया तृष्णा—रजसि गुणे विवृद्धे एतानि लिङ्गानि जायन्ते हे भरतर्षभ ॥ ௧௨ ॥

௧௩. अप्रकाशोऽप्रवृत्तिश्च प्रमादो मोह एव च ।
तमस्येतानि जायन्ते विवृद्धे कुरुनन्दन ॥

अप्रकाशः अविवेकः, अत्यन्तम् अप्रवृत्तिश्च प्रवृत्त्यभावः तत्कार्यम्, प्रमादो मोह एव च तत्कार्यमेव, अविवेकः मूढता इत्यर्थः। तमसि गुणे विवृद्धे एतानि लिङ्गानि जायन्ते हे कुरुनन्दन ॥ ௧௩ ॥

मरणकालेऽपि यत् फलं प्राप्यते, तदपि सङ्गरागहेतुकं सर्वं गौणमेव इति दर्शयन्नाह—

---

தான் - அறிவென்பது. இவ்வாறாக, எப்பொழுது அறிவென்னும் வெளிச்சமானது இச்சரீரத்தில் எல்லா இந்திரியங்களுள்ளும் உண்டாகின்றதோ, அப்பொழுது, அறிவுப்பிரகாசமாகிய குறிபினால் "ஸத்துவகுணம் ஓங்கியுள்ளது" என அறியலாகும். ()

ரஜோகுணம் மேலிட்டுநிற்குமிடத்து இது அடையாளமாம்:—

௧௨. பரதரிற் சிறந்தோனே! ரஜஸ் ஓங்கியுள்ளவிடத்து உலோபம், முயற்சி, தொழில்களைச்செய்தல், ஓய்வின்மை, ஆசை இவை உண்டாகின்றன.

உலோபம்-பிறர்பொருளை வௌவக் கருதல். முயற்சி-பொதுவானப் பிரயத்தினம். செய்தல்.—எவற்றை?—கார்யங்களை. ஓய்வின்மை-மகிழ்ச்சி, பற்றுமுதலியவற்றுள் புகுந்துசெல்லுதல். ஆசை-ஸாமான்னியமான எல்லாப்பொருள்களையும் பற்றியஆசை. ரஜோகுணம் மேலிட்டிருக்குங்கால், இவைகுறிகளாக உண்டாகின்றன[காணப்படுகின்றன]. (௧௨)

௧௩. குருநந்தன! தமஸ் ஓங்கியுள்ளவிடத்து விளங்காமை, முயற்சியின்மை, தவறுதல், மயக்கம் இவை உண்டாகின்றன.

விளங்காமை - பகுத்தறிவின்மை. முயிற்சியின்மை-முற்றும் ஊக்கமின்மை; (இது) அந்த(ப் பகுத்தறிவின்மையின்)கார்யம். தவறுதலும், மயக்கமும் அதன்[பகுத்தறிவின்மையின்]கார்யங்களாம். விவேகமின்மை - மயங்கியதன்மை என்றபடி. (௧௩)

குணங்களாலாதும் பிறவிகள்.

இறப்புவழியாகவும் எந்தப்பயன் அடையப்படுகின்றதோ, அதெல்லாம் பற்றினாலும், ஆசையினாலும் வருவதாய் குணங்களாலாவதேதான் என உணர்த்தும்பொருட்டு அருளிச்செய்கிறார்:

௧௪. 𑌯𑌦𑌾 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍇 𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑍇 𑌤𑍁 𑌪𑍍𑌰𑌲𑌯𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌦𑍇𑌹𑌭𑍃𑌤𑍍 ।
𑌤𑌦𑍋𑌤𑍍𑌤𑌮𑌵𑌿𑌦𑌾𑌂 𑌲𑍋𑌕𑌾𑌨𑌮𑌲𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

௧௫. 𑌰𑌜𑌸𑌿 𑌪𑍍𑌰𑌲𑌯𑌂 𑌗𑌤𑍍𑌵𑌾 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗𑌿𑌷𑍁 𑌜𑌾𑌯𑌤𑍇 ।
𑌤𑌥𑌾 𑌪𑍍𑌰𑌲𑍀𑌨𑌸𑍍𑌤𑌮𑌸𑌿 𑌮𑍂𑌢𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 𑌜𑌾𑌯𑌤𑍇 ॥

𑌯𑌦𑌾 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍇 𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑍇 𑌤𑍁 𑌉𑌦𑍍𑌭𑍂𑌤𑍇 𑌤𑍁 𑌪𑍍𑌰𑌲𑌯𑌂 𑌮𑌰𑌣𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌦𑍇𑌹𑌭𑍃𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾, 𑌤𑌦𑌾 𑌉𑌤𑍍𑌤𑌮𑌵𑌿𑌦𑌾𑌂—𑌮𑌹𑌦𑌾𑌦𑌿𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌦𑌾𑌮𑍍 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍—𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 𑌅𑌮𑌲𑌾𑌨𑍍 𑌮𑌲𑌰𑌹𑌿𑌤𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 ॥ ௧௪ ॥

𑌰𑌜𑌸𑌿 𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑍇 𑌪𑍍𑌰𑌲𑌯𑌂 𑌮𑌰𑌣𑌂 𑌗𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗𑌿𑌷𑍁 𑌕𑌰𑍍𑌮𑌾𑌸𑌕𑍍𑌤𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑍇𑌷𑍁 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑍇𑌷𑍁 𑌜𑌾𑌯𑌤𑍇। 𑌤𑌥𑌾 𑌤𑌦𑍍𑌵𑌦𑍇𑌵 𑌪𑍍𑌰𑌲𑍀𑌨𑌃 𑌮𑍃𑌤𑌃 𑌤𑌮𑌸𑌿 𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑍇 𑌮𑍂𑌢𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 𑌪𑌶𑍍𑌵𑌾𑌦𑌿𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 𑌜𑌾𑌯𑌤𑍇 ॥ ௧௫ ॥

𑌅𑌤𑍀𑌤𑌶𑍍𑌲𑍋𑌕𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯𑍈𑌵 𑌸𑌂𑌕𑍍𑌷𑍇𑌪𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௧௬. 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌸𑍁𑌕𑍃𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑍁𑌃 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌂 𑌫𑌲𑌮𑍍 ।
𑌰𑌜𑌸𑌸𑍍𑌤𑍁 𑌫𑌲𑌂 𑌦𑍁𑌃𑌖𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑌮𑌸𑌃 𑌫𑌲𑌮𑍍 ॥

𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌸𑍁𑌕𑍃𑌤𑌸𑍍𑌯—𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌸𑍍𑌯 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃—𑌆𑌹𑍁𑌃 𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌃 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌮𑍇𑌵 𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌂 𑌫𑌲𑌮𑍍 𑌇𑌤𑌿 । 𑌰𑌜𑌸𑌸𑍍𑌤𑍁—𑌰𑌾𑌜𑌸𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃, 𑌕𑌰𑍍𑌮𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌾𑌤𑍍—𑌫𑌲𑌮𑍍 𑌅𑌪𑌿 𑌦𑍁𑌃𑌖𑌮𑍇𑌵, 𑌕𑌾𑌰𑌣𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑍍𑌯𑌾𑌤𑍍 𑌰𑌾𑌜𑌸𑌮𑍇𑌵। 𑌤𑌥𑌾 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑌮𑌸𑌃 𑌤𑌾𑌮𑌸𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌅𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌫𑌲𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑌵𑌤𑍍 ॥ ௧௬ ॥

---

௧௪. தேகியானவன், ஸத்துவம் மேலிட்டவழி சாதலை அடைந்தால், உயர்ந்தவற்றை அறிந்தவருடைய மாசற்ற உலகங்களைச் சேர்கிறான்.

௧௫. ஒருவன் ரஜோகுணத்தில் சாதலைப்பெற்று கர்மப்பற்றுள்ளவருள் பிறக்கிறான். அவ்வண்ணமே, தமோகுணத்தில் இறந்தவன் மயங்கியபிறவிகளுள் பிறக்கிறான்.

தேகி-ஆத்மா. உயர்ந்தவற்றை- மஹத் முதலிய தத்துவங்களை. மாசற்ற உலகங்களை-(ரஜஸ் தமஸ் உண்டாதலில்லாத ப்ரஹ்மலோகம் முதலியவற்றை.—ஆ.)(௧௪)

ரஜோகுணம் மேலிட்டிருக்கும்பொழுது சாதலை அடைந்தால், கர்மப்பற்றுடைய மனிதர்களுள் பிறக்கிறான். அதுபோலவே, தமோகுணம் மேலிட்டிருக்கும்பொழுது இறந்தவன் பசுமுதலிய அறிவிலாப் பிறவிகளில் பிறக்கிறான். (௧௫)

சென்ற சுலோகங்களில் கூறிய விஷயத்தையே சுருக்கிச் சொல்லுகிறார் :

௧௬. நல்வினையான கர்மத்திற்கு மாசற்ற ஸாத்விகப் பயன் என்கிறார்கள் ; ரஜஸுக்கோ துன்பம் பயன் ; தமஸுக்கு அறியாமை பயன்.

ஸாத்விக கர்மத்திற்கு ஸாத்விகமேயான [ஸத்துவகுணத்தாலான] பரிசுத்தமான [ரஜஸ் தமஸ் அழுக்கில்லாத] பயன் என்று ஆன்றோர்கூறுகிறார்கள். ரஜஸ் என்பதற்கு - ராஜஸகர்மம் என்று பொருள் ; (இப்)பிரகரணம் கர்மத்தைப்பற்றியதாதலின். ராஜஸகர்மத்தின் பயனும் துன்பமேதான், ராஜஸமேதான்[ரஜோகுணத்தாலானதேதான்] ; (கார்யமானது) காரணத்தை ஒத்திருக்குமாதலின். தமஸுக்கு - தாமஸகர்மமான அதர்மத்திற்கு. (௧௬)

किञ्च गुणेभ्यो भवति—

கஎ. सत्त्वात्सञ्जायते ज्ञानं रजसो लोभ एव च ।
प्रमादमोहौ तमसो भवतोऽज्ञानमेव च ॥

सत्त्वात् [illegible] सञ्जायते समुत्पद्यते ज्ञानं, रजसो लोभ एव च, प्रमादमोहौ प्रमादश्च मोहश्च प्रमादमोहौ उभौ तमसो गुणाद् भवतः, अज्ञानमेव च भवति ॥ கஎ ॥

किञ्च—

கஅ. ऊर्ध्वं गच्छन्ति सत्त्वस्था मध्ये तिष्ठन्ति राजसाः ।
जघन्यगुणवृत्तस्था अधो गच्छन्ति तामसाः ॥

ऊर्ध्वं गच्छन्ति देवलोकादिषु उत्पद्यन्ते सत्त्वस्थाः सत्त्वगुणवृत्तस्थाः । मध्ये तिष्ठन्ति मनुष्येषु उत्पद्यन्ते राजसाः। जघन्यगुणवृत्तस्थाः जघन्यस्य चरमस्य गुणस्य जघन्यगुणः तमः, तस्य वृत्तं निद्राऽऽलस्यादि, तस्मिन् स्थिताः जघन्यगुणवृत्तस्थाः मूढाः अधः गच्छन्ति पश्वादियोनिषु उत्पद्यन्ते तामसाः ॥ கஅ ॥

"पुरुषस्य प्रकृतिस्थत्वरूपेण मिथ्याज्ञानेन युक्तस्य भोग्येषु गुणेषु सुखदुःखमोहात्मकेषु 'सुखी दुःखी मूढश्चाहम् अस्मि' इत्येवंरूपः यः सङ्गः सः कारणं पुरुषस्य सदसद्योनिजन्मप्राप्तिलक्षणस्य संसारस्य" इति सामान्येन प्रदर्शित-

---

குணங்களின் செய்கைகளைச் சுருக்கிக்கூறுதல்.

மேலும், குணங்களினின்றும் (எது) உண்டாகின்றதோ, (அதனை அருளிச் செய்கிறார்) :

கஎ. *அறிவு ஸத்துவத்தினின்றும் பிறக்கின்றது : உலோபம் ரஜஸினின்று (பிறக்கின்றது) : அஜாக்கிரதையும், மயக்கமும் தமஸினின்றும் பிறக்கின்றன, அறியாமையுந்தான் (பிறக்கின்றது).*

ஸத்துவம் மேலிட்டவிடத்து அறிவு உண்டாகின்றது..................................(கஎ)

அன்றியும்,

கஅ. *ஸத்துவத்திலுள்ளவர்கள் மேலே செல்லுகிறார்கள் : ராஜஸர்கள் நடுவில் நிற்கிறார்கள் : கடைப்பட்ட குணஒழுக்கத்திலுள்ள தாமஸர்கள் கீழே செல்லுகிறார்கள்.*

ஸத்துவகுண ஒழுக்கத்திலுள்ளவர்கள் தேவலோகம் முதலியவற்றுள் பிறக்கிறார்கள். ராஜஸர்கள், ரஜோகுணஒழுக்கத்திலுள்ளவர்கள் மனிதர்களில் பிறக்கிறார்கள். கடைப்பட்ட தமோகுண ஒழுக்கங்களான உறக்கம் சோம்பல்முதலியவற்றிலுள்ள மூடர்களான தாமஸர்கள் பசுமுதலிய பிறவிகளுள் பிறக்கிறார்கள். (கஅ)

குணங்களினின்றும் மெய்யறிவினால் நீங்குதல்.

"பிரகிருதியில் நிற்றலாகிய [பிரகிருதியையே ஆத்மாவாக மயங்குதலாகிய] மயக்கவுணர்வுள்ள புருஷனுக்கு இன்ப துன்ப மயக்கவடிவங்களால் அநுபவிக்கப்படும் குணங்களின்மேல் 'நான் இன்பமுடையவனாயிருக்கிறேன், துன்பமுடையவனாயிருக்கிறேன், மூடனாயிருக்கிறேன்' என இத்தகைய பற்று எதுவோ, அது - நல்லன தீயனவான பிறவிகளில் பிறப்பைப் பெறுதலாகிய புருஷனது ஸம்ஸாரத்திற்குக் காரண

𑌪𑍍𑌰𑌾𑌯𑍇 𑌯𑌦𑍍 𑌉𑌕𑍍𑌤𑌂, 𑌤𑌦𑍍 𑌇𑌹 '𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌰𑌜𑌸𑍍𑌤𑌮 𑌇𑌤𑌿 𑌗𑍁𑌣𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑌂𑌭𑌵𑌾𑌃' 𑌇𑌤𑌿 𑌆𑌰𑌭𑍍𑌯 𑌗𑍁𑌣𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂, 𑌗𑍁𑌣𑌵𑍃𑌤𑍍𑌤𑌂, 𑌸𑍍𑌵𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌨 𑌚 𑌗𑍁𑌣𑌾𑌨𑌾𑌂 𑌬𑌨𑍍𑌧𑌕𑌤𑍍𑌵𑌂, 𑌗𑍁𑌣𑌵𑍃𑌤𑍍𑌤𑌨𑌿𑌬𑌦𑍍𑌧𑌸𑍍𑌯 𑌚 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌯𑌾 𑌗𑌤𑌿𑌃, 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍂𑌲𑌂 𑌬𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑌣𑌂 𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑍇𑌣 𑌉𑌕𑍍𑌤𑍍𑌵𑌾, 𑌅𑌧𑍁𑌨𑌾 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 𑌮𑍋𑌕𑍍𑌷𑍋 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 𑌇𑌤𑌿 𑌆𑌹 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍—

௧௯. 𑌨𑌾𑌨𑍍𑌯𑌂 𑌗𑍁𑌣𑍇𑌭𑍍𑌯𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌂 𑌯𑌦𑌾 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾𑌽𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ।
𑌗𑍁𑌣𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌪𑌰𑌂 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌮𑌦𑍍𑌭𑌾𑌵𑌂 𑌸𑍋𑌽𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

𑌨 𑌅𑌨𑍍𑌯𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌵𑌿𑌷𑌯𑌾𑌕𑌾𑌰𑍇𑌣 𑌪𑌰𑌿𑌣𑌤𑍇𑌭𑍍𑌯𑌃 𑌗𑍁𑌣𑍇𑌭𑍍𑌯𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌂 𑌅𑌨𑍍𑌯𑌂 𑌯𑌦𑌾 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌸𑌨𑍍 𑌅𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌿, '𑌗𑍁𑌣𑌾𑌃 𑌏𑌵 𑌸𑌰𑍍𑌵𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌃'' 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿, 𑌗𑍁𑌣𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌪𑌰𑌂 𑌗𑍁𑌣𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌭𑍂𑌤𑌂 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿, 𑌮𑌦𑍍𑌭𑌾𑌵𑌂 𑌮𑌮 𑌭𑌾𑌵𑌂 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌤𑍍𑌵𑌂 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌃 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍'' 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍 𑌸𑌨𑍍 𑌸𑌃 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾 𑌅𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥ ௧௯ ॥

𑌕𑌥𑌂 𑌸𑌃 𑌅𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌇𑌤𑌿 ? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௨௦. 𑌗𑍁𑌣𑌾𑌨𑍇𑌤𑌾𑌨𑌤𑍀𑌤𑍍𑌯 𑌤𑍍𑌰𑍀𑌨𑍍 𑌦𑍇𑌹𑍀 𑌦𑍇𑌹𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌾𑌨𑍍 ।
𑌜𑌨𑍍𑌮𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌜𑌰𑌾𑌦𑍁𑌃𑌖𑍈𑌰𑍍𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑍋𑌽𑌮𑍃𑌤𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 ॥

---

யாம்" என முந்தின அத்தியாயத்துள் எது சுருக்கமாகக் கூறப்பட்டதோ, அதனை இங்கே "ஸத்துவம், ரஜஸ்" (௧௪ - ௫) எனத்தொடங்கி, குணங்கள் இன்னவை என்பதும், குணங்களது செய்கையும், குணங்கள் தமது செய்கைகளால் கட்டுறுத்துவதும், குணங்களது செய்கையால் கட்டுண்ட புருஷனுக்கு யாது கதியோ (அதுவும்) ஆகிய இவையனைத்தையும், மயக்கஅறிவை வேராகவுடையவையாய்ப் பந்தத்திற்குக் காரணமானவற்றையும் விரித்துரைத்து, இப்பொழுது, மோக்ஷம் மெய்யறிவினால் (ஆவது என) உபதேசித்தற்பொருட்டு பகவான் அருளிச்செய்கிறார் :

௧௯. காண்பவன் குணங்களைக்காட்டிலும் வேறானகர்த்தாவை எப்பொழுது காணவில்லையோ, மேலும், (ஆத்மாவை) குணங்கட்குப் புறம்பாக அறிகின்றானோ, (அப்பொழுது) அவன் என்நிலையைப் பெறுகிறான்.

உடம்பு, இந்திரியங்கள், இந்திரியவிஷயங்கள் என்றவற்றின்வடிவமாய் மாறிநிற்கும் குணங்களைக்காட்டிலும் வேறான கர்த்தாவை, மெய்யறிவு கூடியவழி (எவன்) காணவில்லையோ, "எல்லாச் செய்கைகட்கும் எல்லாத்தன்மைகளுமுடைய [அந்தந்த உடம்புமுதலியவையாக மாறிநிற்கின்ற] குணங்களேதான் கர்த்தாக்கள்" என இவ்வாறு காண்கின்றானோ, (ஆத்மாவை) குணங்கட்கும் அவற்றது செய்கைகட்கும் ஸாக்ஷியாக உணர்கின்றானோ, அவன் "எல்லாம் வாஸுதேவன்" எனக் காண்பவனாய், என்நிலையை, வாஸுதேவனாயிருத்தலை அடைகின்றான். (அங்ஙனமவனுக்கு, தான் நிர்குண ப்ரஹ்மமென்பது வெளியாகின்றது.—ஆ.) (௧௯)

அவன் எவ்வாறு அடைகிறான் ? என்பது.—கூறுவோம் :

௨௦. தேகியானவன் உடம்பிற்குக் காரணமான இந்த முக்குணங்களையும் கடந்து, பிறப்பு இறப்பு மூப்புத் துன்பங்களால் விடப்பெற்றவனாய் சாகாமையைப் பெறுகிறான்.

குணாந் ஏதாந் யதோக்தாந் அதீத்ய ஜீவந்நேவ அதிக்ரம்ய மாயோபாதிபூதாந் த்ரீந் தேஹீ தேஹஸமுத்பவாந் தேஹோத்பத்திபீஜபூதாந் ஜந்மம்ருத்யுஜராதுःகை: ஜந்ம ச ம்ருத்யுஶ்ச ஜரா ச து:கம் ச ஜந்மம்ருத்யுஜராது:காநி தை: ஜீவந்நேவ விமுக்த: ஸந் வித்வாந் அம்ருதம் அஶ்நுதே, ஏவம் மத்பாவம் ப்ராப்நோதி இத்யர்த: ॥ ௨௦ ॥

ஜீவந்நேவ குணாந் அதீத்ய அம்ருதம் அஶ்நுதே, இதி ப்ரஶ்நபீஜம் ப்ரதிலப்ய, அர்ஜுந உவாச—

அர்ஜுந உவாச ॥

௨௧. கைர்லிங்கைஸ்த்ரீந்குணாநேதாநதீதோ பவதி ப்ரபோ ।
கிமாசார: கதம் சைதாம்ஸ்த்ரீந் குணாநதிவர்ததே ॥

கை: லிங்கை: சிஹ்நை: த்ரீந் குணாந் ஏதாந் வ்யாக்யாதாந் அதீத: அதிக்ராந்த: பவதி ப்ரபோ கிமாசார: க: அஸ்ய ஆசார: இதி கிமாசார: கதம் கேந ச ப்ரகாரேண ஏதாந் த்ரீந் குணாந் அதிவர்ததே ॥ ௨௧ ॥

குணாதீதஸ்ய லக்ஷணம் குணாதீதத்வோபாயம் ச அர்ஜுநேந ப்ருஷ்ட: அஸ்மிந் ஶ்லோகே ப்ரஶ்நத்வயார்தம் ப்ரதிவசநம் பகவாந் உவாச யத் தாவத் 'கை: லிங்கை: யுக்தோ குணாதீதோ பவதி'' இதி தத் ஶ்ருணு—

ஶ்ரீபகவாநுவாச ॥

௨௨. ப்ரகாஶம் ச ப்ரவ்ருத்திம் ச மோஹமேவ ச பாண்டவ ।
ந த்வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தாநி ந நிவ்ருத்தாநி காங்க்ஷதி ॥

---

ஞானியான தேகியானவன் மாயையாகிய உபாதிவடிவங்களாய் உடம்பு உண்டாதற்கு வித்துக்களான கீழ்க்கூறிய இந்த முக்குணங்களையும் உயிர்வாழும்பொழுதேயே கடந்து, பிறப்பிறப்புமூப்புத்துன்பங்களால் உயிர்வாழும்பொழுதேயே விடப்பட்டவனாய்ச் சாகாமையைப் பெறுகிறான் : இவ்வாறாக என்நிலையை அடைகின்றான் என்றபடி. (௨௦)

விடுபட்டவனுடைய அடையாளங்கள்.

உயிரோடிருக்குமளவிலேயே குணங்களைக் கடந்து சாகாமையைப் பெறுகிறான் எனவே, வினாவிற்கு இடம் வாய்க்கப்பெற்று அர்ஜுனன் கூறலாயினன் :

அர்ஜுனன் சொல்லலுற்றான் :

௨௧. பிரபுவே ! இந்த முக்குணங்களையும் கடந்துநிற்பவன் என்ன அடையாளங்களுள்ளவனாகிறான் ? என்னஒழுக்கமுடையவன் ? மேலும், எவ்வாறு இந்தமுக்குணங்களையும் கடந்துவிடுகிறான் ?

குணங்களைக் கடந்தவனது அடையாளத்தையும், குணங்களைக்கடந்தவனாதற்கு வழியையும் இச்சுலோகத்தினுள் அர்ஜுனனால் கேட்கப்பட்ட பகவான் இரண்டு வினாவிற்கும் மறுமொழி கூறலானார். முதலில், "குணங்களைக்கடந்தவன் என்ன அடையாளங்களுள்ளவனாயிருக்கிறான் ? " என்பது எதுவோ, அதனைக் கேட்பாயாக :

ஸ்ரீபகவான் சொல்லலுற்றார் :

௨௨. பாண்டவ! விளக்கமென, முயற்சியென, மயக்கமென வந்தவற்றை (அவன்) வெறுப்பதில்லை ; போனவற்றை விரும்புவதில்லை.

𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌂 𑌚 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌕𑌾𑌰𑍍𑌯𑌂, 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌰𑌜𑌃𑌕𑌾𑌰𑍍𑌯𑌂, 𑌮𑍋𑌹𑌮𑍇𑌵 𑌚 𑌤𑌮𑌃-
𑌕𑌾𑌰𑍍𑌯𑌂, 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌾𑌨𑌿 𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 𑌸𑌂𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌨𑌿 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌵𑌿𑌷𑌯𑌭𑌾𑌵𑍇𑌨 𑌉𑌦𑍍𑌭𑍂𑌤𑌾𑌨𑌿
“𑌮𑌮 𑌤𑌾𑌮𑌸𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑍋 𑌜𑌾𑌤𑌃, 𑌤𑍇𑌨 𑌅𑌹𑌂 𑌮𑍂𑌢𑌃 ; 𑌤𑌥𑌾 𑌰𑌾𑌜𑌸𑍀 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃
𑌮𑌮 𑌉𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌾 𑌦𑍁𑌃𑌖𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾, 𑌤𑍇𑌨 𑌅𑌹𑌂 𑌰𑌜𑌸𑌾 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌃 𑌪𑍍𑌰𑌚𑌲𑌿𑌤𑌃 𑌸𑍍𑌵𑌰𑍂-
𑌪𑌾𑌤𑍍 ; 𑌕𑌷𑍍𑌟𑌂 𑌮𑌮 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌯𑌃 𑌅𑌯𑌂 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌤𑍍 𑌭𑍍𑌰𑌂𑌶𑌃 ; 𑌤𑌥𑌾 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿-
𑌕𑍋 𑌗𑍁𑌣𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌾𑌤𑍍𑌮𑌾 𑌮𑌾𑌂 𑌵𑌿𑌵𑍇𑌕𑌿𑌤𑍍𑌵𑌮𑌾𑌪𑌾𑌦𑌯𑌨𑍍 𑌸𑍁𑌖𑍇 𑌚 𑌸𑌂𑌜𑌯𑌨𑍍
𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿” 𑌇𑌤𑌿 𑌤𑌾𑌨𑌿 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 𑌅𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑍍𑌵𑍇𑌨 । 𑌤𑌤𑍍 𑌏𑌵𑌂 𑌗𑍁𑌣𑌾𑌤𑍀𑌤𑍋 𑌨
𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 𑌸𑌂𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌨𑌿 । 𑌯𑌥𑌾 𑌚 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌾𑌦𑌿𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌣𑌿 𑌆𑌤𑍍𑌮𑌾-
𑌨𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑍍𑌯 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌨𑌿 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌤𑌿, 𑌨 𑌤𑌥𑌾 𑌗𑍁𑌣𑌾𑌤𑍀𑌤𑍋 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌨𑌿
𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌏𑌤𑌤𑍍 𑌨 𑌪𑌰𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌂 𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 । 𑌕𑌿𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿 ?— 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮-
𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾𑌰𑍍𑌥𑌮𑍇𑌵 𑌏𑌤𑌤𑍍 𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 । 𑌨 𑌹𑌿 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌷𑌯𑌂 𑌦𑍍𑌵𑍇𑌷𑌂
𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌾𑌂 𑌵𑌾 𑌪𑌰𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ॥ ௨௨ ॥

𑌅𑌥 𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 “𑌗𑍁𑌣𑌾𑌤𑍀𑌤𑌃 𑌕𑌿𑌮𑌾𑌚𑌾𑌰𑌃?” 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌚𑌨𑌮𑌾𑌹—

௨௩. 𑌉𑌦𑌾𑌸𑍀𑌨𑌵𑌦𑌾𑌸𑍀𑌨𑍋 𑌗𑍁𑌣𑍈𑌰𑍍𑌯𑍋 𑌨 𑌵𑌿𑌚𑌾𑌲𑍍𑌯𑌤𑍇 ।
𑌗𑍁𑌣𑌾 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵 𑌯𑍋𑌽𑌵𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 𑌨𑍇𑌙𑍍𑌗𑌤𑍇 ॥

---

விளக்கமென்பது - ஸத்துவத்தின்கார்யம். முயற்சியென்பது-ரஜஸின் கார்யம். மயக்கமென்பது-தமஸின்கார்யம். (இவையெல்லாம் ஓரோர் தனித்தனிப்)பொருளாகச் செவ்வனே புலப்பட்டவழி இவற்றை வெறுப்பதில்லை. மெய்யுணர்வில்லாமையினலன்றே "எனக்குத் தாமஸமான எண்ணம் உண்டாகியுள்ளது, அதனுல் நான் மயங்கியுள்ளேன் ; அவ்வாறே, எனக்கு ராஜஸமான முயற்சி துன்பவடிவமாய் உண்டாகியுள்ளது, அந்தரஜஸினுல் நான் அசைக்கப்பெற்று தன்நிலையினின்றும் தவறியுள்ளேன் ; தன்நிலையினின்றும் இந்தத்தவறுதல் எதுவோ, (அது)எனக்குத்தொல்லையாயிருக்கின்றது; அவ்வண்ணமே,பிரகாசவடிவமான ஸாத்விககுணமானது என்னைப் பகுத்தறிவுடையவனுகச் செய்வதோடு இன்பத்தையும் பற்றச்செய்வதாய்க் கட்டுறுத்துகின்றது" என(ஒருவன்) அவற்றை வெறுக்கிருன். ஆகவே,குணங்களைக் கடந்தவன் வந்தவற்றை இவ்வாறு வெறுப்பதில்லை. அன்றியும், ஸாத்விகன் [ஸத்துவகுணமுள்ளவன்] முதலான புருஷன், ஸத்துவகுணம்முதலியவற்றின் கார்யங்களாய் ஆத்மாவிற்குக் காட்டி மறைந்தவற்றை விரும்புமாறுபோல, குணங்களைக் கடந்தவன் போனவற்றை விரும்புவதில்லை என்பதுபொருள்.—இந்தஅடையாளம் பிறர்க்குத் தெரிவதன்று. மற்றென்னவெனின்,—தனக்குத் தெரியுமாதலால் தனக்காகத்தான் இவ்வடையாளமென்க. தன்னைப்பற்றிய வெறுப்பையாயினும், விருப்பையாயினும் பிறனெருவன் தெரியமாட்டானன்றே [ஒருவனிடத்துள்ள வெறுப்புவிருப்புக்களை வேருெருவன் உணரமுடியாதன்றே]. (௨௨)

விடுபட்டவனுடைய வாழ்க்கையின் நடக்கை.

இனி இப்பொழுது " குணங்களைக்கடந்தவன் என்ன ஒழுக்கமுடையவன் ? " என்னும்வினவிற்கு மறுமொழி அருளிச்செய்கிருர் :

௨௩. எவன் உதாஸீனன்போல வீற்றிருப்பவனுய்க் குணங்களால் அசைக்கப்பெறுவதில்லையோ, எவன் " குணங்கள் செய்கின்றன " என்றே உறுதியாகநிற்கின்ருனே, அசைவதில்லையோ, (அவன் குணங்களைக் கடந்தவன்).

उदासीनवत् यथा उदासीनः न कस्यचित् पक्षं भजते, तथा अयं गुणातीतत्वोपायमार्गे अवस्थितः आसीनः आत्मवित् गुणैः यः संन्यासी न विचाल्यते विवेकदर्शनावस्थातः । तदेतत् स्फुटीकरोति— गुणाः कार्यकरणविषयाकारेण परिणताः अन्योन्यस्मिन् वर्तन्ते इति यः अवतिष्ठति— छन्दोभङ्गभयात् परस्मैपदप्रयोगः— 'यः अनुतिष्ठति' इति वा पाठान्तरम्— न इङ्गते न चलति, स्वरूपावस्थ एव भवति इत्यर्थः ॥ ௨௩ ॥

किञ्च—

௨௪. समदुःखसुखः स्वस्थः समलोष्टाश्मकाञ्चनः ।
तुल्यप्रियाप्रियो धीरः तुल्यनिन्दात्मसंस्तुतिः ॥

समदुःखसुखः समे दुःखसुखे यस्य सः समदुःखसुखः, स्वस्थः स्वात्मनि स्थितः प्रसन्नः, समानि लोष्टाश्मकाञ्चनानि यस्य सः समलोष्टाश्मकाञ्चनः, तुल्यप्रियाप्रियः प्रियं च अप्रियं च तुल्ये समे यस्य सः अयं तुल्यप्रियाप्रियः, धीरः धीमान्, तुल्यनिन्दात्मसंस्तुतिः निन्दा च आत्मसंस्तुतिश्च निन्दाऽऽत्मसंस्तुती, तुल्ये निन्दाऽऽत्मसंस्तुती यस्य यतेः सः तुल्यनिन्दाऽऽत्मसंस्तुतिः ॥ ௨௪ ॥

---

உதாஸீநன் [உபேக்ஷையுள்ளவன்] என்பான் ஒருவனது பக்கத்தையும் சாராதவாறுபோல, ஆத்மாவை அறியும்துறவியான இவன், குணங்களைக் கடந்தவனுதற்கு ஸாதநமான வழியிலே [மெய்யுணர்விலே] நிலேத்து வீற்றிருப்பவனுய் விவேகப்பார்வையான நிலேயினின்றும் குணங்களால் அசைக்கப்படுவதில்லே. அந்த இதனே விளக்குகிருர் :—உடம்பு, இந்திரியங்கள், இந்திரியவிஷயங்கள் என்றவற்றின் வடிவங்களாய் வேறுபட்டுநிற்கும் குணங்கள் (தம்முள்) ஒன்றிலொன்று தொழிற்படுகின்றன எனக்கொண்டு உறைத்துநிற்கிருன், அசைவதில்லே, தன்நிலேயிலுள்ளவனுகவே இருக்கிருன் என்பது(தேர்ந்த)பொருள்.—'அவதிஷ்டதி' என்பதை - சுலோகம் இடர்ப்படுதலஞ்சி பரஸ்மைபதத்தில் வழங்கலாயிற்று.—''அநுஷ்டிக்கிருன்'' என்றும் வேறோர் பாடம். (இங்கே, அநுஷ்டாநமென்பது - மெய்யறிவினுல் தள்ளுண்டுபோன போலிக்கர்மத்தை யென்க. உதாஸீந திருஷ்டாந்தமானது - ஆத்மாவை அறிபவன் ''ஆத்மா நிர்விகாரி'' என்னும்அறிவினுல் தன்னேக் கர்மங்கட்குக் கர்த்தாவாகக் கொள்ளாது, தான் தொழிற்படுதலின்றி நிற்கும் தனிநிலேயை விளக்குகின்றது.—ஆ.) (௨௩)

அன்றியும்,

௨௪. (இவன்) இன்பதுன்பங்களே ஸமமாகக்கொண்டவன் : தன்னிடத்து வாழ்பவன் : மண்ணுங்கட்டி, கல், தங்கம்இவற்றை ஸமமாகக்கொண்டவன் : வேண்டியதையும், வேண்டாததையும் ஸமமாகக்கொண்டவன் : ஞானமுள்ளவன் : இகழ்ச்சியையும் தற்புகழ்ச்சியையும் ஸமமாகக்கொண்டவன்.

இந்த யதியானவன் தன்னிடத்து வாழ்பவன், ஆத்மாவினிடத்து நிற்பவனுய்த் தெளிந்துள்ளவன் [தன்நிலேயினின்றும் தவருது அவிகாரியாயிருப்பவன்.—ஆ.] (௨௪)

𑌗𑍀𑌤𑌾—

௨௫. 𑌮𑌾𑌨𑌾𑌪𑌮𑌾𑌨𑌯𑍋𑌸𑍍𑌤𑍁𑌲𑍍𑌯𑌃 𑌤𑍁𑌲𑍍𑌯𑍋 𑌮𑌿𑌤𑍍𑌰𑌾𑌰𑌿𑌪𑌕𑍍𑌷𑌯𑍋𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑌮𑍍𑌭𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 𑌗𑍁𑌣𑌾𑌤𑍀𑌤𑌸𑍍𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

𑌮𑌾𑌨𑌾𑌪𑌮𑌾𑌨𑌯𑍋𑌃 𑌤𑍁𑌲𑍍𑌯𑌃 𑌸𑌮𑌃 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑌃 ; 𑌤𑍁𑌲𑍍𑌯𑌃 𑌮𑌿𑌤𑍍𑌰𑌾𑌰𑌿𑌪𑌕𑍍𑌷𑌯𑍋𑌃—𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌉𑌦𑌾𑌸𑍀𑌨𑌾 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌕𑍇𑌚𑌿𑌤𑍍 𑌸𑍍𑌵𑌾𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑍇𑌣, 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌪𑌰𑌾𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑍇𑌣 𑌮𑌿𑌤𑍍𑌰𑌾𑌰𑌿𑌪𑌕𑍍𑌷𑌯𑍋𑌰𑌿𑌵 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌇𑌤𑌿 । 𑌅𑌤𑌃 𑌤𑍁 𑌤𑍁𑌲𑍍𑌯𑍋 𑌮𑌿𑌤𑍍𑌰𑌾𑌰𑌿𑌪𑌕𑍍𑌷𑌯𑍋𑌃 𑌇𑌤𑍍𑌯𑌾𑌹 । 𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑌮𑍍𑌭𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑍀— 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌆𑌰𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌆𑌰𑌮𑍍𑌭𑌾𑌃, 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌆𑌰𑌮𑍍𑌭𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍁𑌂 𑌶𑍀𑌲𑌂 𑌅𑌸𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑌮𑍍𑌭𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑍀, 𑌦𑍇𑌹𑌧𑌾𑌰𑌣𑌮𑌾𑌤𑍍𑌰𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑍇𑌣 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌗𑍁𑌣𑌾𑌤𑍀𑌤𑌃 𑌸𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ ௨௫ ॥

'𑌉𑌦𑌾𑌸𑍀𑌨𑌵𑌤𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 '𑌗𑍁𑌣𑌾𑌤𑍀𑌤𑌃 𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇' 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌦𑌨𑍍𑌤𑌂 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌯𑌾𑌵𑌤𑍍 𑌯𑌤𑍍𑌨𑌸𑌾𑌧𑍍𑌯𑌂 𑌤𑌾𑌵𑌤𑍍 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌃 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌂 𑌗𑍁𑌣𑌾𑌤𑍀𑌤𑌤𑍍𑌵𑌸𑌾𑌧𑌨𑌂 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍋𑌃 ; 𑌸𑍍𑌥𑌿𑌰𑍀𑌭𑍂𑌤𑌂 𑌤𑍁 𑌸𑍍𑌵𑌸𑌂𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌸𑌤𑍍 𑌗𑍁𑌣𑌾𑌤𑍀𑌤𑌸𑍍𑌯 𑌯𑌤𑍇𑌃 𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌭𑌵𑌤𑌿 ।

---

மற்றும்,

௨௫. மானவமானங்களில் ஒப்பநிற்பவனும், நண்பரது பக்கத்திலும், பகைவரது பக்கத்திலும் ஒப்பநிற்பவனும், எல்லாமுயற்சிகளையும் துறக்கின்ற அவன் "குணாதீதன்" [குணங்களைக் கடந்தவன்] எனப்படுகிறான்.

ஒப்பநிற்பவன் - மாறுபாடில்லாதவன் [தாக்கப்படாதவன்]. சிலர் தமதுகருத்தின்படி உதாஸீநர்களாயிருந்தாலும், பிறர்கருத்தின்படி நண்பரது பக்கத்திலாயினும், பகைவரது பக்கத்திலாயினும் இருக்கிறவர்போல(க் காணப்படுகிறார்கள்) ; என்று, "இவனோ நண்பரது பக்கத்திலும் பகைவரது பக்கத்திலும் ஒப்பநிற்பவன்" என அருளிச்செய்கிறார். இவன் இம்மைமறுமைக்கான எல்லாக்கர்மங்களையும் விட்டொழியும் தன்மையன் : உடம்பைக் கொண்டுசெலுத்தற்குமாத்திரம் காரணமானவை [உடம்பு நிற்றற்குமாத்திரம்வேண்டிய கர்மங்கள்] நீங்கலாக எல்லாக்கர்மங்களையும் துறந்துநிற்பவன் என்பது பொருள். (௨௫)

பகவத்பக்தி முக்திக்கு ஸாதநம்.

குணங்களைக்கடந்தவனுதற்கு "எவன்" (௧௪ - ௨௩) என்பதுமுதல் "குணங்களைக் கடந்தவன் எனப்படுகிறான்" (௧௪ - ௨௫) என்பதுவரை கூறப்பட்ட ஸாதநங்கள் எவ்வளவுகாலத்தில் முயற்சியால் ஸாதிக்கக்கூடியவையோ, அவ்வளவுகாலம் ஸந்யாஸியினால், மோக்ஷத்தை நாடும் துறவியினால் அநுஷ்டிக்கவேண்டியவை ; ஆனால், உறுதியாகநிலைப்பட்டுத் தானே உணரக்கூடியவளவிலே [தன்அநுபவத்தில் முயற்சியின்றி அவை தாமாகவே இயல்பாய் அமைந்திட்டபொழுது], குணங்களைக் கடந்துநிற்கும்யதிக்கு அடையாளங்களாகின்றன. (ஞானாதிகாரியானவன் தனக்கு ஆத்மஅறிவு பிறத்தற்குமுன் உதாஸீனனாயிருத்தல்முதலிய இவ்வொழுக்கங்களையெல்லாம் முயற்சியோடு அநுஷ்டித்துச் சாதித்துக்கொள்ளவேண்டும். ஆனால், ஆத்மஞானம் உதித்தவுடன் ஜீவன்முக்தனான அவனுக்கு அவையெல்லாம் உறுதியாகநிலைப்பட்டு அநுபவத்தில் அமைந்து, அவனுக்கு லக்ஷணங்களாகநிற்கின்றன.—ஆ.)

𑌅𑌧𑍁𑌨𑌾 "𑌕𑌥𑌂 𑌚 𑌤𑍍𑌰𑍀𑌨𑍍 𑌗𑍁𑌣𑌾𑌨𑍍 𑌅𑌤𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇?" 𑌇𑌤𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌚𑌨𑌮𑌾𑌹—

௨௬. 𑌮𑌾𑌂 𑌚 𑌯𑍋𑌽𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑍇𑌣 𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑍇𑌵𑌤𑍇 ।
𑌸 𑌗𑍁𑌣𑌾𑌨𑍍 𑌸𑌮𑌤𑍀𑌤𑍍𑌯𑍈𑌤𑌾𑌨𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌯𑌾𑌯 𑌕𑌲𑍍𑌪𑌤𑍇 ॥

𑌮𑌾𑌂 𑌚 𑌈𑌶𑍍𑌵𑌰𑌂 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌹𑍃𑌦𑌯𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌂 𑌯𑍋 𑌯𑌤𑌿𑌃 𑌕𑌰𑍍𑌮𑍀 𑌵𑌾 𑌅𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑍇𑌣 𑌨 𑌕𑌦𑌾𑌚𑌿𑌦𑍍 𑌯𑍋 𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌰𑌤𑌿; 𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍋𑌗𑌃— 𑌭𑌜𑌨𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌃, 𑌸𑍈𑌵 𑌯𑍋𑌗𑌃— 𑌤𑍇𑌨 𑌵𑌿𑌵𑍇𑌕𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌕𑍇𑌨 𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍋𑌗𑍇𑌨— 𑌸 𑌹𑌿 𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍋𑌗𑌃 𑌭𑌗𑌵𑌦𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌜𑍋 𑌭𑌵𑌤𑌿— 𑌸𑍇𑌵𑌤𑍇, 𑌸𑌃 𑌗𑍁𑌣𑌾𑌨𑍍 𑌸𑌮𑌤𑍀𑌤𑍍𑌯 𑌏𑌤𑌾𑌨𑍍 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌾𑌨𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌯𑌾𑌯, 𑌭𑌵𑌨𑌂 𑌭𑍂𑌯𑌃, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌯𑌾𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑌵𑌨𑌾𑌯 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯 𑌕𑌲𑍍𑌪𑌤𑍇 𑌸𑌮𑌰𑍍𑌥𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௨௬ ॥

𑌕𑍁𑌤 𑌏𑌤𑌦𑌿𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௨௭. 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌽𑌹𑌮𑌮𑍃𑌤𑌸𑍍𑌯𑌾𑌵𑍍𑌯𑌯𑌸𑍍𑌯 𑌚 ।
𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌸𑍍𑌯 𑌚 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌸𑍁𑌖𑌸𑍍𑌯𑍈𑌕𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑌸𑍍𑌯 𑌚 ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑍇 𑌶𑌤𑌸𑌾𑌹𑌸𑍍𑌰𑍍𑌯𑌾𑌂 𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌯𑌾𑌂 𑌵𑍈𑌯𑌾𑌸𑌿𑌕𑍍𑌯𑌾𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌪𑌰𑍍𑌵𑌣𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍁 𑌉𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌯𑍋𑌗-

---

இனி, "முக்குணங்களையும் எப்படிக் கடந்துவிடுகிறான்?" என்னும் இவ்வினாவிற்கு மறுமொழி அருளிச்செய்கிறார்:

௨௬. மேலும், எவன் பிறழாதபக்தியோகத்தினால் என்னைத் தொழுகின்றானோ, அவன் இக்குணங்களைச் செவ்வனே கடந்து, ப்ரஹ்மமாயிருத்தற்குத் தக்கவனாகிறான்.

எந்தத் துறவி[யதி]யானவன், அல்லது கர்மியானவன் எல்லாப்பிராணிகளுடைய ஹிருதயத்தினுள் தங்கியுள்ள நாராயணனாகிய ஈச்வரனை என்னை, பிறழாத பக்தியோகத்தினால், ஒருகாலும் தவறாத பக்தியென்னும் யோகத்தினால், பகுத்தறியும் உணர்வாகிய பக்தியோகத்தினால் தொழுகின்றானோ, அவன் மேற்கூறிய இக்குணங்களை நன்றாகக் கடந்து, ப்ரஹ்மமாயிருத்தற்குத் தகுந்தவனாகிறான், மோக்ஷத்தை யடைய உரியவனாகிறான். அந்தப்பக்தியோகமானது பகவானது அநுக்கிரகமென்னும் அருளினாலன்றோ உண்டாவதாயுள்ளது. (பக்தியோகமென்பது - பரமப்பிரேமையாகிய பேரன்புயென்னும்யோகம். பக்தியோகத்தால் பகவானைத்'தொழுதலென்பது - வெளியே சித்தத்தைவிடாது, எப்பொழுதும் பகவானை இடைவிடாது தியானித்தல். பகவானுடைய அநுக்கிரகத்தால் மெய்யுணர்வு பிறக்கின்றது; பிறக்கவே, ஞானி உயிரோடிருக்கும் பொழுதேயே மோக்ஷத்தை அடைந்துவிடுகிறான்.—ஆ.) (௨௬)

### ஆத்மா ஒன்றுதான்.

இது [ஞானி ப்ரஹ்மமேதான் என்பது] எதனால்? என்பது.—கூறுவோம்:

௨௭. ஏனெனில், யான் இறவாததாய் வேறுபாடில்லதாய் சாச்வதமான தருமமும் தவறாத இன்பமுமான ப்ரஹ்மத்திற்கு இருப்பிடம்.

ஸ்ரீமஹாபாரதத்திலே, வ்யாஸரருளிச்செய்த நூறாயிரக்கிரந்தஸம்ஹிதையிலே, பீஷ்மபர்வத்திலே, ஸ்ரீமத் பகவத்கீதைகளாக, உபநிஷத்துக்களாக, ப்ரஹ்மவித்யை

ஶாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே குணத்ரயவிபாகயோகோ நாம சதுர்தஶோऽத்யாய: ॥

ப்ரஹ்மண: பரமாத்மந: ஹி யஸ்மாத் ப்ரதிஷ்டா அஹம் ப்ரதிதிஷ்டதி அஸ்மிந் இதி ப்ரதிஷ்டா அஹம் ப்ரத்யகாத்மா । கீத்ருஶஸ்ய ப்ரஹ்மண: ?— அம்ருதஸ்ய அவிநாஶிந: அவ்யயஸ்ய அவிகாரிண: ஶாஶ்வதஸ்ய ச நித்யஸ்ய தர்மஸ்ய ஜ்ஞாநயோகதர்மப்ராப்யஸ்ய ஸுகஸ்ய ஆநந்தரூபஸ்ய ஐகாந்திகஸ்ய அவ்யபிசாரிண: அம்ருதஸ்வபாவஸ்ய பரமாநந்தரூபஸ்ய பரமாத்மந: ப்ரத்யகாத்மா ப்ரதிஷ்டா, ஸம்யக்ஜ்ஞாநேந பரமாத்மதயா நிஶ்சீயதே । தத் ஏதத் 'ப்ரஹ்மபூயாய கல்பதே' இதி உக்தம் ॥

யயா ச ஈஶ்வரஶக்த்யா பக்தாநுக்ரஹாதிப்ரயோஜநாய ப்ரஹ்ம ப்ரதிதிஷ்டதே ப்ரவர்ததே, ஸா ஶக்தி: ப்ரஹ்மைவ அஹம், ஶக்திஶக்திமதோ: அநந்யத்வாத் இத்யபிப்ராய: ॥

அதவா—ப்ரஹ்மஶப்தவாச்யத்வாத் ஸவிகல்பகம் ப்ரஹ்ம । தஸ்ய ப்ரஹ்மணோ நிர்விகல்பக: அஹம் ஏவ நாந்ய: ப்ரதிஷ்டா ஆஶ்ரய: । கிம்விஶிஷ்டஸ்ய ? — அம்ருதஸ்ய

---

யாக, யோகசாஸ்திரமாக இருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணார்ஜுந ஸம்வாதத்திலே குணத்ரய விபாகயோகம் என்னும் பதினான்காம் அத்தியாயம் முற்றும்.

ஏனெனில், உள்ளேயுள்ள ஆத்மாவான நான் ப்ரஹ்மமான பரமாத்மாவிற்கு இருப்பிடம் [ப்ரஹ்மம் என்னைக்காட்டிலும் வேறன்று, நான் ப்ரஹ்மமான ஆத்மா தான் என்றபடி].—எத்தகைய ப்ரஹ்மத்திற்கு ? —அழியுந்தன்மையில்லதாய், அவிகாரியாய், நித்யமான தருமமாய் (அதாவது) ஞானயோகமென்னும் தருமத்தால் அடையத்தக்கதாய், தவறாத இன்பவடிவமான (ப்ரஹ்மத்திற்கு). சாகாமைமுதலிய இயல்பானதாய்ப் பேரானந்தவடிவமான பரமாத்மாவிற்கு உள்ளேயுள்ள ஆத்மா இருப்பிடம் ; (ஆகவே, அது) பரமாத்மாவாக மெய்யறிவினால் நிர்ணயிக்கப்படுகின் றது. ஆதலால், இந்த (உண்மைதான்) "ப்ரஹ்மமாயிருத்தற்குத் தக்கவனாகிறான்" (௨௬ - ௨௬) எனக் கூறப்பட்டது.

ப்ரஹ்மம் எந்த ஈச்வரசக்தியால் பக்தர்களை அநுக்கிரகித்தல் முதலியவற்றிற் காக அமைந்து நிலைப்படுகின்றதோ, அந்தச் சக்தி ப்ரஹ்மமேயான நான்தான் ; ஏனெனில், சக்தியும் சக்தியையுடைய பொருளும் வேறல்ல [ஒன்றுதான்] ; என்பது கருத்து.

அல்லது, (இவ்வாறு கொள்ளினும், அமையும். ஸகுண ப்ரஹ்மமே) ப்ரஹ்ம மென்னும் சொல்லால் சொல்லக்கூடியதாதலால், ப்ரஹ்மமென்பது - ஸவிகல்பமான [ஸகுண] ப்ரஹ்மமென்க. சொல்லமுடியாத நிர்விகல்பமான [நிர்க்குணமான] யான் அந்த ப்ரஹ்மத்திற்கு இருப்பிடம், தங்குமிடம்.—எப்படிப்பட்ட(அந்த ப்ரஹ்மத்

அமரணதர்மஸ்ய அவ்யயஸ்ய ச வ்யயரஹிதஸ்ய । கிஞ்ச — ஶாஶ்வதஸ்ய ச நித்யஸ்ய தர்மஸ்ய ஜ்ஞாநநிஷ்டாலக்ஷணஸ்ய ஸாதநஸ்ய தஜ்ஜநிதஸ்ய ஐகாந்திகஸ்ய ஸுகா-நந்தஸ்ய ச, ‘ப்ரதிஷ்டா அஹம்’ இதி ஸம்பத்யதே ॥ உஎ ॥

இதி ஸ்ரீமத்பகவத்கீதாபாஷ்யே சதுர்தஶோऽத்யாய: ॥

---

திற்கு) ? —சாகுந்தன்மையில்லதாய் விகாரமில்லாததற்கு. மேலும், ஞானநிஷ்டை என்னும் ஸநாதந தருமத்திற்கும், அதனினின்று பிறப்பதாய்த் தவறுது அமைகின்ற ஆநந்தத்திற்கும் “ யான் இருப்பிடம் ” எனத் தொடர்கின்றது. (உஎ)

ஸ்ரீமத் பகவத்கீதாபாஷ்யத்தில் பதினான்காம் அத்தியாயம் முற்றிற்று.

𑌅𑌥

𑌪𑌞𑍍𑌚𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌯𑍋𑌗𑌃 ॥

𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌮𑌦𑌧𑍀𑌨𑌂 𑌕𑌰𑍍𑌮𑌿𑌣𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂, 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌾𑌂 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑌫𑌲𑌮𑍍, 𑌅𑌤𑌃 𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍋𑌗𑍇𑌨 𑌮𑌾𑌂 𑌯𑍇 𑌸𑍇𑌵𑌨𑍍𑌤𑍇 𑌤𑍇 𑌮𑌮 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌕𑍍𑌰𑌮𑍇𑌣 𑌗𑍁𑌣𑌾𑌤𑍀𑌤𑌾𑌃 𑌮𑍋𑌕𑍍𑌷𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿। 𑌕𑌿𑌮𑍁 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 𑌵𑌿𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌃 𑌇𑌤𑌿। 𑌅𑌤𑌃 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑍇𑌨 𑌅𑌪𑍃𑌷𑍍𑌟𑍋𑌽𑌪𑌿 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑍁𑌃 𑌉𑌵𑌾𑌚 '𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍂𑌲𑌮𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 ॥

𑌤𑌤𑍍𑌰 𑌤𑌾𑌵𑌤𑍍 𑌵𑍃𑌕𑍍𑌷𑌰𑍂𑌪𑌕𑌕𑌲𑍍𑌪𑌨𑌯𑌾 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌹𑍇𑌤𑍋𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌵𑌰𑍍𑌣𑌯𑌤𑌿। 𑌵𑌿𑌰𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌤𑍍 𑌭𑌗𑌵𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌅𑌧𑌿𑌕𑌾𑌰𑌃, 𑌨 𑌅𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑍇𑌤𑌿 ॥

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 ॥

௧. 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍂𑌲𑌮𑌧𑌃𑌶𑌾𑌖𑌮𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌰𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ।
𑌛𑌨𑍍𑌦𑌾𑌂𑌸𑌿 𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑍍𑌣𑌾𑌨𑌿 𑌯𑌸𑍍𑌤𑌂 𑌵𑍇𑌦 𑌸 𑌵𑍇𑌦𑌵𑌿𑌤𑍍 ॥

---

## பதினைந்தாம் அத்தியாயம்: புருஷோத்தமயோகம்.

### ஸம்ஸாரவிருக்ஷம்.

பிராணிகளது கர்மத்தின் பயனும், ஞானிகளது ஞானத்தின் பயனும் என்னைச் சார்ந்திருப்பனவாதலால், எவர்கள் என்னைப் பக்தியோகத்தால் தொழுகிறார்களோ, அவர்கள் எனது அநுக்கிரகத்தினால் ஞானத்தையடைதல்வழியாகக் குணங்களைக் கடந்தவராய் மோக்ஷத்தைப் பெறுகிறார்கள். ஆத்மாவினுடைய உண்மையையே நேராக அறிகிறவர்களைப்பற்றிக் கூறவும்வேண்டுமோ? என்க. ஆகவே, பகவான், அர்ஜுனனால் வினவப்படாததாயினும் [அவன் கேட்காமலிருந்தாலும்] ஆத்மாவினது உண்மையை விவரிக்கக்கருதியவராய் "சந்தஸ்கள் எதற்கு" (௧௫-௧) என்பது முதலியவற்றை அருளிச்செய்யலானார்:

இனி முதலில், விருக்ஷமாக உருவகஞ்செய்து [ஞானமென்னும் கோடரியினால் வெட்டக்கூடியதாதலால், மரமாக ரூபகாலங்காரப்படுத்தி], வைராக்கியம் பிறக்கும்பொருட்டு ஸம்ஸாரம் இன்னதென்பதை விரித்துரைக்கிறார்; ஏனெனில்,—பகவானுடைய உண்மையை அறிவதிலே - ஸம்ஸாரத்தினின்றும் ஆசைநீங்கியவனுக்கு அதிகாரமேயன்றி மற்றையோனுக்கு இல்லை என்று.

ஸ்ரீபகவான் சொல்லலுற்றார்:

௧. சந்தஸ்கள் எதற்கு இலைகளோ, (அந்த) அச்வத்தத்தை - மேலே வேரும், கீழே கிளைகளும்உடையதாக, அழிவற்றதாகக் கூறுகிறார்கள். எவன் அதனை அறிகிறானோ, அவன் வேதங்களை அறிபவன்.

𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍂𑌲𑌂 𑌕𑌾𑌲𑌤𑌃 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌕𑌾𑌰𑌣𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌮𑌹𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑌾𑌯𑌾𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑌤𑍍, 𑌤𑌤𑍍 𑌮𑍂𑌲𑌮𑍍 𑌅𑌸𑍍𑌯𑍇𑌤𑌿 𑌸𑍋𑌽𑌯𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑍃𑌕𑍍𑌷𑌃 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍂𑌲𑌃 । 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌶𑍍𑌚 — '𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍂𑌲𑍋𑌽𑌵𑌾𑌕𑍍𑌶𑌾𑌖𑌃 𑌏𑌷𑍋𑌽𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃' 𑌇𑌤𑌿 । 𑌪𑍁𑌰𑌾𑌣𑍇 𑌚 —

"𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍂𑌲𑌪𑍍𑌰𑌭𑌵𑌸𑍍𑌤𑌸𑍍𑌯𑍈𑌵𑌾𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑍋𑌤𑍍𑌥𑌿𑌤𑌃 ।
𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌸𑍍𑌕𑌨𑍍𑌧𑌮𑌯𑌶𑍍𑌚𑍈𑌵 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌕𑍋𑌟𑌰𑌃 ॥
𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑌵𑌿𑌶𑌾𑌖𑌶𑍍𑌚 𑌵𑌿𑌷𑌯𑍈𑌃 𑌪𑌤𑍍𑌰𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑌥𑌾 ।
𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑌸𑍁𑌪𑍁𑌷𑍍𑌪𑌶𑍍𑌚 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌫𑌲𑍋𑌦𑌯𑌃 ॥
𑌆𑌜𑍀𑌵𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑍃𑌕𑍍𑌷𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ।
𑌏𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌨𑌂 𑌚𑍈𑌵 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑍃𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 𑌤𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍 ॥
𑌏𑌤𑌚𑍍𑌛𑌿𑌤𑍍𑌤𑍍𑌵𑌾 𑌚 𑌭𑌿𑌤𑍍𑌤𑍍𑌵𑌾 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌪𑌰𑌾𑌸𑌿𑌨𑌾 ।
𑌤𑌤𑌶𑍍𑌚𑌾𑌤𑍍𑌮𑌰𑌤𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌤𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑌾𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌪𑍁𑌨𑌃 ॥"

𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 । 𑌤𑌮𑍍 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍂𑌲𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌂 𑌮𑌾𑌯𑌾𑌮𑌯𑌂 𑌵𑍃𑌕𑍍𑌷𑌮𑍍 𑌆𑌹𑍁𑌃 । 𑌮𑌹𑌦𑌹𑌂𑌕𑌾𑌰𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌦𑌯𑌃 𑌶𑌾𑌖𑌾 𑌇𑌵 𑌅𑌸𑍍𑌯 𑌅𑌧𑌃 𑌭𑌵𑌨𑍍𑌤𑍀𑌤𑌿 𑌸𑍋𑌽𑌯𑌮𑍍 𑌅𑌧𑌃𑌶𑌾𑌖𑌃, 𑌤𑌮𑍍 𑌅𑌧𑌃𑌶𑌾𑌖𑌮𑍍 । 𑌨 𑌶𑍍𑌵𑍋𑌽𑌪𑌿 𑌸𑍍𑌥𑌾𑌤𑌾 𑌇𑌤𑌿 𑌅𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌃 𑌤𑌂 𑌕𑍍𑌷𑌣𑌪𑍍𑌰𑌧𑍍𑌵𑌂𑌸𑌿𑌨𑌮𑍍 𑌅𑌶𑍍𑌵-

---

அவ்யக்தமென்னும் மாயாசக்தியுடைய ப்ரஹ்மமானது காலத்தால் நுண்ணியதும், காரணமும், நித்யமும், பெரிதும் [எங்குமுள்ளதும்] ஆதலால், "மேல்" எனக் கூறப்படுகின்றது. (கூடஸ்தமான [நிர்விகாரியான] ப்ரஹ்மம் காரணமாகாதாதலால், மாயாசக்தியுடைய ப்ரஹ்மமென்றார். அது நித்யப்பொருளாய், எல்லாக்காரியங்கட்கும் நியதமாய் முன்நிற்கும்காரணமாதலால், காலத்தால் நுண்ணியதென்க.—ஆ.) "மேலே வேரும், கீழே கிளைகளும்உடைய இந்த அச்வத்தம் என்றுமுள்ளது" (கட - ௬ - ௨ - ௧) என்னும்சுருதியினாலு மென்க. புராணத்திலும், "ப்ரஹ்மவிருக்ஷமானது, ப்ரஹ்மம்தங்கியுள்ள விருக்ஷமானது அவ்யக்தமாகிய வேரைப் பிறப்பிடமாகப்பெற்றது: அதனது வலிமையினாலேயே ஓங்கிவளர்ந்துள்ளது: புத்தியாகிய அடிமரமாகவேஉள்ளது: இந்திரியத்துவாரங்களாகிய பொந்துகளையும், (நிலம், நீர் முதலிய) மஹாபூதங்களாகிய பலகொப்புக்களையும், விஷயங்களாகிய இலைகளையும் கிளைகளையும், நல்வினை தீவினைகளாகிய அழகிய புஷ்பங்களையும், இன்ப துன்பங்களாகிய பழமுண்டாதலையும் உடையது: எல்லாப்பிராணிகட்கும் பிழைப்பைத் தருவது: (ஞானத்தாலன்றி பிறவற்றால் வெட்டமுடியாததுஆதலால்)என்றுமுள்ளது. இது ப்ரஹ்மத்திற்குத் தங்குமிடம். அது அந்த ப்ரஹ்மவிருக்ஷத்தின்(ஸாரம். ப்ரஹ்மத்திற்குப்புறம்பாக ஸம்ஸாரத்திற்கு நிலைப்பு இல்லை என்றபடி.—ஆ.). ஞானமாகிய வலிய கோடரியினால் இதனை வெட்டிப் பிளந்து,பின்பு, ஆத்மஆநந்தத்தைப் பெற்று அதனின்று மீண்டும் திரும்புவதில்லை" என்பதுமுதலியவற்றை(க் காண்க). மயக்கமயமான ஸம்ஸாரத்தை மேலே வேருடைய விருக்ஷமாகக் கூறுகிறார்கள். மஹத், அஹங்காரம், தந்மாத்திரங்கள் முதலியவை இதனது கிளைகள்போலக் கீழேஉள்ளன. அச்வத்தம் - நாளைக்குக்கூட நில்லாதது, கணப்பொழுதுள் அழியுந்தன்மையது; (ஆகவே,

𑌤𑍍𑌥𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌃 𑌕𑌥𑌯𑌨𑍍𑌤𑌿 ; 𑌅𑌵𑍍𑌯𑌯𑌂—𑌸𑌂𑌸𑌾𑌰𑌮𑌾𑌯𑌾𑌯𑌾𑌃 𑌅𑌨𑌾𑌦𑌿𑌕𑌾𑌲𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌸𑍋𑌽𑌯𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑍃𑌕𑍍𑌷𑌃 𑌅𑌵𑍍𑌯𑌯𑌃 । 𑌅𑌨𑌾𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌦𑍇𑌹𑌾𑌦𑌿𑌸𑌨𑍍𑌤𑌾𑌨𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 𑌹𑌿 𑌸𑌃 𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌃 । 𑌤𑌮𑍍 𑌅𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 । 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑍃𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 𑌇𑌦𑌮𑍍 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌮𑍍—𑌛𑌨𑍍𑌦𑌾𑌂𑌸𑌿 𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑍍𑌣𑌾𑌨𑌿 𑌛𑌨𑍍𑌦𑌾𑌂𑌸𑌿 𑌛𑌾𑌦𑌨𑌾𑌤𑍍 𑌋𑌗𑍍𑌯𑌜𑍁𑌃𑌸𑌾𑌮𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌨𑌿 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑍃𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 𑌪𑌰𑍍𑌣𑌾𑌨𑍀𑌵 𑌪𑌰𑍍𑌣𑌾𑌨𑌿 । 𑌯𑌥𑌾 𑌵𑍃𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 𑌰𑌕𑍍𑌷𑌣𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑌿 𑌪𑌰𑍍𑌣𑌾𑌨𑌿, 𑌤𑌥𑌾 𑌵𑍇𑌦𑌾𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑍃𑌕𑍍𑌷𑌪𑌰𑌿𑌰𑌕𑍍𑌷𑌣𑌾𑌰𑍍𑌥𑌾𑌃, 𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑌤𑌦𑍍𑌧𑍇𑌤𑍁𑌫𑌲𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌰𑍍𑌥𑌤𑍍𑌵𑌾𑌤𑍍। 𑌯𑌥𑌾𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑍃𑌕𑍍𑌷𑌂 𑌸𑌮𑍂𑌲𑌂 𑌯𑌃 𑌤𑌂 𑌵𑍇𑌦 𑌸𑌃 𑌵𑍇𑌦𑌵𑌿𑌤𑍍, 𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌵𑌿𑌤𑍍 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌨 𑌹𑌿 𑌸𑌮𑍂𑌲𑌾𑌤𑍍 𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 𑌅𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌜𑍍𑌞𑍇𑌯𑌃 𑌅𑌨𑍍𑌯𑌃 𑌅𑌣𑍁𑌮𑌾𑌤𑍍𑌰𑍋𑌽𑌪𑌿 𑌅𑌵𑌶𑌿𑌷𑍍𑌟𑌃 𑌅𑌸𑍍𑌤𑌿 𑌇𑌤𑌿 𑌅𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌵𑌿𑌤𑍍 𑌇𑌤𑌿 𑌸𑌮𑍂𑌲𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑍃𑌕𑍍𑌷𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌸𑍍𑌤𑍌𑌤𑌿 ॥

𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑍃𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 𑌅𑌪𑌰𑌾 𑌅𑌵𑌯𑌵𑌕𑌲𑍍𑌪𑌨𑌾 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

---

ஸம்ஸாரத்தை) அச்வத்தம் என்கிறார்கள். ஸம்ஸாரமாயை அநாதிகாலமாகத் தலைப்பட்டுள்ளமையால், அந்த இச்சம்சாரவிருக்ஷம் அழிவற்றதென்க. ஏனெனில், அது முதலும்முடிவும்இல்லாததாகிய உடம்புமுதலியவற்றின்தொடர்ச்சியைச் சார்ந்திருப்பதாக(யாவர்க்கும்)தெரிந்துளது. அதே ஸம்ஸாரவிருக்ஷத்திற்கு இது வேறோர் விசேஷணம் :—“ சந்தஸ்கள் எதற்கு இலைகளோ ” (என்பது). ரிக் யஜுஸ் ஸாமமென்னும்சந்தஸ்கள் மறைத்தலால், பாதுகாத்தலால் ஸம்ஸாரவிருக்ஷத்திற்கு இலைகள் போன்றுள்ளன. இலைகள் மரத்தைப் பாதுகாத்தற்காக இருக்குமாறுபோல,வேதங்கள் [கர்மகாண்டங்கள்] ஸம்ஸாரமரத்தைப் பாதுகாத்தற்காக உள்ளன ; நல்வினைகளையும், தீவினைகளையும், அவற்றின் காரணங்களையும், பயன்களையும் உணர்த்தும் பொருட்டுள்ளனவாதலின் என்க. (இலைகள் மரத்திலுள்ள குற்றத்தை மறைத்து, மரத்தைப் பாதுகாப்பதுபோல, கர்மகாண்டங்கள் ஸம்ஸாரத்திலுள்ள குற்றத்தை மறைத்து, ஸம்ஸாரத்தைப் பாதுகாக்கின்றன.—ஆ.) கீழ்உரைத்தபடி ஸம்ஸாரவிருக்ஷத்தை வேரோடு எவன் அறிகின்றானோ, அவன் வேதங்களை அறிந்தவன், வேதங்கள் உபதேசிக்கும் பொருளை அறிந்தவன் என்பது பொருள். நிச்சயமாக,இந்த ஸம்ஸாரவிருக்ஷத்தைக்காட்டிலும்,அதனது வேரைக்காட்டிலும் அறியவேண்டியபொருள் வேறு அணுவளவுங்கூட மிச்சமில்லை; ஆகவே, எல்லாவேதப்பொருளையும் அறிந்தவன், முற்றுமுணர்ந்தவன் என ஸம்ஸாரவிருக்ஷத்தை வேரோடு அறிதலைப் புகழ்கின்றார். (கங்கைநதிக்கரையிலே காற்றினால் வேர்ப்பிடுங்காகப் பிடுங்கித் தலைகீழாகச் சாய்க்கப்பெற்ற ஒருபெரிய அரசமரத்தை உபமானமாகக்கொண்டு இவ்வுருவகம் செய்யப்பட்டது.—ம. “அழகிய கையாகிய மலரினையும்,அடியாகிய தளிரினையும்,கண்ணாகிய வண்டினையும் ............ உடையதாய் ஓர் கொடி உளது ” என்றவிடத்து, பெண் என்று வெளிப்படையாகக் கூறாமல் கொடி என்றுமாத்திரம் கூறியிருப்பதுபோல, ஸம்ஸாரமென்றுகூறாமல் அச்வத்தம் என்றுமாத்திரம் கூறப்பட்டது.) (க)

அதே ஸம்ஸாரவிருக்ஷத்தின் உறுப்புக்கட்கு வேறுகற்பனை சொல்லப்படுகின்றது [அதனுடைய உறுப்புக்களை வேறுவகையாக வர்ணிக்கிறார்] :

௨. அதஶ்சோர்த்வம் ப்ரஸ்ருதாஸ்தஸ்ய ஶாகா
குணப்ரவ்ருத்தா விஷயப்ரவாலா: ।
அதஶ்ச மூலாந்யநுஸந்ததாநி
கர்மாநுபந்தீநி மநுஷ்யலோகே ॥

அத: மநுஷ்யாதிப்யோ யாவத் ஸ்தாவரம், ஊர்த்வம் ச யாவத் ப்ரஹ்மண: விஶ்வஸ்ருஜோ தாம இத்யேததந்தம் யதாகர்ம யதாஶ்ருதம் ஜ்ஞாநகர்மபலாநி, தஸ்ய வ்ருக்ஷஸ்ய ஶாகா இவ ஶாகா: ப்ரஸ்ருதா: ப்ரகதா:, குணப்ரவ்ருத்தா: குணை: ஸத்த்வரஜஸ்தமோபி: ப்ரவ்ருத்தா: ஸ்தூலீக்ருதா: உபாதாநபூதை:, விஷயப்ரவாலா: விஷயா: ஶப்தாதய: ப்ரவாலா இவ தேஹாதிகர்மபலேப்ய: ஶாகாப்ய: அங்குரீபவந்தீவ, தேந விஷயப்ரவாலா: ஶாகா: । ஸம்ஸாரவ்ருக்ஷஸ்ய பரமம் மூலம் உபாதாநகாரணம் பூர்வமுக்தம் । அத இதாநீம் கர்மபலஜநிதராகத்வேஷாதிவாஸநா: மூலாநீவ யர்மாதர்மப்ரவ்ருத்திகாரணாநி அவாந்தரபாவீநி தாநி அதஶ்ச—தேவாத்யபேக்ஷயா—மூலாநி அநுஸந்ததாநி அநுப்ரவிஷ்டாநி கர்மாநுபந்தீநி கர்ம தர்மாதர்மலக்ஷணம் அநுபந்த: பஶ்சாத்பாவி, யேஷாம் உத்பூதிம் அநு உத்பவதி, தாநி கர்மாநுபந்தீநி மநுஷ்யலோகே விஶேஷத: । அத்ர ஹி மநுஷ்யாணாம் கர்மாதிகார: ப்ரஸித்த: ॥ ௨ ॥

---

௨. அதனுடைய கொப்புக்கள் கீழேயும் மேலேயும் பரவியுள்ளன: குணங்களால் ஓங்கிவளர்ந்திருக்கின்றன: விஷயங்களாகிய தளிர்களையுடையன. கீழேயும் மநுஷ்ய உலகிலே, வேர்கள் கர்மத்தை விளைப்பனவாய்த் தொடர்ச்சியாக விரிந்துள்ளன.

(கீழ் என்பது - மத்யமனான மனுஷ்யன் முதலாக அதமமான ஸ்தாவரம்ஈறாக வுள்ளது. மேல் என்பது - அந்தமத்யமனான மனுஷ்யன்முதலாக உத்தமனான ப்ரஹ்மாஈறாகவுள்ளது.) மநுஷ்யன்முதல் ஸ்தாவரம்வரையிலும், (அந்தமனுஷ்யன் முதல்) பிரபஞ்சத்தைப் படைக்கும் ப்ரஹ்மாவின் இருப்பிடம் என்றஇதுவரையிலும் கர்மத்திற்குத் தக்கவாறு, ஞானத்திற்குத் தக்கவாறு கர்மத்தின்பயனாகவும் ஞானத்தின் பயனாகவும் (எந்தப் பிறவிகள் உள்ளனவோ, அவை) அந்தமரத்தின் கிளைகள்போல விரிந்துள்ளன; முதற்காரணமான ஸத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் குணங்களால் ஸ்தூலமாகி[பருத்து]உள்ளன. ஓசைமுதலிய விஷயங்கள் கர்மத்தின் பயனான உடம்புமுதலிய கிளைகளினின்றும் தளிர்கள்போல முளைக்கொள்ளுகின்றன போலும்; ஆகவே, விஷயங்கள் கிளைகளின் தளிர்களென்க.—ஸம்ஸாரவிருக்ஷத்திற்கு முதற்காரணமான ஆணிவேர் முன்னர்க் கூறப்பட்டது. இனி இப்பொழுது, கர்மத்தின்பயனாலானவையாய் விருப்புவெறுப்புமுதலியவற்றைப்பற்றிய வாஸனைகள் நல்வினை தீவினைகளிற் செல்லுதற்குக் காரணமாய் இடையில்[பக்கத்தில்]வெடிக்கும் வேர்கள்போல(க் கூறப்படுகின்றன). தேவர்முதலானோர்களைநோக்கக் கீழேயுள்ள மநுஷ்யஉலகிலே, அந்தவேர்கள் ஒன்றோடொன்று தொடர்ந்து விரிந்துள்ளன, ஒன்றிலொன்று புகுந்துகிடக்கின்றன. நல்வினைதீவினையாகிய கர்மமானது எவை உண்டாதலை ஒட்டி நிகழ்கின்றதோ, அந்தவேர்கள் மநுஷ்யலோகத்திலே, மனிதசரீரத்திலே கர்மத்தைப் பின்பு விசேஷமாக விளைக்கின்றன; ஏனெனில், மநுஷ்யர்களுக்குக் கர்மத்திலே அதிகாரம் இங்கே அமைந்துள்ளது. (௨)

यच्चायं वर्णितः संसारवृक्षः—

௩. न रूपमस्येह तथोपलभ्यते
नान्तो न चादिर्न च संप्रतिष्ठा ।
अश्वत्थमेनं सुविरूढमूलम्
असङ्गशस्त्रेण दृढेन छित्त्वा ॥

௪. ततः पदं तत्परिमार्गितव्यं
यस्मिन्गता न निवर्तन्ति भूयः ।
तमेव चाद्यं पुरुषं प्रपद्ये
यतः प्रवृत्तिः प्रसृता पुराणी ॥

न रूपमस्य इह यथा उपवर्णितं तथा नैव उपलभ्यते, स्वप्नमरीच्युदकमायागन्धर्वनगरसमत्वात् ; दृष्टनष्टस्वरूपो हि सः इति । अत एव न अन्तः न पर्यन्तः निष्ठा परिसमाप्तिर्वा विद्यते । तथा न च आदिः, "इतः प्रभृति अयं प्रवृत्तः" इति न केनचित् गम्यते । न च संप्रतिष्ठा स्थितिः मध्यम् अस्य केनचित् उपलभ्यते । अश्वत्थम् एनं

---

மரத்தை வெட்டி மேலான கதியை நாடுக.

மற்று, (இங்கு) வர்ணிக்கப்பெற்ற இந்த ஸம்ஸாரவிருக்ஷம் எதுவோ,

௩. அதனுடைய உருவம் அவ்வாறு இங்குக் காணப்படவில்லை ; முடிவு(காணப்பட)வில்லை ; முதலும்(காணப்பட)வில்லை ; இருப்பு(க் காணப்பட)வில்லை. நன்கு வேரூன்றிய இந்த அச்வத்தத்தை, பற்றின்மையென்னும் திண்ணியகோடரியினால் வெட்டி,

௪. அதற்குமேலே,—எதனுள் சென்றவர்கள் மீண்டும் திரும்பிவருவதில்லையோ, அந்த நிலையைத் தேடவேண்டும். "(ஸம்ஸாரவிருக்ஷம்) தொன்றுதொட்டு தலைப்பட்டுவருதல் எவனிடத்தினின்றும் தோன்றிற்றோ, அந்தமுதல்வனை புருஷனையே அடைக்கலமாக அடைகின்றேன்" (என நாடவேண்டும்).

மேலே வருணித்தபடி இதனது உருவம் இங்கே புலப்படவேயில்லை; கனவோடும், கானல்நீரோடும், இந்திரஜாலத்தாலான ஆகாசபட்டணத்தோடும் ஒப்பநிற்றலின். ஏனெனில், அது பார்க்கும்பொழுதேயே அழியுந்தன்மையதாம் என்க. ("ஸம்ஸாரவிருக்ஷமானது விருப்புமுதலியவற்றால் தலைப்பட்டு அநாதியாயிருப்பதனால் தானே அழியமாட்டாது; அன்றியும், ஒருவராலும் வெட்டமுடியாதது" என்னுஞ்சங்கை வர,—அவ்விருக்ஷமானது மேலேவருணித்தபடி பிரத்தியக்ஷமாகத் தெரியாவிட்டாலும் சாஸ்திரத்தால் அநுமானிக்கப்படுகின்றது எனவும், ஆகவே ஞானத்தால் வெட்டக்கூடியது எனவும் அருளிச்செய்தனர்.—ஆ.) ஆதலால், முடிவு இல்லை, எல்லை இல்லை. (மயக்கமும், வாஸனையும், கர்மமும் ஒன்றையொன்று கிளப்பிக்கொண்டிருத்தலால், ஞானமில்லாது இவற்றிற்கு முடிவு இல்லை.—ஆ.) அவ்வாறே, "இதுமுதல் இது தலைப்பட்டது" என ஒருவராலும் முதலும் அறியப்படவில்லை. இன்னும், இதனுடைய இருப்பும், நிலைப்பும், நடுவும் ஒருவனாலும் அறியப்படவில்லை. நன்றாக

யதோக்தம் ஸுவிரூடமூலம் ஸுஷ்டு விரூடானி விரோஹம் கதானி மூலானி யஸ்ய தம் ஏனம் ஸுவிரூடமூலம் அஸங்கசஸ்த்ரேண, அஸங்க: அஸங்கதா புத்ரவித்தலோகைஷணாப்ய: வ்யுத்தானம், தேன அஸங்கசஸ்த்ரேண த்ருடேன பரமாத்மாபிமுக்யநிச்சயத்ருடீக்ருதேன புன:புன: விவேகாப்யாஸாச்மநிசிதேன சித்த்வா ஸம்ஸாரவ்ருக்ஷம் ஸபீஜம் உத்த்ருத்ய ॥ ௩ ॥

தத: பச்சாத் யத் பதம் வைஷ்ணவம் தத் பரிமார்கிதவ்யம், பரிமார்கணம் அன்வேஷணம், ஜ்ஞாதவ்யமித்யர்த: । யஸ்மின் பதே கதா: ப்ரவிஷ்டா: ந நிவர்தந்தி ந ஆவர்தந்தே பூய: புன: ஸம்ஸாராய । கதம் பரிமார்கிதவ்யமிதி? ஆஹ—தமேவ ச ய: பதசப்தேன உக்த: ஆத்யம் ஆதௌ பவம் ஆத்யம் புருஷம் ப்ரபத்யே இத்யேவம் பரிமார்கிதவ்யம், தச்சரணதயா இத்யர்த: । க: அஸௌ புருஷ: இதி? உச்யதே— யத: யஸ்மாத் புருஷாத் ஸம்ஸாரமாயாவ்ருக்ஷப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா நிஸ்ஸ்ருதா, ஐந்த்ரஜாலிகாதிவ மாயா, புராணீ சிரந்தனீ ॥ ௪ ॥

கதம்பூதா: தத் பதம் கச்சந்தி இதி? உச்யதே—

௫. நிர்மானமோஹா ஜிதஸங்கதோஷா:
அத்யாத்மநித்யா விநிவ்ருத்தகாமா: ।

---

வேரூன்றிய கீழ்க்கூறிய இந்த அச்வத்தமென்னும் ஸம்ஸாரவிருக்ஷத்தை - பரமாத்ம நோக்கஉறுதியினால் திண்மையாக்கப்பெற்றதாய், விவேகப்பயிற்சியென்னும் சாணைக் கல்லிலே அடிக்கடி தீட்டப்பட்டதாய், மக்கள் செல்வம் உலகவாழ்க்கை என்றஇவற்றின்மேல் ஆசையைத் துறத்தலாகிய பற்றின்மையென்னும் கோடரியினால் வேரொடுவெட்டிப்பிடுங்கித் (தொலைக்கவேண்டும். ஸம்ஸாரத்தின் வேர் மிக்க உறுதியானது ; ஆகவே, வைராக்கியத்தைப் பயிற்சிசெய்தல் வழியாகத் துறவைச் சார்ந்து, அவ்வேரை அறுக்க மிகுந்த முயற்சி செய்யவேண்டும்.) (௩)

அதற்கு [ஸம்ஸாரவிருக்ஷத்திற்கு] மேலேயுள்ள எங்குமுள்ளபொருளின் நிலை எதுவோ, எந்தஇடத்தில் புகுந்தவர்கள் மீண்டும் ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருவதில்லையோ, அதனைத்தேடவேண்டும், அறியவேண்டும் என்பது பொருள்.—எவ்வாறு தேடவேண்டும்? என்பது.—கூறுகிறார் : நிலைஎன்னும்சொல்லால் கூறப்பெற்றவன் எவனோ,அந்த முதல்வனான புருஷனை அடைகின்றேன் என இவ்வாறு தேடவேண்டும், அவனையே தஞ்சமாகக்கொண்டு (அறியவேண்டும்) என்றபடி.—இப்புருஷன் யார்? என்பது.—கூறுவோம் : இந்திரஜாலக்காரனிடத்தினின்று (பொய்த்தோற்றங்கள் வெளிப்படுவது)போல, ஸம்ஸாரமாயாமரம் தலைப்படுதல் எந்தப்புருஷனிடத்தினின்று தொன்றுதொட்டு வெளிப்பட்டிருக்கின்றதோ, (அந்தப் புருஷன்.) (௪)

எங்குமுள்ள பொருளை அடையும்வழி.

எப்படிப்பட்டவர்கள் அந்நிலையை அடைகிறார்கள்? என்பது.—கூறுவோம் :

௫. செருக்கும் மயக்கமும் நீங்கியவராய், பற்றென்னும்தீங்கை வென்றவராய், ஆத்மாவினிடத்து எப்பொழுதும் வாழ்பவராய், முற்றும் ஆசையொழிந்தவராய், இன்

𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑍈𑌰𑍍𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌸𑌂𑌜𑍍𑌞𑍈𑌃

𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑍍𑌯𑌮𑍂𑌢𑌾𑌃 𑌪𑌦𑌮𑌵𑍍𑌯𑌯𑌂 𑌤𑌤𑍍 ॥

𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌨𑌮𑍋𑌹𑌾𑌃 𑌮𑌾𑌨𑌶𑍍𑌚 𑌮𑍋𑌹𑌶𑍍𑌚 𑌮𑌾𑌨𑌮𑍋𑌹𑍌, 𑌤𑍌 𑌨𑌿𑌰𑍍𑌗𑌤𑍌 𑌯𑍇𑌭𑍍𑌯𑌃 𑌤𑍇 𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌨𑌮𑍋𑌹𑌾𑌃 𑌮𑌾𑌨𑌮𑍋𑌹𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌃 । 𑌜𑌿𑌤𑌸𑌙𑍍𑌗𑌦𑍋𑌷𑌾𑌃 𑌸𑌙𑍍𑌗 𑌏𑌵 𑌦𑍋𑌷𑌃 𑌸𑌙𑍍𑌗𑌦𑍋𑌷𑌃 𑌜𑌿𑌤𑌃 𑌸𑌙𑍍𑌗𑌦𑍋𑌷𑌃 𑌯𑍈𑌃 𑌤𑍇 𑌜𑌿𑌤𑌸𑌙𑍍𑌗𑌦𑍋𑌷𑌾𑌃 । 𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌃 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌲𑍋𑌚𑌨𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌃 𑌤𑌤𑍍𑌪𑌰𑌾𑌃 । 𑌵𑌿𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌕𑌾𑌮𑌾𑌃 𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑍋 𑌨𑌿𑌰𑍍𑌲𑍇𑌪𑍇𑌨 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌃 𑌕𑌾𑌮𑌾𑌃 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌵𑌿𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌕𑌾𑌮𑌾𑌃 𑌯𑌤𑌯𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌃 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑍈𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌸𑌂𑌜𑍍𑌞𑍈𑌃 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌃 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌅𑌮𑍂𑌢𑌾𑌃 𑌮𑍋𑌹𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌃 𑌪𑌦𑌮𑍍 𑌅𑌵𑍍𑌯𑌯𑌂 𑌤𑌤𑍍 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌮𑍍 ॥

𑌤𑌦𑍇𑌵 𑌪𑌦𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇—

௬. 𑌨 𑌤𑌦𑍍𑌭𑌾𑌸𑌯𑌤𑍇 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌨 𑌶𑌶𑌾𑌙𑍍𑌕𑍋 𑌨 𑌪𑌾𑌵𑌕𑌃 ।

𑌯𑌦𑍍𑌗𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌤𑌦𑍍𑌧𑌾𑌮 𑌪𑌰𑌮𑌂 𑌮𑌮 ॥

𑌤𑌦𑍍𑌧𑌾𑌮 𑌇𑌤𑌿 𑌵𑍍𑌯𑌵𑌹𑌿𑌤𑍇𑌨 𑌧𑌾𑌮𑍍𑌨𑌾 𑌸𑌂𑌬𑌧𑍍𑌯𑌤𑍇—𑌤𑌦𑍍𑌧𑌾𑌮 𑌜𑍍𑌯𑍋𑌤𑍀𑌰𑍂𑌪𑌂 𑌪𑌦𑌂 𑌨 𑌭𑌾𑌸𑌯𑌤𑍇 𑌸𑍂𑌰𑍍𑌯𑌃 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌵𑌭𑌾𑌸𑌨𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌽𑌪𑌿 𑌸𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌨 𑌶𑌶𑌾𑌙𑍍𑌕𑌃 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌃, 𑌨 𑌪𑌾𑌵𑌕𑌃 𑌨 𑌅𑌗𑍍𑌨𑌿𑌰𑌪𑌿 । 𑌯𑌦𑍍𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌂 𑌪𑌦𑌂 𑌗𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌨 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇, 𑌯𑌚𑍍𑌚 𑌸𑍂𑌰𑍍𑌯𑌾𑌦𑌿𑌃 𑌨 𑌭𑌾𑌸𑌯𑌤𑍇 𑌤𑌦𑍍𑌧𑌾𑌮 𑌪𑌰𑌮𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌮𑌮 𑌪𑌦𑌮𑍍 ॥ ௬ ॥

---

பதுன்பமென்னும்பெயருடைய த்வந்தங்களால் விடப்பெற்றவராய் மயங்காதவர்கள் அந்த அழிவிலா நிலையை அடைகிறார்கள்.

செருக்கு - (நான் என மதிக்கும் அஹங்காரமுனைப்பு). மயக்கம் - (அவிவேகம்). ஆத்மாவினிடத்து எப்பொழுதும் வாழ்பவர் - பரமாத்மாவின் ஸ்வரூபத்தை ஆலோசிப்பதிலே எப்பொழுதும் உள்ளவர், அதிலேயே கருத்துடையவர். முற்றும் ஆசையொழிந்தவர் - ஆசைமுழுதும் கசடற நீங்கியவர், யதிகள், துறவிகள். த்வந்தங்களால் - வேண்டியது வேண்டாதது முதலியவற்றால். மயங்காதவர்கள் - மயக்கமில்லாதவர்கள் [மெய்யறிவுகூடியவர்கள்—ஆ]. அந்த - மேற்கூறிய. (௫)

அந்த நிலை எங்குமுள்ளபொருளின் ஸ்வரூபம்.

அதே நிலையை மீண்டும் சிறப்பித்துக் கூறுகிறார்:

௬. அதனை ஸூர்யன் பிரகாசிக்கச்செய்வதில்லை: சந்திரன் (பிரகாசிக்கச் செய்வது) இல்லை: தீ (பிரகாசிக்கச்செய்வது) இல்லை. எதனை அடைந்து திரும்பிவருவதில்லையோ, அது என்னுடைய மேலான இடம்.

𑌤𑌦𑍍𑌧𑌾𑌮 என ஒதுங்கிநிற்கும் 𑌧𑌾𑌮வென்பதனோடு இயையும். ஸூர்யன் எல்லாவற்றையும் பிரகாசிக்கச்செய்ய வல்லமையுடையவனாயினும், ஒளிவடிவான அந்த இடத்தைப் பிரகாசிக்கச்செய்வதில்லை. அவ்வண்ணமே, சந்திரனும் தீயும் (அதனைப் பிரகாசிக்கச்செய்வதில்லை). எங்குமுள்ளபொருளினுடைய எந்நிலையை அடைந்து திரும்பிவருதலில்லையோ, மேலும் ஸூர்யன்முதலானோர்கள் எதனைப் பிரகாசிக்கச் செய்வதில்லையோ, அது - எங்குமுள்ளபொருளான எனது மேலான இடம். (௬)

"யத் கத்வா ந நிவர்தந்தே" இத்யுக்தம்; நநு ஸர்வா ஹி கதி: க்ஷயாந்தா, ஸம்யோகா: விப்ரயோகாந்தா: இதி ப்ரஸித்தம். கதம் உச்யதே "தத் யாதாநாம் நாஸ்தி நிவ்ருத்தி:" இதி? ஶ்ருணு தத்ர காரணம்—

எ. மமைவாம்ஶோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதந: |
மந:ஷஷ்டாநீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்தாநி கர்ஷதி ||

மமைவ பரமாத்மந: நாராயணஸ்ய, அம்ஶ: பாக: அவயவ: ஏகதேஶ: இதி அநர்தாந்தரம், ஜீவலோகே ஸம்ஸாரே ஜீவபூத: கர்தா போக்தா இதி ப்ரஸித்த: ஸநாதந: சிரந்தந:; யதா ஜலஸூர்யக: ஸூர்யாம்ஶ: ஜலநிமித்தாபாயே ஸூர்யமேவ கத்வா ந ததோ நிவர்ததே; யதா வா கடாத்யுபாதிபரிச்சிந்நோ கடாத்யாகாஶ: ஆகாஶாம்ஶ: ஸந் கடாதிநிமித்தாபாயே ஆகாஶம் ப்ராப்ய ந நிவர்ததே; இத்யேவம். அத: உபபந்நம் உக்தம் 'யத்கத்வா ந நிவர்தந்தே' இதி ||

---

உபாதியினால் ஜீவன் பரம்பொருளினுடைய அம்சம்போலும்.

"எதனை அடைந்து திரும்பிவருதலில்லையோ" (கூ - சு) எனக் கூறப்பட்டது. ஆயின், போக்குஎன்பதெல்லாம் வரவை முடிவாகக்கொண்டதன்றோ; சேர்க்கைகள் பிரிவுகளை முடிவாகவுடையவை என்பது (யாவர்க்கும்) தெரிந்திருக்கின்றது. "அந்தஇடத்தைச் சென்றவர்கட்குத் திரும்பிவருதலில்லை" என எப்படிக் கூறப்படுகின்றது? —அதில் காரணத்தைக் கேட்பாயாக:

எ. என்னுடையதேயான அம்சமானது ஜீவர்களுடைய உலகில் ஜீவனாகி எப்பொழுதுமுள்ளது; மனத்தை ஆறுவதாகக்கொண்டவையாய், பிரகிருதியில் தங்கிநிற்கும் இந்திரியங்களை இழுக்கின்றது.

அம்சம், பாகம், அவயவம் [உறுப்பு], ஏகதேசம் என்பன - வெவ்வேறுபொருளில்லாதவை [ஒரேபொருளுள்ளவை]. பரமாத்மாவான நாராயணனாகிய என்னுடையதேயான அம்சமானது ஸம்ஸாரத்திலே தொன்றுதொட்டுவரும் ஜீவனாகியுள்ளது, கர்த்தா[செய்பவன்] போக்தா[அநுபவிப்பவன்] என (உடம்புதோறும்) அமைந்துள்ளது. எப்படி நீரில் பிரதிபலித்த ஸூர்யனான ஸூர்யாம்சமானது, (உண்மை)ஸூர்யனுடைய அம்சமானது நீராகிய காரணம் போனவழி ஸூர்யனையே சென்று அவனிடத்தினின்றும் திரும்பிவருவதில்லையோ; அல்லது, எப்படி குடம்முதலியஉபாதிகளால் வரையறுக்கப்பட்டதான குடம்முதலியவற்றின் ஆகாசமானது ஆகாசத்தின் அம்சமாய் நின்று, குடம்முதலியகாரணம் போனவழி, ஆகாசத்தை அடைந்து திரும்பிவருவதில்லையோ; அப்படிப்போல. (1. நீரில் பிரதிபலிக்கும் ஸூர்யன்கள் விண்ணிலுள்ள ஸூர்யனது அம்சங்கள். நீரில்லாமற்போனவழி, அவை ஸூர்யனைச் சென்று அவனிடத்ினின்று மீண்டும் திரும்பிவருவதில்லை; அதாவது, அவை அந்தஸூர்யனாகவே இருக்கின்றன. 2. குடம்முதலியவற்றின் ஆகாசங்கள் மஹாகாசத்தின் அம்சங்கள். குடம்முதலியன உடைந்தவழி, அவை மஹாகாசத்தை அடைந்து அதனினின்று மீளவும் திரும்பிவருவதில்லை; அதாவது, அவை மஹாகாசமாகவே இருக்கின்றன. இவைபோல, ஜீவனுக்கும் உபாதியில்லாமற்போனவழி, அது - உபாதியற்ற தன்நிலையை, ப்ரஹ்மஸ்வரூபத்தை அடைந்து அதனினின்று மீண்டும் திரும்பிவருவதில்லை; அதாவது, அது ப்ரஹ்மமாகவே இருக்கின்றது.) ஆகவே, "எதனை அடைந்து திரும்பிவருதலில்லையோ" (கூ - சு) எனக் கூறியது நேரென்க.

ननु निरवयवस्य परमात्मनः कुतः अवयवः एकदेशः अंशः इति? सावयवत्वे च विनाशप्रसङ्गः अवयवविभागात्॥

नैष दोषः, अविद्याकृतोपाधिपरिच्छिन्नः एकदेशः अंश इव कल्पितो यतः। दर्शितश्च अयमर्थः क्षेत्राध्याये विस्तरशः॥

स च जीवो मदंशत्वेन कल्पितः कथं संसरति उत्क्रामति च इति? उच्यते—मनःषष्ठानि इन्द्रियाणि श्रोत्रादीनि प्रकृतिस्थानि स्वस्थाने कर्णशष्कुल्यादौ प्रकृतौ स्थितानि कर्षति आकर्षति॥ எ॥

कस्मिन् काले? —

அ. शरीरं यदवाप्नोति यच्चाप्युत्क्रामतीश्वरः।
गृहीत्वैतानि संयाति वायुर्गन्धानिवाशयात्॥

यच्चापि यदाऽपि उत्क्रामति ईश्वरः देहादिसंघातस्वामी जीवः, तदा 'कर्षति' इति श्लोकस्य चतुर्थपादः अर्थवशात् प्रथमं सम्ब-

(ஆக்ஷேபம்) :—அப்படியானால், உறுப்புக்களில்லாத பரமாத்மாவிற்கு உறுப்பென்பது, ஏகதேசமென்பது, அம்சமென்பது ஏது? உறுப்புகளையுடையதாயின், உறுப்புக்கள் பிரிந்திடுவதனால் அழிவு வரவேண்டும்.

(ஸமாதாநம்) :—இது குற்றமன்று (இந்த ஆக்ஷேபத்திற்கு இடமில்லை) ; ஏனெனில், அவித்யையினாலான உபாதியினால் வரையறுக்கப்பட்ட ஏகதேசமானது, அம்சம்போல (மனத்தால்) எண்ணிவைத்துக்கொள்ளப்படுகின்றது. (குடத்தால் வரையறுக்கப்பெற்ற ஏகதேசமான ஆகாசத்தை மஹாகாசத்தின் அம்சம்போல மனத்தாற் கற்பித்துக்கொள்ளுமாறுபோல என்க). அன்றியும், இவ்விஷயமானது க்ஷேத்ர (கங-ஆம்) அத்தியாயத்தினுள் விரிவாகக்காட்டப்பட்டது (ஜீவன் உண்மையிலே பரம்பொருளினுடைய அம்சமல்லவென்றும், ஜீவன் உண்மையிலே ப்ரஹ்மம்தான் என்றும் காட்டப்பட்டன.—ஆ).

ஜீவன் உடம்பினுள் வாழும்விதமும், அதனை விட்டுப்போதும் வகையும்.

எனது அம்சமாகக் கற்பிக்கப்பட்ட அந்தஜீவன் எவ்வாறு (உலகத்து) வாழ்கிறான்? (அதனை) விட்டும் செல்கிறான்? என்பது. [ஜீவன் பரமாத்மாவாயின், அவனை ஸம்ஸாரி என்றலும், இவ்வுலகை விட்டுப்போகிறான் என்றலும் எப்படி?—ஆ.]—கூறுவோம்: மனத்தை ஆறுவதாகக்கொண்டவையாய், தமது இருப்பிடமான காதுத்துவாரம்முதலிய பிரகிருதியில் தங்கிநிற்கும் செவிமுதலிய இந்திரியங்களை சுற்றிலும் இழுக்கின்றது[ஜீவன் மனத்தோடுகூட இந்திரியங்களையும் கவர்ந்து செல்கிறான்].

எப்பொழுது (அவன் அவற்றைக் கவர்ந்திடுகிறான்)?

அ. (உடம்புமுதலியவற்றை) ஆளுபவன் வெளியிற்செல்லும்பொழுது, (கவர்ந்திடுகிறான். அவன் வேறோர்) உடம்பைப்பெறும்பொழுது, காற்று காற்றங்களை (அவற்றது) இருப்பிடத்தினின்றும் (எடுத்துக்கொண்டுபோவது)போல, இவற்றை எடுத்துக்கொண்டு போகிறான்.

உடம்புமுதலியவற்றினுடைய சேர்க்கையின் சொந்தக்காரனான ஜீவன் எப்பொழுது வெளியிற்செல்கின்றானோ, அப்பொழுது (அவன் மனத்தையும், இந்திரியங்களையும்) "கவர்ந்திடுகிறான்" எனச் சுலோகத்தின் இரண்டாம் பாதத்தை அர்த்தத்

ஸ்ருஜ்யதே। யதா ச பூர்வஸ்மாச் சரீராச் சரீராந்தரம் அவாப்நோதி ததா க்ருஹீத்வா ஏதாநி மந:ஷஷ்டாநி இந்த்ரியாணி ஸம்யாதி ஸம்யக் யாதி கச்சதி। கிமிவ இதி? ஆஹ—வாயு: பவந: கந்தாநிவ ஆஶயாத் புஷ்பாதே: ॥ அ ॥

காநி புந: தாநி இதி? —

கூ. ஶ்ரோத்ரம் சக்ஷு: ஸ்பர்ஶநம் ச ரஸநம் க்ராணமேவ ச ।
அதிஷ்டாய மநஶ்சாயம் விஷயாநுபஸேவதே ॥

ஶ்ரோத்ரம் சக்ஷு: ஸ்பர்ஶநம் ச த்வகிந்த்ரியம் ரஸநம் ஜிஹ்வா க்ராணமேவ ச, மநஶ்ச ஷஷ்டம் ப்ரத்யேகஞ்ச இந்த்ரியேண ஸஹ, அதிஷ்டாய தேஹஸ்த: விஷயாந் ஶப்தாதீந் உபஸேவதே ॥ கூ ॥

ஏவம் தேஹகதம் தேஹாச்ச—

க௦. உத்க்ராமந்தம் ஸ்திதம் வாபி புஞ்ஜாநம் வா குணாந்விதம் ।
விமூடா நாநுபஶ்யந்தி பஶ்யந்தி ஜ்ஞாநசக்ஷுஷ: ॥

உத்க்ராமந்தம் தேஹம் பூர்வோபாத்தம் பரித்யஜந்தம் ஸ்திதம் வாபி தேஹே திஷ்டந்தம் புஞ்ஜாநம் வா ஶப்தாதீம்ஶ்ச உபபுஞ்ஜாநம் குணாந்விதம் ஸுக-து:கமோஹாத்மகை: குணை: அந்விதம் அநுகதம் ஸம்யுக்தமித்யர்த:। ஏவம்-

---

தின் வலிமையினுல் முதலில் ஒட்டுக. (அவன்) எப்பொழுது முந்தின சரீரத்தினின்றும் வேறுசரீரத்தை அடைகின்றனோ, அப்பொழுது, மனத்தைஆருவதாகக்கொண்ட இந்திரியங்களைப் பற்றிக்கொண்டு செவ்வனே செல்கிறுன்.—எதுபோல? என்பது.—கூறுகிறுர்: காற்று நாற்றங்களை (அவற்றது) இருப்பிடமான புஷ்பம்முதலியவற்றினின்றும் (கவர்ந்துசெல்வது)போல. (அ)

அங்ஙனம் அவை 'யாவை? என்பது—

கூ. இவன் செவி, கண், மெய், நாக்கு, மூக்கு என்பவற்றையும், மனத்தையும் சார்ந்து விஷயங்களை நுகர்கின்றுன்.

உடம்பொடுநிற்பவன் ஆருவதான மனத்தை, தனித்தனியே (ஒவ்வொரு) இந்திரியத்தோடுங்கூட சார்ந்து ஓசைமுதலிய விஷயங்களை அநுபவிக்கின்றுன். (கூ)

ஆத்மா ஞானகண்ணுக்குத்தான் புலப்படும்.

இவ்வாறு உடம்பிநுள்ளவனும், உடம்பினின்று .

க௦. வெளியிற்செல்பவனும், (உடம்பினுள்) தங்கிநிற்பவனும், அநுபவிப்பவனும், குணங்களோடு கூடியவனுமான (இவனை), மயங்கியவர்கள் அறிவதில்லை. ஞானக்கண்ணுடையோர்கள் பார்க்கிறுர்கள்.

முன்எடுத்த உடம்பை விடுபவனும், உடம்பினுள் வாழ்பவனும், ஓசைமுதலியவிஷயங்களை நுகர்பவனும், இன்பம் துன்பம் மயக்கம் என்னும்பெயர்களையுடைய குணங்களோடு அமைந்தவனுமுள்ள (ஜீவனை அஜ்ஞானிகள் அறிவதில்லை). பார்வைக்கு விஷயமாதலை முற்றும் பெற்று இவ்வாறிருந்தாலும் [ஜீவன் எல்லாநிலைமைகளிலும் இவ்வாறு பார்க்கக்கூடியவனுய் மிகவும் ஸமீபத்திலிருந்தாலும்], இம்மை

𑌏𑌵𑌂𑌭𑍂𑌤𑌮𑌪𑌿 𑌏𑌨𑌂 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌦𑌰𑍍𑌶𑌨𑌗𑍋𑌚𑌰𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌂 𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌃 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌦𑍃𑌷𑍍𑌟𑌵𑌿𑌷𑌯𑌭𑍋𑌗𑌬𑌲𑌾𑌕𑍃𑌷𑍍𑌟𑌚𑍇𑌤𑌸𑍍𑌤𑌯𑌾 𑌅𑌨𑍇𑌕𑌧𑌾 𑌮𑍂𑌢𑌾𑌃 𑌨 𑌅𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿—𑌅𑌹𑍋 ! 𑌕𑌷𑍍𑌟𑌂 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌅𑌨𑍁𑌕𑍍𑌰𑍋𑌶𑌤𑌿 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍—𑌯𑍇 𑌤𑍁 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌜𑌨𑌿𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌃 𑌤𑍇 𑌏𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌃, 𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌦𑍃𑌷𑍍𑌟𑌯𑌃 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃॥

𑌕𑍇𑌚𑌿𑌤𑍍𑌤𑍁—

௧௧. 𑌯𑌤𑌨𑍍𑌤𑍋 𑌯𑍋𑌗𑌿𑌨𑌶𑍍𑌚𑍈𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 ।
𑌯𑌤𑌨𑍍𑌤𑍋𑌽𑌪𑍍𑌯𑌕𑍃𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍋 𑌨𑍈𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌚𑍇𑌤𑌸𑌃 ॥

𑌯𑌤𑌨𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌯𑌤𑍍𑌨𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌃 𑌯𑍋𑌗𑌿𑌨𑌶𑍍𑌚 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌃 𑌏𑌨𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 "𑌅𑌯𑌮𑌹𑌮𑌸𑍍𑌮𑌿" 𑌇𑌤𑌿 𑌉𑌪𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌸𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑍌 𑌅𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 । 𑌯𑌤𑌨𑍍𑌤𑍋𑌽𑌪𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑍈𑌃, 𑌅𑌕𑍃𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 𑌅𑌸𑌂𑌸𑍍𑌕𑍃𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 𑌤𑌪𑌸𑌾 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌜𑌯𑍇𑌨 𑌚, 𑌦𑍁𑌶𑍍𑌚𑌰𑌿𑌤𑌾𑌤𑍍 𑌅𑌨𑍁𑌪𑌰𑌤𑌾𑌃, 𑌅𑌶𑌾𑌨𑍍𑌤𑌦𑌰𑍍𑌪𑌾𑌃, 𑌪𑍍𑌰𑌯𑌤𑍍𑌨𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑍋𑌽𑌪𑌿 𑌨 𑌏𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌅𑌚𑍇𑌤𑌸𑌃 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌿𑌨𑌃॥

𑌯𑌚𑍍𑌚 𑌪𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌅𑌵𑌭𑌾𑌸𑌕𑌮𑌪𑌿 𑌅𑌗𑍍𑌨𑍍𑌯𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 𑌨 𑌅𑌵𑌭𑌾𑌸𑌯𑌤𑍇, 𑌯𑌚𑍍𑌚 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑌵𑌃 𑌪𑍁𑌨𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌭𑌿𑌮𑍁𑌖𑌾𑌃 𑌨 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇, 𑌯𑌸𑍍𑌯 𑌚 𑌪𑌦𑌸𑍍𑌯 𑌉𑌪𑌾𑌧𑌿𑌭𑍇𑌦𑌮𑌨𑍁𑌵𑌿𑌧𑍀𑌯𑌮𑌾𑌨𑌾𑌃 𑌜𑍀𑌵𑌾𑌃—𑌘𑌟𑌾𑌕𑌾𑌶𑌾-

---

மறுமைகளிலேயுள்ள விஷயபோகத்தின் வன்மையினால் மனம் கவரப்பெற்றுப் பலவாறு மயங்கியுள்ளவர்கள் இவனை உணர்வதில்லை [இன்னானென்று அறிவதில்லை].—ஆ! (இஃதென்ன) கஷ்டமாயிருக்கின்றது! எனப் பகவான் இரங்குகிறார்.—ஆனால், ஞானக்கண் எவர்கட்கு பிரமாணத்தினால் உண்டாகியுள்ளதோ, அந்தஞானக்கண்ணுடையோர்கள், அதாவது பகுத்தறியும் பார்வையுள்ளவர்கள் இவனைப் பார்க்கிறார்கள் [இன்னானென்று அறிகிறார்கள்]. (௧௦)

### யோகமில்லாது ஆத்மஅறிவு இல்லை.

(ஞானக்கண் என்பது - அறிவிற்குக் கருவியாய், யுக்திபொருந்திய சாஸ்திரம். ஆகவே, யுக்தியோடமைந்த அந்தக் கேவல சாஸ்திரத்தினால்மாத்திரம் ஆத்மாவைக் காணமுடியுமோ? எனின்—முடியாது என அருளிச்செய்கிறார்.—ஆ.) ஆனால், சில

௧௧. முயலும் யோகிகள் தம்மிடத்துள்ள இவனைக் காண்கிறார்கள். புத்தி திருந்தாத அவிவேகிகள் முயல்பவராயினும், இவனைக் காண்பதில்லை.

(சிரவண மநநமென்னும்) முயற்சியைச் செய்கின்றவராய்ச் சித்தம்ஒருநிலைப் பட்டவர்கள் பிரகிருதத்தில் பேசிவருகின்ற இவனை, தம் புத்தியிலுள்ள ஆத்மாவை "இதோ நானிருக்கின்றேன்" என உணர்வதில்லை. தவத்தாலும், இந்திரியவெற்றியாலும் மனந்திருந்தாதவராய், தீயொழுக்கத்தினின்றும் ஒழியாதவராய், செருக்கடங்காதவரான அவிவேகிகள் சாஸ்திரம் முதலிய பிரமாணங்களால் முயற்சிசெய்பவராயினும் இவனைக் காண்பதில்லை. (புத்தி சுத்தமாகாத அவிவேகிகட்கு சிரவணம்முதலியன இருந்தாலும், பயன்படா என்பதாம்.—ஆ.) (௧௧)

### பகவான் - யாவற்றையும் விளக்கச்செய்கின்ற சைதந்யஜ்ஒளி.

நெருப்பு, ஸூர்யன்முதலிய ஒளிகள் எல்லாவற்றையும் பிரகாசிக்கச்செய்வனவாயினும், எந்த நிலையைப் பிரகாசிக்கச்செய்வதில்லையோ; மேலும், எதனை அடைந்த முமுக்ஷுக்கள் [ஸம்ஸாரத்தினின்றும் விடுபட விரும்புவோர்கள்] மீண்டும் ஸம்ஸாரத்தை நோக்கித் திரும்புவதில்லையோ; அன்றியும், குடாகாசம்முதலியன மஹாகாசத்தினது (அம்சங்களாயிருப்பது) போல, பற்பல [அந்தந்த] உபாதிகட்குத் தக்க

𑌦𑌯𑌃 𑌏𑌵 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌸𑍍𑌯—𑌅𑌂𑌶𑌾𑌃, 𑌤𑌸𑍍𑌯 𑌪𑌦𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌕𑌤𑍍𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌾𑌲𑌮𑍍𑌬𑌨𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑍁𑌃 𑌚𑌤𑍁𑌰𑍍𑌭𑌿𑌃 𑌶𑍍𑌲𑍋𑌕𑍈𑌃 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌸𑌂𑌕𑍍𑌷𑍇𑌪𑌮𑌾𑌹 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍—

௧௨. 𑌯𑌦𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌗𑌤𑌂 𑌤𑍇𑌜𑌃 𑌜𑌗𑌦𑍍𑌭𑌾𑌸𑌯𑌤𑍇𑌽𑌖𑌿𑌲𑌮𑍍 ।
𑌯𑌚𑍍𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌿 𑌯𑌚𑍍𑌚𑌾𑌗𑍍𑌨𑍌 𑌤𑌤𑍍𑌤𑍇𑌜𑍋 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑌾𑌮𑌕𑌮𑍍 ॥

𑌯𑌤𑍍 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌗𑌤𑌮𑍍 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌯𑌮𑍍—𑌕𑌿𑌂 𑌤𑌤𑍍?—𑌤𑍇𑌜𑌃 𑌦𑍀𑌪𑍍𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌃 𑌜𑌗𑌤𑍍 𑌭𑌾𑌸𑌯𑌤𑍇 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌯𑌤𑌿 𑌅𑌖𑌿𑌲𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍; 𑌯𑌤𑍍 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌿 𑌶𑌶𑌜𑍍𑌯𑌤𑌿 𑌤𑍇𑌜𑌃 𑌅𑌵𑌭𑌾𑌸𑌕𑌂 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇, 𑌯𑌚𑍍𑌚 𑌅𑌗𑍍𑌨𑍌 𑌪𑌾𑌵𑌕𑍇, 𑌤𑌤𑍍 𑌤𑍇𑌜𑌃 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌹𑌿 𑌮𑌾𑌮𑌕𑌂 𑌮𑌦𑍀𑌯𑌂 𑌮𑌮 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌤𑌤𑍍 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 ॥

𑌅𑌥𑌵𑌾— 𑌯𑌤𑍍 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌗𑌤𑌂 𑌤𑍇𑌜𑌃 𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 𑌯𑌤𑍍 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌿, 𑌯𑌚𑍍𑌚 𑌅𑌗𑍍𑌨𑍌 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌤𑌤𑍍 𑌤𑍇𑌜𑌃 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑌾𑌮𑌕𑌂 𑌮𑌦𑍀𑌯𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌤𑌤𑍍 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 ॥

𑌨𑌨𑍁 𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑍇𑌷𑍁 𑌜𑌙𑍍𑌗𑌮𑍇𑌷𑍁 𑌚 𑌤𑌤𑍍 𑌸𑌮𑌾𑌨𑌂 𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 । 𑌤𑌤𑍍 𑌕𑌥𑌮𑍍 𑌇𑌦𑌂 𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌂—‘𑌯𑌦𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌗𑌤𑌮𑍍’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿?

𑌨𑍈𑌷 𑌦𑍋𑌷𑌃; 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌧𑌿𑌕𑍍𑌯𑌾𑌤𑍍 𑌆𑌵𑌿𑌰𑍍𑌭𑌾𑌵𑍋𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 । 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌷𑍁 𑌹𑌿 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍍 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌮𑍍 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌭𑌾𑌸𑍍𑌵𑌰𑌮𑍍; 𑌅𑌤𑌃 𑌤𑌤𑍍𑌰𑍈𑌵 𑌆𑌵𑌿𑌰𑍍𑌭𑍂𑌤𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 𑌇𑌤𑌿 𑌤𑌤𑍍 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇, 𑌨 𑌤𑍁 𑌤𑌤𑍍𑌰𑍈𑌵 𑌤𑌤𑍍 𑌅𑌧𑌿𑌕𑌮𑍍 𑌇𑌤𑌿 । 𑌯𑌥𑌾 𑌹𑌿

---

வாறு அமைந்துள்ள ஜீவன்கள் எந்த நிலையினுடைய அம்சங்களாய் உள்ளனவோ; அந்த நிலையானது [ப்ரஹ்மமானது] எல்லாவற்றினுடைய ஆத்மா எனவும், எல்லாவித வகாரங்கட்கும் அடிஆதாரம் எனவும் சொல்லக்கருதியவராய்ப் பகவான் விபூதியின் சுருக்கத்தை [தாம் எங்கும் வெளிப்பட்டுநிற்றலைச் சுருக்கமாய்] நான்கு சுலோகங்களால் அருளிச்செய்கிறார்:

௧௨. எந்த ஒளி ஸூர்யனைச் சார்ந்து நின்று, உலகையெல்லாம் பிரகாசிக்கச் செய்கின்றதோ; எது சந்திரனிடத்தும், எது தீயினிடத்தும் உள்ளதோ; அந்த ஒளியை என்னுடையதாகத் தெரிந்துகொள்.

எது ஸூர்யனைச் சார்ந்துள்ளதோ, அது யாது? —ஒளி, காந்தி, பிரகாசம்.

அல்லது, “ஒளி = அறிவுவடிவான ஜ்யோதிஸ்” (எனவும் கொள்ளலாம்).

(ஆக்ஷேபம்) :—ஆயின், அறிவுவடிவான அவ்வொளி ஸ்தாவரங்களிலும், ஜங்கமங்களிலும் ஒருநிகராக உள்ளது. ஆகவே, “எது ஸூர்யனைச் சார்ந்துநின்று” என்பது முதலான இவ்விசேஷணம் (பொருந்துமாறு) எப்படி?

(ஸமாதாநம்) :—இது குற்றமில்லை (இவ்வாக்ஷேபத்திற்கு இடமில்லை; ஸூர்யன்முதலியவற்றில்) ஸத்துவகுணம் மிகுதியாயிருத்தலால், (அறிவுவடிவான ஒளி அவற்றில்) நிரம்பப் புலப்படுதல் அமையுமாதலின் ஸூர்யன்முதலானவற்றிலன்றோ ஸத்துவகுணம் மிகத் துலக்கமாயுள்ளது, மிகப் பளபளப்பாயுள்ளது. ஆதலால், அவற்றில்தான் ஒளி நிரம்பப் புலப்படுகின்றது; எனவே, அது விசேஷித்துக்கூறப்படுகின்றது. மற்று, அது [ஒளி] அவற்றுள்தான் அதிகமாயுள்ளது என்று அன்று. உதா

டுள

𑌲𑍋𑌕𑍇, 𑌤𑍁𑌲𑍍𑌯𑍇𑌽𑌪𑌿 𑌮𑍁𑌖𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑍇, 𑌨 𑌕𑌾𑌷𑍍𑌠𑌕𑍁𑌡𑍍𑌯𑌾𑌦𑌿𑌷𑍁 𑌮𑍁𑌖𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌭𑌵𑌤𑌿, 𑌆𑌦𑌰𑍍𑌶𑌾𑌦𑌿𑌷𑍁 𑌤𑍁 𑌸𑍍𑌵𑌚𑍍𑌛𑍇 𑌸𑍍𑌵𑌚𑍍𑌛𑌤𑌰𑍇 𑌚 𑌤𑌾𑌰𑌤𑌮𑍍𑌯𑍇𑌨 𑌪𑍍𑌰𑌤𑌿𑌭𑌵𑌤𑌿; 𑌤𑌦𑍍𑌵𑌤𑍍 ॥ ௧௨ ॥

𑌕𑌿𑌞𑍍𑌚—

௧௩. 𑌗𑌾𑌮𑌾𑌵𑌿𑌶𑍍𑌯 𑌚 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌧𑌾𑌰𑌯𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍋𑌜𑌸𑌾 ।
𑌪𑍁𑌷𑍍𑌣𑌾𑌮𑌿 𑌚𑍌𑌷𑌧𑍀𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 𑌸𑍋𑌮𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌰𑌸𑌾𑌤𑍍𑌮𑌕𑌃 ॥

𑌗𑌾𑌂 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌮𑍍 𑌆𑌵𑌿𑌶𑍍𑌯 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑍍𑌯 𑌧𑌾𑌰𑌯𑌾𑌮𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌜𑌗𑌤𑍍 𑌅𑌹𑌮𑍍 𑌓𑌜𑌸𑌾 𑌬𑌲𑍇𑌨; 𑌯𑌤𑍍 𑌬𑌲𑌂 𑌕𑌾𑌮𑌰𑌾𑌗𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍 𑌐𑌶𑍍𑌵𑌰𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌜𑌗𑌦𑍍𑌵𑌿𑌧𑌾𑌰𑌣𑌾𑌯 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌮𑍍 𑌆𑌵𑌿𑌷𑍍𑌟𑌂, 𑌯𑍇𑌨 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 𑌗𑍁𑌰𑍍𑌵𑍀 𑌨 𑌅𑌧𑌃 𑌪𑌤𑌤𑌿, 𑌨 𑌵𑌿𑌦𑍀𑌰𑍍𑌯𑌤𑍇 𑌚 । 𑌤𑌥𑌾 𑌚 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌵𑌰𑍍𑌣𑌃—'𑌯𑍇𑌨 𑌦𑍍𑌯𑍌𑌰𑍁𑌗𑍍𑌰𑌾 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 𑌚 𑌦𑍃𑌢𑌾' 𑌇𑌤𑌿, '𑌸 𑌦𑌾𑌧𑌾𑌰 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌮𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍍𑌚 । 𑌅𑌤𑌃 𑌗𑌾𑌮𑍍 𑌆𑌵𑌿𑌶𑍍𑌯 𑌚 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌚𑌰𑌾𑌚𑌰𑌾𑌣𑌿 𑌧𑌾𑌰𑌯𑌾𑌮𑌿 । 𑌕𑌿𑌞𑍍𑌚—𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌂 𑌜𑌾𑌤𑌾𑌃 𑌓𑌷𑌧𑍀𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 𑌵𑍍𑌰𑍀𑌹𑌿𑌯𑌵𑌾𑌦𑍍𑌯𑌾𑌃 𑌪𑍁𑌷𑍍𑌣𑌾𑌮𑌿 𑌪𑍁𑌷𑍍𑌟𑌿𑌮𑌤𑍀𑌃 𑌸𑍍𑌵𑌾𑌦𑍁𑌮𑌤𑍀𑌶𑍍𑌚 𑌕𑌰𑍋𑌮𑌿 𑌸𑍋𑌮𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌰𑌸𑌾𑌤𑍍𑌮𑌕𑌃 𑌸𑍋𑌮𑌃 𑌸𑌨𑍍 𑌰𑌸𑌾𑌤𑍍𑌮𑌕𑌃 𑌰𑌸𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌃 । 𑌸𑌰𑍍𑌵𑌰𑌸𑌾𑌨𑌾𑌮𑍍 𑌆𑌕𑌰𑌃 𑌸𑍋𑌮𑌃 । 𑌸 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌰𑌸𑌾𑌤𑍍𑌮𑌕𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 𑌓𑌷𑌧𑍀𑌃 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌰𑌸𑌾𑌨𑍍 𑌅𑌨𑍁𑌪𑍍𑌰𑌵𑍇𑌶𑌯𑌨𑍍 𑌪𑍁𑌷𑍍𑌣𑌾𑌤𑌿 ॥ ௧௩ ॥

𑌕𑌿𑌞𑍍𑌚—

---

ரணமாக, உலகத்திலே, முகவடிவம் ஒன்றாயிருந்தாலும், முகமானது மரம், சுவர் முதலியவற்றுள் தோன்றுவதில்லை; மற்று, துலக்கமாயும், அதிகத்துலக்கமாயுமுள்ள கண்ணாடிமுதலியவற்றுள் ஏற்றத்தாழ்ச்சியாக [அவற்றது சுத்தத்திற்குத் தக்கபடி] தோன்றுகின்றது. அதுபோல என்க. (௧௨)

பகவான் எல்லாவற்றையும் தாங்கிநிற்கிறார்.

மேலும்,

௧௩. யான் பூமியைப் புகுந்து வலிமையினால் பொருள்களைத் தாங்குகிறேன்; அன்றியும், சுவைவடிவான சந்திரனாகி பயிர்களெல்லாவற்றையும் வளர்க்கின்றேன்.

யான் பூமியினுள் புகுந்து பிரபஞ்சத்தை வலிமையினால் தாங்குகிறேன். அவ்வலிமை காமமும் விகாரமும் அற்றது, ஈசுவரனுடையது, பிரபஞ்சத்தைத் தாங்கும் பொருட்டுப் பூமியினுள் சென்றிருப்பது; பாரமான பூமியானது அதனால் (மண்ணாங்கட்டிபோலக்) கீழேவிழுவதில்லை, (மணல்போல) உதிர்ந்திடுவதும் இல்லை. அவ்வண்ணமே, மந்திரவர்ணம் "விசாலமானவிண்ணும், மண்ணும் எதனால் உறுதியாகத் தாங்கப்பட்டுள்ளனவோ" (தை - ஸம் - ச - க - அ) எனக்(கூறுகின்றது); "அவன் பூமியை உறுதியாகத் தாங்கினான்" (தை - ஸம் - ச - க - அ) என்பது முதலானதும் (அதற்கு இணங்க உள்ளது). அன்றியும், சுவைவடிவினனாய் ரஸத்தன்மையுள்ள சந்திரனாகி, பூமியில் முளைக்கும் நெல், கோதுமைமுதலிய பயிர்களையெல்லாம் வளமும் ருசியும் பொருந்தியவையாகச் செய்கிறேன். சந்திரன் சுவைகட்கெல்லாம் இருப்பிடம். எல்லாச்சுவைவடிவினனான அவனன்றோ எல்லாப்பயிர்களையும் தனது ரஸத்தைச் செலுத்தி வளர்க்கின்றான். (௧௩)

பகவான் பிராணிகளுள் ஜீரணிக்கும் அக்நியா யிருக்கிறார்.

அன்றியும்,

௧௪. 𑌅𑌹𑌂 𑌵𑍈𑌶𑍍𑌵𑌾𑌨𑌰𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌦𑍇𑌹𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 ।
𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑌚𑌾𑌮𑍍𑌯𑌨𑍍𑌨𑌂 𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌧𑌮𑍍 ॥

𑌅𑌹𑌮𑍇𑌵 𑌵𑍈𑌶𑍍𑌵𑌾𑌨𑌰𑌃 𑌜𑌾𑌠𑌰𑌃 𑌅𑌗𑍍𑌨𑌿𑌃 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 — ‘𑌅𑌯𑌮𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌵𑍈𑌶𑍍𑌵𑌾𑌨𑌰𑍋 𑌯𑍋𑌽𑌯𑌮𑌨𑍍𑌤𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍇 𑌯𑍇𑌨𑍇𑌦𑌮𑌨𑍍𑌨𑌂 𑌪𑌚𑍍𑌯𑌤𑍇’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌃— 𑌵𑍈𑌶𑍍𑌵𑌾𑌨𑌰𑌃 𑌸𑌨𑍍 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌵𑌤𑌾𑌂 𑌦𑍇𑌹𑌮𑍍 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑌚𑌾𑌮𑌿 𑌪𑌕𑍍𑌤𑌿𑌂 𑌕𑌰𑍋𑌮𑌿 𑌅𑌨𑍍𑌨𑌂 𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌧𑌂 𑌭𑍋𑌜𑍍𑌯𑌂 𑌭𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌚𑍋𑌷𑍍𑌯𑌂 𑌲𑍇𑌹𑍍𑌯𑌂 𑌚 “𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌵𑍈𑌶𑍍𑌵𑌾𑌨𑌰𑌃 𑌅𑌗𑍍𑌨𑌿𑌃, 𑌅𑌗𑍍𑌨𑍇𑌃 𑌭𑍋𑌜𑍍𑌯𑌮𑌨𑍍𑌨𑌂 𑌸𑍋𑌮𑌃, 𑌤𑌦𑍇𑌤𑌦𑍁𑌭𑌯𑌮𑌗𑍍𑌨𑍀𑌷𑍋𑌮𑍌 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍” 𑌇𑌤𑌿 𑌪𑌶𑍍𑌯𑌤𑌃 𑌅𑌨𑍍𑌨𑌦𑍋𑌷𑌲𑍇𑌪𑌃 𑌨 𑌭𑌵𑌤𑌿 ॥ ௧௪ ॥

𑌕𑌿𑌞𑍍𑌚—

௧௫. 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌚𑌾𑌹𑌂 𑌹𑍃𑌦𑌿 𑌸𑌂𑌨𑌿𑌵𑌿𑌷𑍍𑌟𑌃
𑌮𑌤𑍍𑌤𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌪𑍋𑌹𑌨𑌂 𑌚 ।
𑌵𑍇𑌦𑍈𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑌹𑌮𑍇𑌵 𑌵𑍇𑌦𑍍𑌯𑌃
𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌕𑍃𑌦𑍍𑌵𑍇𑌦𑌵𑌿𑌦𑍇𑌵 𑌚𑌾𑌹𑌮𑍍 ॥

𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌚 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌅𑌹𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌨𑍍 𑌹𑍃𑌦𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑍌 𑌸𑌂-

---

௧௪. யான் வைச்வாநரனுகி, பிராணிகளுடைய உடம்பைச் சார்ந்து, பிராணன் அபாநன் இவற்ருேடு கூடி நால்வகையான உணவைச் செரிக்கின்றேன்.

வைச்வாநரன் - வயிற்றிலுள்ள தீ; "இந்த நெருப்பு வைச்வாநரன்; அந்த இது மனிதனுள்ளே இருக்கின்றது; அதனுல் இவ்வுணவு செரிக்கப்படுகின்றது" (பி - ரு - ௯ - ௧) என்பதுமுதலான சுருதியினு லென்க. சார்ந்து - புகுந்து. கூடி - (பிராணன் அபாநன் இவற்ருல் கொளுத்தப்பெற்று—ஆ.) நால்வகை உண்டியாவன - (சோறுமுதலிய) உண்டலும், (கறிமுதலிய) தின்றலும், (நீர்முதலிய) பருகலும், (தேன்முதலிய) நக்கலுமாம். "உன்பவன் வைச்வாநரனென்னும் அக்நி; (இந்த அக்நியால் உண்ணப்படும் உணவு ஸோமன் [சந்திரன்]; அந்த இவ்விரண்டுமாகிய எல்லாம் அக்நி ஸோமர்கள்" எனப் பார்ப்பவனுக்கு உணவின் குற்றம் ஒட்டுவதில்லை. (போஜநகாலத்திலே "உன்பவனும் உண்ணப்படுவதுமாகிய உலகெல்லாம் அக்நி ஸோமர்கள்" என உண்பவனை வைச்வாநரனுகவும், உண்ணப்படுவதை ஸோமனுக வும் கொண்டு தியானிப்பவனுக்கு உண்பவனுக்கு, உணவினுலான கெடுதி இல்லை. என, இடையேநேர்ந்த இந்தத் தியாநத்தைப் பயனைக் கூறி உணர்த்துகிருர்.—ஆ.) (௧௪)

பகவான் எல்லாருடைய ஹிருதயத்துள்ளும் வஸிக்கின்ருர்.

மற்றும்,

௧௫. யான் எல்லாருடைய ஹிருதயத்தினுள்ளும் தங்கியிருப்பவன்; நினைவும், அறிவும், (அவற்றின்) கேடும் என்னிடமிருந்து (வருகின்றன); எல்லாவேதங்களாலும் அறியவேண்டியவன் நானே; வேதாந்தத்தைச் செய்தவனும், வேதங்களை அறிந்தவனும் நானே.

நான் எல்லாப்பிராணிகளுடைய புத்தியினுள்ளும் ஆத்மாவாய்த் தங்கியுள்ளவன் [அவர்களது ஹிருதயத்திலே நல்லதாயிருப்பதையும், தீயதாயிருப்பதையும் ஸாக்ஷியாகப் பார்த்துக்கொண்டிருப்பவன்]. ஆகவே, நினைவும் அறிவும் அவற்றின்

𑌨𑌿𑌵𑌿𑌷𑍍𑌟𑌃 । 𑌅𑌤𑌃 𑌮𑌤𑍍𑌤𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌃 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑌦𑌪𑍋𑌹𑌨𑌂 𑌚; 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌿𑌣𑌾𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌰𑍋𑌧𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌮𑍃𑌤𑍀 𑌭𑌵𑌤𑌃 𑌤𑌥𑌾 𑌪𑌾𑌪𑌕𑌰𑍍𑌮𑌿𑌣𑌾𑌂 𑌪𑌾𑌪𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑍇𑌣 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌃 𑌅𑌪𑍋𑌹𑌨𑌂 𑌚 𑌅𑌪𑌾𑌯𑌨𑌂 𑌚 । 𑌵𑍇𑌦𑍈𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑍈𑌃 𑌅𑌹𑌮𑍇𑌵 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑍇𑌦𑍍𑌯𑌃 𑌵𑍇𑌦𑌿𑌤𑌵𑍍𑌯𑌃। 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌕𑍃𑌤𑍍 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌰𑍍𑌥𑌸𑌂𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑌕𑍃𑌤𑍍 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃, 𑌵𑍇𑌦𑌵𑌿𑌚𑍍𑌚 𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌵𑌿𑌤𑍍 𑌏𑌵 𑌚 𑌅𑌹𑌮𑍍 ॥ ௧௫ ॥

𑌭𑌗𑌵𑌤𑌃 𑌈𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌖𑍍𑌯𑌸𑍍𑌯 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌸𑌂𑌕𑍍𑌷𑍇𑌪𑌃 𑌉𑌕𑍍𑌤𑌃 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑍋𑌪𑌾𑌧𑌿𑌕𑍃𑌤𑌃 '𑌯𑌦𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌗𑌤𑌂 𑌤𑍇𑌜𑌃' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 । 𑌅𑌥 𑌅𑌧𑍁𑌨𑌾 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌕𑍍𑌷𑌰𑌾𑌕𑍍𑌷𑌰𑍋𑌪𑌾𑌧𑌿𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌤𑌯𑌾 𑌨𑌿𑌰𑍁𑌪𑌾𑌧𑌿𑌕𑌸𑍍𑌯 𑌕𑍇𑌵𑌲𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌧𑌾𑌰𑌯𑌿𑌷𑌯𑌾 𑌉𑌤𑍍𑌤𑌰𑍇 𑌶𑍍𑌲𑍋𑌕𑌾𑌃 𑌆𑌰𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌤𑌤𑍍𑌰 𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌵 𑌅𑌤𑍀𑌤𑌾𑌨𑌾𑌗𑌤𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌾𑌰𑍍𑌥𑌜𑌾𑌤𑌂 𑌤𑍍𑌰𑌿𑌧𑌾 𑌰𑌾𑌶𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 𑌆𑌹—

௧௬. 𑌦𑍍𑌵𑌾𑌵𑌿𑌮𑍌 𑌪𑍁𑌰𑍁𑌷𑍌 𑌲𑍋𑌕𑍇 𑌕𑍍𑌷𑌰𑌶𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰 𑌏𑌵 𑌚 ।
𑌕𑍍𑌷𑌰𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌕𑍂𑌟𑌸𑍍𑌥𑍋𑌽𑌕𑍍𑌷𑌰 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

---

கேடும் எல்லாப்பிராணிகட்கும் ஆத்மாவாகிய [கர்மங்களையெல்லாம் மேற்பார்த்து வருபவனும், பிரபஞ்சமாகிய யந்திரத்தின் ஸூத்ரதாரனுமான] என்னிடமிருந்து (வரு கின்றன. நினைவு - சென்ற பிறவிகளில் அநுபவித்ததின் நினைவு. அறிவு - இடம், காலம், இயற்கை என்றவற்றால் தூரத்திலுள்ள பொருள்களை அறிதல். அவற்றின் கேடு - நினைவும், அறிவும் போய்விடுதல்.—ஆ.) நல்வினையுடைய அவர்களது நல்வினைக் குத் தக்கபடி அறிவும் நினைவும் உண்டாகின்றன; அவ்வாறே, தீவினையுடையவரது தீவினைக்குத் தக்கபடி நினைவும் அறிவும் போய்விடுதலாகின்றது. எல்லாவேதங்களா லும் அறியவேண்டியவன் பரமாத்மாவான நானே. வேதாந்தத்தைச் செய்தவனும், அதாவது, வேதாந்தவிஷய ஸம்பிரதாயத்தைச் செய்தவனும் [வேதாந்த உபதே சத்தை அமைத்துப் பரம்பரையாக வரச்செய்தவனும்], வேதப்பொருளை அறிந்தவ னும் நானே. (௧௫)

பகவான் - அழியும் பிரபஞ்சத்திற்கும், அழியாப் பிரபஞ்சத்திற்கும் அப்பால் உள்ளவர்.

நாராயணனென்னும் திருநாமமுடைய ஈச்வரனான பகவானுக்குச் சிறந்த உபா திகளால் [ஸூர்யன்முதலியவற்றால்.—ஆ.] ஆன பெருமையானது "எந்த ஒளி" (௧௫ - ௧௨) என்பதுமுதலியவற்றால் சுருக்கமாய்க் கூறப்பட்டது. இனி, இப்பொழுது, அதுவே அழிவதும் அழியாததுமான உபாதிகளைக்காட்டிலும் முற்றும் வேறுபட் டிருக்குமையால் நிருபாதிகமான (உபாதியில்லாத அத்) தனிப்பொருளின் உண்மையை இன்னதென்று நிச்சயிக்கவேண்டும் என்னும் கருத்தோடு பின்வரும் சுலோகங்கள் தொடங்கப்படுகின்றன. அங்ஙனம், சென்ற அத்தியாயங்களிலும் வரும் அத்தியா யங்களிலும் உணர்த்திய விஷயங்களெல்லாவற்றையுமே மூவகையாக ராசிப்படுத்தி [மூன்று வகுப்பாகப் பிரித்து] அருளிச்செய்கிறார்:

௧௬. க்ஷரம் [அழிவது] எனவும், அக்ஷரம் [அழியாதது] எனவும் உலகில் இவ்விரண்டு புருஷர்கள் இருக்கிறார்கள்; க்ஷரமென்பது - எல்லாப்பொருள்களுமாம்; கூடஸ்தம் - அக்ஷரம் எனப்படுகின்றது.

அத ஏதௌ ப்ருதக்ராஶீக்ருதௌ புருஷௌ இதி உச்யேதே லோகே ஸம்ஸாரே — க்ஷரஶ்ச க்ஷரதீதி க்ஷர: விநாஶீ இதி ஏகோ ராஶி:; அபர: புருஷ: அக்ஷர: தத்விபரீத:, பகவத: மாயாஶக்தி:, க்ஷராக்யஸ்ய புருஷஸ்ய உத்பத்திபீஜம், அநேகஸம்ஸாரிஜந்துகாமகர்மாதிஸம்ஸ்காராஶ்ரய:, அக்ஷர: புருஷ: உச்யதே। கௌ தௌ புருஷௌ இதி? ஆஹ ஸ்வயமேவ பகவாந் — க்ஷர: ஸர்வாணி பூதாநி, ஸமஸ்தம் விகாரஜாதம் இத்யர்த:। கூடஸ்த: கூட: ராஶி: ராஶிரிவ ஸ்தித:। அதவா — கூட: மாயா வஞ்சநா ஜிஹ்மதா குடிலதா இதி பர்யாயா:, அநேகமாயாவஞ்சநாதிப்ரகாரேண ஸ்தித: கூடஸ்த: ஸம்ஸாரபீஜாநந்த்யாத் ந க்ஷரதி இதி அக்ஷர: உச்யதே ॥ ௧௬ ॥

ஆப்யாம் க்ஷராக்ஷராப்யாம் அந்ய: விலக்ஷண: க்ஷராக்ஷரோபாதித்வயதோஷேண அஸ்ப்ருஷ்ட: நித்யஶுத்தபுத்தமுக்தஸ்வபாவ: —

௧௭. உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத:।
யோ லோகத்ரயமாவிஶ்ய பிபர்த்யவ்யய ஈஶ்வர: ॥

உத்தம: உத்க்ருஷ்டதம: புருஷஸ்து அந்ய: அத்யந்தவிலக்ஷண: ஆப்யாம் பரமாத்மா இதி — பரமஶ்ச அஸௌ தேஹாத்யவித்யாக்ருதாத்மப்ய:, ஆத்மா ச ஸர்வ-

---

இருவகுப்பாகத் தனித்தனி பிரிக்கப்பட்டுள்ள இவ்விரண்டு(பொருள்களு)ம் ஸம்ஸாரத்தில் "புருஷர்கள்" எனப்படுகின்றன. (இவை புருஷனுக்கு சைதந்யத்திற்கு உபாதிகளாதலால், "புருஷர்கள்" எனக் கூறப்படுகின்றன.—ஆ.) அழிவதென்பது ஓர்வகுப்பு; மற்றொன்று அழியாதது: அதற்கு [முந்தினதற்கு] மாறானது: (அதாவது) பகவானுடைய மாயாசக்தி: க்ஷரமென்னும்பெயருடைய புருஷன் உண்டாதற்கு வித்து: பிறந்திறந்துஉழலும் பல பிராணிகளுடைய ஆசை கர்மம் முதலியவற்றின் வாஸனைகட்குத் தங்குமிடம்: அக்ஷரமானபுருஷன் எனப்படுகின்றது.—அவ்விருபுருஷர்களும் யார்? என்பது.—பகவான் தாமே அருளிச்செய்கிறார்: க்ஷரமென்பது - எல்லாப்பொருளுந்தான், விகாரக்கூட்டமான ஸகலமுந்தான் என்றபடி. குவியல்போல உள்ளது - கூடம். அல்லது, கூடம், மாயை, வஞ்சனை, கோணல், வக்கிரம் என்பன - ஒருபொருளுள்ள சொற்கள். கூடஸ்தம் - மாயை, வஞ்சனைமுதலாகப் பலவிதமாயுள்ளது. ஸம்ஸாரவிதைக்கு முடிவில்லையாததால் [அவ்விதை ப்ரஹ்மஞானத்தாலன்றி அழியாததாலால்.—ஆ.], (மாயாசக்திவடிவமான காரணோபாதியானது) அழியாதது எனப்படுகின்றது. (௧௬)

வேறொருவன் இந்த க்ஷரஅக்ஷரங்களினும் வேறானவனாய், க்ஷரம் அக்ஷரம் என்னும் இருஉபாதிகளுடைய தீங்கினால் கலக்கப்படாதவனாய், இயல்பாகவே நித்யனாய் சுத்தனாய் புத்தனாய் முக்தனாய் (இருக்கிறான் என அருளிச்செய்கிறார்):

௧௭. மற்று, எந்த நிர்விகாரியான ஈச்வரன் மூவுலகையும் புகுந்து தாங்குகின்றானோ, (அந்த) வேறொருவன் "மேலான புருஷன்" "பரமாத்மா" எனக் கூறப்படுகிறான்.

ஆனால், (எல்லாவற்றினும்) மேம்பட்ட புருஷன் இவற்றைக்காட்டிலும் முற்றும் வேறானவன், பரமாத்மா. இவன் அவித்யையினாலான [அஜ்ஞானத்தால் கற்பிக்கப்பட்ட] உடம்புமுதலிய ஆத்மாக்களைக்காட்டிலும் மேலானவன்; ஆத்மா, எல்லாப்

𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌚𑍇𑌤𑌨𑌃, 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌇𑌤𑌿—𑌉𑌦𑌾𑌹𑍃𑌤𑌃 𑌉𑌕𑍍𑌤𑌃 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑍇𑌷𑍁 । 𑌸 𑌏𑌵 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇—𑌯𑌃 𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑌂 𑌭𑍂𑌰𑍍𑌭𑍁𑌵𑌸𑍍𑌸𑍍𑌵𑌰𑌾𑌖𑍍𑌯𑌂 𑌸𑍍𑌵𑌕𑍀𑌯𑌯𑌾 𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌬𑌲𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌆𑌵𑌿𑌶𑍍𑌯 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑍍𑌯 𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑌿 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣 𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑌿 𑌧𑌾𑌰𑌯𑌤𑌿 𑌅𑌵𑍍𑌯𑌯𑌃 𑌨 𑌅𑌸𑍍𑌯 𑌵𑍍𑌯𑌯𑌃 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌅𑌵𑍍𑌯𑌯𑌃—𑌕𑌃?—𑌈𑌶𑍍𑌵𑌰𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌖𑍍𑌯𑌃 𑌈𑌶𑌨𑌶𑍀𑌲𑌃 ॥ ௧௭ ॥

𑌯𑌥𑌾𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌸𑍍𑌯 𑌈𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 "𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌃" 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 𑌨𑌾𑌮 𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌮𑍍 । 𑌤𑌸𑍍𑌯 𑌨𑌾𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌚𑌨𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌅𑌰𑍍𑌥𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌨𑌾𑌮𑍍𑌨𑍋 𑌦𑌰𑍍𑌶𑌯𑌨𑍍 "𑌨𑌿𑌰𑌤𑌿𑌶𑌯𑌃 𑌅𑌹𑌮𑍍 𑌈𑌶𑍍𑌵𑌰𑌃" 𑌇𑌤𑌿 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌦𑌰𑍍𑌶𑌯𑌤𑌿 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍—

௧௮. 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌕𑍍𑌷𑌰𑌮𑌤𑍀𑌤𑍋𑌽𑌹𑌮𑍍 𑌅𑌕𑍍𑌷𑌰𑌾𑌦𑌪𑌿 𑌚𑍋𑌤𑍍𑌤𑌮𑌃 ।
𑌅𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌲𑍋𑌕𑍇 𑌵𑍇𑌦𑍇 𑌚 𑌪𑍍𑌰𑌥𑌿𑌤𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌃 ॥

𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌕𑍍𑌷𑌰𑌮𑍍 𑌅𑌤𑍀𑌤𑌃 𑌅𑌹𑌮𑍍 𑌸𑌂𑌸𑌾𑌰𑌮𑌾𑌯𑌾𑌵𑍃𑌕𑍍𑌷𑌮𑍍 𑌅𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌾𑌖𑍍𑌯𑌮𑍍, 𑌅𑌕𑍍𑌷𑌰𑌾𑌦𑌪𑌿 𑌸𑌂𑌸𑌾𑌰𑌮𑌾𑌯𑌾𑌵𑍃𑌕𑍍𑌷𑌬𑍀𑌜𑌭𑍂𑌤𑌾𑌦𑌪𑌿 𑌚 𑌉𑌤𑍍𑌤𑌮𑌃 𑌉𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌟𑌤𑌮𑌃 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌤𑌮𑍋 𑌵𑌾, 𑌅𑌤𑌃 𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌕𑍍𑌷𑌰𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑍍 𑌉𑌤𑍍𑌤𑌮𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌸𑍍𑌮𑌿 𑌲𑍋𑌕𑍇 𑌵𑍇𑌦𑍇 𑌚 𑌪𑍍𑌰𑌥𑌿𑌤𑌃 𑌪𑍍𑌰𑌖𑍍𑌯𑌾𑌤𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌃 𑌇𑌤𑌿 𑌏𑌵𑌂 𑌮𑌾𑌂 𑌭𑌕𑍍𑌤𑌜𑌨𑌾𑌃 𑌵𑌿𑌦𑍁𑌃 । 𑌕𑌵𑌯𑌃 𑌕𑌾𑌵𑍍𑌯𑌾𑌦𑌿𑌷𑍁 𑌚 𑌇𑌦𑌂 𑌨𑌾𑌮 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 ॥ ௧௮ ॥

---

பிராணிகட்கும் உள்ளேயுள்ள அறிவுப்பொருள் ; ஆகவே, வேதாந்தங்களில் [உபநிஷத்துக்களில்] "பரமாத்மா" எனக் கூறப்படுகிறான். அவனையே சிறப்பித்துக் கூறுகிறார் : அவன் பூர்லோகம், புவர்லோகம், ஸ்வர்லோகம் என்னும் பெயருடைய மூவுலகையும் [பிரபஞ்சமனைத்தையும்] சைதந்யவலிமையிலுள்ள சக்தியினால், தனது மாயையினால், புகுந்து ஸ்வரூபத்தினுடைய கேவல இருப்பினால் [தன்னுடைய வெறும் இருப்பினால்] தாங்குகிறான். இவன் விகாரமில்லாதவன்.—யார்? —ஈச்வரன், முற்றுமுணர்ந்தவன், நாராயணனென்னும் திருநாமமுடையவன், ஆளுந்தன்மையன். (௧௭)

மேல் விரித்துரைக்கப்பட்ட ஈச்வரனுக்கு "புருஷோத்தமன்" என்னும் இப்பெயர் பிரஸித்தமாயுள்ளது. அவனுடைய பெயரின் சொல்லிலக்கணமும் அர்த்தமும் (யாவர்க்கும்) தெரிந்துள்ளதனால், (அப்) பெயர் அர்த்தமுள்ளது எனக்காட்டிப், பகவான் "யான் (யாவற்றினும்) மேலான ஈச்வரன்" எனத் தன்னை உணர்த்துகிறார் :

௧௮. யான் க்ஷரத்தைக் கடந்தவன் ; அன்றியும், அக்ஷரத்தினும் மேலானவன் ; ஆகவே, உலகத்திலும் வேதத்திலும் புருஷோத்தமனாகப் பிரஸித்தனாயுள்ளேன்.

நான் அச்வத்தமென்னும் பெயருடைய ஸம்ஸாரமாயாமரத்தைக் கடந்துள்ளவன் ; அன்றியும், ஸம்ஸாரமாயாமரத்தின் வித்தாயுள்ள அக்ஷரத்தைக்காட்டிலும் மேலானவன் ; அல்லது, (அதற்கு) மேலேயுள்ளவன். ஆதலால், (நான் உத்தமனான புருஷனென்க). அந்த க்ஷர அக்ஷரங்களினும் உயர்ந்தவனாதலால், உலகத்திலும் வேதத்திலும் புருஷோத்தமன் என்று பிரஸித்தனாயிருக்கின்றேன். பக்தஜனங்கள் என்னை இவ்வாறு அறிகிறார்கள். மற்றும், கவிகளும் காவ்யம்முதலியவற்றுள் இப்பெயரை அமைக்கிறார்கள். (௧௮)

𑌅𑌥 𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌯𑌥𑌾𑌨𑌿𑌰𑍂𑌪𑌿𑌤𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌯𑍋 𑌵𑍇𑌦, 𑌤𑌸𑍍𑌯 𑌇𑌦𑌂 𑌫𑌲𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௧௯. 𑌯𑍋 𑌮𑌾𑌮𑍇𑌵𑌮𑌸𑌂𑌮𑍂𑌢𑍋 𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ।
𑌸 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌭𑌜𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑌾𑌵𑍇𑌨 𑌭𑌾𑌰𑌤 ॥

𑌯𑍋 𑌮𑌾𑌂 𑌈𑌶𑍍𑌵𑌰𑌂 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌮𑍍 𑌏𑌵𑌂 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑍇𑌨 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍇𑌣 𑌅𑌸𑌂𑌮𑍂𑌢𑌃 𑌸𑌂𑌮𑍋𑌹𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 𑌸𑌨𑍍 𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 ‘𑌅𑌯𑌮𑍍 𑌅𑌹𑌮𑍍 𑌅𑌸𑍍𑌮𑌿’ 𑌇𑌤𑌿 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌂, 𑌸𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌤𑍍—𑌸𑌰𑍍𑌵𑌂 𑌵𑍇𑌤𑍍𑌤𑍀𑌤𑌿—𑌭𑌜𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑌾𑌵𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌤𑌯𑌾 𑌹𑍇 𑌭𑌾𑌰𑌤 ॥ ௧௯ ॥

𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑍇 𑌭𑌗𑌵𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑌫𑌲𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑍍𑌵𑌾, 𑌅𑌥 𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌤𑌤𑍍 𑌸𑍍𑌤𑍌𑌤𑌿—

௨௦. 𑌇𑌤𑌿 𑌗𑍁𑌹𑍍𑌯𑌤𑌮𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑌿𑌦𑌮𑍁𑌕𑍍𑌤𑌂 𑌮𑌯𑌾𑌨𑌘 ।
𑌏𑌤𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌨𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑌶𑍍𑌚 𑌭𑌾𑌰𑌤 ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑍇 𑌶𑌤𑌸𑌾𑌹𑌸𑍍𑌰𑍍𑌯𑌾𑌂 𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌯𑌾𑌂 𑌵𑍈𑌯𑌾𑌸𑌿𑌕𑍍𑌯𑌾𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌪𑌰𑍍𑌵𑌣𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍁 𑌉𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌮 𑌪𑌞𑍍𑌚𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

---

### ஆத்ம அறிவின் பெருமை.

இனி இப்பொழுது, கீழேவிரித்துரைக்கப்பட்ட ஆத்மாவை எவன் அறிகின்றானோ, அவனுக்கு இப்பயன் கூறப்படுகின்றது :

௧௯. எவன் புருஷோத்தமனான என்னை, மயங்காதவனாய் இவ்வாறு அறிகின்றானோ, அவன், பாரத! எல்லாவற்றையும் அறிந்தவனாய் முழுமனத்தோடு என்னைத் தொழுகிறான்.

எவன் கீழ்க்கூறிய விசேஷணங்களையுடைய ஈச்வரனாகிய புருஷோத்தமனான என்னை, மயக்கமில்லாதவனாய் " யான் இதோ இருக்கின்றேன் " எனக் கீழ்க்கூறியவாறு அறிகின்றானோ, அவன் முற்றும் உணர்ந்தவனாகி, ஸகலத்திற்கும் ஆத்மாவான (என்னிடத்துப் பதிந்த) மனத்தோடு என்னைத் தொழுகிறான். (௧௯)

இவ்வத்தியாயத்தினுள், " பகவானது உண்மையைப்பற்றிய அறிவிற்கு மோக்ஷம் பயன் " எனக் கூறிப், பின்பு, இங்ஙனம் அதனைப் புகழ்கின்றார் :

௨௦. பாவமற்றோனே! மிக ரஹஸ்யமான இந்த சாஸ்திரம் என்னால் இவ்வாறு கூறப்பட்டது. பாரத! (ஒருவன்) இதனை அறிந்து அறிவுள்ளவனாகவும், செய்யவேண்டியதைச் செய்தவனாகவும் ஆவன்.

ஸ்ரீமஹாபாரதத்திலே, வ்யாஸ ரருளிச்செய்த நூறாயிரக்கிரந்தஸம்ஹிதையிலே, பீஷ்மபர்வத்திலே, ஸ்ரீமத் பகவத்கீதைகளாக, உபநிஷத்துக்களாக, ப்ரஹ்மவித்யையாக, யோகசாஸ்திரமாக இருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணார்ஜுந ஸம்வாதத்திலே புருஷோத்தமயோகம் என்னும் பதினைந்தாம் அத்தியாயம் முற்றும்.

इति एतत् गुह्यतमं गोप्यतमम्, अत्यन्तरहस्यमित्येतत्— किं तत्?— शास्त्रम्। यद्यपि गीताख्यं समस्तं 'शास्त्रम्' उच्यते; तथापि अयमेव अध्यायः इह 'शास्त्रम्' इति उच्यते स्तुत्यर्थं, प्रकरणात्। सर्वो हि गीताशास्त्रार्थः अस्मिन् अध्याये समासेन उक्तः। न केवलं गीताशास्त्रार्थ एव, किन्तु सर्वश्च वेदार्थः इह परिसमाप्तः; 'यस्तं वेद स वेदवित्' 'वेदैश्च सर्वैरहमेव वेद्यः' इति च उक्तम्। इदम् उक्तं कथितं मया हे अनघ अपाप। एतत् शास्त्रं यथादर्शितार्थं बुद्ध्वा बुद्धिमान् स्यात् भवेत्— न अन्यथा— कृतकृत्यश्च भारत— कृतं कृत्यं कर्तव्यं येन सः कृतकृत्यः; विशिष्टजन्मप्रसूतेन ब्राह्मणेन यत् कर्तव्यं तत् सर्वं भगवत्तत्त्वे विदिते कृतं भवेत् इत्यर्थः; न च अन्यथा कर्तव्यं परिसमाप्यते कस्यचित् इत्यभिप्रायः। 'सर्वं कर्माखिलं पार्थ ज्ञाने परिसमाप्यते' इति च उक्तम्।

'एतद्धि जन्मसामग्र्यं ब्राह्मणस्य विशेषतः।
प्राप्यैतत्कृतकृत्यो हि द्विजो भवति नान्यथा॥' इति च मानवं वचनम्॥

यतः एतत् परमार्थतत्त्वं मत्तः श्रुतवानसि अतः कृतार्थः त्वं भारत! इति॥ २०॥

इति श्रीमद्भगवद्गीताभाष्ये पञ्चदशोऽध्यायः॥

---

இது மிகவும் ரஹஸ்யமானது.—அது யாது?— சாஸ்திரம். கீதையென்னும் பெயருடைய (நூல்)முழுதும் "சாஸ்திரம்" எனப்படுவதாயினும், இதே அத்தியாயத்தைப் புகழும்பொருட்டு இங்கு "சாஸ்திரம்" எனக் கூறுகிறார்; பிரகிருதவிஷயத்தினால் (இவ்வாறு கொள்க). கீதாசாஸ்திரவிஷயமனைத்துமன்றோ இவ்வத்தியாயத்தினுள் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது. கேவலம் கீதாசாஸ்திரவிஷயம்மாத்திரம் அன்று; மற்று, எல்லாவேதப்பொருளும் இங்கு முடிந்துள்ளது. "எவன் அதனை அறிகின்றானோ, அவன் வேதப்பொருளை அறிந்தவன்" (கரு - க), "எல்லாவேதங்களாலும் அறியவேண்டியவன் நானே" (கரு - கரு) என்றும் கூறப்பட்டுளது. (ஒருவன்) இங்குணர்த்தப்பெற்ற விஷயங்களுடைய இச்சாஸ்திரத்தை உணர்ந்து அறிவுள்ளவனாவன்; வேறுவிதமாக (அப்படி) ஆகமாட்டான். செய்யவேண்டியதைச் செய்தவனாகவும் அவன்; உயர்ந்த பிறவியில் பிறந்த பிராமணனால் செய்யவேண்டியது எதுவோ, அஃதெல்லாம் பகவானுடைய உண்மையை அறிந்தவளவிலே செய்யப்பட்டதாகும் என்றபடி. ஒருவனால் செய்யவேண்டியது வேறுவிதமாக முடிவுபெறாது என்பது கருத்து. "(ஒன்றுகூட) மிச்சமில்லாத எல்லாக்கர்மமும்,பார்த்த! ஞானத்தினுள் முடிந்துளது" (ச - கக) என்றும் அருளிச்செய்யப்பட்டிருக்கின்றது. அன்றியும், "இதுதான் ஜன்மத்தை நிறைவேற்றுதல், விசேஷமாகப் பிராமணனுக்கு; ஏனெனில், த்விஜன் [இருபிறப்பாளன்] இதனை அடைந்து செய்யவேண்டியதைச் செய்தவனாகிறான்; வேறுவிதமாக ஆகமாட்டான்" (மநு - கஉ - கூ) என்பது மநுவின் திருவாக்கு.

இந்தப் பரமார்த்தஉண்மையைஎன்னிடமிருந்துகேட்டிருக்கின்றாய் ஆதலால், பாரத! நீ கிருதார்த்தன் [பேறு பெற்றவன்] என்க. (உ0)

ஸ்ரீமத் பகவத்கீதாபாஷ்யத்தில் பதினைந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

அத

ஷோடசோऽத்யாய: தைவாஸுரஸம்பத்விபாகயோக: ||

தைவீ சாஸுரீ ராக்ஷஸீ ச இதி ப்ராணிநாம் ப்ரக்ருதய: நவமேऽத்யாயே ஸூசிதா: | தாஸாம் விஸ்தரேண ப்ரதர்சநாய 'அபயம் ஸத்த்வஸம்சுத்தி:' இத்யாதி: அத்யாய: ஆரப்யதே | தத்ர ஸம்ஸாரமோக்ஷாய தைவீ ப்ரக்ருதி:, நிபந்தாய சாஸுரீ ராக்ஷஸீ ச இதி, தைவ்யா: உபாதாநாய ப்ரதர்சநம் க்ரியதே, இதரயோ: பரிவர்ஜநாய ச—

ஸ்ரீபகவாநுவாச ||

க. அபயம் ஸத்த்வஸம்சுத்தி: ஜ்ஞாநயோகவ்யவஸ்திதி: |
தாநம் தமச்ச யஜ்ஞச்ச ஸ்வாத்யாயஸ்தப ஆர்ஜவம் ||

அபயம் அபீருதா | ஸத்த்வஸம்சுத்தி: ஸத்த்வஸ்ய அந்த:கரணஸ்ய ஸம்சுத்தி: ஸம்வ்யவஹாரேஷு பரவஞ்சநமாயாऽந்ருதாதிபரிவர்ஜநம், சுத்தஸத்த்வபாவேந

---

# பதினாறும் அத்தியாயம் : தைவாஸுரஸம்பத்விபாகயோகம்.

## ஞானமார்க்கத்தன்மை.

பிராணிகளது இயல்புகள் தைவமென, ஆஸுரமென, ராக்ஷஸமென ஒன்பதாம் அத்தியாயத்தினுள் (கூ - கஉ, கங) குறிப்பிக்கப்பட்டன. அவற்றை விரிவாக எடுத்துக்காட்ட, "பயமின்மை, மனத்தூய்மை" (கசு - க) என்றுதொடங்கும் அத்தியாயம் ஆரம்பிக்கப்படுகின்றது. (கர்மத்தால் குறிக்கப்படுவனவாய், ஸம்ஸாரமரத்தினுடைய பக்கவேர்களாய் (கரு - உ), முந்தின கர்மத்திற்கேற்ப மநுஷ்யசரீரத்திலே வெளிப்படுகின்ற ஸாத்விகம் ராஜஸம் தாமஸம் என்னும் வாஸனைகள் - முறையே தைவத்தன்மை, ஆஸுரத்தன்மை, ராக்ஷஸத்தன்மை எனப்படுகின்றன.—ஆ.) "அவற்றுள், தைவத்தன்மை ஸம்ஸாரத்தினின்றும் நீங்குதற்காவது ; ஆஸுரமும், ராக்ஷஸமுமான தன்மை (அதனுள்) கட்டுண்டுகிடத்தற்காவது" என, கைப்பற்றுதற்குத் தைவத்தன்மையும், கைவிடுதற்கு மற்றையவற்றையும் உணர்த்துதலை அருளிச் செய்கிறார் :

ஸ்ரீபகவான் சொல்லலுற்றார் :

க. பயமின்மை, மனத்தூய்மை, ஞானத்திலும் யோகத்திலும் உறைத்துநிற்றல், ஈகை, அடக்கம், நற்செய்கை, தன்னுடையதை ஓதுதல், தவம், நேர்மை.

பயமின்மை - பயமில்லாத் தன்மை [சாஸ்திரம் உபதேசித்த விஷயத்திலே சிறிதும் ஸந்தேகமில்லாது அதனை அநுஷ்டிப்பதிலே உறுதியாகநிற்றல்.—ஆ. அல்லது, "நான் யாதொரு உடைமையுமில்லாதவனுய்த் தனியே எப்படி வாழ்வேன்" என்னும் பயமின்மை.—ம.]. மனத்தூய்மை - அகக்கரணத்தின் பரிசுத்தம் [மனத்தின் மாசற்றதன்மை] ; நடக்கைகளில், பிறரைவஞ்சித்தல் கள்ளம் பொய் முதலியவற்றை விட்டிடுதல் ; சுத்தத்தன்மையோடு[யோக்கியமாக, நியாயமாக]ஒழுகுதல் என்றபடி. பிறரை வஞ்சித்தல் - கபடமாகப் பிறரை வசப்படுத்தல். கள்ளம் - மனத்திலொரு

𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌾𑌃 𑌉𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇। 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃—𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌤𑌃 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌤𑌶𑍍𑌚 𑌆𑌤𑍍𑌮𑌾𑌦𑌿𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑌾𑌮𑍍 𑌅𑌵𑌗𑌮𑌃, 𑌅𑌵𑌗𑌤𑌾𑌨𑌾𑌮𑍍 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌦𑍍𑌯𑍁𑌪𑌸𑌂𑌹𑌾𑌰𑍇𑌣 𑌏𑌕𑌾𑌗𑍍𑌰𑌤𑌯𑌾 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌸𑌂𑌵𑍇𑌦𑍍𑌯𑌤𑌾𑌽𑌽𑌪𑌾𑌦𑌨𑌂 𑌯𑍋𑌗𑌃, 𑌤𑌯𑍋𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌯𑍋𑌃 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌤𑌨𑍍𑌨𑌿𑌷𑍍𑌠𑌤𑌾। 𑌏𑌷𑌾 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌾 𑌦𑍈𑌵𑍀 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑍀 𑌸𑌂𑌪𑌤𑍍। 𑌯𑌤𑍍𑌰 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌅𑌧𑌿𑌕𑍃𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿, 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑍀 𑌸𑌾 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇। 𑌦𑌾𑌨𑌂 𑌯𑌥𑌾𑌶𑌕𑍍𑌤𑌿 𑌸𑌂𑌵𑌿𑌭𑌾𑌗𑌃 𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍀𑌨𑌾𑌮𑍍। 𑌦𑌮𑌶𑍍𑌚 𑌬𑌾𑌹𑍍𑌯𑌕𑌰𑌣𑌾𑌨𑌾𑌮𑍍 𑌉𑌪𑌶𑌮𑌃—𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌸𑍍𑌯 𑌉𑌪𑌶𑌮𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿, 𑌯𑌜𑍍𑌞𑌶𑍍𑌚 𑌶𑍍𑌰𑍌𑌤𑌃 𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌃, 𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤𑌶𑍍𑌚 𑌦𑍇𑌵𑌯𑌜𑍍𑌞𑌾𑌦𑌿𑌃, 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 𑌋𑌗𑍍𑌵𑍇𑌦𑌾𑌦𑍍𑌯𑌧𑍍𑌯𑌯𑌨𑌮𑍍 𑌅𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌰𑍍𑌥𑌮𑍍। 𑌤𑌪𑌃 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑌾𑌣𑌂 𑌶𑌾𑌰𑍀𑌰𑌾𑌦𑌿। 𑌆𑌰𑍍𑌜𑌵𑌮𑍍 𑌋𑌜𑍁𑌤𑍍𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 ॥ ௧ ॥

𑌕𑌿𑌞𑍍𑌚—

௨. 𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 𑌸𑌤𑍍𑌯𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌪𑍈𑌶𑍁𑌨𑌮𑍍।
𑌦𑌯𑌾 𑌭𑍂𑌤𑍇𑌷𑍍𑌵𑌲𑍋𑌲𑍁𑌪𑍍𑌤𑍍𑌵𑌂 𑌮𑌾𑌰𑍍𑌦𑌵𑌂 𑌹𑍍𑌰𑍀𑌰𑌚𑌾𑌪𑌲𑌮𑍍॥

𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 𑌅𑌹𑌿𑌂𑌸𑌨𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌪𑍀𑌡𑌾𑌵𑌰𑍍𑌜𑌨𑌮𑍍। 𑌸𑌤𑍍𑌯𑌮𑍍 𑌅𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌨𑍃𑌤𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌂 𑌯𑌥𑌾𑌭𑍂𑌤𑌾𑌰𑍍𑌥𑌵𑌚𑌨𑌮𑍍। 𑌅𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 𑌪𑌰𑍈𑌃 𑌆𑌕𑍍𑌰𑍁𑌷𑍍𑌟-

---

விதமும், வெளியி லொருவிதமுமாக வியவகரித்தல்—ஆ.) ஞானமென்பது - சாஸ்திரத்தினின்றும், ஆசார்யனிடத்தினின்றும் ஆத்மாமுதலியபொருள்களைத் தெரிந்துகொள்ளுதல். யோகமென்பது - தெரிந்துகொண்டவற்றைத் தன்னால் உணரப்படுவனவாகச் செய்துகொள்ளுதல், இந்திரியம் முதலியவற்றை ஒடுக்கி ஒருமுகப்பட்டுத் தனது அநுபவத்திற்குவருமாறு செய்துகொள்ளுதல். அந்த ஞானயோகங்களிலே உறைத்துநிற்றல் - அவற்றில் உறுதியாகநிற்றல். இது [பயமின்மையும், மனத்தூய்மையும், ஞானயோகங்களில் நிலைத்து நிற்றலும்] முதன்மையானது, தைவத்தன்மையென்பது, ஸாத்விகத்தன்மையென்பது. எதிலே உரிமையுள்ள எவர்கட்கு எந்தத்தன்மை உள்ளதோ, (அதிலே அவர்கட்கு) அது ஸாத்விகத்தன்மை எனப்படுகின்றது. (தைவத்தன்மையென்பனவற்றுள், சில - ஞானயோகிகட்கே உரியவை ; சில - கர்மயோகிகட்கே உரியவை ; சில இருவர்க்கும் பொதுவானவை. என்பதை ஆராய்க.) ஈகை - உண்டிமுதலியவற்றைச் சக்திக்குஏற்ப பகுத்துக்கொடுத்தல். அடக்கம்-வெளி இந்திரியங்களை அடக்குதல் ; அகக்கரண அடக்கத்தைக் கூறுவர் (௧௬ - ௨). நற்செய்கை - வேதத்தில் விதித்த அக்நிஹோத்ரம் முதலியவையும், ஸ்மிருதியில் விதித்த தேவயஜ்ஞம் முதலியவையு மென்க. தன்னுடைய (வேதத்)தை ஓதுதல் - மறுமைக்காக ரிக்வேதம் முதலியவற்றை ஓதுதல். தவம் - சரீரத்தைப்பற்றியது முதலாக இனிக் கூறப்படுவது. நேர்மை - எப்பொழுதும் நேரான தன்மை [விச்வாசத்தோடு கேட்பவனிடத்துத் தனக்குத் தெரிந்தவற்றை மறையாமை.—ம.]. (௧)

மேலும்,

௨. ஹிம்ஸியாமை, உண்மை, கோபமின்மை, துறவு, ஒழிபு, புறங்கூறாமை, பிராணிகளிடத்துக் கருணை, அவாவின்மை, மென்மை, நாணம், சேஷ்டையின்மை.

ஹிம்ஸியாமை - பிராணிகளை வருத்துதலில்லாமை. உண்மை - அப்பிரியமாகவும், பொய்யாகவும் உள்ளதை நீக்கி நடந்த செய்தியைப் பார்த்தபடி கூறுதல். கோபமின்மை - பிறரால் வையப்பெற்றவன், அல்லது அடிக்கப்பெற்றவன (தனக்கு) வந்த

ஷஸ்ய அபிஹதஸ்ய வா ப்ராப்தஸ்ய க்ரோதஸ்ய உபசமநம் । த்யாக: ஸந்ந்யா-ஸ:—பூர்வம் தாநஸ்ய உக்தத்வாத் । சாந்தி: அந்த:கரணஸ்ய உபசம: । அபை-சுநம் அபிசுநதா ; பரஸ்மை பரரந்த்ரப்ரகடீகரணம் பைசுநம், தத-பாவ: அபைசுநம் । தயா பூதேஷு து:கிதேஷு । அலோலுப்த்வம் இந்த்ரியாணாம் விஷயஸந்நிதௌ அவிக்ரியா । மார்தவம் ம்ருதுதா அக்ரௌர்யம் । ஹ்ரீ: லஜ்ஜா । அசாபலம் அஸதி ப்ரயோஜநே வாக்பாணிபாதாதீநாம் அவ்யாபார-யித்ருத்வம் ॥ ௨ ॥

கிஞ்ச—

௩. தேஜ: க்ஷமா த்ருதி: சௌசமத்ரோஹோ நாதிமாநிதா ।
பவந்தி ஸம்பதம் தைவீமபிஜாதஸ்ய பாரத ॥

தேஜ: ப்ராகல்ப்யம், ந த்வசி கதா தீப்தி: । க்ஷமா ஆக்ருஷ்டஸ்ய தாடிதஸ்ய வா அந்தர்விக்ரியாநுத்பத்தி:—உத்பந்நாயாம் விக்ரியாயாம் உபசமநம் அக்ரோத: இதி அவோசாம । இத்தம் க்ஷமாயா: அக்ரோதஸ்ய ச விசேஷ: । த்ருதி: தேஹேந்த்ரி-யேஷு அவஸாதம் ப்ராப்தேஷு தஸ்ய ப்ரதிஷேதக: அந்த:கரணவ்ருத்திவிசேஷ:, யேந உத்தம்பிதாநி கரணாநி தேஹஶ்ச ந அவஸீதந்தி । சௌசம் த்விவிதம், ம்ருஜ்ஜல-க்ருதம் பாஹ்யம், ஆப்யந்தரம் ச மநோபுத்த்யோ: நைர்மல்யம் மாயாராகாதிகா-

கோபத்தைத் தணித்துக்கொள்ளுதல். முன்னர் ஈகையைக் கூறியுள்ளமையால், "த்யாகம் - துறவு" என்க. புறங்கூறுதலென்பது - பிறனுக்குப் பிறனது குற்றங்களை வெளிப்படுத்தல், (காணுதவழி இகழ்ந்துரைத்தல்) ; அஃதின்மை - புறங்கூறுமை. கருணை - துன்புற்ற பிராணிகளின்மேல் இரக்கம். அவாவின்மை - விஷயங்களுடைய முன்னிலையிலே இந்திரியங்கட்கு விகாரமின்மை. மென்மை - மெல்லிய தன்மை, வெடு வெடுப்பின்மை, கடுமையின்மை. நாணம் - (தனக்குவவ்வாத இழிந்த கர்மங்களில் நாணுதல்). சேஷ்டையின்மை - பயனில்லாவழி, வாய் கை கால் முதலியவற்றைத் தொழிற்படுத்தாமை. (௨)

அன்றியும்,

௩. ஒளி, பொறுமை, நிறை, பரிசுத்தம், துரோகமின்மை, தருக்கின்மை,— பாரத ! (இவையெல்லாம்) தைவத்தன்மையைக் கொண்டு பிறந்தவனுக்கு நிகழ்கின்றன.

ஒளி யென்பது - திட்பம், தின்மை, ஆண்மை, ஆளுந்தன்மை [மாதர் சிறுவர் முதலிய மூடர்களால் தாக்கப்பெறுமை—ம.]; ஆனுல், மெய்யினுள்ள [உடம்பினுள்ள] காந்தியன்று. பொறுமை - வையப்பெற்றவனுக்கு, அல்லது அடிக்கப்பெற்றவனுக்கு மனக்கலக்கமுண்டாகாமை, "கலக்கமுண்டானவிடத்துத், தணிதல் - கோபமின் மை" எனக் கூறியுள்ளோம். இவ்வாறுகப் பொறுமைக்கும்,கோபமின்மைக்கும் வேறு பாடென்க. நிறை - உடம்பும் இந்திரியங்களும் சோர்வுற்றவளவில், அதனை [அச்சோர்வை]ப் போக்குகின்ற ஓர்வகை அகக்கரணப்போக்கு ; அதனுல் உடம்பும்,இந்திரியங் களும் தாங்கப்பெற்றுத் தளர்ச்சிடுவதில்லை. பரிசுத்தம் - இருவகைத்து. மண்ணினு லும், நீரினுலுமாவது - வெளிப்பரிசுத்தம் ; உள்பரிசுத்தமென்பது - மனமும், புத் தியும் மாசற்றுநிற்றல் ; கள்ளமும், காமமும்முதலிய கலக்கமில்லாமை. இவ்வாறுகச்

𑌲𑍁𑌷𑍍𑌯𑌾𑌭𑌾𑌵𑌃; 𑌏𑌵𑌂 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌂 𑌶𑍌𑌚𑌮𑍍 । 𑌅𑌦𑍍𑌰𑍋𑌹𑌃 𑌪𑌰𑌜𑌿𑌘𑌾𑌂𑌸𑌾𑌭𑌾𑌵𑌃 𑌅𑌹𑌿𑌂𑌸𑌨𑌮𑍍 । 𑌨𑌾𑌤𑌿𑌮𑌾𑌨𑌿𑌤𑌾 𑌅𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌮𑌾𑌨𑌃 𑌅𑌤𑌿𑌮𑌾𑌨𑌃, 𑌸𑌃 𑌯𑌸𑍍𑌯 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌸𑌃 𑌅𑌤𑌿𑌮𑌾𑌨𑍀, 𑌤𑌦𑍍𑌭𑌾𑌵𑌃 𑌅𑌤𑌿𑌮𑌾𑌨𑌿𑌤𑌾, 𑌤𑌦𑌭𑌾𑌵𑌃 𑌨𑌾𑌤𑌿𑌮𑌾𑌨𑌿𑌤𑌾 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑍂𑌜𑍍𑌯𑌤𑌾𑌤𑌿𑌶𑌯𑌭𑌾𑌵𑌨𑌾𑌭𑌾𑌵 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌅𑌭𑌯𑌾𑌦𑍀𑌨𑌿 𑌏𑌤𑌦𑌨𑍍𑌤𑌾𑌨𑌿 𑌸𑌮𑍍𑌪𑌦𑌮𑍍 𑌅𑌭𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯—𑌕𑌿𑌂𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌂 𑌸𑌮𑍍𑌪𑌦𑌮𑍍?—𑌦𑍈𑌵𑍀𑌂, 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌯𑌾 𑌸𑌮𑍍𑌪𑌤𑍍 𑌤𑌾𑌮𑍍 𑌅𑌭𑌿𑌲𑌕𑍍𑌷𑍍𑌯 𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌦𑍇𑌵𑌵𑌿𑌭𑍂𑌤𑍍𑌯𑌰𑍍𑌹𑌸𑍍𑌯 𑌭𑌾𑌵𑌿𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌸𑍍𑌯 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃, 𑌹𑍇 𑌭𑌾𑌰𑌤 ॥

𑌅𑌥 𑌇𑌦𑌾𑌨𑍀𑌮𑍍 𑌆𑌸𑍁𑌰𑍀 𑌸𑌮𑍍𑌪𑌤𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௪. 𑌦𑌮𑍍𑌭𑍋 𑌦𑌰𑍍𑌪𑍋𑌽𑌤𑌿𑌮𑌾𑌨𑌶𑍍𑌚 𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 𑌪𑌾𑌰𑍁𑌷𑍍𑌯𑌮𑍇𑌵 𑌚 ।
𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌚𑌾𑌭𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸𑌮𑍍𑌪𑌦𑌮𑌾𑌸𑍁𑌰𑍀𑌮𑍍 ॥

𑌦𑌮𑍍𑌭𑌃 𑌧𑌰𑍍𑌮𑌧𑍍𑌵𑌜𑌿𑌤𑍍𑌵𑌮𑍍 । 𑌦𑌰𑍍𑌪𑌃 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌧𑌨𑌸𑍍𑌵𑌜𑌨𑌾𑌦𑌿𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌃 𑌉𑌤𑍍𑌸𑍇𑌕𑌃 । 𑌅𑌤𑌿𑌮𑌾𑌨𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑌃 । 𑌕𑍍𑌰𑍋𑌧𑌶𑍍𑌚, 𑌪𑌾𑌰𑍁𑌷𑍍𑌯𑌮𑍇𑌵 𑌚 𑌪𑌰𑍁𑌷𑌵𑌚𑌨𑌮𑍍—𑌯𑌥𑌾 𑌕𑌾𑌣𑌂 "𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑍍𑌮𑌾𑌨𑍍," 𑌵𑌿𑌰𑍂𑌪𑌂 "𑌰𑍂𑌪𑌵𑌾𑌨𑍍," 𑌹𑍀𑌨𑌾𑌭𑌿𑌜𑌨𑌂 "𑌉𑌤𑍍𑌤𑌮𑌾𑌭𑌿𑌜𑌨𑌃" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 । 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌚 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌾𑌦𑌿𑌵𑌿𑌷𑌯𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌃 । 𑌅𑌭𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌪𑌾𑌰𑍍𑌥—𑌕𑌿𑌮𑍍 𑌅𑌭𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌇𑌤𑌿? 𑌆𑌹—𑌸𑌮𑍍𑌪𑌦𑌮𑍍 𑌆𑌸𑍁𑌰𑍀𑌮𑍍 𑌅𑌸𑍁𑌰𑌾𑌣𑌾𑌮𑍍 𑌸𑌮𑍍𑌪𑌤𑍍 𑌆𑌸𑍁𑌰𑍀 𑌤𑌾𑌮𑍍 𑌅𑌭𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௪ ॥

---

சுத்தமென்பது இருவகைத்தாம். துரோகமின்மை - பிறரைக் கெடுக்கக் கருதாமை, கெடுதி செய்யாமை. தருக்கின்மை - (தன்னை) மிக்கு மதித்தலின்மை ; (யாவரும்) தன்னை உயர்த்திமதிக்கவேண்டும் என்னும் எண்ணமில்லாமை என்றபடி.—பயமின்மைமுதலாக இதுவரையிலுள்ளவைகள் தன்மையைக் கொண்டு பிறந்தவனுக்கு உண்டாகின்றன.—எத்தகைய தன்மையை ?—தேவர்கட்குரிய தன்மையை. பாரத ! தேவர்களது தன்மை எதுவோ, அதனைக் கொண்டு பிறந்தவனுக்கு, அதாவது தேவப்பெருமைக்கு உரியவனும் இனிமேல் மங்களமுண்டாகப்பெறும் (மனிதனுக்கு இவை உண்டாகின்றன). (௩)

அஞ்ஞானமார்க்கத்தன்மை.

இனி இப்பொழுது ஆஸுரத்தன்மையை அருளிச்செய்கிறார் :

௪. டம்பமும், செருக்கும், (தன்னை) மிக்கு மதித்தலும், கோபமும், துடுக்கும், அறிவின்மையும் பார்த்த ! ஆஸுரத்தன்மையைக் கொண்டு பிறந்தவனுக்கு (இருக்கின்றன).

டம்பம் - நற்குணநற்செய்கையுள்ளவனாகக் கள்ளமாய் நடித்தல். செருக்கு - கல்வி, பொருள், தன்ஜனங்கள்முதலானோராலாகும் கொழுப்பு. (தன்னை) மிக்கு மதித்தல் - முன்கூறப்பட்டது. துடுக்கு - கொடுஞ்சொல் ; உதாரணமாக, குருடனைக் கண்ணுடையவனெனவும், அவலட்சணமுடையவனை அழகுள்ளவனெனவும், இழிபிறப்புடையவனை உயர்பிறப்புடையவனெனவும், பிறவற்றையும் நேரே துடுக்காகப்பேசுதல். அறிவின்மை - பகுத்துணர்வின்மை, செய்யவேண்டியவிஷயம் முதலியவற்றைத் தவறாகக் கொள்ளுதல். பார்த்த ! கொண்டு பிறந்தவனுக்கு (இவை இருக்கின்றன).—எதனைக்கொண்டு பிறந்தவனுக்கு ? என்பது.—கூறுகிறார் : அஸுரரது தன்மையினைக் கொண்டு பிறந்தவனுக்கு என்க. (௪)

𑌉𑌭𑌯𑍋𑌃 𑌸𑌂𑌪𑌦𑍋𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௫. 𑌦𑍈𑌵𑍀 𑌸𑌂𑌪𑌦𑍍𑌵𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯 𑌨𑌿𑌬𑌨𑍍𑌧𑌾𑌯𑌾𑌽𑌽𑌸𑍁𑌰𑍀 𑌮𑌤𑌾 ।
𑌮𑌾 𑌶𑍁𑌚𑌃 𑌸𑌂𑌪𑌦𑌂 𑌦𑍈𑌵𑍀𑌮𑌭𑌿𑌜𑌾𑌤𑍋𑌽𑌸𑌿 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵 ॥

𑌦𑍈𑌵𑍀 𑌸𑌂𑌪𑌤𑍍 𑌯𑌾, 𑌸𑌾 𑌵𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯 𑌸𑌂𑌸𑌾𑌰𑌬𑌨𑍍𑌧𑌨𑌾𑌶𑌾𑌯 । 𑌨𑌿𑌬𑌨𑍍𑌧𑌾𑌯 𑌨𑌿𑌯𑌤𑌃 𑌬𑌨𑍍𑌧𑌃 𑌨𑌿𑌬𑌨𑍍𑌧𑌃 𑌤𑌦𑌰𑍍𑌥𑌮𑍍 𑌆𑌸𑍁𑌰𑍀 𑌸𑌂𑌪𑌤𑍍 𑌮𑌤𑌾 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑌾 । 𑌤𑌥𑌾 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍀 𑌚 । 𑌤𑌤𑍍𑌰 𑌏𑌵𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑍇 𑌸𑌤𑌿 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑍍𑌯 𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌗𑌤𑌂 𑌭𑌾𑌵𑌂 "𑌕𑌿𑌮𑌹𑌮𑍍 𑌆𑌸𑍁𑌰𑍀𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌃? 𑌕𑌿𑌂 𑌵𑌾 𑌦𑍈𑌵𑍀𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌃?" 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑍍 𑌆𑌲𑍋𑌚𑌨𑌾𑌰𑍂𑌪𑌮𑍍 𑌆𑌲𑌕𑍍𑌷𑍍𑌯 𑌆𑌹 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍—𑌮𑌾 𑌶𑍁𑌚𑌃 𑌶𑍋𑌕𑌂 𑌮𑌾 𑌕𑌾𑌰𑍍𑌷𑍀𑌃 । 𑌸𑌂𑌪𑌦𑌂 𑌦𑍈𑌵𑍀𑌮𑍍 𑌅𑌭𑌿𑌜𑌾𑌤𑌃 𑌅𑌸𑌿 𑌅𑌭𑌿𑌲𑌕𑍍𑌷𑍍𑌯 𑌜𑌾𑌤𑍋𑌽𑌸𑌿, 𑌭𑌾𑌵𑌿𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌃 𑌤𑍍𑌵𑌮𑍍 𑌅𑌸𑌿 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃, 𑌹𑍇 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵 ॥ ௫ ॥

௬. 𑌦𑍍𑌵𑍌 𑌭𑍂𑌤𑌸𑌰𑍍𑌗𑍌 𑌲𑍋𑌕𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑍈𑌵 𑌆𑌸𑍁𑌰 𑌏𑌵 𑌚 ।
𑌦𑍈𑌵𑍋 𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌶𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌃 𑌆𑌸𑍁𑌰𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌮𑍇 𑌶𑍃𑌣𑍁 ॥

𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌕𑌰𑍍𑌮𑌲𑍋𑌕𑍇 𑌭𑍂𑌤𑌸𑌰𑍍𑌗𑍌 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌸𑌰𑍍𑌗𑍌 𑌸𑍃𑌷𑍍𑌟𑍀—𑌸𑍃𑌜𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌗𑌃, 𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑍇𑌵 𑌸𑍃𑌜𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌨𑌿 𑌦𑍈𑌵𑌾𑌸𑍁𑌰𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌿 𑌇𑌤𑌿 𑌦𑍍𑌵𑍌 𑌭𑍂𑌤𑌸𑌰𑍍𑌗𑍌 𑌇𑌤𑌿 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇, '𑌦𑍍𑌵𑌯𑌾 𑌹 𑌪𑍍𑌰𑌾

---

### இவ்விருதன்மையின் பயன்கள்.

இவ்விருதன்மைகளுடைய பயனைக் கூறுகிறார் :

௫. தைவத்தன்மை விடுபடுதற்காகவும், ஆஸுரத்தன்மை கட்டுண்டுகிடத்தற்காகவும் கருதப்பட்டுள்ளன. பாண்டவ! வருந்தாதே ; தைவத்தன்மையைக் கொண்டு பிறந்திருக்கிறாய்.

தைவத்தன்மை எதுவோ, அது ஸம்ஸாரக்கட்டினின்றும் விடுபடுதற்காவதென்க. ஆஸுரத்தன்மை, (ஸம்ஸாரத்தினுள்) தவறாது கட்டுண்டுகிடத்தற்காவதென்க. அவ்வாறே, ராக்ஷஸத்தன்மையுமென்க. அங்ஙன மிவ்வாறுள்ளவளவிலே, "நான் ஆஸுரத்தன்மையுடையவனோ? அல்லது, தைவத்தன்மையுடையவனோ?" என இவ்வாறு ஆலோசித்தலாகிய அர்ஜுனனுடைய உள்ளேயுள்ள கருத்தைக் கண்டு பகவான் அருளிச்செய்கிறார் :—பாண்டவ! வருத்தத்தைக்கொள்ளாதே ; தைவத்தன்மையைக்கொண்டு பிறந்திருக்கிறாய், உனக்கு இனிமேல் மங்கள முண்டாகும் என்றபடி. (௫)

### ஆஸுரத்தன்மையர்கள்.

௬. இவ்வுலகிலே மநுஷ்யசிருஷ்டிகள் தைவமாகவும், ஆஸுரமாகவும் இரண்டென்க. தைவ(சிருஷ்டி) விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றது ; பார்த்த! ஆஸுர (சிருஷ்டியை) என்னிடமிருந்து கேள்.

இவ்வுலகிலே, அதாவது ஸம்ஸாரத்திலே மனிதர்களது சிருஷ்டி இருவகைத்து. மனிதர்களே படைக்கப்படும்பொழுது தைவத்தன்மையும், ஆஸுரத்தன்மையும் பொருந்தியவர்கள் என மனிதசிருஷ்டி இரண்டு எனக் கூறப்படுகின்றது; "பிர

ப்ராஜாபத்யா தேவாஶ்சாஸுராஶ்ச' இதி ஶ்ருதே:—லோகே அஸ்மிந், ஸம்ஸாரே இத்யர்த: ; ஸர்வேஷாம் த்வைவித்யோபபத்தே: । கௌ தௌ பூதஸர்கௌ இதி? உச்யதே—ப்ரக்ருத ஏவ தைவ: ஆஸுரஶ்ச । உக்தயோரேவ புந: அநுவாதப்ரயோஜநமாஹ—தைவ: பூதஸர்க: 'அபயம் ஸத்த்வஸம்ஶுத்தி:' இத்யாதிநா விஸ்தரஶ: விஸ்தரப்ரகாரேண ப்ரோக்த: கதித:, ந து ஆஸுர: இதி । அத: தத்பரிவர்ஜநார்தம் ஆஸுரம் பார்த மே மம வசநாத் உச்யமாநம் விஸ்தரஶ: ஶ்ருணு அவதாரய ॥ சு ॥

ஆ அத்யாயபரிஸமாப்தே: ஆஸுரீ ஸம்பத் ப்ராணிவிஶேஷணத்வேந ப்ரதர்ஶ்யதே, ப்ரத்யக்ஷீகரணேந ச ஶக்யதே தஸ்யா: பரிவர்ஜநம் கர்துமிதி—

எ. ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச ஜநா ந விதுராஸுரா: ।
ந ஶௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்யதே ॥

ப்ரவ்ருத்திம் ச ப்ரவர்தநம், யஸ்மிந் புருஷார்தஸாதநே கர்தவ்யே ப்ரவ்ருத்தி: தாம், நிவ்ருத்திம் ச ஏதத்விபரீதாம், யஸ்மாத் அநர்தஹேதோ: நிவர்திதவ்யம் ஸா நிவ்ருத்தி: தாம் ச, ஜநா: ஆஸுரா: ந விது: ந ஜாநந்தி । ந

---

ஜாபதியினால் படைக்கப்பட்டவர்கள் தேவர்களாகவும் அஸுரர்களாகவும் இருவகுப்பினரன்றோ" (பிரு - க - ங - க) என்னும்சுருதியினாலென்க ; யாவர்க்கும் இருவகையே [ஏதாவதொன்றே] அமையுமாதலால், (மனிதசிருஷ்டி இருவகைத்து. ஆஸுரத்தன்மையினுள் ராக்ஷஸத்தன்மை அடங்கியதென்றறிக.—இருதிறமான) அம்மனிதசிருஷ்டி யாவை? என்பது.—கூறுவோம்: பிரகிருதத்தில் பேசிவருகின்ற தைவமும், ஆஸுரமும்தான். சொன்னவற்றையே மீண்டும் சொல்வதற்குப் பயன் கூறுகிறார்: மனிதர்களுடைய தைவசிருஷ்டியானது "பயமின்மை, மனத்தூய்மை" (கசு - க) என்பது முதலாக விரிவாய்க் கூறப்பட்டுளது ; மற்று, ஆஸுர(சிருஷ்டி கூறப்பட)வில்லை என்பதாம். ஆகவே, பார்த்த ! அதனை நீக்க ஆஸுரத்தை விரிவாய்க் கூறுகிறேன் ; என்வார்த்தையினால் கேட்டுத் தெரிந்துகொள். (சு)

அத்தியாயமுடிவுவரை ஆஸுரத்தன்மையை (சில) மனிதர்களுடைய விசேஷணமாக எடுத்துக்காட்டுகிறார் ; (ஏனெனில், அவர்களிடத்து அதனை) நேராகக் கண்டவிடத்தன்றோ அதனை விட்டிடுதலைச் செய்யக்கூடுமென்று :

எ. அஸுரத்தன்மையுள்ள ஜனங்கள், செய்வதையும் தவிர்வதையும் அறிவதில்லை ; அவர்களிடத்துச் சுத்தமில்லை : ஒழுக்கமுமில்லை : உண்மை இல்லை.

செய்வது என்பது-புருஷார்த்தத்திற்காக[தான்விரும்பியதைப்பெறுதற்காக]ச் செய்யவேண்டிய எந்த ஸாதநத்தைச் செய்தல் (வேண்டுமோ, அது : அதாவது, விதிக்கப்பட்ட தர்மம்). தவிர்வது என்பது - இதற்கு [செய்வதற்கு] மாறானது, தீங்கிற்குக் காரணமான எதனைத் தவிர்க்கவேண்டுமோ, அது : (அதாவது,விலக்கப்பட்ட அதர்மம். இவ்விரண்டையும்) அஸுரத்தன்மையரான ஜனங்கள் அறிவதில்லை. அவர்கள் கேவலம் செய்வது தவிர்வது என்பவற்றைமட்டும் அறிவதில்லையென்பதி

𑌕𑍇𑌵𑌲𑌂 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍀 𑌏𑌵 𑌤𑍇 𑌨 𑌵𑌿𑌦𑍁𑌃—𑌨 𑌶𑍌𑌚𑌂 𑌨𑌾𑌪𑌿 𑌚 𑌆𑌚𑌾𑌰𑌃 𑌨 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌤𑍇𑌷𑍁 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇—𑌅𑌶𑍌𑌚𑌾𑌃 𑌅𑌨𑌾𑌚𑌾𑌰𑌾𑌃 𑌮𑌾𑌯𑌾𑌵𑌿𑌨𑌃 𑌅𑌨𑍃𑌤𑌵𑌾𑌦𑌿𑌨𑍋 𑌹𑌿 𑌆𑌸𑍁𑌰𑌾𑌃 ॥ ௭ ॥

𑌕𑌿𑌞𑍍𑌚—

௮. 𑌅𑌸𑌤𑍍𑌯𑌮𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌂 𑌤𑍇 𑌜𑌗𑌦𑌾𑌹𑍁𑌰𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ।
𑌅𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌸𑌮𑍍𑌭𑍂𑌤𑌂 𑌕𑌿𑌮𑌨𑍍𑌯𑌤𑍍𑌕𑌾𑌮𑌹𑍈𑌤𑍁𑌕𑌮𑍍 ॥

𑌅𑌸𑌤𑍍𑌯𑌂 𑌯𑌥𑌾 𑌵𑌯𑌮𑍍 𑌅𑌨𑍃𑌤𑌪𑍍𑌰𑌾𑌯𑌾𑌃 𑌤𑌥𑌾 𑌇𑌦𑌂 𑌜𑌗𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍 𑌅𑌸𑌤𑍍𑌯𑌮𑍍, 𑌅𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌂—𑌨 𑌅𑌸𑍍𑌯 𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑍌 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾, 𑌅𑌤𑌃 𑌅𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌂 𑌚 — 𑌇𑌤𑌿 𑌤𑍇 𑌆𑌸𑍁𑌰𑌾𑌃 𑌜𑌨𑌾𑌃 𑌜𑌗𑌤𑍍 𑌆𑌹𑍁𑌃 𑌅𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 — 𑌨 𑌚 𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑌸𑌵𑍍𑌯𑌪𑍇𑌕𑍍𑌷𑌕𑌃 𑌅𑌸𑍍𑌯 𑌶𑌾𑌸𑌿𑌤𑌾 𑌈𑌶𑍍𑌵𑌰𑍋 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌤𑌃 𑌅𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑌂 𑌜𑌗𑌤𑍍 𑌆𑌹𑍁𑌃 । 𑌕𑌿𑌞𑍍𑌚— 𑌅𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌸𑌮𑍍𑌭𑍂𑌤𑌂 𑌕𑌾𑌮𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑌯𑍋𑌃 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌰𑍁𑌷𑌯𑍋𑌃 𑌅𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌸𑌂𑌯𑍋𑌗𑌾𑌤𑍍 𑌜𑌗𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑌮𑍍𑌭𑍂𑌤𑌮𑍍 । 𑌕𑌿𑌮𑍍 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 𑌕𑌾𑌮𑌹𑍈𑌤𑍁𑌕𑌮𑍍—𑌕𑌾𑌮𑌹𑍈𑌤𑍁𑌕𑌮𑍇𑌵 𑌕𑌾𑌮𑌹𑍈𑌤𑍁𑌕𑌮𑍍 ; 𑌕𑌿𑌮𑍍 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 𑌜𑌗𑌤𑌃 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 ? 𑌨 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌅𑌦𑍃𑌷𑍍𑌟𑌂 𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑌾𑌦𑌿 𑌕𑌾𑌰𑌣𑌾𑌨𑍍𑌤𑌰𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌜𑌗𑌤𑌃 । "𑌕𑌾𑌮 𑌏𑌵 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍" 𑌇𑌤𑌿 𑌲𑍋𑌕𑌾𑌯𑌤𑌿𑌕𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 𑌇𑌯𑌮𑍍 ॥ ௮ ॥

---

ல்லை ; அவர்களிடத்துப் பரிசுத்தமும், நல்லொழுக்கமும், உண்மையும் இல்லை. அஸுரத்தன்மையர்கள் பரிசுத்தமில்லாதவர், நல்லொழுக்கமில்லாதவர், கள்ளமுடையவர், பொய்பேசுபவர் எனப் பிரஸித்தமன்றோ. (எ)

**உலகத்தைப்பற்றி நாஸ்திகர் கொண்ட கொள்கை.**

மற்றும்,

அ. "உலகம் உண்மையில்லது : அடிஆதாரமில்லது : ஆளுபவனில்லது : ஒருவரோடொருவர் சேர்வதனு லுண்டானது : காமத்தால் வந்திருப்பது ; வேறு என்ன?" (என) அவர்கள் கூறுகிறார்கள்.

"நாம் பொய்மயமாகவே இருக்குமாறுபோல, இவ்வுலகெல்லாம் பொய்ம்மையாயுளது. இதற்கு தர்மமும் அதர்மமும் ஆதாரமாயில்லை ; ஆகலான் இது ஆதாரமில்லாதது. (வரைமுறைக்குக் காரணமான தர்மம் அதர்மம் என்னும் ஒழுங்கு இல்லை.) அன்றியும், தர்மஅதர்மங்களைச் சார்ந்து இதனை ஒழுங்குசெய்து ஆள்பவன் இல்லை ; ஆதலால், உலகம் ஆள்பவனில்லாததாம். மேலும், இவ்வுலகெல்லாம் - காமத்தால் தூண்டப்பெற்ற ஸ்திரீபுருஷர்கள் ஒருவரோடொருவர் புணர்வதனுல் உண்டானது ; காமத்தையே காரணமாகக்கொண்டது, காமத்தாலேயே வந்திருப்பது. ஜகத்திற்கு வேறுகாரணம் என்ன?ஜகத்திற்கு வேறுகாரணமில்லை,(இந்திரியங்கட்குப்)புலப்படாத தருமம் அதருமம் முதலிய காரண மொன்றுமில்லை" என்று ஆஸுரத்தன்மையரான ஜனங்கள் கூறுகிறார்கள்.—"உயிருள்ள பிராணிகட்குக் காமமேதான் காரணம்" என்றஇது, லோகாயதிகரது [இந்திரியங்கட்குப் புலப்படுவதைமாத்திரம் ஒத்துக் கொள்கின்ற நாஸ்திகரது] கொள்கை. (அ)

௯. 𑌏𑌤𑌾𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌮𑌵𑌷𑍍𑌟𑌭𑍍𑌯 𑌨𑌷𑍍𑌟𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍋𑌽𑌲𑍍𑌪𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌃 ।
𑌪𑍍𑌰𑌭𑌵𑌨𑍍𑌤𑍍𑌯𑍁𑌗𑍍𑌰𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌃 𑌕𑍍𑌷𑌯𑌾𑌯 𑌜𑌗𑌤𑍋𑌽𑌹𑌿𑌤𑌾𑌃 ॥

𑌏𑌤𑌾𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌮𑌵𑌷𑍍𑌟𑌭𑍍𑌯 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌨𑌷𑍍𑌟𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 𑌨𑌷𑍍𑌟𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌾𑌃 𑌵𑌿𑌭𑍍𑌰𑌷𑍍𑌟𑌪𑌰𑌲𑍋𑌕𑌸𑌾𑌧𑌨𑌾𑌃 𑌅𑌲𑍍𑌪𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌃 𑌵𑌿𑌷𑌯𑌵𑌿𑌷𑌯𑌾 𑌅𑌲𑍍𑌪𑍈𑌵 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌅𑌲𑍍𑌪𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌉𑌦𑍍𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌉𑌗𑍍𑌰𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌃 𑌕𑍍𑌰𑍂𑌰𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌃 𑌹𑌿𑌂𑌸𑌾𑌤𑍍𑌮𑌕𑌾𑌃 । 𑌕𑍍𑌷𑌯𑌾𑌯 𑌜𑌗𑌤𑌃— '𑌪𑍍𑌰𑌭𑌵𑌨𑍍𑌤𑌿' 𑌇𑌤𑌿 𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌃 । 𑌜𑌗𑌤𑌃 𑌅𑌹𑌿𑌤𑌾𑌃, 𑌶𑌤𑍍𑌰𑌵𑌃 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௯ ॥

𑌤𑍇 𑌚—

௧௦. 𑌕𑌾𑌮𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌦𑍁𑌷𑍍𑌪𑍂𑌰𑌂 𑌦𑌮𑍍𑌭𑌮𑌾𑌨𑌮𑌦𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 ।
𑌮𑍋𑌹𑌾𑌦𑍍𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑌾𑌽𑌸𑌦𑍍𑌗𑍍𑌰𑌾𑌹𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇𑌽𑌶𑍁𑌚𑌿𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 ॥

𑌕𑌾𑌮𑌮𑍍 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌅𑌵𑌷𑍍𑌟𑌭𑍍𑌯 𑌦𑍁𑌷𑍍𑌪𑍂𑌰𑌮𑌶𑌕𑍍𑌯𑌪𑍂𑌰𑌣𑌂 𑌦𑌮𑍍𑌭𑌮𑌾𑌨𑌮𑌦𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 𑌦𑌮𑍍𑌭𑌶𑍍𑌚 𑌮𑌾𑌨𑌶𑍍𑌚 𑌮𑌦𑌶𑍍𑌚 𑌦𑌮𑍍𑌭𑌮𑌾𑌨𑌮𑌦𑌾𑌃 𑌤𑍈𑌃 𑌅𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 𑌦𑌮𑍍𑌭𑌮𑌾𑌨𑌮𑌦𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 𑌮𑍋𑌹𑌾𑌤𑍍 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌤𑌃 𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑌾 𑌉𑌪𑌾𑌦𑌾𑌯 𑌅𑌸𑌦𑍍𑌗𑍍𑌰𑌾𑌹𑌾𑌨𑍍 𑌅𑌶𑍁𑌭𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌲𑍋𑌕𑍇 𑌅𑌶𑍁𑌚𑌿𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 𑌅𑌶𑍁𑌚𑍀𑌨𑌿 𑌵𑍍𑌰𑌤𑌾𑌨𑌿 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌅𑌶𑍁𑌚𑌿𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 ॥ ௧௦ ॥

𑌕𑌿𑌂𑌚—

௧௧. 𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌮𑌪𑌰𑌿𑌮𑍇𑌯𑌾𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌲𑌯𑌾𑌨𑍍𑌤𑌾𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ।
𑌕𑌾𑌮𑍋𑌪𑌭𑍋𑌗𑌪𑌰𑌮𑌾 𑌏𑌤𑌾𑌵𑌦𑌿𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌾𑌃 ॥

---

### நாஸ்திகருடைய வாழ்க்கை.

௯. இக்கொள்கையைப் பிடித்துக் கெட்ட ஆத்மாக்களான அற்பபுத்திகள் கொடுந்தொழிலுள்ள சத்துருக்களாக உலகத்தைக் கெடுக்கக் கிளம்புகிறார்கள்.

கெட்ட ஆத்மாக்களான - மறுமைக்கான ஸாதநங்களை இழந்த. அற்பபுத்திகள் - விஷயங்களைப்பற்றிய அற்பபுத்தியுள்ளவர் [கண்டதைக் கண்டபடி செய்பவர்.—ஆ.]. கொடுந்தொழிலுள்ள - ஹிம்ஸிக்கும் தன்மையுள்ள. உலகத்தைக் கெடுக்கக் "கிளம்புகிறார்கள்" என இயையும். சத்துருக்களாக - உலகத்திற்குப் பகைவராக என்றபடி. (௯)

மேலும், அவர்கள்

௧௦. நிரப்பமுடியாத அவாவினைக் கைப்பற்றி டம்பமும், கர்வமும், செருக்கும் உடையவராகித் தீயகொள்கைகளை மயக்கத்தால் பிடித்து அசுத்தமான விரதங்களைக் கொண்டவராய் (உலகில்) தலைப்படுகிறார்கள்.

மயக்கத்தால் - அவிவேகத்தால், பகுத்தறிவின்மையால். (அசுத்தமான விரதங்கள் - வேதத்தில் விதிக்கப்படாத அசுத்தச்செய்கைகள்; அவை - சுடுகாட்டிற் சென்று அற்பதேவதையை ஆராதித்தல், வாமாகமத்தைத் தழுவி கள்குடித்தல், அதனால் பிறனும் பிறன்மனைவியும் மதிமயங்கிக் கூடுதல் முதலியன.) (௧௦)

அன்றியும், (அவர்கள்)

௧௧. சாவினையே முடிவாகப்பெற்ற அளவிடவொண்ணாத கவலையையுடையவர்: காமநுகர்ச்சியையே மேலாகக்கொண்டவர்: இவ்வளவுதான் என நிச்சயித்தவர்.

சிந்தாம் அபரிமேயாம் ச — ந பரிமாதும் ஶக்யதே யஸ்யா: சிந்தாயா: இயத்தா, ஸா அபரிமேயா, தாம் அபரிமேயாம் ப்ரலயாந்தாம் மரணாந்தாம் உபாஶ்ரிதா:, ஸதா சிந்தாபரா: இத்யர்த:। காமோபபோகபரமா:, காம்யந்தே இதி காமா: விஷயா: ஶப்தாதய:, ததுபபோகபரமா: "அயமேவ பரம: புருஷார்தோ ய: காமோபபோக:" இத்யேவம் நிஶ்சிதாத்மாந:, ஏதாவச்ச இதி நிஶ்சிதா: ॥ ௧௧ ॥

௧௨. ஆஶாபாஶஶதைர்பத்தா: காமக்ரோதபராயணா: ।
ஈஹந்தே காமபோகார்தம் அந்யாயேநார்தஸஞ்சயாந் ॥

ஆஶாபாஶஶதை: ஆஶா ஏவ பாஶா: தச்சதை: ஆஶாபாஶஶதை: பத்தா: ஸந்த: ஸமாக்ருஷ்யமாணா:, காமக்ரோதபராயணா: காமக்ரோதைக பரம் அயநம் ஆஶ்ரய: யேஷாம் தே காமக்ரோதபராயணா:, ஈஹந்தே சேஷ்டந்தே காமபோகார்தம் காமபோகப்ரயோஜநாய ந யஜ்ஞாய அர்தஸஞ்சயாந் அர்தப்ரசயாந் அந்யாயேந பரஸ்வாபஹரணாதிநா இத்யர்த:॥

ஸங்கல்பஶ்ச தேஷாம் அபிப்ராய:—

௧௩. இதமத்ய மயா லப்தம் இமம் ப்ராப்ஸ்யே மநோரதம் ।
இதமஸ்தீதமபி மே பவிஷ்யதி புநர்தநம் ॥

---

(கவலையென்பது - ஆசை அளவிறந்த பொருள்களின்மேல் செல்லுதலால் தான் அவற்றைத் தேடுதலையும், காப்பாற்றுதலையும், இவற்றிற்கான வழிகளையும் ஆலோசித்தல்.—ஆ.) அளவிடவொண்ணாத கவலையையுடையவர் - இவ்வளவென்று அளவிடமுடியாத கவலையினுள் எப்பொழுதும் அழுந்திக்கிடப்பவர் என்றபடி. காமநுகர்ச்சி - விரும்பப்படுகின்ற ஓசைமுதலியவிஷயங்களை அநுபவித்தல். (அவர்கள்) "காமநுகர்ச்சியென்பது எதுவோ, (அந்த) இதுவேதான் யாவற்றினும் மேம்பட்ட புருஷார்த்தம் [அடையவேண்டிய பொருள்]" எனத் தமக்கு இவ்வாறு நிச்சயம்வந்தவர்கள். இவ்வளவுதான் என்று - ("இக்காமநுகர்ச்சியேதான் இன்பத்திற்கு முடிந்த எல்லை; மற்று, மறுமைஇன்பமென்பது இல்லை" என்று). (௧௧)

௧௨. (அவர்கள்) ஆசையென்னும் நூறு கயிறுகளால் கட்டுண்டு, காமத்தையும் கோபத்தையுமே சிறந்த அடைக்கலமாகக்கொண்டு, காமநுகர்ச்சிக்காகப் பணக்குவியல்களை அநியாயத்தால் தேட முயல்கிறார்கள்.

அவர்கள், ஆசைகளென்னும் பல கயிறுகளால் கட்டப்பெற்று இங்குமங்கும் இழுக்கப்படுகிறார்கள். காமநுகர்ச்சிக்காக - தருமகார்யத்திற்காக அன்றென்க. அநியாயத்தால் - பிறர்பொருளைக் கொள்ளையடித்தல் முதலியவற்றால் என்றபடி. (௧௨)

அஸுரத்தன்மையருடைய நோக்கங்கள்.

அவரது கருத்து இப்படிப்பட்டது :

௧௩. "இப்பொழுது இது என்னால் அடையப்பட்டது : இவ்விருப்பத்தைச் (சீக்கிரம்) பெறுவேன் : இது (என்வீட்டில்) இருக்கின்றது : இனி இந்தப்பணமும் எனக்கு வந்துசேரும்.

கச. असौ मया हतः शत्रुर्हनिष्ये चापरानपि ।
ईश्वरोऽहमहं भोगी सिद्धोऽहं बलवान्सुखी ॥

கரு. आढ्योऽभिजनवानस्मि कोऽन्योऽस्ति सदृशो मया ।
यक्ष्ये दास्यामि मोदिष्य इत्यज्ञानविमोहिताः ॥

इदं द्रव्यम् अद्य इदानीं मया लब्धम् । इदं च अन्यत् प्राप्स्ये मनोरथं मनस्तुष्टिकरम् । इदं च अस्ति इदमपि मे भविष्यति आगामिनि संवत्सरे पुनः धनं, तेन अहं धनी विख्यातः भविष्यामि ॥ கங ॥

असौ देवदत्तनामा मया हतः दुर्जयः शत्रुः । हनिष्ये च अपरान् अन्यान् अपि । किम् एते करिष्यन्ति तपस्विनः? सर्वथापि नास्ति मत्तुल्यः । कथम्?—ईश्वरः अहम्, अहं भोगी । सर्वप्रकारेण च सिद्धः अहं संपन्नः पुत्रैः नप्तृभिः, न केवलं मानुषः; बलवान् सुखी च अहमेव ॥ கச ॥

आढ्यः धनेन, अभिजनवान् सप्तपुरुषं श्रोत्रियत्वादिसंपन्नः—तेनापि न मम तुल्यः अस्ति कश्चित् । कः अन्यः अस्ति सदृशः तुल्यः मया? किंच—यक्ष्ये यागेनापि अन्यान् अभिभविष्यामि, दास्यामि नटादिभ्यः, मोदिष्ये हर्षं च अतिशयं प्राप्स्यामि इति एवम् अज्ञानविमोहिताः अज्ञानेन विमोहिताः विविधम् अविवेकभावम् आपन्नाः ॥ கரு ॥

---

கச. “ இவன் என்னால் கொல்லப்பட்டான் ; இனி மற்றையோர்களையும் கொன்றுவிடுவேன் ; நான் ஆளுபவன் ; நான் அநுபவிப்பவன் ; (எல்லாம்) அடையப்பெற்றவன் ; நான் வலிமையுள்ளவன் ; இன்பமுடையவன்.

கரு. “ செல்வமுடையவனாயும், உயர்குலமுடையவனாயும் இருக்கின்றேன். என்னோடு ஒப்பானவன் வேறு எவன் இருக்கிறான் ? யாகஞ்செய்வேன் ; கொடுப்பேன் ; மகிழ்வேன் ” என (ஆஸுரத்தன்மையர்) அறிவின்மையால் பலவாறு மயங்கியுள்ளார்.

இது - திரவியம் [நிலம், தங்கம் முதலியன]. இவ்விருப்பத்தை - மனத்திற்கு ஸந்தோஷத்தைச் செய்கின்ற வேறொன்றை. இனி வரும்வருஷத்தில் இந்தப்பணம் என்னுடையதாகும் ; அதனால் நான் பணமுள்ளவனாகப் பிரஸித்தனாவேன். (கங)

நான் கொன்றுவிட்டேன் வெல்லுதற்கரிய இப்பகைவனை, தேவதத்தனென்னும் பெயருடைய இவனை யென்க. இனி மற்றையோர்களையும் கொன்றுவிடுவேன். எளியவரான இவர்கள் என்ன செய்யக்கூடும் ? எவ்வாற்றாலும் எனக்கு ஒப்பானவன் இல்லை.—எப்படி ?—நான் ஆளுபவன். நான் அநுபவிப்பவன். நான் எவ்விதத்தாலும் (எல்லாம்) அமையப்பெற்றவன் : மக்களையும், பேரன் பேத்திகளையும் உடையவன். நான் கேவலம்[ஸாதாரணமான]மநுஷ்யனல்லேன். நானொருவன்தான் வலிமையுள்ளவன், இன்பமுடையவன். (கச)

செல்வமுடையவன் - பணத்தால் செல்வமுள்ளவன். உயர்குலமுடையவன் - ஏழுதலைமுறையாக சுரோத்திரியர்கள் [வேதங்களைக் கற்றறிந்தவர்கள்] என்பதையும் மற்றுமிதுபோன்றவற்றையும் உடையவன். அதனாலும் எனக்கு ஒப்பானவன் ஒருவனும் இல்லை. மேலும், நான் யாகத்தாலும் பிறர்களைக் கீழ்ப்படுத்துவேன் : கூத்தாடி முதலியவர்கட்குக் கொடுப்பேன் : மிக்க மகிழ்ச்சியுறுவேன். (அவர்கள்) இவ்வாறு பலவிதமான அவிவேகத்தன்மையை அடைந்தவர்கள். (கரு)

௧௬. 𑌅𑌨𑍇𑌕𑌚𑌿𑌤𑍍𑌤𑌵𑌿𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌾𑌃 𑌮𑍋𑌹𑌜𑌾𑌲𑌸𑌮𑌾𑌵𑍃𑌤𑌾𑌃 ।
𑌪𑍍𑌰𑌸𑌕𑍍𑌤𑌾𑌃 𑌕𑌾𑌮𑌭𑍋𑌗𑍇𑌷𑍁 𑌪𑌤𑌨𑍍𑌤𑌿 𑌨𑌰𑌕𑍇𑌽𑌶𑍁𑌚𑍌 ॥

𑌅𑌨𑍇𑌕𑌚𑌿𑌤𑍍𑌤𑌵𑌿𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌾𑌃 𑌉𑌕𑍍𑌤𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍈𑌃 𑌅𑌨𑍇𑌕𑍈𑌃 𑌚𑌿𑌤𑍍𑌤𑍈𑌃 𑌵𑌿𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌾𑌃 𑌅𑌨𑍇𑌕𑌚𑌿𑌤𑍍𑌤𑌵𑌿𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌾𑌃, 𑌮𑍋𑌹𑌜𑌾𑌲𑌸𑌮𑌾𑌵𑍃𑌤𑌾𑌃 𑌮𑍋𑌹𑌃 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌃 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌂, 𑌤𑌦𑍇𑌵 𑌜𑌾𑌲𑌮𑌿𑌵 𑌆𑌵𑌰𑌣𑌾𑌤𑍍𑌮𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌤𑍇𑌨 𑌸𑌮𑌾𑌵𑍃𑌤𑌾𑌃 । 𑌪𑍍𑌰𑌸𑌕𑍍𑌤𑌾𑌃 𑌕𑌾𑌮𑌭𑍋𑌗𑍇𑌷𑍁 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍇𑌵 𑌨𑌿𑌷𑌣𑍍𑌣𑌾𑌃 𑌸𑌨𑍍𑌤𑌃 𑌤𑍇𑌨 𑌉𑌪𑌚𑌿𑌤𑌕𑌲𑍍𑌮𑌷𑌾𑌃 𑌪𑌤𑌨𑍍𑌤𑌿 𑌨𑌰𑌕𑍇 𑌅𑌶𑍁𑌚𑍌 𑌵𑍈𑌤𑌰𑌣𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑍇 ॥ ௧௬ ॥

௧௭. 𑌆𑌤𑍍𑌮𑌸𑌂𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌃 𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑌾𑌃 𑌧𑌨𑌮𑌾𑌨𑌮𑌦𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 ।
𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 𑌨𑌾𑌮𑌯𑌜𑍍𑌞𑍈𑌸𑍍𑌤𑍇 𑌦𑌮𑍍𑌭𑍇𑌨𑌾𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍 ॥

𑌆𑌤𑍍𑌮𑌸𑌂𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑌗𑍁𑌣𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌤𑌯𑌾 𑌆𑌤𑍍𑌮𑌨𑍈𑌵 𑌸𑌂𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌃 𑌆𑌤𑍍𑌮𑌸𑌂𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌃, 𑌨 𑌸𑌾𑌧𑍁𑌭𑌿𑌃 । 𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑌾𑌃 𑌅𑌪𑍍𑌰𑌣𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 । 𑌧𑌨𑌮𑌾𑌨𑌮𑌦𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 𑌧𑌨𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌃 𑌮𑌾𑌨𑌃 𑌮𑌦𑌶𑍍𑌚, 𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌧𑌨𑌮𑌾𑌨𑌮𑌦𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌅𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 । 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 𑌨𑌾𑌮𑌯𑌜𑍍𑌞𑍈𑌃 𑌨𑌾𑌮𑌮𑌾𑌤𑍍𑌰𑍈𑌃 𑌯𑌜𑍍𑌞𑍈𑌃 𑌤𑍇 𑌦𑌮𑍍𑌭𑍇𑌨 𑌯𑌷𑍍𑌟𑍃𑌪𑍍𑌰𑌥𑌯𑌾 𑌅𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌂 𑌅𑌵𑌿𑌧𑌿𑌵𑌿𑌹𑌿𑌤𑌾𑌙𑍍𑌗𑍇𑌤𑌿𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑌾𑌰𑌹𑌿𑌤𑌮𑍍 ॥ ௧௭ ॥

௧௮. 𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌂 𑌬𑌲𑌂 𑌦𑌰𑍍𑌪𑌂 𑌕𑌾𑌮𑌂 𑌕𑍍𑌰𑍋𑌧𑌂 𑌚 𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ।

---

௧௬. பலஎண்ணங்களால் பலவாறு மயங்கியவராய், மயக்கமென்னும்வலையினல் மூடப்பெற்றவராய் [அதனுள் சிக்கிக்கொண்டவராய்], காமநுகர்ச்சிகளுள் அழுந்தியுள்ள (அவர்கள்) அருவருப்பான நரகத்தினுள் வீழ்கிருர்கள்.

பலஎண்ணங்களால் - (கீழ்க்) கூறியபடியுள்ள அனேக எண்ணங்களால். மயக்கமென்பது - விவேகமின்மை, அறிவின்மை. (மோக்ஷத்தினுடைய வழி)யடைப்பு வடிவமாயுள்ளதனல், அதுவே [மயக்கமே] வலைபோலும். (அவர்கள்) விஷய அநுபவங்களில் பற்றுக்கொண்டவராய், அவற்றுள்ளேயே சாய்ந்துகிடப்பவராய், அதனல் பாவமேறப் பெற்றவராய் வைதரணீமுதலிய அருவருப்பான நரகத்தினுள் வீழ்கிருர்கள். (௧௬)

அஸுரத்தன்மையருடைய யாகங்கள்.

௧௭. தம்மாலேயே மதிக்கப்பெற்றவராய், இறுமாந்தவராய், பணத்தினுலான கர்வத்தோடும் செருக்கோடும் கூடிய அவர்கள் பெயர்மாத்திரமான யஜ்ஞங்களை விதிப்படியில்லாது செய்கிருர்கள்.

தம்மாலேயே மதிக்கப்பெற்றவர் - எல்லாநற்குணமும் பொருந்தியவராகத் (தம்மை)த் தாமே மதித்துக்கொண்டவர்; (ஆனல், அவ்வாறு) நல்லோர்களால் மதிக்கப்பெருதவர். இறுமாந்தவர் - வணங்காஇயல்பினர். விதிப்படியில்லாது - விதிகளால் விதிக்கப்பட்ட அங்கங்களும், செய்யவேண்டிய முறைகளும் இல்லாதது. (பணத்தினுலான கர்வம் - பணத்திமிரினல், தன்னை உயர்ந்தோனுகக்கொள்ளுதல். பணத்தினுலான செருக்கு - பணத்திமிரினல், பெரியோரையும் தாழ்ந்தோராகக்கொள்ளுதல். அவர்கள் பெயருக்காக, ஸோமயாஜியென்னும்பெயர் முதலியவற்றைப் பெறுதற்காக உண்மையல்லாத நற்செய்கைகளைச் சிரத்தையில்லாது கள்ளஎண்ணத்தோடு செய்கிருர்கள் என்பது கருத்து.) (௧௭)

பகவானுடைய கட்டளைகளை ஆஸுரத்தன்மையர் அசட்டைசெய்தல்.

௧௮. (இவர்கள்) அகந்தையையும், வலிமையையும், மேட்டிமையையும்,

𑌮𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌪𑌰𑌦𑍇𑌹𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑌦𑍍𑌵𑌿𑌷𑌨𑍍𑌤𑍋𑌽𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌕𑌾𑌃 ॥

𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌮𑍍 𑌅𑌹𑌂𑌕𑌰𑌣𑌮𑍍 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌃—𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑍈𑌃 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑍈𑌶𑍍𑌚 𑌗𑍁𑌣𑍈𑌃 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌅𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑌿𑌤𑍈𑌃 "𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌹𑌮𑍍" 𑌇𑌤𑌿 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇—𑌸𑌃 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌃 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌃 𑌕𑌷𑍍𑌟𑌤𑌮𑌃, 𑌸𑌰𑍍𑌵𑌦𑍋𑌷𑌾𑌣𑌾𑌂 𑌮𑍂𑌲𑌂 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑌰𑍍𑌥𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍀𑌨𑌾𑌂 𑌚, 𑌤𑌮𑍍 । 𑌤𑌥𑌾 𑌬𑌲𑌂 𑌪𑌰𑌾𑌭𑌿𑌭𑌵𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌂 𑌕𑌾𑌮𑌰𑌾𑌗𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌮𑍍 । 𑌦𑌰𑍍𑌪𑌮𑍍—𑌦𑌰𑍍𑌪𑍋 𑌨𑌾𑌮 𑌯𑌸𑍍𑌯 𑌉𑌦𑍍𑌭𑌵𑍇 𑌧𑌰𑍍𑌮𑌮𑍍 𑌅𑌤𑌿𑌕𑍍𑌰𑌾𑌮𑌤𑌿 𑌸𑌃 𑌅𑌯𑌮𑍍 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 𑌦𑍋𑌷𑌵𑌿𑌶𑍇𑌷𑌃 । 𑌕𑌾𑌮𑌂 𑌸𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌦𑌿𑌵𑌿𑌷𑌯𑌮𑍍 । 𑌕𑍍𑌰𑍋𑌧𑌮𑍍 𑌅𑌨𑌿𑌷𑍍𑌟𑌵𑌿𑌷𑌯𑌮𑍍 । 𑌏𑌤𑌾𑌨𑍍 𑌅𑌨𑍍𑌯𑌾𑌂𑌶𑍍𑌚 𑌮𑌹𑌤𑍋 𑌦𑍋𑌷𑌾𑌨𑍍 𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 । 𑌕𑌿𑌂 𑌚—𑌤𑍇 𑌮𑌾𑌮𑍍 𑌈𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌪𑌰𑌦𑍇𑌹𑍇𑌷𑍁 𑌸𑍍𑌵𑌦𑍇𑌹𑍇 𑌪𑌰𑌦𑍇𑌹𑍇𑌷𑍁 𑌚 𑌤𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌕𑌰𑍍𑌮𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌭𑍂𑌤𑌂 𑌮𑌾𑌂 𑌪𑍍𑌰𑌦𑍍𑌵𑌿𑌷𑌨𑍍𑌤𑌃, 𑌮𑌚𑍍𑌛𑌾𑌸𑌨𑌾𑌤𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌦𑍍𑌵𑍇𑌷𑌃, 𑌤𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌃 𑌅𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌕𑌾𑌃 𑌸𑌨𑍍𑌮𑌾𑌰𑍍𑌗𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌂 𑌗𑍁𑌣𑍇𑌷𑍁 𑌅𑌸𑌹𑌮𑌾𑌨𑌾𑌃 ॥ ௧௮ ॥

௧௯. 𑌤𑌾𑌨𑌹𑌂 𑌦𑍍𑌵𑌿𑌷𑌤𑌃 𑌕𑍍𑌰𑍂𑌰𑌾𑌨𑍍𑌸𑌂𑌸𑌾𑌰𑍇𑌷𑍁 𑌨𑌰𑌾𑌧𑌮𑌾𑌨𑍍 ।
𑌕𑍍𑌷𑌿𑌪𑌾𑌮𑍍𑌯𑌜𑌸𑍍𑌰𑌮𑌶𑍁𑌭𑌾𑌨𑌾𑌸𑍁𑌰𑍀𑌷𑍍𑌵𑍇𑌵 𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 ॥

𑌤𑌾𑌨𑌹𑌂 𑌸𑌨𑍍𑌮𑌾𑌰𑍍𑌗𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌕𑍍𑌷𑌭𑍂𑌤𑌾𑌨𑍍 𑌸𑌾𑌧𑍁𑌦𑍍𑌵𑍇𑌷𑌿𑌣𑌃 𑌦𑍍𑌵𑌿𑌷𑌤𑌃 𑌚 𑌕𑍍𑌰𑍂𑌰𑌾𑌨𑍍 𑌸𑌂𑌸𑌾𑌰𑍇𑌷𑍁 𑌏𑌵 𑌅𑌨𑍇𑌕𑌨𑌰𑌕𑌸𑌂𑌸𑌰𑌣𑌮𑌾𑌰𑍍𑌗𑍇𑌷𑍁 𑌨𑌰𑌾-

---

காமத்தையும், கோபத்தையும் உடையவர் : தமது சரீரங்களிலும் பிறரது சரீரங்களிலுமுள்ள என்னைப் பகைக்கிறவர் : இடக்குப்பேசுகிறவர்.

அகந்தை - அஹங்கரித்தல், அஹங்காரம். "நான் உயர்ந்த ஆத்மா" என- உள்ள குணங்களாலும், தன்னிடத்து ஏற்றிக்கொள்ளப்பட்ட இல்லாத குணங்களாலும் (தன்னை) மதித்துக்கொள்வது (எதுவோ), அது - அஹங்காரமென்பது : அவித்யையெனப்படுவது : (நீக்குதற்கு) மிகக்கஷ்டமானது : எல்லாக்குற்றங்கட்கும், எல்லாத்தீங்குச்செய்கைகட்கும் அடிக்காரணமானது. அவ்வாறே, வலிமையென்பது - பிறரைக் கீழ்ப்படுத்தக் காரணமாய்க் காமத்தோடும் காதலோடும் கூடிநிற்பது. மேட்டிமை யென்பது - எது உண்டானவழி (ஒருவன்) அறத்தை மீறுகின்றானோ, அது. இது, அகக்கரணத்தில் தங்கியுள்ள ஓர்வகைக்குற்றம். காமம் - பெண்டிரைப்பற்றியது. கோபம் - வேண்டாதவற்றைப்பற்றியது. (அவர்கள்) இப்பெரிய குற்றங்களையும், இன்னும்வேறு பெரிய குற்றங்களையும் உடையவர். மேலும், அவர்கள் தமது சரீரங்களிலும், பிறரதுசரீரங்களிலும் அவர்களது நினைப்பிற்கும் செய்கைகட்கும் ஸாக்ஷியாயுள்ள ஈச்வரனாகிய என்னைப் பகைக்கிறவர்கள். பகைத்தல் - எனது கட்டளையை மீறிநடத்தல். (கட்டளையென்பது - சுருதியும், ஸ்மிருதியுமாம். மீறிநடத்தல் - அவற்றின்பொருளை அறியவும், அநுஷ்டிக்கவும் மனமில்லாதிருத்தல்.—ஆ.) இடக்குப்பேசுகிறவர் - நல்வழிநிற்பவருடைய நற்குணங்களைப் பொறாதவர். (௧௮)

ஆஸுரத்தன்மையர் சீரழிந்து வீழ்தல்.

௧௯. பகைப்பவரும், கொடியவரும், தீயவருமாயுள்ள அக் கடைப்பட்ட மனிதர்களை யான் உலகங்களிலே அஸுரருடைய யோநிகளிலேயே எப்பொழுதும் தள்ளுகின்றேன்.

பகைப்பவர் - நல்வழிக்கு எதிரிகளாய் நல்லோரைப் பகைப்பவர். உலகங்களிலே - பலநரகங்களில் உழன்றுதிரியும் ஸம்ஸாரவழிகளிலேயே. தீவினையென்னும்

தமாந் அதர்மதோஷவத்த்வாத் க்ஷிபாமி ப்ரக்ஷிபாமி அஜஸ்ரம் ஸந்ததம் அஶுபாந் அஶுபகர்மகாரிண: ஆஸுரீஷ்வேவ க்ரூரப்ராயாஸு வ்யாக்ரஸிம்ஹாதி-யோநிஷு — 'க்ஷிபாமி' இத்யநேந ஸம்பந்த: ॥ ௧௯ ॥

௨௦. ஆஸுரீம் யோநிமாபந்நா மூடா ஜந்மநி ஜந்மநி ।
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம் ॥

ஆஸுரீம் யோநிம் ஆபந்நா: ப்ராப்தா: மூடா: அவிவேகிந: ஜந்மநி ஜந்மநி ப்ரதிஜந்ம தமோபஹுலாஸ்வேவ யோநிஷு ஜாயமாநா: அதோ கச்சந்தி மூடா: மாம் ஸர்வேஶ்வரம் அப்ராப்ய அநாஸாத்ய ஏவ, ஹே கௌந்தேய தத: தஸ்மாதபி யாந்தி அதமாம் கதிம் நிக்ருஷ்டதமாம் கதிம் । 'மாம் அப்ராப்ய' இதி — ந மத்ப்ராப்தௌ காசிதபி ஶங்கா அஸ்தி, அத: — மதுபதிஷ்டஸாதுமார்கம் அப்ராப்ய இத்யர்த: ॥ ௨௦ ॥

ஸர்வஸ்யா: ஆஸுர்யா: ஸம்பத: ஸங்க்ஷேப: அயம் உச்யதே, யஸ்மிந் த்ரிவிதே ஸர்வ: ஆஸுரீஸம்பத்பேத: அநந்தோऽபி அந்தர்பவதி । யத்பரிஹாரேண பரிஹ்ருதஶ்ச பவதி, யச்ச மூலம் ஸர்வஸ்ய அநர்தஸ்ய, தச்சேதம் உச்யதே—

௨௧. த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாஶநமாத்மந: ।

---

குற்றமுடையவராதலால், கடைப்பட்ட மனிதரென்க. தீயவர் - தீயதொழில்களைச் செய்பவர். யோநிகளிலே - கொடுமைமயமான புலி, சிங்கம் முதலான பிறவிகளிலே. யோநிஷு என்பது - க்ஷிபாமி என்பதனோடு இயையும். (௧௯)

௨௦. ஆஸுரயோநியை அடைந்தவர்கள் பிறவிதோறும் மயங்கியவராய் என்னை அடையாமலேயே கௌந்தேய! அதனினின்றும் கீழ்மையான நிலையை அடைகிறார்கள்.

ஆஸுரயோநியை அடைந்தவர்கள் ஒவ்வொரு ஜன்மத்திலும் விவேகமற்றவராய், தமோகுணம்மிகுந்த பிறவிகளிலேயேபிறந்து கீழேசெல்லுகிறார்கள்; ஈச்வரனாகிய என்னை அடையாமலே, மிகவும் இழிந்த நிலைமையைப் பெறுகிறார்கள். என்னை அடையாமலே - என்னை அடையும் விஷயத்திலே யாதொரு சங்கையும் இல்லையாதலால், "நான் உபதேசித்த நல்வழியைச் செல்லாமலே" என்றபடி. (ஆஸுரத்தன்மை எல்லாநன்மைகட்கும் விரோதியாதலால், ஒருவன் சுதந்திரனாயிருக்கும்பொழுதேயே, ஒன்றற்குப் பரவசப்படுமாறுசெய்கின்ற பிறவியைப் பெறாதுள்ளவளவிலேயே, அவ்வாஸுரத்தன்மையை நீக்கவேண்டும்.—ஆ. அல்லாக்கால், விலங்குமுதலியவற்றின் உடம்புகளைப் பெற்றவழி முக்தி ஸாதநங்களை அநுஷ்டிக்கத் தகுதி இல்லையாதலால், ஆஸுரத்தன்மையினின்றும் நீங்குதல் ஒருகாலும் இயலாதென்க.—ம.) (௨௦)

நரகத்தினுடைய மூன்று வாசல்களையும் மிதிக்கக்கூடாது.

எல்லா ஆஸுரத்தன்மையின் சுருக்கமான இதனைக் கூறுகிறார்: ஆஸுரத்தன்மையின்பேதமெல்லாம் அளவிறந்தனவாயினும், மூவகைத்தான அதனுள் அடங்கி நிற்கின்றன. மேலும், எதனை நீக்குவதனால் (ஆஸுரத்தன்மை) நீக்கப்பட்டதாகின்றதோ, எது எல்லாத்தீங்குகட்கும் அடிக்காரணமோ, அந்த இதனை அருளிச்செய்கிறார்:

௨௧. நரகத்தினுடைய இவ்வாசல், ஆத்மாவைக் கெடுப்பதாய் காமம் கோபம்

𑌕𑌾𑌮𑌃 𑌕𑍍𑌰𑍋𑌧𑌸𑍍𑌤𑌥𑌾 𑌲𑍋𑌭𑌃 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍇𑌤𑌤𑍍𑌤𑍍𑌰𑌯𑌂 𑌤𑍍𑌯𑌜𑍇𑌤𑍍 ॥

𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 𑌤𑍍𑌰𑌿𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌂 𑌨𑌰𑌕𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍌 𑌇𑌦𑌂 𑌦𑍍𑌵𑌾𑌰𑌂 𑌨𑌾𑌶𑌨𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃, 𑌯𑌤𑍍 𑌦𑍍𑌵𑌾𑌰𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌨𑍍𑌨𑍇𑌵 𑌨𑌶𑍍𑌯𑌤𑌿 𑌆𑌤𑍍𑌮𑌾 ; 𑌕𑌸𑍍𑌮𑍈𑌚𑌿𑌤𑍍 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌯𑍋𑌗𑍍𑌯𑍋 𑌨 𑌭𑌵𑌤𑌿 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 '𑌦𑍍𑌵𑌾𑌰𑌂 𑌨𑌾𑌶𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃' 𑌇𑌤𑌿 । 𑌕𑌿𑌂 𑌤𑌤𑍍 ?— 𑌕𑌾𑌮𑌃 𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 𑌤𑌥𑌾 𑌲𑍋𑌭𑌃 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌏𑌤𑌤𑍍 𑌤𑍍𑌰𑌯𑌂 𑌤𑍍𑌯𑌜𑍇𑌤𑍍 । 𑌯𑌤𑌃 𑌏𑌤𑌤𑍍 𑌦𑍍𑌵𑌾𑌰𑌂 𑌨𑌾𑌶𑌨𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃, 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌕𑌾𑌮𑌾𑌦𑌿𑌤𑍍𑌰𑌯𑌂 𑌤𑍍𑌯𑌜𑍇𑌤𑍍 ॥ ௨௧ ॥

𑌤𑍍𑌯𑌾𑌗𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌰𑌿𑌯𑌮𑍍—

௨௨. 𑌏𑌤𑍈𑌰𑍍𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌤𑌮𑍋𑌦𑍍𑌵𑌾𑌰𑍈𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑌿𑌰𑍍𑌨𑌰𑌃 ।
𑌆𑌚𑌰𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 𑌤𑌤𑍋 𑌯𑌾𑌤𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 ॥

𑌏𑌤𑍈𑌃 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌤𑌮𑍋𑌦𑍍𑌵𑌾𑌰𑍈𑌃 𑌤𑌮𑌸𑌃 𑌨𑌰𑌕𑌸𑍍𑌯 𑌦𑍁𑌃𑌖𑌮𑍋𑌹𑌾𑌤𑍍𑌮𑌕𑌸𑍍𑌯 𑌦𑍍𑌵𑌾𑌰𑌾𑌣𑌿 𑌕𑌾𑌮𑌾𑌦𑌯𑌃 𑌤𑍈𑌃 𑌏𑌤𑍈𑌃 𑌤𑍍𑌰𑌿𑌭𑌿𑌃 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌨𑌰𑌃 𑌆𑌚𑌰𑌤𑌿 𑌅𑌨𑍁𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿—𑌕𑌿𑌮𑍍 ?— 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 । 𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌦𑍍𑌧𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌨 𑌆𑌚𑌚𑌾𑌰, 𑌤𑌦𑌪𑌗𑌮𑌾𑌤𑍍 𑌆𑌚𑌰𑌤𑌿 । 𑌤𑌤𑌃 𑌤𑌦𑌾𑌚𑌰𑌣𑌾𑌤𑍍 𑌯𑌾𑌤𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌂, 𑌮𑍋𑌕𑍍𑌷𑌮𑌪𑌿 𑌇𑌤𑌿 ॥ ௨௨ ॥

𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌏𑌤𑌸𑍍𑌯 𑌆𑌸𑍁𑌰𑍀𑌸𑌮𑍍𑌪𑌤𑍍𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌜𑌨𑌸𑍍𑌯 𑌶𑍍𑌰𑍇𑌯𑌆𑌚𑌰𑌣𑌸𑍍𑌯 𑌚 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 । 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌾𑌤𑍍 𑌉𑌭𑌯𑌂 𑌶𑌕𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑍍, 𑌨 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 । 𑌅𑌤𑌃—

---

உலோபம் என்னும் மூவகைத்தானது. ஆதலால், இம்மூன்றனையும் விட்டொழிய வேண்டும்.

நரகத்தினுடைய வாசல் - நரகத்தை அடைதற்கு வாசல். அவ்வாசலைப் புகுந்தே ஆத்மா கேடுறுகிறான்; ஒருபுருஷார்த்தத்திற்கும் [ஒருநன்மையையாயினும் பெறுதற்கு] தக்கவனாகிறானில்லை ஆதலால், "வாசல் ஆத்மாவைக் கெடுப்பது" எனக் கூறப்படுகின்றது.—அது யாது? —காமமும், கோபமும், உலோபமும் என்க. ஆகவே, இம்மூன்றனையும் நீக்கவேண்டும். இவ்வாசல் ஆத்மாவைக் கெடுப்பதாதலால், காமம் முதலிய மூன்றனையும் விட்டிடவேண்டும். (௨௧)

இது (அவற்றைத்) துறந்திடுதலின் புகழ்ச்சி :

௨௨. கௌந்தேய! நரகத்தினுடைய இம்மூன்றுவாசல்களாலும் விடப்பெற்ற மனிதன் தனக்கு நன்மையைச் செய்துகொள்கிறான்; அதனால், உயர்ந்த நிலையை அடைகிறான்.

நரகத்தினுடைய - துன்பமயக்கவடிவமான நரகத்தினுடைய. வாசல்கள் - காமம் முதலியன. (இவற்றின்நீங்கியவன்) எதனை அநுஷ்டிக்கிறான்? —தனக்கு நலத்தை. எதனால் தடுக்கப்பெற்று முன் (தனக்கு நலத்தைச்) செய்துகொள்ளாதிருந்தானோ, அது தொலைந்துவிட்டமையால் (அந்நலத்தைச்) செய்துகொள்கிறான். அதனைச் செய்துகொள்வதனால் மோக்ஷத்தையும் பெறுகிறானென்க. (உம்மையினால் - இம்மைஇன்பத்தையும் பெறுகிறான் என்றபடி.—ஆ.) (௨௨)

சாஸ்திரம் வாழ்க்கைக்கு வழிகாட்டி.

அஸுரத்தன்மையை நீக்கிக்கொள்ளலும், நன்மையை நாடிக்கொள்ளலுமாகிய இவையனைத்திற்கும் சாஸ்திரம் காரணம். சாஸ்திரப்பிரமாணத்தினால் இரண்டனையும் செய்யக்கூடும்; வேறுவிதமாயன்று. ஆகவே,

௨௩. 𑌯𑌶𑍍𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌿𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑌤𑌃 ।
𑌨 𑌸 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨 𑌸𑍁𑌖𑌂 𑌨 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 ॥

𑌯𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌿𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌵𑍇𑌦𑌃, 𑌤𑌸𑍍𑌯 𑌵𑌿𑌧𑌿𑌂 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌾𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌪𑌨𑌕𑌾𑌰𑌣𑌂 𑌵𑌿𑌧𑌿𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑌾𑌖𑍍𑌯𑌮𑍍 𑌉𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑌤𑌃 𑌕𑌾𑌮𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸𑌨𑍍, 𑌨 𑌸𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑍍𑌥𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑌾𑌮𑍍 𑌅𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿, 𑌨 𑌅𑌪𑌿 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌲𑍋𑌕𑍇 𑌸𑍁𑌖𑌮𑍍, 𑌨 𑌅𑌪𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌷𑍍𑌟𑌾𑌂 𑌗𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑌂 𑌵𑌾 ॥ ௨௩ ॥

௨௪. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌛𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌂 𑌤𑍇 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍌 ।
𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌾𑌨𑍋𑌕𑍍𑌤𑌮𑍍 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑌿𑌹𑌾𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑍇 𑌶𑌤𑌸𑌾𑌹𑌸𑍍𑌰𑍍𑌯𑌾𑌂 𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌯𑌾𑌂 𑌵𑍈𑌯𑌾𑌸𑌿𑌕𑍍𑌯𑌾𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌪𑌰𑍍𑌵𑌣𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍁 𑌉𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇 𑌦𑍈𑌵𑌾𑌸𑍁𑌰𑌸𑌂𑌪𑌦𑍍𑌵𑌿𑌭𑌾𑌗𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌮 𑌷𑍋𑌡𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌾𑌧𑌨𑌂 𑌤𑍇 𑌤𑌵 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍌 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌾𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾𑌯𑌾𑌮𑍍 । 𑌅𑌤𑌃 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌾𑌨𑍋𑌕𑍍𑌤𑌂 𑌵𑌿𑌧𑌿𑌃 𑌵𑌿𑌧𑌾𑌨𑌂, 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑍇𑌵 𑌵𑌿𑌧𑌾𑌨𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌾𑌨𑌂, “𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌨 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍” 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂𑌲𑌕𑍍𑌷𑌣𑌂, 𑌤𑍇𑌨 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮 𑌯𑌤𑍍 𑌤𑌤𑍍 𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑍍 𑌇𑌹 𑌅𑌰𑍍𑌹𑌸𑌿—‘𑌇𑌹’ 𑌇𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌭𑍂𑌮𑌿𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌰𑍍𑌥𑌮𑍍 𑌇𑌤𑌿 ॥ ௨௪ ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌭𑌾𑌷𑍍𑌯𑍇 𑌷𑍋𑌡𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

---

௨௩. எவன் சாஸ்திரஒழுங்கை விட்டிட்டு, காமத்தைச் செய்து [இஷ்டப்படி] நடக்கின்றானோ, அவன் ஸித்தியைப் பெறுவதில்லை, இன்பத்தை(ப் பெறுவது) இல்லை, மேலான கதியை(ப் பெறுவது) இல்லை.

சாஸ்திரம் - வேதம்; அதனது ஒழுங்கை - செய்வன தவிர்வனவற்றை அறிவிப்பதாய் விதிவிலக்குக்களென்னும் பெயருடைய (வேதக்கட்டளையை). காமத்தைச் செய்து - காமத்தால் தூண்டப்பட்டவனாகி. ஸித்தியை - புருஷார்த்தத்தைப் பெறத் தகுதியின்மையை. இன்பத்தை—இவ்வுலகத்திலே இன்பத்தை. மேலான கதியை - ஸ்வர்க்கத்தை, அல்லது மோக்ஷத்தை. (௨௩)

௨௪. ஆகவே, செய்வன தவிர்வனவற்றை அமைப்பதிலே [நிர்ணயிப்பதிலே] உனக்கு சாஸ்திரம் பிரமாணம். இனி, சாஸ்திரவிதியினால் கூறப்பட்ட கர்மத்தை அறிந்து செய்யக்கடவாய்.

ஸ்ரீமஹாபாரதத்திலே, வ்யாஸ ரருளிச்செய்த நூறாயிரக்கிரந்த ஸம்ஹிதையிலே, பீஷ்மபர்வத்திலே, ஸ்ரீமத்பகவத்கீதைகளாக, உபநிஷத்துக்களாக, ப்ரஹ்மவித்யையாக, யோக சாஸ்திரமாக இருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணார்ஜுந ஸம்வாதத்திலே தைவாஸுரஸம்பத்விபாகயோகம் என்னும் பதினாறாம் அத்தியாயம் முற்றும்.

பிரமாணம் - அறிவிற்குக் கருவி. சாஸ்திரமேதான் - விதி, "செய்யவேண்டும், செய்யக்கூடாது" என இத்தகையகட்டளை. அதனால் உபதேசிக்கப்பட்ட (யுத்தம் முதலிய) ஸ்வகர்மம் எதுவோ, அதனை நீ, ஆதலால் [சாஸ்திரம் பிரமாணமாதலால்] செய்யவேண்டும். "இனி" என்பது - (அர்ஜுனனுடைய) கர்மத்திற்குரிய நிலைமையைக் காட்டுவதற்காக என்க. (௨௪)

ஸ்ரீமத் பகவத்கீதாபாஷ்யத்தில் பதினாறாவது அத்தியாயம் முற்றிற்று.

𑌅𑌥

𑌸𑌪𑍍𑌤𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌰𑌯𑌵𑌿𑌭𑌾𑌗𑌯𑍋𑌗𑌃 ॥

'𑌤𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌛𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌂 𑌤𑍇' 𑌇𑌤𑌿 𑌭𑌗𑌵𑌦𑍍𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌤𑍍 𑌲𑌬𑍍𑌧𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌬𑍀𑌜𑌃 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚—

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 ॥

௧. 𑌯𑍇 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌿𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 ।
𑌤𑍇𑌷𑌾𑌂 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌤𑍁 𑌕𑌾 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌾𑌹𑍋 𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑌃 ।

𑌯𑍇 𑌕𑍇𑌚𑌨 𑌅𑌵𑌿𑌶𑍇𑌷𑌿𑌤𑌾𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌿𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌾𑌨𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌚𑍋𑌦𑌨𑌾𑌮𑍍 𑌉𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 𑌦𑍇𑌵𑌾𑌦𑍀𑌨𑍍 𑌪𑍂𑌜𑌯𑌨𑍍𑌤𑌿 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌆𑌸𑍍𑌤𑌿𑌕𑍍𑌯𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌅𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌸𑌨𑍍𑌤𑌃— 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌵𑌾 𑌕𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌿𑌮𑍍 𑌅𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌃 𑌵𑍃𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌦𑍇𑌵 𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌤𑌯𑌾 𑌯𑍇 𑌦𑍇𑌵𑌾𑌦𑍀𑌨𑍍 𑌪𑍂𑌜𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 𑌇𑌹 '𑌯𑍇 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌿𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃' 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌗𑍃𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌯𑍇 𑌪𑍁𑌨𑌃 𑌕𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌿𑌮𑍍 𑌉𑌪𑌲𑌭𑌮𑌾𑌨𑌾 𑌅𑌪𑌿 𑌤𑌮𑍍 𑌉𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌅𑌯𑌥𑌾𑌵𑌿𑌧𑌿 𑌦𑍇𑌵𑌾𑌦𑍀𑌨𑍍 𑌪𑍂𑌜𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 𑌇𑌹 '𑌯𑍇 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌿𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇" 𑌇𑌤𑌿 𑌨 𑌪𑌰𑌿𑌗𑍃𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍?—𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌅𑌨𑍍𑌵𑌿𑌤𑌤𑍍𑌵-

---

## பதினேழாம் அத்தியாயம் : ச்ரத்தாத்ரய விபாகயோகம்.

**அறியாதவராயினும், நம்பிக்கையுடையவர்.**

"ஆதலால், உனக்கு சாஸ்திரம் பிரமாணம்" (௧௬ - ௨௪) என்னும் பகவானுடைய திருவாக்கினால் வினவிற்கு இடம்பெற்ற அர்ஜுனன் கூறலாயினன் : (சாஸ்திரத்தை அறிந்து அதனை நம்புகின்ற ஆஸ்திகரது கதி இன்னதென்றும், அவ்வாறே அறிந்து அதனை நம்பாத நாஸ்திகரது கதி இன்னதென்றும் கூறப்பட்டன. இனி, சாஸ்திரத்தை அறியாத ஆஸ்திகரது கதி இன்னது என்பதை அறிய அர்ஜுனன் வினவலாயினன்.—ஆ.)

அர்ஜுனன் சொல்லலுற்றான் :

௧. எவர்கள் சாஸ்திரவிதியை விட்டு நம்பிக்கையோடு கூடினவராய்த் தொழுகிறார்களோ, கிருஷ்ணா ! அவர்களது நிலைமை என்ன? ஸத்துவமா ? அல்லது ரஜஸா? தமஸா ?

எவர்கள்-இன்னாரென்று குறிக்கப்படாத சிலர்கள். எவர்கள் சுருதி ஸ்மிருதி என்னும் சாஸ்திரக்கட்டளையை விட்டிட்டு நம்பிக்கையோடு, ஆஸ்திக்யபுத்தியோடு, மறுமையுண்டென்னும் எண்ணத்தோடு கூடியவராய்த் தேவர்முதலானோரைப் பூஜிக்கிறார்களோ ; எவர்கள் சுருதியாகவாயினும் ஸ்மிருதியாகவாயினுமுள்ள சாஸ்திரவிதி ஒன்றும் அறியாதவராய், பெரியோரது ஒழுக்கங்களைப் பார்ப்பதனாலேயே நம்பிக்கையோடு கூடி தேவர்முதலானோரைப் பூஜிக்கிறார்களோ ; அவர்கள் இங்கே "எவர்கள் சாஸ்திரவிதியை விட்டு நம்பிக்கையோடு கூடினவராய்த் தொழுகிறார்களோ" என இவ்வாறு கொள்ளப்படுகிறார்கள். மற்று, எவர்கள் சாஸ்திரவிதிஒன்றை அறிந்துகொண்டே அதனை விட்டிட்டு விதிப்படியில்லாது தேவர்முதலானோர்களைத் தொழுகிறார்களோ, அவர்கள் இங்கு "எவர்கள் சாஸ்திரவிதியை விட்டுத் தொழுகிறார்களோ" எனக் கொள்ளப்படவில்லை.—எதனால் ?—"நம்பிக்கையோடு கூடினவராய்" என்னும்

𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌾𑌤𑍍 । 𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌪𑍂𑌜𑌾𑌵𑌿𑌧𑌿𑌪𑌰𑌂 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤 𑌏𑌵 𑌤𑌤𑍍 𑌉𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌅𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌤𑌯𑌾 𑌤𑌦𑍍𑌵𑌿𑌹𑌿𑌤𑌾𑌯𑌾𑌂 𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌪𑍂𑌜𑌾𑌯𑌾𑌂 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌅𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤 𑌇𑌤𑌿 𑌨 𑌶𑌕𑍍𑌯𑌂 𑌕𑌲𑍍𑌪𑌯𑌿𑌤𑍁𑌂 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍, 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑌾 𑌏𑌵 "𑌯𑍇 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌿𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃" 𑌇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰 𑌗𑍃𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌤𑍇𑌷𑌾𑌮𑍇𑌵𑌂𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌤𑍁 𑌕𑌾 𑌕𑍃𑌷𑍍𑌣—𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌾𑌹𑍋 𑌰𑌜𑌃 𑌤𑌮𑌃 ; 𑌕𑌿𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌅𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑍍, 𑌆𑌹𑍋𑌸𑍍𑌵𑌿𑌤𑍍 𑌰𑌜𑌃, 𑌅𑌥𑌵𑌾 𑌤𑌮𑌃 ? । 𑌏𑌤𑌤𑍍 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌭𑌵𑌤𑌿—𑌯𑌾 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌵𑌿𑌷𑌯𑌾 𑌪𑍂𑌜𑌾, 𑌸𑌾 𑌕𑌿𑌂 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑍀, 𑌆𑌹𑍋𑌸𑍍𑌵𑌿𑌤𑍍 𑌰𑌾𑌜𑌸𑍀, 𑌉𑌤 𑌤𑌾𑌮𑌸𑍀 𑌇𑌤𑌿 ? ॥ ௧ ॥

𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌵𑌿𑌷𑌯𑌃 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃 𑌨 𑌅𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌜𑍍𑌯 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌚𑌨𑌮𑌰𑍍𑌹𑌤𑍀𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚—

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 ॥

௨. 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌾 𑌭𑌵𑌤𑌿 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾 𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌂 𑌸𑌾 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌜𑌾 ।
𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑍀 𑌰𑌾𑌜𑌸𑍀 𑌚𑍈𑌵 𑌤𑌾𑌮𑌸𑍀 𑌚𑍇𑌤𑌿 𑌤𑌾𑌂 𑌶𑍃𑌣𑍁 ॥

---

விசேஷணத்தினல். (அவர்கள்) தேவர் முதலானேர்களது பூஜாவிதியைப்பற்றிய சாஸ்திரமொன்றைத் தெரிந்துகொண்டே, நம்பிக்கையில்லாததனல் அதனை விட்டிட்டு, அதனுள் விதிக்கப்பட்டதான தேவர்முதலானவரது பூஜையை நம்பிக்கையோடுகூடிச் செய்கிருர்கள் எனக்கொள்வது ஏலாததலால் [சாஸ்திரத்திற்கூறிய விதியை அறிகிறவராயினும், தமது இஷ்டப்படி தேவபூஜை முதலியவற்றைச் செய்கின்றவர் ஆஸுரத்தன்மையரில் அடங்குகிருர்கள் எனச்சென்றஅத்தியாயத்தினுள் அமைந்துள்ளது. ஆகவே, ஆஸ்திகரது அதிகாரத்திலே அவர்களைப்பற்றிப் பேசுதற்கு இடமில்லையாதலால்—ஆ.], முன்கூறப்பட்டவர்கள்தான் [சாஸ்திரத்தை அறியாதவராய்ப் பெரியோரது ஒழுக்கங்களைப் பின்பற்றுகிறவர்கள்தான்] இங்கு ''எவர்கள் சாஸ்திரவிதியை விட்டு நம்பிக்கையோடு கூடினவராய்த் தொழுகிருர்களோ'' எனக் கொள்ளப்படுகிருர்கள். கிருஷ்ணு ! இப்படிப்பட்ட அவர்கட்கு ஸத்துவ குணம் நிலையா? அல்லது ரஜோகுணமா? தமோகுணமா?—இது கூறப்பட்டதாகின்றது :—அவர்கள் தேவர்முதலானேர்களைப்பற்றிப் பூஜித்தல் எதுவோ, அது ஸாத்துவிகமா? அல்லது ராஜஸமா? அல்லது தாமஸமா? என்பது. (௧)

மூவகையான நம்பிக்கை.

பொதுவான விஷயத்தைப்பற்றிய வினவானது பிரிவுபடாது மறுமொழியை ஏற்காது என்று [சிறப்புவாய்பாட்டால் கூறவேண்டிய விடையைப் பொதுவாய்பாட்டால் கூற இயலாது எனக்கொண்டு] ஸ்ரீபகவான் அருளிச்செய்கிருர் :

ஸ்ரீபகவான் சொல்லலுற்ருர் :

௨. உடம்பொடு நிற்பவர்கட்கு இயல்பினல் பிறந்த அந்த நம்பிக்கை ஸாத்துவிகமெனவும், ராஜஸமெனவும், தாமஸமெனவும் மூவகைத்தா யுளது. அதனைக் கேட்பாயாக.

த்ரிவிதா த்ரிப்ரகாரா பவதி ச்ரத்தா—யஸ்யாம் நிஷ்டாயாம் த்வம் ப்ருச்சஸி —தேஹினாம் சரீரிணாம் ஸா ஸ்வபாவஜா—ஜன்மாந்தரக்ருதோ தர்மாதிஸம்ஸ்காரோ மரணகாலே அபிவ்யக்த: "ஸ்வபாவ:" உச்யதே, ததோ ஜாதா ஸ்வபாவஜா। ஸாத்த்விகீ ஸத்த்வநிர்வ்ருத்தா தேவபூஜாதிவிஷயா । ராஜஸீ ரஜோநிர்வ்ருத்தா யக்ஷரக்ஷ:-பூஜாதிவிஷயா । தாமஸீ தமோநிர்வ்ருத்தா ப்ரேதபிசாசபூஜாதிவிஷயா । ஏவம் த்ரிவிதாம் தாம் உச்யமானாம் ச்ரத்தாம் ச்ருணு அவதாரய ॥ ௨ ॥

ஸா ஏவம் த்ரிவிதா பவதி—

௩. ஸத்த்வானுரூபா ஸர்வஸ்ய ச்ரத்தா பவதி பாரத ।
ச்ரத்தாமயோऽயம் புருஷோ யோ யச்ச்ரத்த: ஸ ஏவ ஸ: ॥

ஸத்த்வானுரூபா விசிஷ்டஸம்ஸ்காரோபேதாந்த:கரணானுரூபா ஸர்வஸ்ய ப்ராணிஜாதஸ்ய ச்ரத்தா பவதி பாரத। யத்யேவம் தத: கிம் ஸ்யாதிதி? உச்யதே— ச்ரத்தாமய: ச்ரத்தாப்ராய: அயம் புருஷ: ஸம்ஸாரீ ஜீவ: । கதம்?— ய: யச்ச்ரத்த:, யா ச்ரத்தா யஸ்ய ஜீவஸ்ய ஸ: யச்ச்ரத்த: ஸ ஏவ தச்ச்ரத்தானுரூப ஏவ ஸ: ஜீவ: ॥ ௩ ॥

ததச்ச கார்யேண லிங்கேன தேவாதிபூஜயா ஸத்த்வாதிநிஷ்டா அனுமேயா இத்யாஹ—

---

எந்த நிலையைப்பற்றி [நம்பிக்கையோடுகூடிய எந்தச் செய்கையைப்பற்றி —ஆ.] நீ வினவுகின்றனையோ, அது உடம்பொடுநிற்பவர்கட்கு இயல்பினுல் பிறப்பது. சென்றபிறவிகளில் செய்யப்பட்ட நல்வினைமுதலியவற்றின் வாஸனையானது இறந்திடும் தருணத்தில் வெளிப்பட்டதாய் " ஸ்வபாவம், இயல்பு, இயற்கை " எனப்படுகின்றது. ஸாத்துவிகம் - ஸத்துவகுணத்தாலானது, தேவர்பூஜைமுதலியவற்றைப் பற்றியது. ராஜஸம் - ரஜோகுணத்தா லானது, யக்ஷர் ராக்ஷஸர் என்பவரைப் பூஜித்தல் முதலியவற்றைப்பற்றியது. தாமஸம் - தமோகுணத்தா லானது, பிரேதங்கள் பிசாசங்கள் இவற்றைப் பூஜித்தல் முதலியவற்றைப்பற்றியது. இவ்வாறு மூவகைத்தாய்க் கூறப்படுகின்ற அந்த நம்பிக்கையை, சிரத்தையைத் தெரிந்துகொள். (௨)

அது இவ்வாறு மூவகையா யுள்ளது :

௩. பாரத ! நம்பிக்கையானது ஒவ்வொருவனுடைய இயற்கைக்குஏற்ப உள்ளது. இப்புருஷன் நம்பிக்கை மிகுந்தவன். எவன் எந்த நம்பிக்கையுடையவனோ, அவன் அவனேதான்.

பிராணிகளெல்லாவற்றினுடைய நம்பிக்கையானது(அவ்வவற்றிற்குச்)சிறப்பாயுள்ள வாஸனைகளோடு கூடிய அகக்கரணத்திற்குத் தக்கவாறு அமைகின்றது.—இப்படியானுல், அங்ஙன மாவதென்ன? என்பது—கூறுவோம்: பிறந்திறந்து உழலுகின்ற இந்த ஜீவன் நம்பிக்கைமிகுந்தவன்.—எப்படி ?—எந்தஜீவனுக்கு எது நம்பிக்கையோ, அந்த ஜீவன் அவனேதான், அந்த நம்பிக்கைக்கு ஏற்றவனேதான் [அதற்குத் தக நடப்பவனேதான்]. (௩)

ஆகவே, ஸத்துவம்முதலியவற்றில் நிலைத்தலானது [ஸாத்துவிகசிரத்தை முதலானது], தேவர்முதலானோர்களைப் பூஜித்தலென்னும் கார்யமாகிய குறியினுல் அநுமானிக்கப்படும் என்று அருளிச்செய்கிறுர் :

௪. യജന്തേ സാത്ത്വികാ ദേവാൻ യക്ഷരക്ഷാംസി രാജസാഃ ।
പ്രേതാൻ ഭൂതഗണാംശ്ചാന്യേ യജന്തേ താമസാ ജനാഃ ॥

യജന്തേ പൂജയന്തി സാത്ത്വികാഃ സത്ത്വനിഷ്ഠാഃ ദേവാൻ, യക്ഷരക്ഷാംസി രാജസാഃ, പ്രേതാൻ ഭൂതഗണാംശ്ച സപ്തമാതൃകാദീംശ്ച അന്യേ യജന്തേ താമസാഃ ജനാഃ ॥ ௪ ॥

ഏവം കാര്യതോ നിർണീതാഃ സത്ത്വാദിനിഷ്ഠാഃ ശാസ്ത്രവിധ്യുത്സർഗേ । തത്ര കശ്ചിദേവ സഹസ്രേഷു ദേവപൂജാദിപരഃ സത്ത്വനിഷ്ഠോ ഭവതി, ബാഹുല്യേന തു രജോനിഷ്ഠാഃ തമോനിഷ്ഠാശ്ചൈവ പ്രാണിനോ ഭവന്തി । കഥം ?—

௫. അശാസ്ത്രവിഹിതം ഘോരം തപ്യന്തേ യേ തപോ ജനാഃ ।
ദംഭാഹങ്കാരസംയുക്താഃ കാമരാഗബലാന്വിതാഃ ॥

௬. കർശയന്തഃ ശരീരസ്ഥം ഭൂതഗ്രാമമചേതസഃ ।
മാം ചൈവാന്തഃശരീരസ്ഥം താന്വിദ്ധ്യാസുരനിശ്ചയാൻ ॥

---

௪. ஸாத்துவிகர்கள் தேவர்களேயும், ராஜஸர்கள் யக்ஷர்களேயும் ராக்ஷஸர்களேயும் தொழுகிறார்கள் ; தாமஸர்களான மற்றை ஜனங்கள் பிரேதங்களேயும் பூதகணங்களேயும் தொழுகிறார்கள்.

தொழுகிறார்கள் - பூஜிக்கிறார்கள். ஸாத்துவிகர்கள் - ஸத்துவகுணத்தில் நிலேத்தவர்கள். பூதகணங்களேயும் - ஏழு மாதிருகைகளேயும். (தேவர் - வஸு முதலானோர். யக்ஷர் - குபேரன் முதலானோர். ராக்ஷஸர் - நைர்ரிதன் முதலானோர். தமது ஒழுக்கத்தினின்றும் வழுவிய பிராமணர் முதலானோர், உடம்பு மாய்ந்தபின்பு காற்றுருவமான சரீரத்தைப் பெறுகிறார்கள் ; அவர்கள் பிரேதங்களென்க. இவர்களெல்லாரும் தம்மை ஆராதிப்பவர்கட்கு அவரவரது விருப்பங்களேக் கொடுக்கிறார்கள் எனத் தெரிந்துகொள்க.—ஆ.) (௪)

ராஜஸ நம்பிக்கையுடையவரும், தாமஸ நம்பிக்கையுடையவரும்.

இவ்வாறு ஸாத்துவிகநிஷ்டை [ஸாத்விகநம்பிக்கை] முதலியன சாஸ்திரத்தின் பொதுவிதியினால் கார்யத்தைக்கொண்டு நிச்சயிக்கப்பட்டன. அங்ஙனம் தேவபூஜை முதலியவற்றிற் கருத்துடையவனாய் ஸத்துவகுணத்தில் நிலேத்தவன் ஆயிரத்தில் ஒருவன்தான் இருக்கிறான். மற்றுப், பிராணிகள் பெரும்பான்மையாக ரஜோகுணத்தில் நிலேத்தவரும், தமோகுணத்தில் நிலேத்தவருமாக இருக்கிறார்கள்.—எப்படி ? —

௫. எந்த ஜனங்கள், சாஸ்திரத்தில் விதிக்கப்படாத கொடிய தவத்தைப் புரிகிறார்களோ, (அவர்கள்) கள்ளமும் அஹங்காரமும் உடையவர் : காம ஆசைத்திறமையுள்ளவர் :

௬. சரீரத்திலுள்ள எல்லாப்பூதங்களேயும், சரீரத்தினுள் உள்ளேயுள்ள என்னேயும் மெலிவுறச்செய்கின்ற அவிவேகிகள். அவர்களே அஸுரஉறுதியுள்ளவராகத் தெரிந்துகொள்.

𑌅𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌹𑌿𑌤𑌂 𑌨 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌹𑌿𑌤𑌂 𑌘𑍋𑌰𑌂 𑌪𑍀𑌡𑌾𑌕𑌰𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌆𑌤𑍍𑌮𑌨𑌶𑍍𑌚 𑌤𑌪𑌃 𑌤𑌪𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌨𑌿𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑌯𑌨𑍍𑌤𑌿 𑌯𑍇 𑌜𑌨𑌾𑌃 𑌤𑍇 𑌚 𑌦𑌮𑍍𑌭𑌾𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃, 𑌦𑌮𑍍𑌭𑌶𑍍𑌚 𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌶𑍍𑌚 𑌦𑌮𑍍𑌭𑌾𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑍌, 𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌦𑌮𑍍𑌭𑌾𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌕𑌾𑌮𑌰𑌾𑌗𑌬𑌲𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 𑌕𑌾𑌮𑌶𑍍𑌚 𑌰𑌾𑌗𑌶𑍍𑌚 𑌕𑌾𑌮𑌰𑌾𑌗𑍌, 𑌤𑌤𑍍𑌕𑍃𑌤𑌂 𑌬𑌲𑌂 𑌕𑌾𑌮𑌰𑌾𑌗𑌬𑌲𑌂, 𑌤𑍇𑌨 𑌅𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃, 𑌕𑌾𑌮𑌰𑌾𑌗𑌬𑌲𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃; 𑌕𑌾𑌮𑌰𑌾𑌗𑌬𑌲𑍇𑌨 𑌵𑌾 𑌅𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 ॥ ௫ ॥

𑌕𑌰𑍍𑌶𑌯𑌨𑍍𑌤𑌃 𑌕𑍃𑌶𑍀𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌃 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌂 𑌭𑍂𑌤𑌗𑍍𑌰𑌾𑌮𑌂 𑌕𑌰𑌣𑌸𑌮𑍁𑌦𑌾𑌯𑌂 𑌅𑌚𑍇𑌤𑌸𑌃 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌿𑌨𑌃 𑌮𑌾𑌂 𑌚𑍈𑌵 𑌤𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌭𑍂𑌤𑌮𑌨𑍍𑌤𑌃𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌂 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌂 𑌕𑌰𑍍𑌶𑌯𑌨𑍍𑌤𑌃— 𑌮𑌦𑌨𑍁𑌶𑌾𑌸𑌨𑌾𑌕𑌰𑌣𑌮𑍇𑌵 𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌶𑌨𑌂—𑌤𑌾𑌨𑍍 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌆𑌸𑍁𑌰𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌾𑌨𑍍, 𑌆𑌸𑍁𑌰𑍋 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑍋 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍇 𑌆𑌸𑍁𑌰𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌾𑌃 𑌤𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌇𑌤𑌿 𑌉𑌪𑌦𑍇𑌶𑌃 ॥ ௬ ॥

𑌆𑌹𑌾𑌰𑌾𑌣𑌾𑌂 𑌚 𑌰𑌸𑍍𑌯𑌸𑍍𑌨𑌿𑌗𑍍𑌧𑌾𑌦𑌿𑌵𑌰𑍍𑌗𑌤𑍍𑌰𑌯𑌰𑍂𑌪𑍇𑌣 𑌭𑌿𑌨𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌯𑌥𑌾𑌕𑍍𑌰𑌮𑌂 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌰𑌾𑌜𑌸𑌤𑌾𑌮𑌸𑌪𑍁𑌰𑍁𑌷𑌪𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑌿𑌹 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌰𑌸𑍍𑌯𑌸𑍍𑌨𑌿𑌗𑍍𑌧𑌾𑌦𑌿𑌷𑍁 𑌆𑌹𑌾𑌰𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌷𑍁 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑍀𑌤𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑍇𑌣 𑌲𑌿𑌙𑍍𑌗𑍇𑌨 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌤𑍍𑌵𑌂 𑌰𑌾𑌜𑌸𑌤𑍍𑌵𑌂 𑌤𑌾𑌮𑌸𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌰𑌾𑌜𑌸𑌤𑌾𑌮𑌸𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌨𑌾𑌂 𑌆𑌹𑌾𑌰𑌾𑌣𑌾𑌂 𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌨𑌾𑌂 𑌚 𑌉𑌪𑌾𑌦𑌾𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 । 𑌤𑌥𑌾 𑌯𑌜𑍍𑌞𑌾𑌦𑍀𑌨𑌾𑌮𑌪𑌿 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿-

---

கொடிய - தனக்கும், (மற்றைப்) பிராணிகட்கும் துன்பத்தைச்செய்கின்ற. புரிகிறார்கள் - செய்து முடிக்கிறார்கள். காம ஆசைத் திறமை யுள்ளவர் - காமத்தாலும், ஆசையினாலுமான வலிமையுடையவர்; அல்லது காமத்தையும், ஆசையையும், வலிமையையும் உடையவர். (௫)

பூதங்களை - இந்திரியங்களை. என்னை - அவர்களது செய்கைகட்கும் எண்ணங்கட்கும் ஸாக்ஷியாயுள்ள நாராயணனை. என்னை மெலிவுறச் செய்தலென்பது - எனது கட்டளையைச் செய்யாதிருத்தலேதான். அவர்களை, நீக்கும்பொருட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும், என்பது (அர்ஜுனனுக்கு ஓர்) உபதேசம். (௬)

### மூவகையான உண்டியும், யஜ்ஞமும், தவமும், தானமும்.

இனி, சுவையுள்ளனவும், நெய்யுள்ளனவும்முதலிய உண்டிவகைகளின்மீது தனக்கு(நிகழும்) பிரியமிகுதியாகிய குறியினால் (தன்னை) ஸாத்துவிகனாகவோ, ராஜஸனாகவோ, தாமஸனாகவோ அறிந்துகொண்டு, ரஜஸ்தமோகுணங்களின் குறிகளாகிய [ராஜஸ தாமஸமான] உண்டிகளைத் தள்ளுதற்காகவும், ஸத்துவகுணத்தின் குறிகளான [ஸாத்துவிகமான] உண்டிகளைக் கொள்ளுதற்காகவும்,—"சுவையுள்ளனவும், நெய்யுள்ளனவும்முதலாக மூன்றுவகுப்பாக வேறுபட்ட உண்டிகள் முறையே ஸாத்துவிக மனிதர்கட்கும், ராஜஸ மனிதர்கட்கும், தாமஸமனிதர்கட்கும் பிரியமானவை" என எடுத்துக்காட்டுதலை இங்கே அருளிச்செய்கிறார். அவ்வண்ணமே, "ராஜஸ தாமஸங்களை அறிந்து எப்படித் தள்ளக்கூடும்? ஸாத்துவிகங்களையே எப்படி அனுஷ்டிக்கக் கூடும்?" என்றஇதற்காக [ராஜஸதாமஸங்களைத் தெரிந்து அவற்றைத் தள்ளக் கூடிய விதத்தையும், ஸாத்துவிகங்களைத் தெரிந்து அவற்றை அநுஷ்டிக்கக்கூடிய

ணபேதேந த்ரைவித்யப்ரதிபாதநம் இஹ "ராஜஸதாமஸாந் பரித்யஜ்ய ஸத்த்வம் அந்நாநி பரித்யஜேத், ஸாத்த்விகாநேவ அந்நாதீந் ஸேவேத" இத்யேவமர்த்தம் । ஆஹ—

௭. ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய த்ரிவிதோ பவதி ப்ரிய: ।
யஜ்ஞஸ்தபஸ்ததா தாநம் தேஷாம் பேதமிமம் ஶ்ருணு ॥

ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய போக்து: ப்ராணிந: த்ரிவிதோ பவதி ப்ரிய: இஷ்ட:, ததா யஜ்ஞ:, ததா தப:, ததா தாநம் । தேஷாம் ஆஹாராதீநாம் பேதம் இமம் வக்ஷ்யமாணம் ஶ்ருணு ॥ ௭ ॥

௮. ஆயு:ஸத்த்வபலாரோக்யஸுகப்ரீதிவிவர்தநா: ।
ரஸ்யா: ஸ்நிக்தா: ஸ்திரா ஹ்ருத்யா ஆஹாரா: ஸாத்த்விகப்ரியா: ॥

ஆயுஶ்ச ஸத்த்வம் ச பலம் ச ஆரோக்யம் ச ஸுகம் ச ப்ரீதிஶ்ச ஆயு:ஸத்த்வ-பலாரோக்யஸுகப்ரீதய: தாஸாம் ஆயு:ஸத்த்வாதீநாம் விவர்தநா: ஆயு:ஸத்த்வ-பலாரோக்யஸுகப்ரீதிவிவர்தநா: தே ச ரஸ்யா: ரஸோபேதா: ஸ்நிக்தா: ஸ்நேஹவந்த: ஸ்திரா: ஸ்திரகாலாவஸ்தாயிந: தேஹே ஹ்ருத்யா: ஹ்ருதயப்ரியா: ஆஹா-ரா: ஸாத்த்விகப்ரியா: ஸாத்த்விகஸ்ய இஷ்டா: ॥ ௮ ॥

௯. கட்வம்லலவணாத்யுஷ்ணதீக்ஷ்ணரூக்ஷவிதாஹிந: ।
ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா து:கஶோகாமயப்ரதா: ॥

கட்வம்லலவணாத்யுஷ்ணதீக்ஷ்ணரூக்ஷவிதாஹிந:— இத்யத்ர அதிஶப்த: கட்வாதிஷு ஸர்வத்ர யோஜ்ய:, 'அதிகடு:' 'அதிதீக்ஷ்ண:' இத்யேவம்—கடுத்வ கஷ்டத்வ

---

விதத்தையும் காட்டுவதற்காக], "யஜ்ஞம்முதலானவையும் ஸத்துவம்முதலிய குணங்களின் பேதத்தால் மூவகைப்பட்டவை" என உணர்த்துதலை இங்கே அருளிச் செய்கிறார் :

௭. இனி ஒவ்வொருவர்க்கும் பிரியமான உண்டியும் மூவகைத்தா யுள்ளது; அவ்வண்ணமே, யஜ்ஞமும், தவமும், தானமு மென்க. அவற்றினுடைய இந்த வேற்றுமையைக் கேட்பாயாக.

ஒவ்வொருவர்க்கும் - உண்கின்ற எல்லாப் பிராணிகட்கும். அவற்றினுடைய - உண்டிமுதலியவற்றினுடைய. இந்த - இனிக் கூறப்படுகின்ற. (எ)

உண்டியின் மூன்று வகை.

௮. ஆயுளையும், ஊக்கத்தையும், வலிமையையும், நோயின்மையையும், இன்பத்தையும், ருசியையும் வளர்ப்பவையாய், சுவையொடுகூடி நெய்யோடமைந்து, ஸாரம்மிகுந்தவையாய், மனோரம்யமாயுள்ள உண்டிகள் ஸாத்துவிகனுக்குப் பிரியமானவை.

ஸாரம்மிகுந்தவையாய் - உடம்பில் நெடிதுகாலம் நிற்பவையாய். (அ)

௯. கசப்பாயும், புளிப்பாயும், உப்பாயும், மிகச்சூடாயும், உறைப்பாயும், வறட்சியாயும், உஷ்ணத்தைச் செய்வனவாயும், வருத்தம் கவலை வியாதி என்றவற்றைத் தருவனமாயுமுள்ள உண்டிகள் ராஜஸனுக்குப் பிரியமானவை.

கட்வ..............விதாஹிந: என்பதிலுள்ள அதி என்னும்சொல்லை, கடு முதலிய எல்லாவற்றிலும் "அதிகடு: [மிகக் கசப்பாயும்]," "அதிதீக்ஷ்ண: [மிக உறைப்பாயும்]" என இவ்வாறு கூட்டிக்கொள்க. (௯)

𑌲𑌵𑌣𑌶𑍍𑌚 𑌅𑌤𑍍𑌯𑍁𑌷𑍍𑌣𑌶𑍍𑌚 𑌤𑍀𑌕𑍍𑌷𑍍𑌣𑌶𑍍𑌚 𑌰𑍂𑌕𑍍𑌷𑌶𑍍𑌚 𑌵𑌿𑌦𑌾𑌹𑍀 𑌚 𑌤𑍇 𑌆𑌹𑌾𑌰𑌾𑌃 𑌰𑌾𑌜𑌸𑌸𑍍𑌯 𑌇𑌷𑍍𑌟𑌾𑌃 𑌦𑍁𑌃𑌖𑌶𑍋𑌕𑌾𑌮𑌯𑌪𑍍𑌰𑌦𑌾𑌃 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌚 𑌶𑍋𑌕𑌂 𑌚 𑌆𑌮𑌯𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌯𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑍀𑌤𑌿 𑌦𑍁𑌃𑌖𑌶𑍋𑌕𑌾𑌮𑌯𑌪𑍍𑌰𑌦𑌾𑌃 ॥ ௯ ॥

௧௦. 𑌯𑌾𑌤𑌯𑌾𑌮𑌂 𑌗𑌤𑌰𑌸𑌂 𑌪𑍂𑌤𑌿 𑌪𑌰𑍍𑌯𑍁𑌷𑌿𑌤𑌂 𑌚 𑌯𑌤𑍍 ।
𑌉𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌟𑌮𑌪𑌿 𑌚𑌾𑌮𑍇𑌧𑍍𑌯𑌂 𑌭𑍋𑌜𑌨𑌂 𑌤𑌾𑌮𑌸𑌪𑍍𑌰𑌿𑌯𑌮𑍍 ॥

𑌯𑌾𑌤𑌯𑌾𑌮𑌂 𑌮𑌨𑍍𑌦𑌪𑌕𑍍𑌵𑌮𑍍, 𑌨𑌿𑌰𑍍𑌵𑍀𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌗𑌤𑌰𑌸𑌶𑌬𑍍𑌦𑍇𑌨 𑌉𑌕𑍍𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌗𑌤𑌰𑌸𑌂 𑌰𑌸𑌵𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍, 𑌪𑍂𑌤𑌿 𑌦𑍁𑌰𑍍𑌗𑌨𑍍𑌧𑌿 𑌪𑌰𑍍𑌯𑍁𑌷𑌿𑌤𑌂 𑌚 𑌪𑌕𑍍𑌵𑌂 𑌸𑌤𑍍 𑌰𑌾𑌤𑍍𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌿𑌤𑌂 𑌚 𑌯𑌤𑍍, 𑌉𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌟𑌮𑌪𑌿 𑌚 𑌭𑍁𑌕𑍍𑌤𑌶𑌿𑌷𑍍𑌟𑌮𑍍 𑌉𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌟𑌮𑍍, 𑌅𑌮𑍇𑌧𑍍𑌯𑌮𑍍 𑌅𑌯𑌜𑍍𑌞𑌾𑌰𑍍𑌹𑌮𑍍, 𑌭𑍋𑌜𑌨𑌮𑍍 𑌈𑌦𑍃𑌶𑌂 𑌤𑌾𑌮𑌸𑌪𑍍𑌰𑌿𑌯𑌮𑍍 ॥ ௧௦ ॥

𑌅𑌥 𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௧௧. 𑌅𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌭𑌿𑌰𑍍𑌯𑌜𑍍𑌞𑌃 𑌵𑌿𑌧𑌿𑌦𑍃𑌷𑍍𑌟𑍋 𑌯 𑌇𑌜𑍍𑌯𑌤𑍇 ।
𑌯𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌮𑍇𑌵𑍇𑌤𑌿 𑌮𑌨𑌃 𑌸𑌮𑌾𑌧𑌾𑌯 𑌸 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌃 ॥

𑌅𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌭𑌿𑌃 𑌫𑌲𑌾𑌨𑌭𑌿𑌲𑌾𑌷𑌿𑌭𑌿𑌃 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌵𑌿𑌧𑌿𑌦𑍃𑌷𑍍𑌟𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌚𑍋𑌦𑌿𑌤𑌃 𑌯𑌃 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌇𑌜𑍍𑌯𑌤𑍇 𑌨𑌿𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑍍𑌯𑌤𑍇 𑌯𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌮𑍇𑌵𑍇𑌤𑌿 𑌯𑌜𑍍𑌞𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑍇𑌵 𑌨𑌿𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑌨𑍀𑌯𑌮𑌿𑌤𑌿 𑌮𑌨𑌃 𑌸𑌮𑌾𑌧𑌾𑌯, “𑌨 𑌅𑌨𑍇𑌨 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑍍𑌥𑍋 𑌮𑌮 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌃” 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌯, 𑌸𑌃 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌃 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ ௧௧ ॥

௧௨. 𑌅𑌭𑌿𑌸𑌨𑍍𑌧𑌾𑌯 𑌤𑍁 𑌫𑌲𑌂 𑌦𑌮𑍍𑌭𑌾𑌰𑍍𑌥𑌮𑌪𑌿 𑌚𑍈𑌵 𑌯𑌤𑍍 ।

---

௧௦. ஊசினதும், ரஸம்போனதும், நாற்றமுடையதும், பழையதும், கழி பட்டதும், அசுத்தமும் ஆன உண்டி எதுவோ, (அது) தாமஸனுக்குப் பிரியம்.

ஊசினது - பாதி சமைந்தது, பதக்கேடுள்ளது, பழுதுபட்டது; ஸாரமற்றதானது - "ரஸம்போனது" என்னும்சொல்லினால் கூறப்பட்டுள்ளமையின். (யாதயாமம் - ஒரு யாமஞ்சென்றது: ஒருயாமத்திற்குமுன் சமைக்கப்பட்டது: ஊசினது: ஸாரம்போனது. 𑌗𑌤𑌰𑌸𑌂 என்பதற்கும் - "ஸாரம்போனது" என்பது பொருள். ஆகவே, கூறினதுகூறல் வாராததற்காக, யாதயாமம் என்பதற்கு - "பாதிசமைந்தது" எனப் பொருள் கொள்க.) பழையது - சமைந்தபின்பு ஓரிரவு தங்கியிருந்தது. கழி பட்டது - உண்டு மிகுந்தது. அசுத்தமானது - பூஜைக்குத் தகாதது. இத்தகைய உண்டி தாமஸனுக்குப் பிரியமென்க. (௧௦)

### யஜ்ஞங்களின் மூன்று வகை.

இனி, இப்பொழுது, மூவகையான யஜ்ஞங்களையும் அருளிச்செய்கிறார்:

௧௧. பயனை வேண்டாதவரால் விதிப்படி அறியப்பட்ட எந்த யஜ்ஞமானது "யாகத்தைச் செய்யமாத்திரம்வேண்டும்" எனமனத்தை ஒருநிலைப்படுத்தி அநுஷ்டிக்கப்படுகின்றதோ, அது ஸாத்துவிகம்.

விதிப்படி - சாஸ்திரவிதிப்படி. அநுஷ்டிக்கப்படுகின்றதோ-செய்துமுடிக்கப்படுகின்றதோ. "யாகத்தைச் செய்யமாத்திரம்வேண்டும்" என - யஜ்ஞம்இன்னது என்பதை அநுஷ்டிக்கமாத்திரம்வேண்டும் என்று. மனத்தை ஒருநிலைப்படுத்தி - "எனக்கு இதனால் புருஷார்த்தத்தைச் செய்துகொள்ளவேண்டியதில்லை" என இவ்வாறு நிச்சயித்து. (இத்தகைய யஜ்ஞம்) ஸாத்துவிகயஜ்ஞம் எனப்படுகின்றது. (௧௧)

௧௨. ஆனால், பயனை எதிர்நோக்காது டம்பத்திற்காகவும் எது அநுஷ்டிக்கப்

𑌇𑌜𑍍𑌯𑌤𑍇 𑌭𑌰𑌤𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠 𑌤𑌂 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌰𑌾𑌜𑌸𑌮𑍍 ॥

𑌅𑌭𑌿𑌸𑌂𑌧𑌾𑌯 𑌤𑍁 𑌫𑌲𑌂 𑌦𑌂𑌭𑌾𑌰𑍍𑌥𑌮𑌪𑌿 𑌚𑍈𑌵 𑌯𑌤𑍍 𑌇𑌜𑍍𑌯𑌤𑍇 𑌭𑌰𑌤𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠 𑌤𑌂 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌰𑌾𑌜𑌸𑌮𑍍 ॥ ௧௨ ॥

௧௩. 𑌵𑌿𑌧𑌿𑌹𑍀𑌨𑌮𑌸𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌨𑌂 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌹𑍀𑌨𑌮𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌮𑍍 ।
𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌿𑌰𑌹𑌿𑌤𑌂 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌤𑌾𑌮𑌸𑌂 𑌪𑌰𑌿𑌚𑌕𑍍𑌷𑌤𑍇 ॥

𑌵𑌿𑌧𑌿𑌹𑍀𑌨𑌂 𑌯𑌥𑌾𑌚𑍋𑌦𑌿𑌤𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌮𑍍, 𑌅𑌸𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌨𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇𑌭𑍍𑌯𑍋 𑌨 𑌸𑍃𑌷𑍍𑌟𑌂 𑌨 𑌦𑌤𑍍𑌤𑌮𑌨𑍍𑌨𑌂 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌯𑌜𑍍𑌞𑍇 𑌸𑌃 𑌅𑌸𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌨𑌃, 𑌤𑌮𑌸𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌨𑌮𑍍, 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌹𑍀𑌨𑌂 𑌸𑍍𑌵𑌰𑌤𑍋 𑌵𑌰𑍍𑌣𑌤𑍋 𑌵𑌾 𑌵𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌹𑍀𑌨𑌮𑍍, 𑌅𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌰𑌹𑌿𑌤𑌂, 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌿𑌰𑌹𑌿𑌤𑌂 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌤𑌾𑌮𑌸𑌂 𑌪𑌰𑌿𑌚𑌕𑍍𑌷𑌤𑍇 𑌤𑌮𑍋𑌨𑌿𑌰𑍍𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 𑌕𑌥𑌯𑌨𑍍𑌤𑌿 ॥ ௧௩ ॥

𑌅𑌥 𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌤𑌪𑌃 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇—

௧௪. 𑌦𑍇𑌵𑌦𑍍𑌵𑌿𑌜𑌗𑍁𑌰𑍁𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌪𑍂𑌜𑌨𑌂 𑌶𑍌𑌚𑌮𑌾𑌰𑍍𑌜𑌵𑌮𑍍 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌮𑌹𑌿𑌂𑌸𑌾 𑌚 𑌶𑌾𑌰𑍀𑌰𑌂 𑌤𑌪 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

𑌦𑍇𑌵𑌾𑌶𑍍𑌚 𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌶𑍍𑌚 𑌗𑍁𑌰𑌵𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌾𑌶𑍍𑌚 𑌦𑍇𑌵𑌦𑍍𑌵𑌿𑌜𑌗𑍁𑌰𑍁𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌾𑌃, 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌪𑍂𑌜𑌨𑌂 𑌦𑍇𑌵𑌦𑍍𑌵𑌿𑌜𑌗𑍁𑌰𑍁𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌪𑍂𑌜𑌨𑌂, 𑌶𑍌𑌚𑌮𑍍, 𑌆𑌰𑍍𑌜𑌵𑌮𑍍 𑌋𑌜𑍁𑌤𑍍𑌵𑌂, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌮𑌹𑌿𑌂𑌸𑌾 𑌚 𑌶𑌰𑍀𑌰𑌨𑌿𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑍍𑌯𑌂 𑌶𑌾𑌰𑍀𑌰𑌂 𑌶𑌰𑍀𑌰𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑍈𑌃 𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑍇𑌵 𑌕𑌰𑍍𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌸𑌾𑌧𑍍𑌯𑌂 𑌶𑌾𑌰𑍀𑌰𑌂 𑌤𑌪𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇; ‘𑌪𑌞𑍍𑌚𑍈𑌤𑍇 𑌤𑌸𑍍𑌯 𑌹𑍇𑌤𑌵𑌃’ 𑌇𑌤𑌿 𑌹𑌿 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿 ॥ ௧௪ ॥

௧௫. 𑌅𑌨𑍁𑌦𑍍𑌵𑍇𑌗𑌕𑌰𑌂 𑌵𑌾𑌕𑍍𑌯𑌂 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌹𑌿𑌤𑌂 𑌚 𑌯𑌤𑍍 ।

---

படுகின்றதோ, பரதரிற் சிறந்தோனே! அந்த யஜ்ஞத்தை ராஜஸமாகத் தெரிந்துகொள்

௧௩. முறையில்லதும், அன்னமிடாததும், மந்திரமில்லதும், தக்ஷிணையில்லதும், சிரத்தையில்லதுமான யஜ்ஞத்தைத் தாமஸம் என்கிறார்கள்.

முறையில்லது - (சாஸ்திரத்தில்) விதித்த ஒழுங்கிற்கு மாறானது. அன்னமிடாதது - பிராமணர்கட்கு அன்னங்கொடுக்கப்பெறாதது. மந்திரமில்லது - உச்சரிப்பும், எழுத்தும் அமையாதது. தக்ஷிணையில்லது - (சாஸ்திரத்தில்) கூறிய தக்ஷிணையில்லாதது. தாமஸம் - தமோகுணத்தாலானது. (௧௩)

மெய்யினால் செய்யப்படும் தவம்.

இனி, இப்பொழுது, மூன்றுவகையான தவங்களையும் கூறுகிறார் :

௧௪. தேவர், பிராமணர், பெரியோர், கற்றறிந்தோர் என்றவரைப் பூஜித்தலும், பரிசுத்தமும், நேர்மையும், ப்ரஹ்மசர்யமும், ஹிம்ஸியாமையும் ‘‘சாரீர தபஸ்’’ எனப்படுகின்றன.

ப்ரஹ்மசர்யம் - (விலக்கப்பட்ட கலவியைத் தவிர்தல்.—ம.) சாரீரதபஸ் - சரீரத்தால் செய்யப்படும் தவம். (இது), சரீரத்தைத் தலைமையாகவுடைய கர்த்தாமுதலிய எல்லாவற்றாலும் ஸாதிக்கத்தக்கது ; ஏனெனில், ‘‘இவ்வைந்தும் அதற்குக் காரணங்களாம்’’ (௧௮ - ௧௫) எனக் கூறுவர். (௧௪)

மொழியினால் செய்யப்படும் தவம்.

௧௫. மனக்கொதிப்பைச் செய்யாததும், உண்மையும், இனியதும், இதமு

स्वाध्यायाभ्यसनं चैव वाङ्मयं तप उच्यते ॥

अनुद्वेगकरं प्राणिनाम् अदुःखकरं वाक्यं सत्यं प्रियहितं च यत् — प्रियहिते दृष्टादृष्टार्थे । अनुद्वेगकरत्वादिभिः धर्मैः वाक्यं विशेष्यते । विशेषणधर्मसमुच्चयार्थः चशब्दः । परप्रत्ययार्थं प्रयुक्तस्य वाक्यस्य अनुद्वेगकरत्वसत्यप्रियहितानाम् अन्यतमेन द्वाभ्यां त्रिभिर्वा विहीनस्य न वाङ्मयतपस्त्वम् । तथा सत्यवाक्यस्य इतरेषाम् अन्यतमेन द्वाभ्यां त्रिभिर्वा विहीनतायां न वाङ्मयतपस्त्वम् । तथा प्रियवाक्यस्यापि इतरेषाम् अन्यतमेन द्वाभ्यां त्रिभिर्वा विहीनस्य न वाङ्मयतपस्त्वम् । तथा हितवाक्यस्यापि इतरेषाम् अन्यतमेन द्वाभ्यां त्रिभिर्वा विहीनस्य न वाङ्मयतपस्त्वम् । किं पुनः तत् तपः?— यत् सत्यं वाक्यम् अनुद्वेगकरं प्रियं हितं च तत् तपः वाङ्मयम्, यथा "शान्तो भव वत्स! ; स्वाध्यायं योगं च अनुतिष्ठ, तथा ते श्रेयो भविष्यति" इति । स्वाध्यायाभ्यसनं चैव यथाविधि वाङ्मयं तपः उच्यते ॥ கரு ॥

கசு. मनःप्रसादः सौम्यत्वं मौनमात्मविनिग्रहः ।
भावसंशुद्धिरित्येतत् तपो मानसमुच्यते ॥

---

மான வார்த்தை எதுவோ, (அதுவும்), ஓதுதலை அப்யஸித்தலும் "வாங்மய தபஸ்" எனப்படுகின்றன.

மனக்கோதிப்பைச் செய்யாதது - பிராணிகட்கு வருத்தத்தை விளைக்காதது. இனியது - பார்க்கப்பட்ட பயனுள்ளது [கேட்பதற்குத் தற்காலத்தில் இன்பமாயிருப்பது]; இதம் - பார்க்கப்படாத பயனுள்ளது [முடிவிலே நலமானது]. "மனக்கோதிப்பைச் செய்வது" முதலான தன்மைகளால் வார்த்தையானது விசேஷிக்கப்படுகின்றது. உம்மை - விசேஷணத்தன்மைகளை ஒருங்குசேர்க்கும் பொருளது. பிறர்க்கு உறுதி உண்டாம்பொருட்டு வழங்கியதாய் மனக்கோதிப்பைச் செய்யாத வார்த்தையானது உண்மை இனிமை இதம் என்றவற்றுள் எதாவதொன்றேனும், இரண்டேனும், மூன்றேனும் இல்லாக்கால், வாங்மயதபஸ் ஆகாது. அவ்வாறே, உண்மை வார்த்தையானது மற்றையவற்றுள் எதாவதொன்றேனும், இரண்டேனும், மூன்றேனும் குறைந்தவழி, வாங்மயதபஸ் ஆகாது. அங்ஙனமே, இனியவார்த்தையும் மற்றையவற்றுள் எதாவதொன்றேனும், இரண்டேனும், மூன்றேனும் இல்லாவிடத்து, வாங்மயதபஸ் ஆகாது. அவ்வண்ணமே, இதவார்த்தையும் மற்றையவற்றுள் எதாவதொன்றேனும், இரண்டேனும், மூன்றேனும் குறைந்தவளவிலே, வாங்மயதபஸ் ஆகாது.—ஆனால், அந்த தபஸ் என்பது யாது?—எது உண்மையும், மனக்கோதிப்பைச் செய்யாததும், இனியதும், இதமுமான வார்த்தையோ, அது வாங்மயதபஸ் என்க. உதாரணமாக, "குழந்தாய்! அமைந்தவனாய் இருக்க; ஓதுதலையும், யோகத்தையும் அநுஷ்டிக்க. அவ்வாறு, உனக்கு நலமுண்டாம்" என்பது. ஓதுதலை - விதிப்படி ஓதுதலை. (வாங்மயம் - வார்த்தையை அதிகமாகவுடையது, அதனைப் பிரதானமாகக்கொண்டது என்றபடி.—ஆ.) (கரு)

மனத்தால் செய்யப்படும் தவம்.

கசு. மனத்தெளிவு, நன்மனமுடைமை, மௌனம், தன்னடக்கம், ஹிருதய பரிசுத்தம் என்றஇது மாநஸதபஸ் எனப்படுகின்றது.

𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌃 𑌮𑌨𑌸𑌃 𑌪𑍍𑌰𑌸𑌤𑍍𑌤𑌿𑌃, 𑌸𑍍𑌵𑌚𑍍𑌛𑌤𑌾𑌽𑌽𑌪𑌾𑌦𑌨𑌂 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌃 । 𑌸𑍌𑌮𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑍍—𑌯𑌤𑍍 𑌸𑍌𑌮𑌨𑌸𑍍𑌯𑌮𑍍 𑌆𑌹𑍁𑌃—𑌮𑍁𑌖𑌾𑌦𑌿𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌦𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌨𑍁𑌮𑍇𑌯𑌾 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌸𑍍𑌯 𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 । 𑌮𑍌𑌨𑌮𑍍—𑌵𑌾𑌕𑍍𑌸𑌂𑌯𑌮𑍋𑌽𑌪𑌿 𑌮𑌨𑌸𑍍𑌸𑌂𑌯𑌮𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌇𑌤𑌿 𑌕𑌾𑌰𑍍𑌯𑍇𑌣 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌮𑌨𑌸𑍍𑌸𑌂𑌯𑌮𑍋 𑌮𑍌𑌨𑌮𑌿𑌤𑌿 । 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃—𑌮𑌨𑍋𑌨𑌿𑌰𑍋𑌧𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃 𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃, 𑌵𑌾𑌗𑍍𑌵𑌿𑌷𑌯𑌸𑍍𑌯𑍈𑌵 𑌮𑌨𑌸𑌃 𑌸𑌂𑌯𑌮𑌃 𑌮𑍌𑌨𑌮𑍍, 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑌃 । 𑌭𑌾𑌵𑌸𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌃—𑌪𑌰𑍈𑌃 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌕𑌾𑌲𑍇 𑌅𑌮𑌾𑌯𑌾𑌵𑌿𑌤𑍍𑌵𑌂 𑌭𑌾𑌵𑌸𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 । 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 𑌤𑌪𑌃 𑌮𑌾𑌨𑌸𑌮𑍍 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ ௧௬ ॥

𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌂 𑌕𑌾𑌯𑌿𑌕𑌂 𑌵𑌾𑌚𑌿𑌕𑌂 𑌮𑌾𑌨𑌸𑌂 𑌚 𑌤𑌪𑌃 𑌤𑌪𑍍𑌤𑌂 𑌨𑌰𑍈𑌃 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌭𑍇𑌦𑍇𑌨 𑌕𑌥𑌂 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 𑌭𑌵𑌤𑍀𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௧௭. 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌪𑌰𑌯𑌾 𑌤𑌪𑍍𑌤𑌂 𑌤𑌪𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 𑌨𑌰𑍈𑌃 ।
𑌅𑌫𑌲𑌾𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌿𑌭𑌿𑌰𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍈𑌃 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 𑌪𑌰𑌿𑌚𑌕𑍍𑌷𑌤𑍇 ॥

𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌆𑌸𑍍𑌤𑌿𑌕𑍍𑌯𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌪𑌰𑌯𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌷𑍍𑌟𑌯𑌾 𑌤𑌪𑍍𑌤𑌮𑍍 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌿𑌤𑌂 𑌤𑌪𑌃 𑌤𑌤𑍍 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌂 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 𑌤𑍍𑌰𑌿𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌂 𑌤𑍍𑌰𑍍𑌯𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌂 𑌨𑌰𑍈𑌃 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌤𑍃𑌭𑌿𑌃 𑌅𑌫𑌲𑌾𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌿𑌭𑌿𑌃 𑌫𑌲𑌾𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌾𑌰𑌹𑌿𑌤𑍈𑌃 𑌯𑍁𑌕𑍍𑌤𑍈𑌃 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑍈𑌃—𑌯𑌤𑍍 𑌈𑌦𑍃𑌶𑌂 𑌤𑌪𑌃 𑌤𑌤𑍍 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌨𑌿𑌰𑍍𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 𑌪𑌰𑌿𑌚𑌕𑍍𑌷𑌤𑍇 𑌕𑌥𑌯𑌨𑍍𑌤𑌿 𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌃 ॥

---

மனத்தெளிவு - மனத்தினது அமைதி. தெளிவென்பது - ஸ்வச்சப்படுத்தல். (ஸ்வச்சமென்பது - கலக்கமின்மை, கவலையின்மை.—ஆ.) நன்மனமுடைமை - எதனை நன்மனமுடைமை என்கிறார்களோ, (அது; அதாவது, நல்லமனத்தையுடையவனாதல்; யாவர்க்கும் ஹிதத்தை விரும்புதலும், அஹிதத்தை நினையாமையுமாம்.—ஆ. இது,) முகத்தெளிவு முதலியவற்றால் ஊகிக்கக்கூடிய அகக்கரணப்போக்கு. வாயடக்கமும் மனஅடக்கத்தை முன்னிட்டு நிகழ்கின்றது என்று கார்யத்தால் காரணம் கூறப்படுகின்றது. (அதாவது, கார்யம் காரணத்திற்கு ஆனமையால்,) "மௌநம் - மனஅடக்கம்" என்க. தன்னடக்கம்-எங்கும் ஸாதாரணமான மனஅடக்கம். மௌநமென்பது - வார்த்தையைப்பற்றியதேயான மனத்தின் அடக்கம் என வேறுபாடு காண்க. ஹிருதய பரிசுத்தம் - பிறரோடு வியவகரிக்கும்பொழுது கள்ளமில்லாமை. (௧௬)

### தபஸானது குணத்தால் மூவகைப்படுதல்.

கீழ்க்கூறிய காயிகம் வாசிகம் மாநஸம் என்னும் தவமானது மனிதர்களால் அநுஷ்டிக்கப்பட்டதாகி ஸத்துவகுணம்முதலிய பேதத்தால் எவ்வாறு மூவகைத்தாயுளது? என்பது.—கூறுவோம்:

௧௭. பயனை வேண்டாத ஒருநிலைப்பட்ட மனிதர்களால் மிகுந்த நம்பிக்கையோடு அநுஷ்டிக்கப்பட்ட மூவகைத்தான அந்தத் தபஸை ஸாத்துவிகம் என்கிறார்கள்.

நம்பிக்கையோடு - ஆஸ்திக்ய புத்தியோடு, (சாஸ்திரத்தில் கூறிய விஷயங்கள் உண்டு என்னும் எண்ணத்தோடு. அந்த - பிரகிருதத்தில் பேசிவருகின்ற. மூவகைத்தான - (மெய், மொழி, மனம் என்னும்) மூன்று இருப்பிடங்களையுடைய. மனிதர்களால் - அநுஷ்டிப்பவரால். எது இத்தகைய தவமோ, அதனை ஆன்றோர்கள் ஸத்துவகுணத்தாலானதாகக் கூறுகிறார்கள். (௧௭)

௧௮. 𑌸𑌤𑍍𑌕𑌾𑌰𑌮𑌾𑌨𑌪𑍂𑌜𑌾𑌰𑍍𑌥𑌂 𑌤𑌪𑍋 𑌦𑌮𑍍𑌭𑍇𑌨 𑌚𑍈𑌵 𑌯𑌤𑍍 ।
𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌤𑌦𑌿𑌹 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌰𑌾𑌜𑌸𑌂 𑌚𑌲𑌮𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍 ॥

𑌸𑌤𑍍𑌕𑌾𑌰𑌃 𑌸𑌾𑌧𑍁𑌕𑌾𑌰𑌃 "𑌸𑌾𑌧𑍁𑌰𑌯𑌂 𑌤𑌪𑌸𑍍𑌵𑍀 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃" 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑌰𑍍𑌥𑌂, 𑌮𑌾𑌨𑌃 𑌮𑌾𑌨𑌨𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌨𑌾𑌭𑌿𑌵𑌾𑌦𑌨𑌾𑌦𑌿 𑌤𑌦𑌰𑍍𑌥𑌂, 𑌪𑍂𑌜𑌾 𑌪𑌾𑌦𑌪𑍍𑌰𑌕𑍍𑌷𑌾𑌲𑌨𑌾𑌰𑍍𑌚𑌨𑌾𑌶𑌯𑌿𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑌿 𑌤𑌦𑌰𑍍𑌥𑌂 𑌚 𑌤𑌪𑌃 𑌸𑌤𑍍𑌕𑌾𑌰𑌮𑌾𑌨𑌪𑍂𑌜𑌾𑌰𑍍𑌥𑌂, 𑌦𑌮𑍍𑌭𑍇𑌨 𑌚𑍈𑌵 𑌯𑌤𑍍 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌤𑌪𑌃 𑌤𑌤𑍍 𑌇𑌹 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌕𑌥𑌿𑌤𑌂 𑌰𑌾𑌜𑌸𑌂 𑌚𑌲𑌂 𑌕𑌾𑌦𑌾𑌚𑌿𑌤𑍍𑌕𑌫𑌲𑌤𑍍𑌵𑍇𑌨 𑌅𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍 ॥ ௧௮ ॥

௧௯. 𑌮𑍂𑌢𑌗𑍍𑌰𑌾𑌹𑍇𑌣𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌯𑌤𑍍 𑌪𑍀𑌡𑌯𑌾 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌤𑌪𑌃 ।
𑌪𑌰𑌸𑍍𑌯𑍋𑌤𑍍𑌸𑌾𑌦𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 𑌵𑌾 𑌤𑌤𑍍𑌤𑌾𑌮𑌸𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍 ॥

𑌮𑍂𑌢𑌗𑍍𑌰𑌾𑌹𑍇𑌣 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑍇𑌨 𑌕𑍃𑌤𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑍀𑌡𑌯𑌾 𑌯𑌤𑍍 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌤𑌪𑌃 𑌪𑌰𑌸𑍍𑌯 𑌉𑌤𑍍𑌸𑌾𑌦𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 𑌵𑌿𑌨𑌾𑌶𑌾𑌯 𑌵𑌾 𑌤𑌤𑍍 𑌤𑌾𑌮𑌸𑌂 𑌤𑌪𑌃 𑌉𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍 ॥ ௧௯ ॥

𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌦𑌾𑌨𑌤𑍍𑌰𑍈𑌵𑌿𑌧𑍍𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇—

௨௰. 𑌦𑌾𑌤𑌵𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌯𑌦𑍍𑌦𑌾𑌨𑌂 𑌦𑍀𑌯𑌤𑍇𑌽𑌨𑍁𑌪𑌕𑌾𑌰𑌿𑌣𑍇 ।
𑌦𑍇𑌶𑍇 𑌕𑌾𑌲𑍇 𑌚 𑌪𑌾𑌤𑍍𑌰𑍇 𑌚 𑌤𑌦𑍍𑌦𑌾𑌨𑌂 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ॥

𑌦𑌾𑌤𑌵𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌏𑌵𑌂 𑌮𑌨𑌃 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌯𑌤𑍍 𑌦𑌾𑌨𑌂 𑌦𑍀𑌯𑌤𑍇 𑌅𑌨𑍁𑌪𑌕𑌾𑌰𑌿𑌣𑍇

---

௧௮. எந்தத் தபஸானது உபசாரத்திற்காகவும், மதிப்பிற்காகவும், வழிபடுதற்காகவும் கள்ளமாகவே செய்யப்படுகின்றதோ, அது ராஜஸம் எனப்பட்டது: இங்கே(தான் பயனுள்ளது): சஞ்சலமானது: உறுதியற்றது.

உபசாரத்திற்காக - "இவன் தவமுடைய நல்ல பிராமணன்" என்பதற்காக, (இவ்வாறு பிறர் தன்னைக் கொண்டாடுவதற்காக). மதிப்பு - மதித்தல்; இருக்கை யெழுதல், வணங்கல் முதலியன. அவற்றிற்காக - (இவ்வாறு தன்னைப் பிறர் மதித்தற்காக.) வழிபடுதல்-காலலம்பல், பூஜித்தல், விருந்திடுதல் முதலியன. அவற்றிற்காக - (பிறர் இவ்விதமாகத் தன்னைத் தொழுதற்காக). சஞ்சலமானது - (சிறிதுகாலம் நிற்கும் பயனுள்ளது.—ம.) எதோ ஒருகாலத்துப் பயனுடையதனால், உறுதியற்றது - (சிறிது காலம் நிற்கின்ற அந்தப்பயனையும் கொடுப்பதென்பதும் நிச்சயமில்லாதது). (௧௮)

௧௯. முரட்டுப்பிடியினால் எந்தத் தவமானது தன்னை ஹிம்ஸித்துக்கொண்டு செய்யப்படுகின்றதோ, அல்லது பிறனைக் கெடுத்தற்காகச்(செய்யப்படுகின்றதோ), அது தாமஸமாகக் கூறப்பட்டது.

முரட்டுப்பிடியினால் - பகுத்தறிவில்லா உறுதியினால். அது - தவம். (௧௯)

தானங்களின் மூன்று வகை.

இனி, தானத்தினுடைய மூன்றுவகைகளையும் கூறுகிறார்:

௨௰. எந்தத் தானமானது உதவிபுரியாதவனுக்கு, (உரிய) இடத்திலும் (உரிய) காலத்திலும் யோக்கியனிடத்திலும் கொடுக்கவேண்டுமென்று கொடுக்கப்படுகின்றதோ அந்தத் தானம் ஸாத்துவிகம் எனப்படுகின்றது.

கொடுக்கவேண்டுமென்று - (கொடுக்கவேண்டியது தனது கடமையென்று) இவ்வாறு மனங்கொண்டு. உதவிபுரியாதவனுக்கு - பதிலுபகாரத்தைச் செய்யமுடி

𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌪𑌕𑌾𑌰𑌾𑌸𑌮𑌰𑍍𑌥𑌾𑌯, 𑌸𑌮𑌰𑍍𑌥𑌾𑌯𑌾𑌪𑌿 𑌨𑌿𑌰𑌪𑍇𑌕𑍍𑌷𑌂 𑌦𑍀𑌯𑌤𑍇, 𑌦𑍇𑌶𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑍇 𑌕𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌾𑌦𑍌 𑌕𑌾𑌲𑍇 𑌸𑌂𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑍌 𑌪𑌾𑌤𑍍𑌰𑍇 𑌚 𑌷𑌡𑌙𑍍𑌗𑌵𑌿𑌦𑍍𑌵𑍇𑌦𑌪𑌾𑌰𑌗𑍇 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍌, 𑌤𑌦𑍍𑌦𑌾𑌨𑌂 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ॥ ௨௦ ॥

௨௧. 𑌯𑌤𑍍𑌤𑍁 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌪𑌕𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑌂 𑌫𑌲𑌮𑍁𑌦𑍍𑌦𑌿𑌶𑍍𑌯 𑌵𑌾 𑌪𑍁𑌨𑌃 ।
𑌦𑍀𑌯𑌤𑍇 𑌚 𑌪𑌰𑌿𑌕𑍍𑌲𑌿𑌷𑍍𑌟𑌂 𑌤𑌦𑍍𑌦𑌾𑌨𑌂 𑌰𑌾𑌜𑌸𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ॥

𑌯𑌤𑍍𑌤𑍁 𑌦𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌪𑌕𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑌂, 𑌕𑌾𑌲𑍇 𑌤𑍁 𑌅𑌯𑌂 𑌮𑌾𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌪𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑍀𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑌰𑍍𑌥𑌂, 𑌫𑌲𑌂 𑌵𑌾, 𑌅𑌸𑍍𑌯 𑌦𑌾𑌨𑌸𑍍𑌯 𑌮𑍇 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 𑌅𑌦𑍃𑌷𑍍𑌟𑌮𑍍 𑌇𑌤𑌿, 𑌤𑌤𑍍 𑌉𑌦𑍍𑌦𑌿𑌶𑍍𑌯 𑌪𑍁𑌨𑌃 𑌦𑍀𑌯𑌤𑍇 𑌚 𑌪𑌰𑌿𑌕𑍍𑌲𑌿𑌷𑍍𑌟𑌂 𑌖𑍇𑌦𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌂, 𑌤𑌦𑍍𑌦𑌾𑌨𑌂 𑌰𑌾𑌜𑌸𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ॥ ௨௧ ॥

௨௨. 𑌅𑌦𑍇𑌶𑌕𑌾𑌲𑍇 𑌯𑌦𑍍𑌦𑌾𑌨𑌮𑌪𑌾𑌤𑍍𑌰𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌦𑍀𑌯𑌤𑍇 ।
𑌅𑌸𑌤𑍍𑌕𑍃𑌤𑌮𑌵𑌜𑍍𑌞𑌾𑌤𑌂 𑌤𑌤𑍍𑌤𑌾𑌮𑌸𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍 ॥

𑌅𑌦𑍇𑌶𑌕𑌾𑌲𑍇 𑌅𑌦𑍇𑌶𑍇 𑌅𑌪𑍁𑌣𑍍𑌯𑌦𑍇𑌶𑍇 𑌮𑍍𑌲𑍇𑌚𑍍𑌛𑌾𑌶𑍁𑌚𑍍𑌯𑌾𑌦𑌿𑌸𑌂𑌕𑍀𑌰𑍍𑌣𑍇 𑌅𑌕𑌾𑌲𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑍇𑌨 𑌅𑌪𑍍𑌰𑌖𑍍𑌯𑌾𑌤𑍇 𑌸𑌂𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌵𑌿𑌶𑍇𑌷𑌰𑌹𑌿𑌤𑍇 𑌅𑌪𑌾𑌤𑍍𑌰𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌮𑍂𑌰𑍍𑌖𑌤𑌸𑍍𑌕𑌰𑌾𑌦𑌿𑌭𑍍𑌯𑌃; 𑌦𑍇𑌶𑌾𑌦𑌿𑌸𑌂𑌪𑌤𑍍𑌤𑍌 𑌵𑌾 𑌅𑌸𑌤𑍍𑌕𑍃𑌤𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌵𑌚𑌨𑌪𑌾𑌦𑌪𑍍𑌰𑌕𑍍𑌷𑌾𑌲𑌨𑌪𑍂𑌜𑌾𑌦𑌿𑌰𑌹𑌿𑌤𑌮𑍍 𑌅𑌵𑌜𑍍𑌞𑌾𑌤𑌂 𑌪𑌾𑌤𑍍𑌰𑌪𑌰𑌿𑌭𑌵𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌚 𑌯𑌤𑍍, 𑌤𑌦𑍍𑌦𑌾𑌨𑌂 𑌤𑌾𑌮𑌸𑌮𑍍 𑌉𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍 ॥ ௨௨ ॥

---

யாதவனுக்கு; (அல்லது அதனைச் செய்யக்கூடியவனுக்கு; என்றும் கொள்ளலாம். ஏனெனில், அவன் பதிலுபகாரத்தைச்) செய்யக்கூடியவனாயிருந்தாலும், (அதனை) எதிர்பாராது (அவனுக்குத் தானம்) கொடுக்கப்படுகிறது. இடத்தில் - புண்யபூமியான குருக்ஷேத்திரம் முதலியவற்றில், காலத்தில் - கிரகணம் முதலியவற்றில். யோக்கியனிடத்தில் - ஆறுசாஸ்திரங்களையும் அறிந்து வேதங்களைக் கரைகண்டவன் முதலானோரிடத்தில். (௨௦)

௨௧. மற்று, எது பதிலுபகாரத்திற்காயினும், அல்லது பயனைக் கருதியாயினும், அல்லது வருத்தத்தோடாயினும் கொடுக்கப்படுகின்றதோ, அந்தத் தானம் ராஜஸம் எனப்படுகின்றது.

எது - தானம். பதிலுபகாரத்திற்காக-"இவன் எனக்குச் சமயத்தில் பதிலுதவி செய்வான்" என்பதற்காக. பயனை - இந்தத் தானத்திற்கு எனக்கு மறுமைப்பயன் உண்டாகும் என்பதை. வருத்தத்தோடு - (ஆ! இவ்வளவு செலவு ஆகிவிட்டதே! என்னும்(மன)வருத்தத்தோடு. (௨௧)

௨௨. எந்தத் தானமானது அதேசத்திலும், அகாலத்திலும், அயோக்கியர்கட்கும், உபசரிக்கப்படாததாகவும், அவமதிக்கப்பட்டதாகவும் கொடுக்கப்படுகின்றதோ, அது தாமஸமாகக் கூறப்பட்டது.

அதேசத்தில் - புண்யஸ்தலமல்லாததாய், மிலேச்சர்கள் அசுத்தங்கள் முதலியன கலந்துகிடக்கும் இடத்தில். அகாலத்தில் - புண்யத்தை விளைப்பதாக (புண்ய காலமாக)ப் பிரசித்தமாயில்லாத காலத்தில், கிரகணம்முதலிய விசேஷங்களில்லாத காலத்தில். அயோக்கியர்கட்கு-மூர்க்கர், திருடர் முதலானோர்கட்கு. உபசரிக்கப்படாததாக - இடம்முதலியன அமைந்திருந்தாலும் [புண்யஸ்தலமாயும், புண்யகாலமாயுமிருந்தாலும்], இனிய சொல்லும் காலலம்பலும் பூஜித்தலும் முதலியன இல்லாததாக. அவமதிக்கப்பட்டதாக - யோக்கியர்களை அவமதித்தலோடமைந்ததாக. (௨௨)

𑌯𑌜𑍍𑌞𑌦𑌾𑌨𑌤𑌪𑌃𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑍀𑌨𑌾𑌂 𑌸𑌾𑌦𑍍𑌗𑍁𑌣𑍍𑌯𑌕𑌰𑌣𑌾𑌯 𑌅𑌯𑌮𑍍 𑌉𑌪𑌦𑍇𑌶𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௨௩. 𑍐 𑌤𑌤𑍍𑌸𑌦𑌿𑌤𑌿 𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃 ।
𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌸𑍍𑌤𑍇𑌨 𑌵𑍇𑌦𑌾𑌶𑍍𑌚 𑌯𑌜𑍍𑌞𑌾𑌶𑍍𑌚 𑌵𑌿𑌹𑌿𑌤𑌾𑌃 𑌪𑍁𑌰𑌾 ॥

𑍐 𑌤𑌤𑍍 𑌸𑌤𑍍 𑌇𑌤𑌿 𑌏𑌵𑌂 𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑌃 𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌶𑍍𑌯𑌤𑍇 𑌅𑌨𑍇𑌨𑍇𑌤𑌿 𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑌃 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑍋 𑌨𑌾𑌮𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃 𑌚𑌿𑌨𑍍𑌤𑌿𑌤𑌃 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑍇𑌷𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌭𑌿𑌃 । 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌃 𑌤𑍇𑌨 𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑍇𑌨 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑍇𑌨 𑌵𑍇𑌦𑌾𑌶𑍍𑌚 𑌯𑌜𑍍𑌞𑌾𑌶𑍍𑌚 𑌵𑌿𑌹𑌿𑌤𑌾𑌃 𑌨𑌿𑌰𑍍𑌮𑌿𑌤𑌾𑌃 𑌪𑍁𑌰𑌾 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍍—𑌇𑌤𑌿 𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

௨௪. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍋𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑍍𑌯 𑌯𑌜𑍍𑌞𑌦𑌾𑌨𑌤𑌪𑌃𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 ।
𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌵𑌿𑌧𑌾𑌨𑍋𑌕𑍍𑌤𑌾𑌃 𑌸𑌤𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌾𑌦𑌿𑌨𑌾𑌮𑍍 ॥

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 ‘𑌓𑌮𑍍’ 𑌇𑌤𑌿 𑌉𑌦𑌾𑌹𑍃𑌤𑍍𑌯 𑌉𑌚𑍍𑌚𑌾𑌰𑍍𑌯 𑌯𑌜𑍍𑌞𑌦𑌾𑌨𑌤𑌪𑌃𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌯𑌜𑍍𑌞𑌾𑌦𑌿𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌵𑌿𑌧𑌾𑌨𑍋𑌕𑍍𑌤𑌾𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌚𑍋𑌦𑌿𑌤𑌾𑌃 𑌸𑌤𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌾𑌦𑌿𑌨𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌦𑌨𑌶𑍀𑌲𑌾𑌨𑌾𑌮𑍍 ॥ ௨௪ ॥

௨௫. 𑌤𑌦𑌿𑌤𑍍𑌯𑌨𑌭𑌿𑌸𑌨𑍍𑌧𑌾𑌯 𑌫𑌲𑌂 𑌯𑌜𑍍𑌞𑌤𑌪𑌃𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 ।
𑌦𑌾𑌨𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌶𑍍𑌚 𑌵𑌿𑌵𑌿𑌧𑌾𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌨𑍍𑌤𑍇 𑌮𑍋𑌕𑍍𑌷𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌭𑌿𑌃 ॥

---

### குற்றங்குறைநேர்ந்த கர்மங்களைப் பூர்ணமாய் நிறைவேற்றும் வகை.

யஜ்ஞம், தாநம், தவம்முதலியவற்றைப் பூர்ணமாய்நிறைவேற்ற இவ்வுபதேசம் அருளிச்செய்யப்படுகின்றது :

௨௩. ஓம் தத் ஸத் என்பது - ப்ரஹ்மத்தின் மூன்றுவிதமான பெயராகக் கொள்ளப்பட்டிருக்கின்றது ; அதனால் பிராமணர்களும், வேதங்களும், யஜ்ஞங்களும் முன்பு படைக்கப்பட்டார்கள்.

கொள்ளப்பட்டிருக்கின்றது - ப்ரஹ்மத்தை அறிந்தவர்களால் உபநிஷத்துக்களில் அருளிச்செய்யப்பட்டிருக்கின்றது. (யஜ்ஞம்முதலியவற்றில் குற்றங்குறைகள் சேர்ந்தனவாகத் தெரிந்தவளவிலே, ஓம் தத் ஸத் என்னும் மூன்று பெயரினுள் ஏதாவதொன்றை உச்சரிப்பதனால், அவை குற்றக்குறைநீங்கிப் பூர்ணமாய் நிறைவேறுகின்றன என்பது கருத்து.—ஆ.) “ அந்த மூன்றுவிதமான பெயரினால் பிராமணர்களும், வேதங்களும், யஜ்ஞங்களும் முன்பு (சிருஷ்டித்தொடக்கத்தில் பிரஜாபதியினால்) படைக்கப்பட்டார்கள் ” என்பது - (அப்)பெயரைப்புகழ்தற்காகக் கூறப்படுகின்றது.(௨௩)

௨௪. ஆகவே, வேதத்தைக் கூறும் இயல்பினரால் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட யஜ்ஞம் தாநம் தவம் என்னும்கர்மங்கள் எப்போதும் “ ஓம் ” என்று உச்சரித்துத் தொடங்கப்படுகின்றன.

யஜ்ஞம் தாநம் தவம் என்னும்கர்மங்கள் - யஜ்ஞம்முதலியவடிவமாயுள்ள செய்கைகள். (௨௪)

௨௫. முக்தியைத் தேடுவோர்களால் யஜ்ஞம் தபஸ் என்னும் கர்மங்களும், பல்வகையான தாநமென்னும் கர்மங்களும் பயனை எதிர்நோக்காது “ தத் ” என்று செய்யப்படுகின்றன.

'𑌤𑌤𑍍' 𑌇𑌤𑌿 𑌅𑌨𑌭𑌿𑌸𑌨𑍍𑌧𑌾𑌯—'𑌤𑌤𑍍' 𑌇𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌭𑌿𑌧𑌾𑌨𑌮𑍍 𑌉𑌚𑍍𑌚𑌾𑌰𑍍𑌯 𑌅𑌨𑌭𑌿𑌸𑌨𑍍𑌧𑌾𑌯 𑌚 𑌯𑌜𑍍𑌞𑌾𑌦𑌿𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌫𑌲𑌂 𑌯𑌜𑍍𑌞𑌤𑌪𑌃𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌯𑌜𑍍𑌞𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌤𑌪𑌃𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌶𑍍𑌚 𑌯𑌜𑍍𑌞𑌤𑌪𑌃𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌦𑌾𑌨𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌶𑍍𑌚 𑌵𑌿𑌵𑌿𑌧𑌾𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌪𑍍𑌰𑌦𑌾𑌨𑌾𑌦𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌨𑍍𑌤𑍇 𑌨𑌿𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌮𑍋𑌕𑍍𑌷𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌿𑌭𑌿𑌃 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌰𑍍𑌥𑌿𑌭𑌿𑌃 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍁𑌭𑌿𑌃 ॥௨௫॥

𑌓𑌂𑌤𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌯𑍋𑌃 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌃 𑌉𑌕𑍍𑌤𑌃 । 𑌅𑌥 𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌸𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌸𑍍𑌯 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌃 𑌕𑌥𑍍𑌯𑌤𑍇—

௨௬. 𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑍇 𑌸𑌾𑌧𑍁𑌭𑌾𑌵𑍇 𑌚 𑌸𑌦𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇 ।
𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌤𑌥𑌾 𑌸𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇 ॥

𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑍇 𑌅𑌸𑌤𑌃 𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑍇, 𑌯𑌥𑌾 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌸𑍍𑌯 𑌪𑍁𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌜𑌨𑍍𑌮𑌨𑌿, 𑌤𑌥𑌾 𑌸𑌾𑌧𑍁𑌭𑌾𑌵𑍇 𑌚 𑌅𑌸𑌦𑍍𑌵𑍃𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌅𑌸𑌾𑌧𑍋𑌃 𑌸𑌦𑍍𑌵𑍃𑌤𑍍𑌤𑌤𑌾 𑌸𑌾𑌧𑍁𑌭𑌾𑌵𑌃 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌸𑌾𑌧𑍁𑌭𑌾𑌵𑍇 𑌚 '𑌸𑌤𑍍' 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 𑌅𑌭𑌿𑌧𑌾𑌨𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 𑌪𑍍𑌰𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇 𑌅𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 । 𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌵𑌿𑌵𑌾𑌹𑌾𑌦𑍌 𑌚 𑌤𑌥𑌾 𑌸𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇 𑌪𑍍𑌰𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 ॥ ௨௬ ॥

௨௭. 𑌯𑌜𑍍𑌞𑍇 𑌤𑌪𑌸𑌿 𑌦𑌾𑌨𑍇 𑌚 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 𑌸𑌦𑌿𑌤𑌿 𑌚𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌕𑌰𑍍𑌮 𑌚𑍈𑌵 𑌤𑌦𑌰𑍍𑌥𑍀𑌯𑌂 𑌸𑌦𑌿𑌤𑍍𑌯𑍇𑌵𑌾𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ॥

---

"தத்" என்று - ப்ரஹ்மத்தின் பெயராகிய தத் என்பதை உச்சரித்து. பயனை - யஜ்ஞம்முதலியகர்மத்தின் பயனை. தாநமென்னும்கர்மங்கள் - நிலம், தங்கம் இவற்றைக்கொடுத்தல் முதலாகியவை. முக்தியைத்தேடுவோர்களால் - மோக்ஷத்தை நாடி, (ஸம்ஸாரத்தினின்றும்) தப்ப விரும்புவோர்களால். (௨௫)

"ஓம்" "தத்" என்னும் சொற்களை உபயோகித்தல் கூறப்பட்டது. இனி, இப்பொழுது, "ஸத்" என்னும்சொல்லை உபயோகித்தல் கூறப்படுகின்றது :

௨௬. "ஸத்" என்பது - "உள்ளது" என்னும்பொருளிலும், "நல்ல தன்மை" என்னும்பொருளிலும் வழங்கப்படுகின்றது. அவ்வாறே, பார்த்த! "ஸத்" என்னும்சொல்லானது - "மங்களமான கார்யம்" என்னும்பொருளிலும் வழங்கப்படுகின்றது.

"உள்ளது" என்னும்பொருளிலும், இல்லாதவற்றின் இருப்பிலும், உதாரணமாக (ஒருவனுக்கு, முன்பு) இல்லாத மகன் பிறந்தவளவிலே (அவனுக்கு மகன் "இருக்கிறான்" என்பதிலும்), அவ்வாறே "நல்ல தன்மை" என்னும் பொருளிலும், நல்லொழுக்கமுடைமையிலும், (உதாரணமாக, தீயொழுக்கமுள்ளவனைத் தீயோனாயிருந்த இவன், இப்பொழுது நல்லவன், நல்லொழுக்கமுடையவன், "நல்லதன்மையன்" என்பதிலும்) ப்ரஹ்மத்தின் பெயராகிய இந்த "ஸத்" என்பது உபயோகிக்கப்படுகின்றது. அன்றியும், "ஸத்" என்னும்சொல்லானது - விவாஹம்முதலிய மங்கள கார்யத்திலும் உபயோகிக்கப்படுகின்றது. (௨௬)

௨௭. யஜ்ஞத்திலும், தவத்திலும், தாநத்திலும் நிலைத்துநிற்றல் "ஸத்" எனக் கூறப்படுகின்றது. மேலும், அவற்றைப்பற்றிய கர்மமும் "ஸத்" என்றே கூறப்படுகின்றது.

𑌯𑌜𑍍𑌞𑍇 𑌯𑌜𑍍𑌞𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌯𑌾 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃, 𑌤𑌪𑌸𑌿 𑌚 𑌯𑌾 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃, 𑌦𑌾𑌨𑍇 𑌚 𑌯𑌾 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃, 𑌸𑌾 '𑌸𑌤𑍍' 𑌇𑌤𑌿 𑌚 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌵𑌿𑌦𑍍𑌵𑌦𑍍𑌭𑌿𑌃। 𑌕𑌰𑍍𑌮 𑌚 𑌏𑌵 𑌤𑌦𑌰𑍍𑌥𑍀𑌯𑌂 𑌯𑌜𑍍𑌞𑌦𑌾𑌨𑌤𑌪𑍋𑌽𑌰𑍍𑌥𑍀𑌯𑌮𑍍—𑌅𑌥𑌵𑌾 𑌯𑌸𑍍𑌯 𑌅𑌭𑌿𑌧𑌾𑌨𑌤𑍍𑌰𑌯𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌂 𑌤𑌦𑌰𑍍𑌥𑍀𑌯𑌂 𑌈𑌶𑍍𑌵𑌰𑌾𑌰𑍍𑌥𑍀𑌯𑌮𑍍 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍, '𑌸𑌤𑍍' 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵 𑌅𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇॥

𑌤𑌤𑍍 𑌏𑌤𑌤𑍍 𑌯𑌜𑍍𑌞𑌦𑌾𑌨𑌤𑌪𑌆𑌦𑌿 𑌕𑌰𑍍𑌮 𑌅𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 𑌵𑌿𑌗𑍁𑌣𑌮𑌪𑌿 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 𑌅𑌭𑌿𑌧𑌾𑌨𑌤𑍍𑌰𑌯𑌪𑍍𑌰𑌯𑍋𑌗𑍇𑌣 𑌸𑌗𑍁𑌣𑌂 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 𑌸𑌂𑌪𑌾𑌦𑌿𑌤𑌂 𑌭𑌵𑌤𑌿 ॥ ௨௭ ॥

𑌤𑌤𑍍𑌰 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌤𑌯𑌾 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑌂𑌪𑌾𑌦𑍍𑌯𑌤𑍇 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍, 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍—

௨௮. 𑌅𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌹𑍁𑌤𑌂 𑌦𑌤𑍍𑌤𑌂 𑌤𑌪𑌸𑍍𑌤𑌪𑍍𑌤𑌂 𑌕𑍃𑌤𑌂 𑌚 𑌯𑌤𑍍 ।
𑌅𑌸𑌦𑌿𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌨 𑌚 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 𑌨𑍋 𑌇𑌹 ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑍇 𑌶𑌤𑌸𑌾𑌹𑌸𑍍𑌰𑍍𑌯𑌾𑌂 𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌯𑌾𑌂 𑌵𑍈𑌯𑌾𑌸𑌿𑌕𑍍𑌯𑌾𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌪𑌰𑍍𑌵𑌣𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍁 𑌉𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌰𑌯𑌵𑌿𑌭𑌾𑌗𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌮 𑌸𑌪𑍍𑌤𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

---

யஜ்ஞத்தில் - யஜ்ஞகர்மத்தில். கூறப்படுகின்றது - அறிந்த ஆன்றோர்களால் சொல்லப்படுகின்றது. அவற்றை - யஜ்ஞம் தானம் தவம் என்றவற்றை. அல்லது, "𑌤𑌦𑌰𑍍𑌥𑍀𑌯𑌂 = எவனுடைய மூன்றுபெயர்களும் பிரகிருதத்தில் கூறப்பட்டிருக்கின்றனவோ, அவனைப்பற்றிய; ஈச்வரார்ப்பணமான என்றபடி" என்க.

இந்த யஜ்ஞம் தானம் தவம் முதலிய அக்கர்மமானது ஸாத்துவிகமல்லாததாகவும், குற்றங்குறையுள்ளதாகவும் இருந்தாலும், ப்ரஹ்மத்தினுடைய மூன்றுபெயர்களையும் நம்பிக்கையொடு உபயோகிப்பதனால் பூர்ணமாய் நிறைவேறியதாகவும், ஸாத்துவிகமாகவும் ஆகின்றது என்க. (௨௭)

சிரத்தையில்லாத காரியம் வீணும்.

அவை எல்லாவற்றின்மேலும் சிரத்தையை முக்கியமாகவுடைமையினால் [அவற்றை விசேஷநம்பிக்கையோடு செய்தால்] எல்லாம் (பூர்ணமாக) நிறைவேறுவனவாகின்றன ஆதலால்,

௨௮. சிரத்தையில்லாது ஹோமஞ்செய்ததும், கொடுத்ததும், அநுஷ்டித்த தவமும், செய்த (மற்றைக் கர்மமும்) எதுவோ, பார்த்த! (அது) - "அஸத்" என்று கூறப்படுகின்றது; அது மறுமைக்காவ தில்லை, இம்மைக்காவ தில்லை.

ஸ்ரீமஹாபாரதத்திலே, வ்யாஸரருளிச்செய்த நூறாயிரக்கிரந்த ஸம்ஹிதையிலே, பீஷ்மபர்வத்திலே, ஸ்ரீமத் பகவத்கீதைகளாக, உபநிஷத்துக்களாக ப்ரஹ்மவித்யையாக, யோகசாஸ்திரமாக இருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணார்ஜுந ஸம்வாதத்திலே ச்ரத்தாத்ரயவிபாகயோகம் என்னும் பதினேழாம் அத்தியாயம் முற்றும்.

𑌅𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌹𑍁𑌤𑌂 𑌹𑌵𑌨𑌂 𑌕𑍃𑌤𑌮𑍍, 𑌅𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌦𑌤𑍍𑌤𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇𑌭𑍍𑌯𑌃, 𑌅𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌤𑌪𑌃 𑌤𑌪𑍍𑌤𑌮𑍍 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌿𑌤𑌮𑍍, 𑌤𑌥𑌾 𑌅𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑍈𑌵 𑌕𑍃𑌤𑌂 𑌚 𑌯𑌤𑍍 𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌨𑌮𑌸𑍍𑌕𑌾𑌰𑌾𑌦𑌿, 𑌤𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍 '𑌅𑌸𑌤𑍍' 𑌇𑌤𑌿 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌸𑌾𑌧𑌨𑌮𑌾𑌰𑍍𑌗𑌬𑌾𑌹𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍—𑌪𑌾𑌰𑍍𑌥! 𑌨 𑌚 𑌤𑌤𑍍 𑌬𑌹𑍁𑌲𑌾𑌯𑌾𑌸𑌮𑌪𑌿 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 𑌫𑌲𑌾𑌯, 𑌨𑍋𑌽𑌪𑌿 𑌇𑌹𑌫𑌲𑌾𑌯, 𑌸𑌾𑌧𑍁𑌭𑌿𑌃 𑌨𑌿𑌨𑍍𑌦𑌿𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿 ॥ ௨௮ ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌭𑌾𑌷𑍍𑌯𑍇 𑌸𑌪𑍍𑌤𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

---

கொடுத்தது - நம்பிக்கையில்லாது, பிராமணர்களுக்குத் தாநங்கொடுத்தது. செய்த (மற்றைக்கர்மம்) - நம்பிக்கையில்லாது செய்த ஸ்தோத்திரம், நமஸ்காரம் முதலியன, அவையெல்லாம் என்னையடைதற்கு ஸாதநமான வழிக்குப்புறம்பே உள்ளமையினல் "அஸத்" எனப்படுகின்றன. அது [சிரத்தையில்லாத கர்மம்] சிரமம் மிகுந்ததாயினும், மறுமைக்குப் பயன்படுவதில்லை; நல்லோர்களால் இகழ்ந்துரைக்கப்பட்டமையினல், இம்மைக்கும் பயன்படுவதில்லை என்பதாம். (௨௮)

(இவ்வத்தியாயத்தினுடைய தேர்ந்த பொருளாவது :—நம்பிக்கையுடையவர்கள் சாஸ்திரத்தை அறியாதவராயினும், தமது நம்பிக்கைக்குத் தக்கபடி ஸாத்துவிகராகவோ, ராஜஸராகவோ, தாமஸராகவோ இருக்கிருர்கள். அவர்கள் ராஜஸதாமஸ ஆஹாரம் முதலியவற்றைத் தள்ளி, ஸாத்துவிக ஆஹாரம் முதலியவற்றைக் கைக்கொண்டு ஸத்துவகுணத்தை வளர்க்கவேண்டும். யஜ்ஞம் தாநம் முதலியவற்றிலேகுற்றங்குறை நேர்ந்தவிடத்து, அவர்கள் ப்ரஹ்மத்தினுடைய ஓம் தத் ஸத் என்னும்பெயரினைக் கூறி அவற்றைப் பரிகரிக்கிருர்கள்; அங்ஙனம் அக்கர்மங்கள் பூர்ணமாய் நிறைவேறுகின்றன. அவர்கள் இவ்வாருகப் புத்தி கசடறத்திருந்தியவராய் சிரவணம்முதலியவற்றிற் சென்று, உண்மையினைத் தாமே நேரே கண்டுணர்ந்து, ஸம்ஸாரத்தினின்றும் தப்புகிருர்கள் என்பதாம்.—ஆ.)

ஸ்ரீமத் பகவத்கீதாபாஷ்யத்தில் பதினேழாவது அத்தியாயம் முற்றிற்று.

---

௧௮

## 𑌅𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 𑌮𑍋𑌕𑍍𑌷𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑌃॥

𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑍈𑌵 𑌶𑍍𑌰𑍀𑌗𑍀𑌤𑌾𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌅𑌰𑍍𑌥𑌃 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑍇 𑌉𑌪𑌸𑌂𑌹𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑍍𑌯𑌃 𑌅𑌰𑍍𑌥 𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 𑌸𑌙𑍍𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇। 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍍𑌵𑌪𑌿 𑌅𑌤𑍀𑌤𑍇𑌷𑍁 𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌷𑍁 𑌉𑌕𑍍𑌤𑌃 𑌅𑌰𑍍𑌥𑌃 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑍇 𑌅𑌨𑍂𑌦𑍍𑌯𑌤𑍇। 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑍍𑌤𑍁 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌤𑍍𑌯𑌾𑌗𑌶𑌬𑍍𑌦𑌾𑌰𑍍𑌥𑌯𑍋𑌰𑍇𑌵 𑌵𑌿𑌶𑍇𑌷𑌬𑍁𑌭𑍁𑌤𑍍𑌸𑍁𑌃 𑌉𑌵𑌾𑌚—

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 ॥

௧. 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌵𑍇𑌦𑌿𑌤𑍁𑌮𑍍।
𑌤𑍍𑌯𑌾𑌗𑌸𑍍𑌯 𑌚 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶 𑌪𑍃𑌥𑌕𑍍𑌕𑍇𑌶𑌿𑌨𑌿𑌷𑍂𑌦𑌨 ॥

𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌯—𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌶𑌬𑍍𑌦𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃—𑌹𑍇 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌵𑌃 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂, 𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃, 𑌇𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌵𑍇𑌦𑌿𑌤𑍁𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌂 𑌤𑍍𑌯𑌾𑌗𑌸𑍍𑌯 𑌚 𑌤𑍍𑌯𑌾𑌗𑌶𑌬𑍍𑌦𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯𑍇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃, 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶 𑌪𑍃𑌥𑌕𑍍 𑌇𑌤𑌰𑍇𑌤𑌰𑌵𑌿𑌭𑌾𑌗𑌤𑌃, 𑌕𑍇𑌶𑌿𑌨𑌿𑌷𑍂𑌦𑌨 𑌕𑍇𑌶𑌿𑌨𑌾𑌮𑌾 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑌸𑍁𑌰𑌃, 𑌤𑌂 𑌨𑌿𑌷𑍂𑌦𑌿𑌤𑌵𑌾𑌨𑍍 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌃, 𑌤𑍇𑌨 𑌤𑌨𑍍𑌨𑌾𑌮𑍍𑌨𑌾 𑌸𑌂𑌬𑍋𑌧𑍍𑌯𑌤𑍇 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑍇𑌨 ॥ ௧ ॥

---

## பதினெட்டாம் அத்தியாயம்: மோக்ஷஸந்யாஸயோகம்.

ஸந்யாஸத்தையும், த்யாகத்தையும் பகுத்துக்காட்டல்.

இவ்வத்தியாயத்தினுள் கீதாசாஸ்திரம் முழுவதின் பொருளேயும், வேதப்பொருள்முழுவதையும் சுருக்கிமுடித்துக்கூறவேண்டும் என்பதன்பொருட்டாய் இவ்வத்தியாயம் தொடங்கப்படுகின்றது. சென்ற அத்தியாயங்களுள் உரைக்கப்பட்ட விஷயமனைத்துமன்றோ இவ்வற்றினுள் காணப்படுகின்றன. ஆயினும், அர்ஜுனன் "ஸந்யாஸம்" "த்யாகம்" என்னும்சொற்களுடைய அர்த்தத்தின் வேறுபாட்டையே அறியக் கருதியவனுய்க் கூறலாயினன் :

அர்ஜுனன் சொல்லலுற்ருன் :

௧. மஹாபாஹோ! "ஸந்யாஸம்" என்பதனுடைய உண்மையையும், கேசியைக் கொன்ற ஹ்ருஷீகேச! "த்யாகம்" என்பதனுடைய (உண்மையை)யும் தனித்தனியாய் அறிய விரும்புகிறேன்.

"ஸந்யாஸம்" என்பதனுடைய - "ஸந்யாஸம்" என்னும்சொல்லின்அர்த்தத்தினுடைய என்றபடி. உண்மை - தத்துவம், அதனது தன்மை, உள்ளபடியிருக்கும் நிலை என்றபடி. "த்யாகம்" என்பதனுடைய - "த்யாகம்" என்னும்சொல்லின் அர்த்தத்தினுடைய என்றபடி. தனித்தனியாய் - ஒன்றை மற்ருென்றினின்றும் பிரித்து. கேசியென்னும்பெயருடையவன் ஓர் அஸுரன்; அவனை வஸுதேவமகன் பகவான் கொன்றனர்; அதனுல், அந்த ஹ்ருஷீகேசன், கேசிநிஷூதனு எனும் பெயரைக்கொண்டு அர்ஜுனனுல் விளிக்கப்படுகிருர் என்க. (௧)

ஸந்ந்யாஸத்யாகஶப்தௌ தத்ர தத்ர நிர்திஷ்டௌ, ந நிர்தாரிதார்த்தௌ பூர்வேஷு அத்யாயேஷு । அத: அர்ஜுநாய ப்ருஷ்டவதே தந்நிர்ணயாய ஶ்ரீபக வாந் உவாச—

ஶ்ரீபகவாநுவாச ॥

௨. காம்யாநாம் கர்மணாம் ந்யாஸம் ஸந்ந்யாஸம் கவயோ விது: ।
ஸர்வகர்மபலத்யாகம் ப்ராஹுஸ்த்யாகம் விசக்ஷணா: ॥

காம்யாநாம் அஶ்வமேதாதீநாம் கர்மணாம் ந்யாஸம் பரித்யாகம் ஸந்ந்யாஸம் ஸந்ந்யாஸஶப்தார்த்தம், அநுஷ்டேயத்வேந ப்ராப்தஸ்ய அநநுஷ்டாநம், கவய: பண்டிதா: கேசித் விது: விஜாநந்தி । நித்யநைமித்திகாநாம் காம்யாநாம் அநுஷ்டீயமாநாநாம் ஸர்வகர்மணாம் ச க்ருத்ஸ்நஸம்பந்திதயா ப்ராப்தஸ்ய பலஸ்ய பரித்யாக: ஸர்வகர்மபலத்யாக: தம் ப்ராஹு: த்யாகம் த்யாகஶப்தார்த்தம் விசக்ஷணா: பண்டிதா: ॥

யதி காம்யகர்மபரித்யாக: பலபரித்யாகோ வா அர்த்த: வக்தவ்ய:, ஸர்வதா பரித்யாகமாத்ரம் ஸந்ந்யாஸத்யாகஶப்தயோ: ஏக: அர்த்த: ஸ்யாத், ந கடபடஶப்தாவிவ ஜாத்யந்தரபூதார்த்தௌ ॥

---

"ஸந்யாஸம்" "த்யாகம்" என்னும்சொற்கள் சென்ற அத்தியாயங்களுள் ஆங்காங்கு வழங்கப்பட்டன;(ஆனால், இன்னதென்று அவற்றின்)பொருள் தெளிவாய் வரையறுக்கப்படவில்லை. ஆகவே, பகவான், வினவிய அர்ஜுனனுக்கு அவற்றை நிச்சயிக்க அருளிச்செய்கிறார் :

ஸ்ரீபகவான் சொல்லலுற்றார் :

௨. காம்யகர்மங்களைத் துறந்திடுதலை அறிவுடையோர் ஸந்யாஸமாக அறிகிறார்கள் ; கர்மங்களெல்லாவற்றினுடைய பயனையும் விட்டிடுதலை ஞானிகள் த்யாகமாகக் கூறுகிறார்கள்.

அச்வமேதயாகம்முதலிய காம்ய கர்மங்களைத் துறந்திடுதலை, (ஒருபயனை நோக்கி) அநுஷ்டிக்கவேண்டியதாய் வந்ததை அநுஷ்டியாமையை - "ஸந்யாஸம்" என்னும் சொல்லின் பொருளாகச் சில பண்டிதர்கள் அறிகிறார்கள். அநுஷ்டிக்கப்படுகின்ற நித்ய நைமித்திக கர்மங்களெல்லாவற்றினுடைய (பயனும் செய்பவனைத் தொடருமாதலால், அவ்வாறு) தன்னைத் தொடர்ந்துவரும் பயனை விட்டிடுதலை - "த்யாகம்" என்னும்சொல்லின் பொருளாக ஞானிகள் கூறுகிறார்கள்.

காம்யகர்மங்களையும் விட்டிடுதலையும், (கர்மங்களின்) பயனை விட்டிடுதலையும் அர்த்தமாக உரைக்கவேண்டும் ; வேண்டவே, எவ்வாற்றானும் "ஸந்யாஸம்" "த்யாகம்" என்னும் சொற்களுக்கு விட்டிடுதல் மாத்திரமாகிய ஒரேஅர்த்தந்தான் ; "குடம்" "ஆடை" என்னும்சொற்கள்போல, (அவை) வெவ்வேறு வகுப்பான அர்த்தமுள்ளவையல்ல. "குடம்" "ஆடை" என்னும்சொற்கட்கு அர்த்தத்தில் முற்றும் வேறுபாடிருப்பதுபோல, "ஸந்யாஸம்" "த்யாகம்" என்னும்சொற்களுக்கு அர்த்தத்தில் முற்றும் வேறுபாடு இல்லை. ஏதோசிறிது வேறுபாடு இருப்பதை நோக்கிக்கொள்க.— ஆ.)

நநு நித்யநைமித்திகாநாம் கர்மணாம் பலமேவ நாஸ்தி இதி ஆஹு꞉ । கதம் உச்யதே தேஷாம் பலத்யாக꞉, யதா வந்த்யாயா꞉ புத்ரத்யாக꞉ ?

நைஷ தோஷ꞉, நித்யாநாமபி கர்மணாம் பகவதா பலவத்த்வஸ்ய இஷ்டத்வாத் । வக்ஷ்யதி ஹி பகவாந் 'அநிஷ்டமிஷ்டம் மிஶ்ரம் ச' இதி 'ந து ஸம்ந்யாஸிநாம்' இதி ச । ஸம்ந்யாஸிநாமேவ ஹி கேவலம் கர்மபலாஸம்பந்தம் தர்ஶயந் அஸம்ந்யாஸிநாம் நித்யகர்மபலப்ராப்திம் 'பவத்யத்யாகிநாம் ப்ரேத்ய' இதி தர்ஶயதி ॥ ௨ ॥

௩. த்யாஜ்யம் தோஷவதித்யேகே கர்ம ப்ராஹுர்மநீஷிண꞉ ।
யஜ்ஞதாநதப꞉கர்ம ந த்யாஜ்யமிதி சாபரே ॥

த்யாஜ்யம் த்யக்தவ்யம் தோஷவத் தோஷ꞉ அஸ்ய அஸ்தீதி தோஷவத்— கிம் தத் ?—கர்ம, பந்தஹேதுத்வாத் ஸர்வமேவ । அத வா—தோஷ꞉ யதா ராகாதி꞉ த்யஜ்யதே, ததா த்யாஜ்யம் இதி ஏகே கர்ம ப்ராஹு꞉ மநீஷிண꞉ ஸாம்க்யாதித்ருஷ்டிம் ஆஶ்ரிதா꞉, அதிக்ருதாநாம் கர்மிணாமபி இதி । தத்ரைவ யஜ்ஞதாநதப꞉கர்ம ந த்யாஜ்யம் இதி ச அபரே ॥

---

(ஆக்ஷேபம்) :—ஆயின், நித்யநைமித்திககர்மங்கட்குப் பயனே இல்லை எனக் கூறுகிறார்கள். அவற்றின்பயனை விட்டிடுதலென்பது எவ்வாறு கூறப்படுகின்றது ? மலடி, மகனை விட்டிடுதல்போல் என்க.

(ஸமாதாநம்) :—இது குற்றமன்று [இந்த ஆக்ஷேபத்திற்கு இடமில்லை] ; நித்ய (நைமித்திக) கர்மங்கட்கும் பயனுண்டு என்பது, பகவானது கொள்கையாதலின். "வேண்டாததும், வேண்டியதும்" (௧௮ - ௧௨) எனவும், "துறவிகட்கு இல்லை" (௧௮ - ௧௨) எனவும் பகவான் அருளிச்செய்வரன்றோ. ஸந்யாஸிகட்கேமாத்திரந் தான் கர்மத்தின் பயன் தொடராமையைக் காட்டி, ஸந்யாஸிகளல்லாதவர்கட்கு நித்ய (நைமித்திக) கர்மங்களின் பயன் வந்திடுதலை "(கர்மங்களை) விடாதவர்கட்கு இறந்தபின்பு உண்டு" (௧௮ - ௧௨) என உணர்த்துகிறார். (௨)

### அஜ்ஞாநிகள் கர்மத்தைச் செய்யவேண்டுமோ ? விடவேண்டுமோ ?

௩. கர்மத்தை - தீங்கு(ள்ளது) எனத் தள்ளவேண்டும் என்று அறிஞர் சிலர் கூறுகிறார்கள் ; யஜ்ஞம், தாநம், தவம் என்னும் கர்மங்களை விடக்கூடாது என மற்றையோர்கள் (கூறுகிறார்கள்).

தீங்குள்ளதைக் "கைவிடவேண்டும்.—அது யாது ?—(ஸம்ஸார)பந்தத்திற்குக் காரணமாதலால், கர்மமெல்லாந்தான். அல்லது,—ஸாங்கியர் [கபிலர்] முதலானோரது கொள்கையைக்கொண்ட அறிஞர் சிலர், "ஆசைமுதலிய தீங்குகளை விட்டிடுமாறுபோல, (கர்மத்திலே) உரிமையுள்ள கர்மிகளுங்கூடக் கர்மத்தை விட்டிடவேண்டும்" எனக் கூறுகிறார்கள் என்பது. மற்றையோர்கள் "அவர்களது [கர்மத்திலுரிமையுள்ளவர்களது] விஷயத்தில்மாத்திரம் யஜ்ஞம், தாநம், தவம் என்னும் கர்மங்களை விடக்கூடாது" (என்கிறார்கள்).

𑌕𑌰𑍍𑌮𑌿𑌣 𑌏𑌵𑌾𑌧𑌿𑌕𑍃𑌤𑌾𑌃, 𑌤𑌾𑌨𑍍 𑌅𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌏𑌤𑍇 𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌾𑌃, 𑌨 𑌤𑍁 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑍍 𑌵𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌯𑌿𑌨𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌃 𑌅𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 । '𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌯𑌾 𑌪𑍁𑌰𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾' 𑌇𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑍋𑌚𑍍𑌛𑍍𑌰𑌿𑌤𑌾 𑌯𑍇, 𑌨 𑌤𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌚𑌿𑌨𑍍𑌤𑌾 ॥

𑌨𑌨𑍁 '𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍍' 𑌇𑌤𑌿 𑌅𑌧𑌿𑌕𑍃𑌤𑌾𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌃 𑌅𑌪𑌿 𑌇𑌹 𑌸𑌰𑍍𑌵𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑍋𑌪𑌸𑌂𑌹𑌾𑌰𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑍇 𑌯𑌥𑌾 𑌵𑌿𑌚𑌾𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑍇, 𑌤𑌥𑌾 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌾 𑌅𑌪𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌃 𑌵𑌿𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌃 𑌇𑌤𑌿 ।

𑌨, 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌮𑍋𑌹𑌦𑍁𑌃𑌖𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌤𑍍𑌯𑌾𑌗𑌾𑌸𑌮𑍍𑌭𑌵𑌾𑌤𑍍 । 𑌨 𑌕𑌾𑌯𑌕𑍍𑌲𑍇𑌶𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌂 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌾𑌃 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿, 𑌇𑌚𑍍𑌛𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌧𑌰𑍍𑌮𑌤𑍍𑌵𑍇𑌨𑍈𑌵 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌅𑌤𑌃 𑌤𑍇 𑌨 𑌕𑌾𑌯𑌕𑍍𑌲𑍇𑌶𑌦𑍁𑌃𑌖𑌭𑌯𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑌨𑍍𑌤𑌿 । 𑌨𑌾𑌪𑌿 𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿, 𑌯𑍇𑌨 𑌨𑌿𑌯𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌮𑍋𑌹𑌾𑌤𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍇𑌯𑍁𑌃 । '𑌗𑍁𑌣𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮' '𑌨𑍈𑌵 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍𑌕𑌰𑍋𑌮𑌿' 𑌇𑌤𑌿 𑌹𑌿 𑌤𑍇 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 । '𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿

---

கர்மிகள் தான் (இங்குப்) பேசிவரும்விஷயமாயுள்ளவர். அவர்களைக்குறித்து இந்த(க் கொள்கை)வேறுபாடுகளாம்; ஆனால், உலகவாழ்க்கையினை விட்டு ஞானத்திலே நிலைத்துநிற்கும் துறவிகளைக்குறித்தல்ல. "ஸாங்க்யர்கட்கு ஞானயோகத்தால் நிஷ்டையானது முன் என்னால் கூறப்பட்டது" (ந - ந) என எவர்கள் கர்மத்திலுள்ள உரிமையைக்காட்டிலும் மேலே உயர்த்திவைக்கப்பட்டிருக்கிறார்களோ, அவர்களைப்பற்றி (இங்கே) கவலை இல்லை.

(ஆக்ஷேபம்) :—அப்படியானால், "கர்மயோகத்தால் (கர்ம)யோகிகட்கு" (ந - ந) என (இன்னதென்று தமது) நிலை முன் வேறுபடுக்கப்பெற்றிருந்தும், இங்கே சாஸ்திரவிஷயமனைத்தையும் முடிக்கின்ற பிரகரணத்திலே, (கர்மத்தில்) உரிமையுள்ளவர்கள் எப்படி விசாரிக்கப்படுகிறார்களோ [அவர்களைப்பற்றி எப்படி ஆராய்ச்சி செய்யப்படுகின்றதோ], அப்படி ஞானநிலையுள்ள ஞானிகளும் விசாரிக்கப்படலாம் [இவர்களைப்பற்றியும் இங்கு ஆராய்ச்சிசெய்யலாம்] என்க.

(ஸமாதானம்) :—அப்படியன்று; அவர்கள் (கர்மத்தை) விட்டிடுதலானது மயக்கத்தாலும் துன்பத்தாலும் வருவதென்பது அமையாததலின். ஞானிகள் உடம்பு வருத்தத்தா லாகும் துன்பத்தை ஆத்மாவினிடத்துக் காண்பதில்லை; ஆசைமுதலியன க்ஷேத்ரத்தினது தன்மையாகவே உணர்த்தப்பட்டமையின் (கங - சு). ஆகவே, அவர்கள் மெய்வருத்தம் துன்பம் என்றிவற்றின் பயத்தினால் கர்மத்தை விடுவதில்லை. அன்றியும், அவர்கள் கர்மங்களை ஆத்மாவினிடத்துக் காண்பதில்லை; அதனால் [அவற்றை ஆத்மாவினிடத்துக் காணக்கூடுமாயின், அவர்கள் அப்பொழுதன்றோ], நித்ய கர்மத்தை மயக்கத்தால் விட்டிடக்கூடும். உண்மையிலே, அவர்கள் "கர்மம் குணங்களைச்சேர்ந்தது" "நான் ஒன்றும் செய்வதே இல்லை" (ரு - அ) எனக் கொண்டு (கர்மங்களைத்) துறந்திடுகிறார்கள் உண்மையறிந்தவன் (கர்மங்களைத்) துறந்திடும் விதமானது "ஸகலகர்மங்களையும மனத்தால் துறந்து" (ரு - கங) என்பதுமுதலியவற்

𑌮𑌨𑌸𑌾 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌤𑌦𑍍𑌵𑌿𑌧𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌃 𑌉𑌕𑍍𑌤𑌃। 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌯𑍇 𑌅𑌨𑍍𑌯𑍇 𑌅𑌯𑌥𑌾𑌰𑍍𑌥𑌾𑌃 𑌕𑌰𑍍𑌮𑌿𑌣𑌃 𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌦𑌃, 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌚 𑌮𑍋𑌹𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌃 𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿 𑌕𑌾𑌯𑌕𑍍𑌲𑍇𑌶𑌭𑌯𑌾𑌚𑍍𑌚, 𑌤𑍇 𑌏𑌵 𑌤𑌾𑌮𑌸𑌾𑌃 𑌤𑍍𑌯𑌾𑌗𑌿𑌨𑌃 𑌰𑌾𑌜𑌸𑌾𑌶𑍍𑌚 𑌇𑌤𑌿 𑌨𑌿𑌨𑍍𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇, 𑌕𑌰𑍍𑌮𑌿𑌣𑌾𑌮𑍍 𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌮𑍍; '𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑌮𑍍𑌭𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 𑌮𑍌𑌨𑍀 𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑍋 𑌯𑍇𑌨 𑌕𑍇𑌨𑌚𑌿𑌤𑍍। 𑌅𑌨𑌿𑌕𑍇𑌤𑌃 𑌸𑍍𑌥𑌿𑌰𑌮𑌤𑌿𑌃' 𑌇𑌤𑌿 𑌗𑍁𑌣𑌾𑌤𑍀𑌤𑌲𑌕𑍍𑌷𑌣𑍇 𑌚 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌃 𑌵𑌿𑌶𑍇𑌷𑌿𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿 𑌚 '𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌯𑌾 𑌪𑌰𑌾' 𑌇𑌤𑌿। 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌃 𑌨 𑌇𑌹 𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌃। 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌏𑌵 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌤𑍍𑌵𑍇𑌨 𑌗𑍁𑌣𑍇𑌨 𑌤𑌾𑌮𑌸𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌯𑌪𑍇𑌕𑍍𑌷𑌯𑌾 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇, 𑌨 𑌮𑍁𑌖𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌃॥

𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌾𑌸𑌂𑌭𑌵𑍇 𑌚 '𑌨 𑌹𑌿 𑌦𑍇𑌹𑌭𑍃𑌤𑌾' 𑌇𑌤𑌿 𑌹𑍇𑌤𑍁𑌵𑌚𑌨𑌾𑌤𑍍 𑌮𑍁𑌖𑍍𑌯 𑌏𑌵 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍—

𑌨, 𑌹𑍇𑌤𑍁𑌵𑌚𑌨𑌸𑍍𑌯 𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌤𑍍𑌵𑌾𑌤𑍍। 𑌯𑌥𑌾 '𑌤𑍍𑌯𑌾𑌗𑌾𑌚𑍍𑌛𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌨𑌨𑍍𑌤𑌰𑌮𑍍' 𑌇𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌰𑍇𑌵, 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌾𑌨𑍇𑌕𑌪𑌕𑍍𑌷𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑌦𑌜𑍍𑌞𑌂-

---

ருல் கூறப்பட்டிருக்கின்றது. ஆகவே, கர்மத்திலுரிமையுள்ள மற்றைய எவர்கள் ஆத்மாவை அறியாதவர்களோ, மேலும் (கர்மத்தை) விட்டிடுதலானது எவர்கட்கு மயக்கத்தினாலும் மெய்வருத்தத்தின் பயத்தினாலும் நிகழக்கூடுமோ, அவர்களேதான் தாமஸத்துறவிகளென்றும் ராஜஸத்துறவிகளென்றும் இகழப்படுகிறார்கள், ஆத்மாவையறியாத கர்மிகள் கர்மத்தின்பயனை விட்டிடுவதனைப் (பகவான்) புகழ்தற்காக என்க. மற்றும், குணங்களைக் கடந்தவனுடைய லக்ஷணங்களைக் கூறுமிடத்து, உண்மைத்துறவியை "முயற்சிகளெல்லாவற்றையும் விட்டொழிபவன்.........மௌநமுடையவன், எதனாலும் ஸந்தோஷித்தவன், மனையில்லாதவன், புத்திநிலைத்தவன்" (கஉ - கசு, கஎ, கஅ) எனச் சிறப்பித்துக்கூறியுள்ளதனால், (அவனை இகழ்தல் ஏலாது).

இன்னும், "ஞானத்தினுடைய முடிந்த நிலை எதுவோ" (கஅ - ருo) எனக் கூறுவர். ஆதலால், இங்குச் சொல்லக்கருதியவர், ஞானநிலையுள்ள துறவிகளல்லர். கர்மத்தின்பயனை விட்டிடுதலேதான் - தாமஸம்முதலியவற்றை நோக்க, ஸாத்துவிகமென்னும்குணத்தினால் துறவு எனப்படுகின்றது; முக்கிய ஸந்யாஸமன்று, ஸகலகர்மங்களையும் துறந்திடுதலாகிய முதன்மையான துறவு அன்று.

(ஆக்ஷேபம்):—ஸகலகர்மங்களையும் துறந்திடுதல் நிகழாது என்னும்விஷயத்திலே "உடம்பையுடையவனால்" (கஅ - கக) எனக் காரணத்தைக்கூறும் திருவாக்கினால், முதன்மையானதேதான் (இங்குச் சொல்லக்கருதிய துறவு) எனின்,—

(ஸமாதாநம்):—அப்படியன்று: காரணத்தைக்கூறும் திருவாக்குப் புகழ்ச்சியின் பொருட்டாய்நிற்றலின். உதாரணமாக, "விடுதலால் உடனே ஒழிபு வருகின்றது" (கஉ - கஉ) என்பது கர்மத்தின்பயனை விடுவதின் புகழ்ச்சியேதான்; கீழ்க்கூறிய அனேக வழிகளை அநுஷ்டிக்கத் திறமையில்லாத அர்ஜுனனான அஜ்ஞானியைக் குறி

𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃, 𑌹𑌰𑍍𑌷𑌶𑍋𑌕𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌃 𑌇𑌷𑍍𑌟𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍌 𑌹𑌰𑍍𑌷𑌃, 𑌅𑌨𑌿𑌷𑍍𑌟𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍌 𑌇𑌷𑍍𑌟𑌵𑌿𑌯𑍋𑌗𑍇 𑌚 𑌶𑍋𑌕𑌃 𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌹𑌰𑍍𑌷𑌶𑍋𑌕𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌃 𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌃, 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌚 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌸𑌂𑌪𑌤𑍍𑌤𑌿𑌵𑌿𑌪𑌤𑍍𑌤𑌿𑌭𑍍𑌯𑌾𑌂 𑌹𑌰𑍍𑌷𑌶𑍋𑌕𑍌 𑌸𑍍𑌯𑌾𑌤𑌾𑌂, 𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌯𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌸𑌃 𑌰𑌾𑌜𑌸𑌃 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃 ॥ உஎ ॥

உஅ. 𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌃 𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑌃 𑌶𑌠𑍋 𑌨𑍈𑌷𑍍𑌕𑍃𑌤𑌿𑌕𑍋𑌽𑌲𑌸𑌃 ।
𑌵𑌿𑌷𑌾𑌦𑍀 𑌦𑍀𑌰𑍍𑌘𑌸𑍂𑌤𑍍𑌰𑍀 𑌚 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌤𑌾𑌮𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌨 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌅𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃, 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌃 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌸𑌂𑌸𑍍𑌕𑍃𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌬𑌾𑌲𑌸𑌮𑌃, 𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑌃 𑌦𑌣𑍍𑌡𑌵𑌤𑍍 𑌨 𑌨𑌮𑌤𑌿 𑌕𑌸𑍍𑌮𑍈𑌚𑌿𑌤𑍍; 𑌶𑌠𑌃 𑌮𑌾𑌯𑌾𑌵𑍀 𑌶𑌕𑍍𑌤𑌿𑌗𑍂𑌹𑌨𑌕𑌾𑌰𑍀; 𑌨𑍈𑌷𑍍𑌕𑍃𑌤𑌿𑌕𑌃 𑌪𑌰𑌵𑌿𑌭𑍇𑌦𑌨𑌪𑌰𑌃; 𑌅𑌲𑌸𑌃 𑌅𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌶𑍀𑌲𑌃 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑍇𑌷𑍍𑌵𑌪𑌿, 𑌵𑌿𑌷𑌾𑌦𑍀 𑌵𑌿𑌷𑌾𑌦𑌵𑌾𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 𑌅𑌵𑌸𑌨𑍍𑌨𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌃; 𑌦𑍀𑌰𑍍𑌘𑌸𑍂𑌤𑍍𑌰𑍀 𑌚 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌦𑍀𑌰𑍍𑌘𑌪𑍍𑌰𑌸𑌾𑌰𑌣𑌃, 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 𑌮𑌨𑍍𑌦𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌃, 𑌯𑌚𑍍 𑌅𑌦𑍍𑌯 𑌶𑍍𑌵𑍋 𑌵𑌾 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌤𑌚𑍍 𑌮𑌾𑌸𑍇𑌨𑌾𑌪𑌿 𑌨 𑌕𑌰𑍋𑌤𑌿; 𑌯𑌶𑍍𑌚 𑌏𑌵𑌂𑌭𑍂𑌤𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌸𑌃 𑌤𑌾𑌮𑌸𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

உகூ. 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌰𑍍𑌭𑍇𑌦𑌂 𑌧𑍃𑌤𑍇𑌶𑍍𑌚𑍈𑌵 𑌗𑍁𑌣𑌤𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 𑌶𑍃𑌣𑍁 ।
𑌪𑍍𑌰𑍋𑌚𑍍𑌯𑌮𑌾𑌨𑌮𑌶𑍇𑌷𑍇𑌣 𑌪𑍃𑌥𑌕𑍍𑌤𑍍𑌵𑍇𑌨 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯 ॥

---

வன் - வெளிப்பரிசுத்தமும், உள்பரிசுத்தமும் இல்லாதவன். மகிழ்ச்சி - வேண்டியது கிடைத்தவளவிலே மகிழ்தல். வருத்தம் - வேண்டாதது வந்தவிடத்தும், வேண்டியது போனவிடத்தும் வருந்துதல். அ(ப்படிப்பட்ட)வனுக்கே, கர்மம் நிறைவேறுவதனால் மகிழ்வும், தவறுவதனால் வருத்தமும் வரும். அவற்றையுடைய கர்த்தா எவனோ, அவன் ராஜஸன் எனப்படுகிறான். (உஎ)

உஅ. ஒருநிலைப்படாதவன், கசடனாயுள்ளவன், விறைப்புள்ளவன், கள்ளமுடையவன், பொல்லாதவன், சோம்புதலுடையவன், ஏக்கமுள்ளவன், காலதாமதம் செய்பவன்—(இத்தகைய) கர்த்தா தாமஸன் எனப்படுகிறான்.

கசடன்-சிறிதுகூடப்புத்திதிருந்தாதவன், குழந்தைக்கு ஒப்பானவன். விறைப்புள்ளவன்-தடிபோல,ஒருவனுக்கும் வணங்கமாட்டான். கள்ளமுடையவன்-வலிமையை மறைப்பவன். பொல்லாதவன் - (ஒருவரோடு ஒருவர் சேராவண்ணம்)பிறரைப் பிரித்திவெதிலே கருத்துடையவன். சோம்புதலுடையவன்- செய்யவேண்டியவற்றிலும் செல்லுதலில்லாத் தன்மையன். ஏக்கமுள்ளவன் - எப்பொழுதும் அயர்ந்த இயல்பினன். காலதாமதஞ்செய்பவன் - செய்யவேண்டியவற்றிற்குக் காலத்தை நீட்டிப்பவன், எப்பொழுதும் மந்தத்தன்மையன்; இன்றைக்காயினும், நாளைக்காயினும் செய்யவேண்டியது எதுவோ, அதனை ஒருமாசத்திலுங்கூடச் செய்வதில்லை. எவன் இத்தகைய கர்த்தாவோ, அவன் தாமஸன் எனப்படுகிறான். (உஅ)

குணங்கட்கேற்ற தக்கபடி, புத்தியும், உறுதியும் மூவகைத்து.

உகூ. குணங்கட்கேற்ப புத்தி தைரியங்களுடைய மூவகைத்தான பிரிவை (நான்)குறைவிலாது தனித்தனியே சொல்ல, தனஞ்ஜய! கேட்டுக்கொள்.

𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌭𑍇𑌦𑌂 𑌧𑍃𑌤𑍇𑌶𑍍𑌚𑍈𑌵 𑌭𑍇𑌦𑌂 𑌗𑍁𑌣𑌤𑌃 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌤𑌃 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 𑌶𑍃𑌣𑍁—𑌇𑌤𑌿 𑌸𑍂𑌤𑍍𑌰𑍋𑌪𑌨𑍍𑌯𑌾𑌸𑌃। 𑌪𑍍𑌰𑍋𑌚𑍍𑌯𑌮𑌾𑌨𑌂 𑌕𑌥𑍍𑌯𑌮𑌾𑌨𑌮𑍍 𑌅𑌶𑍇𑌷𑍇𑌣 𑌨𑌿𑌰𑌵𑌶𑍇𑌷𑌤𑌃 𑌯𑌥𑌾𑌵𑌤𑍍 𑌪𑍃𑌥𑌕𑍍𑌤𑍍𑌵𑍇𑌨 𑌵𑌿𑌵𑍇𑌕𑌤𑌃 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯—𑌦𑌿𑌗𑍍𑌵𑌿𑌜𑌯𑍇 𑌮𑌾𑌨𑍁𑌷𑌂 𑌦𑍈𑌵𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌭𑍂𑌤𑌂 𑌧𑌨𑌂 𑌜𑌿𑌤𑌵𑌾𑌨𑍍, 𑌤𑍇𑌨 𑌹𑍍𑌯𑌸𑍌 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯𑌃 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌃 ॥ ௨௯ ॥

௩௰. 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑍇 𑌭𑌯𑌾𑌭𑌯𑍇 ।
𑌬𑌨𑍍𑌧𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑌂 𑌚 𑌯𑌾 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌸𑍍𑌸𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑍀 ॥

𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑌂 𑌬𑌨𑍍𑌧𑌹𑍇𑌤𑍁𑌃 𑌕𑌰𑍍𑌮𑌮𑌾𑌰𑍍𑌗𑌃, 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 𑌮𑍋𑌕𑍍𑌷𑌹𑍇𑌤𑍁𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌮𑌾𑌰𑍍𑌗𑌃—𑌬𑌨𑍍𑌧𑌮𑍋𑌕𑍍𑌷𑌸𑌮𑌾𑌨𑌵𑌾𑌕𑍍𑌯𑌸𑍍𑌥𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍀 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌮𑌾𑌰𑍍𑌗𑍌 𑌇𑌤𑌿 𑌅𑌵𑌗𑌮𑍍𑌯𑌤𑍇—𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑍇 𑌵𑌿𑌹𑌿𑌤𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑍇 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌾𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑍇 𑌕𑌰𑌣𑌾𑌕𑌰𑌣𑍇 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃—𑌕𑌸𑍍𑌯?—𑌦𑍇𑌶𑌕𑌾𑌲𑌾𑌦𑍍𑌯𑌪𑍇𑌕𑍍𑌷𑌯𑌾 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 । 𑌭𑌯𑌾𑌭𑌯𑍇 𑌬𑌿𑌭𑍇𑌤𑌿 𑌅𑌸𑍍𑌮𑌾𑌦𑌿𑌤𑌿 𑌭𑌯𑌂, 𑌨 𑌭𑌯𑌮𑌭𑌯𑌂, 𑌭𑌯𑌂 𑌚 𑌅𑌭𑌯𑌂 𑌚 𑌭𑌯𑌾𑌭𑌯𑍇, 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌦𑍃𑌷𑍍𑌟𑌯𑍋𑌃 𑌭𑌯𑌾𑌭𑌯𑌯𑍋𑌃 𑌕𑌾𑌰𑌣𑍇 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌬𑌨𑍍𑌧𑌂 𑌸𑌹𑍇𑌤𑍁𑌕𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑌂 𑌚 𑌸𑌹𑍇-

---

"ஸத்துவம்முதலிய குணங்கட்குத்தக்கபடி, புத்தியினுடைய மூவகைப்பிரிவையும், தைரியத்தினுடைய மூவகைப்பிரிவையும் கேள்" என்பது, (அதாவது, இச்சுலோகத்தின் முதற்பாதியானது, இனிக்கூறப்படுவதற்கு) ஸூத்ரமாய் நிற்பது. குறைவிலாது-முழுதும் உள்ளபடி யென்க. தனித்தனியே - தெளிவாக. அர்ஜுனன் திக்விஜயத்திலே மனிதர்களுடைய மிகுந்த செல்வத்தையும், தேவர்களுடைய மிகுந்த செல்வத்தையும் ஜயித்துவந்தான் ; அதனால், இவன் தநஞ்ஜயன் என்க. (௨௯)

ஸாத்துவிகபுத்தி.

௩௰. பிரவிருத்தியையும் நிவிருத்தியையும், கார்யத்தையும் அகார்யத்தையும், பயத்தையும் பயமின்மையையும், பந்தத்தையும் மோக்ஷத்தையும் எது அறிகின்றதோ, பார்த்த! அந்தப்புத்தி ஸாத்துவிகமானது.

பிரவிருத்தி யென்பது - (ஸம்ஸாரக்)கட்டுக்குக் காரணமான கர்மவழி. நிவிருத்தியென்பது - (அதனினின்றும்) தப்புதற்குக் காரணமான துறவுவழி. பந்தமோக்ஷங்களோடு ஒரேவாக்கியத்தை யுடைமையினால் [இவற்றைக் கூறியுள்ள வாக்கியத்திலேயே கூறப்பட்டுள்ளமையால்], பிரவிருத்தி கர்மவழி எனவும், நிவிருத்தி துறவுவழி எனவும் தெரியவருகின்றன. கார்யத்தையும், அகார்யத்தையும் - விதிக்கப்பட்டதையும், விலக்கப்பட்டதையும் : செய்யவேண்டியதையும், செய்யலாகாததையும் : செய்தலையும், தவிர்தலையும் என்றபடி.—எவற்றை?—இடம் காலம் முதலியவற்றிற்கேற்ப இம்மைமறுமைக்கான கர்மங்களை. பயத்தையும், பயமின்மையையும் - இம்மைமறுமைப்பயத்திற்கும், அஃதின்மைக்கும் காரணமானவற்றை என்றபடி.—பந்தத்தையும் - (இதனையும், இதனது) காரணங்களையும். மோக்ஷத்தையும் - (இதனை

துகம் யா வேத்தி விஜாநாதி புத்தி: ஸா பார்த்த ஸாத்த்விகீ । ஜ்ஞாநம் புத்தே: வ்ருத்தி:; புத்திஸ்து வ்ருத்திமதீ । த்ருதிரபி வ்ருத்திவிஶேஷ: ஏவ புத்தே: ॥ ௩0 ॥

௩௧. யயா தர்மமதர்மம் ச கார்யம் சாகார்யமேவ ச ।
அயதாவத்ப்ரஜாநாதி புத்தி: ஸா பார்த்த ராஜஸீ ॥

யயா தர்மம் ஶாஸ்த்ரசோதிதம் அதர்மம் ச ப்ரதிஷித்தம் கார்யம் ச அகார்யமேவ ச பூர்வோக்தே ஏவ கார்யாகார்யே அயதாவத் ந யதாவத் ஸர்வத: நிர்ணயேந ந ப்ரஜாநாதி, புத்தி: ஸா பார்த்த ராஜஸீ ॥ ௩௧ ॥

௩௨. அதர்மம் தர்மமிதி யா மந்யதே தமஸாவ்ருதா ।
ஸர்வார்தாந்விபரீதாம்ஶ்ச புத்தி: ஸா பார்த்த தாமஸீ ॥

அதர்மம் ப்ரதிஷித்தம் தர்மம் விஹிதம் இதி யா மந்யதே ஜாநாதி தமஸா ஆவ்ருதா ஸதீ, ஸர்வார்தாந் ஸர்வாநேவ ஜ்ஞேயபதார்தாந் விபரீதாம்ஶ்ச விபரீதாநேவ ஜாநாதி, புத்தி: ஸா பார்த்த தாமஸீ ॥ ௩௨ ॥

௩௩. த்ருத்யா யயா தாரயதே மந:ப்ராணேந்த்ரியக்ரியா: ।

---

யும், இதனது) காரணங்களையும். அறிவென்பது புத்தியின் விருத்தி [போக்கு]; மற்று, புத்தி யென்பது விருத்திகளையுடையது. தைரியமென்பதும் புத்தியினுடைய ஓர்வகைவிருத்தியேதான் என்க. (௧௮ - ௨0, ௨௧, ௨௨-ல் கூறிய அறிவிற்கும், இங்குக் கூறிய புத்திக்கும் இவ்வாறு வேற்றுமை காண்க.) (௩0)

ராஜஸ புத்தியும், தாமஸ புத்தியும்.

௩௧. (ஒருவன்) எதனுல் தர்மத்தையும் அதர்மத்தையும், கார்யத்தையும் அகார்யத்தையும் உள்ளபடியல்லாது அறிகின்ருனே, பார்த்த ! அந்தப் புத்தி ராஜஸமானது.

தர்மத்தை - சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டதை. அதர்மத்தை - விலக்கப்பட்டதை. கார்யமும் அகார்யமும் முன் (௧௮ - ௩0) கூறப்பட்டவையேதான். உள்ளபடியல்லாது - ஒன்றும் நிச்சயமன்றி. (இங்குக்கூறிய தருமமும், அதர்மமும் அபூர்வத்தைக் குறிக்கின்றன. அபூர்வம் - கர்மங்கள்செய்யப்பெற்றபின்பு, தமது பயன் வெளிப்படும்வரை தாம் நிற்கின்றநிலை. கார்யம் அகார்யம் என்பன- கர்மங்களைச்செய்தலையும், செய்யாமையையும் குறிக்கின்றன. ஆகவே, கூறினது கூறல் இல்லையென்க —ஆ.) (௩௧)

௩௨. எது இருளால் மூடுண்டு, அதர்மத்தை தர்மமென்று எல்லாப்பொருள்களையும் மாருகவே கொள்கின்றதோ, பார்த்த ! அந்தப் புத்தி தாமஸமானது.

அதர்மத்தை - மறுக்கப்பட்டதை. தர்மம் - விதிக்கப்பட்டது. கொள்கின்றதோ - அறிகின்றதோ. எல்லாப்பொருள்களையும் - அறியப்படுகின்ற ஒவ்வொரு பொருளையுமே. (௩௨)

ஸாத்துவிக உறுதி.

௩௩. (ஒருவன்,) யோகத்தைத் தவருத எந்த உறுதியினுல் மனம், பிராண

𑌯𑍋𑌗𑍇𑌨𑌾𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍍𑌯𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃 𑌸𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑍀 ॥

𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 𑌯𑌯𑌾—𑌅𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍍𑌯𑌾 𑌇𑌤𑌿 𑌵𑍍𑌯𑌵𑌹𑌿𑌤𑍇𑌨 𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌃—𑌧𑌾𑌰𑌯𑌤𑍇—𑌕𑌿𑌮𑍍? —𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌮𑌨𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌶𑍍𑌚 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌚 𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿, 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌚𑍇𑌷𑍍𑌟𑌾𑌃, 𑌤𑌾𑌃 𑌉𑌚𑍍𑌛𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑌾𑌰𑍍𑌗𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌃 𑌧𑌾𑌰𑌯𑌤𑍇 𑌧𑌾𑌰𑌯𑌤𑌿—𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 𑌹𑌿 𑌧𑌾𑌰𑍍𑌯𑌮𑌾𑌣𑌾𑌃 𑌉𑌚𑍍𑌛𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑌾𑌰𑍍𑌗𑌵𑌿𑌷𑌯𑌾𑌃 𑌨 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿—𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌮𑌾𑌧𑌿𑌨𑌾, 𑌅𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍍𑌯𑌾, 𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑌮𑌾𑌧𑍍𑌯𑌨𑍁𑌗𑌤𑌯𑌾 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃। 𑌏𑌤𑌦𑍁𑌕𑍍𑌤𑌂 𑌭𑌵𑌤𑌿—𑌅𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍍𑌯𑌾 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌧𑌾𑌰𑍍𑌯𑌮𑌾𑌣𑌾𑌃 𑌯𑍋𑌗𑍇𑌨 𑌧𑌾𑌰𑌯𑌤𑍀𑌤𑌿। 𑌯𑌾 𑌏𑌵𑌂𑌲𑌕𑍍𑌷𑌣𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃 𑌸𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑍀॥

௩௪. 𑌯𑌯𑌾 𑌤𑍁 𑌧𑌰𑍍𑌮𑌕𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 𑌧𑌾𑌰𑌯𑌤𑍇𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑍀 𑌧𑍃𑌤𑌿𑌃 𑌸𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌰𑌾𑌜𑌸𑍀 ॥

𑌯𑌯𑌾 𑌤𑍁 𑌧𑌰𑍍𑌮𑌕𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍 𑌧𑌰𑍍𑌮𑌶𑍍𑌚 𑌕𑌾𑌮𑌶𑍍𑌚 𑌅𑌰𑍍𑌥𑌶𑍍𑌚 𑌧𑌰𑍍𑌮𑌕𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌾𑌃 𑌤𑌾𑌨𑍍 𑌧𑌰𑍍𑌮𑌕𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 𑌯𑌯𑌾 𑌧𑌾𑌰𑌯𑌤𑍇 𑌮𑌨𑌸𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍇𑌵 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯-

---

ன்கள், இந்திரியங்கள் என்றிவற்றின் செய்கைகளை அமர்த்துகின்றானோ, பார்த்த! அந்தஉறுதி ஸாத்துவிகமானது.

𑌅𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍍𑌯𑌾 என்பதை - (𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 என) ஒதுங்கிநிற்பதனோடு ஓட்டுக. (ஒருவன்) உறுதியினால் அமர்த்துகின்றான்.—எவற்றை? —மனம், பிராணன்கள், இந்திரியங்கள் இவற்றின் செய்கைகளை. சாஸ்திரத்திற்கு விரோதமான வழியிற் செல்லுதலினின்றும் அவன் அவற்றை மறித்து நிறுத்துகிறான். உறுதியினால் மறித்து நிறுத்தப்படும்பொழுதன்றோ அவை சாஸ்திரத்திற்கு விரோதமான வழியைப் பற்றமாட்டா. யோகத்தை - ஸமாதியை, ஒருநிலையை. தவறாத - (விட்டுநீங்காத), எப்பொழுதும் ஸமாதியைத்தொடர்ந்துள்ள என்றபடி.—இது கூறப்பட்டதாகின்றது: தவறாத உறுதியினால் மனம், பிராணன்கள், இந்திரியங்கள் இவற்றின்செய்கைகளை அடக்குவோன் யோகத்தால் (அவற்றை) அடக்குகின்றானென்க. (இச்செய்கைகளை அடக்குகிறவன் யோகத்தை, ப்ரஹ்மத்தினிடத்து ஸமாதியை, அதிலே ஒருமுகப்படுதலை விட்டுநீங்காத உறுதியினால் அவற்றை அடக்குகிறானென்பதாம். அல்லாக்கால், அந்த யோகத்தை விட்டுநீங்காமை இல்லாக்கால், அவற்றை அடக்குதல் தவறிவிடுமென்றவாறு.—ஆ.) எது இத்தகைய உறுதியோ, அது ஸாத்துவிகமானது. (௩௩)

ராஜஸ உறுதியும், தாமஸ உறுதியும்.

௩௪. ஆனால், அர்ஜுந! பற்றினால் பயனை வேண்டுவோன் தருமத்தையும், காமத்தையும், பொருளையும் எந்த உறுதியினால் கொள்கின்றானோ, பார்த்த! அந்த உறுதி ராஜஸமானது.

ஒருவன், அறம் பொருள் இன்பங்களை அவச்யம் தேடவேண்டியவையாக மனத்தில் நிச்சயித்துக்கொள்கின்றான்; அறம்முதலியவற்றுள் எதெதைச்செய்ய

ர்மாதீந் தாரயதி ஹே அர்ஜுந ப்ரஸங்கேந யஸ்ய யஸ்ய தர்மாதே: தாரணப்ரஸங்க: தேந தேந ப்ரஸங்கேந பலாகாங்க்ஷீ ச பவதி ய: புருஷ:, தஸ்ய த்ருதி: யா ஸா பார்த்த ராஜஸீ ॥ ௩௪ ॥

௩௫. யயா ஸ்வப்நம் பயம் ஶோகம் விஷாதம் மதமேவ ச ।
ந விமுஞ்சதி துர்மேதா: த்ருதிஸ்ஸா பார்த்த தாமஸீ ॥

யயா ஸ்வப்நம் நித்ராம் பயம் த்ராஸம் ஶோகம் விஷாதம் ச அவஸாதம் விஷண்ணதாம் மதம் விஷயஸேவாம் ஆத்மந: பஹுமந்யமாந: மத்த இவ மதம் ச மநஸி நித்யமேவ கர்தவ்யரூபதயா குர்வந் ந விமுஞ்சதி தாரயத்யேவ துர்மேதா: குத்ஸிதமேதா: புருஷ: ய:, தஸ்ய த்ருதி: யா ஸா பார்த்த தாமஸீ மதா ॥ ௩௫ ॥

குணபேதேந க்ரியாணாம் காரகாணாம் ச த்ரிவிதோ பேத: உக்த:। அத இதாநீம் பலஸ்ய ஸுகஸ்ய த்ரிவிதோ பேத: உச்யதே—

௩௬. ஸுகம் த்விதாநீம் த்ரிவிதம் ஶ்ருணு மே பரதர்ஷப ।
அப்யாஸாத்ரமதே யத்ர து:காந்தம் ச நிகச்சதி ॥

ஸுகம் து இதாநீம் த்ரிவிதம் ஶ்ருணு—ஸமாதாநம் குரு இத்யேதத்—மே மம பரதர்ஷப । அப்யாஸாத் பரிசயாத் ஆவ்ருத்தே: ரமதே ரதிம் ப்ரதிபத்யதே யத்ர யஸ்மிந் ஸுகாநுபவே து:காந்தம் ச து:காவஸாநம் து:கோபஶமம் ச நிகச்சதி நிஶ்சயேந ப்ராப்நோதி ॥ ௩௬ ॥

---

வேறுமென்று மனத்திற்கொள்ளுதலாகுமோ, அதனை ஒட்டிப் பயனைவேண்டுகிறவனும் ஆகிறான். அ(ப்படிப்பட்ட)வனுடைய உறுதி எதுவோ, அது ராஜஸமானது. ()

௩௫. மடையனானவன் உறக்கத்தையும், அச்சத்தையும், வருத்தத்தையும், சோர்ந்துகிடத்தலையும், காமக்கொழுப்பையும் எதனால் விடுவதில்லையோ, பார்த்த! அந்த உறுதி தாமஸமானது.

மடையன் தனது காமநுகர்ச்சியை மிக்கு மதிப்பவன்: கள்குடித்தவன் போன்றிருப்பவன்: உறக்கம் முதலியவற்றை எப்பொழுதுமே செய்யவேண்டுமென்று மனத்திற்கொள்பவன். அ(ப்படிப்பட்ட)வனுடைய உறுதி தாமஸமென்க. (௩௫)

குணங்கட்குத் தக்கபடி, ஸுகம் மூவகைத்து.

செய்கைகட்கும், செய்யும்பொருள்கட்கும் குணங்களினுடைய வேறுபாட்டால் மூவகைப்பேதம் கூறப்பட்டது. இனி, இப்பொழுது, (அவற்றின்) பயனாகிய ஸுகத்திற்கு மூவகைப்பேதத்தைக் கூறுகிறார்:

௩௬. இனி, (ஒருவன்) பழக்கத்தினால் எதிலே இன்புறுகின்றானோ, துன்ப முடிவையும் நிச்சயமாய்ப் பெறுகின்றானோ, (அது - ஸுகமென்பது.) பரதரிற் சிறந்தோனே! (அந்த) மூவகைத்தான ஸுகத்தை என்னிடமிருந்து கேட்டுக்கொள்.

கேட்டுக்கொள் - (கேட்பதிலேமனம்) ஒருப்படுதலைச்செய்துகொள் என்றபடி. பழக்கத்தினால் - வழக்கப்பட்டிருப்பதனால், அடிக்கடி ஊடாடுவதனால், அடுத்தடுத்துச்செய்வதனால். எதிலே - ஸுகஅநுபவத்திலே. முடிவை - ஒழிவை. (௩௬)

௩௭. யத்தத³க்³ரே விஷமிவ பரிணாமே(அ)ம்ருதோபமம் |
தத்ஸுக²ம் ஸாத்த்விகம் ப்ரோக்தம் ஆத்மபு³த்³தி⁴ப்ரஸாத³ஜம் ||

யத் தத் ஸுக²ம் அக்³ரே பூர்வம் ப்ரயத்நஸாத்⁴யத்வாத் ஜ்ஞாநவைரா-க்³யத்⁴யாநஸமாத்⁴யாரம்பே⁴ அத்யாயாஸபூர்வகத்வாத் விஷமிவ து:கா²த்மகம் ப⁴வதி, பரிணாமே ஜ்ஞாநவைராக்³யாதி³பரிபாகஜம் ஸுக²ம் அம்ருதோபமம், தத் ஸுக²ம் ஸாத்த்விகம் ப்ரோக்தம் வித்³பி⁴:, ஆத்மந: பு³த்³தி⁴: ஆத்மபு³த்³தி⁴:, ஆத்மபு³த்³தே⁴: ப்ரஸாத³: நைர்மல்யம் ஸலிலஸ்யேவ ஸ்வச்ச²தா, தத: ஜாதம் ஆத்மபு³த்³தி⁴ப்ரஸாத³ஜம் | ஆத்மவிஷயா வா ஆத்மாவலம்ப³நா பு³த்³தி⁴: ஆத்மபு³த்³தி⁴:, தத்ப்ரஸாத³ப்ரகர்ஷாத் ஜாதமித்யர்த²: | தஸ்மாத் ஸாத்த்விகம் தத் || ௩௭ ||

௩௮. விஷயேந்த்³ரியஸம்யோகா³த் யத்தத³க்³ரே(அ)ம்ருதோபமம் |
பரிணாமே விஷமிவ தத்ஸுக²ம் ராஜஸம் ஸ்ம்ருதம் ||

விஷயேந்த்³ரியஸம்யோகா³த் ஜாயதே யத் ஸுக²ம் தத் ஸுக²ம் அக்³ரே ப்ரயோக³க்ஷணே அம்ருதோபமம் அம்ருதவத், பரிணாமே விஷமிவ, ப³லவீர்யரூ-பப்ரஜ்ஞாமேதா⁴த⁴நோத்ஸாஹ ஹாநிஹேதுத்வாத் அத⁴ர்மஜநிதநரகாதி³-

---

ஸாத்துவிகஸுகம்.

௩௭. எது முதலில் விஷம்போலவும், முடிவில் அமிருதம்போலவும் உள்ளதோ, அந்த ஸுகம் ஸாத்துவிகம் எனப்பட்டது ; அது தன்புத்தித்தெளிவினலாவது.

முதலில் செல்லும்போது, ஞானம் வைராக்கியம் தியானம் ஸமாதி என்றிவற்றைச் செய்யத் தொடங்கும்போது மிகுந்தப் பிரயாஸத்தோடு கூடியதனல் [அவற்றைக் கொண்டுசெலுத்துதல் மிகப்பிரயாஸமாயிருத்தலால்], அந்தஸுகம் விஷம் போல முதலில் துன்பவடிவாயுள்ளது. முடிவிலே ஞானமுதிர்ச்சியாலும், வைராக்கிய முதிர்ச்சியாலும், (இவைபோன்ற) பிறவற்ருலும் வருகின்ற ஸுகமானது அமிருதத்திற்கு ஒப்பானது ; அறிவுடையோர் அந்தஸுகத்தை ஸாத்துவிகம் என்கிருர்கள். தெளிவு - அழுக்கின்மை, ஜலம்போல ஸ்வச்சமாயிருத்தல். தன்புத்தித்தெளிவினலாவது - அகக்கரணத்தெளிவினல் வருவது ; அல்லது, ஆத்மாவைப்பற்றிய அறிவு மிகச்சுத்தமாகத் தெளிவதனல் வருவது என்க. ஆகவே [இவ்வாறு வருவதனல்], அந்தஸுகம் ஸாத்துவிகமாம். (௩௭)

ராஜஸஸுகம்.

௩௮. எது விஷயேந்திரியச் சேர்க்கையினல் முதலில் அமிருதம்போலவும், முடிவில் விஷம்போலவும் உள்ளதோ, அந்தப் பிரஸித்தமான ஸுகம் ராஜஸமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

விஷயங்களும் இந்திரியங்களும் சேர்வதனல் எந்த ஸுகம் உண்டாகின்றதோ அந்த ஸுகம் முதல்க்ஷணத்தில் அமிருதத்திற்கு ஒப்பாயிருக்கின்றது ; முடிவிலோ விஷம்போன்றது : சக்தி, வீரியம், அழகு, அறிவு, மேதை, பொருள், ஊக்கம் என்றவற்றை அழிப்பதனலும், அதர்மத்திற்கும் அதனலான நரகம்முதலியவற்றிற்கும்

ஹேதுத்வாச்ச பரிணாமே து:க்கமோஹபரிணாமேந விஷமிவ, தத் ஸுகம்
ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ ௩௮ ॥

௩௯. யதக்ரே சாநுபந்தே ச ஸுகம் மோஹநமாத்மந: ।
நித்ராலஸ்யப்ரமாதோத்தம் தத்தாமஸமுதாஹ்ருதம் ॥

யத் அக்ரே ச அநுபந்தே ச அவஸாநோத்தரகாலே ச ஸுகம்
மோஹநம் மோஹகரம் ஆத்மந: நித்ராலஸ்யப்ரமாதோத்தம் நித்ரா ச
ஆலஸ்யம் ச ப்ரமாதஶ்ச தேப்ய: ஸமுத்திஷ்டதீதி நித்ராலஸ்யப்ரமாதோத்தம்,
தத் தாமஸம் உதாஹ்ருதம் ॥ ௩௯ ॥

அத இதாநீம் ப்ரகரணோபஸம்ஹாரார்த: ஶ்லோக: ஆரப்யதே—

௪௦. ந தத் அஸ்தி ப்ருதிவ்யாம் வா திவி தேவேஷு வா புந: ।
ஸத்த்வம் ப்ரக்ருதிஜைர்முக்தம் யதேபி: ஸ்யாத் த்ரிபிர்குணை: ॥

ந தத் அஸ்தி தத் நாஸ்தி ப்ருதிவ்யாம் வா மநுஷ்யாதிஷு ஸத்த்வம் ப்ரா-
ணிஜாதம், அந்யத்வா அப்ராணி, திவி தேவேஷு வா புந: ஸத்த்வம், ப்ரக்ருதி-
ஜை: ப்ரக்ருதித: ஜாதை: ஏபி: த்ரிபி: குணை: ஸத்த்வாதிபி: முக்தம் பரி-
த்யக்தம் யத் ஸ்யாத் பவேத்—'ந தத் அஸ்தி' இதி பூர்வேண ஸம்பந்த: ॥ ௪௦ ॥

---

காரணமாதலாலும் அந்நுகர்ச்சி ஒய்ந்த முடிவிலே விஷம்போன்றுள்ளது. (சக்தி - சரீரேந்திரிய ஸாமர்த்தியம். வீரியம் - பராக்கிரமத்தாலான புகழ். அறிவு - கேட்டதைக் கிரகிக்கும் சக்தி. மேதை - கிரகித்ததை மறவாது வைத்துக்கொள்ளும் திறமை. பொருள் - பொன், நிலம் முதலியன.—ஆ.) (௩௮)

தாமஸஸுகம்.

௩௯. எந்த ஸுகமானது முதலிலும் முடிவிலும் தன்னை மயக்குவதாய், தூக்கம் சோம்பல் அசட்டை என்றிவற்றி லுண்டாவதோ, அது தாமஸமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

முடிவில் - முடிவிற்குப் பிற்பட்ட காலத்தில். மயக்குவது - மயக்கத்தைச் செய்வது. (௩௯)

எந்த அநாத்மப்பொருளும் குணமில்லாததாய் இல்லை.

இனி, இப்பொழுது, பேசிவரும் விஷயத்தை முடிக்கும்பொருட்டாய்ச் சுலோகம் தொடங்கப்படுகின்றது:

௪௦. 1 பிரகிருதியினின்று பிறக்கின்ற இந்த முக்குணமும் இல்லாததாய் எது இருக்கலாமோ, அந்தப்பொருள் மண்ணிலாயினும், மறுபடி தேவர்களுள் விண்ணிலாயினும் இல்லை.

மண்ணில் - மனிதர் முதலானோர்களில். பொருள் - உயிருள்ள எல்லாப்பொருளும், உயிரில்லாத மற்றைப்பொருளும் என்க. குணம் - ஸத்துவம் முதலியன. யத் ஸ்யாத் என்பதை - ந தத் அஸ்தி என முந்தினதோடு கூட்டுக. (௪௦)

ஸர்வ: ஸம்ஸார: க்ரியாகாரகப²லரூபேண ஸத்த்வரஜஸ்தமோகு³ணாத்மக: அவித்³யாமூலகல்பித: ஸமூல: க்ருத்ஸ்ந: உக்த:, வ்ருக்ஷரூபகல்பநயா ச 'ஊர்த்⁴வமூலம்' இத்யாதி³நா । "தம் ச அஸங்க³ஶஸ்த்ரேண த்³ருடே⁴ந சி²த்த்வா தத: பத³ம் தத் பரிமார்கி³தவ்யம்" இதி ச உக்தம் । தத்ர ச ஸர்வஸ்ய த்ரிகு³ணாத்மகத்வாத் ஸம்ஸாரகாரணநிவ்ருத்த்யநுபபத்தௌ ப்ராப்தாயாம், யதா² தந்நிவ்ருத்தி: ஸ்யாத் தத் வக்தவ்யம், ஸர்வஶ்ச கீ³தாஶாஸ்த்ரார்த²: உபஸம்ஹர்தவ்ய:, ஸ தாவாநேவ ச ஸர்வவேதா³ர்த²: அநுஷ்டா²யிநோ முமுக்ஷோ: க்ருத்ஸ்நோऽநுஷ்டே²ய: இத்யேதத³ர்த²ஞ்ச 'ப்³ராஹ்மணக்ஷத்ரியவிஶாம்' இத்யாதி³: ஆரப்⁴யதே—

௪௧. ப்³ராஹ்மணக்ஷத்ரியவிஶாம் ஶூத்³ராணாம் ச பரந்தப ।
கர்மாணி ப்ரவிப⁴க்தாநி ஸ்வபா⁴வப்ரப⁴வைர்கு³ணை: ॥

ப்³ராஹ்மணாஶ்ச க்ஷத்ரியாஶ்ச விஶஶ்ச ப்³ராஹ்மணக்ஷத்ரியவிஶ:, தேஷாம் ப்³ராஹ்மணக்ஷத்ரியவிஶாம் ஶூத்³ராணாம் ச—ஶூத்³ராணாம் அஸமாஸகரணம் ஏகஜாதித்வே ஸதி வேதா³நதி⁴காராத்—ஹே பரந்தப கர்மாணி ப்ரவிப⁴க்தாநி இதரேதரவிபா⁴கே³ந வ்யவஸ்தா²பிதாநி—கேந?—ஸ்வபா⁴வப்ரப⁴வை: கு³ணை:

---

செய்கைகளாகவும், செய்யும்பொருள்களாகவும், பயன்களாகவும் காணட்படுவதாய், ஸத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் குணங்களினது வடிவமாயுள்ளதாய், அவித்யையினால் கற்பிக்கப்பட்ட ஸம்ஸாரமனைத்தும் அதனது வேரோடு தீங்காகக் கூறப்பட்டது; அன்றியும், விருக்ஷமாக உருவகஞ்செய்து, "மேலே வேரும்" (௧௫ - ௧) என்பதுமுதலாகக் கூறப்பட்டது. "பற்றின்மையாகிய உறுதியான கோடரியினால் அதனை வெட்டிப், பின்பு, அந்நிலையைத் தேடவேண்டும்" (௧௫ - ௩, ௪) எனவும் அருளிச்செய்யப்பட்டது. அ(ந்த ஸம்ஸாரத்)திலே ஸகலமும முக்குணவடிவமாயிருத்தலால், ஸம்ஸாரகாரணம் நீங்குதலென்பது அமையாது (என்னும் சங்கை) வரவே, அது நீங்குதல் எவ்வாறு அமையுமோ அதனைக் கூறவேண்டும் என்னுங்கருத்தோடும், கீதாசாஸ்திரப்பொருள் முழுவதையும் முடிக்கவேண்டும் என்னுங்கருத்தோடும், "எல்லாவேதப்பொருளும் எல்லாஸ்மிருதிப்பொருளும் இவ்வளவுதான்; புருஷார்த்தத்தை விரும்புவோர்களால் அநுஷ்டிக்கவேண்டியதும் இவ்வளவுதான்" என்பதை (எடுத்துக்காட்டும்) கருத்தோடும் "பரந்தப!" (௧௮ - ௪௧) என்பதுமுதலியவை தொடங்கப்படுகின்றன:

நான்கு வர்ணங்கட்குந் துணங்கட்குத் தக்கவாறு விதிக்கப்பட்ட கர்மங்கள்.

௪௧. பரந்தப! பிராமண க்ஷத்திரிய வைச்யர்கட்கும், சூத்திரர்கட்கும் ஸ்வபாவத்தாலுண்டாகும் குணங்கட்கேற்ப கர்மங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன.

ஒருபிறப்பாளர் [உபநயநமில்லாதோர்] ஆதலால், சூத்திரர்கட்கு வேதத்தில் அதிகாரமில்லை; ஆகவே, (மற்றையோர்களோடு இவர்களை) ஒரேதொகையில் கூறாமையென்க. கர்மங்கள் ஒன்றற்கொன்று வெவ்வேறாகப் பகிர்ந்து அமைக்கப்பட்டிருக்கின்றன.—எவற்றிற்குத் தக்கபடி?—ஸ்வபாவத்தினாலுண்டாகும் குணங்கட்குத்

स्वभावः ईश्वरस्य प्रकृतिः त्रिगुणात्मिका माया, सा प्रभवः येषां गुणानां ते स्वभावप्रभवाः, तैः शमादीनि कर्माणि प्रविभक्तानि ब्राह्मणादीनाम्॥

अथवा ब्राह्मणस्वभावस्य सत्त्वगुणः प्रभवः कारणम्, तथा क्षत्रियस्वभावस्य सत्त्वोपसर्जनं रजः प्रभवः, वैश्यस्वभावस्य तमउपसर्जनं रजः प्रभवः, शूद्रस्वभावस्य रजउपसर्जनं तमः प्रभवः प्रशान्त्यैश्वर्येहामूढतास्वभावदर्शनाच्चतुर्णाम्॥

अथवा—जन्मान्तरकृतसंस्कारः प्राणिनां वर्तमानजन्मनि स्वकार्याभिमुखत्वेन अभिव्यक्तः स्वभावः, स प्रभवो येषां गुणानां ते स्वभावप्रभवाः गुणाः—गुणप्रादुर्भावस्य निष्कारणत्वानुपपत्तेः "स्वभावः कारणम्" इति कारणविशेषोपादानम्। एवं स्वभावप्रभवैः प्रकृतिप्रभवैः सत्त्वरजस्तमोभिः गुणैः स्वकार्यानुरूपेण शमादीनि कर्माणि प्रविभक्तानि॥

ननु शास्त्रप्रविभक्तानि शास्त्रेण विहितानि ब्राह्मणादीनां शमादीनि कर्माणि; कथम् उच्यते सत्त्वादिगुणप्रविभक्तानि इति?।

---

தக்கபடி. ஸ்வபாவமென்பது - ஈச்வரனுடைய பிரகிருதி, முக்குணவடிவமான மாயை. அதைப் பிறப்பிடமாகக்கொண்ட குணங்கட்குஏற்ப, அமைதிமுதலிய கர்மங்கள் பிராமணர்முதலானோர்கட்குப் பிரித்து அமைக்கப்பட்டிருக்கின்றன.

அல்லது (இவ்வாறு கொள்ளலாம்):—பிராமணஇயல்பிற்கு ஸத்துவகுணம் காரணம். அவ்வாறே, க்ஷத்திரியஇயல்பிற்கு ஸத்துவம்கீழ்ப்படிந்த ரஜோகுணம் காரணம். வைச்யஇயல்பிற்கு தமஸ்கீழ்ப்படிந்த ரஜோகுணம் காரணம். சூத்திர இயல்பிற்கு ரஜஸ்கீழ்ப்படிந்த தமோகுணம் காரணம். ஏனெனில், நான்கு (வகுப்பிற்கும் முறையே) அமைதியையும், ஆட்சியையும், முயற்சியையும், மயங்கியதன்மையையும் காண்கிறோம்.

அல்லது (இவ்வாறுகொள்ளலாம்):—ஸ்வபாவமென்பது - சென்ற பிறவிகளிற் செய்துகொள்ளப்பட்டதாய், பிராணிகட்கு இப்பொழுதுள்ள பிறவியிலே தனதுபயனை விளைக்கத் தலைப்பட்டுநிற்கும் வாஸனை. குணங்கள் அதனைக் காரணமாகவுடையவை; குணங்கள்வெளிப்படுதற்குக்காரணமில்லாதிருத்தல் பொருந்தாதாதலின் வாஸனை காரணமென ஓர்வகைக்காரணத்தைக்கொள்க. (குணங்கள் வெளிப்படுதற்கு, பிரகிருதி - முதற்காரணம்; வாஸனை - துணைக்காரணம் என்பதாம்.-ஆ.) இவ்வாறாக, வாஸனையைத் துணைக்காரணமாகவும், பிரகிருதியை முதற்காரணமாகவும் உடைய ஸத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் குணங்கட்குஏற்ப, தமது செய்கைக்குத் தக்கவாறு அமைதிமுதலிய கர்மங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

(ஆக்ஷேபம்):—அப்படியானால், பிராமணர்முதலானோர்கட்கு அமைதிமுதலிய கர்மங்கள் சாஸ்திரத்தினால் வகுக்கப்பட்டு சாஸ்திரத்தினால் விதிக்கப்பட்டவை; "ஸத்துவம்முதலிய குணங்கட்குத் தக்கபடி வகுத்தமைக்கப்பட்டிருக்கின்றன" என்று எவ்வாறு கூறப்படுகின்றது?

𑌨𑍈𑌷 𑌦𑍋𑌷𑌃; 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌣𑌾𑌪𑌿 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌯𑍈𑌵 𑌶𑌮𑌾𑌦𑍀𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑌿, 𑌨 𑌗𑍁𑌣𑌾𑌨𑌪𑍇𑌕𑍍𑌷𑌯𑌾, 𑌇𑌤𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑍍𑌯𑌪𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌗𑍁𑌣𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑌿 𑌇𑌤𑌿 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ ௪௧ ॥

𑌕𑌾𑌨𑌿 𑌪𑍁𑌨𑌃 𑌤𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௪௨. 𑌶𑌮𑍋 𑌦𑌮𑌸𑍍𑌤𑌪𑌶𑍍𑌶𑍌𑌚𑌂 𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌾𑌰𑍍𑌜𑌵𑌮𑍇𑌵 𑌚 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌸𑍍𑌤𑌿𑌕𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌜𑌮𑍍 ॥

𑌶𑌮𑌃 𑌦𑌮𑌶𑍍𑌚 𑌯𑌥𑌾𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌾𑌰𑍍𑌥𑍌, 𑌤𑌪𑌃 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌂 𑌶𑌾𑌰𑍀𑌰𑌾𑌦𑌿, 𑌶𑍌𑌚𑌂 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌂, 𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌕𑍍𑌷𑌮𑌾, 𑌆𑌰𑍍𑌜𑌵𑌮𑍍 𑌋𑌜𑍁𑌤𑌾 𑌏𑌵 𑌚, 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍, 𑌆𑌸𑍍𑌤𑌿𑌕𑍍𑌯𑌮𑍍 𑌆𑌸𑍍𑌤𑌿𑌕𑌭𑌾𑌵𑌃 𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌤𑌾 𑌆𑌗𑌮𑌾𑌰𑍍𑌥𑍇𑌷𑍁, 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌜𑌾𑌤𑍇𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌜𑌂—𑌯𑌤𑍍 𑌉𑌕𑍍𑌤𑌂 '𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌪𑍍𑌰𑌭𑌵𑍈𑌃 𑌗𑍁𑌣𑍈𑌃 𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑌿' 𑌇𑌤𑌿 𑌤𑌦𑍇𑌵 𑌉𑌕𑍍𑌤𑌂 '𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌜𑌮𑍍' 𑌇𑌤𑌿 ॥ ௪௨ ॥

௪௩. 𑌶𑍌𑌰𑍍𑌯𑌂 𑌤𑍇𑌜𑍋 𑌧𑍃𑌤𑌿𑌰𑍍𑌦𑌾𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌚𑌾𑌪𑍍𑌯𑌪𑌲𑌾𑌯𑌨𑌮𑍍 ॥
𑌦𑌾𑌨𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌭𑌾𑌵𑌶𑍍𑌚 𑌕𑍍𑌷𑌾𑌤𑍍𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌜𑌮𑍍 ॥

𑌶𑍌𑌰𑍍𑌯𑌂 𑌶𑍂𑌰𑌸𑍍𑌯 𑌭𑌾𑌵𑌃, 𑌤𑍇𑌜𑌃 𑌪𑍍𑌰𑌾𑌗𑌲𑍍𑌭𑍍𑌯𑌂, 𑌧𑍃𑌤𑌿𑌃 𑌧𑌾𑌰𑌣𑌂 𑌸𑌰𑍍𑌵𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌸𑍁 𑌅𑌨𑌵𑌸𑌾𑌦𑌃 𑌭𑌵𑌤𑌿 𑌯𑌯𑌾 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 𑌉𑌤𑍍𑌤𑌮𑍍𑌭𑌿𑌤𑌸𑍍𑌯, 𑌦𑌾𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌦𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 𑌭𑌾𑌵𑌃, 𑌸𑌹𑌸𑌾 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑍇𑌷𑍁 𑌕𑌾𑌰𑍍𑌯𑍇𑌷𑍁 𑌅𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑍇𑌨 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃,

---

(ஸமாதாநம்) :—இது குற்றமன்று; பிராமணர்முதலானோர்கட்கு அமைதி முதலிய கர்மங்கள் ஸத்துவம்முதலான ஓரோர் குணத்தை நோக்கித்தான் சாஸ்திரத்தினும் வகுத்தமைக்கப்பட்டிருக்கின்றன; குணங்களை நோக்காமலே (விதிக்கப்பட) இல்லை. ஆகவே, கர்மங்கள் சாஸ்திரத்தினல் வகுத்தமைக்கப்பட்டிருந்தாலும், குணங்கட்குஏற்ப வகுத்தமைக்கப்பட்டிருக்கின்றன எனக் கூறப்படுகின்றது. (௪௧)

மற்று, அக்கர்மங்கள் யாவை? என்பது—கூறுவோம் :

௪௨. அமைதியும், அடக்கமும், தவமும், சுத்தமும், பொறுமையும், நேர்மையும், அறிவும், அநுபவமும், ஆஸ்திகத்தன்மையும் ஸ்வபாவத்தாலாகின்றவையான பிராமணஜாதியின் கர்மங்கள்.

“அமைதியும்,” “அடக்கமும்” - கீழ் (௧௬ - ௧,௨) அர்த்தம் விவரிக்கப்பெற்றவை. தவம் - கீழ்க்கூறிய (௧௭ - ௧௪, ௧௫, ௧௬) சாரீரதபஸ் முதலியன. சுத்தம் - (கீழ்) விவரிக்கப்பட்டது. ஆஸ்திகத்தன்மை - சாஸ்திரவிஷயங்களில் நம்பிக்கையுடைமை. “ஸ்வபாவத்தாலாகும் குணங்கட்குஏற்ப வகுக்கப்பட்டிருக்கின்றன” (௧௮ - ௪௧) என எது உரைக்கப்பட்டதோ, அதுவேதான் “ஸ்வபாவத்தாலாகின்றவையான” எனக் கூறப்பட்டது. (௪௨)

௪௩. சூரத்தன்மையும், துணிபும், திட்பமும், கூர்மையும், போரில் ஓடாமையும், கொடையும், ஆட்சியும் ஸ்வபாவத்தாலாகின்றவையான க்ஷத்திரியஜாதியின் கர்மங்கள்.

திட்பம் - எந்தத்திண்மையினல் தாங்கப்பெற்றவனுக்கு, எந்தநிலைமையிலும் அயர்ந்திடாமை இருக்கின்றதோ, (அந்தத் திண்மை). கூர்மை - சுறுசுறுத்தவன் தன்மை, சடக்கென்று நேர்ந்த காரியங்களில் மயங்காது செல்லுதல். போரில் ஓடா

யுத்தே சாபி அபலாயநம் அபராங்முகீபாவ:, ஶத்ருப்ய: தாநம் தேயத்ரவ்யேஷு முக்தஹஸ்ததா, ஈஶ்வரபாவ: ஈஶ்வரஸ்ய பாவ:, ப்ரபுஶக்திப்ரகடீகரணம் ஈஶிதவ்யாந் ப்ரதி, க்ஷாத்ரம் கர்ம க்ஷத்ரியஜாதே: விஹிதம் கர்ம க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம் ॥ ௪௩ ॥

௪௪. க்ருஷிகௌரக்ஷ்யவாணிஜ்யம் வைஶ்யகர்ம ஸ்வபாவஜம் ।
பரிசர்யாத்மகம் கர்ம ஶூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம் ॥

க்ருஷிகௌரக்ஷ்யவாணிஜ்யம் க்ருஷிஶ்ச கௌரக்ஷ்யம் ச வாணிஜ்யம் ச க்ருஷி-கௌரக்ஷ்யவாணிஜ்யம்—க்ருஷி: பூமே: விலேகநம், கௌரக்ஷ்யம் கா: ரக்ஷதீதி கோரக்ஷ: தஸ்ய பாவோ கௌரக்ஷ்யம் பாஶுபால்யமித்யர்த:, வாணிஜ்யம் வணிக்கர்ம க்ரயவிக்ரயாதிலக்ஷணம்—வைஶ்யகர்ம வைஶ்யஜாதே: கர்ம வைஶ்யகர்ம ஸ்வபாவஜம் । பரிசர்யாத்மகம் ஶுஶ்ரூஷாஸ்வபாவம் கர்ம ஶூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம் ॥ ௪௪ ॥

ஏதேஷாம் ஜாதிவிஹிதாநாம் கர்மணாம் ஸம்யகநுஷ்டிதாநாம் ஸ்வர்கப்ராப்தி: பலம் ஸ்வபாவத:, 'வர்ணா ஆஶ்ரமாஶ்ச ஸ்வகர்மநிஷ்டா: ப்ரேத்ய கர்மபலமநுபூய தத: ஶேஷேண விஶிஷ்டதேஶஜாதிகுலதர்மாயு:ஶ்ருதவ்ருத்தவித்த-ஸுகமேதஸோ ஜந்ம ப்ரதிபத்யந்தே' இத்யாதிஸ்ம்ருதிப்ய:; புராணே ச வர்ணி-

---

மை - எதிரிகட்குப் புறங்கொடாமை. கொடை - பொருள்களின்மேல் கையிறுக்கமில்லாமை. ஆட்சி - ஆளுபவன் தன்மை; ஆளப்படுகிறவரிடத்துப் பிரபுசக்தியை வெளிப்படுத்தல், ஆளுந்திறமையை நடத்துதல். க்ஷத்திரியஜாதியின் கர்மங்கள் - க்ஷத்திரிய ஜாதிக்கு விதிக்கப்பட்ட கர்மங்கள். (௪௩)

௪௪. வேளாண்மையும், பசுக்களைப் பரிபாலித்தலும், வியாபாரமும் ஸ்வபாவத்தினாலாகின்றவையான வைச்யஜாதியின் கர்மங்கள். மற்றும், சூத்திரஜாதியின் கர்மமானது ஸ்வபாவத்தாலாகின்றதாய், ஊழியத்தன்மையதாயுளது.

வேளாண்மை - நிலத்தை உழுதல். வியாபாரம் - வாங்கல், விற்றல்முதலாகிய வாணிகர்தொழில். (௪௪)

தம்தம் கர்மத்தை அநுஷ்டித்தல் ஸித்தியைத் தரும்.

(அந்தந்த) வர்ணத்திற்கு விதிக்கப்பட்ட கர்மங்களை நேராக அநுஷ்டித்த பொழுது, இயற்கையினால் [விதிக்கப்பட்டவை என்றதனாலேயே, மோக்ஷநோக்கு இல்லாது கர்மங்களை அநுஷ்டிப்பதனால்—ஆ.] ஸ்வர்க்கத்தையடைதல் இவற்றின் பயனும்; "வர்ணத்தாரும், ஆச்ரமத்தாரும் தமது கர்மங்களில் அமர்ந்தவராய், மறுமையிலே கர்மத்தின்பயனை அநுபவித்து, பின்பு, (அக்கர்ம) மிச்சத்திற்குத் தக்கபடி சிறந்த நாடு, ஜாதி, குலம், தருமம், ஆயுள், கல்வி, ஒழுக்கம், செல்வம், இன்பம், அறிவு இவற்றையுடையவராய் பிறவியைப்பெறுகிறார்கள்" (ஆ - ௨ - ௨ - ௨, ௩) என்பதுமுதலான ஸ்மிருதிகளினாலென்க; மேலும், புராணத்தில், வர்ணத்தார்க்கும் ஆச்ரமத்

𑌨𑌾𑌮𑍍 𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌿𑌣𑌾𑌂 𑌚 𑌮𑍋𑌕𑍍𑌷𑌫𑌲𑌹𑍇𑌤𑍁𑌵𑌿𑌶𑍇𑌷𑌸𑍍𑌮𑌰𑌣𑌾𑌤𑍍 । 𑌕𑌾𑌰𑌣𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍 𑌇𑌦𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑌾𑌣𑌂 𑌫𑌲𑌮𑍍—

௪௫. 𑌸𑍍𑌵𑍇 𑌸𑍍𑌵𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌭𑌿𑌰𑌤𑌃 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌲𑌭𑌤𑍇 𑌨𑌰𑌃 ।
𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌨𑌿𑌰𑌤𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌯𑌥𑌾 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 𑌤𑌚𑍍𑌛𑍃𑌣𑍁 ॥

𑌸𑍍𑌵𑍇 𑌸𑍍𑌵𑍇 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌲𑌕𑍍𑌷𑌣𑌭𑍇𑌦𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌅𑌭𑌿𑌰𑌤𑌃 𑌤𑌤𑍍𑌪𑌰𑌃 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌤𑍍 𑌕𑌲𑍍𑌮𑌷𑌕𑍍𑌷𑌯𑍇 𑌸𑌤𑌿 𑌕𑌾𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑌾𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌂 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌲𑌭𑌤𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨𑌰𑌃 𑌅𑌧𑌿𑌕𑍃𑌤𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 । 𑌕𑌿𑌂 𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌤 𑌏𑌵 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃 ? —𑌨 । 𑌕𑌥𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿 ? 𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌨𑌿𑌰𑌤𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌯𑌥𑌾 𑌯𑍇𑌨 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍇𑌣 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿, 𑌤𑌚𑍍𑌛𑍃𑌣𑍁 ॥ ௪௫ ॥

௪௬. 𑌯𑌤𑌃 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌤𑌮𑍍 ।
𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌤𑌮𑌭𑍍𑌯𑌰𑍍𑌚𑍍𑌯 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 𑌮𑌾𑌨𑌵𑌃 ॥

𑌯𑌤𑌃 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 𑌉𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 𑌚𑍇𑌷𑍍𑌟𑌾 𑌵𑌾 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑌾𑌮𑌿𑌣𑌃 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌾𑌤𑍍 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌯𑍇𑌨 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑍇𑌣 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌜𑌗𑌤𑍍 𑌤𑌤𑌂 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌂, 𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌵𑌰𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌮𑍋𑌚𑌿𑌤𑍇𑌨 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌰𑍍𑌣𑌂 𑌤𑌂 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 𑌅𑌭𑍍𑌯𑌰𑍍𑌚𑍍𑌯 𑌪𑍂𑌜𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌆𑌰𑌾𑌧𑍍𑌯 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑌾𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 𑌮𑌾𑌨𑌵𑌃 ॥ ௪௬ ॥

---

தார்க்கும் பல உலகங்களையும் பல பயன்களையும் சிறப்பித்துக்கூறுவதனாலுமென்க. ஆனால், இனிக்கூறப்படுகின்ற இப்பயனனது வேறோர்காரணத்தால் [மோக்ஷநோக்கோடு கர்மங்களை அநுஷ்டிப்பதனால்—ஆ.] ஆவதாம் :

௪௫. மனிதன் தன்தனக்குரிய கர்மத்தில் அமர்ந்தவனாய் ஸித்தியைப் பெறுகிறான். தன்கர்மத்தில் அமர்ந்தவன் எவ்வாறு ஸித்தியைப் பெறுகின்றானோ, அதனைக் கேள்.

தன்தனக்குரிய - கீழ்க்கூறிய லக்ஷணத்தையும் வேற்றுமையையும் உடைய. ஸித்தியை - தனக்குரிய கர்மங்களைச் செய்வதனால் அழுக்குத் தேய்ந்தவழி, உடம்பும் இந்திரியங்களும் ஞானத்திலே நிலைபெறுதற்கு, ஞானநிஷ்டைக்குத் தகுந்தவையாதலை. மனிதன் - (கர்மத்திற்கு) உரியபுருஷன்.—தனக்குரிய கர்மங்களைச் செய்வதனாலேயே ஸித்தி நேரே (கைகூடுமோ?—வினவுவோன், ஸித்திஎன்னும்சொற்கு மோக்ஷமென்னும் அர்த்தத்தைக்கொண்டு இங்கு இவ்வாறு ஸந்தேகிக்கிறான்.—ஆ.)—இல்லை.—அப்பொழுது எப்படி?—தனக்குரிய கர்மத்திலமர்ந்தவன் எவ்விதத்தால் ஸித்தியைப் பெறக்கூடுமோ, அதனைக் கேள் : (௪௫)

௪௬. பொருள்கட்கு எவனிடத்தினின்றும் பிரவிருத்தி (வருகின்றதோ), எவனால் இதெல்லாம் வியாபிக்கப்பட்டிருக்கின்றதோ, அவனை - மனிதன் தனக்குரியகர்மத்தால் பூஜித்து ஸித்தியைப் பெறுகிறான்.

பிரவிருத்தி - உற்பத்தி, அல்லது முயற்சி. எவனிடத்தினின்றும் - அந்தர்யாமியான [உள்ளே இருந்து ஆள்பவனான] ஈச்வரனிடத்தினின்றும். பொருள்கட்கு - பிராணிகட்கு. எவனை - ஈச்வரனை. இதெல்லாம் - பிரபஞ்சமெல்லாம். தனக்குரிய கர்மத்தால் - ஒவ்வொரு வர்ணத்திற்கும் கீழ்க்கூறியுள்ள கர்மத்தால். மனிதன் தனக்குரிய கர்மத்தால் ஈச்வரனைத் தொழுது, ஞானநிஷ்டைக்கு, ஞானத்திலே நிலைத்தற்குத் தகுந்தவனாதல்மாத்திரமாகிய ஸித்தியைப் பெறுகிறான் என்க. (௪௬)

யத: ஏவம் அத:—

சஎ. ஶ்ரேயாந் ஸ்வத⁴ர்மோ விகு³ண: பரத⁴ர்மாத் ஸ்வநுஷ்டி²தாத் ।
ஸ்வபா⁴வநியதம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பி³ஷம் ॥

ஶ்ரேயாந் ப்ரஶஸ்யதர: ஸ்வோ த⁴ர்ம: ஸ்வத⁴ர்ம: விகு³ணோऽபி—இதி அபிஶப்³தோ³ த்³ரஷ்டவ்ய:— பரத⁴ர்மாத் ஸ்வநுஷ்டி²தாத் । யத் உக்தம் ஸ்வபா⁴வஜம் இதி ததே³வ, உக்தம் 'ஸ்வபா⁴வநியதம்' இதி—யதா² விஷஜாதஸ்ய இவ க்ருமே: விஷம் ந தோ³ஷகரம், ததா² ஸ்வபா⁴வநியதம் கர்ம குர்வந் ந ஆப்நோதி கில்பி³ஷம் பாபம் ॥ சஎ ॥

ஸ்வபா⁴வநியதம் கர்ம குர்வாணோ விஷஜ: இவ க்ருமி: கில்பி³ஷம் ந ஆப்நோதீதி உக்தம்; பரத⁴ர்மஶ்ச ப⁴யாவஹ: இதி; அநாத்மஜ்ஞஶ்ச 'ந ஹி கஶ்சித் க்ஷணமபி ஜாது திஷ்ட²தி' இதி । அத:—

சஅ. ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோ³ஷமபி ந த்யஜேத் ।
ஸர்வாரம்பா⁴ ஹி தோ³ஷேண தூ⁴மேநாக்³நிரிவாவ்ருதா: ॥

ஸஹஜம் ஸஹ ஜந்மநைவ உத்பந்நம்—கிம் தத்?—கர்ம கௌந்தேய ஸதோ³ஷமபி த்ரிகு³ணாத்மகத்வாத் ந த்யஜேத் । ஸர்வாரம்பா⁴: ஸர்வகர்மாணி ஸர்வாரம்பா⁴:,

---

இவ்வா திருப்பதனுல்,

சஎ. தனக்குரிய கர்மம் நலமில்லாத(தாயினும், தான்) நன்ருய் அநுஷ்டித்த பிறது கர்மத்தினும் மிகவும் நல்லது. ஸ்வபாவத்தாலமைந்த கர்மத்தைச் செய்கிறவன் பாவத்தை அடையமாட்டான்.

"நலமில்லாததாயினும்" என "ஆயினும்" என்னும்சொல்லை (வருவித்துக்) காண்க. "ஸ்வபாவத்தாலாகின்ற" (கஅ - சஉ, சங, சச) எனக்கூறியது எதுவோ, அதுதான் "ஸ்வபாவத்தாலமைந்த" எனக் கூறப்பட்டது. விஷத்திற்பிறந்த புழு விற்கு விஷம் தீங்கைச் செய்யாதவாறுபோல, ஸ்வபாவத்தா லமைந்த கர்மத்தைச் செய்கிறவன் பாவத்தையடையா னென்க. (சஎ)

தனக்குரிய கர்மத்தை விடக்கூடாது.

விஷத்தில் பிறந்த புழுவானது (விஷத்தாலாகும் இறப்பை அடையாதவாறு) போல, ஸ்வபாவத்தாலமைந்த கர்மத்தைச் செய்கிறவன் பாவத்தை யடையமாட்டான் எனக் கூறப்பட்டது: மேலும், பிறரது தருமம் பயத்தை விளைப்பது எனவும் (கூறப்பட்டது): அன்றியும், ஆத்மாவை அறியாதவன் எவனும் கணப்பொழுதாயினும் கர்மத்தைச் செய்யாதவனுய் இருக்கமாட்டான் எனவும் (கூறப்பட்டது). ஆகவே,

சஅ. கௌந்தேய! தீங்கொடு கூடியதாயினும், உடன்பிறந்த கர்மத்தை விடக் கூடாது. ஏனெனில், தீ புகையினுல் (சூழப்படுவது)போல, எல்லாக்கர்மங்களும், தீங்கினுல் சூழப்பட்டிருக்கின்றன.

உடன்பிறந்தது-பிறவியோடுகூடவே உண்டானது.—அது யாது?—கர்மம். தீங்கொடு கூடியதாயினும் - முக்குணவடிவாயிருத்தலால், கேடுள்ளதாயினும். "எல்லாக் கர்மங்களும" என்பதற்கு - "தனக்குரிய தருமமாக யாதொரு செய்கை உளதோ,

सर्वकर्माणीत्यर्थः — प्रकरणात् यः कश्चित् स्वधर्मः स्वयं पर-धर्मश्च — ते सर्वे ह्यारम्भाः — त्रिगुणात्मकत्वं हेतुः — त्रिगुणात्मकत्वाच्च दोषेण, सहजेन धूमेनाग्निरिव, आवृताः । सहजस्य कर्मणः स्वधर्माख्यस्य परित्यागेन परधर्मानुष्ठानेऽपि दोषात् नैव मुच्यते; भयावहश्च परधर्मः । न च शक्यते कृत्स्नशः त्यक्तुम् अज्ञेन कर्म यतः, तस्मात् न त्यजेत् इत्यर्थः ॥

किं कृत्स्नशः त्यागाशक्यत्वात् इति न त्यजेत्? किं वा सहजस्य कर्मणः त्यागे दोषो भवतीति?

किं चातः?—

यदि तावत् कृत्स्नशः त्यागाशक्यत्वात् इति न त्याज्यं सहजं कर्म, एवं तर्हि कृत्स्नशः त्यागे गुण एव स्यादिति सिद्धं भवति ।

सत्यम् एवम्; कृत्स्नशः त्याग एव न उपपद्यते इति चेत्—किं नित्यप्रवृत्त्यात्मकः पुरुषः, यथा सांख्यानां गुणाः? किं वा क्रियैव

---

பிறர்க்குரிய தருமமாகவும் யாதொருசெய்கை உளதோ, அவையெல்லாம்'' என, பிரகரணத்தினல், பேசிவரும்விஷயத்தினல் (பொருள்கொள்க). இதிலே [கர்மங்கள் கெடுதியுள்ளவையாயிருப்பதற்கு] முக்குணவடிவமாயிருத்தல் காரணம். எல்லாச்செய்கைகளும் முக்குணவடிவமாயிருப்பதனுல்தீங்கினுல் சூழப்பட்டிருக்கின்றன; உடன்பிறந்த புகையினுல் நெருப்பு சூழப்படுவதுபோல. ஸ்வதருமமென்னும் பெயருடைய உடன்பிறந்த கர்மத்தைவிட்டு, பிறரது தருமத்தை அநுஷ்டித்தாலும், தீங்கினின்றும் நீங்கவேமாட்டான்; மேலும், பிறரது தருமம் பயத்தைத் தருவது; மற்றும், அஜ்ஞானியால் கர்மம்முழுவதையும் விட்டிடமுடியாது; ஆதலால், (கர்மத்தை) விடக்கூடாது என்பது (தேர்ந்த) பொருள்.

கர்மத்தை முற்றும் விட்டிடுதல் நிகழக்கூடுமோ ?

கர்மம்முழுவதையும் விட்டிடுதல் அரிது என்பதனுல், (அதனை) விட்டிடக்கூடாதா ? அல்லது, உடன்பிறந்த கர்மத்தை விட்டிடுவதிலே குற்றம் [சாஸ்திரத்தில் விதித்த கர்மத்தை விட்டிடுவதனுல் பிரத்தியவாயம் வரும் என்பதனுல், (அதனை விட்டிடக்கூடாதா ? என ஆராய்வோம்):—

(ஆக்ஷேபம்):—இதனுல் என்ன ? [இவ்வாராய்ச்சியினு லாவதென்ன ?]

(ஸமாதாநம்) :—முதலில், முழுவதையும்விடுதல் அரிது என்றதனுல், உடன்பிறந்த கர்மத்தை விடக்கூடாதாயின், அப்பொழுது இவ்வாறு முழுவதையும் விட்டிடுவதிலே மேன்மையேதான் ஆகும் என அமைந்துளது. (கடலைக் கையிலெடுத்து ஒரேவாயால் மடுத்தல் அரிதாதலால், இதனைச் செய்த அகஸ்தியருக்கு மேன்மை பிரஸித்தமாயுள்ளது என்பதை உதாரணமாக நோக்கிக்கொள்க. இதனுல் இவ்வாராய்ச்சி பயனுடைய தென்க.—ஆ.)

ஸாங்கிய பௌத்த வைசேஷிகருடைய கோள்கைகள்.

(ஆக்ஷேபம்) :—இவ்வாறு உண்மை; (கர்மம்முழுதையும் விட்டிடுதல் மேன்மையுடைத்து; ஆயினும்) முழுமையும் விட்டிடுதலே அமையாது என்றல்—ஸாங்கியர்கட்கு (ஸத்துவம்முதலிய) குணங்கள்போல, ஆத்மா எப்பொழுதும் அசைந்துகொண்

𑌕𑌾𑌰𑌕𑌂, 𑌯𑌥𑌾 𑌬𑍌𑌦𑍍𑌧𑌾𑌨𑌾𑌂 𑌸𑍍𑌕𑌨𑍍𑌧𑌾𑌃 𑌕𑍍𑌷𑌣𑌪𑍍𑌰𑌧𑍍𑌵𑌂𑌸𑌿𑌨𑌃? 𑌉𑌭𑌯𑌥𑌾𑌽𑌪𑌿 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌃 𑌕𑌰𑍍𑌮𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑍋 𑌨 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿 ।

𑌅𑌥 𑌤𑍃𑌤𑍀𑌯𑍋𑌽𑌪𑌿 𑌪𑌕𑍍𑌷𑌃—𑌯𑌦𑌾 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌤𑌦𑌾 𑌸𑌕𑍍𑌰𑌿𑌯𑌂 𑌵𑌸𑍍𑌤𑍁 । 𑌯𑌦𑌾 𑌨 𑌕𑌰𑍋𑌤𑌿, 𑌤𑌦𑌾 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌂 𑌤𑌦𑍇𑌵 । 𑌤𑌤𑍍𑌰 𑌭𑌵𑌤𑌿 𑌶𑌕𑍍𑌯𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌕𑌰𑍍𑌮𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑍍 । 𑌅𑌯𑌂 𑌤𑍁 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌪𑌕𑍍𑌷𑍇 𑌵𑌿𑌶𑍇𑌷𑌃—𑌨 𑌨𑌿𑌤𑍍𑌯𑌪𑍍𑌰𑌚𑌲𑌿𑌤𑌂 𑌵𑌸𑍍𑌤𑍁, 𑌨𑌾𑌪𑌿 𑌕𑍍𑌰𑌿𑌯𑍈𑌵 𑌕𑌾𑌰𑌕𑌮𑍍—𑌕𑌿𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿? —𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍇 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑍇 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌾 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 𑌉𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇, 𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌾 𑌚 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿 । 𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 𑌤𑌤𑍍 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌂 𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑌤𑍍 𑌅𑌵𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍇 । 𑌇𑌤𑌿 𑌏𑌵𑌮𑌾𑌹𑍁𑌃 𑌕𑌾𑌣𑌾𑌦𑌾𑌃 । 𑌤𑌦𑍇𑌵 𑌚 𑌕𑌾𑌰𑌕𑌮𑍍 𑌇𑌤𑌿 । 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌪𑌕𑍍𑌷𑍇 𑌕𑍋 𑌦𑍋𑌷𑌃 𑌇𑌤𑌿 ?

𑌅𑌯𑌮𑍇𑌵 𑌤𑍁 𑌦𑍋𑌷𑌃 𑌯𑌤𑍍𑌤𑍁 𑌅𑌭𑌾𑌗𑌵𑌤𑌂 𑌮𑌤𑌮𑌿𑌦𑌮𑍍 । 𑌕𑌥𑌂 𑌜𑍍𑌞𑌾𑌯𑌤𑍇 ? 𑌯𑌤𑌃 𑌆𑌹 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 ‘𑌨𑌾𑌸𑌤𑍋 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌭𑌾𑌵𑌃’ 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 । 𑌕𑌾𑌣𑌾𑌦𑌾𑌨𑌾𑌂 𑌹𑌿 𑌅𑌸𑌤𑌃 𑌭𑌾𑌵𑌃, 𑌸𑌤𑌶𑍍𑌚 𑌅𑌭𑌾𑌵𑌃, 𑌇𑌤𑌿 𑌇𑌦𑌂 𑌮𑌤𑌮𑌭𑌾𑌗𑌵𑌤𑌮𑍍 ।

𑌅𑌭𑌾𑌗𑌵𑌤𑌮𑌪𑌿 𑌨𑍍𑌯𑌾𑌯𑌵𑌚𑍍𑌚𑍇𑌤𑍍 𑌕𑍋 𑌦𑍋𑌷𑌃 ? 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍—

---

டிருக்குந்தன்மையதா? அல்லது, பௌத்தர்கட்கு, கணந்தோறும் அழிகின்ற ஸ்கந்தங்கள்போல, செய்கையே செய்யும்பொருளா (ஆத்மாவா)? இருவகையிலும், கர்மத்தைமுற்றும் விட்டிடுதல் நிகழமாட்டாது. (ஏனெனில், ஆத்மாவினது இயல்பு கெடும், விகாரப்படும் என்க.—ஆ.)

இனி, மூன்றும் கோட்பாடு (வருமாறு) :—பொருள்[ஆத்மா] எப்பொழுது செய்கின்றதோ, அப்பொழுது செய்கையுடைத்து; எப்பொழுது செய்யவில்லையோ, அப்பொழுது செய்கையில்லது அதுவே. அது இவ்வாறுள்ளவழி, கர்மத்தை முற்றும் விட்டிடுதல் இயலாது. ஆனால், இக்கோட்பாட்டினுள், இது வித்தியாசம் :—பொருள் [ஆத்மா] எப்பொழுதும் அசைந்துகொண்டிருப்பதன்று; அன்றியும், செய்கையேதான் செய்யும்பொருள்[ஆத்மா] அன்று.—அங்ஙனமென்ன? நிலையுள்ள பொருளான (ஆத்மாவினிடத்து, உண்டாதற்கு முன்) இல்லாத செய்கை உண்டாகின்றது; இருக்கின்ற செய்கையும் அழிகின்றது. அப்பொருள் சுத்தமானதாய் (செய்கையில்லதாய், ஆனால், முயற்சிக்கு, செய்கைக்குக் காரணமான) சக்தியையுடையதாய் நிற்கின்றது. எனவும், இவ்வாறாக அதுவேதான் செய்யும்பொருள் எனவும் கணாதரைப் பின்பற்றிபவர்கள் கூறுகிறார்கள். இக்கோட்பாட்டிலே என்னகுற்றம்? என்பது—

(ஸமாதானம்) :—மற்று, இக்கொள்கையானது பகவானது உபதேசத்திற்கு மாறாயிருப்பதனால், ஏன்! இதுவேதான் குற்றமாம்.—எவ்வாறு அறியப்படுகின்றது? [உனக்கெப்படித் தெரியும்?]—ஏனெனில், பகவான் “ இன்மைக்கு உண்மை இல்லை” (உ - கசு)என அருளிச்செய்துள்ளார். கணாதரைப்பின்பற்றியவர்க்கன்றோ இன்மைக்கு உண்மையும், உண்மைக்கு இன்மையும் உண்டு ; எனவே, இக்கொள்கை பகவானது உபதேசத்திற்கு மாறானது.

(ஆக்ஷேபம்) :—(அது) பகவானது உபதேசத்திற்கு மாறானதாயினும், யுக்தி பொருந்தியதாயின், யாது குற்றம்? எனில்—

𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—𑌦𑍋𑌷𑌵𑌦𑌿𑌦𑌂, 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌤𑍍 । 𑌕𑌥𑌮𑍍 ?—𑌯𑌦𑌿 𑌤𑌾𑌵𑌤𑍍 𑌦𑍍𑌵𑍍𑌯𑌣𑍁𑌕𑌾𑌦𑌿 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍 𑌉𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑍇𑌵 𑌅𑌸𑌤𑍍, 𑌉𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌂 𑌚 𑌸𑍍𑌥𑌿𑌤𑍍𑌵𑌾 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍 𑌕𑌾𑌲𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑍇𑌵 𑌅𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍍 𑌆𑌪𑌦𑍍𑌯𑌤𑍇, 𑌤𑌥𑌾 𑌚 𑌸𑌤𑌿 𑌅𑌸𑌦𑍇𑌵 𑌸𑌤𑍍 𑌜𑌾𑌯𑌤𑍇, 𑌸𑌦𑍇𑌵 𑌅𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍍 𑌆𑌪𑌦𑍍𑌯𑌤𑍇, 𑌅𑌭𑌾𑌵𑌃 𑌭𑌾𑌵𑍋 𑌭𑌵𑌤𑌿, 𑌭𑌾𑌵𑌸𑍍𑌤𑍁 𑌅𑌭𑌾𑌵𑌃 𑌭𑌵𑌤𑌿 𑌇𑌤𑌿 ; 𑌤𑌤𑍍𑌰 𑌅𑌭𑌾𑌵𑌃 𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑌃 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍 𑌉𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 𑌶𑌶𑌵𑌿𑌷𑌾𑌣𑌕𑌲𑍍𑌪𑌃 𑌸𑌮𑌵𑌾𑌯𑍍𑌯𑌸𑌮𑌵𑌾𑌯𑌿𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌾𑌖𑍍𑌯𑌂 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 𑌅𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 । 𑌨 𑌚 𑌏𑌵𑌮𑍍 𑌅𑌭𑌾𑌵𑌃 𑌉𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇, 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌚 𑌅𑌪𑍇𑌕𑍍𑌷𑌤𑍇, 𑌇𑌤𑌿 𑌶𑌕𑍍𑌯𑌂 𑌵𑌕𑍍𑌤𑍁𑌮𑍍 ; 𑌅𑌸𑌤𑌾𑌂 𑌶𑌶𑌵𑌿𑌷𑌾𑌣𑌾𑌦𑍀𑌨𑌾𑌮𑍍 𑌅𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 । 𑌭𑌾𑌵𑌾𑌤𑍍𑌮𑌕𑌾𑌸𑍍𑌤𑍁 𑌘𑌟𑌾𑌦𑌯𑌃 𑌉𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌃, 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍 𑌅𑌭𑌿𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑍇 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 𑌅𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌉𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌶𑌕𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑍁𑌮𑍍 ॥

𑌕𑌿𑌂𑌚—𑌅𑌸𑌤𑌶𑍍𑌚 𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑍇 𑌸𑌤𑌶𑍍𑌚 𑌅𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑍇 𑌨 𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑍇𑌷𑍁 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌸𑌃 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 ; “𑌸𑌤𑍍 𑌸𑌦𑍇𑌵, 𑌅𑌸𑌤𑍍 𑌅𑌸𑌦𑍇𑌵” 𑌇𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 ॥

𑌕𑌿𑌂𑌚—𑌉𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌦𑍍𑌵𑍍𑌯𑌣𑍁𑌕𑌾𑌦𑍇𑌃 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌕𑌾𑌰𑌣𑌸𑌤𑍍𑌤𑌾𑌸𑌂-

---

(ஸமாதாநம்):—எல்லாப்பிரமாணத்தோடும் முரணுவதால், இது குற்றமுடைத்தேதான்.—எப்படி ?—(த்வயணுகம் - இரண்டு அணுக்களாலானது.) இனி, த்வயணுகம் முதலியபொருளானது உண்டாதற்குமுன்னர் முற்றுமே [சுத்தமாய்] இல்லாததனல், உண்டான பொருளும் சிறிதுகாலம் நின்று மீண்டும் முற்றுமே இல்லாத்தன்மையையடைகின்றதானல்,—அவ்வாறுள்ளவளவிலே, இன்மையே உண்மையாகின்றது; உண்மையே இன்மையாதலைப் பெறுகின்றது; இல்பொருள் உள்பொருளாகின்றது; உள்பொருளும் இல்பொருளாகின்றது. என்பது (வைசேஷிகரது கொள்கை). அதிலே, இல்பொருள் (உள்பொருளாக) உண்டாகும்போது, உண்டாவதற்குமுன்னர் முயற்கொம்புபோன்றது; ஸமவாயி, அஸமவாயி, நிமித்தம் என்னும் பெயருடைய காரணங்களைச் சார்ந்து உண்டாகின்றது என்பதாம். மற்று, “இவ்வாறாக இல்பொருள் உண்டாகின்றது; காரணத்தையும் வேண்டுகின்றது” எனக்கூறுதல் செல்லாது; இல்பொருளான முயற்கொம்புமுதலியவற்றைக் காணாமையின். உண்டாகின்ற குடம்முதலியவை உள்பொருள்வடிவினவாயின், தோன்றுதற்குமாத்திரம் ஒருகாரணத்தை நாடி உண்டாகின்றன எனத் தெரிந்துகொள்ளலாகும்.

அன்றியும், இன்மைக்கும் உள்ளதன்மையும், உண்மைக்கும் இல்லாத்தன்மையும் உள்ளவளவிலே, பிரமாணத்தினுடைய வியவகாரத்திலும் (பிரமாணத்தால் நிச்சயிக்கப்படும்) பொருள்களினுடைய வியவகாரத்திலும் ஓரிடத்தும் ஒருத்தனுக்கும் நம்பிக்கையுண்டாகாது; “உண்மை உண்மையாகவே இருக்கும், இன்மை இன்மையாகவே இருக்கும்” என்னும்நிச்சயம் அமையாததலின்.

மற்றும், உண்டாகின்றது எனத்வயணுகம்முதலிய பொருளுக்குத்தன்காரணங்களோடும்உள்ளதன்மையோடும்ஸம்பந்தத்தைக் கூறுகிறார்என் (ஒருபொருள் ஒருகார்ய

𑌪𑌾𑌦𑍍𑌯 𑌶𑍂𑌨𑍍𑌯𑌃 । 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍 𑌉𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍇𑌶𑍍𑌚 𑌅𑌸𑌤𑍍, 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍 𑌸𑍍𑌵𑌕𑌾𑌰𑌣𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑌮𑍍 𑌅𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌸𑍍𑌵𑌕𑌾𑌰𑌣𑍈𑌃 𑌪𑌰𑌮𑌾𑌣𑍁𑌭𑌿𑌃 𑌸𑌤𑍍𑌤𑌯𑌾 𑌚 𑌸𑌮𑌵𑌾𑌯𑌲𑌕𑍍𑌷𑌣𑍇𑌨 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑍇𑌨 𑌸𑌂𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 । 𑌸𑌂𑌬𑌦𑍍𑌧𑌂 𑌸𑌤𑍍 𑌕𑌾𑌰𑌣𑌸𑌮𑌵𑍇𑌤𑌂 𑌸𑌤𑍍 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌤𑍍𑌰 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌕𑌥𑌮𑍍 𑌅𑌸𑌤𑌃 𑌸𑍍𑌵𑌂 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍, 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑍋 𑌵𑌾 𑌕𑍇𑌨𑌚𑌿𑌤𑍍 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 ? 𑌨 𑌹𑌿 𑌵𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌪𑍁𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌂 𑌕𑌾𑌰𑌣𑌂, 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑍋 𑌵𑌾 𑌕𑍇𑌨𑌚𑌿𑌤𑍍, 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌤𑌃 𑌕𑌲𑍍𑌪𑌯𑌿𑌤𑍁𑌂 𑌶𑌕𑍍𑌯𑌤𑍇 ॥

𑌨𑌨𑍁 𑌨𑍈𑌵𑌂 𑌵𑍈𑌶𑍇𑌷𑌿𑌕𑍈𑌃 𑌅𑌭𑌾𑌵𑌸𑍍𑌯 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌃 𑌕𑌲𑍍𑌪𑍍𑌯𑌤𑍇 । 𑌦𑍍𑌵𑍍𑌯𑌣𑍁𑌕𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌹𑌿 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌸𑍍𑌵𑌕𑌾𑌰𑌣𑍇𑌨 𑌸𑌮𑌵𑌾𑌯𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌃 𑌸𑌤 𑌏𑌵 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 ॥

𑌨 ; 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌮𑌾𑌤𑍍 । 𑌨 𑌹𑌿 𑌵𑍈𑌶𑍇𑌷𑌿𑌕𑍈𑌃 𑌕𑍁𑌲𑌾𑌲𑌦𑌣𑍍𑌡𑌚𑌕𑍍𑌰𑌾𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍 𑌘𑌟𑌾𑌦𑍀𑌨𑌾𑌮𑍍 𑌅𑌸𑍍𑌤𑌿𑌤𑍍𑌵𑌮𑍍 𑌇𑌷𑍍𑌯𑌤𑍇 । 𑌨 𑌚 𑌮𑍃𑌦 𑌏𑌵 𑌘𑌟𑌾𑌦𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌮𑍍 𑌇𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌅𑌸𑌤 𑌏𑌵 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌃 𑌪𑌾𑌰𑌿𑌶𑍇𑌷𑍍𑌯𑌾𑌤𑍍 𑌇𑌷𑍍𑌟𑍋 𑌭𑌵𑌤𑌿 ॥

𑌨𑌨𑍁 𑌅𑌸𑌤𑍋𑌽𑌪𑌿 𑌸𑌮𑌵𑌾𑌯𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑍋 𑌨 𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌃 ।

---

மாகவுண்டாகும்போது தன்காரணங்களோடுகூடி, உள்ளதாய், உள்பொருளாய்ஆகின்றது என்கிறார்கள் வைசேஷிகர்கள்). அப்பொருள்உண்டாவதற்குமுன்னர் இல்லாததாய்ப், பின்னர், தன்காரணங்களுடைய செய்கையைத் தழுவி, தன்காரணங்களான பரமாணுக்களோடும் உள்ளதன்மையோடும் ஸமவாயமாகிய [நீக்கமின்றிநிற்றலாகிய] ஸம்பந்தத்தால் சேரப்பெறுகின்றது ; சேரப்பெறவே, காரணங்களோடு ஒற்றித்து நிற்பதாய், உள்ளதாய் ஆகின்றது.—அதிலே சொல்லவேண்டும் [இவ்வினாக்களைக் கேட்கவேண்டும்] : இல்லாததற்குத் தன்காரணமென்பது எப்படி இருக்கும்? அல்லது, ஒன்றனோடு தொடர்பாவது எப்படியாகும்? மலடிமகனுக்குத் தன்காரணத்தையாயினும் (அவன் பிறத்தற்குரிய ஏதுவையாயினும், அவனுக்கு) ஒன்றனோடு ஸம்பந்தத்தையாயினும் பிரமாணத்திற்குஏற்பக் கொள்ளமுடியாதன்றே.

(ஆக்ஷேபம்) :—ஆயின், இவ்வாறாக வைசேஷிகர்களால் இல்பொருளுக்குச் சம்பந்தம் கொள்ளப்படவில்லை. தம் காரணத்தோடு ஸமவாயமாகிய ஸம்பந்தமானது த்வயணுகம்முதலிய பொருள்களான உள்பொருள்கட்கேயன்றே கூறப்படுகின்றது என்பதாம்.

(ஸமாதானம்) :—அப்படியன்று ; ஸம்பந்தத்திற்கு முன்னர் (அவை) உள்ளனவாகக் கொள்ளாமையின். குடம்முதலியன - குயவன், தடி, சக்கிரம்முதலியவற்றினது செய்கைக்குமுன்னர் உள்ளனவாக வைசேஷிகர்களால் கொள்ளப்படவில்லையன்றே. மேலும், மண்ணே குடம்முதலிய உருவத்தை யடைதலைக் கொள்வதில்லை. ஆகவே, பரிசேஷப்பிரமாணத்தால், இல்பொருளுக்கேதான் ஸம்பந்தம் கொள்ளப்பட்டதாகின்றது.

(ஆக்ஷேபம்) :—ஆயின், இல்பொருளுக்கும் ஸமவாயமாகிய ஸம்பந்தம் விரோதப்படாது.

𑌨; 𑌵𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌦𑍀𑌨𑌾𑌮𑍍 𑌅𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 । 𑌘𑌟𑌾𑌦𑍇𑌰𑍇𑌵 𑌪𑍍𑌰𑌾𑌗𑌭𑌾𑌵𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌕𑌾𑌰𑌣𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑍋 𑌭𑌵𑌤𑌿, 𑌨 𑌵𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌦𑍇𑌃 𑌅𑌭𑌾𑌵𑌸𑍍𑌯 𑌤𑍁𑌲𑍍𑌯𑍇𑌽𑌪𑌿, 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑌃 𑌅𑌭𑌾𑌵𑌸𑍍𑌯 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 । 𑌏𑌕𑌸𑍍𑌯 𑌅𑌭𑌾𑌵𑌃, 𑌦𑍍𑌵𑌯𑍋𑌃 𑌅𑌭𑌾𑌵𑌃, 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌅𑌭𑌾𑌵𑌃, 𑌪𑍍𑌰𑌾𑌗𑌭𑌾𑌵𑌃, 𑌪𑍍𑌰𑌧𑍍𑌵𑌂𑌸𑌾𑌭𑌾𑌵𑌃, 𑌇𑌤𑌰𑍇𑌤𑌰𑌾𑌭𑌾𑌵𑌃, 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌭𑌾𑌵𑌃 𑌇𑌤𑌿 𑌲𑌕𑍍𑌷𑌣𑌤𑍋 𑌨 𑌕𑍇𑌨𑌚𑌿𑌤𑍍 𑌵𑌿𑌶𑍇𑌷𑍋 𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌷𑍍𑌟𑍁𑌂 𑌶𑌕𑍍𑌯𑌃 । 𑌅𑌸𑌤𑌿 𑌚 𑌵𑌿𑌶𑍇𑌷𑍇 𑌘𑌟𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌗𑌭𑌾𑌵 𑌏𑌵 𑌕𑍁𑌲𑌾𑌲𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌘𑌟𑌭𑌾𑌵𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇, 𑌸𑌂𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 𑌚 𑌭𑌾𑌵𑍇𑌨 𑌕𑌪𑌾𑌲𑌾𑌖𑍍𑌯𑍇𑌨 𑌸𑍍𑌵𑌕𑌾𑌰𑌣𑍇𑌨, 𑌸𑌂𑌬𑌦𑍍𑌧𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌯𑍋𑌗𑍍𑌯𑌶𑍍𑌚 𑌭𑌵𑌤𑌿, 𑌨 𑌤𑍁 𑌘𑌟𑌸𑍍𑌯𑍈𑌵 𑌪𑍍𑌰𑌧𑍍𑌵𑌂𑌸𑌾𑌭𑌾𑌵𑌃 𑌅𑌭𑌾𑌵𑌤𑍍𑌵𑍇 𑌸𑌤𑍍𑌯𑌪𑌿, 𑌇𑌤𑌿; 𑌪𑍍𑌰𑌧𑍍𑌵𑌂𑌸𑌾𑌦𑍍𑌯𑌭𑌾𑌵𑌾𑌨𑌾𑌂 𑌨 𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑍍𑌵𑌂, 𑌪𑍍𑌰𑌾𑌗𑌭𑌾𑌵𑌸𑍍𑌯𑍈𑌵 𑌦𑍍𑌵𑍍𑌯𑌣𑍁𑌕𑌾𑌦𑌿𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌸𑍍𑌯 𑌉𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌾𑌰𑍍𑌹𑌤𑍍𑌵𑌂 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 𑌅𑌸𑌮𑌞𑍍𑌜𑌸𑌮𑍍; 𑌅𑌭𑌾𑌵𑌤𑍍𑌵𑌾𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌤𑍍 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌪𑍍𑌰𑌧𑍍𑌵𑌂𑌸𑌾𑌭𑌾𑌵𑌯𑍋𑌰𑌿𑌵 ॥

𑌨𑌨𑍁 𑌨𑍈𑌵 𑌅𑌸𑍍𑌮𑌾𑌭𑌿𑌃 𑌪𑍍𑌰𑌾𑌗𑌭𑌾𑌵𑌸𑍍𑌯 𑌭𑌾𑌵𑌾𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ।

---

(ஸமாதானம்) :—அப்படியன்று ; மலடிமகன்முதலியவற்றைக் காணாமையின். (அபாவம் - இன்மை, இல்பொருள்.) "அபாவமென்பது ஸமமாயிருந்தாலும், குடம் முதலியவற்றினதுமுன்னபாவத்திற்குத்தான் தன்காரணத்தோடுஸம்பந்தமாகின்றது; மலடிமகன்முதலியவற்றிற்கு இல்லை" என்றால், (ஒரு அபாவத்தினின்றும் மற்றோர்) அபாவத்திற்கு வேற்றுமை கூறவேண்டும். ஒன்றின்மை, இரண்டின்மை, எல்லாமின்மை, முன்னபாவம், அழிவுபாட்டபாவம், ஒன்றிலொன்றபாவம், முழுதுமபாவம் என்றிவற்றிற்கு வேற்றுமையைக் குறிப்பிட்டுக் காட்ட ஒருவனாலும் இயலாது. வேற்றுமை இல்லாவளவிலே, "குடத்தினுடைய முன்னபாவந்தான் குயவன் முதலிய பொருள்களால் குடமாதலைப் பெறுகின்றது ; கபாலம் [ஓடு] என்னும்பெயருடைய தன் காரணமான உள்பொருளோடு சேரப்பெறுகின்றது ; சேரப்பெற்றதாய் (உண்டாதல் முதலிய) எல்லாவியவகாரங்கட்கும் தக்கதாகின்றது ; ஆனால், (இரண்டும்) அபாவமாயிருந்தாலும், குடத்தினுடையதேயான அழிவுபாட்டபாவம் (அப்படி) இல்லை (அதாவது-குடத்தினுடைய முன்னபாவமும் அழிவுபாட்டபாவமுமாகிய இரண்டும் அபாவமாயிருக்க, அவற்றுள், முந்தினது - குடமாகின்றது, காரணத்தோடு சேரப்பெறுகின்றது, உண்டாதல்முதலிய வியவகாரங்கட்குத் தக்கதாயுள்ளது ; பிந்தினதோ - குடமாவதில்லை, காரணத்தோடு சேரப்பெறுவதில்லை, உண்டாதல்முதலிய வியவகாரங்கட்குத் தக்கதாயில்லை)" என்பது ஒவ்வாதது. "அழிவுபாட்டபாவம்முதலிய அபாவங்கள் (உண்டாதல்முதலிய) வியவகாரங்கட்கு எவ்விடத்தும் உரியவையில்லை ; த்வ்யணுகம்முதலாக வழங்கப்படும் பொருள்களினுடைய முன்னபாவமேதான் உண்டாதல்முதலிய வியவகாரங்கட்கு உரியதானது" என்பது ஒவ்வாதது ; அபாவமாயிருத்தற்கு வேற்றுமையின்மையால், முழுதுமபாவமும் அழிவுபாட்டபாவமும்போல. (முன்னபாவமானது அழிவுபாட்டபாவம்முதலியனபோல, தானும் அபாவமாயிருத்தலால், உண்டாதல்முதலிய வியவகாரங்கட்கு உரியதாகாது என்றபடி.—ஆ.)

(ஆக்ஷேபம்) :- ஆயின், நாங்கள் முன்னபாவத்திற்கு பாவம் வருவதாகச் சொல்லவேஇல்லை [இல்லாதது இருப்பதாவதாகச் சொல்லவில்லை].

𑌸𑌤 𑌏𑌵 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑌾𑌪𑌤𑍍𑌤𑌿𑌃; 𑌯𑌥𑌾 𑌘𑌟𑌸𑍍𑌯 𑌘𑌟𑌾𑌪𑌤𑍍𑌤𑌿𑌃, 𑌪𑌟𑌸𑍍𑌯 𑌪𑌟𑌾𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 । 𑌏𑌤𑌦𑌪𑌿 𑌅𑌸𑌤𑌃 𑌅𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑌾𑌪𑌤𑍍𑌤𑌿𑌵𑌦𑍇𑌵 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌮𑍍 ॥

𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌯𑌃 𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌪𑌕𑍍𑌷𑌃 𑌸𑍋𑌽𑌪𑌿 𑌅𑌪𑍂𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌵𑌿𑌨𑌾𑌶𑌾𑌙𑍍𑌗𑍀𑌕𑌰𑌣𑌾𑌤𑍍 𑌵𑍈𑌶𑍇𑌷𑌿𑌕𑌪𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 𑌨 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌭𑌿𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌤𑌿𑌰𑍋𑌭𑌾𑌵𑌾𑌙𑍍𑌗𑍀𑌕𑌰𑌣𑍇𑌽𑌪𑌿 𑌅𑌭𑌿𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌤𑌿𑌰𑍋𑌭𑌾𑌵𑌯𑍋𑌃 𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌤𑍍𑌵𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌤𑍍𑌵𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑍇 𑌪𑍂𑌰𑍍𑌵𑌵𑌦𑍇𑌵 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌵𑌿𑌰𑍋𑌧𑌃 ॥

𑌏𑌤𑍇𑌨 𑌕𑌾𑌰𑌣𑌸𑍍𑌯𑍈𑌵 𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑍍 𑌉𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌦𑌪𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 ॥

𑌪𑌾𑌰𑌿𑌶𑍇𑌷𑍍𑌯𑌾𑌤𑍍—𑌸𑌦𑍇𑌕𑌮𑍇𑌵 𑌵𑌸𑍍𑌤𑍁 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 𑌉𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌵𑌿𑌨𑌾𑌶𑌾𑌦𑌿𑌧𑌰𑍍𑌮𑍈𑌃 𑌅𑌨𑍇𑌕𑌧𑌾 𑌨𑌟𑌵𑌤𑍍 𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿 । 𑌇𑌦𑌂 𑌭𑌾𑌗𑌵𑌤𑌂 𑌮𑌤𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑌂 “𑌨𑌾𑌸𑌤𑍋 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌭𑌾𑌵𑌃” 𑌇𑌤𑍍𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌶𑍍𑌲𑍋𑌕𑍇, 𑌸𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌸𑍍𑌯 𑌅𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌾𑌤𑍍, 𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌾𑌚𑍍𑌚 𑌇𑌤𑌰𑍇𑌷𑌾𑌮𑌿𑌤𑌿 ॥

𑌕𑌥𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌅𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑍇 𑌅𑌶𑍇𑌷𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌨 𑌉𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌇𑌤𑌿?

---

(ஸமாதாநம்):—அப்பொழுது, இருப்பதுதான் இருப்பதாகின்றது என்க; உதாரணமாக, குடம் குடமாகின்றது; ஆடை ஆடையாகின்றது. இதுவும், இல்லாதது இருப்பதாவதுபோல, பிரமாணங்கட்கு முரணும்.

பரிணாமவாதமறுப்பு.

ஸாங்கியனுடைய பரிணாமக்கொள்கையும் எதுவோ, அதுவும் - முன்னில்லாத தன்மை உண்டாதலையும், (இருக்கின்ற தன்மை) அழிதலையும் கொள்வதனால், வைசேஷிகனுடைய (ஆரம்பக்) கொள்கையினும் வேறுபடுவதில்லை. தோற்ற மறைவுகளைக் கொள்ளுமிடத்தும், தோற்றம் உள்ளதெனவும் மறைவு இல்லதெனவும் ஆராயுங்கால், முன்போலவே பிரமாணங்கட்கு விரோதமாம். (இக்கொள்கையினும், உள்ளது இல்லதாவதும், இல்லது உள்ளதாவதுமாகிய விரோதத்தை ஊகித்துப்பார்க்க.)

இதனால், “உண்டாதல்முதலான நிலைமைகள் காரணத்திற்குத்தான் இருக்கின்றன” என்பதும் மறுக்கப்பட்டது. (இருக்கின்ற நிலைமை கெட்டு வேறோர் நிலைமை வந்தவழி, உள்ளது இல்லதாதலையும் இல்லது உள்ளதாதலையும் நோக்கிக்கொள்க.)

பகவானுடைய விவர்த்தக்கொள்கை.

பரிசேஷப்ரமாணத்தினால்,—“உண்மைப் பொருளான ஒரேபொருள்தான், நடன்போல, உண்டாதல் அழிதல்முதலிய தன்மைகளோடு, (விகாரங்களோடு கூடிய பல பொருள்களாக) அவித்தையினால் பலவாறு கற்பனைசெய்யப்படுகின்றது” என்பதாம். உள்ளதென்னும்உணர்வு பிறழாமையினாலும், மற்றைய உணர்வுகள் பிறழ்வதனாலும் (உண்மைப்பொருள் ஒன்றுதான் உள்ளது) என்னும் பகவானுடைய இக்கொள்கையானது, “இன்மைக்கு உண்மை இல்லை” (உ - கசு) என்ற இச்சுலோகத்தினுள் அருளிச்செய்யப்பட்டது.

ஞானிதான் கர்மத்தை முற்றும் துறந்திடக்கூடும்.

(ஆக்ஷேபம்):—அங்ஙனம், ஆத்மா விகாரமில்லாததாயிருக்கையில், கர்மத்தை முற்றும் விட்டிடலாகாதென்பது எப்படி?

𑌯𑌦𑌿 𑌵𑌸𑍍𑌤𑍁𑌭𑍂𑌤𑌾𑌃 𑌗𑍁𑌣𑌾𑌃, 𑌯𑌦𑌿 𑌵𑌾 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌾𑌃, 𑌤𑌦𑍍𑌧𑌰𑍍𑌮𑌃 𑌕𑌰𑍍𑌮 । 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑌿𑌤𑌮𑍇𑌵 𑌇𑌤𑌿 𑌅𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 '𑌨 𑌹𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 𑌕𑍍𑌷𑌣𑌮𑌪𑌿 𑌅𑌶𑍇𑌷𑌤𑌃 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍁𑌂 𑌶𑌕𑍍𑌨𑍋𑌤𑌿' 𑌇𑌤𑌿 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑍁 𑌪𑍁𑌨𑌃 𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌯𑌾𑌂 𑌶𑌕𑍍𑌨𑍋𑌤𑍍𑌯𑍇𑌵 𑌅𑌶𑍇𑌷𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍁𑌮𑍍, 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑌿𑌤𑌸𑍍𑌯 𑌶𑍇𑌷𑌾𑌨𑍁𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌃 । 𑌨 𑌹𑌿 𑌤𑍈𑌮𑌿𑌰𑌿𑌕𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 𑌅𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌪𑌿𑌤𑌸𑍍𑌯 𑌦𑍍𑌵𑌿𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌦𑍇𑌃 𑌤𑌿𑌮𑌿𑌰𑌾𑌪𑌗𑌮𑍇𑌽𑌪𑌿 𑌶𑍇𑌷𑌃 𑌅𑌵𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍇 । 𑌏𑌵𑌂 𑌚 𑌸𑌤𑌿 𑌇𑌦𑌂 𑌵𑌚𑌨𑌮𑍁𑌪𑌪𑌨𑍍𑌨𑌂 '𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌨𑌸𑌾' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿, '𑌸𑍍𑌵𑍇 𑌸𑍍𑌵𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌭𑌿𑌰𑌤𑌃 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌲𑌭𑌤𑍇 𑌨𑌰𑌃' '𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌤𑌮𑌭𑍍𑌯𑌰𑍍𑌚𑍍𑌯 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 𑌮𑌾𑌨𑌵𑌃' 𑌇𑌤𑌿 𑌚 ॥ ௪௮ ॥

𑌯𑌾 𑌕𑌰𑍍𑌮𑌜𑌾 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃 𑌉𑌕𑍍𑌤𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑌾𑌲𑌕𑍍𑌷𑌣𑌾, 𑌤𑌸𑍍𑌯𑌾𑌃 𑌫𑌲𑌭𑍂𑌤𑌾 𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌲𑌕𑍍𑌷𑌣𑌾 𑌚 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑍇𑌤𑌿 𑌶𑍍𑌲𑍋𑌕𑌃 𑌆𑌰𑌭𑍍𑌯𑌤𑍇—

௪௯. 𑌅𑌸𑌕𑍍𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌜𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌗𑌤𑌸𑍍𑌪𑍃𑌹𑌃 ।
𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑌰𑌮𑌾𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍇𑌨𑌾𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

---

(ஸமாதாநம்) :—குணங்கள் மெய்ப்பொருளாயினும் ஆகுக ; அல்லது, அவித்யையினுல் கற்பிக்கப்பெற்றவையாயினும் ஆகுக; அவற்றினது தன்மை கர்மமென்பது, செய்கையென்பது, தொழிலென்பது. அது ஆத்மாவினிடத்து அவித்யையினுல் ஏற்றப்பட்டதேதான். ஆகவே, அஜ்ஞானியான "எவனும் கணப்பொழுதாயினும் (கர்மத்தை) முற்றும் விட்டிடமாட்டுவானில்லை" (ந - ரு) எனக்கூறப்பட்டது. மற்று, ஞானியோ, வித்யையினுல் அவித்யை நீங்கியுள்ளமையால் கர்மத்தை முற்றும் விட்டிட மாட்டுவான்தான் ; அவித்யையினுல் ஏற்றப்பட்டதனுடைய சேஷம் செல்லாததலின் [அதனுடைய மிச்சம் இராததலின்]. திமிரமுள்ள கண்பார்வையினுல் ஏற்றப்பட்ட இரண்டு சந்திரன் முதலியவற்றினுடைய சேஷமானது திமிரம் நீங்கியுள்ளபொழுதும் நில்லாதன்றோ. இவ்வாறுள்ளவளவிலே, "ஸகலகர்மங்களையும் மனத்தால் துறந்து" (ரு - கந) என்பதுமுதலான இத்திருவாக்குப் பொருந்தியது. "மனிதன் தன் தன் கர்மத்தி லமர்ந்தவனுய் ஸித்தியைப்பெறுகிறுன்" (கஅ - சரு), "மனிதன் தனக்குரிய கர்மத்தால் அவனைப் பூஜித்து ஸித்தியை யடைகிறுன்" (கஅ - சகூ) என்பனவும் (பொருந்தியனவாம்). (சஅ)

கர்மயோகஸித்தி ஞானயோகஸித்தியைத் தரும்.

கர்மத்தா லாகின்ற எந்த ஸித்தியானது, ஞானத்திலே நிலைத்தற்குத் தகுந்த நிலைமையாகிய ஸித்தியானது கூறப்பட்டதோ, அதனது பயனுன நைஷ்கர்ம்யஸித்தியை, கர்மம்நீங்கிய நிலையை,ஞானநிஷ்டையாகிய ஸித்தியைக் கூறவேவேண்டும் என (இச்)சுலோகம் தொடங்கப்படுகின்றது :

சகூ. எவ்விடத்தும் புத்திபற்றுதவனுய் அகக்கரணத்தை வென்று ஆசைபோயுள்ளவன் மேலான நைஷ்கர்ம்யஸித்தியை, கர்மம்நீங்கிய நிலையை ஸந்யாஸத்தால் அடைகிறுன்.

𑌅𑌸𑌕𑍍𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌅𑌸𑌕𑍍𑌤𑌾 𑌸𑌙𑍍𑌗𑌰𑌹𑌿𑌤𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌂 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌃 𑌅𑌸𑌕𑍍𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌪𑍁𑌤𑍍𑌰𑌦𑌾𑌰𑌾𑌦𑌿𑌷𑍁 𑌆𑌸𑌕𑍍𑌤𑌿𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑍇𑌷𑍁, 𑌜𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌜𑌿𑌤𑌃 𑌵𑌶𑍀𑌕𑍃𑌤𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌂 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌃 𑌜𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌾, 𑌵𑌿𑌗𑌤𑌸𑍍𑌪𑍃𑌹𑌃 𑌵𑌿𑌗𑌤𑌾 𑌸𑍍𑌪𑍃𑌹𑌾 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾 𑌦𑍇𑌹𑌜𑍀𑌵𑌿𑌤𑌭𑍋𑌗𑍇𑌷𑍁 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑌃 𑌵𑌿𑌗𑌤𑌸𑍍𑌪𑍃𑌹𑌃, 𑌯𑌃 𑌏𑌵𑌂𑌭𑍂𑌤𑌃 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌃 𑌸𑌃 𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌨𑌿𑌰𑍍𑌗𑌤𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌸𑌂𑌬𑍋𑌧𑌾𑌤𑍍 𑌸𑌃 𑌨𑌿𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑌾 𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌵𑌃 𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌮𑍍, 𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌚 𑌤𑌤𑍍 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌶𑍍𑌚 𑌸𑌾 𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃, 𑌨𑌿𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑌤𑍍𑌵𑌸𑍍𑌯 𑌵𑌾 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌤𑍍𑌮𑌰𑍂𑌪𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑌸𑍍𑌯 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃 𑌨𑌿𑌷𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌃, 𑌤𑌾𑌂 𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑌰𑌮𑌾𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌷𑍍𑌟𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌜𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌵𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌂 𑌸𑌦𑍍𑌯𑍋𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑌰𑍂𑌪𑌾𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨, 𑌤𑌤𑍍𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑍇𑌣 𑌵𑌾 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍇𑌨, 𑌅𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌤𑌥𑌾 𑌚 𑌉𑌕𑍍𑌤𑌮𑍍—'𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨𑍈𑌵 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨 𑌕𑌾𑌰𑌯𑌨𑍍𑌨𑌾𑌸𑍍𑌤𑍇' 𑌇𑌤𑌿 ॥ ௪௯ ॥

𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑍇𑌨 𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑍇𑌨 𑌈𑌶𑍍𑌵𑌰𑌾𑌭𑍍𑌯𑌰𑍍𑌚𑌨𑌰𑍂𑌪𑍇𑌣 𑌜𑌨𑌿𑌤𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌗𑍁𑌕𑍍𑌤𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌸𑍍𑌯 𑌉𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌵𑍇𑌕𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌕𑍇𑌵𑌲𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌰𑍂𑌪𑌾 𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌲𑌕𑍍𑌷𑌣𑌾 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃 𑌯𑍇𑌨 𑌕𑍍𑌰𑌮𑍇𑌣 𑌭𑌵𑌤𑌿 𑌤𑌤𑍍 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌆𑌹—

---

பற்றுக்குக் காரணமான மக்கள் மனைவி முதலானோர்மீது அகக்கரணம் பற்றாதவனாய், அந்தக்கரணத்தை வசப்படுத்தி, உடம்பின்மேலும் உயிர்வாழ்க்கையின்மேலும் போகத்தின்மேலும் ஆசைநீங்கியவனாய் எவன் இவ்வாறுள்ளவனோ, ஆத்மாவை அறிபவனோ, அவன் நைஷ்கர்ம்யமாகியஸித்தியைப் பெறுகிறான். கர்மமில்லா ப்ரஹ்மத்தை ஆத்மாவாக உணர்கின்ற எந்த மெய்யுணர்வினால் கர்மங்கள் நீங்குகின்றனவோ, அது நிஷ்கர்மம்; அதனது தன்மை - நைஷ்கர்ம்யம். அல்லது, "நைஷ்கர்ம்யம் - கர்மமில்லா ஆத்மவடிவாய் நிற்றலாகிய நிஷ்கர்மநிலை, கர்மம் நீங்கிநிற்கும் நிலை" என்க. அதனுடைய ஸித்தியானது, அது கைகூடுதலானது - மேலானது, கர்மத்தாலாகும்ஸித்தியினும் வேறானது, உடனே விடுபட்டுநிற்கும் நிலையென்பது. (இதனை அவன்) ஸந்யாஸத்தினால், மெய்யறிவினால், அல்லது அதனோ[மெய்யறிவோ]டமைந்த ஸகலகர்மத்துறவினால் அடைகிறான். அவ்வண்ணமே, "ஸகலகர்மங்களையும் மனத்தால் துறந்து (ஒன்றையும்) செய்யவேசெய்யாதவனாய் செய்விக்காதவனாய் வீற்றிருக்கின்றான்" (௫ - ௧௩) எனக்கூறப்பட்டுளது. (௪௯)

ஈச்வரனைத் தொழுதலாகிய முற்கூறிய ஸ்வகர்மாநுஷ்டானத்தினால், தனக்குரிய செய்கையைச் செய்வதனால் வருவதாய் முன்பு (௧௮ - ௪௬) லக்ஷணம் கூறப்பட்டுள்ள ஸித்தியைப் பெற்று ஆத்மவிவேகவுணர்வுண்டானவனுக்கு நைஷ்கர்ம்யமாகிய ஸித்தியானது, கர்மம்நீங்கிய நிலையானது, சுத்தமான ஆத்மாவினுடைய அறிவிலே நிலைத்தலானது எம்முறையினால் உண்டாகுமோ, அதனைக் கூறவேண்டும் என அருளிச்செய்கிறார்:

௫௦. 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍋 𑌯𑌥𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌥𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨𑌿𑌬𑍋𑌧 𑌮𑍇 ।
𑌸𑌮𑌾𑌸𑍇𑌨𑍈𑌵 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌯𑌾 𑌪𑌰𑌾 ॥

𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌃 𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌈𑌶𑍍𑌵𑌰𑌂 𑌸𑌮𑌭𑍍𑌯𑌰𑍍𑌚𑍍𑌯 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌜𑌾𑌂 𑌕𑌾𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑌾𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌃—'𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌃' 𑌇𑌤𑌿 𑌤𑌦𑌨𑍁𑌵𑌾𑌦𑌃 𑌉𑌤𑍍𑌤𑌰𑌾𑌰𑍍𑌥𑌃 । 𑌕𑌿𑌂 𑌤𑌤𑍍 𑌉𑌤𑍍𑌤𑌰𑌂, 𑌯𑌦𑌰𑍍𑌥𑌃 𑌅𑌨𑍁𑌵𑌾𑌦𑌃 𑌇𑌤𑌿? 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—𑌯𑌥𑌾 𑌯𑍇𑌨 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍇𑌣 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌰𑍂𑌪𑍇𑌣 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍍 𑌆𑌪𑍍𑌨𑍋𑌤𑌿, 𑌤𑌥𑌾 𑌤𑌂 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌕𑍍𑌰𑌮𑌂 𑌮𑍇 𑌮𑌮 𑌵𑌚𑌨𑌾𑌤𑍍 𑌨𑌿𑌬𑍋𑌧 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑍇𑌨 𑌅𑌵𑌧𑌾𑌰𑌯 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 । 𑌕𑌿𑌂 𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑍇𑌣? 𑌨 𑌇𑌤𑌿 𑌆𑌹—𑌸𑌮𑌾𑌸𑍇𑌨𑍈𑌵 𑌸𑌂𑌕𑍍𑌷𑍇𑌪𑍇𑌣𑍈𑌵 𑌹𑍇 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯। "𑌯𑌥𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌆𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌤𑌥𑌾 𑌨𑌿𑌬𑍋𑌧" 𑌇𑌤𑌿 𑌅𑌨𑍇𑌨 𑌯𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌃 𑌤𑌾𑌂 𑌇𑌦𑌂𑌤𑌯𑌾 𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌤𑍁𑌂 𑌆𑌹—'𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌯𑌾 𑌪𑌰𑌾' 𑌇𑌤𑌿 । 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌪𑌰𑍍𑌯𑌵𑌸𑌾𑌨𑌂 𑌪𑌰𑌿𑌸𑌮𑌾𑌪𑍍𑌤𑌿𑌃 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 । 𑌕𑌸𑍍𑌯? 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌯𑌾 𑌪𑌰𑌾 𑌕𑍀𑌦𑍃𑌶𑍀 𑌸𑌾?—𑌯𑌾𑌦𑍃𑌶𑌸𑍍𑌯 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 । 𑌕𑍀𑌦𑍃𑌕𑍍 𑌤𑌤𑍍?—𑌯𑌾𑌦𑍃𑌶𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾 । 𑌕𑍀𑌦𑍃𑌶𑌃 𑌸𑌃?—𑌯𑌾𑌦𑍃𑌶𑍋 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌉𑌕𑍍𑌤𑌃, 𑌉𑌪𑌨𑌿𑌷𑌦𑍍𑌵𑌾𑌕𑍍𑌯𑍈𑌶𑍍𑌚 𑌨𑍍𑌯𑌾𑌯𑌤𑌶𑍍𑌚 ॥

---

௫௦. ஸித்தியைப் பெற்றவன் எவ்விதத்தால் ப்ரஹ்மத்தை அடைகிறானோ, அவ்விதத்தைச் சுருக்கமாகவே கௌந்தேய! என்னிடமிருந்து அறிந்துகொள். அறிவினுடைய முடிந்தஎல்லை எதுவோ, (அது அவ்விதத்தை அறிந்து அநுஷ்டிப்பதனாலாகும்).

ஸித்தியை - தனது கர்மத்தால் ஈச்வரனைத் தொழுது அவனது அருளினாலாவதாய், உடம்பும் இந்திரியங்களும் ஞானநிஷ்டைக்கு உரியனவாதலாகியஸித்தியை. "ஸித்தியைப்பெற்றவன்" என அதனை [ஸித்தியை] அநுவதித்தல் பின்வரும்விஷயத்திற்கென்க.—அநுவதித்தல் எதற்காக உள்ளதோ, அந்தப்பின்வரும்விஷயம் யாது?—கூறுவோம்: (அவன்) ஞானநிஷ்டையாகிய எந்தவிதத்தால் பரமாத்மாவை அடைகின்றானோ, அந்தவிதத்தை, ஞானத்திலே நிலைபெறுவதின் முறையை எனது வார்த்தையினால் அறிந்துகொள், நிச்சயமாக இன்னதென்று தெரிந்துகொள் என்றபடி.—விரிவாக (அது சொல்லப்படுமோ)?—அன்று எனக் கூறுகிறார்: "சுருக்கமாகவே (சொல்லப்படும்)."

ப்ரஹ்மத்தை அடைதலே ஆத்மஞானமுடிவு.

"எவ்விதத்தால் ப்ரஹ்மத்தை அடைகின்றானோ, அவ்விதத்தை அறிந்துகொள்" என்றஇதனால் எது, ப்ரஹ்மத்தை அடைதலானது மேற்கொள்ளப்பட்டதோ, அதனை இன்னதென்று உணர்த்துவான் "எது ஞானத்தினுடைய முடிந்த எல்லையோ" என்கிறார். நிஷ்டை - எல்லை, முடிபு என்பது.—எதனுடைய?—ப்ரஹ்மஞானத்தினுடைய.—(இதனது) முடிந்த எல்லை எதுவோ, அது எத்தகையது?—ஆத்மஅறிவு எத்தகையதோ, (அத்தகையது).—அது எப்படிப்பட்டது? - ஆத்மா எப்படிப்பட்டதோ, (அப்படிப்பட்டது.)—அது எப்படிப்பட்டது?—பகவானால் எப்படிப்பட்டதாக அருளிச்செய்யப்பட்டும், உபநிஷத் வாக்கியங்களால் எப்படிப்பட்டதாக உரைக்கப்பெற்றும், (அவரது திருவாக்குக்களினுள்ள) யுக்திகளினால் எப்படிப்பட்டதாக (நிர்ணயிக்கப்பட்டும் உள்ளதோ, அப்படிப்பட்டது.)

நநு விஷயாகாரம் ஜ்ஞாநம் । ந ஜ்ஞாநவிஷய:, நாபி ஆகாரவாந் ஆத்மா இஷ்யதே க்வசித் ।

நநு 'ஆதித்யவர்ணம்' 'பாரூப:' 'ஸ்வயம்ஜ்யோதி:' இதி ஆகாரவத்த்வம் ஆத்மந: ஶ்ரூயதே ।

ந; தமோரூபத்வப்ரதிஷேதார்தத்வாத் தேஷாம் வாக்யாநாம்—த்ரவ்யகுணாத்யாகாரப்ரதிஷேதே ஆத்மந: தமோரூபத்வே ப்ராப்தே தத்ப்ரதிஷேதார்தாநி 'ஆதித்யவர்ணம்' இத்யாதீநி வாக்யாநி । 'அரூபம்' இதி ச விஶேஷத: ரூபப்ரதிஷேதாத் । அவிஷயத்வாச்ச—'ந ஸந்த்ருஶே திஷ்டதி ரூபமஸ்ய ந சக்ஷுஷா பஶ்யதி கஶ்சநைநம்' 'அஶப்தமஸ்பர்ஶம்' இத்யாதே: । தஸ்மாத் ஆத்மாகாரம் ஜ்ஞாநம் இதி அநுபபந்நம் ॥

கதம் தர்ஹி ஆத்மந: ஜ்ஞாநம்? ஸர்வம் ஹி யத்விஷயம் யத் ஜ்ஞாநம், தத் ததாகாரம் பவதி । நிராகாரஶ்ச ஆத்மா இத்யுக்தம் । ஜ்ஞாநாத்மநோஶ்ச உபயோ: நிராகாரத்வே கதம் தத்பாவநாநிஷ்டா இதி? ।

---

**ஆத்மஅறிவு நிகழக்கூடுமோ ?**

(ஆக்ஷேபம்) :—அப்படியானல், அறிவு அறியப்படும்பொருளினது உருவத்தைக்கொண்டது. ஆத்மாவோ அறிவினல் அறியப்படும்பொருளாகவும், உருவமுள்ளதாகவும் ஓரிடத்தும் கொள்ளப்படவில்லை. (அறிவு அறியப்படும்பொருளினது உருவத்தைக் கொள்வதனுலும், ஆத்மா அறியப்படும்பொருளாகாமையினுலும், அதற்கு உருவமின்மையினுலும் அதனுடைய வடிவஞானமானது செல்லாது என இவ்வாக்ஷேபம் எழுந்ததென்க.—ஆ.)

(ஸமாதானம்) :—ஏன் ! "ஸூர்யன்போன்ற நிறமுடையது" (ச்வே - ௩ - அ) "ஒளிவடிவானது" (சா - ௩ - ௧௪ - ௨), "ஸ்வயம்பிரகாசமானது" (பி - ச - ௩ - ௯) என ஆத்மாவிற்கு உருவமுண்டென்று சுருதிகளிற் கூறப்படுகின்றதே !

(ஆக்ஷேபம்) :—அப்படியன்று ; (ஆத்மா) இருள்வடிவினது என்பதை மறுத்தல் அவ்வாக்கியங்கட்குப் பொருளாதலின். ஆத்மாவிற்குத் திரவியம் குணம் முதலியவற்றினது உருவங்களை விலக்க, (அங்ஙன மதற்கு) இருள்வடிவ முண்டு என்றுவர, அதனை மறுத்தற்பொருட்டாய் "ஸூர்யன்போன்ற நிறமுடையது" என்பது முதலான வாக்கியங்கள் உள்ளனவென்க. மேலும், "உருவமில்லாதது" (கட - ௩ - ௧௫) என உருவத்தைச்சிறப்பாக மறுத்தலாலும்(ஆத்மாவிற்கு உருவமில்லை. மற்றும், அறிவிற்கு விஷயமாகாமையினுலும், (அறிவு ஆத்மாவைப் பற்றுது) ; "இதனது உருவம் (கமது) பார்வைக்கு விஷயமாய் நிற்பதில்லை, இதனை ஒருவனும் கண்ணுல் பார்க்கமுடியாது" (ச்வே - ச - ௨௦), "ஓசையில்லது, ஸ்பர்சமில்லது" (கட - ௩ - ௧௫) என்பது முதலியவற்றுலென்க. ஆகவே, ஆத்மவடிவான அறிவு நிகழுமென்பது செல்லாது.

அப்பொழுது [இவ்வாறுள்ளவளவிலே], ஆத்மாவை அறிதல் எவ்வாறு கூடும்? எந்த அறிவு எவ்விஷயத்தைப் பற்றியதோ, அஃதெல்லாம் அதனது [அவ்விஷயத்தினது] உருவமுடையதாய் உள்ளது. ஆத்மாவோ உருவமில்லாதது எனக் கூறப்பட்டுளது. அறிவு ஆத்மா இரண்டிற்கும் உருவமில்லையாயின், அதனுடைய தியானநிஷ்டையானது, (ஆத்மஅறிவினுடைய தியானமுடிபானது, ஆத்மாவை நேரேகண்டுணர்ந்து தேறுதலானது—ஆ.) எவ்வாறு அமையும்? என்பது—

